# திருக்கயிலாய யாத்திரை





தருமையாதீனம்

உ

குருபாதம்

தருமையாதீன முதற்குரவர்

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

# குருபூஜை விழா மலர்

சார்வரி வைகாசி 3 ஆம் நாள் திங்கட்கிழமை

16—5—1960.



குருபாதம்

# திருக்கயிலாயதரிசன யாத்திரை நாட்குறிப்பு

| | |
|---|---|
| யாத்திரைத் தோடக்கம் | 19—6—59 |
| புள்ளிருக்குவேளூர், சிதம்பரம், மயிலை, திருவொற்றியூர். | |
| பிரயாகை | 23—6—59 |
| ஸ்ரீ காசியில் தங்கல் | 24—6—59, 28—6—59 |
| ஸ்ரீ விஸ்வநாதர் ரகசிய தரிசனம் | 27—6—59 |
| நயனிதால் தங்கல் | 29—6—59, 2—7—59 |
| நயனிதாலிலிருந்து கயிலை யாத்திரைத் தோடக்கம் | 3—7—59 |
| வழியில் தரிசனம் | |
| ஜாகேஷ்வரம், அல்மோராக்கோவில்கள், சோமேஷ்வரம், வைத்தியநாதம், பாகேஷ்வரம், மார்த்தோலி, தீர்த்தபுரி. | |
| கயிலை முதல்தரிசனம் (ஆடி அமாவாசை) | 4—8—59 |
| கயிலைப் பரிக்ரமம் | |
| கயிலை நதித் திருமஞ்சனம், லிங்கம், நந்தி பிரதிஷ்டை (காலை) | 5—8—59 |
| (தீராஃபூக்) வடக்குமுக தரிசனம் (மாலை) | 5—8—59 |
| கெளரிகுண்டம் திருமஞ்சனம், கிழக்குமுக தரிசனம் | 6—8—59 |
| தெற்குமுக தரிசனம் | 7—8—59 |
| மானசக் கரையில் | 8—8—59 |
| மானசக் கரையில் பண்டாரா | 9—8—59 |
| இராக்ஷஸ்தால் | 10—8—59 |
| கெளரிஉட்யார் ( கடைசியாக கயிலைத் தரிசனம் ) | 11—8—59 |
| தருமைக்கு மீண்டும் எழுந்தருளியானது | 2—9—59 |



தருமபுர ஆதீன குருமுதல்வர்,

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

வெளியீடு எண் 473.



உ

குருபாதம்

# திருக்கயிலாய யாத்திரை

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

25 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

திருவருளாணையால் வெளியிடப்பெற்றது.



தருமையாதீனம்

1960

39-1

உ

குருபாதம்

# முன்னுரை

திருக்கயிலாயத்தில் சீகண்டமுதல்வரிடத்தில் நந்தி தேவரும், அவரிடத்தில் சனற்குமாரரும், அவரிடத்தில் சத்தியஞானதரிசனிகளும், அவரிடத்தில் பரஞ்சோதிமா முனிகளும் உபதேசம் பெற்றூர்கள். இவர்வரை அகச் சந்தானம். பரஞ்சோதிமாமுனிகள் ஆகாயமார்க்கமாகப் போந்து, மண்ணுலகத்து மெய்கண்டதேவருக்கும், அவர் அருணந்திதேவர்க்கும், அவர் மறைஞானசம்பந் தருக்கும், அவர் உமாபதிதேவருக்கும் உபதேசித்தனர். இந் நால்வரும் புறச்சந்தானகுரவர் ஆவர். இப் புறச் சந்தானகுரவருள் நாலாமவராகிய உமாபதிசிவனும் அருள்நமச்சிவாயரும் (மச்சுச்செட்டியாரும்) மூன்ருமவ ராகிய மறைஞானசம்பந்தகுரவருக்கு மாணுக்கர்கள். அருள்நமச்சிவாயரிடத்திலிருந்து வழிவழியாகக் காழிக் கங்கை மெய்கண்டார், காழிப் பழுதைகட்டிச்சிற்றம்பல நாடிகள், பழுதைகட்டிச்சம்பந்தர், சிவபுரம் ஞானப்ர காசர், சிவபுரம் தத்வப்ரகாசர், செட்டித்தெருப் பழுதை கட்டி ஞானப்ரகாசர், சிதம்பரநாதமாசிலாமணி, கமலை ஞானப்ரகாசர் ஆக ஞான பரம்பரை வளர்ந்தது. அக் குருக்கள்பால் உபதேசம் பெற்றவர் பற்பலர். அவர் களது பெருமையைத் தொகுத்துச் சுருக்கிக் கூறும் பழம் பாடலுள் ஒன்று :-

ஆய்வார் பதிபசு பாசத்தின் உண்மையை ஆய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல்லாம் கல்வி கேள்வியல்லல்
ஓய்வார் சிவானந்த வாரியுள் ளேயோன் றிரண்டுமறத்
தோய்வார் கமலையுள் ஞானப்ர காசன்மெய்த் தொண்டர்களே.

அக் கமலைஞானப்ரகாசர்பால் ஞானோபதேசம் பெற்றவர் தருமைக் குருஞானசம்பந்தர். அவர்முதலாக விளங்கும் தருமையாதீன குருபீடத்தின் இருபத்தைந் தாவது பட்டம் இக் கயிலைக் குருமகாசந்நிதானம். ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், திருக்கயிலைமலையைத் தரிசித்து வரத்துணிந்து, இக்காலத்தில் ( 19-6-59—2-9-59 ) திருவருளால் நிறைவேற்றி, நம்மையும் வாழ்வித்தருள் கின்றார்கள். இச்சேயற்கரிய செயல் திருவருட் செயல். இதுவே திருக்கயிலாய பரம்பரையின் உண்மையை நாம் எல்லாரும் கண்கூடாக அறியக்காட்டியது. வாழ்க கயிலையைக் கண்ட குருமாமணி.

செலவு (யாத்திரை, பிரயாணம், பயணம்) என்பது ஈண்டுப் பருத்த உடலோடு செல்லும் உயிரினது நடையைக் குறிப்பது. ‘ எவ்விடத்துண்மையும் இவ்விடத் தார்தலும் சேல்லிடத் தேய்தலும் ’ (இருபா இருபஃது 6) ஆகிய நுண்ணிய உடலோடு கூடிய உயிரினது சேலவு இதனின் வேறு. அதைக் குறித்து எழுதியவை சாத்திரம் எனப் போற்றப்பெறுகின்றன. இது வரலாற் றிற் சேர்கின்றது. இதையும் சாத்திரம் ஆக்கினார் இதன் ஆசிரியர். பண்டைநாளிலும் தமது சேலவைக் குறித்துச் சென்றவர் செல்லாதார்க்கு உணர்த்தும் வழக்கம் இருந்தது. அதனை ‘ ஆற்றுப்படை ’ முதலிய

நூல்களால் அறியலாகும். செலவு தரைச் செலவு, கடற் செலவு, வான் செலவு என வேறுபடும். இக் கயிலைமாமலைச் செலவு மலையடிவாரம் வரையில் தரைச் செலவும், மலை ஏறத்தொடங்கி உச்சி அடையும் வரையில் வான் செலவும் ஆம். சேரமன்னர்க்குரியது வானவரம்பு. ஏனையிருபெரு வேந்துக்கும் உரியது நிலவரம்பே. 'வானவரம்பன்' என்பது புறநானூறு முதலியவற்றிற் காணப்படும் பழம்பெயர். செங்கோன் தரைச் செலவு, தகடூர் யாத்திரை என்னும் தமிழ் நூல் களும், 'ஆற்றுப்படை' என்னும் பாக்களும் தரைச் செலவு குறித்தவையே. இக் கயிலாய யாத்திரைக்கும் பெரும்பாணாற்றுப்படை முதலியவைக்கும் வேறுபாடு ஒன்றேதான். இது சிவசம்பந்தமான கருத்துக்களை இடையிடையே கொண்டிருப்பதாகும். இஃது உரை. அவை பாட்டுக்கள். செலவுணர்த்தும் நிலையில் எல் லாம் வேறுபாடில்லன. இம் மகாகயிலாய யாத்திரை எங்கள் குருநாதர் தலைமையில் நிகழ்ந்தது.

"கயிலைச் சந்நிதானம்" எனப் பலரும் போற்றி விளங்கத் திகழும் நம் குருமாமணிக்கு இம் மகாகயிலாய மலைத் தரிசனம் எளிதின் வாய்த்ததற்குப் பண்டு செய்த தவமும் இன்றுள்ள தவமும் காரணமாகும்.

நம் குருமாமணி சிவபூஜா பரம்பரைத் தோற்றம் உடையது. இளமை முதலாகச் சிவநெறியில் வழுவா தது. திருமுறைப் பாராயணம் புரிவது. திருமுறைகளை உரையோடும் வெளியிடச் செய்தருள்வது. ஜபதபங் களைக் கடைப்பிடிப்பது. ஸ்ரீ சொக்கநாதரை மிக்க பக்தி

சிரத்தையோடும் வழிபட்டுவரும் அளவிலாத பெருமை யுடையது. திருவருளே துணையாயும் வடிவமாயும் கொண்டு திகழ்வது. திருப்பணிகளையும் மகாகும்பாபி ஷேகங்களையும் முன்பும் பின்பும் எவரும் எவ்வாற்ரு லும் ஈடும் இல்லை எடுப்பும் இல்லை என்னும்படி அளவிடற்கு அரியவண்ணம் செய்வித்துவருவது. நற்பொழுதுபோக்கிற்கு லக்ஷம் கோடியர்ச்சனைகளையும், வெற்றிக்குக் கொற்றவையையும், அருளுக்கு அபிராமி யையும், செல்வத்திற்குச் செல்வமுத்துக்குமாரக் கடவுளையும், சிவஞானத்துக்குக் குருஞானசம்பந்தரை யும், பேரின்பத்துக்குச் சொக்கேசனையும் வைப்புச் செல்வமாகக் கொண்டு நல்வாழ்வு நடத்துவது. ஞான பரணமே பூண்பது. முத்திநிச்சயத்தில் ஐயம் உருதது. சிவபோகசாரத்தை நுகர்வது. 'உள்ளமலம் நீங்கி ஓங்கு சிவாநந்த வெள்ளம் திளைத்து அதுவாய்' மேவிய அநுபவத்தைத் திருக்கயிலையிலே உற்றுக் கௌரிகுண்டம், மானசசரோவரம் முதலிய அற்புத தீர்த்தங்களில் மூழ்கித் தெளிந்தது. முன்பே கேதார யாத்திரையில் அங்குள்ள புரோதாயம் என்னும் புனித தீர்த்தத்தில் ஆடிஇன்புற்றது. 'பரானந்தமே கதியாகக் கொண்டு மற்றெல்லாம் துயிலிற் கனவு என மதியா திரு'க்கும் மருந்தை எம்போல்வார் பிறவிநோய்க்கு அருளி வாழ்வித்து வாழ்வது. 'சொல்லும் பொருளும் இழந்து சுகானத்தத் தூக்கத்திலே அல்லும் பகலும் இருப்பது என்ருே கயிலாயத்தனே' என்ற பட்டினத்தார் வினுவிற்குச் செயலால், இன்றே இருக்கக் கிடைத்தது என்று விடையிறுத்தவண்ணம், திருக்கயிலாயத்தைத்

தரிசித்து வந்து இனிது வாழ்கின்றது. அக்குருமணியை வழிபட்டுச் சென்று மீண்ட அறிஞருள் சைவத்திரு. அ. கல்யாணசுந்தர தேசிகரும் ஒருவர் ஆவார்.

திரு. தேசிகர் நம் குருமாமணியின் தலயாத்திரை பலவற்றிலும் உடன்சேன்று கண்டு அவற்றைப் புத்தக வுருவத்தில் உலகிற்கு ஈந்த பேரநுபவம் உடையவர். அப்பேரநுபவமே 656 பக்கங்கள் உடைய இச்சேலவு நூலே இப்போது யாவரும் பெற்றுக் கற்று இன்புறச் சேய்யத் துணையாயிருந்தது. திருவாசகத்தின் பாடற்றொகையும் இந்நூலின் பக்கத்தோகையும் ஓரளவின. இது கயிலேக் குருமாமணியின் திருவாசகம் சேறிந்த புத்தகம். அதனுல் திருவருள் இவ் விரண்டையும் இயல்பாகவே ஓரளவாய் அமையச் சேய்திருக்கின்றது. அவர்க்குச் சைவத்திருமுறைகளில் இயற்கையில் உண்டான பற்றும், பயிற்சியும், பல நூல் எழுதிய அநுபவமும் இந்நூலே மிகச் சிறப்பித்துள்ளன.

இதன்கண் உள்ள வேர்ச்சோல்விளக்கம், ஆரூர்த் தியாகேசன், குருபக்தி, திருவருள் உறுதி, தேவியின் பேருமை, பிரார்த்தனேக் கூட்டம், விளக்கீடு, பதிகச் சிந்தனே, தவச்சாலே, பழங்காலச் சிற்பங்கள், நதி பற்றிய திருவிளேயாடல் முதலிய பகுதிகள்; அறு வகைக் குற்றங்கள், அசரீரி, ஸ்ரீ கயிலாயபதிக்கு ஜே, கல்லோடு புரண்டவர், பேருத்த சோதனே, உறுகயி றூசல், பழக்க வழக்கங்கள், நிம்க்கின்சா, சத்சங்கம், நந்தாதேவியின் சேய்திகள், மிலம் பள்ளிக்கூடம், அம்பிகை தவம், வழிபாடு, புணேயும் துணேயும்,

மகாமந்திரம், தஸ்மை குருப்யோ நம:, தேநீர்ப் பந்தல், திருக்கோயில் கோபுரமும் கோட்டைச்சுவரும், கயிலைக் காட்சி I, II, III, அற்புதக் காட்சி, ஏற்க மறுத்தன எங்கள்நா, தண்ணீர்பெறுத் தடுமாற்றம், தாகந்தணித்த தயாநிதி, பஸ்மாசுர சங்காரம், கயிலைநாதனுக்குப் பிரார்த்தனை, குருஞானசம்பந்தர்க்கு வழிபாடு, பிரார்த்தனைப் பயன், முருகன் திருவவதாரம், கயிலாய தரிசனம், அருள் மழை, ‘ஊனுயிர் வேறு செய்தான்’ தம்பிரான்தோழர், தோழர்க்குத்தோழர், அழையாமே வந்ததேன் ( ஞானவுலாப் பெருமை. ). பெருமிழலைக் குறும்பர், சிவலிங்கப்ரதிஷ்டை, அப்பர் சுவாமிகள், பேயார், திருமூலர், ஒளவையார், கண்ணன், அர்ச்சுனன், முனிவர்கள், யதிகள், கயிலை கண்ட உண்மைகள், கயிலாய விளக்கம், கயிலை புகும் நெறி, பூகைலாசம், மந்திர தந்திர சகள நிஷ்கள ரூபங்கள், அரவொலி, குழலொலி, கைலாச புராணம், ஞானபூமி, யிடம், யுப் யும், சாம், உருவத்யாநம், பரிக்ரம வகை, கயிலையின் இயற்கையமைப்பு, கயிலாய தரிசனத்தால், வடக்குமுக தரிசனம், கௌரிகுண்டஸ்நானம், தத்துவ கயிலாயங் கள், மஹாகைலாசம், தெற்குமுக தரிசனம், பதிகங்கள் ( மூவர் ), மானசவாவியில் திருமஞ்சனம், அன்னம்பாலிப்பு, பறிகொடுத்தோம், சோதனைவேண்டாம், முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள், நாமும் வாழலாம், யாத்திரைப் பயன் ஆகிய பகுதிகளை முற்றும் நன்குபடித்துப்பார்ப்பது யாவர்க்கும் தலையாய கடனாகும். 605, 608, 609 ஆம் பக்கத்தில் உள்ள வினைக்குறிப்புக்கள் இன்றியமையாதன.

சிவரகசியத்திற் கூறும் மகாகயிலாய மகிமையைச் சாரமாக இதன் ஈற்றில் சேர்த்திருக்கின்றது. கயிலாய யாத்திரை புரிய விரும்புவார்க்குத் தேவையான வழி விவரணங்களும் பிறவும் பன்னிரண்டு பக்கத்தில் முறைப்பட விளக்கப்பட்டுள்ளன.

தலயாத்திரைகளுள் மிகப் பெரியது திருக்கயிலாய மலை யாத்திரை என்பதில் யார்க்கும் ஐயம் இல்லை. யாத்திரை நூல்களுள்ளும் இதுபோலப் பெரிய புத்தகம் தமிழில் வேறு இல்லை என்பதிலும் இதைப் பெற்றுக் கற்றுணர்வோர்க்கு ஐயம் ஏற்படாது. இதில் உள்ள அரும் பெரும் பொருள்களும், பலவேறு நிகழ்ச்சிகளும், பலவகைத்தோற்றங்களைக்கண்ட காட்சிகளை விளக்கும் படங்களும் எல்லாரையும் இன்புறச் செய்யும் என்பது திண்ணம். அவ்வின்பமே அறம்பொருளின்பங்களால் அடையத்தகும் பெருமையுடையது. அதுவே நூற் பயன். 'அறம்பொருள் இன்பம் வீடடைதல் நூற் பயன்' என்பது தமிழ் இலக்கணச் சூத்திரம். இந்நூற் பயனை எய்துவித்த சைவத்திரு. அ. கல்யாணசுந்தர தேசிகர் அவர்களுக்குத் திருவருளும் குருவருளும் பெருகுக.

இந்நூல் எழுதுங்கால் உடனிருந்து துணைபுரிந்த ஆதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர்கள் வித்துவான், வி. சா. குருசாமி தேசிகர், வித்துவான், சோ. சிங்காரவேலன் B. A., அச்சுப் பிழைத்திருத்தம் செய்த வித்துவான், சிரோமணி, வி. சபேசன் ஆகிய

மூவருக்கும், சிரோமணி, K. இராஜகோபால சாஸ்திரி, சிவாகமவித்துவான், S. சுவாமிநாத சிவாசாரியார், ஆகமப்பிரவீணர் V. முத்துசாமி சிவாசாரியார் ஆகியோருக்கும் திருவருளும் குருவருளும் ஓங்குக.

இதனை 1960 ஆம் ஆண்டில் ஆதீன முதற் பரமாசாரியர் (குருபூஜைத்) திருநாள் வெளியீட்டு மலராக உலகிற்கு நல்கியருளும் தருமையாதீனம் இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருவடி மலர்களையும் அருட்பெருக்கையும் போற்றி வாழ்த்தி வணங்குகின்றேன்.

தருமையாதீனப்
பல்கலைக் கல்லூரி,
தருமபுரம்.
10—5—1960.

அடிமை
முத்து. சு. மாணிக்கவாசகமுதலியார்
முதல்வர்

குருபாதம்

# பொருளடக்கம்

பக்கம்

குருபாதம்

# பட அட்டவணை

எண் பக்கம்

உ

குருபாதம்

ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களுடன்

# திருக்கயிலாய யாத்திரை சென்ற

## புண்ணியப் பேறுடையவர்கள்,

1 108 ஸ்ரீ சுவாமி வித்யாநந்த சரஸ்வதி அவர்கள்,
கீதா சத்சங்கத் தலைவர். நையனிதால்
(உடன்வந்து உதவியவர்கள்)

2 திரு. சதாசிவபாண்டுரங்கசகஸ்ரபுத்தே அவர்கள்
சாங்லி (மகராஷ்டிரம). B. Sc., B. T.,

3 ஸ்ரீமதி. பார்வதி சதாசிவபாண்டுரங்கசகஸ்ரபுத்தே அவர்கள்,

4 திரு. பக்திபூஷண். K. K. ஆசார்யா,
புது ராம மந்திரம், கோண், கல்யாண்.
தாணு ஜில்லா, மகராஷ்ட்ரம்

5 திரு. L. R ராஜாவர்மா,
கோச்சப்ப தம்புரான், செங்கனச்சேரி,
கேரள இராஜ்யம்.

6 திரு. C. K. சஞ்சீவப்பா, பங்களூர், கன்னட இராஜ்யம்.

7 திரு. சூர்யபிரகாச சர்மா,
இலட்சுமணபுரி, உத்தரப்பிரதேசம்.

8 திரு. சிவ சிங் சர்மா, டேஹ்ராடூன், உத்தரப்பிரதேசம்.

9 திரு. லால்பிகாரிகன்னு, கல்கத்தா, மேற்கு வங்காளம்,

10 திரு. ஹரிகிருஷ்ணலால்,
இலட்சுமணபுரி, உத்தரப்பிரதேசம்.

11 திரு. ரோஷனலால் சேட்டி
கண்டாக்கி, உத்தரப்பிரதேசம்.

12 மாது ஸ்ரீ தாரா பந்த்
மல்லித்தால், நயனிதால், உத்தரப்பிரதேசம்.

13. ஸ்ரீ N. V. அநந்தராம சர்மா பல்லாவரம், சென்னை.
14. டாக்டர். திரு. S. N. ஸ்ரீநிவாச அய்யர், மாயூரம்.
15. திரு. S. V. S. கந்தசாமி செட்டியார், மாயூரம்.

ஆதீன மடத்துப் பணியாளர்கள் :-

16. அ. கல்யாணசுந்தர தேசிகர்,
(ஆதீனம் சூப்பரிண்டெண்டெண்ட்), நூலாசிரியர்.
17. T. துரைசாமிப் பிள்ளை, ஆதீனம் அட்டவணை, உதவி.
18. ம. சிவசண்முகநாதன், திருநெல்வேலி காரியம்.
19. A. நடராஜன்.
20. சம்பந்தன், பணிவிடை.
21. போட்டோ, M. மீனாட்சிசுந்தரம்.

இதில் தமிழ்நாட்டவர்கள் எல்லோரும் ஒரு கூட்டமாக ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் ஆதரவிலும் மற்றவர்கள் தனிப்பட்ட முறையிலும் சென்றுவந்தார்கள்.

உதவிகள் :-

சமையல் உதவி : N. ஹயாத் சிங்,
நயனிதால், (கீதா சத்சங்கத் தொண்டன்).

வழிகாட்டிகள் : D. ஜீவன் சிங்,
மர்த்தோலியா, ஃபர்சோலி கிராமம், தேஜம்.

,, விஜய சிங் தரம் சத்து,
டிம்டியா கிராமம், தேஜம்.

உடன் உதவி ; ஜெயலால்சா, கீதா சத்சங்கத் தொண்டர்.

இதுவல்லாது சமையல் உதவிக்கு இருவர் உடன்வந்தார்கள். நயனிதாலிலிருந்து 50 வயதுக் கிழவர் ஒருவரும் ஆந்திர தேசத்துச் சாது ஒருவரும் வந்தனர்.



உ

சிவமயம்

# திருக்கயிலாய யாத்திரை

" குஞ்சரக் கன்றின் இரு செஞ்சரணை அஞ்சலிப்பாம் "

## இன்பத்தேனூற்று :

போன் பூத்த மலையெனப் பேயர்பேறும் மாமேரு மலையிற் பிறந்தது ஒரு பிடி. வேண்மை நிறம் போருந்திய வேள்ளி வேற்பில் விளங்கியது ஒரு களிறு. பிடியும் களிறும் மணந்தன. விளைவு? சிறு கன்று ஒன்று பிறந்தது. அதுவே ஓங்காரத்து உட்போருளாயது. இப்படி ஒரு கயிலைக்காட்சி. அந்தக் கயிலைமாமலை ஒரு தேய்விகத் தானம். அதில் எழுந்தருளி யிருந்து உலகை ஆட்டி வைக்கும் பரம்போருளே சிவபரம்போருள், கயிலைநாதன். இச் சிறப்பு நம்மைக் 'கயிலைமலையானே போற்றி போற்றி', 'கயிலைமலையானே போற்றி போற்றி', 'கயிலைமலையானே போற்றி போற்றி' என்று அந்தப்புகழ்நாமத்தைச் சோல்லச் சேய்கிறது அந்த மந்திர சக்தி நம்மை அங்கே இழுக் கிறது அவ்விதம் சோல்வதிலும் நினைப்பதிலும் ஒரு தனி இன்பம் பிறக்கிறதல்லவா ? 'நாவினுக்கருங்கலம் நமச்சிவாயவே' என்றார் நம் அப்பர் சுவாமிகள். அதே போலச் சோல்லினுக் கருங்கலம் கயிலைமலையானே போற்றி போற்றி என்று சோல்லலாமல்லவா ? இவ்விதம்

நினைத்துப்பார்க்கின்றன, அங்குச் சென்று கண்டுவந்த அருள் உள்ளங்கள். இந்த 'இன்பத் தேனூற்று நம்மை அங்கே கயிலைக்கு வா! வா! என்று அழைக்கிறது ; காட்சி கொடுக்கக் காத்துநிற்கிறது இரவும் பகலும் எந்நேரமும்.

## இறைவனதிடம் :

கயிலைப் பெருமலை சிவபெருமான் உமாதேவியாரோடு விரும்பி எழுந்தருளித் திருவோலக்கக்காட்சி வழங்கும் அருள்மாமலை. இப்பூவுலகினிலே, பேரிமயத்தின் வடக்கே, எல்லைகடந்த இமய மணிமுடியாக அமைந்து விளங்கு கிறது. மலையின் எல்லா இலக்கணங்களும் ஒரு சேர அமைந்ததாக, மற்றவற்றிற்குப் பேரரசாக ஒளிவிட்டு நிற்கிறது. மலையினது இலக்கணமாகிய அளக்கலாகா அளவும் பொருளும், துளக்கலாகா நிலையும் தோற்றமும், வறப்பினும் வளந்தரும் வண்மையும் இம் மலைக்கு என்றும் எக்காலத்தும் உண்டு. பெருமான் ஒரே பெற்றிய னாக, காலங்கடந்தவனாக அளவுக்கு உட்பட்டும் உட்படா மலும் வேத காலத்தில் அவர்கள் கண்ட அதே நிலையில் இன்றும் விளங்கி வருகிறான். அதேபோல அவனது இருப்பிடமாகிய இம்மலையும் அதே இலக்கணத்திற்கு உட்பட்டு வேதகால முனிவர்கள் கண்டு சொல்லி வைத்த எல்லாத் தெய்விகக் காட்சிகளையும் நமக்குப் பரி பக்குவமின்மையாற் காணமுடியவில்லையே என்று நம் மனம் ஏங்கினாலும், அனுபவத்தில் காட்சியால் இது இறைவனதிடம் என்பதை நம்முடைய உள்ளுணர்வு நம்மை அறியாமலே நமக்கு அறிவிக்கிறது. அப்பெரு மிதம் அங்கே காணப்படுகிறது. அப் பெருமிதத்தோடு அரசு வீற்றிருக்கிறது இத் திருமாமலை.

## ஆற்றல் :

ஒரு பெரிய மலைத்தொடரின் பல பனிமலைக் கோடு முடிகளின் இடையே இம்மலைச் சிகரம் நின்றாலும் தானே கயிலை, தானே மற்றவற்றிற்கு மணிமுடி என்ற பெருமை தோன்ற நின்று தன்னைக் காணும்படி நம்மைக் கூவி அழைக்கிறது. தோற்றத்தாலே கண்டவர் கண்ட இடத்திலே நேக்குநேக்குருகித் தாமே கைகள் தலைமீதூரக் கம்பித்து நிற்கச் செய்யும் ஆற்றலும் அதற்கு இருக்கிறது.

## இன்பம் விழையான் :

அடியார்கள் பெருமான் காட்சியைக்காண, அவன் திருவடி நீழலை அடைய அனுபவித்த பல துன்பங்களையும் அவர்கள் வரலாறுகள் நமக்கு எடுத்துச் சொல்கின்றன. அவர்கள் குறிக்கோள் மிக உயர்ந்ததாக, மலையினும் மாணப் பெரிதாக இருந்தமையால் தங்களுக்கு நேர்ந்த சோதனைகளைத் துன்பமாகக்கருதாது, அதிலே ஒரு இன்பங் கண்டு முன்னேறித் தம் செயலில் வெற்றிகண்டனர். அதே நிகழ்ச்சி இந்த யாத்திரை மேற்கொள்வோருக்கும் உண்டு. துன்பத்தைத் துன்பமாகக் கருதிக் கருத்தழிந்து மனம் மறுகுவோர் வெற்றி காணுது ஒவ்வொரு நிலையிலும் திரும்பி வந்திருக்கிறார்கள். மானசசரோவரம் கண்ணுக்குத் தெரியும் தொலைவு சென்றுங்கூட அதற்குமேல் ஏதோ ஒரு காரணத்தால் செல்ல முடியாது திரும்பியிருக்கிறார்கள். தொலைவிலே அப்பெருமைமிக்க காட்சியைக் கண்டு, ஆனந்த மிகுதியால் அப்படியே உயிர்விட்டும் இருக்கிறார்கள். ஆகையால் ' இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான் துன்பம் உறுதல் இலன் ' என்னும் உறுதிப் பாடு உடையவர்களே எல்லாவற்றிலும் வெற்றி காண முடியும் ; அதிலும் இந்த யாத்திரையில் அந்த உறுதிப்பாடு

இல்லாது வெற்றிகாணவே முடியாது. இது வெறும் சொல் வீரமல்ல ; செயல் வீரமாகும்.

துன்பம் :

துன்பம் என்ற உடனே அதைப் பெரிதாக்கிக் கணக்கிட்டுப் பார்க்கக்கூடாது. இதனுல் இது துன்பமே நிறைந்த யாத்திரை என்ற முடிவுக்கு வருதலுங்கூடாது. நமது நாட்டில் சமவெளி இடங்களில் கிடைக்கும் எல்லா வசதிகளும் கிடைக்காது என்று சொல்லலாம். அதற்கு மாருக, என்றும் மறக்க முடியாத, நினைத்தாலே இன்பத் தேனூற்று நிறைந்துநிற்பதாக, இன்பக் காட்சிகள் நிறைந்த தாக, மனத்தையும் கண்ணையும் குளிர்விப்பதாக இருக்கும். அக்காட்சி நம்மை அறியாமலே நம்மை மேலே மேலே இழுத்துச் செல்லும். இவ்விதமாக நாம் அங்கே இழுக்கப் படுகிறோம். உள்ளம் கவரப்படுகிறோம். மௌனமாக அது இட்டுச் செல்லும் பாதையிலேயே போய்க்கொண்டே இருக்கலாகாதா என்றே நம் மனமும் மயங்குகிறது. அந்த இன்ப உணர்வு யாத்திரை வழி நடப்பின் அயர்வு தெரியாமல் நம்மைச் செலுத்திச் செல்கிறது. அறிவிற்கும் உளத்திற்கும் இன்பமூட்டி வேறு எந்த நினைவும் நம்முள்ளே புக வொட்டாமல் தேற்றிச் செல்கிறது. ஒரோரிடத் தில் சிறிது உடற்சோர்வு இருந்தாலும் யாத்திரைச் செலவில் அது நமக்குத் தெரியாது செய்துவிடும் மற்றோர் அரிய காட்சி. இது ஒவ்வொருவரும் அறிய வேண்டிய நல்லதொரு அனுபவம். நடையால் சிறிது உடற்சோர்வும் இடத்தைவிட்டு அதிகநாள் பிரிவுமே துன்பங்களாகும். சுவைபற்றி நாவை அடக்குதல் சிறிது துன்பம்தான்.

அனுபவ நிலை :

இந்தத் தெய்விக மலையைக் கண்டவர்கள் ‘ கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன் ’ என்ற

அப்பர் திருவாக்கைக் 'கண்டேன் கயிலைத் திருமலையைக் கண்டறியாதன கண்டேன்' என்று சொல்லித் தன்வயம் இழந்து ஆடிப்பாடி இன்பார்ந்திருப்பார்கள். அக் காட்சி கண்டால் நம் உள்ளமும் உடலும் பரவசமாகி எங்கும் நிறைந்த இன்பப் போதையில் பேச்சற்று நிற்கச் செய்யும். திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலைச் சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பராமாசாரிய சுவாமிகள் அவர்கள் கண்டது இதுவே. அவர்கள் கண்டகாட்சி சொல்லுக்கப்பாற்பட்டது. விளக்கம் அனுபவத்தால் காணலாமே தவிர, எழுத்தால் எழுதிக்காட்ட இயலாதது அல்லவா? ஆனாலும் சொல்லால் சொல்லக்கூடியதை எழுத்தில் உருவம் கொடுக்கவே இம்முயற்சி.

### பெயர்கள் :

இம் மலையைக் கயிலை, கயிலாயம், கைலாஸ், போன்ற பல பெயரிட்டு இந்துக்கள் அழைக்கிறார்கள். பௌத்தர்கள் இதை ஆதிபுத்தர் என்று சொல்லுகிறார்கள். திபேத்திய லாமாமதத்தினர் மகாமேரு, உலக அச்சாணி, காங்ரிம்போக், காங்ரி, ரிபாப் - சென்போ, ரிராப், ரிபாப் - சென்பா என்று பல பெயரிட்டு அழைக்கிறார்கள். ஜைனர்கள் அஷ்டபதம் என்று சொல்லுகிறார்கள். சீனர்கள் க்வேன்லன் என்று அழைக்கிறார்கள்.

கயிலை, வெள்ளியங்கிரி, சயிலாதி, வேதண்டம், கண்ணுதல்மலை, நொடித்தான்மலை கயிலாயகிரி என்று பிங்கலநிகண்டும்; கயிலை, விசையாத்தம், வெள்ளிவெற்பு, ஈசன்வெற்பு, கயிலாயம், பொன்மலை, மாமேரு, உயர்மலை, தனுமலை, தேவாலயம், இராசமலை, வடமலை என்று நாமதீப நிகண்டும் பெயர் சொல்லுகின்றன.

## வேர்ச்சொல் விளக்கம் :

கைலாஸ் என்ற வடமொழிச் சொல் கில என்ற வேர்ச் சொல்லிலிருந்து பிறந்தது; (கில - சுவைத்ய ச்ரீட நயோ:) வெண்மை நிறத்தினுல் பிரகாசிக்கிறது என்ற பொருளும், பார்வதி பரமேஸ்வரர்களுடைய க்ரீடையினுல் பிரகாசிக் கிறது என்ற பொருளும் உடையது என்றும், केलीनां समूहः कैलं = கேளிகளின் கூட்டம் கைலம்; कैलेन आस्यते अस्मिन् इति कैलासं=பலவகைக் கேளிகளோடு (பரமன்) வீற்றிருக் கும் இடம், கைலாசம் ; के लसति इति केलासः =கேலாஸம், ஸ்படிகம்;=केलासेन निर्मितं=ஸ்படிகத்தால் ஆயது कैलासं கைலாசம் आस्यते इति आसः=ஆஸ: இருப்பு; केलिः प्रयोजनं अस्येति कैलः கைல: கேளியைப் பயனுகக்கொண்டது. ஆகவே கேளியைப் பயனுகக் கொண்ட இருப்பு உள்ளது கைலாஸம் என்றும் அமரசிம்மனுடைய நாமலிங்கானு சாஸ னத்தில் ஸ்வர்க்க வர்க்கத்தின் முடிவில் கூறப்பட்டுள்ளது,

## நீலமணி :

இதற்கடுத்து, இந்த யாத்திரையில் சிறப்பாகச் சொல்லப்படவேண்டியது மானசசரோவரத் தடாகம். மானச சரோவரம் வெள்ளிவெற்பிடையே பதித்த ஒப்பற்ற ஒரு நீல மணி. அதை மானச சரோவரம், மானசரோவரம், மானஸ் என்று நம்மவர்கள் அழைக்கிருர்கள். திபேத்தியர் ட்சோ மபாம், ட்சோமவாங் என்று சொல்லுகிருர்கள். பௌத்தர் கள் அனவதப்தம், அனேதத்தம் என்று வழங்குகிருர்கள்.

## தெய்விகம் - இராட்சசம் :

மானச சரோவரம் பிரமனுடைய மனச் சங்கற்பத்தால் உண்டாகியது. மனத்தாமரை எனலுமாம். ட்சோமபாம்,

போதிசத்துவர் ஆயிரம் இதழ்த் தாமரையில் அவதாரம் ஆன இடம் என்பதாகும். அனவதப்தம் என்ருல் வேம்மை யும் துன்பமும் இல்லாதது என்ருகும். இது தேய்வத் தன்மை போருந்தியது. தேவர்கள் விரும்பித் தவம் சேய் யும் இடம். இதற்கடுத்து இராக்ஷச(தளம்)தால், இராவண இருதயம் என்று நம்மவர்களும், லங்காக் ட்சோ என்று திபேத்தியரும் பேயர் சோல்லும் பேரிய தடாகமும் இருக் கிறது. அது அரக்கர் வாழுமிடம். அவர்கள் தவமியற்றும் இடம். மானசசரோவரம் தேய்விகமானது; இராக்ஷ்ச தடாகம் அரக்கத் தன்மையுடையது என்பதே அதன் போருளுமாகும்.

## கௌரி சங்கரம் :

மானசசரோவரம், கயிலேமலே இரண்டையும் சேர்த்து கேளரிசங்கரம் என்று பேரியோர் சோல்வர். அம்மையின் தண்ணருளே போன்றது மானசத் தடாகம், எம்பேருமான் இன்னுருவே போன்றது கயிலேச் சிகரம். ஆகவே இந்த இரண்டையும் ஒரே காலத்தில் தரிசித்து வழிபடுதல் அம்மையப்பரை ஒரு சேர வழிப்ட்ட சிறப்புடையதாகும். மானசசரோவரத்தின் அருகில் விஷ்ணுபீடம் இருப்ப தாகவும் சோல்லப்படுகிறது. ஆகவே கயிலே மானச சரோவர தரிசனம் வழிபாடு ஹரிஹர வழிபாடாகும். 'அரிய லால் தேவியில்லே ஐயன் ஐயாறனுர்க்கே' என்ற திருமுறை வாக்குப்படி அதுவே கேளரிசங்கர தரிசனமாகவும் கோள்ளலாம்.

## கயிலேத் தரிசனம் :

கயிலேத் தரிசனம், அதனே வலம் வருதல் கேளரி குண்டத்திலும் கயிலே நதியிலும் தீர்த்தமாடுதல் மானச

சரோவரம் தரிசனம், அதில் தீர்த்தமாடுதல், அதனை வலம் வருதல் இதுவே கயிலை யாத்திரை. நம் பரதகண்டத்தில் உள்ளோர் யாவரும் விரும்பி மேற்கொள்ளும் சிறந்த பெரியதொரு யாத்திரை. அல்லாமலும் இந்த ஆசியப் பெருங்கண்டத்தில் உள்ளோர் யாவரும், ஜப்பானியர் உள்பட, அவரவர் வாழ்க்கையில் ஒருமுறையேனும் சென்று கண்டுவரத் துடிக்கும் புநித யாத்திரை.

## உன்னத நிலை :

நம்மவர்கள் முன்னே சொல்லியிருப்பதுபோலச் சிவ பெருமான் பெருமாட்டியோடு திருவோலக்கத்தில் எழுந் தருளியிருந்து அருள் வழங்கும் திருவருள் விலாசமாகக் கொள்ளுகிறார்கள் கயிலையை. பௌத்தர்களும் லாமா மதத்தினரும் ஆதிபுத்தர் அமர்ந்திருக்கும் பெருந்தலமாக ஐந்நூறு போதிசத்துவர்களும் தங்கித் தவம் பெருக்கும் தவச்சாலையாக இதைப் போற்றுகிறார்கள். ஜைனர்கள் இங்கு இக்கயிலையில் அவர்களுடைய முதல் தீர்த்தங்கரர் ஆதிநாத விருஷபதேவர் மகாநிர்வாணம் அடைந்த இடமாகக்கொண்டு யாத்திரை செல்கிறார்கள். ஆகவே கீழை உலகின் ஜோதியாக, கீழை நாட்டினரின் உயிர்நாடி யாக, உலகப் பெருமலைகளின் உச்சி இடமாக, உன்னத நிலையாக, புநித மணிமுடியாக. இந்து பௌத்த ஜைனமதங் களின் நிலைக்களனாக விளங்குகிறது இக்கயிலையங்கிரி. இந்த மக்களின் மனத்தில் அவரவர் வழியில், ஏதோ ஒரு பெயர்கொண்டு நிலைத்துநின்று தன்னைக்காண அழைக்கும் மிகப் பெரிய பரம்பொருள் விளக்கமாக அமைந்திருக் கிறது இத்தெய்விகச் சிகரம். இதைக் காணச் செல்லும் யாத்திரையைவிடச் சிறந்தது வேறொன்றுமில்லை.

## உலக இயற்கை :

மனிதன், போதுவாக, உலகியல் இன்பங்களைப் பேற்றுப் பெருக்கிக்கோள்வதில் எவ்வளவோ துன்பங்களைப் போருட்படுத்தாது இடைவிடா முயற்சிகள் செய்து வருவதைப் பார்க்கிறோம். நிலையில்லாத சிற்றின்பத்திற்காக அந்த அனுபவத்திற்காக அவன் மேற்கோள்ளும் பேருமுயற்சிகளோ மிகப்பலவாகும். பேற்றபின் அது அவனுக்கு மன நிறைவை உண்டுபண்ணுவதில்லை. ஆசையை மேலும் மேலும் பேருக்கி அந்தத் தேட்டத்திலே அவனை ஈடுபடுத்தி எப்போழுதும் அதற்கான துன்ப வழிகளிலே சேலுத்திக்கோண்டே போவதையும் பார்க்கிறோம். தான் பேற்ற இன்பம் ஒரு சிறிதாக இருந்தாலும் அதனைத் தம் சந்ததியார், சுற்றத்தார் சூழ உள்ளவர்கள் வழிவழியாக அனுபவித்தல் வேண்டும் என்றே விழைவான். அவர்கள் அதனைப்பேற்று அதனால் அடையும் இன்பத்தைக் காண வேண்டும் என்பதற்காக தன் இன்பத்திலும் ஒரு சிறிது விடுத்து அதில் விளையும் துன்பங்களை இயல்பாகக் கருதி, சேயல் சேய்து இன்புறுவான். இதனால் அவர்களுக்கு அவன் ஒரு குடும்பத்தூணாக - உறுதுணையாக - வழிகாட்டியாக அமைகிறான். இவ்வளவு பாடுபட்டுக் காண்பதும் அடைவதும் எல்லாம் ஒரு சிறு அளவில் எதிர்பாராநிலையில் அழிந்துபோவன என்பதையும் கண்டும் அவன்முயற்சியில் தளர்ச்சியடைவதில்லை. மேலும்மேலும் முயன்றுகோண்டே இருப்பான். இது உலக இயற்கை. உலகியல் இன்பங்கள் தரும் துன்பங்களிவை.

## துன்பம் துடைக்கும் தூண் :

மேல் வழியில் நம் பேரியோரும் நமக்காக என்றும் உழைத்துவருகிறார்கள். துன்பங்களை மேற்கோள்கிறார்கள்.

அதில் தம் நலம் கருதுவதுகூடக் கிடையாது. தாம் பெறும் இன்பத்தில் ஒரு பகுதியை இழக்கவும்செய்கிருர்கள். பள்ளிக்கூடத்தில் ஆசிரியர்கள் குழந்தைகளுக்குக் கல்வி புகட்டும்போழுது, அவ்வாசிரியர்களும் தம் பேரியநிலேயை விட்டு அவர்களுக்கு மாணவர்களாக வாய்க்கும் குழந்தைகளோடு ஒட்டி அக்குழந்தைகளின் தன்மையில் நின்று அவர்கள் உளப்பக்குவம் தேரிந்து, அவர்கள் - அக்குழந்தைகள் - மனங்கோள்ளும்படிக் கல்வியைப் புகட்டுவார்கள் அல்லவா ? அதேபோல நம்முடைய ஆசாரியப் பேருமக்களும் அருள் வள்ளல்களும் தாம் கண்ட இன்ப சுகத்தில் லயித்து நிற்பார்கள். அதிலே அப்படியே தாம் மாத்திரம் லயித்து நின்றுவிடுவதுமில்லே. நம்மீது வைக்கும் பேருங்கருணேயினுல் நம்போன்றே உருப்பேற்று நம்மிடையே வந்து தோன்றுவார்கள். நம்மிடையே வசித்து நமக்காக எல்லாத்துன்பங்களேயும் உலகிலே ஏற்று நமக்கு வாழ்ந்துகாட்டி நம்மை நல்வழிப்படுத்துவார்கள். இதைச் சேய்வதில் தாம் இன்பம் விழைவதையும் ஓரளவு குறைத்துக் கோள்வார்கள். அதனுல் வரும் துன்பங்களேயும் இயல்பாக ஏற்றுக்கோள்வார்கள். இவ்விதம் அவர்களுடைய மக்களாகிய நாம் உய்ய வழிகாட்டிகளாக அவர்கள் அமைந்துவிடுகிருர்கள். இதுவே உயிரை நல்வழிப்படுத்தி நிலேத்த இன்பத்தைப் பேறச்சேய்து துன்பம் துடைக்கும் பேருபகாரச்சேயலாகும். இந்த உதவி உயிர்த்துணேயாகி நம்மைத் தூய்மைப்படுத்தி நிலே நிறுத்தும். கிடைத்ததிலே ஒரு அமைதியையும் கோடுக்கும். நிலேயில்லாத இன்பங்களே அடைய துன்பங்களே இயல்பானவை என்று நாம் ஏற்றுக்கோள்வதைவிட நிலேத்ததான, தேவிட்டாத எதனுலும் குறையாத ஒன்றை அடைய அப்பேரியவர்கள் காட்டிய அவ்வழிச் சேல்வதில் நமக்கு

அனுபவமில்லாமையால் முதலில் துன்பமாகத் தோன்றி னுலும் அவ்வழிச் சென்ருல் முடிவில் இன்பமாகவே ஆகக் கூடியதல்லவா? இதுவே உயிரின் குறிக்கோளடைவும் ஆகும்.

## செயல்களும் இன்ப நலன்களும் :

அந்த அருட் பேரியோர் சந்ததியில் எழுந்தது இத் தருமை ஆதீனம். திருக்கயிலாய பரம்பரையைச் சேர்ந்தது; நந்தி மரபில் வந்தது; மெய்கண்ட சந்தானத்தைச் சார்ந்தது. ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய மூர்த்தி களின் அருட்கொடையாக நின்று விளங்குவது என்ப தெல்லாம் நாம் அறிவோம். இந்தக் குருசந்தான வழியில் இப்போது 25 ஆவது குருமகாசந்நிதானமாக அருளாட்சி செலுத்தி வருபவர்களின் செயல்களையும் அதனுல் நாம் பெறும் இன்ப நலன்களையும் நாம் அறிவோம்.

## ஆர் அறிவர்?

உலகத்தவர்க்குத் தலைவன் ஒருவன் இருக்கிருன். அவன் கமலையில் வாழும் சிறப்புடையவன். அவன் பெயர் ஞானப்பிரகாசன். அவன் என்னைப்போல் மானிடச் சட்டை சார்த்தி இப்பூவுலகில் வந்திலனேல் நீதி வழியாகிய செந்நெறியை ஆர் அறிய வல்லார்? சித்தி முத்திகளைத் தாம் ஆர் அறிவர்? நல்ல தவநெறிகள் அன்பு இவற்றைத்தாம் ஆர் அறிவர்? இவற்றை அவனில்லாது அறியவல்லோமோ? என்று பெருமிதத்தோடு சொல்கிறது அந்த ஞானத் திருவுள்ளம். அதுதான் குருஞானசம்பந்தர் திருவுளம். அந்த வழியில் வந்தது போய்க்குமா? அதே உணர்வு, அதே செயல் புரிந்து உலக மக்களுக்கு உறு துணையாக - வழிகாட்டியாகத் திகழாதா?

குறிப்பு :

அதன் விளைவுதான் நம் குருநாதர் மேற்கொள்ளும் யாத்திரைகளும், அதன் அனுபவமாக நாம் பெறும் உபதேசங்களும், யாத்திரை அனுபவ நூல்களுமாகும். விரிவாக எழுதித் தாம்கண்ட - தாம் பெற்ற இன்பத்தை யாவரும் பெறுதல் வேண்டும் என்பதே அதன் குறிப்பு மாகும்.

பயன் :

கயிலை யாத்திரைப் பயன் அதனைச் செய்வோருக்கும், அவர்கள் முன்னோருக்கும், அவர் வழியில் வரும் பின் சந்ததியாருக்கும் நிலைத்த இன்பப்பேற்றை அளிப்பதாகும். இந்தப் பெரிய பயனை ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் தாம் பெற்றதோடு, சிலரை உடன் அழைத்துச் சென்று அடையச் செய்ததோடு, செல்லாதவர்க்கும் இந் நூல் மூலம் அவாவினைத் தூண்டி மேற்கொள்ளச் செய் வதும், செல்லமுடியாதவர் படித்துக் கருத்தில் இருத்திச் சிந்தித்து ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் அனுபவங்களை உணர்ந்து அவர்கள் உபதேசங்களை மனங்கொண்டு பெருமான் திருவருளுக்கு ஆளாக்குவதுமாகும்.

தருமைத் திருமடம் :

திருத்தருமையாதீனம் திருக்கயிலாய பரம்பரையில் வந்தது. கயிலையில் வீற்றிருக்கும் ஸ்ரீ கண்ட பரசிவம் தட்சிணாமூர்த்தமாக எழுந்தருளியிருந்து தம் அணுக்கர் நந்திதேவருக்கு உபதேசித்தருளினார். நந்திதேவர் சனகாதி முனிவர்களுக்கு அதனை உணர்த்தினார். இது அகச் சந்தானம். அந்தப் பரம்பரையில் வந்த பரஞ்சோதியார்

இப்பூவுலகத்திலே மேய்கண்டதேவருக்கு அவ்வுண்மையை உரையிட்டார். இதிலிருந்து புறச்சந்தானம் தோடக்கம். மேய்கண்டநாதர் வழி வந்தவர் கமலைச் சிதம்பரநாத ஞானப்பிரகாச அருட்குரு. இறையருள் துணேசெய்ய அந்த ஞானப்பிரகாசரைத் தம் ஞானகுருவாகக் கோண்டு பரமா சாரிய மூர்த்தியாகி சந்தான பீடத்தைத் தருமையில் நிறுவி யவர் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த குரவர்.

## கயிலாய பரம்பரை :

ஸ்ரீ கண்ட முதல்வனிடமிருந்து உபதேச சந்தானம் தோடங்குகிறது. அதைத் திருக்கயிலாய பரம்பரை என வகுத்தனர் பேரியோர். ஸ்ரீ கண்டர், நந்தி உள்ளிட்ட பல பேருமக்களுக்கும் உணர்த்திஞர். நமக்குக் கிடைத்தது நந்திதேவர் மூலமாகவே. ஆகவே அதனை நந்தி மரபு என்று கோள்ளுகிறேம். நந்திதேவரும் தம் வழியில் பலருக்கும் வழங்கிஞர் அந்த நற்போருளை. அதிலே மேய்கண்டாருக்கு அவ்வழக்கத்தை அளித்தவர் பரஞ் சோதியார். மேய்கண்டபுநிதரும் அவர்வழியில் பலருக்கும் நல்லுரை வழங்கிஞர். அதுவே மேய்கண்டசந்தானமா யிற்று. நமது தருமைத் திருமடத்தின் பரம்பரை கயிலாய பரம்பரை எனவும், மரபு நந்திமரபேனவும், சந்தானம் மேய்கண்டசந்தானம் எனவும் வழங்குவதற்கு உள்ள தோடர்பு இது.

## தூண்டுகோல் :

திருக்கயிலைக்கும் இத் திருமடத்திற்கும் வழிவழி மரபு பற்றி நேருங்கிய தோடர்பும் உறவும் நிலைத்ததாக உண்டு. ஆகையால் இவ்வாதீன இருபத்தைந்தாவது குருமணியாக

இப்போழுது அரசு வீற்றிருப்பவர்கள் கயிலைச் சேலவை மிகவும் விரும்புவது இயல்பாயிற்று. இயற்கையாக அந்த எண்ணம் அடிக்கடி திருவுளத்தே தோன்றினும் அதற்குத் தூண்டுகோல் பேரியபுராணம் என்னும் நம் திருத்தோண்டர் புராணமாகும். அதிலே திருமலைச் சிறப்பு, ஆளுடையநம்பிகள் கயிலையிலிருந்துவந்தது, இவ்வுலகில் வாழ்ந்து அருள்திறங்காட்டியது, மீண்டும் கயிலைக்கு இந்த ஊனுடலோடு அழைக்கப்பெற்றது, காரைக்காலம்மையார் திருமாமலையிற் சென்று கயிலைநாதனைக் கண்டு உரை நிகழ்த்தி அவனருள் பேற்று மீண்டும் வந்தது முதலிய சேய்திகள் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருவுளத்திலே இந்த யாத்திரையைச் சேய்தல் வேண்டும்; மேற்கோண்டால் அவனருள் முன்னிற்க நிறைவேற்ற முடியும் என்ற உறுதியைத் தந்தன.

விழைவு:

"தானெனைமுன் படைத்தான்" என்ற பதிகம் பாராயணத்தில் வரும்போழுதேல்லாம் தாமும் கயிலாயநாதனைக் காணச் சேல்வதாக, கண்டு உரை இழந்து நிற்பதாக நனவிலும் தோன்றுவதாயிற்று ஸ்ரீலஸ்ரீ குருமணிகளுக்கு. இந்த நல்நினைவின் விளைவாக அன்றேல்லாம் பேருமான் அனுப்பிய வேள்ளை யானைமீது சுந்தரர் கயிலை சேன்றது, அவரைப் பின்பற்றி ஐந்தேழுத்தோதி - அதுவும் குதிரையின் காதில் சேலுத்தி - சேரர்பேருமாள் கயிலை சேன்றது அங்குப் பேருமான் சேய்து காட்டிய திருவிளையாடல்கள் அந்தத் (ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின்) திருவுளத்திலே தோன்றி அவ்விழைவை அதிகப்படுத்திநிற்கும். அன்றேல்லாம் இந்தப் பேரியபுராணப் பகுதிகளின் விளக்க உரைகளான உபதேச மோழிகளே வேளிவரும்.

## முற்பயிற்சி :

இது ஒரு பெரிய யாத்திரை. முன் பயிற்சி இல்லாது பலவேறுபட்ட தட்பவெப்ப நிலைகளிலும், பல பெரும் ஏற்றம் இறக்கங்களிலும் காலால் நடந்தே செல்லுதல் வேண்டும் என்பவைகளைத் தெரிந்து வைத்திருப்பார்கள் போலும். அவற்றிற்கு முற்பயிற்சியாக இமயப் பனிவரைகளில் உள்ள திருக்கேதாரம், பசுபதிநாதம், அமரநாதம் முதலிய பெருந்தலங்களைத் தரிசித்து வர யாத்திரை மேற்கொண்டு சென்று சிறப்பாக முற்றுவித்தும் வந்தார்கள்.

## சூசகம் :

இமயப்பெருவரையின் அடி இடத்தை அணுகியதுமே அவர்களுக்குக் கயிலை நினைவு உள்ளத்தே ஊறி மேலோங்கும் போலும். அங்கும் கயிலை சென்று கண்டு வந்த பெருமக்களின்வரலாறுகளும் அவர்களின் பெருமைகளுமே தோன்றப் பேச்செழும். அதுவல்லாது சென்ற ஆண்டில் அமரநாத தரிசனத்திற்கு எழுந்தருளியபொழுது சந்தன் வாடி தாண்டி பிசிக்காட்டியில் மேலே ஏறிச் செல்லுங் காலத்தில் எதிரே ஒரு பனிமலைச்சிகரத்தைக் கண்டார்கள். அது கயிலையின் உருவ அமைப்பில் இருந்தது. அங்கேயே கயிலைக் காட்சியைக் கண்டார்கள். " இப்பொழுது ஒரு * குட்டிக் கயிலாயக் காட்சியைக் கண்டிருக்கிறோம். இனி அப்பெருமாமலைக் காட்சியும் நமக்கு அண்மையில் கிடைக்கும் என்பதற்குப் பெருமான் சூசிப்பித்து உணர்த்துகிறான் இதன் மூலம். பனிமுட்டம் மறைத்துவிடுமுன்னே நீங்கள் எல்லோரும் கண்டு தரிசனம் செய்துகொள்ளுங்கள். கயிலைமலையான் அழைப்பு நமக்குவந்துவிட்டது. விரைவில்

---

* ஆதீன வெளியீடு - அமரநாதம் பக்கம் 143.

நாம் அங்குச் சென்று காணும் பேறு பெறுவோம் '' என்று மிகக் கனிவோடு உரை நிகழ்த்தினார்கள். பிறகு ஒரு சிறிது நேரம் நின்ற இடத்திலே நின்ற நிலையிலே கயிலைப் பதிகச் சிந்தனை செய்தருளினார்கள். அன்றே அங்கேயே எப்பாடு பட்டேனும் அடுத்த ஆண்டில் கயிலைத் தரிசனம் செய்ய வேண்டுமென்ற உறுதியும் பிறந்தது. '' இமயப் பனி வரையில் நாம் நினைத்தபொழுதெல்லாம் யாத்திரை செல்ல முடியாதே. இல்லாவிட்டால் இப்படியே சென்றுவரலாமே. இருந்தாலும் எல்லாப் பெருங்காரியங்களையும் நம் குரு நாதன் ஆணை இல்லாது நாமே முயன்றுசெய்தலும் கூடாதே! வணுணை பெற்றுச் செய்தலே சிறப்புமாகும். முற்றுப் பெறுவித்தலுக்கு அவனருளும் வேண்டிப் பெறுவதொன் றல்லவா ?. இன்றே அந்தப் பிரார்த்தனையைத் தொடங்கு வோம். அதனை முடித்துவைத்தல் அவன் பொறுப்பாகும் '' என்று திருவுளத்திலே குறிப்புணர்ச்சிதோன்றியது; அன்று தொடங்கியது தீவிரப் பிரார்த்தனை; கயிலைப் பிரார்த்தனை.

## கடைக்கொட்கச் செய்வது :

பெருங்காரியங்களில் ஈடுபடுமுன்னே தம்முள் உறுதி கொண்டாலும் அதை அப்படியே அப்பொழுதே பலரு மறிய வெளியிடும் பழக்கம் அவர்களுக்கு இல்லை. மக்களின் அன்பு ஒரு புறம், ஆட்சிப் பொறுப்பின் சுமை ஒரு புறம் ஸ்ரீலஸ்ரீ குருமணியை எளிதில் வெளியேற முடி யாது தடுத்து நிறுத்தும். அதிலும் பல இன்பதுன்பங் களுக்கு உட்படுவதாகிய இதுபோன்ற செயல்கள் பற்றிய செய்தி அப்பொழுதே வெளிவந்தால் அன்பின் மிகுதியாலே பலர் கவலைகொண்டு தடைசொல்ல முன்வருவர். அந்த நல்லவர்களின் கவலை, திருமேனி நலம் குறையுமே, திருமேனிக்குத் துன்பம் விளையுமே, அப்படித் துன்பம்

வருங்காலத்தில் தாங்களும் உடனிருந்து பணி செய்ய முடியாதே என்பதான வீண் எண்ணங்களைப் பெருக்கிக் கொள்வதேயாகும். உயிருக்கு உறுதிபயப்பதாக, எவ்வளவு மேம்பட்டதாக இருந்தாலும் மேலே சொன்னபடி நேர்ந்து விட்டால்........ இதை மனத்தில்கொண்டு பயணத்தை - யாத்திரைத் தொடக்கத்தை காலந்தாழ்த்தவாவது செய்வர். அது ஒரு அன்பு வலையல்லவா? அதில் அகப்பட்டால் மீளுவதில் சில தடைகளும் வரலாமே என்பதே திருவுளம். அந்த எண்ணமே தம்முட் பிறந்த உறுதியை வெளிப் படுத்தாது மனத்திலே மறைத்துவைத்து உரியகாலத்தில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் வெளியிடுவதாகும். '' ஒரு செயல் செய்ய உறுதிகொள்ளும் ஒருவன் அது முடிவுபெறும்வரை மனத்தே மறைத்துவைத்திருந்து செய் வதாலே நினைத்த நல்ல பயனை - குறிக்கோள் அடைவைப் பெறமுடியும்; இடையில் வெளிப்படுத்திஞல் நீக்கமுடி யாத துன்பத்தைத் தந்து செயல் முடிவு பெருது தடைப் படும் '' என்ற விழுப்பொருளைக் கடைப்பிடிக்கும் ஆற்றல் உள்ளவர்கள் நம் ஸ்ரீலஸ்ரீ குருமணிகள். அதுவே அவர் களின் வெற்றிக்கு உறுதுணையாவது.

## விண்ணப்பம் :

தம் குறிக்கோள் நிறைவுபெறுதற்கு, ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் தம் ஆத்மார்த்தமூர்த்தி ஸ்ரீ சோக்கலிங்கப் பெருமான் பூஜாமுகத்திலும், மற்றமற்ற தலதரிசன காலங் களிலும், தம் திருவுள வேட்கையை விண்ணப்பம் செய்து கொள்ளுவார்கள். திருமுறை ஆசிரியர்கள், தம் குருநாத ராகிய சந்தான ஆசாரிய மூர்த்திகள் அனுமதி வேண்டி நிற்பார்கள். ஆலயங்களில் சிறப்பு வழிபாடுகள் திரு முறைப் பாராயணத்திலே சிறப்பாகக் கயிலைப் பதிகங்களை

ஓதுதல் முதலியன செய்யச்செய்வார்கள். எல்லாம் நடை பேறும். ஆனால் இவையெல்லாம் எதற்கு என்பதுமாத்திரம் யாருக்கும் தெரிவிக்கப்படாமலே இருக்கும்.

ஒருநாள் நிகழ்ந்தது......

ஒரு நாள் ஆலய நிர்வாகத்தை முன்னிட்டு ஆதீனத் திருக்கோயில்களுள் ஒன்றான திருவையாற்றுத் திருத்தலத் திற்கு எழுந்தருளினார்கள். ஐயாற்றுப்பெருமானை வழிபட்டு வலம் வந்தார்கள். தெற்குப் பிராகாரத்திலுள்ள தென் கயிலாயத்திற்கு வந்தார்கள். நாவின் மன்னவர் கண்ட கயிலைக் காட்சி அவர்கள் திருவுளத்திலும் எழுந்தது போலும். அங்கே வழிபாடு முடியுமுன்பே ' இன்று இங்கே ஒரு சிறப்பு அபிஷேக ஆராதனைகள் நிகழ்த்துதல் வேண்டும். கயிலைப் பதிகங்கள் முழுவதையும் சந்நிதியில் விண்ணப்பித்தல்வேண்டும் '' என்ற ஆணை பிறந்தது. எல்லாம் முறையாக நடைபெற்றன. அதிலே திருவுள நிறைவு தோன்றவில்லை. '' அடுத்துவரும் சோமவார நன்னாளிலே பெருமான் பெருமாட்டி இவர்களுக்கு ஒரே நாளில் லட்சார்ச்சனைகளும், கயிலைத் திருமுறை அகண்ட பாராயண நிகழ்ச்சியும், கயிலைக் காட்சி விரிவுரைகளும் நிகழ்தல்வேண்டும். எல்லாம் பெரிதாக சிறப்பாக அமை தல் வேண்டும் '' என்ற அருளாணையும் பிறந்தது. அதே போல நிகழவும் செய்தது. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமும் அன்பர்கள் சூழ அங்கு எழுந்தருளி வணங்கி வழிபட் டார்கள். அங்நகர் மக்களும் சுற்றுப்புறத்திலுள்ளோரும் பெருந் திரளாகக்கூடி வழிபட்டார்கள். அப்பொழுதே ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருவுள்ளக்கிடக்கை ஒரு சிறிது ஒரு சிலருக்குத் தெரியவந்தது. ஆனாலும் '' அங்கு

நடைபெறுவதிலே ஏதோ உட்பொருள் இருத்தல்வேண்டும்; அது கயிலை யாத்திரையாக இருந்தாலும் இருக்கலாம்'' என்ற ஊகம் மட்டிலுமே இருந்தது.

அனுமதி :

அடுத்தகுருவாரத்தில் குருமுதல்வர் ஸ்ரீலஸ்ரீ குருஞான சம்பந்தப் பெருந்தகையாருக்கும் அடுத்து எழுந்தருளி யிருந்த ஸ்ரீலஸ்ரீ ஆனந்தபரவச மூர்த்திகளுக்கும் சிறப்பு வழிபாடுகள் நடத்தி வேண்டிக்கொண்டார்கள். அவர்களுக்குத் திருவருட் குறிப்பாக அனுமதி கிடைத்தது. குருவார நன்னாள் ; அன்று அவர்கள் காண்பதெல்லாம் மௌனக் காட்சிதானே ! அந்தப் புனித நன்னாளிலே ஒரு இன்பப் பெருக்கு அவர்களுக்குக் கிடைப்பதாயிற்று. அதுவே திருக்கயிலாய யாத்திரை நினைத்ததைவிட மிகச் சிறப்பாக முடிவடைந்ததற்கு உறுதுணையாக நின்று உதவியது.

விரைவு :

யாத்திரை முன்னேற்பாடுகள் விரைவு பெற்றன. நிர்வாகம் தடைப்படாமல் நடைபெற ஏற்பாடுகள். மற்றும் எத்தனையோ முன்னேற்பாடுகள் செய்து முடிக்கவேண்டிய தாயிற்று சிறிது நேரத்திலே. எங்கும் பரபரப்பு. ஆனால் அப்பொழுது அங்குள்ளவர்கள் அறியமுடிந்தது, 'இந்த யாத்திரை ஸ்ரீ காசிவரை என்பதுதான். பிறகு...... அதன் தொடர்ச்சியாக ஏதோ ஒரு பெரிய யாத்திரையின் அறிகுறி'. இவ்வளவே.

## ஸ்ரீ காசியில் ஏற்பாடுகள் :

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் ஸ்ரீ காசி யாத்திரை செல்வதாக இருந்தால் அச்செய்தி திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்துத்தலைவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித்தம்பிரான் சுவாமிகள் அவர்களுக்கு முதலில் அறிவிக்கப்படவேண்டியதொன்று. அவ்விதம் செய்தல் மடத்துக்கு மடம், குருமூர்த்திகள் தம் சீடருக்கு அறிவிக்கும் உறவுமுறையில் என்பதல்லாமல் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் ஸ்ரீ காசியில் எழுந்தருளி இருக்கும் காலங்களில் ஸ்ரீ காசி குமார சுவாமி மடத்தில் தங்கி ஸ்ரீ காசி மடத்தின் உபசரிப்புக்களை ஏற்றுக்கோள்வது வழக்கம் ; அவ்விதம் தம் குருநாதருக்குச் செய்துவைப்பதில் தனி ஆர்வம் மிக உடையவர்கள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமானவர்கள் என்பதும் உள்ளடங்கியது. அதுவும் செய்யப்பட்டது. மின்வேகத்தில் அங்கிருந்து உத்தரவுகள் ஸ்ரீ காசியில் உள்ள அந்த மடத்து நிர்வாகிகளுக்குச் சென்றன. அங்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை வரவேற்கச் சிறப்பு ஏற்பாடுகள் செய்ய முற்பட்டுவிட்டார்கள்.

## சென்னையில் :

தென்னுட்டில் பல பெருந்தலங்களிலும் திருமேனி தீண்டுவோராக உள்ள ஆதி சைவப்பெரியார் பலருக்கு ஸ்ரீ காசி யாத்திரைக்கு அழைப்புக்கள் விடுக்கப்பட்டன. அவர்களும் சென்னையில் ஆதீனப் பிரசார நிலையத்தில் சென்றுகூடி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் வரவை எதிர்நோக்கி இருந்தார்கள். இவ்வளவும் ஆனபிறகு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் 19—6—1959 சுக்கிரவாரத்தன்று விடியலில் பூஜை முடித்து ஸ்ரீ சோக்கலிங்கப் பெருமான்,

ஸ்ரீ குருஞானசம்பந்தர், ஸ்ரீ மகாலட்சுமிதுர்க்காதேவி இவர்களிடம் பிரியா விடைபெற்று யாத்திரையை மேற்கொண்டு சென்னைக்கு எழுந்தருளினார்கள். வழியிலே புள்ளிருக்குவேளூர், சிதம்பரம் முதலிய பெருந்தலங்களில் வழிபட்டு பகல் 12 மணிக்குச் சென்னை சென்று சேர்ந்தார்கள். சென்னை மடத்திற்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் வந்து எழுந்தருளியானவுடன் அங்குள்ள ஆதீன முனிவர் வித்துவான், ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் தம் குருநாதரைக் கொலுவிருத்தி வழிபட்டுத் திருநீறு பெற்றுக்கொண்டார்கள். ஸ்ரீலஸ்ரீகுருமகாசந்நிதானத்தோடு மாயூரம் நகர சிவநேயச் செல்வர், திரு. V. இராமநாதய்யர் அவர்களும் உடன் வந்திருந்தார்கள். அன்று மாலையில் திருவொற்றியூர், மயிலைத் தலத் தரிசனங்கள் நிகழ்த்தப் பெற்றன.

## அதில் இருவர் :

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் கயிலை யாத்திரையை மேற்கொண்டு புறப்பட்டிருக்கிறார்கள் என்ற செய்தி எப்படியோ மாயூரம் பெருமக்களுக்கு எட்டிவிட்டது. பலருக்கும் உடன்வர விருப்பம்தான். இருந்தாலும் குருவாணை இல்லையே என்று மயங்கினர். அதில் இருவர் S. V. S. கந்தசாமிச் செட்டியார், டாக்டர், S. N. ஸ்ரீநிவாசய்யர் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் கயிலை செல்வதாக இருந்தாலும் அல்லாது வேறெங்கு செல்வதாக இருந்தாலும் தாங்களும் உடன் செல்வதென்ற உறுதியோடு புறப்பட்டுச் சென்னைக்கே வந்துவிட்டார்கள். அவ்விருவரும் இந்த யாத்திரை முழுவதிலும் பங்குகொண்டு அருள் நலம் பெருக்கிக்கொண்டார்கள். மற்றும் பெருமக்கள் பலர் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை வழி அனுப்புவதிலாவது

பங்குபற்ற வேண்டும் என்ற எண்ணத்தோடு சென்னைக்கு வந்திருந்தார்கள். மறுநாள் இரயில் மூலம் யாத்திரை தொடங்குவதாகத் திட்டம்.

## வழியில் ஒரு காட்சி - எதனால் வந்தது ?

சென்னை வழியில் பாண்டிச்சேரியிலிருந்து திண்டிவனம் செல்லும் சாலை நடுவில் ஒரு கார் பெரிய மரத்தில் மோதிக் கவிழ்ந்து தலைகீழாய் நொறுங்கிக் கிடந்த காட்சியைக் கண்டோம். அது எப்படி நிகழ்ந்தது ? அதற்குள் இருந்தவர்கள் என்னவானார்கள் ? என்றைக்கு நிகழ்ந்தது ? என்பன எதுவும் தெரியவில்லை. ஆனாலும் விபத்து மிகப் பெரியது ; அதனால் ஏற்பட்டிருக்கும் துன்பமும் மிகப் பெரியதாகத்தான் இருந்திருக்கவேண்டும். வழியில் அது பற்றியே பேச்சு வந்தது.

## கருவி கரணம் :

கருவி கரணங்களை அடக்கி ஆள இயலாதவர்கள் நிலையும் இது போன்றதே. தம்மையே அழித்துக்கொள்வதாக முடியும். இங்கே காரோட்டி யாராக இருந்தாலும் இதுபோன்ற நிலைகளில் கையாளும் அனுபவம் இன்மையாலோ, திறமையின்மையாலோ, அல்லது ஆபத்துக் காலத்தில் இயற்கையாக இருக்கவேண்டிய தற்காப்பறிவு உடனடியாக வேலை செய்யாததாலோ, கவனக்குறைவாலோ தானும் அழிந்து, தன்னை நம்பி அதில் வந்தவர்களுக்கும் தீராத் துன்பத்தைக் கொடுத்துவிட்டார். ஒரு பொறியை நம்பி விரைவில் எளிதாகச் செயல்களைச் செய்து முடிக்க உலகம் முற்பட்டுவிட்டது. அந்தப் பொறியை இயக்கும் அறிவையும் அது பெருக்கிக்கொண்டே வருகிறது. வேகத்தில் அது இயங்கும்போழுது ஏதேனும்

இது போன்ற இடர்ப்பாடுகள் நிகழுமானுல் அதன் வேகத்தைத் தடுத்தோ அல்லது குறைத்தோ அதிலிருந்து காத்துக்கொள்ளக்கூடியதாக கருவி அமைப்புக்கள் எல்லா இயந்திரங்களிலும் பொருத்தப்பட்டிருக்கின்றன. இயக்கு வோன் ஆபத்துக் காலங்களில் செய்யவேண்டியதெல்லாம் இன்ன கருவியை இவ்விதம் கையாண்டால் அதைத்தடுத்து நிறுத்திக் காத்துக்கொள்ளலாம் என்ற உடனடித் தற்காப் பறிவைப் பயன்படுத்திக்கொள்ளவேண்டியதுதான். இல் லாதுபோனுல் அதனுல் வரும் விளைவு இதுவே. ஆனுல் அப்பொழுது அவனுக்கு ஒரு செயல் மறக்கும் பரபரப்பு ஏற்படத்தான் செய்யும். இருந்தாலும் தெளிந்த அறிவுடை யவனுக்கு அந்தப் பரபரப்பை அடக்கி அப்பொழுது செய்ய வேண்டிய செயல் நினைவுக்குவந்து முந்துறும்.

## சமய நிலையில் :

இது சமய நிலையிலும் நிகழக்கூடியதுதான். சித்திகள் ஏற்படும் காலங்களில் பயிற்சியாளன் அந்தச் சித்திகளில் மனமழிந்து உண்டாகும் சாதனையில் பரபரப்பு அடைந்து தவமிழந்து குறிக்கோள்கெட்டுத் தன்னைக் கெடுத்துக் கோள்வதியல்பு. அதே நிலையில், தான் பெருவெற்றி கண்டதாக வெளியாருக்குக் காட்டி அதனுல் மற்றவர் களையும் கெடுத்துவிடுவதுமுண்டு. அவன் குறிக்கோள் சித்தியாது ; அருள் நிலையை அவன் எட்டமாட்டான்.

## பலகாலும் சொன்னேன் :

இதற்காகத்தான் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த பரமா சாரிய சுவாமிகள் ‘‘ பரபரக்க வேண்டாம் பலகாலும் சொன்னேன் ’’ என்றருளிச் செய்திருக்கிஞர்கள். அது

ஒரு முறை சொன்ன உடனே மாணவன் மனத்தில் பதியக் கூடியதல்ல என்பதை அவர்களே ''பலகாலும் சொன் னேன்'' என்ற சொல்லால் வலியுறுத்தி இருக்கிறார்கள். இவ்வுபதேசத்தை அனுபவத்தில் கொண்டு செலுத்த வல்லவர்களே அருள்நிலை அடைந்தவர்களாக சித்திபெற்ற ஞானக் கருவூலங்களாக ஞான குருமூர்த்திகளாக இருந்து உபதேசம் வழங்கி நம்மை ஆட்கொண்டு இறையின்பம் சேர்க்கும் பெரியார்கள் ஆவார்கள். எதைச் செய்தாலும் இறையருள் கூட்டுவிக்க நாம் அடைகிறோம் என்றே நம் பெரியவர்கள் கொள்வார்கள். எல்லாம் தம்மால் ஆனது என்று கருதுவதில்லை. அது பெரும்பிழை என்றே அஞ்சு வார்கள். அதனை மணிவாசகர் ''வேகம் கெடுத்தாண்ட வேந்தன்அடி வெல்க'' என்ற திருவாசக அடியால் நமக்கு அறிவுரை வழங்குகிறார்கள். இந்த நினைவுக்கு இன்று வித்திட்டது கார் கவிழ்ந்துநின்ற நிலையே. அது ஒரு துன்பக் காட்சியாக இருந்தாலும் அதைப் பார்த்துச் செல் வோருள்ளத்து அவரவர் பக்குவநிலைக்கேற்ப எண்ணங் களை வளர்த்துவிடக்கூடிய அனுபவப் பொருளாகக் காட்சி அளித்தது.

## இரயில் அதிகாரிகளின் ஒத்துழைப்பு :

யாத்திரை தொடங்கிய காலம் கடுங்கோடை. பகற் பொழுதெல்லாம் கடும் வெய்யிலும் இரவெல்லாம் புழுக்க முமாக உள்ள காலம். அதிலும் வட நாட்டில் அதன் கடுமை மிக அதிகமாக இருக்கும். நாம் வாழும் பகுதி கடற்கரையை அடுத்திருப்பதால் அந்தக்கடுமை அவ்வளவு அதிகமிராது. மேலே போகப் போக வெப்பநிலை அதிக மாகத் தாக்கும். ஆகவே ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத் திற்கு இரயிலில் குளிர்பதனப் பெட்டியும் மற்றவர்களுக்கு

அவரவர் தகுதிக்கேற்ற நிலையிலும் பெட்டி வசதிகள் செய்யப்பட்டிருந்தன. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் யாத்திரை வெற்றிபெறுவதில் தங்கள் ஒத்துழைப்பையும் அளித்ததாக இருக்கவேண்டுமென்று சென்னை மத்திய இரயில் நிலைய அதிகாரிகள் அவர்களால் இயன்ற உதவி களைச் செய்து வைத்தார்கள். அதில் சுப்பிரமணியம் என்ற இளைஞரின் ஒத்துழைப்புக் குறிப்பிட்டுச் சொல்லத் தகுவதாகும்.

## அணி வகுப்பு :

அன்று சனிக்கிழமை. அதிகாலையிலேயே வழிபாடுகள் எல்லாம் நிறைவுற்றன. எல்லோரும் உரிய காலத்தில் இரயிலில் அவரவர்க்கும் குறித்த இடங்களிலமர்ந்தார்கள். அவர்களைக் கண்டவுடனே இந்தக் கூட்டம் ஸ்ரீ காசி செல்லும் நோக்கத்தோடு இரயிலுக்கு வருகிறது என்று கண்டுகொள்ளக்கூடியதாக ஒவ்வொருவரும் இரண்டு இரண்டு கங்கை எடுக்கும் குடங்களைச்சுமந்து சென்றூர்கள்.

அந்த நவநாகரிக நகரத்தில் இது ஒரு பெரிய சமயப் படையெடுப்பாகத் தோன்றியதுபோலும். அதிலும் யாத் திரைக்கு உடன் வந்தவர்கள் எல்லோரும் பெரும்பாலும் வைதிக நிலையிலேயே உள்ளவர்கள். ஆகையால் சிவச் சின்னங்களோடு வைதிக உடையும் நடையும் உடையவர் களாக நகரிலும் இரயிலடியிலும் வரிசை வரிசையாகச் சென்ற காட்சி ஒரு சைவ அணிவகுப்புப்போலத் தோன்றி யிருக்கிறது. உடையால் வெளித் தோற்றத்தால் உல கியலே பெரிதாக மதிக்கும் நாகரிக நகர மக்களாகத் தோற்றமளித்த பலரும் இந்தப் பெரும் படையைக் கண்டு வணக்கமும் பரிவும் காட்டினூர்கள்.



நாங்கள் சென்ற இரயில் தொடர் சென்னை இராஜ்யத் தலைநகரிலிருந்து பாரத நாட்டுத் தலைநகரான டில்லிக்குச் செல்லும் 'க்ராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ்' பெருந்தொடர் விரைவு வண்டி. அதிலே நம் நாட்டின் பல்வேறு வகைப் பட்ட மக்களில் பலரும் ஏறியிருந்தார்கள்; செல்வதாக இருந்தார்கள். அவர்களும் இந்த வைதிகத் திருக் கூட்டத்தைக் கண்டதும் இரயிலில் இவர்களுக்கு இடந் தந்து தங்கள் வசதிகளைக்கூடச் சிறிது குறைத்துக் கொண்டார்கள். அதிலும் தென்னுட்டுப் பெரிய குருமூர்த்தி அவர்கள் அந்த இரயிலிலே வருகிருர்கள் என்றதும் பலர் அதை ஒரு நல்ல அநுபவமாகக்கூடக் கொண்டனர்.

இரயில் புறப்பட ஒரு சிறிது நேரமே இருக்கும்பொழுது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் அங்கே எழுந்தருளி வந்து தங்களுக்கு உரிய இடத்தில் அமர்ந்தார்கள். அன்பர்கள் சிவமுழக்கம் செய்தார்கள். அவரவரும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திற்கு மலர் மாலைகள் அணிவித்து வணங்கிப் பூதியும் அருளாசியும் பெற்று மகிழ்ந்தனர்.

பிரிவுணர்ச்சி :

வெளியில் மகிழ்ச்சி தோன்ற அவர்கள் பேசினுலும் மனத்திற்குள்ளே பிரிவுணர்ச்சியால் ஏற்படும் துன்பம் தெரியத்தான் செய்தது. ஓரிடத்தில் கூடிவாழும்பொழுது நாம் காணும் அன்பின் அடையாளங்களைவிட அவர்களைப் பிரிவதில் - அது ஒரு சிறிது காலமாக இருந்தாலும் - காணும் அறிகுறிகள் பெரியவை. இது ஒரு அனுபவம்.

அன்பர்கள் பலர் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திற்குக் கையுறையாகப் பழங்கள், பிஸ்கோத்துகள் முதலியன அளித்து ஆசி பெறவேண்டுமென்று கொண்டு வந்திருந் தார்கள். ஆனுல் நேரில் தரிசித்த பிறகு அவர்களின்

பிரிவுத்துன்பம் மனத்தில் நிறைந்ததுபோலும். வந்துவந்து கண்டு கண்டு பேசி நின்றூர்கள். மணி அடித்து இரயில் நகரத் தோடங்கிற்று. அப்போழுதுதான் தாங்கள் நினைத் ததைச் செய்யத் தவறியது அவர்களுக்கு உணர்வில் வந்ததுபோலும். அவரவரும் கையுறைகளை இரயிலில் கோண்டு செலுத்திக் கோண்டார்கள். சிவமுழக்கமும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திற்கு வாழ்த்துகளும் அந்த இரயில் மேடையில் இரயில் கண்ணுக்கு மறையும் வரை ஒலித்துக்கோண்டே இருந்தன. அன்புணர்ச்சி செய்ய வேண்டிய, செய்ய நினைத்த செயலையும் மறைத்துத் தன்னையும் மறக்கச்செய்யும் ஆற்றலுடையது என்பதைக் கண்டோம். இது ஒரு அனுபவம்.

## வழியனுப்பு :

வழியனுப்பச் சென்னைக்கு வந்து கலந்துகோண்டவர் களில் காட்டுமன்னூர்குடி நாட்டுச் சின்னப்பண்ணை எம். இராமலிங்கம் பிள்ளை சிதம்பரம் திரு ஜி. சபாபதிப் பிள்ளை, மாயூரம் கே. கிருஷ்ணமூர்த்திப் பிள்ளை, டாக்டர் என் வி. இரத்தினசபாபதிப் பிள்ளை, என். சுப்பிரமணியப் பிள்ளை, எம். ஏ. ஜகந்நாத பிள்ளை சென்னை வக்கீல் நாகராஜ அய்யர், ச. சிவகுமாரன், ச சச்சிதானந்தம் பிள்ளை, இரத்தின முதலியார், சென்னை நிலைய சுவாமிகள் முதலிய பலர். வண்டிபுறப்பட்டதும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத் தில் வழக்கம்போல் ஜபமும் பாராயணமும் தோடங்கிச் செய்யலானூர்கள்.

## தஞ்சம் நீயே:

"சேம்மனச் செல்வர் சிந்தையுள் இருப்பவனே! தேவர் குலக்கோழுந்தே! அடியேன் அவலத்தால் நைகின்

றேன். உன்புகழ் நாமத்தை நாள்தோறும் இடைவிடாது நவில்கின்றேன். இவ்வுலகிலுள்ளோரும் அறிந்து உய்யும் படியாக உலகவர்முன்னே எனக்கு அருள்செய்வாயா? நான் உண்ணும்போதும் உறங்கும்போதும் உன்நாமத் திறனே சொல்லி நிற்கிறேன். அக்காலத்தில் தஞ்சம் என்று தேவர்கள் உன்னைவந்து அடைந்தபோது நீ நஞ்சையும் அவர்களுக்காக உண்டருளினாய். நான் என்னசெய்வேன்? உன்நாமத்தை இடையறாது நினைந்திருப்பினும் என்னுள் வஞ்சம் உண்டு. மேலும் பெருமைமிக்க தேவரெல்லாம் உன்னருளைப்பெற, உன்பெருமை உணர்ந்து, அச்சத்தால் சித்தத்தெளிவில்லாதிருக்கிறார்கள். அவர்கள் நிலையே இப்படி இருக்குமானால் அடியேன் எம்மாத்திரம்? அதனைக் கண்டு நானும் மயங்குகின்றேன். நானோ பெண்டிர் சுற்றம் ஆகிய இப்பெருங்கடலைப்பற்றி நிற்கிறேன். விட்டுப்பிரிய இயலாது வருந்துகிறது என்னுள்ளம். உன் நாமத்தைச் சொல்வது இத்துன்பத்தைப் போக்கி இன்பமளிக்கும் என்பதைக் கண்டும் கண்டும் அதையே (நாமத்தையே) சொல்ல ஆசைப்படுகிறேன்.

### பத்தர் சித்தம் பற்று விடாதவன் :

எனக்கு உற்ற தாயும் நீயே, தந்தையும் நீயே, துன்பத்தைப் போக்கி இன்பமளிக்கும் இறைவனாகிய சங்கரனும் நீயே. ஞானிகளும் உன்னைக்காணத் துடிக்கின்றனர். அடியேன் உம்மீது அன்புகொண்டு அவ்வழிநிற்க எனதுள்ளமும் ஆசைப்படுகின்றது. ஆனால் என்னுள் படைக்கப்பட்டு நிற்கும் இந்திரியங்களாகிய கள்வர் ஐவரோ உள்நின்று உம்மை அணுகவோட்டாமல் தடுத்து நிற்கிறார்கள், நீரோ பிரமவிஷ்ணுக்களாலும் அறியமுடியாத பெருஞ்சோதியாய் உள்ளவர். அடியேன் தூய்மை இல்லாதவன். ஆனாலும் உம்திறமே நினைக்கின்றேன். ஆகையால்

மனம் ஒன்றி வஞ்சம் நீங்கி இனியகூறி காமமாதி கடிந்து உமது நாமத்தைச் சொல்லும்படியாகத் தேவரீர்வந்து அடியேனுக்கு அருள்புரிதல் வேண்டும். இடைவிடாது சொல்லித் தோத்திரித்து இருக்கும் என் வினை கெடுத்து அதனுல் வரும்துன்பம் துடைத்துப் பத்தர்சித்தம் பற்றுவிடாத வராகியநீர் அருள்பாலித்தல் வேண்டும்' என்று திருஞானசம்பந்தர் வேண்டுகின்ருர் இறைவனை. அவ்விறைவன் வலிவலத்துள்ளவன். அவனே பொதியலிலும் பூவணத்திலும் உறைபவன். அவனே பொன் தயங்கும் கயிலைப்பதியிலும் உள்ளவன். என்று பதிகம் அருளிச் செய்திருக்கின்ருர். இப்பதிகத்தை ஓதுவதன் பயன் 'மெய்த்தவத்தோர் விரும்பும் மன்னு சோதி யீசனேடே மன்னியிருப்பர்' என்பதாகும்,

வழித்துணை :

ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் இரயிலில் செல்லும் பொழுது வந்த பதிகப் பாராயணம் இது. அதில் சிறப்பாக நினைக்க வேண்டியது 'கயிலைசெல்லும் நம்மை இட்டுச் செல்ல அக்கயிலைப்பதியான் தொடக்கத்திலேயே வந்திருக்கிருன். அதனை நமக்கு உணர்த்தியதும் சமயகுரவராகிய திருஞானசம்பந்தப் பெருமான். ஆகையால் குருமுதல்வர்கள் காட்ட அருள்வழங்க வந்திருக்கிருன் நம் இறைவன். வந்த பதிகத்திலும் நம் அவலம் நீக்கித் துன்பந் துடைத்து மார்க்கமும் (வழியும்) காட்டி இன்பம் அருளிச் செய்யவேண்டும் என்று நைந்துகேட்கும் முறையில் அமைந்திருக்கிறது. இந்தயாத்திரையில் நமக்கு வெற்றியே. நமக்குள்ளும் வெளியிலும் வழிகாட்டி இட்டுச் செல்ல நமது குருமுதல்வர்களும் அவர்கள் வழியே ஆண்டவனும் வந்துவிட்டார்கள்' என்று திருவுள்ளத்தெழுந்த உவகையோடு வெளிவந்தது இந்த உபதேசம்.

## இட்டார்சியில் :

இந்த நிலையில் மாலை 5-45 மணிக்கு இட்டார்சி வந்து சேர்ந்தது இரயில். அங்கு இறங்கி பம்பாய் - காசி துரித வண்டியில் (Bombay-Kashi Express) அன்று முன்னிரவில் ஏறவேண்டும். அவ்விதம் செய்தால் மறுநாள் உச்சிப் போதில் ஸ்ரீ காசி சென்றடையலாம். அந்தத் திட்டத்தோடு நாங்கள் இரயில் டிக்கட் வாங்கி இருந்தோம். ஆகையால் எல்லோரும் அங்கே இறங்கி இரயிலடியிலேயே மேல் வகுப்புப் பிரயாணிகள் தங்குமிடத்தில் சென்று தங்கினேம். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் மாலைத் திருமஞ்சனம் செய்து ஜபம் செய்யலானுர்கள். எங்களில் பலரும் அங்குக் குளித்து உடல் தூய்மை செய்துகொண்டோம்.

## மேல் வகுப்புப் பிரயாணிகள் :

இரயில் அதிகாரிகளை அணுகி " எங்களுக்கு நாங்கள் கேட்டபடியே இடம் ஒதுக்கப்பட்டிருக்கிறதா நாங்கள் செல்ல இருக்கும் வண்டியில் ? " என்று கேட்டேன். அதுபற்றித் தனக்குச் செய்தி ஒன்றுமில்லை என்றுர் அவர். வண்டி வந்த பிறகு அதில் இடம் இருந்தால் ஏற்றிவிடுவதாகவும் சொன்னுர். " அப்படியும் எல்லோருக்கும் மேல் வகுப்பில் இடங்கிடைக்காது. மகந்துவுக்கும் ஒரு சிலருக்கும் வசதி செய்து கொடுக்கிறேன். மற்றவர்கள் இடம் கண்ட இடத்தில் ஏறிக்கொள்வதுதான் இங்கு இந்நிலையில் செய்யக்கூடியது " என்றும் சொன்னுர்.

இரவு உணவை முடித்துக்கொண்டு எங்கள் இரயிலை எதிர்நோக்கினேம். அதுவும் காலத்தில் வந்துசேர்ந்தது. அதில் " நான்கைந்து பேருக்கு மேல்வகுப்பு இடம் கிடைக்கும் " என்றுர் அதிகாரி. சென்றுபார்த்தால் எல்லாம்

மேலிடம்தான் (Upper Berth). அதையும் எங்களைப் போல் வந்த சிலர், இரயில் வேகங்குறைந்து நிற்குமுன்னே, ஓடித் தொத்தி ஏறிப்பிடித்துக்கொண்டார்கள். மேல் வகுப்புப் பிரயாணிகள் இவ்விதம் அவசரமாக ஏறுவதை அங்குத்தான் கண்டோம். நிலையப்பொறுப்பாளர் எவ்வளவு முயன்றும் யாரும் இடங்கொடுப்பதாக இல்லை.

## எங்கு ஏற்றுவது ?

ஒரு பெட்டியில் மேலிடம் ஒன்றும் கீழிடம் ஒன்றும் இருந்தன. அவற்றில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை ஏற்றிவிட்டு நாங்கள் மற்ற இடங்களில் எங்காவது ஏறலாம் என்று முயன்றோம். ஆனால் நாங்கள் கொண்டுவந்த பொருள்களை எங்கு ஏற்றுவது என்று புரியாது இங்கும் அங்கும் எடுத்துச்சென்று ஏற்றியும் காலத்தில் ஏற்ற முடிய வில்லை. திண்டாட்டமாக இருந்தது. அப்படியும் ஒரு சில பொருள்கள் கீழே இருந்தன. இரயில் புறப்பட வேண்டிய நேரமும் கடந்துவிட்டது. அதிகாரிகள் அவசரப் பட்டார்கள். ஒன்றும் செய்ய முடியவில்லை. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமும் இடம் கிடைத்து ஏறியவர்களும் அப்படியே அந்த இரயிலில் சென்றுவிட்டால், என்னைப் போன்றவர்களில் ஒரு சிலர் தங்கி, அன்று நள்ளிரவுக்குப் பின் அங்கிருந்து புறப்படும் வண்டியில்புறப்பட்டு, எஞ்சிய பொருள்களையும் எடுத்துக்கொண்டு ஸ்ரீ காசிக்குச் செல்ல லாம் என்று முடிவுசெய்து, அதை ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தினிடம் தெரிவித்துக்கொண்டோம். "அவ் விதம் செய்தல் கூடாது; எல்லோரும் ஒன்றாகப் போக முடியாவிட்டால் நாமும் இறங்கிவிடுவோம்; வண்டியில் வைத்த பண்டங்களை இறக்குங்கள். எல்லோரும் ஒரே வண்டியில்தான் போதல்வேண்டும்" என்று உத்தரவிட்டு

அவர்களும் இறங்கிவிட்டார்கள். பொருள்களும் கீழே இறக்கப்பட்டன. இரயில் எங்களை ஏற்றிக்கொள்ளாமல் சென்றுவிட்டது. ஸ்ரீ காசியில் மறுநாள் எங்களை எதிர் பார்ப்பார்கள். அதற்கு அப்பொழுதே கம்பிமூலம் செய்தி சொல்லப்பட்டது. இது ஒரு அனுபவம்.

ஈ மயம் :

இரயில் நிலையத்தில் மேல் வகுப்புப் பிரயாணிகள் தங்குமிடத்தில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் தங்கினார்கள். பகலில் அனல்வீசி உடம்பில் எரிச்சல் எடுத்தது. அதேவெம்மை இரவிலும் இருந்தது. விசிறிகொண்டு விசிறினால் அதுவே அனற்காற்றாக வந்தது. படுக்கவும் முடியவில்லை. பொழுது போகவுமில்லை. ஏமாற்றம் ஒரு புறம். இதற்குமாற்றாக இருக்கலாம் என்று எண்ணி ஊருக்குள் சென்று பார்த்துவர ஒரு சிலர் புறப்பட்டோம். சென்றோம். இரவு முழுவதும் அவ்வூரில் தேனீர்க்கடைகள் திறந்திருக்கும்போலும். எங்கும் ஒரே ஈ மயம். இரவில் கூட அவ்வளவு ஈ. இதுபோன்று வேறு எந்த ஊரிலும் பார்க்கமுடியாது. இரவிலேயே அவ்விதம் இருந்தால் பகலில் எப்படி இருக்குமோ. நகரச் சுகாதாரம் அவ்வளவு நல்ல நிலையில் வைக்கப்பட்டிருக்கிறது. தெருவெல்லாம் தூய்மையாக இல்லை. தெருக்களில் பல சிறு சிறு ஆலயங்கள் இருந்தன. இரவிலும் மூர்த்திகளைப் பார்க்கக் கூடியதாக கம்பிக் கதவுகள் போடப்பட்டு மின் வெளிச்சமும் எரிந்துகொண்டிருந்தது. அங்கு அந்நேரத்திலும் சிலர் வந்து வழிபட்டுப்போனார்கள்.

ஏமாற்றத்தால் இன்பம் :

அங்கிருந்து நர்மதையாறு அண்மையில் இருப்பதாகவும் பெருந்துகள் அதிகாலையிலேயே செல்லும் என்றும்

சொன்ஞர்கள். கட்டணமும் மிகக் குறைவு. 25 சதம் என்று நினைவு. எங்களுக்கும் சென்றுவர ஆசைதான். ஆனல் ஸ்ரீ காசியில் செய்துவைத்திருக்கும் ஏற்பாடுகள் எல்லாம் என்ன ஆவது? இவ்விதமாகப் போழுதைப்போக்கி இரயிலடிக்கு நாங்கள் திரும்பவந்ததும் அங்கிருந்து புறப்படவேண்டிய வண்டிக்குள்ள பெட்டிகள் உரிய இடத்தில் நிறுத்தப்பட்டிருந்தன. அது இட்டார்சியிலிருந்து அலகாபாத்துக்கு மேதுவாகச்செல்லும் சாதாரண வண்டி. விடியற்காலே 3 மணிக்குப் புறப்பட இருந்தது. எல்லா ஊர்களிலும் நின்று நின்று போகக்கூடியது. அதில் ஏறிப் படுத்தோம். ஒரு ஏமாற்றத்தால் மத்திய இந்தியாவை இந்த வழியே பகலில் பார்த்துக்கோண்டேபோகும் வாய்ப்பு எங்களுக்கு எதிர்பாராது கிடைத்தது. குறித்தபடி இரவு விரைவு வண்டியில் சென்றிருந்தால் அந்த வாய்ப்புக் கிடைத்திருக்குமா ? இவ்விதம் ஏமாற்றத்தால் வந்த துன்பத்தில் ஒரு இன்ப விளேவு - ஒரு நாட்டு அனுபவமும் கிடைப்பதாயிற்று.

## ஜபல்பூர் :

இட்டார்சியிலிருந்து அலகாபாத் செல்லும் வழியில் குறிப்பிடத்தக்க நகரங்கள் பல இருக்கின்றன. தொழில் வளத்தாலும் மற்ற வளங்களாலும் சிறந்தவை அவை. அவற்றில் குறிப்பாகச் சொல்லத்தக்கது ஜபல்பூர். இது மிகப் பழைய நகரங்களுள் ஒன்று. கோண்ட் அரசர்களின் ஆட்சிப் பீடமாக இருந்திருக்கிறது. அவர்களின் பழங்காலக் கோட்டை அவ்வூரின் அருகில் ஒரு சிறு குன்றின்மீது கட்டப்பட்டிருக்கிறது. இவ்வூர் இராணுவப் படைத் தளங்களில் ஒன்று. பீரங்கி வண்டிகள் இங்குச் செய்யப்படுகின்றன. இதனருகே ஓடும் நர்மதையாற்

றின் கரையில் பல நிறச் சலவைக்கல் பாறைகள் இருக்கின்றன. மாண்டலா சாலையில் வெந்நீர் ஊற்று ஒன்று இருப்பதாகவும் சொல்லப்படுகிறது. மண்பாண்டங்கள் ஓடுகள் முதலியன இங்கு ஏராளமாகச் செய்கிறார்கள். இந்த வழியில் பல இடங்களில் செங்காவி, மஞ்சள்காவி முதலியவை மிகுதியாகக் குவிக்கப்பட்டு இந்த நாட்டிலும் வெளிநாடுகளிலும் பல இடங்களுக்கு அனுப்பப்படுகின்றன. வழியில் சிர்ப்பூரில் காகிதத் தொழிற்சாலை ஒன்றும் இருக்கிறது.

## கண்ணாடி விழுந்துவிட்டது :

எங்களுடன் வந்த நண்பர் ஒருவர் எப்பொழுதும் மூக்குக்கண்ணாடி அணிந்து கொண்டிருப்பார். அது இல்லாது அவரால் எதுவும் செய்யமுடியாது. வண்டி ஓடிக்கொண்டிருக்கும் பொழுது அதைக் கழட்டி அவர் அமர்ந்திருந்த முதல் வகுப்புப் பெட்டியின் சன்னல் விளிம்பில் வைத்துக்கொண்டு வெளியே ஓடும் காட்சிகளைக் கண்டு களித்துவந்தார். அக்கண்ணாடி அவர் கையினின்றும் நழுவி சன்னல் கதவுகள் உள்ள இடுக்குவழியே விழுந்துவிட்டது. துணுக்குற்றார்; வருந்தினார். தம்மாலானதைச் செய்து எடுக்கமுயன்றார். முடியவில்லை. நல்லவேளையாக அவ்விடுக்குவழியாக வெளியே தண்டவாளத்தில் விழவில்லை. நடுவில் ஓரிடத்தில் மாட்டிக்கொண்டு நின்றிருந்தது. நாங்களும் முயன்றோம். ஓரளவு மேலே எடுப்போம். ஆனால் விளிம்பினிடத்துக்கு அருகில் வந்ததும், அதன் இரண்டு காம்புகளும் விரிந்து மாட்டிக்கொள்ளும். மேலே இழுக்கவும் முடியாது; வலிந்து இழுத்தால் கண்ணாடி உடைந்து சிதறும். எல்லோரும் முயன்றுபார்த்து அதைக் கைவிட்டோம். இந்த நிலையில்

ஒரு சந்திப்பு வந்தது. இரயிலில் (Fitter) பழுது பார்ப்பவர் ஒருவர் வந்தார். அவரை வேண்டிக்கொண்டோம். வண்டியில் பொருத்தப்பட்டிருந்த பல மரச்சட்டங்களை அகற்றி அதனை மீண்டும் எடுத்துக்கொடுத்தார். அவருக்கு நன்றி செலுத்தி கண்ணாடியைப் பெற்று மகிழ்ந்தார் எங்கள் நண்பர். இதுபோன்ற சிறு கவனப் பிசகுகள் மனத்துன்பத்தை வழியிலே உண்டுபண்ணிவிடுகின்றன.

இவ்வழியே இரவு 11 மணிக்கு அலகாபாத் வந்து சேர்ந்தோம். ஸ்நானக்கட்டத்திற்கு அருகில் உள்ள தரியாகஞ்சில் இருக்கும் நாட்டுக்கோட்டைச் சத்திரத்தில் சென்று இரவு அங்குத் தங்கி ஓய்வு எடுத்துக்கொண்டோம்.

## நாட்டங்கி :

நாட்டுக்கோட்டை சத்திரத்துக்குப் போகும் வழியில் ஒரு தெருநிகழ்ச்சி நடைபெற்றது. நாடகத்திற்கு வேண்டிய மேடை அலங்காரங்கள் அங்கு அதிகமாக இல்லை. மேடை உண்டாக்க உட்காரும் சில விசுப்பலகைகளைப் பரப்பி மேலே துணியால் ஒரு பந்தலிட்டு மூன்று புறமும் துணி கட்டி மறைத்திருந்தார்கள். வாத்தியக்காரர்கள் தனியிடத்தில் இல்லை. அவர்களும் மேடைமீதிருந்தே ஒலி எழுப்பிக்கொண்டிருந்தனர். நடிகர்களும் அங்கே மேடை மீதே அமர்ந்திருந்தார்கள். முழவும் ஹார்மோனியமும் தாளமும் சலங்கையும் தான் வாத்தியங்கள். ஒரு பெண் வேடக்காரர். அவர் அதற்காக முகச்சவரம் செய்து கொள்ளக்கூட இல்லை. பெண்ணைப்போல் உடை உடுத்தி வடநாட்டு முறையில் முக்காடிட்டிருந்ததுதான். வேறு

எவ்வித நாடகஅலங்காரங்களும் கிடையாது. மாலை அணிந்திருந்தார். வாத்தியங்கள் முழங்கிக்கொண்டே இருக்கையில் நம்நாட்டில் வரும் தோம்பங்கூத்தாடிகளைப்போல அப்பெண்வேடதாரி உரத்தகுரலில் கூப்பிட்டார். அந்தந்த பாத்திரமும்எழுந்து நின்றார்கள். உடனேஹிந்தியில்உரக்கப் பேசினார்கள். நடு நடுவில் ஒரு கோமாளி; அவனும் வேடமேதுவுமில்லாமல் சாதாரண உடையிலேயே இருப்பவன் வந்தான். ஏதோ அப்பெண்ணிடம் பேசினான். உடனே கூட்டத்தில் பெருத்த சிரிப்பு. இப்படி மணிக்கணக்கில் நாடகம் நடைபெற்றது. திரைச்சீலைகள் எதுவும் கிடையாது. ஒரு பேபி பெட்ரோமாக்ஸ் மட்டும் எரிந்துகொண்டிருந்தது. பேச்சு கோச்சை மொழியில். ஒரு கிராமியக் காதல் நாடகம் அது. நடிப்பிலும் இழிந்த நிலையில்தான் உள்ளது. ஒரு பெண் பலரால் விரும்பப்பட்டு அனைவரையும் ஏமாற்றும் பகுதியே கதையம்சம்.

ஏராளமாகப் பாமரமக்கள் கூடி இதனை ரசிக்கிறார்கள். செலவு மிகக் குறைவு. ஏழைமக்களுக்குச் சிறந்த பொழுது போக்காக உள்ள இது நாட்டங்கி என வழங்கப்படுகிறது.

## பிரயாகை (அலகாபாத்) :

அலகாபாத் இந்தியாவுக்குப் பலவிதத்திலும் பெருமை தேடித்தரும் ஒரு பெருநகரம். அங்குத் தீர்த்தத்தால் திரிவேணி சங்கமம் நம்நாட்டில் மிகச் சிறப்புடையது. கங்கை, யமுனை, சரஸ்வதி என்னும் மூன்றுநதிகளும் இங்குக் கூடிக்கலக்கின்றன. அவற்றுள் சரஸ்வதி இப்பொழுது கண்ணுக்கு மறைவாக இருந்தாலும் பழங்காலத்தில்

இது நிகழ்ந்ததாகச் சொல்லப்படுகிறது.* ஸ்ரீ காசியில் நீராடி, இங்கு வந்து இத்திரிவேணியில் நீராடி சுத்தகங்கையில் புனிதநீர் எடுத்துச்செல்வர் அன்பர்கள். இது வேதகால முதற்கொண்டே பழம் பெருமை வாய்ந்தது. வேதத்தில்,

सिता सिते सरिते यत्र संगथे तत्रा प्लुतासोदिवमुत्पतन्ति ।

ये वै तन्वा विसृजन्ति धीरास्ते जनासोऽमृतत्वं भजन्ते ॥

— इति ऋग्वेदे

"கங்கை, யமுனை, சரஸ்வதி என்ற மூன்று நதிகளும் சேருகிற இடத்தில் ஸ்நானம் செய்கிறவர்களும், தேகத்தை விடுகிறவர்களும் அமிருதத்துவம் அடைகிறார்கள். கயிலாயத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமானாகிய சிவம் என்றும் பிரும்மம் என்றும் சொல்லக்கூடிய அரிய பொருளைப் பூசை செய்து அங்கேயே தங்கியிருக்கும் வாகீசாதிகளைப் போல நிலைத்துத் தங்கி இருப்பார்கள். ஸ்நானம் செய்பவனுக்கும் தேகத்தை விடுகிறவனுக்கும் அமிருதத்துவம் உண்டு" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

---

* Six centuries B. C. there was yet a seventh river of the Punjab the Saraswati, to the east of the Sutlej, of which tradition relates that, having ceased to join the Indus, it made for itself an under-ground connexion with the Ganges and Jumna near Allahabad. Over a vast space of the now desert country east of the Indus traces of ancient river beds testify to the gradual desiccation of a once fertile region; and throughout the deltaic flats of the Indus may still be seen old channels which once conducted its waters to the Rann of Cutch, giving life

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் விடியலில் எழுந்து சுத்த கங்கையில் திருமஞ்சனமாகி சுத்த கங்கையை விதிப்படி எடுத்துக்கொண்டு மற்றவர்களையும் எடுக்கச் செய்தார்கள். பிறகு திரிவேணிசங்கமத்திற்கு எழுந் தருளினார்கள். அங்குத் திருமஞ்சனமாகி அனுஷ்டானமும் ஆயிற்று.

ஆரூர்த் தியாகேசன் :

திரிவேணியைக் கண்டவுடனே ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தின் திருவுளத்தில் ஆரூர்த் தியாகேசன் நினைவு எழுந்தது. அது ஒரு நூல் நினைவையும் அதன் ஆசிரிய ரான ஒரு முனிபுங்கவரின் நினைவையும் உண்டுபண்ணிற்று. ஆரூர்த் தியாகேசன் சந்நிதியில் தரிசனம் செய்யும் பொழுது அந்த ஆசிரியர்க்கு ஒரு முக்கூடல் நினைவு

---

and prosperity to the past cities of the delta which have left no living records of the countless generations that once inhabited them. —T. A. Holdich.

ஏசுகிறிஸ்து பிறப்பதற்கு ஆறு நூற்றாண்டுகளுக்கு முன்னே பஞ்சாபில் மேலேகண்டதல்லாத ஏழாவது நதி ஒன்று இருந்திருக்கின்றது. அது சரஸ்வதி என்ற பெயர் பெற்றது. அது சிந்துநதியைச் சென்றடைவதை விட்டு, அலகாபாத்துக்கு அருகில் யமுனை கங்கை இவற்றோடு பூமிக்கு அடியில் பெருகி ஓடிக் கலப்பதாக சம்பிரதாயக்கூற்று ஒன் றிருக்கிறது. சிந்துவுக்குக் கிழக்கே உள்ள அகன்ற பாலையில் முன்பு பழங்காலத்தில் ஒரு நதி ஓடிய அடையாளங்களும், அந்தக்காலத்தில் அப்பகுதி செழித்து வளம்பெற்ற பகுதியாக இருந்ததென்பதற்கு உள்ள அடையாளங்களும், ஆற்றுப்படு கைகள் இருந்து காலப் பிற்பாட்டில் வளம் குன்றிவிட்டது

எழுந்தது. அந்த முக்கூடல் இதே திரிவேணிதான். அதில் திளைத்துக் குடைந்து அருள்வெள்ளத்தில் மூழ்கி நின்ருர். அப்படியே அந்த அனுபவத்தை நமக்கு வடித்துக் கொடுத்தும் இருக்கிருர். பெருமான் திருவோலக்கத்தில் இந்த மூன்று நதிகளின் சங்கமத்தைக் கண்டார் அவர். இங்கே கங்கை வெள்ளையாகவும் யமுனை கருநிறத்திலும் ஒடிக் கலக்கின்றன. அந்தர்வாகினியான சரஸ்வதிநதி செந்நிறத்தோடு வந்து கலப்பதாகச் சொல்லுகிருர்கள். இந்த மூன்று நதிகளின் சங்கமத்தைக் கண்டு மூழ்கினேர் சொல்லிவைத்தவண்ணம் இது. அதை நமது முனிபுங்கவர் தியாகராஜரின் திருவோலக்கத்தில் எவ்விதம் காண்கிருர். தலையில் தரித்த கங்கையின் வெண்மை பெருமான் திரு மேனித் திருநீற்றிலும், யமுனையின் கருமை பெருமாட்டி யின் திருமேனிவண்ணத்திலும், சரஸ்வதியின் செம்மை அவர்கள் நடுவில் நிற்கும் குமரனின் செம்மேனி நிறத்தினு லும் கண்டு, அந்த மூன்று அருளுருவின் கலப்பாக எழுந் தருளிக் காட்சி நல்கி அருள் வழங்கும் தியாகப்பெருமான் இதேபோல திரிவேணிசங்கமமாக அவருடைய நினைவில் பதிந்துநிற்கிருன். இந்தத் திரிவேணியில் மூழ்குவோர்

---

என்பதற்குள்ள அடையாளங்களும் இருக்கின்றன. சிந்து நதிப் படுகைகளில் இப்பொழுதும் பழய வாய்க்கால்கள் இருந் திருப்பதும் அது கட்ச் ராணுவரை சென்று வளப்படுத்தியது என்பதும் அக்காலத்தில் அங்கே நாகரிகம்சிறந்து மேலோங்கி இருந்ததென்பதும் தெரியக்கூடியதாகவும் இருக்கின்றன. அது அங்கு பரம்பரையாக எண்ணில்காலம் வாழ்ந்த மக்க ளின் வாழ்க்கையில் சிறந்த நாகரிகத்தையும் வளமையையும் தந்திருக்கிறது ; பல பெரிய நகரங்கள் செழித்தோங்கிநின் றிருந்தனஎன்பதைக் காட்டும் சான்றுகளும் உள்ளன - சிந்து சமவெளி நாகரிகம்.

பெருமான் அருள்பெற்றுப் பேரா இன்பப் பெருவாழ்வு பெறுவது திண்ணம். அதுபோலவே “ அந்தத் திருவோலக்கக் காட்சி கண்டவரும் வீடுபேறுற்று அயரா இன்பத்தில் திருவருள் வெள்ளத்தில் திளைத்துநிற்பர் கால எல்லையைக் கடந்து ” என்ற கருத்தும் அங்கே காணமுடியும்.

## ஆதீன அடியவர் :

இந்த நன்னினைவை ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருவுளத்தில் புகவிட்டவர் வேறு யாருமல்ல ; ஆதீன அடியவர் குமரகுருபர முனிவர்தான். குமரகுருபரர் நினைவு வந்ததும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் “ இன்று இந்த நேரம் ஸ்ரீ காசி குமாரசுவாமி மடத்தில் எழுந்தருளுவதாகச் செய்தி அனுப்பியிருந்தோமே ; அவர்கள் நம்மை எதிர் பார்த்துக் காத்திருப்பார்களே ; வழியில் ஏற்பட்ட பிரயாண மாற்றத்தால் அவர்களுக்கு ஏமாற்றம் ஏற்படலாயிற்றே. அவர்களுக்கு உடனே தந்தி சொல்லி இன்று இரவு முன்னேரத்தில் அங்கு வருவதாகச் செய்தி அனுப்பவும் ” என்று உத்தரவாயிற்று. அதனால் இரயிலில் செல்வதாக இருந்த பயணத்திட்டத்தை மாற்றி பெருந்துமூலம் செல்வதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

## மாலைத் திருமஞ்சனம் :

மாலை 5 மணிக்கு அவ்விடம் விட்டுப் புறப்பட்டோம் ஒரு தனி ஏற்பாட்டோடு. நகர எல்லை கடந்து கங்கையைத்தாண்டிச் செல்லவேண்டியதாக இருந்தது. அங்கே இரயில் செல்லவும் மற்ற வண்டிகள் செல்லவும் நல்லதோரு பாலம் அமைத்திருக்கிறார்கள். மிக அழகாகவும், மிக உறுதி வாய்ந்ததாகவும், கண்டோர் வியப்புறும்



அலகாபாத் - பிரயாகை சுத்தகங்கைக்கரையில்



நைனிடால் ஏரி - படகில் எழுந்தருளுதல்

வண்ணமும் அமைத்திருக்கிறார்கள் அப்பாலத்தை. அவ்வழியே கடந்து செல்லும்பொழுது மாலை 6 மணி இருக்கலாம். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் மாலைத் திருமஞ்சனத்தை அங்கேயே, அதுவும் சுத்த கங்கையில் மறுமுறை திருமஞ்சனம், செய்யவேண்டுமென்ற திருவுளம் போலும். அப்படியே பேருந்தை நிறுத்தச்செய்து அக்கங்கைப் பாலத்தை அடியிலிருந்து பார்க்கப் போவதாக எழுந்தருளினார்கள். எல்லோரும் உடன் சென்றோம். அங்கே ஒரு ஸ்நானக்கட்டம் இருந்தது. அதனருகில் சில ஆலயங்களும் சில சாதுக்கள் தங்குமிடங்களும் இருந்தன. அந்த இடம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருவுளத்துக்கு மிக உகந்ததாக இருந்தது.

அனற்காற்று :

சிறிதுநேரம் அங்கே அமர்ந்திருந்து இளைப்பாறிக் கங்கையில் திருமஞ்சனத்திற்கு இறங்கினார்கள். அப்பொழுது அது பெருமான் திருவடிநீழல் போலவே குளிர்ந்திருந்தது குளிப்பதற்கு. அதுவும் அன்று இருந்த வெப்பத்தைப் போக்கி உடலையும் உளத்தையும் குளிர்விப்பதாக இருந்தது. அந்த மகிழ்ச்சியில் எல்லோரும் சிறிதுநேரம் தண்ணீரில் நின்று குளித்துக்கொண்டிருந்தோம். அப்பொழுது திடீரென்று ஒரு பெரும் புயல் போன்ற காற்று வீசிவரத் தொடங்கியது. தண்ணீர் கொதித்தது. அது அருகே வரவர நாங்கள் நின்றிருந்த குளிர்நீர் வெந்நீராக மாறிற்று. மேலே வெந்நீராக இருந்த தண்ணீர் அடியிலும் சூடுகண்டு வெந்நீரில் குளிப்பது போல்வதாயிற்று. மேலே ஏறிவந்து உடம்பு துடைத்துக்கொள்ளும்பொழுது உடம்பில் ஒரு எரிச்சல்கூட உண்டாயிற்று. அந்தக்காற்றுக்குப் பெயர் ( Lu - அனற்காற்று ) லூ என்று சொல்வார்க

அந்தநேரத்தில் ஆற்றில் நன்ருக நீந்திவிளையாடும் மீன்கள் கூட ஒதுங்கித் தள்ளிப்போய்விடுகின்றன. இது மிகவும் கொடியது. உயிர்ப் பயமும் விளைக்கும். மாலை அனுஷ்டானங்களைமுடித்துக்கொண்டு ஸ்ரீலஸ்ரீகுருமகாசந்நிதானத்தில் பெருந்துவில் அமர்ந்ததும் அந்த இடத்தைவிட்டு விரைவில் நீங்கிளேம். சிறிதுதொலைவு சென்றபிறகுதான் அதன் வெம்மை சிறிது நீங்கிற்று.

சுக்ராம் :

எங்களுக்கு உதவியாக இருக்க ஸ்ரீ காசியிலிருந்து குமாரசுவாமி மடத்திலிருந்து சுக்ராம் என்பவர் வந்திருந்தார். அவர் அலகாபாத் இரயில் நிலையத்திலேயே ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தைக் கண்டு திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகளின் ஆணையின்படி தான் வந்திருப்பதாகவும், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் கேதாரத்துக்கு எழுந்தருளிவிட்டதோடு ஸ்ரீ காசியில் அம்மடத்து மேலவரும் உடன் சென்றிருப்பதாகவும், இப்பொழுது ஸ்ரீ காசியில் பொருளாளர் மட்டுமே இருப்பதாகவும், ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் ஸ்ரீ காசிக்கு எழுந்தருளும் பொழுது அங்கு வரவேற்புக் குறைவற நிறைவேற அவர் அங்குத் தங்கியிருக்கவேண்டியிருப்பதாகவும், அதனுல்தான் தான் இங்கு வரவேண்டியிருந்ததாகவும் சொல்லிக்கொண்டார். வழியில் திருமுறை முழக்கமும் அரகர முழக்கமும் செய்துகொண்டே எல்லோரும் ஸ்ரீ காசிக்கு இரவு 10 மணிக்கு வந்துசேர்ந்தோம்.

ஸ்ரீ காசி மடத்தில் :

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை ஸ்ரீ குமாரசுவாமி மடத்துப் பொருளாளர் சுப்பிரமணியம் கண்டு வரவேற்ருர். நாங்கள் ஸ்ரீ காசியைப்போய் அடைந்தது 22—6—59இல்.

ஸ்ரீ காசி குமாரசுவாமி மடத்தில் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் எழுந்தருளும்போதெல்லாம் வரவேற்புக் களும் உபசரிப்புக்களும் மிகச் சிறந்த முறையிலேயே இருக்கும். அதேபோலவே இந்தமுறையும் நிகழ்ந்தன. அங்கு ஸ்ரீ காசியில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் தங்கி யிருக்கும் பொழுது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தோடு வருவோருக்குங்கூட ஸ்ரீ காசி மடத்து உபசரிப்புத்தான். அதுவும் சிறந்த முறையில் அமைந்திருந்தது. மற்ற எந்த வேலைகள் இருந்தபோதிலும் அவைகளைக்கூட அவ்வளவாகப் பாராமல் இரவு பகல் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தின்திருவுளப்பாங்குதெரிந்து அவர்கள் மகிழும் வண்ணம் எல்லாம் செய்துகொடுத்தார்கள். அங்குள்ள எல்லாப் பணியாளர்களும் இந்தத் தொண்டு செய்யத் தங்கள் தங்களுக்கும் ஒரு வாய்ப்புக் கிடைத்ததே என்று எண்ணி மகிழ்வது போலவே எல்லாம் நடைபெற்றன. ஸ்ரீ காசியில் உள்ள அன்பர்கள் பலர் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் அங்கு எழுந்தருளியிருக்கும் செய்தி தெரிந்து வந்து கண்டு வணங்கி அருட்பூதி பெற்றுப் போனார்கள்.

## ஸ்ரீ காசியில் வழிபாடுகள் :

மறுநாள் தொடங்கி அங்குத் தங்கியிருந்த நாட்களில் அதிகாலையிலும் மாலையிலும் கங்காஸ்நானமும், ஸ்ரீ கேதா ரேசுவரர் வழிபாடுகளும், ஸ்ரீ விசுவேசுவரர் வழிபாடுகளும் வழக்கம் போலச் சிறப்பாக நடைபெற்றன. இந்த முறை யிலும் ஸ்ரீ விசுவேசுவரருக்குப் பால் அபிஷேகமும், ஸ்ரீ கேதாரேசுவரருக்கு ஏகதின லட்சார்ச்சனையும், அம்பிகை, தட்சிணாமூர்த்தி முதலிய மூர்த்தங்களுக்குச் சந்தனக்காப்பு அலங்காரம் முதலிய எல்லாச் சிறப்பு

வழிபாடுகளும் நிகழ்ந்தன. மக்கள் கூடிக் கூடிக் கண்டு வழிபட்டு மகிழ்ந்தார்கள்.

கங்கையில் :

ஒருநாள் அறுபத்துநான்குகட்ட தரிசனமும் சிறப்பாக உள்ளவற்றில் திருமஞ்சனமும் நிகழ்ந்தன. அதற்காகப் படகும் அமர்த்தப்பட்டு. அதிலே ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்துடன் உடன்வந்த எல்லோரும் சென்றுவந்தோம். ஓடத்தில் அமர்ந்ததும் திருஞானசம்பந்தர் அருளிய பதிகச் சேஞ்சோல் அன்று திருக்கோள்ளம்பூதூரில் ஆற்றில் ஓடத்தைச் சேலுத்தியதே அந்தப் பதிகம் பாராயணம் சேய்ய உத்தரவாயிற்று. அருளாளர் திருவுள்ளங்கள் எங்கேங்கு சேன்ருலும் அங்கங்கும் பேருமான் நினைவிலேயே திளேத்துநிற்குமல்லவா ? எங்களுக்கு இந்நிகழ்ச்சி அந்த நினைவை உண்டாக்கியது. பதிகப் பாராயணம் முடிந்தது. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருவுளம் ஸ்ரீ காசி விசுவேசுவரரின் நினைவில் திளேத்திருந்தது அப் போழுதேன்பதற்கு ஏற்ப ஒரு அழகான சுவைபடக்கூடிய உபதேசமும் கிடைப்பதாயிற்று.

மாலே தாரும் :

'' ஸ்ரீ காசி விசுவேசுவரரின்மீது ஒரு நங்கை காதல் கோண்டாள். அப்பேருமானேயே நினைந்து நினைந்து ஏங்கினுள். அவனே அடையவேண்டுமேன்று அவாவுற்ருள். அதே நினைவில் ஊனும் மறந்தாள். தன் சுற்றுப் புறத்தையும் மறந்தாள். தன்னேயே மறந்தாள். அவனே அடைய முடியாவிட்டாலும், அவன் அணிந்திருக்கும் கோன்றைமாலேயையாவது பேற்று அணிந்து மகிழவேண்டு

மேன்று ஆசைப்பட்டாள். நீண்ட நாட்கள் கனவுகண்டு நின்ருள். ஒன்றும் பலிக்கவில்லே. ஏக்கம் மிகலாயிற்று. நேட்டுயிர்த்தாள். முடிவில் மூர்ச்சித்துத் தரையில் வீழ்ந் தாள். அவளுடைய உயிர்த்தோழி அங்குவந்தாள் அந்த நிலேயைக் கண்டாள். துணுக்குற்ருள். தலேவிக்கு என்ன நேர்ந்தது ? இறந்துபட்டாளோ...... அருகிற் சென்று கண்டாள். உயிரிருக்கிறது. மூர்ச்சித்துத்தான் கிடக்கிருள். காரணம் ? ? ? ஒ, அதுவா ? இதோ அங்கே செல்கிறேன். விசுவேசுவரர்சந்நிதியை அடைந்தாள் விரைந்து. பெருமான் புன்னகை பூத்து வீற்றிருந்தான். அடியில் வீழ்ந்து வணங்கிஞள். சிறிது அருகில் சென்ருள். ‘ பெருமானே ஒரு விண்ணப்பம் ; அருளல் வேண்டும். என் தலேவி பெருமான் புகழைக் கேட்டாள். திருவுலாவில் திருவீதியில் பெருமான் திருமேனி கண்டாள். காதல்கொண்டாள். ஏங்கிநின்ருள். அவள் குறிக்கோள் இன்னும் நிறைவேற வில்லே. ஏங்கி ஏங்கி இப்பொழுது உணர்விழந்தநிலேயில் மூர்ச்சித்துக் கீழே கிடக்கிருள். உயிர்போகும் தறுவாயில் பெருமான் ஓடிவந்து பிரணவோபதேசம் செய்து அருள் வழங்குவீரல்லவா ? அதேகுறிப்புடையாளோ என் தலேவி. தாம் வராவிட்டாலும் தாம் அணிந்திருக்கும் கோன்றை மாலேயையாவது அளித்தருள்வீராக, பெருமானே ’’ என்று வேண்டிநின்ருள். இது காதல் சித்திரம். ஆனுலும் உயிர்க்காதல். அடியவர்கள் பெருமான்மீது கோள்ளும் காதல். இதுதான் உண்மைக்காதல். உயிர் அருளுறவைப் பேறுவதற்குக் கோள்ளவேண்டிய காதல்.

சாரூபம் :

இதன்மூலம் இத்தலப் பேருமை ஒன்று விளக்கப்படு கிறது. இங்கு இத்தலத்தில் இறந்தவர் உயிர்களேத் தமது

மடியிற் கிடத்தி அம்பிகை இளைப்பாற்ற, பெருமான் அங்கு ஓடிவந்து பிரணவோபதேசம் செய்து சாருப நிலை அளிக்கின்றான் என்று இவ்விதம் கண்டு சொல்லியது ஒரு அருள் உள்ளம்.''

கேவலம் :

இந்தச்சிந்தனை முடியும் பொழுது படகு மணிகர்ணிகா கட்டத்துக்கு வந்துவிட்டது. அந்தக் கட்டத்துக்குப் பக்கத்தில் சுடலை இருக்கிறது. அங்கு எப்பொழுதும் சடலங்கள் எரிக்கப்பட்டுக்கொண்டே இருக்கும். அங்கு அந்நெருப்பு அணைந்துநின்று கண்டவர் யாரும் இல்லை. இதையும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருநோக்குக் கண்டது. அதிலும் ஒரு நயம் கண்டது அத்திருவுளம். '' இது ஒரு மயானம் ; அதுவும் ஸ்ரீ காசியே மகாமயானம் என்று சொல்லப்படுகிறது. ஊழிக்காலத்தில் பெருமான் இங்கு நின்று திருக்கூத்து - ஊழிக்கூத்து ஆடியதாகவும் அப்பொழுது எழுந்த சுடலைப்பொடி வேந்த வெண்ணீற்றுத் துகளை மகாப்பிரசாதமாகப் பெற எல்லாப் பெரிய அடியார்களும் இன்றும் தவம் தேக்கி நிற்கிறார்கள் இங்கே என்றும் நம் நூல்கள் சொல்லுகின்றன. அதை மேலே சொன்ன அருளாளரும் கண்டார். பழிப்பது போலப் புகழ்ந்தும் கூறியுள்ளார். அவர் சொல்வதைப் பாருங்கள் ' சாருப முத்தியை விரும்புகிறவர்கள் இறக்க முத்திதரும் தலமாகிய இக்காசியை வந்தடைந்து உயிர்விடுகின்றார்கள். இறந்தவர்களுக்குப் பெருமான் பிரணவப் பொருளை உபதேசித்துச் சாருபம் அருளுகிறான் என்றும் அவர்கள் நம்புகிறார்கள். அவர்கள் அவ்விதமே எளிதில் அடைந்து இன்பம் பெருக்கிக்கொள்ளுகிறார்கள்.' இதை அந்த முனிபுங்கவர் '' ஸ்ரீ காசியில் முத்திநிலையை

அடைய விரும்பி வந்து இறப்பவர் எதைப் பெற்ருர்கள். பெறுவது சாம்பலும் எலும்பு மாலைகளும்தானே ! இந்தக் கேவலத்திற்காக அவர்கள் இங்கே வந்து உயிர்விடுகின் றனரே பார்த்தீர்களா ? ’’ என்று சொல்லுகிருர். சிவபெரு மானின் சாருபநிலை அடைந்தவர்கள் அப்பெருமான் திருவுருவேபோல அவரணியும் வெந்த வெண்ணீறும் எலும்பு மாலைகளும் பூண்டு அவனே தானேயாய் நிற்கும் நிலையை இப்படி நமக்கு உணர்த்துகிருர்.

## குரு பக்தி :

அப்பெரியாரின் திருமடத்தில்தான் நாம் எல்லோரும் தங்கி உபசரிப்புப்பெறுகிருேம். அந்தச் சிவமுனிவர் தம் குருநாதர் ஆணைப்படியே தங்கிச் சமயஸ்தாபனமும் பிற அறச்செயல்களும் செய்து தவம் பெருக்கிய பெருமை உடையது அத்திருமடம். இப்போழுது அந்தத்திருமடத்தில் ஆட்சிசெலுத்திவரும் நம் கண்மணியிற் சிறந்த நன்மணி யாகிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித்தம்பிரான்சுவாமிகள் அவர்களும் இங்குக் காசியில் எல்லாப் பணிகளையும் சிறப் புறத் திட்டப்படுத்தி அக்காலத்தில் தோடங்கிய எல்லாச் சேயல்களும் நிகழச்சேய்திருப்பதோடு இக்காலத் தேவைக் கேற்ப வேண்டுவனவும் சேய்துவருகிருர்கள். குருபக்தியில் நமது தம்பிரான் சுவாமிகள் அவர்கள் ஈடு இணையற்ற சிறப்பு உடையவர்கள். இங்கே வந்து தங்கியிருப்பதில் நமது உள்ளம் எப்போழுதும் எல்லையற்ற மகிழ்ச்சிகோள் கிறது. அதற்கேற்ற கருவிகளையும் அமைத்துக்கோண் டிருக்கிருர்கள்.

## உபசரிப்பு :

உபசரிப்பதில் நமக்கு ஒருவிதம் மற்றவர்க்கு ஒரு விதம் என்றிருக்காது இங்கே. தமிழ் நாட்டிலிருந்து

யார் வந்தாலும் காசிமாநகரில் அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து தங்கவைத்து உபசரித்து அனுப்பி வருவதையும் பலரும் புகழக் கேட்டுமிருக்கிறோம். மேலே சொல்லியதுபோன்ற சிறந்த எண்ணங்களுக்கு இடம் கொடுக்கும் கங்கையின்பெருமையுணர்ந்தே நமது தம்பிரான் அவர்கள் ஆண்டிற் பெரும்பகுதியும் இங்கேயேவந்து தங்கி விடுகிறார்கள். உண்மையில் ஸ்ரீ காசிவாசியாகவே அவர்கள் விளங்குகிறார்கள் '' என்று திருவுளம்பற்றினார்கள்.

## தனி வழிபாடு :

கயிலை யாத்திரை குறித்து ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் அங்கு எழுந்தருளியிருக்கும் செய்தி ஸ்ரீ காசிவிசுவேசர் பூசை செய்யும் பண்டாக்களுக்கும் தெரிந்துவிட்டது, அவர்களில் சிறந்தவர் ஒருவர் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் அருகில் வந்தார். அடிமுதல் முடிவரை நின்று நோக்கினார். மகிழ்ச்சியால் பெருமூச்சு விட்டார். '' ஒரு சிறு விண்ணப்பம் '' என்றார். அவர் ஏதாவது உதவி கேட்கப்போகிறார் என்று எண்ணி '' அதை எங்களிடமே சொல்லலாமே '' என்றோம் நாங்கள். '' அது முடியாது ; இந்தப் பெரிய மகந்துவிடமே சொல்வேன். உங்களிடமெல்லாம் சொல்லக்கூடியதன்று அச் செய்தி. '' என்று உறுதியாகச் சொல்லிவிட்டார். இதைக் கண்ட ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் அவரை அழைத்து '' அந்தச் செய்தி யாது '' என்று கேட்டார்கள். '' இங்கு விசுவேசருக்கு ஒரு தனி வழிபாடு நடை பெறுகிறது அது இங்குள்ள பலருக்குங்கூடத் தெரியாது. இரவில் மூன்றாம் யாமத்தில் 3 மணி அளவில் நிகழ்த்தப் படுவது. அதுதான் மிகச் சிறந்த வழிபாடு. மற்றவை எல்லாம் வெளியார் கண்டு மகிழ்வதற்காக. அந்த

வழிபாடு பூஜகர்களில் சிறந்தவர்களும், மற்றையோரில் இது போன்ற சிறந்த அடியார்களில் சிலரும் காணத் தக்கது. எல்லோரும் வந்து காணமுடியாது. அந்தக் காலத்தில் யாரையும் அங்கு அனுமதிப்பதும் கிடையாது. அது இரகசிய பூஜை. அந்த வழிபாட்டுக் காலத்தில் பெருமானைக் கண்டு தரிசித்தோர் நினைத்த எல்லாம் அருளப்பெற்று நீடுவாழ்வார். இது ஒரு பெரும் இரகசியம்'' என்றார். ''அந்த வழிபாட்டுக்கு மகந்த் அவர்கள் எழுந் தருளி வந்து வழிபட்டு அருள்பெற்றுச் சென்றால் கயிலை யாத்திரை வெகு எளிதில் நிறைவுறும். இது உறுதி. அதற்கு அழைக்கவே நான் விரும்பினேன். நாளை வருவதாக இருந்தால் நான் இருந்து அதற்குத் தக்கவை செய்துகொடுக்கிறேன். மேற்கொண்டிருக்கும் யாத்திரை மிகப் பெரியது. அதில் எவ்வித இடையூறுமின்றி மிக நல்ல முறையில் வெற்றிகண்டு திரும்பி வரவேண்டும். மீண்டும் தருமைக்கு எழுந்தருளுமுன் இங்கு வந்து பெருமானுக்குச் சிறப்பு வழிபாடுகள் செய்து போதல் நன்மைபயப்பதாகும்.'' என்று சொன்னார். மறுநாளே வருவதாக உத்தரவாயிற்று,

## திருவருள் உறுதி :

அதேபோல அன்று இரவு நடுநிசியில் எழுந்தருளிப் படகு ஒன்றை அமர்த்திக்கொண்டு மணிகர்ணிகா கட்டம் சென்று திருமஞ்சனம் ஆடி விசுவேசுவரர் ஆலயத்திற்கு எழுந்தருளிச் சென்றார்கள். அவர்களை எதிர் நோக்கி அந்தப் பண்டாவும் அங்கு வந்திருந்தார். ஸ்ரீலஸ்ரீ குரு மகா சந்நிதானத்திற்காகக் கதவு சிறிது திறக்கப்பட்டது. மணிகர்ணிகாவிலிருந்து சுடலைச் சாம்பல் எடுத்து வந்து அணிந்துகொண்டு சிறப்பு வழிபாடு ஒன்று நடந்தது.

" அது மெய்யுருக்கும் வழிபாடுதான் " என்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் திருவுளம்பற்றினுர்கள். அவ் வழிபாடு 4 மணிக்குள் முடிந்துவிடுகிறது. பிறகுதான் போதுமக்களுக்காக சந்நிதியும் ஆலயமுகப்புக் கதவுகளும் திறக்கப்படுகின்றன.

ஒரு வேள்ளியன்று அன்னபூரணி சந்நிதியில் உள்ள மகாமேருவுக்கு லலிதாசகஸ்ரநாம அர்ச்சனை ஒன்பது பேர் இருந்து செய்து வழிபாடுகள் நடத்தச்செய்தார்கள். இது போன்ற சிறப்பு வழிபாடுகள் மூலம் திருவருள் உறுதியோடு' கயிலை யாத்திரை அங்கிருந்து தோடங்கப் பட்டது.

## ஸ்ரீ காசியிலிருந்து புறப்பாடு :

உடன் வந்திருந்தோரில் பலரை அங்கிருந்தே மீண்டும் ஊருக்கு அனுப்பிவிட்டு, ஒரு சிலரைமட்டும் அழைத்துக் கோண்டு 28—6—59 ஞாயிறன்று முற்பகல் 11 மணி அளவில் டேராடுன் விரைவு வண்டியில் ஸ்ரீ காசியை விட்டு அன்பர்கள் இருந்து வழியனுப்பப் புறப்பட்டார்கள். லட்சுமணபுரிவரை இந்தத் தோடர் பேருஞ்சாலை (Broad gauge); பிறகு அங்கிருந்து நயனிதால் விரைவுவண்டியில் சிறுசாலை (Metre Gauge) வழியாக காத்கூடம் சேல்ல வேண்டும். அதற்கு ஸ்ரீகாசியிலிருந்தே எல்லா ஏற்பாடு களையும் சேய்துகோண்டு பயணம் தோடங்கப்பட்டது.

## நயனிதாலில் ஏற்பாடு :

இதற்குமுன்பே உத்தரப் பிரதேச இராஜ்யபாலகர் உயர் திரு. வி. வி. கிரி அவர்களின் அந்தரங்கக் காரியதரிசியாக இருக்கும் சைவநல்லன்பர் திரு. வாலயானந்த நாயனுர் மூலம் எல்லாம் சேய்து வைக்கப்பட்டிருந்தன. உத்தரப்

பிரதேச அரசில் கோடை இருப்பிடம் நயனிதால். அங்குத் தான் திரு. நாயனுர் அவர்களும் அப்போழுது இராஜ்யபால கருடன் சேன்று தங்கியிருந்தார்கள். அந்தஊரில் கீதா சத்சங்கம் அமைத்து அதிலே கயிலேமலேயானேயே வழிபடு கடவுளாகக்கோண்டு ஆண்டு தவருமல் கயிலேக்கு ஒரு முறையோ பல முறைகளோ சேன்று வழிபட்டு வரும் சாது, சுவாமி 108 ஸ்ரீ ஸ்ரீமத் வித்யானந்தசரஸ்வதி அவர்கள் எங்களுடன் வருவதாகவும் திட்டம் செய்து வைத்திருந்தார்கள். அவர்களுக்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் ஸ்ரீ காசியை விட்டுப் புறப்பட்ட செய்தி சோல்லப்பட்டது. திரு. நாயனுர் அவர்களும் சுவாமிகள் அவர்களும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் நயனிதாலில் வந்து தங்குவதற்கு இடமும் மற்ற வசதிகளும் செய்து வைத்திருந்தார்கள்.

### மேலே போகப் போக :

நாங்கள் சேன்ற வண்டி அயோத்தி முதலிய பல பெருந்தலங்களின் வழியே சேன்றது. லட்சுமணபுரியில் வண்டி மாறி நயனிதால் விரைவு வண்டியில் ஏறி அமர்ந்துகோண்டோம். மறுநாட் காலேயிலே அந்த வண்டி இமயத்தின் அடிவரையில் ஏறத்தோடங்கியது. பிறகு மேலே மேலே மலேயில் அது ஏறிச் சேன்று கோண்டே இருந்தது. மேலே சேல்லச்சேல்ல வேப்பம் குறைந்து படிப் படியாகக் குளிர் நிலே வந்துகோண்டே இருந்தது. காலே 10 மணி அளவில் மலே அடியில் கடைசிநிலேயமாகிய காத் கூடத்தை வந்து அடைந்தோம். வரவேற்க வித்யானந் தரின் பிரதிநிதி ஒருவர் வந்திருந்தார். ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அங்கு எழுந்தருளியசேய்தி உடனே அரசாங்க

மாளிகையில் திரு. நாயனுருக்குத் தொலைபேசி மூலம் அறிவிக்கப்பட்டது. அங்கிருந்து நயனிதால் 22 கல் தொலைவு. மலைவழியில்போதல்வேண்டும். எல்லோரும் செல்லத் தக்கதாக உந்தூர்திகள் திட்டம் செய்யப்பட்டன. அங்கிருந்து புறப்பட்டு மலைச்சாலையில் வளைந்து வளைந்து ஏறி நயனிதால் பகல் 12 மணி அளவில் சென்றடைந்தோம். வழியில் நல்ல பழங்கள் கிடைக்கின்றன. அவைகளையும் வாங்கி உண்டோம். உடற் சோர்வு மேலே போகப் போகக் குறைந்து களைப்பு நீங்கி மனதில் உற்சாகம் பிறந்தது எல்லோருக்கும். ஊர் எல்லையில் வண்டி வந்ததும் வண்டிகளுக்குச் சுங்கமும் ஆள் வரியும் வசூல் செய்கிருர்கள்.

## கோடையில் குளிர் வசதி :

ஊர் மிக அழகாக அமைந்த கோடைக்கால வாசஸ்தானம். ஊர் நடுவில் நயனி ஏரி. ஊருக்குள் ஒரு குறிப்பிட்ட கட்டணம் க்ட்டியே உந்தூர்திகள் செல்லவேண்டும். ஆனல் சைக்கிள் ரிக்ஷாக்கள் அதிகம் அங்குக் கிடைக்கின்றன. மூட்டை தூக்கிகளும் மிக அதிகம். நாங்கள் சென்ற சமயம் சமவெளிப் பிரதேசத்தில் உள்ள கோடையின் வெம்மையைப் போக்கிக்கொள்ளவும், பொழுதுபோக்கிற்காகவும் செல்வந்தர்களும் உயர்ந்த அதிகாரிகளும் அங்கே வந்து கூடி இருந்தார்கள். அந்தக் காலத்தில் அங்கே தங்க இடம் கிடைப்பது எளிதல்ல. முன்னேயே திட்டம் செய்து வைத்திருந்தபடியால் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் தங்க சிறு குடில் (Cottage) கிடைத்தது. அங்கே எல்லாவசதிகளும் இருந்தன. மலையின் உயரமான ஒரு இடத்தில் அது அமைந்திருந்தது. அந்த நாகரிகக்



நைனிடாலில், ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களும்
கீதாசத்சங்கத் தலைவர்
108 ஸ்ரீ வித்யானந்தசரசுவதி மகராஜ் அவர்களும்



நைனிடால் அரசாங்க மாளிகையில் அளித்த வரவேற்பில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்கள் ராஜ்ய பாலகர் திரு. வி. வீ. கிரி. அவர்களுக்குப் பொன்னுடை போர்த்து ஆசியருளல்

கூட்டத்திலிருந்து சற்று விலகியும், ஆனல் எல்லாம் காணத்தக்கதாகவும் அந்த இடம் அமைந்திருக்கிறது.

நாகரிகம் :

அதைவிடச் சிறப்பு அதன் எதிரே ஒரு அம்பிகையின் (பாஷாணதேவி) கோவில். சற்றுத்தொலைவில் அந்த நகர்ப் பெயர் உண்டானதற்குக் காரணமாக உள்ள நயனிதேவி யின் ஆலயம். அவ்வாலய மணி இரவு பகல் எந்நேரத் திலும் ஒலித்துக்கொண்டே இருக்கும். நாகரிகப் பெருமக் களாகத் தோன்றும் பலரும் மற்ற எல்லோருமே அவ்வால யத்தில் சென்று வழிபடத் தவறுவதில்லை. எப்பொழுதும் மக்கள் கூட்டம் அதிகம். அங்கே அவர்கள்கூடி வழிபட்டு நிற்கும் காட்சி நெஞ்சுருக்குவதாக இருக்கும். உடையிலும் நடையிலும் சிறந்த நாகரிகத் தோற்றம் உள்ளவர்கள் அவ்விதம் வந்து வழிபடுவதைக் கண்டால் நமது ஊர் மக்களும் இந்தச் சிறப்பை அடைய மாட்டார்களா என்று நம் மனம் கனிவுறும். அந்த இடத்தில் அல்லாது வெளி யிடங்களில் அப்பெருமக்களைக் கண்டால், தோற்றத்தால் அவர்களும் சமயப்பற்றுடையவர்களாக இருப்பார்களா என்றே தோன்றும். ஆனல் செயலில் வேறு விதமாக இருக்கிறது அங்கே. ஆண்களும் பெண்களும் அவ்விதம் செய்வதைக் காணலாம். அம்மக்களுக்கு அடியார்கள் என்றல் பக்தி அதிகம். அவர்கள் எத்தேசத்தவராக இருந்தாலும், எந்த உடையில் உள்ளவர்களாக இருந் தாலும் அடியார்களைக் கண்டதும் சாதுமகராஜ் என்று வணக்கம் செலுத்தாமல் போகமாட்டார்கள். உடைக்கும் கோலத்துக்குமே மதிப்பு உண்டு என்றல், ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தைப் போன்ற அருளாளர்கள் அங்கு வந்திருப்பதை அறிந்தால் அவர்கள் என்னதான் செய்ய

மாட்டார்கள். அவ்வளவு பெருங்கூட்டமாக இருந்த நிலையிலும் தென்னுட்டிலிருந்து பெரிய மகந்த் ஒருவர் அங்குக் கயிலை செல்லும் விருப்போடு எழுந்தருளி வந்திருக்கிருர்கள் என்ற செய்தி வெகு எளிதில் நகர் எங்கும் பரவிவிட்டது. பலரும் வந்து கண்டு அருளாசி பெற்றுப் போகவேண்டும் என்று ஆசைப்பட்டுக் கூட்டம் கூடத் தோடங்கிவிட்டார்கள்.

## கீதா சத்சங்கத்தில் :

வரவேற்ற சுவாமி ஸ்ரீமத். வித்யானந்தர் அவர்கள் இதை எதிர்பார்த்துச் சில ஏற்பாடுகளைச் செய்து தமது கீதா சத்சங்கத்தில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்துக்கு ஒரு வரவேற்புச் செய்து மக்களுக்குத் தரிசனம் ஆக்கித் தந்தார்கள்.

## இராஜபவனத்தில் :

இராஜ்ய பாலகரும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தைத் தம் மாளிகைக்கு அழைத்து உபசரித்து வணங்கி அருள் பிரசாதம் பெற்றுக்கோண்டார். அக்குடும்பத்தார் எல்லோரும் தனிமுறையில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை வணங்கி மகிழ்ந்தார்கள். அவர்களுக்கு அந்தரங்கச் சேயலராக திரு. வாலயாநந்த நாயனுரும், திரு. நீலகண்டன் என்பவரும் மற்றம் சில உதவியாளர்களும் இருந்தார்கள். அவர்கள் எல்லோரும் தனி முறையில் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தைப் பேருமகிழ்வோடு வரவேற்றுபசரித்து வழிபட்டார்கள். இதற்காக அரசாங்க மாளிகையிலிருந்து தம் காரை ராஜ்ய பாலகர் அனுப்பியிருந்தார். இதுபோன்ற பல சிறப்புக்களும் அங்கே நிகழ்ந்தன.

## நயனிதால் :

நயனிதால் என்பது நயனி ஏரி என்ற பொருளில் அமைந்தது. நயனி+ஸ்தால் அல்லது நயனி+தளம் என்பதையே அவர்கள் அவ்விதம் ஊர்ப்பெயரால் வழங்கு கிறார்கள். இது தக்ஷயாகத்தில் பெருமாட்டி உயிர்நீத்ததும் அவ்வுடலைப் பெருமான் சுமந்து சென்றபொழுது அம்பி கையின் பலஉறுப்புக்கள் பலஇடங்களில் விழுந்தன என்று சொல்லப்படும் புராணவரலாற்றை ஒட்டி அமைந்தது. அதன்படி அம்பிகையின் திரு நயனங்கள் இங்கு வீழ்ந்த தாகவும் அந்த இடத்தில் நயனிதேவி ஆலயம் எழுந்த தாகவும் சொல்கிறார்கள். நயனிதேவியின் ஆலயந்தான் அங்கு மிக முக்கியமானது. அது நயனி ஏரியின் கீழ்கரை யில் அமைந்திருக்கின்றது. அம்பிகையின் கடைக்கண் பார்வை பெற்ற இடம் என்று சிறப்புச் சொல்வது மிகப் பொருந்தும். இது ஒரு மாவட்டத்தின் தலைநகர்.

## திரு. பந்த் :

நமது பாரத அரசில் இப்பொழுது உள்நாட்டமைச்ச ராக விளங்கிவரும் உயர்திரு. ஜி. பி. பந்த் அவர்களின் பிறப்பிடம். இங்கிருந்துதான் அவர்கள் நாட்டுத்தொண்டு செய்துவந்தார்கள். சட்டப்படிப்புப் பெற்று இங்கே தொழில் நடத்தியுமிருக்கிறார்கள். ஆகையால் அந்த அரசியல் மணம் இங்கு இன்றும் வீசிக்கொண்டிருக்கிறது. எல்லோரும் நல்ல தேசபக்தர்களாக விளங்குகிறார்கள். பந்த் - இது அப்பக்கத்துப் பிராமண வகுப்புக்களில் ஒன்று. நல்ல வைதிகக் குடும்பங்கள் தாம் அவை. அந்தக் குடும்பத்து அம்மையார் எங்களுடன் கயிலை யாத்திரைக்கு வந்திருந்தார் ; நல்ல பண்பும் நல்ல

ஆசார சீலமும் உடையவர்களாகவே இந்தப் பெரிய யாத்திரை முடித்துத் திரும்பினர். பெயர் தாராதேவி. நல்லதோரு குடும்பத்தைச் சேர்ந்தவர் நமது உள்நாட்டமைச்சர். நல்ல தெய்வ பக்தியும் இயல்பாக அமையப் பெற்றவர் என்றும் இங்குள்ளவர்கள் சொல்கிறார்கள்.

நயனி ஏரி ;

நயனி ஏரியைச் சுற்றி நல்லதோரு பாட்டை அமைப்பும் செய்திருக்கிறார்கள். அதில் உந்தூர்திகள் செல்லக் கூடாது. அப்படிச் செல்வதானல் குறிப்பிட்ட வழியே ரூ. 10 கட்டணம் செலுத்திச் செல்லுதல் வேண்டும். அதுவும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில்தான் செல்லலாம். மக்கள் அதிகமாக நடமாடும் மாலை நேரங்களில் வாகனங்களில் அங்குச் செல்லமுடியாது. ஏரியில் ஏராளமான படகுகள் விடப்பட்டிருக்கின்றன. சாலையில்செல்வதைவிட அம்மக்கள் பெரும்பாலும் படகிலேயே ஒருகோடியிலிருந்து மற்றொரு கோடிக்குச் செல்வதை எளிதாக நினைக்கிறார்கள். மனதிற்கும் மகிழ்ச்சி ஊட்டத்தக்கதாக இருக்கிறது. தெருவில் பெருங்கூட்டத்தில் இடித்துக்கொண்டு போவதைவிட அமைதியாகச்செல்லவும் வசதியாக இருக்கிறது. செலவும் குறைவுதான். ஏரியின் சுற்றளவு இரண்டரைமைல். ஆழம் 95 அடி. முட்டை வடிவில் அமைந்திருக்கிறது அது.

1880 இல் ஏற்பட்ட மலைச்சரிவுக்குப் பிறகுதான் இப்போழுதுள்ள அழகான நகர அமைப்பு அங்கு உண்டாயிற்று நடுவில் ஏரி. சுற்றிலும் மலைகள். அவற்றின் மீது படிப்படியாக அழகிய பல மாட அமைப்புக்களுடன் வீடுகள். மலைகள் முழுவதிலும் நல்ல பைன் முதலிய

பெருமரங்கள் அடர்த்தி. இதைப் பகலில் பார்த்தால் ஒரு அழகு. இரவு விளக்கேற்றிவைத்தப்பிறகு பார்த்தால் ஒரு அழகு. நமக்குக் கோடையாக இருக்கும்போழுது அங்கே நல்ல குளிர் இருக்கும். பனிமுட்டம் அடிக்கடி ஏற்படும். அப்பனிமுட்டம் ஏற்படும்போழுது, அது மலைகளைச்சுற்றிச் சுற்றிவந்து போர்வையிடுவதுபோல மூடுவது பார்க்க மிக அழகாக இருக்கும். அடிக்கடி சிறு மழைத்தூறல்களும் உண்டாகும்.

இப்படியாக அது நல்ல கோடையில் குளிர் வசதி பெற்ற தனிச் சிறப்புடையது. அங்கு மலைகளில் பெய்யும் எல்லா மழையும் அந்த ஏரியில்தான் வந்து தங்கும். ஆகையால் என்றும் வற்ருத தண்ணீர் உடையது. அதுவும் நல்ல தெளிந்த தண்ணீர். அதில் வாத்துக்கள் முதலிய நீர்ப்பறவைகள் மிதந்து செல்லுதல் அவ்வேரிக்கு அழகு கொடுத்துநிற்கும்.

இளைஞர்கள் அந்த ஏரியில் நீர்விளையாட்டான வாட்டர் போலோ ( Water Polo ) முதலியன விளையாடுவார்கள். படகு ஓட்டக் கற்பார்கள். படகுப் போட்டி விடுவார்கள். பகல்நேரத்திலும் முன்னிரவு வேளைகளிலும் இளங்காதலர்கள் படகுகளில் அமர்ந்து ஏதோ பேசிச்சிரித்துக் காலத்தை இன்பமாக ஓட்டுவார்கள். அதைவிடச் சிறந்தது நல்ல எழுத்தாளர்களும், படிப்பில் ஆர்வம் உள்ளவர்களும் படகுகளை வாடகைக்கு எடுத்துக்கொண்டு அவற்றில் அமர்ந்து நடு ஏரியில் கொண்டு செலுத்தி நிறுத்திவைத்து அதில் அமர்ந்து எழுதுவதும் படிப்பதும்தான். ஓவியர்களும் அவ்விதமாக அவ்வூர்ப் படத்தை ஏரியின் நடுவில் நின்று பார்த்துப்பார்த்து எழுதிக்கொண்டே இருப்பர். இது போல அந்த ஏரி அவரவருக்கும் பலவிதத்திலும் பயன்

தருவதாக எல்லோரையும் ஒருசேர மகிழ்விப்பதாக அமைந்திருக்கிறது.

## குதிரையேற்றம் :

வயதானவர்களும் ஓய்வு பெற விரும்புவோரும் அதன் கரையைச் சுற்றி நடந்தோ அல்லது குதிரைமீது அமர்ந்தோ செல்வார்கள். குதிரை ஏற்றம் கற்றுக்கொள்வோருக்கு நல்ல குதிரைகள், பயிற்சி அளிக்கும் ஆசிரியர்கள் அங்குக் கிடைப்பார்கள். இளங்காளைகள் குதிரைப் பந்தயத்தில் வேகமாக ஓட்டிச்செல்வதையும் பார்க்கலாம். குதிரைமீது அமர்ந்து செல்வதற்காக ஏரியை அடுத்துத் தனிச் சாலை அமைத்திருக்கிறார்கள். அதனால் மற்றவர்களுக்கு எந்த விதத்திலும் துன்பம் உண்டாகாது அதேநேரத்தில் அந்த ஓட்டத்தையும் கண்டு களிக்கலாம்.

## தங்குமிடங்கள் :

அங்கு வந்து தங்குவோருக்கு நல்ல வசதியான உணவுச் சாலைகளும் தங்குமிடங்களும் அவரவர் தகுதிக்கேற்ப கிடைக்கும. கோடையிலும் தசராக்காலங்களிலும் அங்குக் கூட்டம் அதிகமிருக்குமாம். மற்ற நாட்களில் வெளியார் கூட்டம் அதிகம் அங்கிருக்காதாம். இடங்களும் மிக எளிதில் கிடைக்குமென்று சொல்லப்படுகிறது.

## ஊர்ப் பிரிவு :

ஊர் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. தல்லித்தால் என்பது ஊர் நுழையுமிடத்தில் உள்ளது. ஏரிப்பகுதி நயனித்தால். மேலே உள்ள பகுதி மல்லீத்தால். இதில் நாகரிகப் பெருமக்கள் மல்லித்தாலிலும் நயனித்தாலிலும் தங்குவர். மற்ற மக்கள் தல்லித்தாலில் தங்குவர்.

நல்ல பெருங்கடைகளும் அங்கு உண்டு. பால்மட்டிலும் அங்கிருந்து 40 மைல் தொலைவிலுள்ள ஹால்துவானியிலிருந்து வருகிறது. ஆனால் அது காலை 7 மணிக்கே கிடைக்கும். அந்தநேரத்தில் யாரும் எளிதில் எழுந்து வெளியேவரமுடியாது. அவ்வளவு குளிர் இருக்கும்.

## ஆயர்பேட்டை :

உத்தரப்பிரதேச இராஜ்யபாலகரின் கோடை இருப்பிடமான இராஜபவனம் ஆயர்பேட்டை மலைகளின் உச்சியில் சுமார் 7689 அடி உயரத்தில் கட்டப்பட்டிருக்கிறது. அங்குச் சென்றால் வெய்யிலின் கடுமை என்னவென்றே தெரிவதற்கில்லை. அந்த மாளிகையும் அதனைச் சேர்ந்த பல கட்டிடங்களும் பூங்கா அமைப்புக்களும் சேர்ந்து சுமார் 200 ஏக்கர் பரப்புள்ளது. நல்ல காடு சூழ்ந்தது. ஓக், தேவதாரு முதலிய பெருமரங்கள் பல உயர்ந்து ஓங்கி வளர்ந்துநிற்கும். அங்கே மயில், குயில் போன்றவையும் சிறுத்தை, இமயக் கரடி போன்ற காட்டு விலங்குகளும் உலவும் என்று சொல்கிறார்கள். கோடைக் காலத்தில் உத்தரப் பிரதேசத் தலைநகரான லட்சுமணபுரியில் மிருகக் காட்சிச் சாலையில் வைத்துக்கொள்ள முடியாத குளிர்ப் பிரதேச உயிர் இனங்களை அக்காலத்தில் இங்குக் கொண்டு வந்து இராஜ்யபாலகர் தோட்டத்தில் அதற்கென உள்ள இடங்களில் வைத்துக் காத்துவருகிறார்கள். ஞாயிற்றுக் கிழமைகளிலும் மற்ற அரசாங்க விடுமுறை நாட்களிலும் பொதுமக்கள் அங்குச் சென்று கண்டுவரலாம். மற்ற நாட்களில் தனி அனுமதி பெற்றே செல்லுதல் வேண்டும். இந்த மாளிகைக்கெனத் தனிச்சாலை அமைப்பும் செய்து வைத்திருக்கின்றார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை இராஜ்யபாலகர் உயர்திரு. வி. வி. கிரி அவர்கள் அழைத்த பொழுது எங்களுக்கு எல்லா இடமும் காட்டப்பட்டன.

மிக அழகான முறையில் அமைந்திருப்பதுபோல நல்ல முறையிலும் பராமரிக்கப்படுகிறது. அதனருகில் உள்ள மோடி மலைச்சிகரத்தில் அமர்ந்து சூரிய உதயம் அஸ்த மனம் இரண்டையும் பார்ப்பதும் மற்ற நேரங்களில் அங்கு அந்தச் சூரிய ஒளி செய்துகாட்டும் வர்ணஜாலங்களைக் கண்டு மகிழ்வதும் தனிச்சிறப்புடையதாக இருக்குமென்று சொல்கிறார்கள் .இதைப் பார்ப்பதற்கென்றே பலர் அங்குச் சென்றுவருவதாகவும் சொல்லப்படுகிறது. ஆயர்பேட்டை என்பது ஆயர் என்னும் ஒருவகை மர அடர்த்தியினால் ஏற்பட்டது என்று சொல்கிறார்கள். மற்றும் அங்கிருந்து பனிபடர் இமயப் பெருமலை உச்சிகளின் காட்சியும் அவ் வூருக்கு வருவோரை உல்லாசப் பொழுதுபோக்குக்கு அங்கே வரும்படி அழைக்குமாம். அவ்விதம் அங்குச் செல்வோர் சிற்றுண்டிகளை எடுத்துச் சென்று அந்த உச்சி இடங்களில் வைத்து உண்டு களித்துத் திரும்புவர்.

உயர் சிகரங்கள் :

அதற்கடுத்து தேவப்பேட்டை. உச்சி உயரம் 7989 அடி. இது தேவர் வாழுமிடம். சுவர்க்கபூமி என்ற பொருளில் அமைத்திருக்கிறார்கள். அவ்வளவு குளிர்ச்சியும் அழகும் பெற்றது. அடுத்து ஹண்டிபண்டி. அதாவது பேய்ச்சிரிப்பு இடம். அங்கு அடிக்கடி இடிமுழக்கங்களும் அச்சந்தரும் ஒலிகளும் கேட்கும் என்று சொல்வார்கள். அதற்கடுத்து எதிரொலி மலைச்சிகரம். உயரம் 7153 அடி. இங்கே குழந்தைகள் விரும்பி விளையாடவருவர். அதற் கான ஏற்பாடுகள் எல்லாம் இங்கே உண்டு. நல்ல தாய் தந்தையர் தங்கள் குழந்தைகளை இங்கே விளையாடவிட்டு அதைக் கண்டு மகிழ்ந்து அமர்ந்து பொழுதுபோக்குவர்.

இங்கு அவர்கள் இடும் ஒலிகள் எல்லாம் எதிரோலியாகப் பலமுறையும் கேட்டுக்கோண்டே இருக்குமாம். அதுவே குழந்தைகளுக்கு ஒரு பெரும் விளையாட்டாக இருக்கும் அல்லவா ?

இதற்கெதிரே சீனு உச்சி இடம் - மலையுச்சி. இதுதான் நயனியில் மிக உயரமான இடம். உயரம் 8568 அடி. இங்கிருந்து இமயத்தில் உள்ள பல பெரும் தெய்விகச் சிகரங்களையும் மற்ற மற்ற அழகான காட்சிகளையும் காணலாம். இங்கு இவற்றைக்காண ஒரு நாள் ஆகாரத்தைக் கட்டி எடுத்துக்கோண்டுவந்து சேர்வார்கள். ஆனால் எல்லா நாட்களிலும் அக்காட்சிகள் கிடைப்பதில்லை. ஒரு சிறிது பனிமுட்டம் ஏற்பட்டாலும் ஒன்றும் கண்ணுக்குத் தெரியாது. ஆகையால் இங்கிருந்து பார்ப்பவர்க்கு வாய்ப்பிருந்தால் மட்டிலுமே காட்சிகள் கிடைக்கும். ஆனால் காட்சி கண்டால் அப்புறம் இங்கிருந்தே அகல மனம் இடங்கோடுக்காதாம். அத்தகைய சிறந்த இமயக் காட்சிகளை இங்கே காணலாமாம். ஓடும் படக் காட்சிபோல அது விளங்கும் என்று சோல்கிறார்கள். நாங்கள் செல்வதாகத் திட்டமிட்டிருந்த அன்று பனிமுட்டம் மிக அதிகமாக இருந்தது. ஆகவே செல்லவில்லை.

பிறகு ஆல்மா மலை. இது கிறிஸ்தவ வழியில் பெயர் அமைந்தது. பிறகு லேரா காண்டா - மிகக் காடடர்ந்த மலை உச்சி. இங்கு தேவதாரு போன்ற நல்ல மரங்களின் மணம் வீசிக்கோண்டே இருக்குமாம். ஆனால் வனவிலங்குகள் அதிகம் என்றும் சோல்கிறார்கள். பிறகு புலிப்பாறை. உயரம் 7869 அடி. இங்குத்தான் இப்போழுது பிர்லா ஒரு கல்லூரி அமைத்திருக்கிறார். உலகிலேயே மிக உயரமான இடத்தில் அமைந்த கல்லூரி என்ற பெருமை இதற்கு

உண்டு என்றும் சொல்கிருர்கள். அநேகமாக பனிமுட்டம் மிகுதியாக உள்ள இடம் இது.

பனிபடர் காட்சி :

இக்கல்லூரி தாண்டிச் சிறிது தொலைவு சென்ருல் (Snow view) பனிபடர் காட்சி. அங்கே கேதாரம், சௌகாம்பா (பதரிநாதம்), பஞ்சசூலி. பந்தர் பூஞ்ச், நந்தாதேவி (தேவியின் திருவுரும்) என்னும் சிகரங்கள். * கயிலை வழியில் ஒரு பகுதி, இவை காணக்கூடியதாக இருக்கிறது. இந்த இடத்தில் ஒரு பெரியவர் மரத்தின் உச்சியில் ஒரு சிறு குடில் அமைத்துக்கொண்டு

---

* பந்தர் பூஞ்ச் பகுதி :

பந்தர் (Bundar) = குரங்கு; ஹனுமன். இங்கே ஹனுமன் பீமன் இருவரும் சந்தித்தாகச் சொல்லப் படுகிறது. இது பாரதத்தின் ஒரு பகுதி. அர்ச்சுனன் தீர்த்த யாத்திரை சென்றிருந்த பொழுது பாரத்வாச மாமுனி களின் உபசரணையில் தருமபுத்திரர் முதலியோர் தங்கி யிருந்தனர். அப்பொழுது ஒரு நாள் திரௌபதியின் முன்னிலையில் மிகவும் மணமுள்ள தேவலோகத்துப் பூ ஒன்று வந்து விழுந்தது. அந்தப் பூவின் அழகை யும் மணத்தையும் கண்ட திரௌபதி அந்தப் பூவைத் தரும் செடியைப் பெற்று அதன் வழியே பூக்களைப் பெற விரும்பினுள். அப்பொழுது பக்கத்தில் பீமன் இருந்தான். அவனிடம் திரௌபதி இந்தப் பூவைப் பெற்று எனக்குத் தரவேண்டும் என்று வேண்டிக்கொண்டாள். அது எங்கிருந்து வந்து விழுந்தது என்பது தெரியாது மயங்கிய பொழுது முனிவர் இது தேவலோகத்துப் பூ; இது இங்குப் பூமியில் கிடைப்பது அரிது, இதனைப் பெற்றுக்கொடுப்பது எளிதல்ல என்று சொன்னுர். ' அதைப் பெறுவதில் எவ்வளவு

அங்கிருந்து தவம் பெருக்கி எதிரே நிற்கும் தெய்விகச் சிகரங்களைத் தரிசித்த வண்ணமே பரகதி அடைந்த தாகவும் அதுவும் அண்மையில் நிகழ்ந்ததாகவும் சொல்லப்படுகிறது. அப்பெரியவரின் குடிலைக்கண்டோம். அது ஒரு சிறிது சிதைந்திருக்கிறது. அந்த இடத்திற்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை ஸ்ரீமத் வித்யானந்த சுவாமிகள் அழைத்துச் சென்றூர்கள்.

---

துன்பம் இருந்தபோதிலும் நான் கொண்டுவந்து கொடுக் கிறேன். ஆனல் அது எங்கிருந்து கிடைக்கும் என்பதைத் தெரியச் செய்யவேண்டும்' என்று பீமன் கேட்டுக்கொண் டான். 'குபேரனுடைய நாட்டில் அவனுடைய சொந்தத் தோட்டத்தில் கடின காவலிடையே வைக்கப்பட்டிருக்கிறது. அங்குத் தேவரும் மற்ற யாவரும் செல்லுதல் முடியாது என்ருர். 'அங்குச் சென்று இதனைக் கொண்டுவந்து தேவியின் கையில் கொடுக்கிறேன்' என்று சொல்லி அளகாபுரியை நோக்கி வாயுவேக மனோவேகமாகச் செல்லத் தலைப்பட்டான் பீமன். இமயத்தின் பல மலைப்பகுதிகளைக் கடந்து வழியில் ஒரு அழகான வாழைத் தோட்டத்தைக் கண்டான்; அங்குக் காவல் அதிகமாக இருந்தது. அரக்கர் பலர் காவல் புரிந்து நின்றனர். அவர்களைத் தாண்டித் தோட்டத்துக்குள் செல்ல முயன்ருன். அவர்கள் இவனைத் தடுத்து நிறுத்த முற்பட்டனர். அவர்களைப் போரிட்டு அழித்து ஆரவாரஞ் செய்தான். அங்குத் தவம் செய்து கொண்டிருந்த அனுமன், இவ்விதம் அட்டகாசமாக வரும் மானுடன் யாவன் என்று பார்க்க, ஒரு மலைமீது மற்ருெரு மலையமர்ந்தாற் போல அமர்ந்து மற்ற மலைகளில் தன் கால்களை நீட்டிக்கொண்டும் தன் வாலை நீண்டு கிடக்கும் மற்ற மலைகளின் மீது கிடத்தியும் உட்கார்ந்து விட்டான். அங்குச்சென்று இக்குரங்கின்செயலைக்கண்ட பீமன், 'இவ்விதம் வழி மறித்து இருக்கும் குரங்கு யார்' என்று

இமயச் சிகரங்களில் கேதாரம், சௌகாம்பா, (பதரிகாதம்) பஞ்சசூலி, பந்தர்பூஞ்ச், நந்தாதேவி இவைகளின் இருப்பிடங்களைக் காட்டி கயிலை, செல்லும் வழியையும் சுட்டிக் காட்டினார்கள். அதோ காடடர்ந்த பகுதியில் ஒரு வழிப்பாட்டை தெரிகின்றதல்லவா ? அந்த வழிதான் நாம் செல்ல இருக்கும் வழியாகும் என்றும் தெரிவித்தார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அங்கு பஞ்சாட்சர விளக்கமும், கயிலைத் திருப்பதிகத்தில் ‘ தானெனை முன் படைத்தான் ’, ‘ வேற்றாகி விண்ணாகி ’ என்ற பதிகங்களின் பொருளும் கலந்த உபதேச உரையைக் கூறியருளினார்கள்.

## வழியில் :

செல்லும் வழி மிகவும் ஏற்றமும் இறக்கமுமாக உள்ளது. ஏறும்போழுது கால் வலித்தது. இறங்கும் போதோ குதிகாலிலிருந்து முன்னங்கால்வரை உறுதியோடு அடி எடுத்துவைத்து வந்ததில் ஏறும்போழுதிருந்ததைவிட அதிக வலிகோடுப்பதாக இருந்தது. திரும்புகையில் பிர்லா கல்லூரி முதல்வர், திரு. பந்த் அவர்களின் சம்பந்தி வீட்டில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திற்கு உபசாரங்கள்

---

கேட்டான். அதற்கு மறுமோழியாக “இங்கு இவ்வளவு துணிச்சலோடு வந்து துன்பங்கோடுக்கும் மானுடன் நீ யாரடா?’ என்று கேட்டான் அனுமான். “இவ்விதம் வழிமறித்து அமர்ந்திருக்கும் நீ யார்” என்று கேட்டான் பீமனும். மீண்டும் அனுமன் “ கட்டுப்படாமல் பேசும் மனிதனே ! முடிந்தால் என் வாலைத் தாண்டி, மேலே செல்லலாம்’ என்றான். அதற்குப் பீமன் ‘ ஏ சிறிய குரங்கே! இது என்ன அவ்வளவு பெரிய காரியமா ? என் முத்தோன் - இராகவனுடைய தூதன்

நடந்தன. வழியில் பலரும் அழைத்து எங்களுக்குப் பாலும் பழமும் காப்பியும் எல்லாம் கொடுத்து உபசரித்தார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை வரவேற்றுப் பாத பூஜைசெய்து மலர்சூட்டி அவரவரும் வணங்கித் தம் குடும்பத்திலுள்ளோரையும் வணங்கச்செய்து ஆசிபெற்ருர்கள்.

முதற் பயிற்சி :

வழியமைப்பு இருந்தாலும் அவ்வளவு கடுமையான ஏற்றம் இறக்கங்களில் அதற்குமுன் நாங்கள் ஏறியது கிடையாது. ஆகவே அது மிகவும் துன்பமாகவே இருந்தது. சுவாமி வித்யானந்தா அவர்கள் மிக எளிதில் ஏறியும் இறங்கியும் களைப்புத் தெரியாமல் வந்தார்கள். ஆனுல் அந்த உச்சி இடங்களில் ஒவ்வோரு இடத்திலும் எங்களை நிறுத்தி அங்ஙகரின் அற்புத அழகைக் காட்டிவந்தார்கள். அது ஓரளவு எங்கள் களைப்பைப் போக்குவதாக இருந்தது.

---

அனுமான் வாலை அசைக்கமுடியாது என்று வேண்டுமானுல் சோல்லலாம்; அற்பமாகிய உன்வாலை எடுத்து அப்புறம் எறிந்துவிட்டுப் போவதில் முடியாத காரியம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை '' என்று விடையிறுத்தான் கோபமாக. '' மனிதனைச் சுமந்து தோள் வருந்தும் அந்தக் குரங்கைப் பற்றிச் சொல்கிருயா ? என் வாலின் வலிமை உனக்குத் தெரியுமா ? அந்த எளிய குரங்கை என்னேடு ஒப்பிட்டுப் பேசுவது அழகா ? '' எனறனன் அனுமான். உள்ளே மன மகிழ்ச்சி இருந்தாலும் இன்னும் இவனுக்கு எவ்வளவு செய்தி தெரிகிறது என்பதைச் சோதித்துப் பார்க்கும் எண்ணங் கோண்டு இவ்விதம் கேட்டான் (அனுமன்). இதனைக் கேட்ட பீமன் சீற்றம் அடைந்தான். தன் முன்னேனையும் பழிக்கிறது இக்குரங்கு; அதுவல்லாமல் இராகவனுடைய

எங்கள் இருப்பிடம் வந்ததும் "இவ்வளவு துன்பத்தை இன்றே கொடுத்துவிட்டீர்களே! இனி நம் பயணத்தில் களைப்பு மிக ஏற்படுமே" என்றேன். அதற்கு அவர்கள் சிறிது சிரித்துப் பேசாதிருந்தார்கள். பிறகு நிதானமாக யோசித்துப் பார்த்ததில், இவர்கள் எங்களை ஏதோ ஒரு காரணங்கொண்டு பல இடங்களுக்கும் அழைத்துச் சென்றிருக்கிறார்கள் என்பது புரிந்தது. எங்களுக்கு வந்த மறுநாளிலிருந்தே நடைப்பயிற்சி, அதுவும் மலை ஏற்றம் இறக்கங்களில் பயிற்சி கொடுத்திருக்கிறார்கள். அதுவே பிறகு எங்களுக்குப் பின் வந்த பெரிய வழி நடப்பில் எப்படி எப்படி ஏறுவது, இறக்கங்கள் வந்தால் எவ்விதம் நடந்து செல்வது என்பது தெரிய வாய்ப்பாக இருந்தது.

## செயல்களும் இன்பநலன்களும் :

அந்தச் சுவாமிகள் இவ்விதமாக மௌனமாகவும் சில சமயங்களில் சிறு கதைகள் மூலமாகவும் சொல்ல வேண்டியதை எல்லாம் சொல்லிவிடுவார்கள். அவர்கள்

---

பெருமை தெரியாமல் அற்ப மானிடரோடு ஒப்பிட்டுக் கூறுகிறதே; இதை இப்படியே கசக்கிப் போட்டுவிட்டால்தான் என்ன? என்று நினைத்தாலும் "அவன் சுத்த வீரன்; எப்பொழுதும் உண்மையே பேசும் இயல்புடையவன்; ஆகவே நீ என் மூத்தோன் பெருமை அறியாது பேசுகின்றாய். அப்பெரியோன் எல்லா உலகங்களும் அஞ்சி அஞ்சி நின்ற இராவணேஸ்வரனுடைய இலங்கையை மிக எளிதில் தீயிட்டு அழித்தவன். எல்லாம்வல்ல இராகவனுடைய தூதன் அவன். அவன் அந்த ஒருவனுக்கே சேவகம் செய்யும் செம்மல். அவன் வாயுவின் புத்திரன், அப்பெரியோனை இனி இழித்துக் கூறாதே,

வேறும் சாது மாத்திரமல்ல. அரசியல் வாதியும்கூட. ஆகையால் யார் எவ்வளவு கோபமாகப் பேசினுலும் அதைச் சேவி ஏற்றுக்கோள்ளாமல் தாம் சேய்ய வேண்டியதை - தம் குறிக்கோள் முற்றுப் பேறுவதற் குள்ளதைத்தான் சேய்வார்கள். அடிக்கடி நமக்கு விளக்கம் சோல்லிக்கோண்டிருக்க மாட்டார்கள். இதைப் புரிந்து கோண்டு அவர்களோடு பழகுவதற்கு சில நாட்கள் ஆயின. பலருக்குக் கடைசிவரை புரியவே இல்லே என்று சோல்லக்கூடியதாகவும் இருந்தது. ஏனேனில், அந்தச் சுவாமிகளேப்பற்றி இவர்களுக்கு எல்லாம் வசதியாகத் தோன்றிய இடங்களில் பல புகழ்ச்சிகளும், மற்றும் துன்பம் தரும் இடங்களில் இவர்கள் மனம் தளர்ந்து கேட்ட கேள்விகளுக்கு விளக்கம் சோல்லாத இடங்களில் சுவாமிகளேக் குறைத்தும் பேசியதே காரணம். இந்த யாத்திரையில் 20 முறைகளுக்கு மேல் சேன்று பழக்கம்

---

அவன் என் முன் பிறந்தவன். நானும் வாயுவின் புத்திரன்" என்ருன், "அப்படியானுல் ஏன் வீணில் காட்டில் துன்பப் பட்டு வருந்துகிருய்" என்று அனுமன் கேட்க, பீமன் தன் தாயத்தார் சூதில் வஞ்சித்து எல்லாவற்றையும் கவர்ந்து கோண்டது, தருமரோடு மற்ற எல்லோரும் வனவாசம் சேய்திருப்பது முதலிய எல்லாவற்றையும் விளக்கிக்கூறினுன். இதற்குமேலும் சோதனே சேய்ய விரும்பாது தான்தான் அந்த இலங்கையில் தீக் கோளுவிய அனுமன் என்று சோல்லித் தன் தம்பியைக் கட்டித்தழுவி முச்சிமோந்து ஆசி கூறி "நீ விரும்பி வந்த மலர் இயக்கருலகில் குபேரன் மிக அருமையாக வைத்துக் காத்துவரும் அழகிய மலர்த் தோட்டத்தில் இருப்பது, அங்குச் சேல்ல் தேவரும் மூவருமே ஆனுலும் அஞ்சுவர், இராக்கதர் காவலும் இயக்கர் காவ்லும் மிகக் கடுமையாக இருக்கும், ஆகையால் அளகேசனேயே

இருப்பதால் எல்லாவற்றையும் அததுவும் அங்கங்கும் உள்ள நிலையில் அதில் எந்த அளவு வசதி செய்து கொள்ளமுடியுமோ அந்த அளவு செய்துகொள்ளும் பழக்கமும், துன்பத்தைக்கண்டு மனச் சோர்வோ, அத் துன்பம் வந்திருக்கிறதென்று உடன் வந்திருப்போரிடம் சொல்லி அவர்களுக்கு மன அயர்வு அல்லது பேரச்சம் உண்டாக்கத்தக்கதான செய்திகளை வெளியிடுதலோ எது வும் நிகழாவண்ணம் நடந்துகொண்டதே ஆகும்.

## நடை மெலிவு :

ஒரு நாள் மாலை நயினி ஏரியைச் சுற்றி நடந்தே சென்றோம். எங்களில் சிலர் தொடக்கத்தில் மிக வேகமாக நடைபோட்டார்கள். அதைக்கண்டு அந்தச் சுவாமிகள் அவர்கள் சிரித்துக்கொண்டே எதுவும் சொல்லாமல் தம் வழியிலே நடந்து வந்தார்கள். மற்றையோர் வேகமாக நடப்பதும், கால்வலி கண்ட இடங்களில் சிறிது மேது வாகச் செல்வதுமாக நடந்ததும், அவர்கள் ஒரே சீராக

---

கண்டு அவன் சமயம் தெரிந்து கேட்டால் அவனே விருப்போடு கொடுப்பான். அவ்விதம் கேட்க விரும்பா விட்டால் கடும்போரிட்டுத்தான் பெறுதல்வேண்டும். அதற்கு இன்னின்னவழியாகப் போதல்வேண்டும்'' என்று கூறி முடித் தான், ''உன் அருளும் என் உடல் வலியும் இருக்கும் பொழுது நான் யாரிடமும் சென்று யாசித்தல் தகாது. போரிட்டே கொண்டுவருவேன்'' என்றான் பீமன். பிறகு அனுமனிடம் இரண்டு வரம் வேண்டிப்பெற்றுக்கொண்டான். அவற்றில் ஒன்று பிறகு வரும் பாரதப்போரில் அனுமன் தன் தம்பி அர்ச்சுனனுடைய இரதத்தின் கொடியாக அமைந்து விளங்க வேண்டுமென்பதும் முன் இலங்கையை அழித்த பொழுது அனுமன் கொண்ட விசுவருபதரிசனத்தை வேண்டிப்பெற்றும்.

அளவான வேகத்தில் நடந்து சென்றதும் எல்லாம் ஒன்ருகத்தான் முடிந்தது. அவர்கள் நடையால் கால் வலி இல்லாமல் உற்சாகத்தோடேயே இருந்தார்கள். ஆனுல் நாங்கள் அடிக்கடிக் களைத்துப்போனேம். முடிவில் தான் அந்த இரகசியத்தை எங்களுக்கும் சொன்ஞர்கள்; '' நீண்ட யயணங்களில் ஒரே சீரான வேகத்தில் நடத்தல் முறையென்றும், தொடக்கத்தில் உற்சாகமாக, வேகமாக நடந்துவிட்டு மற்றப்பகுதிகளில் நடைமெலிந்து துன்புறு வது பொருந்தாது என்றும்'' இப்படியாகப் பல அருமை யான அனுபவங்களை அவர்களிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டியிருந்தது ஒரு சில நாட்களில்.

பாஷாணதேவி:

நயனி ஏரியைச் சுற்றி வந்த பொழுது நடு வழியில் எங்கள் தங்குமிடத்திலிருந்து பார்த்தால், தெரிய வந்த அம்பிகைக் கோவிலருகே வந்ததும் எங்களை அழைத்து அந்த இடத்தின் பெருமையை விளக்கிஞர்கள். அங்குள்ள தேவியின்பெயர் பாஷாணதேவி. ஒரு சிறு மலைக்குடைவில் அமர்ந்து அருள் பாலித்து நிற்கிருள்.

---

அப்படியே கண்டு வணங்கிமீண்டும் குறுகிய உருவில் தனக்கு ஆசி வழங்கவேண்டுமென்றும் கேட்டு அவ்விதமே அருளப் பெற்று அளகையைநோக்கிச் சென்ருன். குறித்தபடியே அம் மலர் வனம் சென்று காவல் நின்ற அரக்க, இயக்க வீரர்களைக் கொன்று பிறகு வந்து இயக்க சேனையையும் அழித்து வெற்றி கண்டு அளகேசன் மகனிடம் அம்மலர் மரத்தையே வாங்கிக் கொண்டு அளகேசன் ஆசியோடு அவன் இரதத்தில் தருமர் இருக்கும் இடத்தில் வந்திறங்கினுன். இது அவ்வரலாற்றின் சுருக்கம் தான், இது நிகழ்ந்த இடம் பந்தர்பூஞ்ச் என்று வழங்கப்படுகிறது.

## தேவியின் பெருமை :

அவள் பெருமை தெரியாது அங்குச் சாலை அமைக்க வந்த ஆங்கிலேயப் பெரிய அதிகாரி ஒருவன் அந்த மலைப் பாறையை உடைத்து எடுத்துவிட்டு நன்ருக அகலப்படுத்தி அழகுசெய்யவேண்டும் என்று உத்தரவிட்டான். அப்போது அதில் வேலைசெய்யும் இந்துக்கள் பலர் இங்கு எழுந்தருளி யுள்ள தேவி மிகவும் சக்தி வாய்ந்தவள். அதைவிட்டு மற்றப் பகுதிகளைச் செம்மை செய்யலாம் என்றனர். அவன் அந்தக்காலத்தில் வந்த ஆங்கில அதிகாரி. தன்சொல்லைத் தட்டிப் பேச முன்வந்தவர்கள்மீது கடுஞ் சீற்றங்கொண் டான். "இந்த வேலையைச் செய்யமுடியாதவர்களை இன்றே வேலையைவிட்டு நீக்கி இருக்கிறேன், போகலாம். நாளையி லிருந்து புது ஆட்கள் வந்து வேலைசெய்யலாம்" என்று உத்தரவிட்டு அந்தப் பெருமிதத்தோடு தன் முகாம் சென் றடைந்தான். சீதோஷ்ண நிலை மற்ற இயற்கை வசதிகள் எல்லாவற்றையும் கண்டு. இந்த நகரம் வெள்ளையர் வந்து தங்குவதற்கென்றே அமைக்கப்பட்டது.

அன்றிரவு அவன் தங்கியிருந்த கூடாரத்தைப் பெருங் காற்ருென்று அடித்துப் பிய்த்தெறிந்துவிட்டது. அந்த நிலையில் வேறிடம் கண்டு தங்கியிருந்தபோழுதும் இரவில் அச்சம் தரும் சொப்பனங்கள் பல கண்டு மயங்கி வீழ்ந் தான். அவன் எழுந்ததும் அவன் கண்படலம் மறைக்கப் பட்டிருந்தது. விடிந்ததும் தெரியவில்லை. எல்லாம் இருள் மயமாகவே தோற்றமளித்தன. பிழை உணர்ந்தான்; தன்னிடம் முதல்நாள் வேலைபார்த்த இந்துக்களாக உள்ள நல்லவர்களை அழைத்துவரச் செய்து தன் பிழை சொல்லி வருந்தினுன். அதற்கு மாற்று உண்டா? தேவியின் அருள் தனக்குக்கிடைக்குமா என்று இரங்கிக்கேட்டான். அவர்கள்

அந்த நிகழ்ச்சி கண்டு தம்முள் அச்சங்கொண்டாலும் தேவியின் மகிமை உணர்ந்து அந்தப் பிராட்டியை வேண்டிப் பிரார்த்தனைகள் செய்தார்கள். சிலநாட்களில் அவன் கண் வேறெந்த சிகிச்சையும் இன்றியே தெரியத் தொடங்கியது. நல்ல பார்வை வந்தவுடனே அந்தக் கோயிலுக்கு வந்து வணக்கம் செலுத்திப் பெரும் பிரார்த்தனைகளை இந்து முறையில் செய்வித்தான். அவ்வாலயத்தை அப்படியே விட்டுவைத்துச் சாலை அமைத்தான். எல்லோருக்கும் முன்போலவே வேலையும் கொடுத்தான். ஊதியமும் அவர்களுக்கு அதிகம் கொடுக்கச் செய்தான். தன் வேலைக்காலம் முடிந்து ஓய்வு பெற்ற பிறகு அந்த அம்பிகையின் அடியார்களுள் ஒருவனுகி அங்கு தங்கித் தன் வாழ்நாளை வழிபாட்டில் கழித்தான்.

சாதனங்கள் :

இதுபோன்ற பல நல்ல அனுபவங்கள் பெற்று 3—7—1959 அன்று வெள்ளிக்கிழமை அவ்வூரைவிட்டுத் தனி உந்தூர்தியில் கயிலை யாத்திரை தொடங்கினேம். இதன் இடை நடுவில் யாத்திரைக்கு வேண்டிய கம்பளிகள், கம்பளிச் சட்டைகள், மழைக் காலச் சட்டைகள், மிதியணிகள், உணவுப் பண்டங்கள், மருந்துச் சரக்குகள் எல்லாம் வாங்கிச் சேமித்துக்கொண்டோம். இரண்டுமாதத் தங்கலுக்கு 10, 12 பேர்களுக்குச் சேமித்ததில் மூட்டைகள் அதிகமாயின. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களால் அழைத்துச் செல்லப்பெற்றோர் பதின்மர். மலையாளம் உத்தரப்பிரதேசம் மகாராஷ்டிரம் குஜராத் வங்காளம் முதலிய பல நாடுகளிலிருந்தும் உடன் வந்தவர்கள் பதினேவர் ஆக இருபத்தைந்து பேருக்கும் உதவிக்காக உடன்வந்தவர்கள் எல்லோருக்குமாக மூட்டைகள் அதிகம்

சேர்ந்துவிட்டன. பேருந்து ஒன்று போதவில்லை. இரண்டு தேவையாக இருந்தது.

## பிரார்த்தனைக் கூட்டம்:

யாத்திரை தொடங்குவதற்கு முதல்நாள் கீதா சத் சங்கத்தில் ஒரு பெரிய கயிலைப் பிரார்த்தனைக் கூட்டம் நிகழ்ந்தது. அதற்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் தலைமை ஏற்றார்கள். எங்களுடன் வந்த திரு. செட்டியார் திருமுறைப் பாடல்கள் பாடினார். மற்றவர்கள் அவரவர் மொழிகளில் வழிபாட்டுப் பாடல்கள் இசைத்தனர். பிறகு சுவாமிகள் யாத்திரையில் ஏற்படக் கூடிய அனுபவங்களை யும், எல்லோரும் ஒருமுகமாக ஒற்றுமையுடன் இந்தப் பெரிய புனிதப் பணியில் எல்லா இன்பத் துன்பங்களையும் ஏற்று சகோதர உணர்ச்சியில் பழகுதல்வேண்டும். எந்த நிலையிலும் தளர்ச்சியோ விருப்பு வெறுப்போ கொள்ளுதல் கூடாது என்று சொன்னார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத் தைப் பற்றியும் அவர்கள் செய்யும் அருஞ்செயல்கள் பற்றி யும் தருமையாதீனத்தின் பெருமை அதன் ஆட்சியில் உள்ள தலங்களின் பெருமை இவற்றையும் இந்தியில் அங்குக் குழுமியிருந்த மக்களுக்கு விளக்கினார்கள். அடிக்கடி ஜே முழக்கங்கள் ஒலித்துக்கொண்டே இருந்தன. எல்லாம் வடநாட்டு முறையில் அமைந்திருந்தாலும் மனத்தை உருக் குவதாக இருந்தன. கயிலைப் படம் அங்கு முக்கியமான வழிபடுபொருளாக வைக்கப்பட்டிருந்தது என்பது முன்பே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதற்கே எல்லா வழிபாடு களும் செலுத்தப்பட்டன.

## வழியனுப்பு வழிபாடு:

இதன் முடிவில் மறுநாள் காலை மணி 10 அளவில் யாத்திரை தொடங்குவதென்ற உறுதியோடு அன்றிரவு



கயிலாய யாத்திரைக்கு எழுந்தருளிய ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களுக்கு
நைனிடால் கீதாசத்சங்கத்தில் வரவேற்பு



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களுக்கு நைனிடால் ராஜ்ய பாலகர் பர்சனல் சேகரட்டரி திரு. வாலையானந்த நாயனார், திரு. நீலகண்டன் முதலியோர் அளித்த வரவேற்பு

அவரவரும் நற்கனவுகள்கண்டு உறங்கியும் உறங்காமலும் இரவைக் கழித்தோம். அதிகாலையிலேயே கர்மானுஷ்டானங்களைச் செய்து முடித்துக்கொண்டோம். மூட்டைகட்ட வேண்டிய பொருள்களை அடக்கமாகக் கட்டி நிறைசேர்த்து எடைபார்த்து ஏற்றினோம். குறிப்பிட்ட நேரத்தில் உந்தூர்தியும் புறப்பட்டது. அரகர முழக்கம் செவிடுபட அதிர்ந்தது. அவ்வூர் அன்பர்கள் பலர் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திற்கு வழியனுப்பு உபசாரம் செய்ய விரும்பினார்கள். அதற்கேற்ப ஓரிடத்தில் மாடியில் ஏற்பாடுகள் செய்து வைத்திருந்தனர். அங்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை அழைத்துச்சென்று தனியாசனத்தில் அமர்த்தி, அவர்களுக்கும் ஸ்ரீ வித்யானந்தருக்கும் பலவிதத்திலும் ஆரத்திகளும் புஷ்பாஞ்சலிகளும் செய்தார்கள்; பாதபூஜை செய்தார்கள். மாலைகள் அணிவித்தனர். பாதங்களைக் கழுவிய புனித நீரைத் தம் தலையில் தெளித்துக்கொண்டார்கள். உள்ளுக்கும் ஆசமனம் செய்தனர். இந்தியில் தோத்திரப்பாடல்களை இசைத்துக்கொண்டே இவை நிகழ்வதாயின.

இதைக் கண்டு உருகாதவர் எவரும் இருக்கமுடியாது. பிரார்த்தனைப் பாடல்களைப் பஜனை முறையில் பலர் சேர்ந்து பாடினார்கள். பிறகு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திற்கும் சுவாமிகள் அவர்களுக்கும் கற்பூர ஆரத்தி செய்து திலகம் இட்டு வீழ்ந்து வணங்கி கண்ணீர் பெருக்கி வழியனுப்பினார்கள். இதில் எல்லாப் பருவத்தினரும் கலந்து மிக மனக்கனிவோடு செய்தார்கள். எல்லோருக்கும் இனிப்புப் பண்டங்கள் சா - தேநீர் பானங்கள் - முதலியன வழங்கினார்கள். ஒவ்வொருவரையும் ஆண் பெண் வேற்றுமையின்றித் தொட்டுத்தொட்டு வணங்கி எல்லோருக்கும் இளஞ் சுமங்கிலிகள் குங்குமமும் அட்சதையும் சந்தனமும் கலந்து திலகமிட்டு வழியனுப்பினார்கள். அவர்கள் வாய்கள்

தோத்திரப் பாடல்களைப் பாடிக்கொண்டே இருந்தன. ஆனால் அவர்கள் மெய்மறந்து கண்ணீர் பெருக்கி உருக்கமாக நின்ற நிலை எங்கள் எல்லோரையும் உருக்கிவிட்டது.

## நாயனரின் சேவை :

இந்த எல்லா வழிபாடுகளிலும் கூட்டங்களிலும் நாயனர் அவர்களும் நீலகண்டனும் மனம் நெகிழ்ந்து உடன் கலந்துகொண்டதோடு பிரியாவிடைபெற்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை வழியனுப்பிய காட்சி என்றும் மறக்கமுடியாத ஒன்று. முன்பின் அதிகம் பழக்கமில்லாவிட்டாலும் பழகிய ஒரு சில நாட்களில் அவர்கள் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திடம் மிக அதிகமான ஈடுபாடு உடையவர்களாக ஆகிவிட்டார்கள். மற்றவர்களுக்கும் அவர்கள் உற்ற நண்பர்களாக எல்லா உதவிகளையும் செய்து கொடுத்தார்கள். மிக எளிய முறையில் உடன் வந்து, இராஜ்யபாலகர் இதற்கெல்லாம் அனுமதி கொடுத்தனுப்பியதோடு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் யாத்திரை எல்லாவகையாலும் வெற்றிகரமாக அமையவேண்டி இந்திய எல்லையில் எல்லா உதவிகளும் செய்யும்படியும் அரசாங்க உதவியாக செய்யக்கூடியதைச் செய்யும்படியும் வானொலியில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் கயிலைச் செலவைக் குறித்துச் செய்திகள் கிடைக்கும்பொழுதெல்லாம் செய்தி சொல்லும்படியும் உத்தரவிட்டிருந்தார்கள் இதனல் யாத்திரை வழியில் பிறகு பல நலன்களை அதிகாரிகள் மூலம் பெற்றுக்கொள்ள வசதியாக இருந்தது. இந்த முதல் தொடக்கமே யாத்திரை வெற்றிக்கு அடிகோலியதாக ஆகிவிட்டது. இவ்விதமாக நயினிதாலில் எல்லாச் சிறப்புக்களும் பெற்று நாங்கள் புறப்பட்டோம். நயினிதாலில் உதவிகள் அனைத்தும் திரு. நாயனர் அவர்களின் முயற்சியால் கிடைத்தவை.

## அல்மோரா வழியில் :

வழியில் போவாலி ( Bhowali ) 5700' இது ஒரு சுகாதார வாசஸ்தலம். இங்கு ஆப்பிள், பியர்ஸ், பீச் போன்ற சிறந்த பழவகைத் தோட்டங்கள் பலவுள்ளன. இதற்கடுத்து மலையுச்சிச் சுகாதார விடுதி ( Hillcrest Sanatorium ) என்றதோரு இடமும் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இதனருகில் அரசாங்கத் தேனீ வளர்ப்பு ஆராய்ச்சி நிலையம் ஒன்று இருப்பதாகத் தெரிகிறது. அங்கே தேனீ வளர்ப்பு, பயன் தரும் வகையில் தேனெடுப்பு முறை இவைபற்றிய சிறந்த ஆராய்ச்சிகள் நடத்தப்படுகின்றன. போவாலிக்கு அருகில் 5 கல் தொலைவில் பீம்தளம் என்றதோரு ஏரி இருப்பதாகவும் அந்த இடம் மிக அழகாக இருக்குமென்றும் சொல்லப்படுகிறது. மேலே கறம்பாணி. இந்தியில் உள்ளதை மொழி பெயர்த்துப் பார்த்தால் அவ்வூர் வெந்நீர் என்ருகும். ஆனுல் அதற்கு மாருக அதுவும் 6000 அடி உயரத்தில் அமைந்த ஊர்; வெப்பம் தெரியாது - குளிர்ச்சியாக உள்ள ஊர்தான். பலவகைப் பழங்களும் கிடைக்கும். அங்கே எல்லா உந்தூர்திகளையும் நிறுத்தி ஏதாவது சிற்றுண்டி எடுத்துக்கொண்டுதான் செல்லுகிருர்கள் பிரயாணிகள்.

## ரானிக்கெட் :

கறம்பாணியிலிருந்து இவ்வூர் 18 கல் தொலைவு. நகரமைப்பு உடையது. இராணுவப் படைத்தளம். இங்கே பல சிறந்த பழத்தோட்டங்கள் இருக்கின்றன. ஆப்பிள், பீச், பியர்ஸ் முதலிய நல்லவகைப் பழங்கள் விளைகின்றன. இவை உலகில் சிறந்த பழவகையைச் சேர்ந்தவை என்று பலரும் வாங்குகிருர்கள். இந்நாட்டில் பல இடங்களுக்கும்

இங்கிருந்து இப்பழங்கள் அனுப்பப்படுகின்றன. மண்வளம், வேப்பதட்ப நிலை அவ்வளவு சிறந்ததாக இருக்குமென்று சொல்லப்படுகிறது. பால் கறவையும் இங்கு அதிகம். இங்கிருந்து நயினிதால் போன்ற வெளியிடங்களுக்கும் லாரிகளில் பால் அனுப்பப்படுகின்றன. இங்குள்ள மலைச் சிகரங்களில் இருந்து பார்த்தால் இமயப்பகுதியின் பல பனிமலைக் கோடுமுடிகள் காட்சி அளிக்கின்றன. இங் கிருந்து கர்ணப்பிரயாகை வழியே பதரி செல்லும் பாதை ஒன்றும் இருக்கிறது. இவ்வூருக்கு வராமலே கறம் பாணியிலிருந்தே நேரே அல்மோராவுக்குச் செல்லப் புதிதாக ஒரு ஆண்டுக்குமுன் நல்ல சாலை அமைக்கப்பட்டு முடிந்திருக்கிறது. அவ்வழியாகவே எங்கள் உந்தூர்தி சென்றது. ஆகையால் நாங்கள் ரானிக்கேட்டைப் பார்க்கும் வாய்ப்பைப் பெறவில்லை.

## மலைக்காட்சிகள் :

நயினிதால் - அல்மோரா வழி மலைப் பகுதிகளிலே பல மலைகளைக் கடந்து செல்லவேண்டியதாக உள்ளது. வழியில் பல ஏற்றங்களும் இறக்கங்களும் இருக்கின்றன. ஓக், தேவதாரு, சால் முதலிய பல மரங்களும் வானோங்கி உயர்ந்து நிற்கின்றன. பல மலை ஓடைகள் தாராக்களம் (நீர் ஊற்றுக்கள் வழிந்து விழுமிடங்கள்) சிற்றாறுகள். அங்கங்கும் மலை உச்சியிலிருந்து அடிவரை படிப் படியாக வயல்வெளிகள். நடுநடுவில் ஒரு சில மலை நாட்டு அமைப்பில் வீடுகள்; (முன்றடுக்குள்ளவை) ஓடும் உந்தூர்தியிலிருந்து பார்ப்பதற்கு மலை உச்சிகளும், படிப்படியாக வயல்களும், நடுநடுவே வீடுகளும், அங் கங்கும் உயரமாக வளர்ந்து நிற்கும் சில மரங்களும், உச்சியிலிருந்து படிப்படியாக உள்ள வயல்களில் வழிந்து

சலசலவென ஓடிவரும் சிறுசிறு அருவிகளும், சாலை ஓரங்களில் ஆறுகளும், அருவிகளும், நீரூற்றுக்களும், இவ்விதமாகக் காட்சிகள் பல ஓடிக்கொண்டே இருப்பது போலத் தோன்றும். இது படக்காட்சி பார்ப்பதை ஒத்து அமைந்து அவ்வழிச் செல்வோருக்குக் களைப்புத் தெரியாமல் பரவசமூட்டிச் செல்லும். கலைப்பித்து உள்ளவர்கள் அவ்வழியே சென்றால் வேகமாக வண்டிகளைச் செலுத்த ஒப்பமாட்டார்கள். அங்கங்கும் நிறுத்தி நிறுத்தித்தான் செலுத்திச் செல்வார்கள். சில இடங்களில் தங்கியே விடுவார்கள். அதை விட்டு அகல மனமிருக்காது அவர்களுக்கு. இதே நிலை நல்ல படித்த இயற்கையை அனுபவிக்கத் தெரிந்த கவிவாணர்களுக்கும் ஏற்படும். ஓவியர் கைவண்ணத்தில் அதைக் குழைத்தெடுத்துக்கொடுக்க வேண்டும் அல்லது அக்காட்சியைக் கண்டு களித்துக் கவிவாணர்கள் அவற்றை உயிருள்ள காவியங்களாக்கி மக்களைக் கனவுலகில் மிதக்கவிடவேண்டும். மற்ற யாராலும் அந்த அழகை அப்படியே எழுதிக்காட்ட இயலாது. மழைக்காலங்களிலும் மற்றக் காலங்களிலும் அம்மக்கள் மலை ஊற்றுக்களை அங்கங்கே தடுத்து வாய்க்கால் வகுத்து அவைகளின் வழியே ஓடவிட்டிருப்பதும், அடிகளில் ஓடும் ஆறுகளை மலைப்பகுதிகளில் உயரமான இடங்களிலிருந்து சிறு சிறு வாய்க்கால்கள் கட்டி பிரித்தெடுத்து அவைகளின் வழியே தங்கள் வயல்களுக்குப் பாய்ச்சுவதும் அந்தத் தண்ணீரைக்கொண்டு மாவரைக்கும் இயந்திரங்களை ஓட்டிப் பயன் பெறுவதும் அந்நாட்டு மக்களின் செயல் திறமையையும் அறிவுக் கூர்மையையும் நன்கு எடுத்துக்காட்டும். இவை அவர்களின் உழைப்பையும், நல்லதிறமையான அனுபவ முதிர்ச்சியுள்ள பாசன அமைப்புக் கலைஅறிவையும் காட்டும்.

இவ்விதமாக அம்மக்கள் தண்ணீரையும் நிலப்பகுதியையும் மலைப்பகுதியையும் எந்த அளவு பயன்படுத்தமுடியுமோ அந்த அளவு சிறப்பாகப் பயன்படுத்திக்கொண்டிருக் கிறார்கள். இவர்களைப் போலவே அங்குள்ள ஆடுமாடு களும் மலை உச்சிகளில் அச்சமில்லாமலும், அவற்றிற்கு எவ்வித ஊறுபாடுகளும் நேராது சமதரையில் செல்வது போல ஏறிச் சென்று மேய்ந்துவருவதைக் காண நமக்கு வியப்பூட்டுவதாக இருக்கும். சில இடங்களில் அவை நிற்பதைக் கண்டால் அந்த இடத்திற்கு அவை எவ்விதம் ஏறிச்சென்றிருக்க முடியும்; கேடில்லாது திரும்ப எவ்விதம் கீழே இறங்கி வந்துசேரும் என்றே நாம் அஞ்சு வோம். நடுவில் ஒரு சில கல் தொலைவு வரை நாங்கள் சென்ற பாதையை ஒரு வழிப்பாட்டையாக அமைத்திருக் கிறார்கள். அங்கு இரு வழியாகவும் செல்ல வேண்டிய வண்டிகள் அகலமான ஒரு நடுவிடத்திற்கு வந்து சேர்ந்து நின்று இருவழியாலும் அந்தத் தொகுப்புக்கள் முழுவதும் வந்த பிறகே சாலை திறக்கப்படுகிறது. இது எல்லா மலைப் பாதைகளிலும் இருக்கும் ஏற்பாடுதான். எல்லோரும் துன்பம் இல்லாது செல்லவேண்டியதற்கான ஏற்பாடுங் கூட. இவ்விதமாக நல்ல காட்சிகளைக் கண்டு அனுப வித்துக்கொண்டே அல்மோராவுக்குப் பிற்பகல் மூன்று மணி அளவில் வந்து சேர்ந்தோம்.

### அல்மோரா :

ஊரை அணுகியதுமே நல்ல குளிர்ச்சியும் அமைதியும் உள்ள ஊர் இது என்பது நமக்குத் தெரியக்கூடியதான அமைப்புக்களை உடையதாக இருக்கிறது. இது ஒரு மாவட்டத்தின் தலை நகரம். கார்வால், நயனித்தால், அல்மோரா சேர்ந்த பகுதி குமாவூன் பகுதி என்று

சொல்கிறார்கள். இது கூர்மப் பகுதி என்பதன் திரிபு. அல்மோரா கூர்மாசலம் என்ற பழைய பெயர் உடையது. கூர்மத்தைத்தான் அவர்கள் குமாவூன் என்று சொல் கிறார்கள். இது உலக நிலப்பகுதியில் மிகப் பழமையானது, இமயம் ஒரு காலத்தில் ஆழ்கடலின் கீழே இருந்தது என்றும், பிறகு ஒரு ஊழியில் அது மேலே வந்து நிலப் பகுதியோடு சேர்ந்தது என்றும் சொல்லிவருவதற்கு ஏற்ப இது முதலில் வெளிவந்த பகுதி என்று கூறு கிறார்கள்.

கூர்மாசலம் :

பத்மகல்பத்தின் முடிவு வராககல்பத்தின் தொடக்கம் பூமி எரிந்து சாம்பலாகி நீரில் அமிழ்ந்துவிட்டது. அதைக் கண்ட பிர்ம்மா நீரிலே (கடலிலே) சயனித்திருந்த மகா விஷ்ணுவினிடம் சென்று பெருமானே பூமி கடலுக்குள் அமிழ்ந்துவிட்டது. அதை மேலே எடுத்து வந்து காத் தருளவேண்டும் என்று வேண்டிக்கொண்டார். மகா விஷ்ணு கூர்மத்துக்கு அடுத்த வராக அவதாரம் எடுத்து கடலுக்குள் பாதாளம்வரை சென்று பூமியை மீட்டுத் தம்முடைய மூக்கின்மீது கோரைப்பற்களின் நுனியில் தாங்கி வந்து கடலுக்கு மேலே கப்பல் போல மிதக்க விட்டார். இவ்விதமாகப் பூமி புனருத்தாரணம் ஆயிற்று. இது கூர்ம புராணத்தில் சொல்லப்பட்டிருப்பது இதில் சொல்லப்படும் பிர்ம்மா பத்ம கல்பத்திலும் வராக கல் பத்திலும் இருந்தவர். இதற்கு முந்திய கல்பகாலத்தி லிருந்தே கல்பகாலங்கடந்து தங்கிய பகுதி என்றும் அது கூர்ம கல்பமாகியபடியால் கூர்மாசலம் என்றும் கர்ண பரம்பரைச் செய்தி சொல்கிறது. கூர்மாவதார மூர்த்தி இங்கே அருகில் ஒரு ஆலயத்தில் எழுந்தருளி

இருப்பதாயும் சொல்லப்படுகிறது. இதைப் பூதத்துவ ஆராய்ச்சியாளர்களும் ஒப்புக்கொள்கிறார்கள். அதற்குச் சான்று சொல்லக்கூடியதாகக் கடலில் வாழ்ந்த பிராணி களின் உருவங்கள் மண்ணுள்ளே கிடந்து கல்லான (Fossils) பலவும் எடுத்துப்பார்த்து இவ்வளவு ஆண்டுகள் ஆகியிருக்கலாம்என்று கண்டுகணக்கிட்டுச்சொல்கிறார்கள்.

## தலை சிறந்த இடம் :

இக்கூர்மப்பகுதி இந்தியாவில் - உலகத்துக்கே ஒரு சிறந்த பகுதி என்று சொல்லலாம். இப்பகுதியில்தான் தெய்விக நதிகளில் கங்கையும் யமுனையும் உற்பத்தி யாவதும், பதரி கேதாரம், ஹரித்துவாரம், ரிஷிகேசம் ஜாகேஷ்வரம் வைத்யநாதம். சோமேஷ்வரம், பாகேஷ் வரம், கௌசானி, முதலிய பல பெருந்தலங்களும் இருப் பதுவுமாகும். இது ஒரு தெய்விகபூமி. மக்களும் இன்றும் நல்லபக்தி உடையவர்களாக இருக்கிறார்கள். சாதுக்களிடம் அவர்களுக்கு அன்பு அதிகம். ரிஷிகேசப் பகுதி போல இந்த ஊர்ச் சூழல் நல்ல அமைதி தருவதாக இருக்கிறது. ஆகவே பலரும் இங்குத் தங்கித் தவம் பெருக்குகிறார்கள். அமைதியை - சாந்தியைத் தேடி வருவோர் இங்கு வருகிறார்கள். அதுவே ஆன்ம சாந்திக்கு வழிதேடித் தருகிறது. நல்ல பெரியவர்கள் பலர் வாழும் பகுதி இது. இங்கு இராமகிருஷ்ண மடாலயமும் இருக்கிறது. அந்த மடத்தைச் சேர்ந்தவர்கள் நல்ல தொண்டு செய்து வருகிறார்கள். கயிலை யாத்திரை செல்வோருக்கு எல்லா உதவிகளும் செய்துகொடுக்கிறார்கள். வழிகாட்டிகளாகச் சில சாதுக்களைக்கூடச் சேர்த்து அனுப்புகிறார்கள். இது வல்லாது தனித்தனி குடில்கள் அமைத்துக்கொண்டு சாதுக்கள் பலர் தவம் பெருக்கி நிற்கிறார்கள். அவர்களில்

பலர் பல முறை கயிலை சென்று வந்தவர்கள். ஆண்டு தோறும் செல்வதென்ற நியதியை உண்டாக்கிக்கொண்டு அதனை நிறைவேற்றி வருபவர்கள் பலருமிருக்கிறார்கள். இவ்வூர் கடல் மட்டத்திலிருந்து 5494 அடி உயரம் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். தொடர்மலைகள் இந்த இடத்தில் ஆங்கில எழுத்தில் K போன்ற அமைப்பில் அமைந்திருக்கின்றன. நகரத்தில் படிப்படியாகத் தெருக்களும் வீடுகளும் பல ஆஸ்ரமங்களும் அமைந்திருப்பது நல்லதொருகாட்சி.

## கோட்டைகள் :

இது பழைய சந்திர வம்ச அரசர்களின் ஆட்சியிடமாக இருந்திருக்கிறது. அவர்கள் சென்ற நூற்றாண்டில் 1845 வரை ஆண்டு வந்திருக்கிறார்கள். பிறகு ஆங்கிலேயர் அவர்களை ஓட்டிவிட்டு இதைப் பிடித்துக்கொண்டார்கள். அவர்கள் கட்டி வாழ்ந்த கோட்டைகள் (Fort Monte) இரண்டு இங்கிருக்கின்றன. அவற்றில் இப்பொழுது அரசாங்கக் காரியாலயங்கள் சிலவும், பள்ளிக்கூடங்கள் சிலவும் வைத்திருப்பதாகச் சொல்லப்படுகிறது.

## கயிலை வழியில் :

கயிலைக்கு மிலத்து வழியாகவும், கர்ப்பியாங் வழியாகவும் செல்வோர் இங்கு வந்துதான் போதல்வேண்டும். அதற்கு வேண்டிய எல்லா வசதிகளும் இங்குக் கிடைக்கின்றன. வழிகாட்டிகள், உடைவகைகள், உணவுப் பண்டங்கள், மூட்டை தூக்கிகள், குதிரை முதலிய வாகனங்கள், கூலி அமர்த்திக்கொடுக்கும் நிலையம், அரசாங்க யாத்திரீகர் செய்தி நிலையம் முதலிய எல்லாம் இங்கே இருக்கின்றன. பெரிய கடைத்தெருவும் இருக்கிறது.

நல்ல பழவகைகளும் காய்கறிகளும் கிடைக்கின்றன. பல ஊர்களுக்கும் செல்ல உந்தூர்திகளும் கிடைக்கும். மலை வழி திறந்ததும் பல பூட்டிய வியாபாரிகள் தீபேத்துப் பகுதிக்கு இங்கிருந்து செல்கிறார்கள். அவர்களுக்கு உதவியாகப் பொருள்களைச் சுமந்து செல்லும் யாக்குகள், ஜப்புகள், குதிரைகள், ஆடுகள் முதலியன ஏராளமாகக் கிடைக்கும். மூட்டை தூக்கும் தொழிலில் ஈடுபடும் கார்வாலிகள், பகாடியர், நேப்பாளிகள் முதலிய பலரும் அந்தக்காலங்களில் இங்கு வந்து கூடுவர். சில திபேத்தியரும் இங்கு வந்து சேர்வர். குளிர்காலம் வந்ததும் அவரவரும் தத்தம் ஊருக்குச் சென்றுவிடுவார்கள்.

வாணிபம் :

மலைப் பகுதி மக்களுக்கு இதுதான் மிகப் பெரிய ஊர். இங்கு உணவுப் பண்டங்களை வாங்கவும், அவர்கள் ஊர்களில் உள்ள விளைபொருள்கள் கம்பளி ஆடைகள், ஆட்டு உரோமம் முதலிய செய்பொருள்களை விறகவும் இங்கு வருகிறார்கள். இவ்வூரில் மிகச் சிறந்த கம்பளி ஆடைகளும், போர்வைகளும் நெய்யப்படுகின்றன. அவற்றுள் துல்மா மிகச் சிறந்தது. அந்தப் போர்வை ஒரு பக்கத்தில் மட்டமாகவும் மறு புறத்தில் தேங்காய்ப் பூத்துவாலை போலவும் நெய்யப்பட்டிருக்கும். பெரும் வசதியுள்ளவர்கள் தாம் அதை வாங்க முடியும். விலை அதிகம். ஆனால் அதைப் போர்த்திருந்தால் எந்தக் குளிரும் உள்ளே புகமுடியாது. இவையல்லாமல் கீழே போட்டுக்கொள்ளக்கூடிய தள விரிப்புக்கள் கம்பளியில் மிக அழகாக நெய்யப்படுகின்றன. அரசாங்கக் கம்பளி நெசவுப் பயிற்சிச் சாலையும், அதற்கு ஒரு ஆராய்ச்சிக் கூடமும் இங்கிருக்கின்றன.

## சிறப்புக்கள் :

உலகில் மிகச் சிறந்த கால்நடை மருத்துவச்சாலைகளுள் இதனருகில் முக்தேஸ்வரத்தில் உள்ளது ஒன்று. அது சென்ற நூற்றாண்டில் நிறுவப்பட்டது. வேதாந்தம் பயில விரும்புவோரும், இராமகிருஷ்ண மடத்தைச் சேர வருவோரும் வேதாந்தம் பயிலும் மாயாவாத வேதாந்தக் கல்லூரி இதிலிருந்து 50 கல் தொலைவில் இருக்கிறது. அங்கு சுவாமி விவேகாநந்தா இருந்து வாழ்ந்ததாகவும் சொல்கிறார்கள்.

## ஆலயங்களும் தெய்விக இமயக் காட்சிகளும் :

இவ்வூரில் நந்தாதேவி, திரிபுரசுந்தரி, பாதாளதேவி சியாஹீதேவி, கசார்தேவி முதலிய தேவி ஆலயங்களும் சில சிவ விஷ்ணு ஆலயங்களும் இருக்கின்றன. மாத அஷ்டமி நாட்களிலும், நவராத்திரிக் காலத்தில் வரும் மகா அஷ்டமி அன்றும் தேவி ஆலயங்களில் மிகச் சிறந்த முறையில் வழிபாடுகள் நாள் முழுவதும் நடைபெற்றுக்கொண்டே இருக்குமாம். இதுவல்லாமல் இங்குள்ள (Janta) ஜண்டா மலை உச்சியிலிருந்து பார்த்தால் இமயப் பகுதியில் நந்தகுண்டி, நந்தகோட், நந்தா தேவி, திரிசூலி, பஞ்சசூலி, கேதாரநாதம், சௌக்கம்பா, நீலகண்டம், காமேட், கௌரி பர்வதம், ஹத்திபர்வதம் (யானைமலை), நால்புவா, அப்பி, நாம்பா முதலிய பல பனிபடர் மலைக்கோடுமுடிகள் நல்ல வெய்யில் நேரத்தில் மேகமூட்டமில்லாத நாட்களில் பார்க்கக்கூடியதாக இருக்கும். பின்சார் என்ற சுகாதார வாசஸ்தலமும் இதனருகில் இருக்கிறது.

### வெள்ளையர் :

பல வெள்ளையர்கள் கூட இந்த இடத்தின் அருகில் வந்து நம்நாட்டு முறையில் ஆசிரமம் அமைத்துத் தங்கித் தவம் செய்துவருகிறார்கள். அதில் சிறந்தது (Panwanaula) - பான்வாநௌலா - (உத்தர பிருந்தாவனம்) அருகில் உள்ள பிரேமகுடீரம். அங்கு கிருஷ்ணர் திருவுருவொன்றமைத்து வட மதுரையில் உள்ளதைப் போன்ற வழிபாடுகள் செய்து வருகிறார் ஒரு வெள்ளையர். அவர் இதன் மூலம் சில தெய்விக அனுப பவங்களைக் கண்டறிந்ததாகவும் சொல்லப்படுகிறது. அந்த இடம் ஒரு தெய்விகக்களை பொருந்தியதாகவும், அமைதி பரப்பக்கூடியதாகவும், பார்க்க மிக அழகாகவும், பழத் தோட்டங்கள் நிறைந்ததாகவும் இருக்கும் என்று சொல்லப் படுகிறது. ஒரு மலை உச்சியில் அமைந்திருப்பதால் அங்கே சூரியனும் குளிர்ந்து தண்ணொளி பரப்புவான் என்றும் சொல்லப்படுகிறது. இவ்விதமாக அது எல்லா விதத்திலும் ஒரு பிரேமகுடீரமாகவே விளங்குகிறது என்று சொல்கிறார்கள் அங்குச் சென்று கண்டு வந்தவர்கள்.

### தண்ணீர் வசதி :

இவ்வூரில் நல்ல சிற்றோடைகளும், தாராக்களும், சான்வால் என்ற சிறு நதியும் உண்டு. மலைமீது அமைந்த நகரமாதலால் தெருவெல்லாம் ஏற்றமும் இறக்கமுமாகவே இருக்கும். சமவெளி இடங்களில்லை. இரவில் மின்னொளி யில், வானத்தில் ஒரு விண்மீன் கூட்டமும், மலைப் பகுதியில் கீழே (Electric Lights) விண்மீன் கூட்டங் களுமாக நகரம் தெய்விகக் காட்சி அளிக்கும்.

**அதிகாரப்பத்திரம் :**

இந்த அழகிய சிறந்த ஊருக்கு மாலே 3 மணி அளவில் வந்துசேர்ந்தோம். ஊர்நுழைவிலேயே இம்மாவட்டத்தின் ஆணேயர் (Commissioner) இருக்கிறுர். அங்கு எங்கள் உந்தூர்தியை நிறுத்திவிட்டு சுவாமி வித்யாநந்தா அவர்கள் அவரிடம் சென்று ஒரு அதிகாரப் பத்திரம் வாங்கிவந்தார்கள். அதன்படி வழியில் உள்ள அரசாங்க அதிகாரிகள் அவரவரால் முடிந்த எல்லா உதவிகளேயும் செய்யும்படியும் ஆங்காங்குமுள்ள அரசாங்கக் கட்டிடங்களே உபயோகித்துக்கோள்ளவும் சலுகைகள் கிடைத்தன. இந்த இராஜ்ய பாலகரின் மூலம் எங்களுக்குக் கிடைத்த முதல் பேரிய உதவி இது.

அல்மோடா :

இதைப் பேற்றுவந்த மகிழ்ச்சியில் அந்த சுவாமிகள் கைலாஸ்க்கே ராஜா ஹம்க்கே ராஜா என்றுமுழங்கினுர்கள். மேலும் "இந்த ஊரில் அவரவரும் சிற்றுண்டிகளும் தேநீர்ப்யானமும் எடுத்துக்கோள்ளலாம். இதைத் தாண்டினுல் வண்டி ஜாகேஷ்வரத்தில்தான் நிற்கும். வழியில் நல்ல வசதி கிடைக்காது. ஆகவே அல்மோடாவிலே உண்டு மகிழவும்" என்ருர்கள். "அல்மோராவைத் தாங்களும் அல்மோடா என்று கோச்சையாகச் சோல்கிறீர்களே" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "இது முன்காலத்தில் மலேக்காட்டுப் பகுதியாகவே இருந்தது. இங்குப் பலரும் ஆடு மாடுகளே ஓட்டிவந்து மேய்த்துப் போவார்கள். அவ்விதம் மேய்க்கவந்த ஒருவன் பசி போறுக்காமல் இங்கு மிகுதியாக உள்ள ஆடு என்ற ஒரு வகைப் பழங்களே உண்டுவிட்டான். இதனுல் அவனுக்கு

வயிற்றுவலியும் வயிற்றுப்போக்கும் உண்டாகிவிட்டது. அத்துன்பம் தாங்காது அவன் இப்பகுதியை ஆடுமோடா என்று கூவினுன். அன்றிலிருந்து அது ஆடுமோடாவாக இருந்து, பின்பு அல்மோடாவாகத் திரிந்துவிட்டது. அதனையே நீங்கள் அல்மோரா என்று சொல்கின்றீர்கள். ஆங்கிலத்தில் அவ்விதமே உச்சரிக்கப்படுகிறது '' என்று விளக்கம் சொன்னுர்கள்.

## அல்மோடா பால்மிட்டாய் :

அல்மோரா சென்று வந்தேன் என்று யாராவது சொன்னுல் ; '' அதற்குச் சான்று என்ன '' என்று கேட்பார்கள். '' அல்மோடா பால்மிட்டாய் தின்றேன் '' என்று சொல்லவேண்டும். '' அதை ருசிபார்க்கவில்லை '' என்ருல் அல்மோடாவுக்கு அவர் போகவில்லை என்றே சொல்வர். அவ்வளவு சிறப்புடையது அப்பணியாரம். வேல்லப்பாகில் பணியாரம் செய்து அதன்மீது உறைந்து காய்ந்த சீனிப் பாகை உடைத்து வெள்ளையாகத் தூவிவைத்திருக்கிருர்கள். அது ஒரு இனிப்புப் பண்டந்தான். வடநாட்டினர் இனிப்பென்ருல்தான் அதிகம் விரும்பி வாங்குவார்கள். எங்களில் பலரும் வாங்கி உண்டோம். தேன்னுட்டவருக்கு அது அதிகம் பிடிக்காது. ஆனுலும் பால் மணமும் உடையது. இதுபோன்று நாக்குக்கும் நல்ல ருசி கண்டு அல்மோராவைவிட்டு நாங்கள் ஜாகேஷ்வரத்தை நோக்கி மாலை நான்குமணி அளவில் புறப்பட்டோம்.

## ஜாகேஷ்வரம் வழி :

பித்தர்கோட் சாலையில் படேச்சீனு, பானவ்நவ்லா வழியாக ஜாகேஷ்வரம் அல்மோராவிலிருந்து 18 கல்

தோலேவு. படேச்சீனுவில் சிறிய கடைத்தெரு ஒன்றிருக்கிறது. தண்ணீர் வசதி பெற்ற சிறிய ஊர்தான். அங்கே தங்குமிடங்களும் கிடைக்கும். பானவ்நவ்லா தாண்டியதும் உந்தூர்தி இரண்டு மூன்று கல் தோலேவு ஒரு மலேயின் உச்சிக்கோட்டிலேயே செல்லுகிறது. இது ஒரு அழகிய காட்சி. இதுவரை இவ்விதமான நல்ல அனுபவம் ஏற்படவில்லே. வேறெங்கும் கிடைக்காத அரியகாட்சிகள் அங்குக் கிடைக்கின்றன. இதுமலேயுச்சிவழியாகவேஇருபுறமும்பசிய சரிவுகளும், பள்ளத்தாக்குகளும், அடுத்தடுத்து நீண்டு கிடக்கும் மற்ற மலேத் தொடர்க் காட்சிகளும், தோலேவிலே பனிபடர் சிகரங்களும் மெய்ம்மறக்கச்செய்வன்வாக இருக்கின்றன. எல்லா மலேப்பகுதிகளிலும் வயல்களும், அங்கொன்று இங்கொன்ருக மலேநாட்டு வீடுகளும், அங்கங்கும் வானேங்கி வளர்ந்துநிற்கும் உயர்வகை மரங்களும் முன்னேசொன்ன காட்சிகளுக்கு அழகூட்டி மனத்தைப் பிணித்துநிற்கச் செய்யும். இவ்விதமாக 12 கல் தோலேவு சென்ற பிறகு அந்த வழியில் வடக்கே திரும்பி ஒரு சிறு பாதையில் தேவதாரு பயின் மரக்காடுகளினூடே 6 கல் தோலேவு செல்லவேண்டியிருக்கிறது ஜாகேஷ்வரத்துக்கு. இது அண்மையில் புதிதாக அமைக்கப்பட்ட வழி. நல்ல உறுதியான பாலங்கள் இல்லே. மரப்பாலங்கள்தாம். ஆகையால் உந்தூர்திகள் மிகவும் மெதுவாகவும், நிதானமாகவும் செல்லவேண்டியிருக்கிறது. மாலே 6-30 மணிக்கு நாங்கள் ஜாகேஷ்வரம் சென்றடைந்தோம்.

அப்பொழுதும் அங்கு நல்ல வெளிச்சம் இருந்தது. நாங்கள் அங்குச் செல்லுவதற்கு முதல்நாள் அங்கு மழை பெய்திருந்தது. அதுவும் வழியில் வேகமாகச் செல்ல முடியாதபடி தடைசெய்தது எங்களே.

## பயின்மரப் பயன் :

அல்மோராவிலிருந்து வரும் வழியில் பயின் மரங்களை ஒழுங்காக நட்டு வளர்த்துவருகிறார்கள். மலைச்சரிவு களில் படிப்படியாக வளர்ந்திருப்பதே அழகாக இருக்கிறது. அவற்றிலிருந்து அரசாங்கத்தார் கற்பூரத்தைலம் வடித் தெடுத்து விற்பனைக்கு வெளியே அனுப்புகிறார்கள். இதற் காக ரப்பர் மரங்களில் பால் வடித்தெடுப்பதுபோல இம் மரங்களிலும் பல இடங்களில் மேற்பட்டையைச் சீவிவிட்டு அதன் பிசின்கொண்டே அப் பள்ளங்களில் தகரக்கிண்ணங் களைப் பதித்துவைத்து அவற்றில் வடியும் தைலத்தை எடுத்துச் சேகரித்துப் பிறகு பெரிய தகரங்களில் சேர்த்து அடைத்து அனுப்புகிறார்கள். இவ்விதம் சேகரம் செய்யும் கற்பூரத்தைல பீப்பாய்கள் அங்கங்கும் வெளியிடங்களில் அடுக்கிவைக்கப்பட்டிருக்கின்றன. அங்கே காவலாக யாரும் இருப்பதாகத் தெரியவில்லை. சில இடங்களில் தகரக் கொட்டகைகள் அமைத்து அவற்றில் சேகரித்து வைத்திருக்கிறார்கள். இந்தத் தொழிலில் ஏராளமான ஆண் களும் பெண்களும் ஈடுபடுகிறார்கள். இதைச் சேகரம் செய்வதற்குப் பல ஒப்பந்தக்காரர்கள் அங்கிருக்கிறார்கள். அவர்கள் ஆட்களை வைத்து வேலை செய்து சேகரம் செய்து கொடுத்து அதற்குரிய தொகைகளை அரசாங்கத்தில் பெறு கிறார்கள். இது ஒரு பெரிய தொழிலாக இருக்கிறது.

கற்பூரத் தைலத்தின் உபயோகம் பலரும் அறிந்தது தான். இந்தக் காட்டினூடே செல்லும்பொழுது நறுமணம் வீசுகிறது. தைலம் வடித்தெடுக்கும் இடங்களில் அந்த மணம்தான். இது மனத்திற்கும், மூக்கிற்கும், கண்ணுக்கும், விருந்தாக இருக்கும்.



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களுடன்
நைனிடால் இராஜ்யபாலகர் மாளிகை முன்புறத்தில் திரு. வி. வி. கிரி அவர்கள் குடும்பத்தினர்



ஜாகேஷ்வரத்தில் ஸ்ரீ பாலகைலாயம் ( 6600 அடி )

ஜாகேஷ்வரம் :

ஊர் மிகச் சிறியது. 20, 30 வீடுகளே இருக்கின்றன. அங்குச் சிற்றோடை ஒன்று ஓடுகிறது. பல சத்திரங்கள் கோயிலினருகில் இருக்கின்றன. யாத்ரீகர்கள் அங்குத் தங்கலாம். கடை மாடிகளிலும் தங்கலாம். இரண்டோரு கடைகள் இருக்கின்றன. அங்குத் தங்கினால் கடையில் நமக்கு வேண்டிய பொருள்களையும் வாங்கிக்கொள்ளலாம். சமையலுக்கு வேண்டிய பாத்திரங்கள், பால் முதலியனவும் அவர்களே வாங்கித்தருகிறார்கள். மலைத்தாராவிலிருந்து (ஊற்றுப்பெருக்கு) தண்ணீரை வடித்தெடுத்துக் குழாய் வழியாக எடுத்துச்சென்று மக்களுக்கு வழங்குகிறார்கள்.

இங்கு ஒரு கடை மாடியில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதான மும் அவர்களைச் சேர்ந்தவர்களும், கோயிலின் முன்னுள்ள சத்திரத்தில் சுவாமி வித்யானந்தாவும் அவரழைத்துவந்த வடநாட்டினருமாகப் பிரிந்து தங்கினோம். நாங்கள் சென்ற சிறிது நேரத்தில் மழை தூறத் தொடங்கிவிட்டது. படுக்கை களைமட்டும் காரிலிருந்து இறக்கிக்கொண்டு மற்ற பொருள் கள் காரிலேயே விட்டுப் பூட்டிவைக்கப்பட்டன. காரோட் டியும் அவர் உதவியாளரும் காரிலேயே படுத்துக்கொண் டார்கள். நாங்கள் தங்கியிருந்த கடையிலே ரவையும் பாலும் வாங்கி அன்றிரவு பலகாரம் செய்து உண்டு உறங் கினோம். அன்று மாலையில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் திருமஞ்சனமானதும் ஆலய தரிசனத்துக்கு எழுந்தருளி னார்கள். எல்லோரும் உடன்சென்று வழிபட்டு வந்தோம். மறுநாட் காலையில் பெருமானுக்குச் சிறப்பாக வழிபாடுகள் செய்து வழிபட்டு மேலே செல்வதென்ற திட்டத்தோடு ஓய்வுகொண்டோம்.

## ஜோதிர்லிங்கம் :

இப்பகுதிகளில் இது துவாதச ஜோதிர்லிங்கங்களுள் நாகேசம் எனக்கருதப்படுகிறது. 'தாருகாவனே நாகேசம்' என்று அந்த ஸ்லோகத்தில் வருகிறதல்லவா? தாரு என்ருல் தேவதாரு. அந்த வனத்தில் எழுந்தருளியுள்ள பெருமான் நாகேசன். அவனே ஜாகேசன். அதுவுமல்லா மல் இமயத்தில்தான் சிறப்பாக முனிவர்கள் தங்கித் தவம் இயற்றுகிருர்கள். அதுவும் சப்த ரிஷிகள் பலரும் இப்பகுதிகளில் தங்கித் தவமியற்றிஞர்கள் என்ற சான்று களும் இங்கே உள்ளன. ஆகையால் அந்தத் தாருகா வனம் என்பது இதுவாகத்தான் இருக்கவேண்டும் என்ற காரணங்கள் சொல்லப்படுகின்றன. தட்சிணத்தில் உள்ள தாகச் சொல்லப்படும் இடத்தில் தேவதாருவும் கிடையாது, இது போன்ற ரிஷிகள் வாழத்தக்க இடமாகவும் இல்லே என்ற மறுப்பையும் சொல்கிருர்கள்.

மேலும் இத்தலம் பாலகயிலாயம் என்றும் சொல்லப் படுகிறது. கயிலாய யாத்திரை செல்வோர் முதலில் இங்கு வந்து வழிபட்டுப் போவதே சிறந்தது என்றும் சொல்கிருர்கள். ஆகவே யாத்திரைத்தோடக்கம் முறையாக இருத்தல்வேண்டும் என்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருவுளம். படே மகந்துவான இவர்கள் சொல்லும் வழி யிலே செல்லுதல்தான் சிறப்பாகும் என்று வடநாட்டுப் பகுதியினரும் சொல்லிவிட்டார்கள். ஆகையால்தான் எங்கள் யாத்திரை இவ்வழியே செல்வதாகத் திட்டமாயிற்று.

## திருக்கோயில் :

ஜாகேஷ்வரர் மேற்கு முகமாக எழுந்தருளியுள்ளார். அதை விசுவநாதர் என்றும் சொல்கிருர்கள். இதுவல்லாது

மிருத்யுஞ்சயர் என்னும் மூர்த்தி கிழக்குமுகமாக எழுந்தருளியிருக்கிறது. புஷ்டிதேவி, நவக்ரகங்கள் சூரியன் முதலிய மூர்த்திகளுக்கும் தனித்தனிக் கோவில்கள் இருக்கின்றன. இங்குள்ள ஜாகேஷ்வரர் பாலஜாகேஷ்வரர் என்பதாகவும் இவ்வூருக்கு ஒன்றரைக் கல் தொலைவில் உள்ள ஆலயத்தில் விருத்த ஜாகேஷ்வரர் எழுந்தருளி இருப்பதாகவும் இதுபோன்றே அதுவும் சிறப்புடைய தலந்தான் என்றும் சொல்லப்படுகிறது. இங்கு மகாசிவராத்திரி அன்று மக்கள் ஆயிரக்கணக்கில் இரவும் பகலும் வழிபட்டு நிற்பர். அதேபோல வைசாக பூர்ணிமாவிலும் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுமாம். கூட்டமும் அதிகமாக இருக்குமாம். தீர்த்தம் பிரமகுண்டம், பாபவிமோசனம்.

கோயில் இப்பொழுது புதைபொருள் இலாகாவினரின் மேற்பார்வையில் இருக்கிறது. மிகப் பழைய கோவில். சிதைந்தும் காணப்படுகிறது. இங்கு ஆதிகாலத்தில் தேவச் சிற்பியான விச்வகர்மாவினால் ஆலயம் எழுப்பப்பட்டது. மிருத்யுஞ்சயர் ஆலயம் விக்ரமாதித்திய மா மன்னனால் கட்டப்பட்டது. பின்பு காலத்தால் சிதைவுற்ற இக்கோவிலைச் சாலிவாகனப் பேரரசன் புதுப்பித்துக் கட்டிப் பிரதிஷ்டை செய்தான். ஆதி சங்கரர் இங்கு வந்து வழிபட்டுத் தங்கியிருக்கிறார், அவர் காலத்தில் இங்கு வழிபாட்டு முறைகளை ஒழுங்குபடுத்திவைத்துச் சென்றதாகவும் சொல்லப்படுகிறது.

அதற்குப் பிறகு, இப்பகுதியை ஆண்டு வந்த இந்து மன்னர் பரம்பரையைச் சேர்ந்த கட்யூரி மன்னர்கள் பலர் திருப்பணிகள் செய்து கும்பாபிஷேகம் முதலிய பல சிறப்புக்கள் செய்திருக்கிறார்கள். அவர்கள் இக்கோவிலில் ஈடுபாடு மிக உடையவர்கள். அவர்கள் பரம்பரையினர் நீண்ட காலம் இதைக்கட்டிக் காத்து வந்திருக்கிறார்கள்.

## பிரார்த்தனே :

பெருமானுக்குப் பஞ்சகவ்யம், பால். தயிர், தேன். நேய், சர்க்கரை அபிஷேகம் சிறப்புடையது. அவர வரும் வேண்டிக்கோண்டு தண்ணீராலும் வெந்நீராலும் பெருமானுக்குத் திருமஞ்சனம் சேய்வித்தலும் உண்டு. இது ஒரு பேரிய பிரார்த்தனே ஸ்தலம். பிள்ளேப்பேறு இல்லாத பேண்கள் பலர் இங்கு வந்து பெருமானே வேண்டிப் பல பகல் இரவு அவரவர் பிரார்த்தனேக்கேற்ப ஆற்றில் குளித்துத் தலேமுழுகி நெற்றியில் குங்குமம் இட்டுப் பேருமான் சந்நிதியில் கையில் விளக்கேந்தி நிற்பார்களாம். பிரார்த்தனே முடித்து வீட்டுக்குச் சென்று அங்குச் சில வழிபாடுகளும் செய்து முடிப்பார்களாம். அவர்களுக்கு உறுதியாகப் பிள்ளேவரம் கிடைப்பதாக அம்மக்கள் சோல்கிருர்கள். நம்புகிருர்கள். சேங்கிருர்கள். புயனும் பேறுகிருர்கள். இங்கு விளக்கேற்றிவைப்பதால் அவர்கள் வீட்டில் என்றும் மங்காமல் விளக்கோளி எரிந்துகோண்டே இருக்கிறது. பல்வளமும் பேருக வாழ்க்கையும் வளம்பேறுகிறது.

## அதிசய விளக்கு :

பெருமான் சந்நிதியில் கையில் மார்புக்கு நேரே விளக் கேந்திய வண்ணம் நிற்கும் மன்னர் திருவுரு வேண்கலத் தால் ஆகியதோன்று இருக்கிறது. அக்காலத்தில் அந்த விளக்குத் தலேக்கு மேலே இருந்ததாகவும், இப்போழுது அது மார்புவரை இறங்கி வந்திருப்பதாகவும், இப்படியே அது கோஞ்சம் கோஞ்சமாகக் கீழே இறங்கிக்கோண்டே வருவதாகவும், அது எப்போழுது அந்த உருவத்தின் காலளவு வந்து கழன்று போகிறதோ அந்தக்காலத்தில்

அந்த உருவத்தில் நிற்கும் மன்னனுக்குச் சாபவிமோசனம் என்றும் சோல்லப்படுகிறது.

## ரித்புரி முனிவர் :

அவன் பௌண்ட்ர பரம்பரையைச் சேர்ந்த உத்யோக சந்த் மகாராஜா என்னும் பெயருடையவன். சந்திர வம்சத்து மாமன்னன். அவன் ஆட்சிக் காலத்தில் ரித்புரியிலிருந்து மகான் ஒருவர் அவன் சபைக்கு வந்தார். அவன் கையில் ஒளியுள்ள மோதிரம் ஒன்றிருப்பதைக் கண்டார். அவன் அம்மோதிரத்தை எப்போழுதும் விரும்பி அணிந்துகோண்டே இருப்பான். இரவும் பகலும் அதைக் கழற்றுவதே கிடையாது. அந்த ஆசைப் போருள், வந்த சந்நியாசியின் கண்ணைக் கவர்ந்தது. அம்மன்னன் உலகியல் இன்பங்களிலே அதிகமாக மனத்தைச் செலுத்தி அதிலே ஈடுபட்டான். அறத்தையும் மறந்தான். ஆட்சியையும் மறந்தான். அவனுக்குப் புத்திபுகட்டவே அம்முனிவர் அவன் முன்னிலையில் வந்தார். அதை அவன் அறியவில்லை. அவன் ஆட்சிக் காலத்தில் ஆலயங்கள் செம்மையாகப் பரிபாலிக்கப்படவில்லை. அவன் சென்ற வழியிலே மக்களும் மனந் திரிந்து செல்வாராயினர். எல்லாவற்றிற்கும் மேலாகச் சிறப்பு மிக்க இவ்வாலயம் புறக்கணிக்கப்பட்டது. அதனுல் சிதைந்து கேட்டது இக்கோயில். இதை எல்லாம் கண்டு முனிவர் மனம் வருந்தியது. இதற்காகவே முனிவர் மன்னனிடம் வந்தார்.

## மோதிரம் :

சிறிது நேரம் மன்னனே உற்றுநோக்கி நின்ருர். அவர் தன்னிடம் எதை விரும்பி வந்திருக்கிருர் என்று கேட்டான் மன்னன். 'அம்மோதிரம் வேண்டும்' என்ருர்

முனிவரர். மன்னன் மனம் பதைத்தான். தான் அருமையாக அணிந்திருக்கும்தன்னை என்றும் பிரியாத மோதிரத்தையல்லவா முனிவர் கேட்டுவிட்டார். இல்லை. கொடுக்க முடியாதென்ருல் முனிவர் கோபத்துக்கு ஆளாகநேருமே என்று அஞ்சி வருந்தி முடிவில் அதைக் கழற்றிக் கொடுத்துவிட்டான். இருந்தாலும், இதை அவர் என்ன செய்கிருர் என்பதைக் கண்காணிக்க அவர் பின்னே ஆட்களை அனுப்பினுன். பெரியவர் அதைப் பெற்றுவந்து இக்கோயிலினருகில் இருந்த பெரும்பள்ளத்தில் இறங்கி விட்டார். பிறகு காணவில்லை. இச்செய்தி மன்னனுக்கு அறிவிக்கப்பட்டது. மன்னனின் முனிவும் எல்லையற்றதாகி விட்டது. அப்பள்ளத்தில் மண்ணை இட்டு நிரப்பி அம் முனிவரை உயிரோடு புதைத்துவிடும்படி உத்திரவிட்டான். அவ்விதமே அவர்களும் செய்தார்கள், ஆனுல் முனிவரோ ஹரித்துவாரத்தில் ஒரிடத்தில் வெளியே வந்து நின்ருர். இச்செய்தியும் மன்னன் காதுக்கெட்டியது. அதை அறிந்த மன்னன் ஒடோடியும் அவர் இருக்கும் இடத்துக்கு வந்தான். இக்கோயில் வழியாகவும் சென்ருன். நல்ல ஆட்சியில்லாததால் வரும் வழியிலெல்லாம் மக்கள் படும் துன்பமும் அறநிலையங்கள் அழிந்துநிற்பதும் எல்லாம் கண்டும் அவன்மனத்தில் அவை பதியவேயில்லை. அவன் மனத்தைப் பெரிதும் கவர்ந்துநின்றது அம்மோதிரமே.

விளக்கீடு :

நிலையில்லாத ஒரு இன்பத்தைத் தவிர மற்றேதுவும் அவன் மனத்தைக் கவராததைக் கண்ட முனிவர் அவனைச் சண்டாளனுகும்படிச் சபித்தார். இது தெரிந்தவுடனே மன்னன் அறிவு பெற்றுப் பெரிதும் வருந்தினுன். பிழை உணர்ந்தான். முனிவரிடம் மன்னிப்பு வேண்டி நின்ருன்.

மனமிரங்கிய முனிவர் "நீ ஜாகேஷ்வரர் கோயிலேத் திருத்தித் திருப்பணி செய்து கும்பாபிஷேகம் செய்துவை. நித்தியநைமித்திகங்களே முறையாக நடத்திவா. இது போலவே எல்லா அறநிலேயங்களும் இனியாவது செம்மைப் படட்டும். உன்னேத் திருத்திக்கொண்டு, நிலேயில்லாத இன்பங்களில் உன் மனத்தைச் செலுத்தாது அறவழியில் செலுத்து. அடியவர்களுக்கு அன்னமிடு. எளியவர்களேக் காத்து அவர்களுடைய துன்பம் துடைத்து வாழ்வாயாக. முடிவில் ஜாகேஷ்வரத்தில் பெருமான் சந்நிதியில் உன்தலே யில்தீபமேந்திநின்று என்றும்மங்காமல் எரித்துக்கொண்டே இருத்தல் வேண்டும் எப்பொழுது உன் கால் அளவுக்கு அந்த விளக்குத் தாளுக இறங்கி வந்து உன்னேவிட்டுக் கழன்று போகிறதோ அன்றுதான் உனக்குச் சாபவிமோச னம்" என்று சொல்லித் தவம் மேற்கொண்டுசென்ருர். அம்மன்னனும் முனிவர் சொற்படியே எல்லாம் செய்து அறவழியில் நின்று ஆட்சி செலுத்தி வந்தான். இங்குச் சுவாமிசந்நிதியில் தன்தலேமீது விளக்கேந்தி ஒளிமங்காமல் எரித்துவந்தான். அந்தத் திருவுருவமே இப்பொழுது வெண்கலமாக இக்காலத்துக்கு ஏற்ப விளக்கேந்தி நிற்கி றது. விளக்கும் முனிவர் சாபத்திற்கு இணங்கவே சிறிது சிறிதாக மேலே இருந்து அவன் மார்பு வரை இறங்கிவந் திருக்கிறது. இனியும் அது இறங்கிவரும். மன்னன் சாப விமோசனம் பெற்றுப் பெருமான் திருவடி நீழலே அடைந்து உய்வான் என்று புராணச் சிறப்புச்சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இத்தலத்தில் விளக்கிட்டார் மெய்ந்நெறி ஞானம் பெற்றுச் சிவனடி நீழலில் தங்கி இளேப்பாறுவர்.

**பரோரா :**

சங்கரர்வந்த காலத்தில் இவ்வாலயத்தில் வழிபாடுகள் முறையாக நடைபெறவில்லே. சங்கரர் மனம் நெகிழ்ந்தது.

அப்போழுது தேன்ஞட்டிலிருந்து குமாரசுவாமி என்னும் சங்கமர் இக்கோயில் தரிசனத்துக்கு வந்திருந்தார். அவர் பரிபக்குவம் தேரிந்து சங்கரர் அவரையே இக்கோயில் பூசகராக நியமித்தார். பூசாமுறைகளேயும் அவருக்கு உணர்த்தி, அங்குத் தங்கி வழிபாடுகள் செய்து வரும்படிப் பணித்துச்சேன்ருர். அத்திட்டப்படியே அச்சங்கமரும் வழிபாடுகளே நடத்திவருங்காலத்தில் இம் மலேநாட்டு மங்கை ஒருத்தி இங்கு வழிபாட்டுக்கு வந்தாள். அவள் அழகில் சங்கமர் மயங்கிக் கருத்தழிந்தார். காமுற்று அவளேக் கூடிஞர். அவர் முன் மேற்கோண்ட ஆஸ்ரமத்தையும் மறந்தார். துறந்தார். அவளோடு கூடி இல்லற வாழ்க்கையே நடத்தவும் தலேப்பட்டார். அவருக்குப் பிள்ளேகள் பிறந்து குடும்பம் பேருகியது. அப்பேரியவரோடு வந்த தேன்ஞட்டவர் பலரும் அங்கேயே தங்கினர். அக்குடும்பங்கள் இப்போழுது பரோராக்கள் ( Baroras ) என்று அழைக்கப்படுகின்றன. பரோரா என்பது படுக் என்பதன் சிதைவு. படுக் ( Batuk ) என்ருல் சந்நியாச விருதம் கேட்டவருக்குப் பிறந்தவர்கள் என்று போருள். அம்மக்கள் எளிய நிலேயிலேயே இப்போழுதும் வாழ்ந்து வருகிருர்கள். அந்தப் பரம்பரையினரே இப்போழுதும் இக்கோயிலில் பூசகர்களாக - பண்டாக்களாக இருந்துவருகிருர்கள்.

## சிற்பம் ;

இக்கோயிலில் சிற்பவேலேப்பாடுகள் மிகச் சிறந்ததாக இருக்கிறது. புராதனச் சிற்பச் சேல்வம் மலிந்தது இது. இங்கும் அக்காலத்திய வேறியாட்டங்கள்! நடைபேற்றிருக்கின்றன. அதன் விளேவாக பல அழிந்த சிற்பச் சேல்வங்கள் அங்கே காணக்கிடக்கின்றன. புதைபோருள்

இலாகாவினர் அவற்றையெல்லாம் சேமித்து வைத்துக் காத்துவருகிறார்கள்.

அண்மையில் :

இதனைவிட்டு 4, 5 கல் தொலைவில் உள்ள தவளச் சீனாவைச் சென்றடைந்தால் அது கர்ப்பியாங் வழியில் சென்று சேரும். மேலும் இவ்வூருக்கு அருகில் கங்கோலிஹாட் (Gangolihat) என்ற தலமும் இருக்கிறது. அங்கு உள்ள தேவி பிரசித்திபெற்றது. மகாகாளியாக அம்பிகை அருள்வழங்குகிறாள் அங்கே. நவராத்திரிக் காலங்களில் துர்க்காஷ்டமி அன்று பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் அங்குக்கூடி வழிபட்டு மகிழ்வர். அதற்கருகில் பாதாளபுவனேசுவரர் என்னும் சிவதலம் இருப்பதாகவும், அங்குள்ள குகையில் மகாபாரதக் கதைகளை ஓவியமாகத் தீட்டி இருப்பதாகவும், அச்சித்திரங்கள் பண்டைப் பெருமையை விளக்கிநிற்பதாகவும் சொல்லப்படுகிறது. குகைகுடைந்து அதில் ஓவியங்களைத் தீட்டி வைக்கும் பழக்கம் அக்காலத்தில் நிலவியது என்பதற்கு அஜந்தா போன்ற சிறந்த குகைச் சிற்பங்கள் சான்று பகர்ந்து நிற்பனபோல இந்நாட்டு ஓவியப் பழங்கலை அங்கேயும் சிறந்து நிற்கிறது என்றும் சொல்லுகிறார்கள். பாதாளபுவனேசுவரத்துக்கு அருகில் நாகர்கள்நாடுகள் பல இருந்ததாகவும் சொல்லப்படுகிறது. வாசுகிநாக், பேரிநாக், பிங்கலநாக், காலநாக், வேணிநாக் என்று பல. பேரிநாக்குக்கு அருகில் பத்ராவதி பத்ரகாளி என்ற அருவி மிகப்பெரிய அளவில் பெருகி மலையிலிருந்து வழிவதாகவும், அதற்குமேலே உள்ள கோயிலில் பத்ரகாளி மிகச் சிறப்பு வாய்ந்தவள் என்றும் சொல்லுகிறார்கள். சாண்டில்ய பக்தி சூத்திரம் செய்த சாண்டில்ய மாமுனி வாழ்ந்து தவம் பெருக்கிய அவரது ஆஸ்ரமம் சனிஉட்யார் என்ற பெயரோடு அங்கிருக்கிறது.

பதிகச்சிந்தனை :

அதிகாலையில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் திருஞ்சனமாகி ஆன்மார்த்த வழிபாடுகளை முடித்துக் கொண்டு திருமுறைப்பாராயணம் செய்ய முற்பட்டார்கள். அன்று பாராயணத்துக்கு வந்தது ஒவ்வொரு பாட்டு முடிவிலும் 'வெள்ளியங்குன்று அமர்ந்தாரே' என்று வரும் திருத்தேங்கூர்த் திருப்பதிகம். இது திருஞானசம்பந்தப் பெருமான் அருளிச் செய்தது. இது பாலகயிலாயமாக உள்ள இப்பெருந்தல வழிபாட்டுக்காலத்தில் வந்தது தனிச்சிறப்புப் பெற்றது என்று ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் திருவுளம் பற்றினார்கள். திருத்தேங்கூர் இறைவர் வெள்ளியங்குன்றமர்ந்தார். வெள்ளியங்குன்று என்பது கயிலைமலை. வெள்ளிமலைநாதன் கயிலைநாதன். கயிலை யாத்திரையின் முதற்படியில் பாலகயிலாயத்தில் அக்கயிலைநாதன் திருப்பெயர் தாங்கிய பெருமான் உறையும் தலப்பதிகம் உணர்ச்சியை மிகைப்படுத்துவதாக வந்தது. இவ்விதம் வாய்த்த அந்தக் கயிலையின் வெள் ளியங்குன்றமர்ந்தார் புகழ் பாடும் பதிகம் வந்திருப்பது, திருவருள் நம்மைத் துணையிருந்து அழைத்துச்செல்கிறது என்பதற்கு அறிகுறியாகும். பதிகத்தின் சிறந்த பயன் நம் பழவினை, பாவம்பாற்றி நம்மைத் தூயராக்கித் திருவடிக்கீழ் பெருமான் ஏற்றுக்கொள்கிறான் என்பதாகும். அதற்காக அவன் காத்துநிற்கிறான். நெறிகொள் சிந்தையராகி நினை பவர் வினைகெட நின்றுளான். அதுவும் தொல்லை வல்வினை பண்டு நான்செய்த வினைகள். ஓர் அருள் நெறி பயப்பான். அவன் புரைகொள் வினை தீர்க்கும் புண்ணியன். ஆகை யால் ஏத்துமின். விடங்கொள் வல்வினை தீர்ப்பான்; அவன் பந்தமாயின பாவங்கள் பாறுதல் (அழிதல்)

திண்ணம் என்று அறுதி யிட்டுக் கூறுகிறார் திருஞான சம்பந்தப்பெருமான். இப்பதிகம் முழுவதிலும் பழவினை, நிகழ் வினைகள் எல்லாம் பெருமான் திருநாமத்தை நினைபவர் களையப்பெறுகிறார்கள். அவற்றைப் பெருமான் நின்றழித்துக் காத்துத் தன்னிடம் சேர்த்துக்கொள்கிறான் என்பதையே வலியுறுத்துகிறது. பெருமான் திருவுருவச் சிந்தனையும், அவன் புகழ்கள் பலவும் இப்பதிகத்திலே விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. கயிலை யாத்திரை யின் பயனும் அதுவே. ஆகையால் பெருமான் இங்கேயே நமக்கு அருள்வழங்கி அழைத்துச் செல்கிறான். அவன் அழைக்கும் வழியிலல்லாது வேறுவிதமாக நம்மால் செல்ல இயலுமோ" என்ற சிறந்த சிந்தனை ஒரு அரு ளுபதேசமாக எல்லோருக்கும் கிடைத்தது.

திருமுறைப்பாராயணத்துக்குப் பிறகு ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் ஆலய தரிசனத்துக்கு எழுந்தருளினார்கள். இறைவன் ஜாகேஷ்வரன். ஆவுடையார் பெரிதாகவும்ஆனால் பூமிக்குள் முழுவதும் பதிந்ததாகவும், இலிங்கப் பகுதி மிகச் சிறிதாயும், நான்கு ஐந்து அங்குல அளவு உயரமே உள்ளதாகவும் காட்சி வழங்குகிறான். அபிஷேக ஆரா தனைகள் சிறப்பாக நிகழ்த்தப்பட்டன. எல்லாவற்றையும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் தாமே செய்து மகிழ்ந்தார்கள். அங்கு எல்லோரும் பெருமானைத் தொட்டு வழிபடலாம். திருமுறைப் பாராயணமும் நிகழ்ந்தன. நாங்கள் எல்லோரும் பெருமானைத் தொட்டு வழிபட்டோம். முன்னே சொல்லியிருக்கும் வெண்கலப் பொம்மை விளக்கும் அங்கே நின்றிருப்பதைக்கண்டோம். சாதுக்கள் பலர் அங்கே வழிபாட்டுக்கு வந்து அவ்வாலயத்திலேயே தங்கி இருக்கிறார்கள்.

அட்டைக் கடி :

தேவதாரு மரங்கள் அங்கு அடர்ந்து நெருங்கி வளர்ந்திருக்கின்றன என்பது முன்னே சொல்லப்பட்டு இருக்கிறது. அவற்றின் இலைகளும், காய்ந்த சருகுகளும் எங்கும் இறைந்துகிடக்கின்றன. மண்ணில் படிந்து பெய்யும் மழைகளில் மடித்து மண்ணோடு கலக்கின்றன. அத்தழைகள் அவ்விதம் மடித்துப்போவதால் அதிலிருந்து அட்டைப் பூச்சிகள் உண்டாகிப் பெருகி வளர்கின்றன. மற்றைப் புழுப் பூச்சிகளும் அதிகம் உண்டாகின்றன. அவை தெருக்களிலும் ஆலயத்துட்புறத்திலும் என் பெருமான் சந்நிதியில் எப்பொழுதும் தண்ணீர் தேங்கி நிற்பதால் அங்கேயும் இருக்கின்றன; வந்துவிடுகின்றன. அட்டைகளுள் மிகவும் கொடிய விஷத்தன்மை உடையவை களும் உண்டு என்று சொல்லப்படுகிறது. அவை நம்மைக் கடித்த இடத்திலேயே தோலைத்' துளைத்துக்கொண்டு உட்புகுந்து இரத்தத்தில் கலந்து இரத்த ஓட்டத்தைத் தடைப்படுத்தி புரையோடச் செய்துவிடும். அப்பொழுது எந்தப் பகுதியில் அவை உள்ளே புகுந்திருந்தாலும் அப்பகுதியை வெட்டி அப்புறப்படுத்தாவிட்டால் உயி ருக்கே ஆபத்து விளைக்கும் என்றும் சொல்கின்றார்கள். நயினிதாலில் ஓய்வுபெற்ற துணைத் தண்டல் நாயகம் ஒருவர் தன்னுடைய பதவிக் காலத்தில் இப் பகுதி களில் முகாம் இட்டிருந்தபோது இது போலத் தமக்கு ஏற்பட்டதையும், அதனால் அவருடைய காலில் ஒரு சிறிது வெட்டி எடுக்கும்படி ஏற்பட்டதையும் காட்டி விளக்கிச் சொன்னார்கள். அட்டைகள் பொதுவாக நம்மீது ஏறுவதும் கடித்து இரத்தத்தை உறிஞ்சுவதும் நம்மால் எளிதில் அறிந்துகொள்ளமுடியாது. மிகச் சிறியதாக சிறு நூல்போல உள்ள அப்பூச்சி நம்மீது பட்டு இரத்தத்தை

உறிஞ்சியதும் அரைக்கால் அங்குல, பருமனும் ஒன்று அல்லது ஒன்றரை அங்குல நீளமும் உள்ளதாக ஆகி விடுகிறது. எவ்வளவு அதிகமாக அவைகளால் இரத்தத்தை உறிஞ்சமுடியுமோ, அந்த அளவு உறிஞ்சிவிட்டு, வாய் வழியே இரத்தம் வேளிவரும்போழுது அவை தாஞகவே கழன்றுவிடுகின்றன. அவை கழன்ற பிறகும் அவை கடித்த இடத்திலிருந்து இரத்தம் பீறிட்டுக்கோண் டிருக்கும். அவை நம்மீது கவ்விக்கோண்டிருக்கும்போழுது பிடுங்கி எடுத்தாலும் அப்பகுதியிலிருந்து இரத்தக் கசிவு ஏற்பட்டுக்கோண்டே இருக்கும். சில வேளைகளில் அப் பூச்சி மிக உறுதியாகக் கவ்விக்கோண்டிருப்பதால் துண்டாகி வாய்ப்பகுதிமட்டும் நம் உறுப்புக்களில் தங்கி விடுவதுமுண்டு.

மாற்று மருந்து :

இரத்தக் கசிவுக்கும், அப்பூச்சியை அகற்றுவதற்கும் புகையிலைத்தூள் அல்லது உப்புப்போடி இவற்றில் ஒன்றை அந்த இடத்தில் தூவுதல்வேண்டும். புகையிலைத்தூள் நம்மில் சிலர் பயன்படுத்தும் மூக்குப்போடியாக இருந் தால் மிகவும் நல்ல பலனை எதிர்பார்க்கலாம். அதைத் தூவிய உடனே அப்பூச்சி மயங்கித் தானே கழன்று விழுந்துவிடுகிறது. கடித்த இடத்திலேயும் அத்தூளை வைத்து நன்ருக அழுத்திவிட்டால் இரத்தக் கசிவும் நிற்கும். இதுவல்லாது கடிக்காமலே காத்துக்கோள் வதற்குக் கிருமிநாசினியான டேட்டாலை (Dettol) எடுத்துக் கால் பகுதிகளில் பூசிக்கோண்டால் அந்த மருந்து வேகம் - நாற்றம் இருக்கும்வரை பூச்சி நம்மை அணு காது. ஆனல் அது காற்பகுதிகளில்தான் படும் என்று சோல்லமுடியாது. அவை சேடிகளின் இலை நுனிகளிலும்

ஏறிக் காத்து நிற்கும். பக்கத்தில் நாம் போன உடனே தாவிவந்து நம்மீது விழும். மயிர் நுழையக் கூடிய அளவு இடைவெளியிருந்தாலும் அது வழியாக நுழைந்து கடிக்கத் தொடங்கிவிடும். காலில் மிதியணி அணிந்திருந்தாலும் அதற்கு இடும் கயிற்றுத் துவாரத்தின் வழியேயும் நுழைந்துவிடும். காலுறை இட்டு மிதியணி அணிந்திருந்தாலும் உள்ளே புகுந்து அந்தக் காலுறையின் துணியையும் போத்துக்கொண்டு கடித்துநிற்கின்றன. இது அனுபவத்தில் கண்டது. பூச்சி கடிக்காமல் வழிச் செல்லவேண்டுமானுல் இப்பகுதிகளில் நடை வேகமாக இருத்தல்வேண்டும், சகதி, சேறு உள்ள பகுதிகளில் கால் படாது செல்லுதல் வேண்டும். இவ்விதம் நடந்துசென்ருல் ஓரளவு தப்பலாம். ஆனுல்இந்த யாத்திரையில் அடையாளத் துக்கு அனுபவம் தெரிய ஒன்றிரண்டு கடிக்காவிட்டால் இப் பகுதி வழியே சென்ருேமோ என்று பிறர் ஐயங்கொள்ள இடமேற்படுமே என்று அவை கடித்துவிடும். இது போதுவாக மலைப்பகுதிகளில் 4000 அடி உயரத்துக்கு மேல் 8000, 9000 அடிவரைகூட இருக்கலாம் என்று சொல்லப்படுகிறது. இவ்வனுபவம் எங்களில் பலருக்கும் இந்த மாபெருந் தலத்திலேயே கிடைத்துவிட்டது. இதி லிருந்து பல நாட்கள் இந்தத் துன்பம் மிகுதியாகவே இருந்தது. அங்கங்கும் மழையும் பெய்துகொண்டே இருந்தமையாலும் அனுபவம் இன்மையாலும் இப்பூச்சிக் கடியிலிருந்து எங்களால் தப்பமுடியவில்லை.

## காரோட்டியின் திறமை :

இவ்வூர் வழிபாடுகளை முடித்துக்கொண்டு நாங்கள் 11-30 மணிக்கு வந்தவழியே திரும்பி அல்மோரா வந்து சேர்ந்தோம். வரும் வழியில் அந்த நகர சபையாரின்

லாரியும் எங்கள் ஊர்தியும் மோதிக்கொள்ள இருந்தன. எங்கள் காரோட்டியின் திறமையாலே நாங்கள் ஒரு பெரிய ஆபத்திலிருந்து தப்பினேம். எதிரே ஒரு வளைவில் வரும் அந்த லாரி, ஹாரன்சத்தம் கொடாமலும், வேகத்தைக்கட்டுப் படுத்தாமலும் வேகமாக வந்து மூனையில் திரும்பியது. எங்கள் காரோட்டி முறைப்படி சத்தம் கொடுத்துக்கொண் டே வந்ததோடு வேகத்தையும் ஒரளவு கட்டுப்படுத்தி வந்தார். அந்த முனையில் வந்ததும் எதிரே ஒரு லாரி வேகமாக வருவதைக் கண்டதும் அப்படியே காரை நிறுத்தி விட்டார். வந்த லாரிக்காரர் திடீரென்று பிரேக் போட்டு நிறுத்தியதால் வழியைவிட்டுச் சிறிது கீழே அவ் வண்டி இறங்கிவிட்டது. நல்ல வேளையாக அதிகமாக இறங்கிவிடவில்லை. ஆனுலும் நகரத்திலிருந்து உதவி வந்துதான் அவர் அந்த வண்டியைப் பின்னேக்கி எடுத் துச் செல்லவேண்டும். நல்ல காலமாக வழியின் குறுக்கே நில்லாது ஒதுங்கி வழியைவிட்டு முன் சக்கரங் கள் பள்ளத்தில் தொங்கி நின்றன. அங்கு நின்று உதவி செய்வதானுல் எங்கள் வேலை கெடும். அதுவல்லாது வேலை தெரிந்த பலர் வேண்டும். அதற்குக் கயிறு முதலிய பல கருவிகளும் வேண்டும். ஆகவே அதனை அந்த நிலை யிலேயே விட்டுவிட்டு எங்கள் வண்டி மேலே சென்று அல்மோராவை வந்தடையும் பொழுது மாலை மணி 2-30. வந்ததும் எங்கள் காரோட்டி அவர்கள் கடமையின் வழி யில் நகரசபைக் காரியாலயம் சென்று அவர்கள் லாரி இன்ன இடத்தில் இன்ன நிலையில் நிற்கிறது. உதவி தேவை. ஆவன செய்க என்று அறிவித்து வந்தார்.

## துண்டேஷ்வர் :

ஜாகேஷ்வரம் விட்டு நீங்கி ஒரு கல்தொலைவு வந்த தும் சாலையை அடுத்து துண்டேஷ்வர் என்ற தலமும்

கோவிலும் இருந்தன. இதுவும் மிகப்பழைய கோவில்தான், சாலையை ஒட்டி ஒரு சிறு வாய்க்கால். அதை தாண்டியதும் அக்கோவிலை அடையலாம். அவ் வாய்க்காலைத் தாண்டிச் செல்வதற்கு நல்ல பாலம் அமைக்கப்பட்டிருக்கிறது. இது ஜாகேஷ்வரத்துக்கு க்ஷேத்திரபாலகர். துண்டேஷ் வரர் ஆலயம் மூர்த்தி எல்லாம் கேதாரத்தைப் போல அமைந்திருக்கிறது. கோவிலுக்குள் மூர்த்தி இருக்குமிடம் மிகவும் இருட்டாக இருக்கிறது. கைவிளக்கு (Torch Light) இல்லாது போதல் முடியாது. தடுமாறிவிழவேண்டி வரும். பெருமான் சந்நிதியின் ஒரு சிறு அகல் விளக்கு மட்டும் எரிந்து கொண்டிருக்கிறது. அங்குச் சென்று ஸ்ரீலஸ்ரீ குரு மகாசந்நிதானத்தில் வழிபாடுகள் செய்து கேதார நாதனையே நினைந்து தழுவி அகங் குழைந்து நின்று அப்பதிகங்களை ஓதி வழிபாடுகளை முடித்துக்கொண்டு வெளியே வந்தார்கள். உடன் வந்த எல்லோரும் வழி பட்டோம். இதுவும் புதைபொருள் இலாகாவினரால் பரி பாலிக்கப்பட்டு வருகிறது. ஜாகேஷ்வரத்தில் கயிலை மலையானாக, துண்டேஷ்வரத்தில் கேதாரநாதனாகப் பெரு மான் அந்த ஒருநாளிலேயே நின்று அருட்காட்சி நல்கி எங்களுக்கு யாத்திரையில் உறுதி தந்தான்.

## அல்மோராக் கோயில்கள் :

அல்மோராவில் நந்தா தேவி, திரிபுரசுந்தரி ஆலயங் களில் சென்று ஸ்ரீலஸ்ரீ குரு மகாசந்நிதானத்தில் வழிபட் டார்கள். ஆலயங்கள் செம்மையாகப்பரிபாலிக்கப்படுவதன் அறிகுறிகள் காணப்பட்டன. மக்களும் அதிகமாக வந்து வழிபடுவதும் உண்டு. இது முடிந்ததும், சிற்றுண்டிகள் தேநீர் அருந்தி மாலை 4-மணி அளவில் மேலே யாத்திரை யைத் தொடர்ந்தோம். ராணிக்கெட் பாதையில் எங்கள்



ஜாகேஷ்வரத்தில்
ஸ்ரீ ஜாகேஷ்வரரை வழிபடுதல்



துண்டேஷ்வரராலயம்



அல்மோராவில்

திரிபுரசுந்தரி அம்பிகை ஆலயம் ( 5500 அடி )



அல்மோரா நகர அமைப்பு

வண்டி திரும்பியதும் அல்மோராநகரில் பெரும்பகுதியும் தெரியக்கூடியதாக இருந்தது. அந்தக் காட்சி எல்லோருக்கும் பரவசமூட்டிற்று. மலைச் சரிவுகளும் பள்ளத்தாக்குகளும் எங்கும் அடர்ந்த மரங்களும், அவற்றினூடே அழகிய கட்டிடங்களும் நடுநடுவே ஆலயங்களும் உள்ளன. அதோ அந்தப் பள்ளத்தாக்கில் தெரிகிறதே அதுதான் ஜ்யாகரணதேவி ஆலயம். மிகச் சக்தி வாய்ந்த தேவி சந்நிதி அது. மாத அஷ்டமி நாட்களில்கூட இங்கு இரவு பகல் வழிபாடுகள் நடைபெற்றுக்கொண்டே இருக்கும். என்று வித்யானந்தஜீ சொன்னார்கள்.

கோசி:

5 கல் தொலைவு சென்றதும் கோசி நதியைத் தாண்டிச் செல்லவேண்டியிருக்கிறது. அதற்கு உறுதியான பாலம் இருக்கிறது. இந்த நதி கோசிதேவி பெயரால் தெய்விக நதியதாகக் கருதி வழிபடப்படுகிறது. இந்த நாட்டு பூட்டிய வியாபாரிகள் இதைக்கண்டதும் அந்த இடத்திலேயே நின்று தோத்திரம் சொல்லி வழிபட்டுப் பிறகுதான் மேலே வழிச்செல்வார்களாம். பொதுவாகத் தர்மாக்கணவாய்ப் பகுதியில் உள்ளவர்களுக்கு இது குல தெய்வம். காவல்தெய்வம். அடிக்கடி அவர்கள் குடும்பங்களில் ஏதாவது சிறந்த கொண்டாட்டங்கள் நடைபெறுங் காலங்களில் எல்லாம் இத்தேவிக்கு வழிபாடுகள் செய்து, நீண்ட கம்புகளில் கொடிகள் கட்டி ஆற்றின் கரைகளில் நிறுத்தித் தேவிக்குப் பலிகளிட்டு வழிபாடுகள் செய்வார்கள். அந்தத் தெய்விக நதியை நாங்களும் உந்தூர்தியிலிருந்தே கண்டு மனதால் வழிபட்டு மேலே சென்றோம். சோமேஷ்வரத்தை யடைந்தபொழுது மாலை மணி 4-15.

## சோமேஷ்வரம் :

இதுவும் ஒரு பெரும்சிவஸ்தலம். கயிலை வழியில் சேல்வோர் வழிபட்டுச் சேல்லவேண்டியது. ஊர் ஒரு கிராமப் பஞ்சாயத்து. இவ்வாலயத்தில் அமிர்தகுண்டம் என்றொரு தீர்த்தம் இருக்கிறது. நம் பக்கத்தில் உள்ள சிங்கக் கிணறுகள் போல மண்டப அமைப்புடையது. பேரும் ஊற்று. தண்ணீர் குளிர்ச்சியாக இருக்கிறது. நீர் போங்கி வழிந்து ஒரு சிறு வாய்க்கால் போல 4-அடி அகலம் $1\frac{1}{2}$-அடி ஆழம் ஒடிக்கோண்டே இருக்கிறது. அதைக்கண்டவுடன் அங்கு அதில் குளிக்கவேண்டும் என்ற ஆசை எவருக்கும் ஏற்படக் கூடிய அளவு கவர்ச்சிகரமாக இருக்கிறது. ஆலயம் அழகாகவும் நல்ல நிலையிலும் இருக்கிறது. தண்ணீர் குடிப்பதற்கு மிகவும் ருசியாக இருக்கிறது அங்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் திருமஞ்சன மாகி சோமேஷ்வரரைத் தரிசித்தார்கள். மேலே சேல்ல லானோம். சோமேஷ்வரத்தில் நூற்போர் சங்கம் ஒன்று இருக்கிறது. அது நமது நாட்டில் உள்ள பேரிய சங்கங் களுள் ஒன்று. மிகச் சிறந்த முறையிலும் மிகுந்த ஊக்கத் துடனும் நடத்தப்படுவதாகவும் சோல்லப்படுகிறது.

## கௌசானி :

இதற்கடுத்து கௌசானி வழியாகக் கரூர் Garur வைத்தியநாதத்திற்குச் சேன்றோம். கௌசானி என்றதும் நம் பாரதப்பிதா காந்தியடிகளின் நினைவும், அவர்கள் நமக்காக வாழ்ந்துகாட்டிச் சேன்றதும், நம்முள்ளே நினை வில் வந்து நிற்கின்றன. அவர் உலகப் பேரிய அரசியல் வாதி என்றாலும், ஆன்மீக நேறி தவறாது நின்று, ஆன்ம நலம் பேருக்கிக்கோண்ட பேரியார் என்பதையும் யாரும்

மறுக்கமுடியாது. அவர் வாழ்நாளில் எப்போழுதேல்லாம் தம்முடைய ஆன்மபலம் குறைந்திருக்கிறது என்று கண்டாலும் உடனே மௌனத்தவத்தாலாவது அல்லது வேறேவ் வழியிலாவது அதைப் பேருக்கிக்கோள்ளத் தவறுவதே கிடையாது. நான் அரசியல்வாதி. எனக்கும் மதச்சேவைக்கும் தோடர்பு கிடையாது என்ருே, அந்தச்சேவை செய்ய எனக்கு ஒய்வே கிடையாது என்ருே, என்னுடைய கடவுள் வேறு என்ருே அவர் வாழ்நாளில் ஒரு தடவைகூடச் சொன்னது கிடையாது. 'தேய்வீக நேறியில் வாழத் தேரியவில்லையாஞல் இவ்வுலகிலே அவன் வாழத்தகுதியற்றவன். ஆண்டவன் அருள் இல்லாது எந்தக்காரியத்தையும் யாரும் சாதித்துவிட முடியாது. ஆண்டவன் இவ்வண்ணத்தன், இவ்வுருவினன், இப்பெயரினன் என்ற பாகுபாடு வேண்டாம். எங்கும் எல்லாச் சமயத்திலும் அவன் ஒருவனே ஒவ்வோரு பெயரால் நின்று அருள் வழங்குகிருன். ஆகையால் சமயத்தின்பெயரால் பிணக்குவேண்டாம். அதில் நம்முள்காணும் அப்பிணக்கை வேளிநாட்டான் பேரிதும் பயன்படுத்திக் கோண்டிருக்கிருன். அவனுக்கு இடங்கோடுத்துவிடவேண்டாம்'. என்றே உபதேசித்து வந்தார். அவருடைய சுற்றுப்பிரயாணத்தில் இங்குக் கௌசானிக்கு வந்தார். இந்த இடம் அமைந்துள்ள நிலையைக் கண்டார். இங்கேயே தங்கிஞர். ஆன்மயோகம் செய்தார். அப்போழுது தமது அனுபவத்தில் கண்டதை அஞசக்தியோகம் என்ற நூலாக எழுதி வேளியிட்டிருக்கிருர். இங்கே மூன்று மாதங்களுக்கு மேலாகத் தங்கித் தவமியற்றியுள்ளார். அவர் தங்கியிருந்த இடம் இப்போழுது ஒரு பேரிய ஆச்ரமமாக இருக்கிறது. காந்தி அடியவர்கள்- அந்தத் தத்துவத்தைக் கடைப்பிடிக்கும் அன்பர்கள் எல்லோரும் இதை ஒரு யாத்திரைத் தலமாகக் கோண்டு இங்கு

வந்து ஒரு சில நாட்களாவது அந்த ஆச்ரமத்தில் தங்கி யிருந்து போகிறார்கள். காந்தியின் மறைவுக்குப் பிறகு இப்போழுது சமீப காலத்தில் இன்னும் பெருமை மிக்க தாக ஆகிவிட்டது. அவ்விதம் இந்த ஊர் ஒரு தனிச் சிறப்பும் பெற்றுவிட்டது.

தவச்சாலை :

ஊர் ஒரு மலையின் உச்சியில் அமைந்திருக்கிறது. சுமார் 6500 அடி உயரத்தில் இருக்கிறது. ஆகையால் தட்பவெப்பமும் ஒரே சீராக இருக்கும். கோடைவாசஸ்தல மும்கூட. நல்ல பெரிய மரங்கள் அடர்ந்து நிற்கின்றன. தவம் மேற்கோள்ளுவோருக்கு அமையவேண்டிய முறை யில் அமைதியும் அழகும் இங்கே விரவிக் கிடக்கும். ஊரை அணுகியதுமே இங்கே ஒரு தேய்வீகசக்தி இருக் கிறது என்று நம்மை அறியாமலே நம் உள்ளுணர்வு அறிவிக்கிறது. சுற்றுப்புறமும் அதற்கேற்பத் தூயதாக இருக்கிறது. மக்கள் கூட்டமும் அதிகமில்லை. போக்கு வரத்துச் சாதனங்களும் உண்டு. ஆகையால் வேளியிடங்க ளோடு தோடர்பு கோண்டதாகவும், அதே நேரத்தில் சற்று விலகியும் இருப்பதாக அமைந்திருக்கிறது. அல்மோரா வுக்குப் பிறகு இதுதான் உயரமான இடம். தண்ணீர் வசதியும் இருக்கிறது. இங்குள்ள சோலைகளில் நல்ல பறவைகளும் இருக்கின்றன. இந்தப் பெருமைமிக்க கௌசானியை வண்டியிலிருந்தே பார்த்துக்கோண்டு நாங்கள் மேலே சேன்றோம். இங்கிருந்து இமயத் தேய்விகச் சிகரங்கள் பலவற்றையும் காணமுடியும்.

எங்களுக்கு இந்தப் பெருமைகள் தேரிந்ததும் ஒரு புனிதத் தலத்தைத் தரிசித்த பேருமை உண்டாயிற்று. நமது நாட்டின் உயிர் நாடியாக சுதந்திரத்தின் விளக்கமாக

இன்றும் நம் கட்புலனுக்குத் தோன்ருதுநின்று ஆசிவழங்கி நம்மை நன்னேறியில்இட்டுச் சேலுத்திவரும் அப்பேரியவர் வாழ்ந்த இடம் என்றதும் எங்கள் உள் நினைவில் அப்பேரியவர் அங்கே நின்று காட்சி கோடுப்பதாகவே தோன்றியது பலருக்கும். எல்லோரும் மௌனமாகவே அவருக்கு வணக்கம் சேலுத்திச் சென்ருேம்.

## கருட் Garur :

இதைத் தாண்டியதுமே பாதை கீழே இறங்கி இரண்டு மூன்று கல் தோலைவிற்குள் 3000 அடி இறங்கி விடுகிறது. அவ்விதம் வண்டிகள் இறங்கும்போழுது பல வளைவுகளும் சுற்றுக்களும். நமக்கு அச்சம் தருகிறது. ஆனுல் சாலை நன்ருக அமைக்கப்பட்டிருக்கிறது. மூன்று கல் தோலைவு இவ்விதம் இறங்கி வந்ததும் கருட கங்கையைக் கடந்து அந்த ஆற்றின் பேயரால் அமைந்த கருட நகரத்தின் வழியே பைஜ்யநாத், (வைத்தியநாதம்) சென்றடைகிருேம். கருட நகரம் கருட் ஆகி இப்போழுது கரூர் என்று வழங்கப்படுகிறது.

கரூரின் அருகில் உள்ள ரஞ்சல்கோட் (Ranchalkot) என்னும் குன்றின்மீது ஒரு கோட்டையும் அதற்கருகில் பிரமரி (Bramari) தேவி ஆலயமும் இருக்கின்றன. அந்த அம்பிகையைக் கோட்டாதேவி என்றும் அவர்கள் பேயர் சோல்கிருர்கள். கோட்டா என்ருல் அவர்கள் மோழியில் குளிர்ச்சி என்றுபோருள். தண்ணருள்வழங்கும்தேவி அவள். சுற்றுப்புறத்தில் எங்கு இருந்தாலும் அவ்வாலயத்தைக் காணக்கூடியதாக அமைந்திருக்கிறது. அத்தேவியையும் நாங்கள் காரிலிருந்தே மனத்தால் தரிசித்துக்கோண்டோம். கரூர் வழியாக நந்தப்பிரயாகை 46 கல் தோலைவு. அங்கிருந்து பதரி 56 மைல். இவ்வழியாகவும் இப்பகுதி மக்கள்

பதரிக்குச் செல்வதுண்டு. ஆனால் மலை வழி. வாகன வசதி கிடைக்காது மலைவாழ் மக்களுக்கு (பகாடிகளுக்கு) அது ஒரு துன்பம் தரும் வழியல்ல. பழக்கத்தால் அவர் களுக்கு அது எளிதே இந்த வழியே சென்றால் மற்றொரு நல்ல காட்சியும் கிடைக்குமாம். அதுதான் கோஹ்னு (Gohná) ஏரி. அது உலகில் மிகச்சிறந்த அழகான ஏரி அமைப்புக்களில் ஒன்று என்று சொல்கிறார்கள்.

## பைஜ்யநாத் :

கருர் தாண்டி இரண்டு கல் தொலைவில் பைஜ்யநாத், என்னும் பெருந்தலம். கயிலை வழியில் தரிசனம் செய்ய வேண்டிய மற்றொரு முக்கியமான தலம். ஆலயம் கருட கங்கையும் கோமதியும் கலக்கும் இடத்தில் மிக அழகாக அமைந்திருக்கிறது. பெருமான் சந்நிதியிலே அந்த இரண்டு ஆறுகளும் கலக்கின்றன தீர்த்தத்தாலும் அந்தச் சங்கமம் சிறப்புடையது. ஆலயம் மிகப் பழமையானது. ஆலயத்தின் எதிரே நதிக்கரையில் நல்ல அழகான படிக் கட்டுகள் இருக்கின்றன. அதில் இறங்கி எல்லோரும் நதி சங்கமத்தில் ஸ்நானம் செய்துகொண்டு ஆலயத்திற்குள் சென்று வழிபட்டோம்.

## பழங்காலச்சிற்பங்கள் :

இங்குப் பல பழங்காலச்சிற்பங்கள் சேமித்து வைக்கப் பட்டிருக்கின்றன. புதைபொருள் இலாகாவினர் அவற் றைச் சேமித்து வைத்து இவ்வாலயத்தின் ஒரு பகுதியில் காட்சிச்சாலை ஒன்றும் அமைத்து வைத்திருக்கிறார்கள். மூர்த்தங்கள் எல்லாமே மிக அழகாக நம் தென்னாட்டுத் திருவுருவங்கள் போலவே அமைக்கப்பட்டிருக்கின்றன.



வைத்தியநாதத்தில்
பார்வதி அம்பிகையை வழிபடுதல்



பாகேஷ்வரத்தில் - சரயு கோமதி சங்கமம்

எல்லாவற்றிலும் அம்பிகையின் திருவுரு மிகத் தேர்ந்த வேலைப்பாடுடையது. பெருமாட்டிக்கு மேலே பரிவட்டம் புடவைகல்லிலேயேசார்த்தியிருக்குமல்லவா. அந்தவேலைப் பாடு கைத்திறனுடைய நேசவாளி அவன் திறமையெல்லாம் காட்டி வேலை செய்திருந்தால்கூட அதில் செய்யப்பட்டி ருக்கும் வேலைப்பாடு செய்ததாகஆகாது. கற்பனைக்கு எட் டாத அழகுவேலையாக இருக்கிறது. ஒரு சிறந்த சாதராப் புடவையை அம்பிகைக்கு சாத்தியிருந்தால் எப்படியிருக் குமோ அவ்வளவு அழகான வேலைப்பாடு. திருமுகமும் கருணைபொழியும் திருமுகம். மற்ற அங்க இலக்கணங்கள் அததுவும் அமையவேண்டிய முறையில் அமைந்திருக் கின்றன. இந்த அம்பிகை பெருமானுக்குப் பின்னால் நின்றிருப்பது வரும் பக்தர்களை அம்மையும் அப்பனுமாக எழுந்தருளியிருந்து வாவென்று வான் கருணை வழங்கும் அற்புதக் கோலமாகக் காட்சி அளிக்கிறது திருவருள் சக்தி நின்று எல்லாவற்றையும் இயக்குகிறது என்னும் சாத்திரத்துக்கு அங்கேபொருள்விளக்கம்போலச்சிவலிங்கத் திருவுரு முன்னாலேயும் அதற்குப்பின் அம்மையின் திரு வுருவும் அருள்காட்சி அளிக்கிறார்கள். அது போன்றே மற்ற சுற்றுக்கோவில்களில் அமையவேண்டிய மூர்த்தி களும் அழகுத் திருவுருவங்களாக அமைந்து அங்கே கலையும் தெய்வீகமும் கலந்து ஒன்றையொன்று வெல்லக் கூடியதாகப் போட்டியிட்டு விளங்குகின்றன. இது மனத் தையும் உயிரையும் தொடுவதாக இருக்கிறது.

### கட்யூரி மன்னர் :

இவ்வளவு சிறப்புக்களுக்கும் உரியவர்கள் அங்கே ஆண்ட கட்யூரிமன்னர்கள். அவர்கள்தங்களைக் கார்த்திகேய பரம்பரையினர் என்றழைத்துக்கொண்டார்கள். ஆதியில்

பதரிக்கு அருகாமையில் உள்ள ஜோசுஷிமடத்திலிருந்து இப்பகுதியை ஆண்டு வந்தவர்கள். பிற்பாடு 8-வது நூற்றுண்டில் இந்த இடத்தைத் தங்கள் தலைமைப்பீட மாகக் கொண்டு ஆண்டார்கள். அவர்கள் காலத்தில்தான் இக்கோவில் 13-வது நூற்றுண்டில் கட்டப்பட்டது. அதற்குச் சான்று பகரும் கல்வெட்டுக்கள் பல இங் கிருக்கின்றன. அம்மன்னர்கள் நல்ல சைவ மன்னர்கள் என்பது அவர்கள் இவைபோன்ற பல பெரும் திருக்கோவில் களைக் கட்டிப் பரிபாலனம் செய்து வந்திருப்பதிலிருந்து தெரியவருகிறது. இக்கோவிலைக் கட்டிய மாமன்னன்பெயர் திரிபுவனபலதேவன் என்பது. பிறகு பலரும் இதைப் பேணிக் காத்துவந்திருக்கிறார்கள். இவர்கள் பரம்பரையின் பெயரால் இத்தலம் அக்காலத்தில் கார்த்திகேயபுரம் என்று வழங்கப்பட்டிருக்கிறது. இது போன்றே பல அழகிய கோவில்கள் கட்டியிருக்கிறார்கள். அவற் றில் மூர்த்திகளில் சிறந்தது சத்யநாராயணர் திருவுரு. லட்சுமிநாராயணர் கோவில், நாகநாதா கோவில். கேதார நாதர் ஆலயம். பாமணித்தேவுள் முதலிய பல கோவில்களை இம்மன்னர்கள் கட்டித் திருப் பணிகள் செய்து சிவப்பணியிற் சிறந்தவர்களாக விளங்கியிருக்கிறார்கள். இவ்வேலைப்பாடுகளைப் பார்க்கும் எவரும் நம் நாட்டுச் சிற்பச் சிறப்பு இமயம் வரையும் ஒரே நிலையில் ஒரு காலத்தில் இருந்திருக்கிறதேன்பதைக் கண்டு ஒற்றுமையும் பெருமையும் கோள்வார்கள். இந்த அருமையான சிற்பச் செல்வங்களும் அக்கால வேறியர்கள் கையில் தப்பவில்லை என்பதை மிக வருத்தத்தோடு சொல்லவேண்டியிருக்கிறது. அவர்கள் எப்படித்தான் இவைகளையும் சிதைத்து மனநிறைவு

கொண்டார்களோ? கண்டு அழகுபார்க்கலாம். அது போல ஒன்று இக்காலத்தில் செய்வதானால் அதற்குப் பொறுமையும் சிற்பத் திறமையும் அமையவேண்டுமே என்று கவலை கொள்ளவேண்டியிருக்கிறது. அவ்விதம் வேலை செய்யக்கூடிய சிற்பிகள் கிடைத்தாலும் அதற்குக் கூலிகொடுக்கக் கூடிய பிரபுக்களும் இருத்தல்வேண்டுமே. அவ்வளவு அருமையானவேலைகள். அங்கு எழும் எண்ணங் களை இதற்குமேல் எழுத்தில் சொல்லமுடியவில்லை.

## கட்யூரிப் பள்ளத்தாக்கு :

இந்தப் பகுதி கட்யூரிப் பள்ளத்தாக்கு என்பது. உல கில் சிறந்த அழகிய பள்ளத்தாக்குகளில் இதுவுமொன்று. காஷ்மீர் லோலாப் பள்ளத்தாக்குப் போல, உத்தரப் பிரதேசத்தில் அமைந்திருக்கும் இந்த இமயப் பகுதிப் பள்ளத்தாக்கையுங்கண்டு களிக்கப் பல வெளிநாட்டினரும் இங்கே வருவார்களாம். ஓவியர்கள் இங்குவந்து நின்று அவரவர்மனங்கொண்டமட்டும் ஓவியம் தீட்டியும் இயற்கை யோடு போட்டியிட இயலாதநிலையில் ஒருவாறு தம் கைத் திறனில் அமைத்துவிட்டதாக எண்ணி அதுஅவ்வண்ணமே அமையாதது கண்டு மனம் வேதும்புவார்கள் என்று சொல்லப்படுகிறது. ஒவ்வொருநாளும் புதுப்புதுக் காட்சி யாக அது மாறிமாறி அழகுகொண்டு வருவோரை மகிழ் விக்கும் என்றும் சொல்கிறார்கள். ஆனால் இப்பகுதி கடல் மட்டத்தைவிட 3500 அடி உயரமே உள்ளது.

## பாகேஷ்வரம் :

இவ்விதமான சிறந்த தெய்விகக் கலையையும், திருவருள் நிலையத்தையும் கண்டு வழிபட்டுப் பிரிய மனமில்லாமலே மேலே பாகேஷ்வரத்துக்கு இரவு 8 மணி

அளவில் சேன்றடைந்தோம். மிலம் வழியில் பாகேஷ் வரந்தான் மிகப் பேரிய ஊர். இங்குத்தான் தந்தி நிலேயம் இருக்கிறது. மற்ற இடங்களில் அஞ்சலகங்கள் இருந்தாலும், தந்தி சோல்வதாக இருந்தால் இங்குத்தான் வரவேண்டும். சாலே அமைப்பிலும் இதற்குமேல் உந்தூர்திகள் செல்லக்கூடிய சிறந்த கற்சாலேகள் இன்னும் அமையவில்லே. ஆனுல் வேலே அங்கங்கும் பகுதி பகுதியாக நடந்து வருகின்றன. சில ஆண்டுகளில் இங்கிருந்து வேகு தோலேவு வண்டிகள் சேல்லக்கூடிய வசதிகள் ஏற்படும். இங்கிருந்து பித்தாகோட்டுக்கு உந்தூர்திகள் சேல்கின்றன. மிலம் வழியில் கப்கோட் வரை கற்சாலேகள் அமைத்து இரண்டோரு ஆண்டுகளே ஆகின்றன. ஆனுல் உந்தூர்திகள் சேல்லவில்லே. யாத்ரீகர்கள் மட்டிலும் வாடகைக்கு ஊர்திகளே அமைத்துக்கோண்டு சேல்கிருர்கள். வழி மிகவும் குறுகலாக இருக்கிறது. அதிலும் இன்னும் சாலே வலுவடையவில்லே. மேலும், சில இடங்களில் பாலங்கள் சறுக்கைகள் கட்டி வழிந்துவரும் அருவிகளுக்குப் போக்குக் காட்டவேண்டியதாகவும் இருக்கிறது. அந்த அமைப்பில்லாதபடியால் வழி நடுவில் அருவிகள் அவ்வப் போழுதும் சாலேயைப் பழுதாக்கிவிடுகின்றன.

இவ்வூரில் பேரிய கடைத்தேருவும் உண்டு. எல்லாப் போருள்களும் கிடைக்கக் கூடியதாகவும் இருக்கிறது. இங்கே கோமதியும் சரயுவும் சங்கமமாகின்றன. சுற்றிலும் நல்ல காடடர்ந்தும் இருக்கிறது. எல்லாமிருந்தும், பக லிலும் இரவிலும் வேப்பம் மிக அதிகமாக இருக்கிறது. இரவில் விசிறி இல்லாமல் உறங்கமுடியாது. அவ்விதம் சேய்தாலும் காற்று வேம்மையாகவே வருகிறது.

இரவில்மட்டும் மின்சாரம் கிடைக்கும். ஆகையால் இரவில் தெருக்களிலும் வீடுகளிலும் மின் விளக்குகள் எரிகின்றன.

## வியாக்ரேஸ்வரம் :

இத்தலம் வியாக்ரேஸ்வரம் என்று ஆதியில் வழங்கப் பட்டது. பின்பு பாகேஷ்வர் என்று திரிந்து வழங்கலாயிற்று. அக்காலத்தில் இங்குச் சிறந்த முனிவர் ஒருவர் சரயு நதிச் கரையில் அமர்ந்து தவம்புரிந்துவந்தார். நதியில் வெள்ளம் பெருக்கெடுத்தோடியது. அத்தவச்சாலையையும் அவரையும் அடித்துக்கொண்டு சென்றது இதனுல் தவம் கலைந்தது. பெருங்கோபம் கொண்டார் முனிவர். அந்த நதியைத் தமது உள்ளங்கையில் ஏந்தி உட்கொண்டுவிட்டார். நதி மறைந் தது; மக்கள்துன்புற்ருர்கள். அப்பெரியவரிடம்வந்து வேண் டிக்கொண்டார்கள். மனமிரங்கி அந்நதியை வெளியில்விட அவர் மறுத்துவிட்டார். தங்கள் வேண்டுகோள் வீணனது கண்ட மக்கள் பலர் சிவபெருமானை நோக்கிக் கடும் தவம் புரியலாயினர். பலர் பெருமானை நோக்கிப் பிரார்த்தனை செய்து வேண்டிக்கொண்டார்கள். அன்பர்கள் குரலுக்கு இரங்கிப் பெருமான் புலியுருவும் பிராட்டி பசுவுருவுங் கொண்டனர். பசுவைத் துரத்திக்கொண்டு இப்பகுதியில் புலி ஓடிவந்தது. இதைக்கண்டார் முனிவர். அவர் மனம் இளகிற்று; பசுவைக்காக்கும் வேகத்தில் ஆங்காரத்துடன் பெருங்குரல் எடுத்துச் சத்தம் இட்டார். உள்ளிருந்த நதி பெருக்கெடுத்து வெளியேவந்தது. வந்த புலியும் பசுவும் மறைந்தன. மக்கள் துன்பந் துடைக்கப் பெருமான் செய்த திருவிளையாடல் இது என்று அறிந்தார் முனிவர். தாம் இவ்வளவு கடுந்தவம் புரிந்தும் தமக்கு அப் பெருமான் அருளாது எளியவர்கள் குரலுக்குத் தானே செவிசாய்த்தார் என்று வருந்தி நின்ருர். பெருமான்

அசரீரியாக நின்று, 'முனிவ நீர் உம்முடைய விரதத்துக்கு ஏற்ப முனிவை முனிவுசெய்யாமல் யாரோ செய்த ஒரு சிறு பிழைக்காக மக்கள் பலரும் துன்புறும்படி செய்து அவர்கள் வருத்தத்தைக்கண்டும் மனம் இரங்காமல் இருந்திருக்கின்றீர். ஆகையால் நீர் செய்த தவம் அவமே. இனியாவது திருந்துவதுதான் முறை' என்றருளிச் செய்தார். முனிவர் தம் தவறு உணர்ந்து பேரிதும் வருந்தினர். பிறகு தம்மைத் திருத்திக்கோண்டு பெருமானுக்குகந்த நிலையில் தவம் செய்து திருவடி அடைந்தார். இது அத்தல புராணம். பெருமான் புலியாக இங்கு எழுந்தருளி வந்து மக்கள் துன்பந் துடைத்து ஆண்டுகோண்டபடியால் இவ்வூர் வியாக்ரேஸ்வரம் என்று பெயர்பெற்றது. மேலே சொன்னபடி பேச்சு வழக்கத்தால் திரிந்து இப்போழுது பாகேஷ்வரம் என்ருகிவிட்டது.

மார்க்கண்ட சிலை :

இதுவல்லாது, மார்க்கண்டேய மகரிஷி இங்குச் சரயு நதியின் நடுவில் (தோங்குபாலத்துக்கு அண்மையில்) உள்ள சிறு பாறையில் தங்கி அம்பிகையை நோக்கித் தவம் இயற்றி வந்தார். அவர் அருள்பேற்று தேவி புகழ் பாடினுர் துர்க்கா சப்தசதி என்ற நூலாக. அது தேவி பரத்தில் மிக அருமையானதோன்று. பாராயணம் செய்வோருக்கு உறுதியாக மும்மைப் பயன்களும் அளித்து வருகிறது. அச்சிறப்பு மிக்க இடத்தை மார்க்கண்ட சிலை என்று வழங்கிவருகிருர்கள். தேவி பக்தர்கள் அந்த இடத்தையே பெருந்தலமாகக் கோண்டு அங்கு வந்து ஆற்றின் இடையில் சென்று அந்தக் கல்லில் அமர்ந்து சப்தசதி பாராயணம் செய்து மகிழ்கிருர்கள். இவ்விதம்

செய்தால் பெரும் பலன் உண்டு. மார்க்கண்ட சிலையில் முன்பு சிவபெருமான் பக்தர் ஒருவருக்காகப் பார்வதி தேவியுடன் திருமணக்கோலம் காட்டியதாகவும் சொல்லப் படுகிறது.

## ஆலயங்களும் பிறவும் :

வியாக்ரீஸ்வரர் தங்கிய இடத்தில் கோவில்கட்டி இருக் கிறார்கள். அதனை ஸ்ரீ பாகேஷ்வரர் என்று வழங்குகிறார்கள். தத்தாத்ரேயர், பைரவநாதர், கங்கையம்மன் இவர்கள் கோவில்களும் தனித்தனியே இருக்கின்றன. இவ்வூருக்கு அண்மையில் உள்ள ஒரு மலை உச்சியில் மார்க்கண்டேய முனிவரின் ஆஸ்ரமம் இருக்கிறது. 'அங்கே ஒரு தேவீ ஆலயமும் இருக்கிறது. அதற்குப் பலியுமுண்டு. மிகச்சக்தி வாய்ந்த தேவி என்றும் சொல்கிறார்கள். கடுமையான ஏற்றத்தில் இரண்டுகல் தொலைவு ஏறிச்செல்லுதல் வேண்டும். அதைக் கீழிருந்தே தரிசனஞ்செய்து கொண்டோம்

நதி சங்கமத்தில் அமைந்திருக்கும் பாகேஷ்வர் ஆல யத்தை 1450-ம் ஆண்டில் இலட்சுமி சந்திர மகாராஜா என்னும் கட்யூரி மன்னன் கட்டியதாகக் கல்வெட்டுச் சான்றிருக்கிறது. தரிசனத்துக்கு வந்த பல சாதுக்கள் தத்தாத்ரேயர் ஆலயத்தில் தங்கி இருக்கிறார்கள்.

நதி சங்கமம் ஆகுமிடத்தில் சென்று குளிக்கக்கூடாது. நதிகள் இரண்டும் மிக வேகமாக ஓடிக் கலக்கின்றன. இழுப்பு அதிகமாக இருக்கும். ஆகையால் கரை ஓரமாகவே நின்று குளித்து வருதல்வேண்டும்.

இவ்வூரின் அருகில் சலவைக்கல்லில் ஒருவகையும் (Soap Stone), இரும்பு, தாமிரம், ஸ்படிகம் போன்றவை களும் கிடைக்கும். சுற்றிலும் நல்ல காடு அடர்ந்திருக் கிறது. இங்கிருந்து கர்ப்பியாங் வழியில் உள்ள பேரிநாக் கிற்குச் சாலை ஒன்று இருக்கிறது.

**மகரசங்கராந்தி :**

மகரசங்கராந்தியன்று இங்கு ஒரு பெருஞ்சந்தை கூடுகிறது. அதில் பூட்டிய (Bhotia) வியாபாரிகள் திபேத்தியப் பொருள்களையும், இங்கிருந்து திபேத்துக்கு எடுத்துச்செல்லவேண்டிய பொருள்களையும், விற்றும் வாங் கியும் வாணிபம் செய்கிறார்கள். பல ஆயிரக்கணக்கான மக்கள் விழாவை ஒட்டியும் சந்தையை ஒட்டியும் இங்கு வந்து கூடுவர்.

**விழா :**

பூட்டியர்களுக்குப் பொதுவாக இது ஒரு பெருவிழா. அன்று அவர்கள் வீடுகளைத் தூய்மை செய்து விடியலில் குளித்து முழுகித் தெய்வவழிபாடுகள் செய்வார்கள். இங்கு பாகேஷ்வரத்துக்கு வந்து சரயுநதியில் ஸ்நானம் செய்து பாகேஷ்வரரைத் தரிசித்துப்போவார்கள். பெரியவர்கள் வயதில் சிறியவர்களுக்கும் தங்கள் வேலைக்காரர்களுக்கும் வெகுமதிகளும் கொடுப்பதுண்டு. திருமணமான பெண் களுக்குச் சீர்வரிசைகள் வழங்குவர். அதன் மறுநாள் ஆடு மாடுகளுக்கும் தனி விழாக் கொண்டாடுவார்கள். அன்று அவைகளுக்குக் குங்குமத் திலகமிட்டு வழிபடுவர். நம் தென்னிந்தியர்களைப்போல அவர்களும் மகரசங்கிராந்தியை ஒரு சிறந்த விழாவாக - தெய்வ வழிபாட்டு நாளாகக் கொண்டு எல்லாம் செய்வர். குடும்ப நலத்தை விரும்பிச் செய்யும் வழிபாடுகள் அவை.

## தொழில் :

இவ்வூர்க் காடுகளில் சாம்பல் மரங்கள் ( Ash trees) அதிகம். அந்த மரத்தைக்கொண்டு பந்தடி மட்டைகளும் (Tennis, Bad-minton Bats), பிற மரச்சாமான்களும் செய்கிறார்கள். அதற்கென அரசியலார் ஒரு பயிற்சிச் சாலையும் தொழிற்சாலையும் இங்கு நடத்திவருகிறார்கள்.

## இரவு அனுபவம் :

பாகேஷ்வரம் ஒரு நடுத்தரமான ஊர்தான். அங்கு நாங்கள் ஒரு கடை மாடியில் தங்கினோம். இரவிலும் அங்கு வெப்பம் மிகுதியாக இருக்குமென்று முன்பே சொல்லப்பட்டிருக்கிறது. அந்த வெப்பத்தைப் போக்கிக் கொள்வதற்குச் சிலர் பக்கத்துக் கூரைகளில் தங்கள் படுக்கைகளைப் போட்டுக்கொண்டு அன்றிரவு படுத்துக்கொண்டார்கள். ஆனால் நடுநிசியில் திடீரென்று வானம் கறுத்து மழை பெய்யத் தொடங்கிவிட்டது. இப்பகுதிகளில் இவ்விதம் அடிக்கடி மழை பெய்யுமாம். மழைத் தண்ணீர் தங்கள்மீது பட்டதும் அவர்களும் விரைவில் எழுந்து வேகமாக வரமுடியவில்லை. ஏனெனில் கூரைப்பகுதி சிறிது சரிவாக உள்ளதாகையால் மெதுவாகவே வரவேண்டியதாயிற்று. அதனால் பலரும் நன்றாக நனைந்துவிட்டார்கள். அவர்கள் படுக்கைகளும் ஓரளவு நனைந்துவிட்டன. அவர்களுக்கு அந்தநேரத்தில் படுக்க இடமும் கிடைக்கவில்லை. நாங்கள் இருந்த இடத்தில் வந்ததுமே மனத்தைக் கட்டுப்படுத்திக்கொண்டு,நாங்கள்பலரும் படுத்திருந்ததைக் கண்டு, இரவின் பிற்பகுதியை அவர்கள் உறங்காமலே கழிக்கவேண்டியதாயிற்று. நாங்கள் படுத்திருந்த இடத்திலும் மூட்டைப்பூச்சிகள் அதிகம். அப்பூச்சிகளின் கடி

அதிகமாக இருந்தது; ஆகையால் உள்ளே படுத்திருந்தவர்களும் நிம்மதியாக உறங்கமுடியவில்லை. ஏதோ ஒரு காரணத்தால் எல்லோரும் அன்றிரவைப் படுத்து உறங்கியதாகக்கொண்டு பொழுது புலர்ந்ததும் வெளியே சென்று விட்டோம். நதி சங்கமத்தில் சென்று நீராடித் தூய்மை செய்துகொண்டு ஆலயங்களில் வழிபாடுகள் நடத்தினர் பலர். மலைப் பகுதிகளிலும், நதிவரும்வழியிலும் மழை பெய்திருந்தமையால், ஆற்றில் தண்ணீர் கலங்கலாக வந்தது. அன்று அமாவாசை. அப்புனித ஆற்றங்கரையிலே சிலர் பிதிர்க்கடன்களையும் செய்துகொண்டார்கள். அது ஒரு பெருஞ் சிறப்பு. இதுபோன்ற வாய்ப்பு தற்செயலாக அங்கு நேர்ந்தது மகிழ்ச்சிக்குரியதுதான்.

## ராஸ்தா பில்குல் பந்த் ஹை !

அன்று காலையிலேயே கப்கோட்டுக்குப் புறப்படுவது என்று முதல்நாளிரவு திட்டம் செய்துகொண்டு படுத்தோம். ஆகையால் அவரவரும் விரைவில் காலைக்கடன்களையும் முடித்துக்கொண்டு தயாரானர்கள். ஆனால் அன்று காலையில் கப்கோட்டிலிருந்து வந்த ஒருவர் " ராஸ்தா பில்குல் பந்த் ஹை " என்று சொன்னர். அதுகேட்டதும் மேலே செல்ல முடியாது என்ற நினைப்பில் சுவாமிஜி அவர்கள் எங்கள் உந்தூர்திக்குக் கொடுக்கவேண்டிய வாடகைகளைக் கொடுத்துக் கணக்குத் தீர்த்துவிட்டு மேலே செல்லவேண்டிய முயற்சியில் ஈடுபடலாயினர். "இனி இங்கிருந்தே கூலிகள் ஏற்பாடு செய்துகொண்டு புறப்படவேண்டும். அநேகமாக நாளைக்காலையில்தான் புறப்படவேண்டியிருக்கும்" என்று எங்களிடம் சொன்னர்கள். ஆனல் அது மற்ற எல்லோருக்கும் ஒத்துவரக்கூடியதாக இல்லை. வழியில்

நடைவழித் தொலைவை எவ்வளவு குறைத்துக்கொள்ள முடியுமோ அந்த அளவு குறைத்துக்கொண்டு, மேலே சிரமமான பகுதிகளில் காலால்நடந்துசெல்வதே உசிதம் என்றுகருதினார்கள். அவ்விதமேபேசவும்தலைப்பட்டார்கள். இதை சுவாமிஜி அவர்களிடம் தெரிவித்து எங்கள் உதவிக்கு வந்திருந்த ஒருவரை அப்பொழுதே கப்கோட்வரை அனுப்பிப் பாதை எவ்விதம் இருக்கிறதென்று பார்த்துவரச் செய்யவேண்டுமென்று சொன்னோம். சுவாமிஜி அவர்களும் உடனே அதற்கிசைந்து ஆளை அனுப்பினார்கள். அனுப்பப் பட்ட ஆள் 11மணிக்குத் திரும்பிவந்தார். ஒருபகுதியைச் சென்று கண்டுவந்ததாகவும், ஒருசிலஇடங்களில்தான் மண் சரிவுகள் ஏற்பட்டிருப்பதாகவும், அதற்குமேல் சரிவுகள் இல்லை என்று அப்பகுதி மக்கள் உறுதியாகக் கூறியதாகவும், அவ்விதம் இருக்குமென்று தனக்கும் தோன்றியதாகவும் சொன்னார். அந்தச் சரிவுப் பகுதிகளில் யாத்திரை வந்திருப்போரில் எல்லோரும் அவரவரால் இயன்ற உதவி செய்து வண்டியைச் செலுத்திக்கொண்டு போய்விடுவது என்று முடிவு செய்து உந்தூர்திக்காரர்களை அணுகிச் சொல்லப்பட்டது. காலையில் வந்தவர் சொன்னதைக் கேட்ட அவர் சிறிதே கலங்கினார். அவர்களுக்கு வழியில் வேண்டிய உதவிகளைச் செய்து கொடுப்பதாகப்பலரும் உறுதி கூறிய பிறகே வருவதாக ஒப்புக்கொண்டார்கள். அதிலும் வழியில் ஊர்திகள் செல்லமுடியாத பெருந்தடைகள் இருந்தால் அந்த இடத்திலேயே எல்லோரும் இறங்கிக் கொள்ளவேண்டும். கப்கோட் வரை பேசிய வாடகை கொடுத்துவிடவேண்டும் என்ற நிபந்தனைகளை விதித்தார்கள். அவைகளும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. இதுபேசி முடிந்து நாங்கள் புறப்பட மாலை மணி 2 ஆகிவிட்டது. அன்று காலை 7-30 வரை சிறு தூறல் இருந்தாலும் பிறகு

வெளிவாங்கி நல்ல வெய்யில் காய்ந்தது. இதுவும் எல்லோருக்கும் மனத்தில் [உறுதி கொடுத்தது மேலே செல்வதில்.

## சரயு :

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் சரயுநதி நடுவிலுள்ள மார்க்கண்டசிலை என்னும் தெய்வீக இடத்தில் நின்று துர்க்கா சப்தசதி பாராயணம் செய்யவேண்டுமென்று விரும்பினார்கள். அன்று ஆற்றில் வெள்ளம் அதிகமாக இருந்தபடியால் அதன் எதிரே கரையில் நின்று பாராயணம் செய்து மகிழ்ந்தார்கள். அந்த நதியைக் கண்டதும் அவர்கள் மனத்தில் தேங்கி நிற்கும் இலக்கிய உணர்ச்சி கம்ப ராமாயணச் சிந்தனையைக் கிளறிவிட்டது.

## மழையும் வெள்ளமும் :

இந்த நதி அன்றும் பெருகிக் கோசலநாட்டை வளப்படுத்தியது. அந்த நாட்டுக்குப் பெருமைகொடுத்தது. இதில் பெருகும் தண்ணீரும் சமய ஒற்றுமை கண்ட பனிநீராகும். வானத்திலே நின்ற மேகம், நீறணிந்த கடவுள் திருவுருவை (சிவம்) நினைவூட்டிநின்றது. அந்தப் பெருமான் ஆன்மாக்களிடம் கொள்ளும் கருணைப் பெருக்கால் ஓடிவந்து அருள் வழங்குவதுபோல, அவை (மேகங்கள்)ஓடிச் சென்று ஒலிமுழங்கிநிற்கும் கடலினின்றும் நீர் சுமந்து வந்தது. அத்தோற்றம், மகாவிஷ்ணு கரிய நிறத்தோடு நின்று அருள் வழங்குவதுபோலவும் இருந்தது. கேளாமலே வறியவர்க்குத் தேவைப்படுவதை பலன் எதிர்நோக்காது கொடுக்கும் வள்ளல்கள் போல, இப்பகுதிகளில் முழங்கி மழையாகப் பெய்தது. பொன் மலையாகிய



பாகேஷ்வரத்தில்
ஸ்ரீ பாகேஷ்வரரை வழிபடுதல்



பாகேஷ்வரம் - சரயு - நதி நடுவில் மார்க்கண்ட சிலை

இந்த இமயப் பகுதிகளில் மழை பொழியும் தோற்றமும் மேலே உள்ள கரிய நீலநிறத்து விதானத்தைத் தாங்க நிறுத்திய ஒளிவீசிநிற்கும் வெள்ளிக்கம்பிகள் மேகத்தை முட்டி நிற்பதாகத் தோற்றம் அளித்தன (விழுந் தாரைகள்); விண்ணையும் மண்ணையும் முட்டி நிற்பன போல இருந்தன அவை. இவ்விதம் அடிக்கடிநிகழ்வதுவள்ளல்கள் உள்ளியுள்ளி உவந்து அள்ளி வழங்குவதுபோலவும் இருந்தது அவ்வான் வழக்கம். தமக்கென்று தாம் எதையும் மறைத்துவைத்துக்கொள்ளாமல் கொள்வோர் மனங்கொள்ள உள்ளஎல்லாம் கொடுத்து ஈத்துவக்கும் இன்பம் கண்டவர்கள் அவ்வள்ளல்கள். (அவ்வண்மை இதனைச் சொல்லி மகிழும் நமது குருமணியிடமும் காண லாம். ஆகையால் அதைப்பற்றிச் சொல்வதிலே சொல்லும் செயலும் ஒத்தவர்களின் சொல்வன்மை இருந்தது).

## திருவிளையாடல்!

இந்த மழை வெள்ளம் முழங்கி யெழுந்து செல்வதே இச்சரயு. வள்ளலாக வழங்கிய வழக்கத்தைப் பெற்ற நதியும் இந்நிலவுலகினிலே தானும் ஒரு பெருவள்ளலாக அதை எல்லோருக்கும் பகிர்ந்து அளிக்கிறது வற்றாது முற்றாது. ஆனால் அது குலமறிந்து வழங்கும் தன்மையும் உடையது. அதனைப் பெறுவோர் பெற்ற பெருமை ஞானம் முன்னிய நான்மறையாளர் கைத்தானத்தை ஒத்தது. இங்கே ஞானம் முன்னிய பெருமை உடையவர்களுக்கு வழங்கும் பொருள் ஒரு சிறிதே யாயினும் அது நின்று தழைத்து என்றும் நிலைத்த பெரிய பயனை அளிக்கும் என்ற உட்கருத்தும் இருக்கிறது. அதுபோலவே இந்நதியின் நன்னீர் பெருகிச் சென்ற இடனெல்லாம் மக்கள் தழைத்து ஓங்கி நிலைத்த பயன்பெருக்கி நல்வாழ்வு வாழ்ந்தனர்.

செல்லும் நதியின் போக்கும் தேக்கேறிந்து செல்வதாக இருக்கிறது. செல்லும் வேகத்தில் அதன் கரையில் நிற்கும் மரங்களையும் பூக்களையும் அடித்தெடுத்துப் போகும். அப்பூக்களில் உள்ள நல்ல மதுவைக்குடிக்கத் தேனிக்கள் மொய்த்து நிற்கும். வெள்ளம் பெருகிக் கரை யையும் பெயர்த்துச் செல்லும். சில இடங்களில் மெதுவாகச் செல்லும். சில இடங்களில் வேகமாக சுழித்தும் ஓடும். அந்த ஒட்டம் உள்தெளிவின்றியே தான் உண்ட மது வாய் வழியே வழிய ஊக்கம் மிகுந்து என்ன செய்கிறோம் என்ன செய்தல்வேண்டும் என்ற வரம்புகடந்து ஆடியும் பாடியும் மயங்கி வரும் மனிதர்களைப்போலத் தேக்கேறிந்து செல் கிறது இவ்வாறும். அவர்கள் வாய்வழியே வழியும் மது விலும் ஈக்கள் மொய்த்து நிற்கும் அல்லவா?

உயிர்கள் துன்பம் இல்லாது வாழவேண்டுமே அவர் கள் துன்பம் துடைக்க விரைந்து செல்லவேண்டுமே என்ற தாயன்பும் அந்த வேகமான ஒட்டத்தில் காணலாம். வரும் வழியில் விதியை மாற்றி அமைத்து நற்கதி வழங்கும் பேரு மான் திருவிளையாடல்போல இந்நதியும் திருவிளையாடல்கள் பல நிகழ்த்தி வருகிறது.

## திணை மாற்றம் :

நால்வகை நிலங்களிலும் அது பாய்ந்து வருகிறது. அவற்றைஒன்றைஒன்ருக்கிப் பார்த்துமகிழ்கிறது. ஆனாலும் அதற்காக அந்த ஓரிடத்திலேயே நின்று மயங்கிவிடுவதும் இல்லை. எல்லாஇடங்களிலும் பரந்துபாய்ந்துஓடுகிறது.ஏன் இந்தஓட்டம்? மற்றமற்ற நிலப்பகுதிகளையும் மாற்றிமாற்றிப் பார்க்கவேண்டாமா? அது ஒரு வேடிக்கையல்லவா? மலை யில் ஒடத்தொடங்கியதில், மலைபடு பொருள்களாகிய மணி யும் பொன்னும், மயில் தழைப்பீலியும், ஆனைக்கோடும்,

அகிலும் சந்தனமும் ஆகியவற்றை அடித்தேடுத்து வந்து முல்லை நிலமாகிய காடும் காடு சார்ந்த இடங்களிலும் சேர்க்கிறது. அங்கிருக்கும் நாகம், நரந்தம், வேங்கை, கடுக்கை, கோங்கு முதலியவற்றைச் சுமந்து வந்து மருதத்தில் சேர்க்கிறது. அதை வேறு விதமாகவும் சொல்வார்கள். ஈத்துவக்கத் தெரியாத மாந்தரின் செல்வத்தை, ஊழ் எடுத்துச்சென்று, வாரி இரைத்து மற்றவர்கள் பயன் கொள்ளச்செய்வது போலென்று. மருதத்தில் உள்ள பொருள்களையும் சுண்ணம், சாந்து, சிந்துரம் ஆகிய நறுமணப் பொருள்களையும் ஏந்திச் செல்கிறது நெய்தலுக்கு. இவ் விதம் நெய்தல்நில மக்களுக்கு மருதத்தின் இன்பயன் ஊட்டுகிறது. பயனால் நெய்தல் மருதமாகிறது; மருதம் முல்லையாகிறது; முல்லை குறிஞ்சி ஆகிறது. இது ஒரு நல்ல கற்பனைச் செல்வமல்லவா? இவ்வாறு கல்லிலே பிறந்து தன்னோடு பல ஆறுகளையும் ஏற்றுப் பல்கிப் பெருகிக் காலெடுத்துப் பிரிந்து மக்களுக்கு நல்வளம் ஊட்டுகிறது அச்சரயு.

பரம்பொருள் :

இந்தச் செயலிலும் ஒரு பரம்பொருள் விளக்கத்தை நமக்கு அது உபதேசித்துவருகிறது. வழங்கும் காலத்தில் அதனை ஏற்பன பல சிற்றாறுகள். அவை ஒரு தொலைவு ஓடி வருகின்றன. கொள்ளும் திறமையாலும் தன் பெருமையாலும் ஒரு நதி மற்றவற்றைத் தன்னுள் வாங்கிச் சேர்த்துக்கொண்டு, அவ்வாறுகளின் பெயர்களையும் மறைத்துத் தானேயாகி நின்று பல்கிப் பெருகி ஓடுகிறது. பிறகு, அதுவே பின்னே பெரிய சிறிய கிளைகளாகப் பிரிந்து மக்களுக்கு அததற்கேற்பப் பயன் வழங்குகிறது.

கோள்வோர் தரமும் திறனும் ஏற்கக்கூடியதாகவும் கோடுக்கிறது. இது ஒரே பரம்போருள் விளக்கத்தை - அருள் வழக்கத்தைத்தான் நமக்கு எடுத்துச் சோல்கிறது. மேகத்திலிருந்து போழியப்பேற்ற மழைத்தண்ணீர் அந்தந்த இடத்தின் மண்ணின் வளத்தையும் நிறத்தையும் பேற்றுத் தனித்தனியேயும் பாய்ந்து ஓடிவந்து ஒரு பேரிய நதியில் கலப்பது, யார் யார் எந்தேந்த நிலையில் பிரார்த்தனைகளைச் சேலுத்திக் கோண்டாலும் அவ்வவர் போருளாய் நின்று அதனை ஏற்பது ஒரே பரம்போருள்தான்; அந்தத் தோத்திரங்கள் எல்லாம் ஒரே பரம்போருளைக் குறித்துச் சேய்யப்படுவது அதனை ஏற்கும் பரம்போருள் ஒருவனேயாயும் இருக்கிறுன், இதனுல் அவன் குணம் பேருமை எதுவும் மாறவில்லை. அவன் ஒரே பேற்றியனுகவே விளங்குறுன் என்பதைக் குறிக்கும். பிறகு பல கால்களாகப் பிரிவது என்பது அந்தப் பரம்போருளே கோள்ளும் தரத்தாலும் திறமையாலும் அவரவர் பக்குவத்திற்கேற்ப பல சமயக் கடவுளராக நின்று அருள்வழங்குகிறுன் என்பதை விளக்குவதாகும்.

அவரவர் போருளாய் நின்று நம் சிவன் அருள் வழங்குகிறுன் என்று திருமுறைகளும் சாத்திர நூல்களும் முழங்குகின்றன; இதுவே சுருதிப்போருள் முடிவுமாகும். என்பதை இந்த நதியும் பேருக்கிக் காட்டுகிறது. இவ்விதம் கம்பனும் கண்டு சோல்கிறுன். பயன் கோள்ளும் போழுது பல பேரிய சிறிய கால்களில் தண்ணீர் ஓடினுலும், ஒடும் தண்ணீர் அந்தப் பேருமை மிக்க ஒரே பேரிய நதியின் தண்ணீரே. ஆனுலும் அது அங்கங்கும் பல பேயர்கள்கோண்டு வளங்கோள்ளச் சேய்கிறது. ஆகையால் ஒரே பரம்போருளைப் பல பேயரிட்டு அவரவர்

மனப்பக்குவத்திற்கு ஏற்ப வழிபடு கடவுளாகக் கோள் கிறார்கள் இவ்வுலக மக்களும். இவ்விதம்] வரும்தண்ணீர் அந்த ஒரு பேரிய நதியினதுவாக வந்து, பின்பு கால்களில் பரவிப்பாய்கிறதோ, அதுபோல நமக்குக்கிடைக்கும் அருள் வழக்கமும் அந்தப் பேரிய பரம்போருள் வழக்கமே என்றாலும், நம் பேரியோர் பலரும் அவரவர் வழியில் பலப்பல மார்க்கங்களைக்கண்டு மக்களுக்குச் சோல்லி யிருக்கிறார்கள். யார்யார் எவ்வேவ்விதம் கோண்டாலும் அங்கங்கேயும் பேருமான் ஒருவனே நின்று அருள்வழங்கு கிறான் அவரவரும் அறியாமலே. இந்த நதியும் இங்கே சரயுவாக இருப்பது சாரதாவாக மாறிக் கங்கையில் கலக்கும் போழுது அமிருதசரயுவாக ஆகிவிடுகிறது. எல்லாம் முடிந்த நிலையில் அது கங்கை. இதுபோன்ற பேரிய போருள் விளக்கங்களை சரயு நமக்கு உபதேசிப் பதாக இன்றும் விளங்குகிறது.

## நற்பண்பு :

எங்களோடு வந்த நண்பர் ஒருவர், காலையில் சிறு தூறல் இருந்தபடியால், ஆற்றில் குளிக்கச் சென்ற போழுது தம்முடைய குடையையும் எடுத்துச் சேன்றிருந் தார். அங்கு நீராடி முடித்துக்கோண்டு ஆலயங்களில் வழி பாடுகள் சேய்து இருப்பிடம் வந்துசேர்ந்தார். இங்கு அவர் போருள்களைச் சரிபார்த்துக் கட்டிவைக்கும்போழுது குடை கைதவறிவிட்ட சேய்தி அவருக்கு நினைவுவந்தது. தான் காலையில் ஆற்றங்கரைக்கு எடுத்துச்சேன்றதும் நினைவுக்கு வந்தது. உடனே அங்கு ஓடிப்பார்த்தார். குடை காண வில்லை. மனவருத்தத்தோடு அதை மற்றவர்களிடம் சோல்லிக்கோண்டிருந்தார். அப்போழுது மற்றோருநண்பர் கடைவீதிக்குச் சென்று வந்தவர், அச்சேய்தி இன்ன தேன்றுதேரிந்துகோண்டு, 'தங்கள்குடைபோன்றதோன்று

கடைவீதியின் கடைசியில் உள்ள ஒரு வீட்டின் முன் புறம் வைக்கப்பட்டிருக்கிறது. நான் போகும் பொழுதும் கண்டேன். வரும்பொழுதும் கண்டேன். அதுவாக இருந்தால் அவ்வீட்டில் சென்று கேட்டுப் பார்க்கலாம்' என்று சொன்னார். அவர் குறிப்பிட்ட வீட்டிற்குச் சென்று பார்த்ததில் அக்குடை அந்த நண்பருடையதுதான். வீட்டின் தெருவாசலின் வெளியே வைக்கப்பட்டிருந்தது. வீட்டுக்காரரை அழைத்து 'இங்கிருக்கும் குடை என்னுடையதுபோன்றே இருக்கிறது' என்றும் 'அன்று ஆற்றங்கரையில் வைத்து மறந்துவந்தேன்' என்றும் சொல்லிக் கேட்டார். அம்மனிதர் மிக்கமகிழ்வோடு 'தங்களுடையதாகஇருந்தால் அதை எடுத்துச் செல்லலாம். என் மனைவி இது ஆற்றங் கரையில் யாருமில்லாமல் விடப்பட்டிருப்பதைக் கண்டு, தாங்கள் எடுத்துவந்ததையும் மறந்து சென்றுவிட்டதையும் அங்கு வந்து இறங்கும்போது பார்த்தாளாதலால் வேறுயாராவது எடுததுச் சென்றுவிட்டால் பாவம் யாத்ரீகரான தாங்கள் வருந்துவீர்களே என்று எடுத்துவந்தாள். யாராவது தங்களைப்போல உள்ளவர்கள் வந்து கேட்டால் கொடுத்துவிடவே அதை வெளியில் வைத்திருக்கிறோம். யாத்ரீகர்கள் நேற்றிரவு இவ்வூருக்கு வந்திருக்கும் செய்தியும் எனக்குத்தெரியும். என் மனைவியை அழைக்கிறேன். அவள் வந்ததும் கேட்டுக்கொண்டு கொடுத்துவிடுகிறேன்" என்று சொலலிஅவர் மனைவி பெயர் சொல்லி அழைத்தார். அந்த அம்மையாரும் வெளியே வந்தார். இளம் வயதினர் தான். 'அவர்தான் அக்குடையை விட்டுச்சென்றவர்' என்று அவர்கள் மொழியில் சொல்லியிருப்பார்போலும். அவர்கள் இருவரும் சிரித்துக்கொண்டே குடையை எடுத்து நண்பரிடம் கொடுத்து இதை முன்னிட்டுக் கயிலை யாத்திரிகர் ஒருவர் தங்கள் வீட்டுக்கு வரும் வாய்ப்பு ஏற்பட்டதே என்று

மகிழ்ந்து தேநீர்ப்பானமும் அளித்து வணங்கி ஆசி பெற்றுக்கொண்டார். இது ஒரு சிறு நிகழ்ச்சிதான். குடை எடுத்துவைத்துத் திரும்பக் கொடுத்த குடும்பமும் சிறு நடுத்தரக் குடும்பந்தான். குடை புதிது. அதைத் தாமே எடுத்துக்கொள்ள ஆசை ஏற்படுதல் இயற்கைதான். ஆனால் அவர்கள் மனம் அவ்விதம் செல்லவில்லை. நேர்மையை விரும்பியது. அதைப் பலரும் காணும்படி வைத்திருந்ததே அதற்குச் சான்று. ஆகையால் அவ்வூர் மக்கள் நல்ல பண்பாடு உடையவர்கள் என்பதைக் கண்டு கொள்ள எங்களுக்கும் இது ஒரு வாய்ப்பு.

அற்புதக் குகை :

பாகேஷ்வரத்துக்கு மிக அருகில் கௌரிஉட்யார் என்றொரு பெரிய மலைக்குகை இருக்கிறது. தேவியின் இருப்பிடம் என்பது அதன் பொருள். அங்குக் குகைக் கூரையிலும், கீழிடங்களிலும், பக்கங்களிலும் சுண்ணும்புச் சத்தாலும் வங்காரக்கரைசலாலும் பலப்பல உருவ அமைப் புக்கள் எழுந்துநிற்கின்றன. மரம் செடிகள் போலவும், அழகிய தொங்கல்கள் போலவும் பல சிறந்த இயற்கை விளைவுகளாகவும் அவைதோற்றமளிப்பதாகச்சொல்லப்படு கின்றன. மலை உட்பகுதியில் ஏற்பட்ட சிறு வேடிப்புக்களின் வழியே சுண்ணும்பு, வங்காரக்கரைசல்கள் கசிந்துகசிந்து சொட்டிச்சொட்டி ஒன்றின்மேல் ஒன்றாக விழுந்துவிழுந்து இறுகி இயற்கையாக உருவ அமைப்புகள்கொண்டு நிற்கின் றன. அவைகளை ஆங்கிலத்தில் (Stalagmites, stalacides) என்று சொல்வார்கள். இதுபோன்ற குகைகள் பல நம்நாட்டின் பல பகுதிகளில் இருக்கின்றன. நெல்லைமாவட் டத்தில் சிவசைலம் என்னும் ஊருக்கருகில் உள்ள அத்திரி ஆஸ்ரமம் என்ற மலையிடத்தில் இதுபோன்ற குகைகள்

பல இருக்கின்றன. உலகப் பெரிய அதிசயங்களில் சிறப்புமிக்க ஒன்று ஆஸ்ட்ரேலியாவில் இருப்பதாகவும், அந்தப்பகுதியின்மீது ஒரு நதியே ஓடிக்கொண்டிருப்பதாக வும். ஆற்றின் அடி இடத்தின் கீழே ஒரு பாறையில் ஒரு பெருங்குகையில் அது அமைந்திருப்பதாகவும், அது உல கிலேயே இயற்கை அற்புத விளைவுகளில் மிகச் சிறந்த தென்றும் சொல்லப்படுகிறது

## நடுச்சாலை உதவி :

கப்கோட் சாலை மிகக் குறுகியது. மூன்றும் தூரத்தது. முதல் நாள் பெய்த மழையால் பாதையில் சில இடங் களில் தண்ணீர் தேங்கி இருந்தது. ஒரு புறம் சரயுவும் மற்ற பக்கத்தில் மலைச் சரிவும். சரிவு 20, 25 அடி உயரம் இருக்கலாம். அதற்குமேல் வயல் அமைப்புக்கள். வழி செப்பனிட நெடுகிலும் கப்பிக்கற்கள் சேகரம் செய்து போட்டும் வைத்திருந்தார்கள். அந்தக் குறுகிய வழியில் கற்கப்பிச்சேமிப்பு, பாதையின் ஒரு பகுதியை அடைத்துக் கொண்டும் இருந்தது. இந்நிலையில் எங்கள் ஊர்தி மிகமெது வாகவே செல்லவேண்டியிருந்தது. மூன்றுகல் தொலைவு அப்பாதையில் சென்றதும், வழியில் ஒரு பெரிய சரிவு ஏற்பட்டிருந்தது. அங்கு மண்ணோடு பல பெரிய பாறுங் கற்களும் கலந்து உருண்டு விழுந்து பாதையை அடைத்துக் கிடந்தன. மேலே உள்ள கற்களைப் புரட்டுவ தற்கே கருவிகள் உதவியில்லாமல் முடியாது. அப்படியே புரட்டினாலும் மண்ணையும் வெட்டி அப்புறப்படுத்தா விட்டால் உந்தூர்திச் சக்கரங்கள் சேற்றில் மாட்டிக் கொண்டு உருளா. இந்த நிலையில் உந்தூர்தி முன்னே செல்லத்தடை ஏற்பட்டிருந்தது. பின்னேயுமா திரும்பிச் செல்லவும் முடியாத நிலை. பக்கங்களில் சரயுவும், சரிவும்,



கப்கோட் வழியில் கிடந்த (மலைச்சரிவு) கல்லைப் புரட்டித் தள்ளுதல்



கப்கோட் சரயுநதிக்கரையில்
ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
தியானத்திலிருத்தல்

சரளைக் கற்குவியல்களும். மேலே என்ன செய்வது? ஆண்டவன்தான் எங்களுக்கு உதவவேண்டும்.

இவ்விதம் எல்லோரும் மயங்கி அங்கே சிறிதுசிந்தித்து நின்றோம். அன்றும் மாலையில் மழை வந்துவிட்டால்...... அங்கேநின்று யோசிப்பதில் பயனில்லை அல்லவா? சிலர் வண்டியைவிட்டு இறங்கி அப்பாறைகளையாவது புரட்டலாம் என்று முயன்றனர். இந்த நிலையில் அந்த வழியே இருவர் மண்வெட்டி கடப்பாறைகள் எடுத்துக்கொண்டு வந்தார்கள். இது ஆண்டவனே எங்கள் அவல நிலை கண்டு அங்கு எங்களுக்கு உதவிக்குவந்ததுபோலத் தோன்றியது. அவர்களுடைய உதவியையும் பெற்று எங்களில் பலரும் உதவி செய்து கற்களைப் புரட்டி மண்பகுதியிலும் உந்தூர்தி செல்லத் தக்கதாக வேலை செய்து அதைப் பின்னிருந்து தள்ளி அப்பகுதி கடந்ததும் அதில் ஏறிக்கொண்டோம். உதவிக்கு வந்த இருவரையும் அதில் ஏற்றிக்கொண்டோம். அவ்விருவரும் நல்ல உற்சாகமும் உடல் வலிவும் உடைய வாலிபர்கள். கிராமவாசிகள்தான். இருந்தாலும் அடியவர்களுக்கு உதவவேண்டுமென்ற நல்ல எண்ணத்தோடு எங்களுடன் வர ஒருப்பட்டார்கள். இது போன்றே மேலும் சில இடங்களில் மண்சரிவு இருந்தாலும் அது அவ்வளவு பெரிதல்ல. வழியில் பல இடங்களில் சிற்றருவிகளும் நீர்வீழ்ச்சிகளும் பாதையில் விழுந்து சேதப்படுத்தியிருந்தன. அங்கெல்லாம் எல்லோரும்இறங்கி ஊர்தியைத் தள்ளிச்செல்லவேண்டியிருந்தது. அவற்றில் சில நல்ல இழுப்புள்ளவையாகவும் இருந்தன. நிலைத்து நின்று தள்ளுவதிலும் துன்பம் இருந்தது. மேலே 4, 5 கல் தொலைவு சென்றதும் சரயுவை ஒரு பாலத்தின் வழியே கடக்க வேண்டி வருகிறது.

## ‘டயர் பட் கயா !’:

இனி அவ்வாற்றை ஒட்டி இடதுகரையில் செல்ல வேண்டியிருக்கிறது. அந்த வழியில் சரிவுகள் இல்லே. ஆனுலும் சிறிது சென்றதும் ஒரு கடுமையான திருப்பத்தில் முன்னே சென்றுகொண்டிருந்த ஊர்தியிலிருந்து ஒரு பெரிய வேடிச்சத்தம். காரும் நின்றது. ‘டயர் பட் கயா’ (வேடித்துவிட்டது). ஆனுல் அது பின்பக்கத்தில் உள்ள இரண்டிரண்டு டயர்களில் ஒன்று வேடித்துவிட்டிருந்தது. அதில் காற்றுப்போய்விட்டது. இருந்தாலும் மற்ற சக்கரங்களின் உதவிகொண்டு மேதுவாகச் செலுத்திச்செல்ல வேண்டியிருந்தது. வேறு எவ்விதத்திலும் கழற்றி மாட்டி வேலே செய்யக்கூடியதாக இல்லே. மாற்று டயரும் அவரிடம் இல்லே. ஆனுல் பாதை ஏற்றம் இறக்கமாக இருந்தது. அந்த இடங்களில் எல்லாம் அவை நல்ல “பிரேக்” உறுதியோடு செல்லவேண்டியுமிருந்தது. அப்படிச் சென்றதிலும் மற்ருெரு துன்பமும் சேர்ந்து கோண்டது. பின்னே வந்த காரின் ‘பிரேக் ட்ரம்’ சூடு கண்டு புகை கிளம்பத் தோடங்கிவிட்டது. ஆகையால் அந்த வண்டியையும் நிறுத்திச் சூடடங்கிய பிறகே மேலே சேலுத்திச்செல்லவேண்டியதாக இருந்தது.

## கப்கோட் வந்தோம் :

இவ்விதமாக வண்டிகள் ஊர்ந்து ஊர்ந்து சென்று கப்கோட்டை அடைந்த போழுது மாலே மணி ஐந்து. கடந்த தோலேவு பதினுலே கல்தான். இனிமேல் ஊர்தி செல்ல இயலாது. கால் நடை, மூட்டைகள் எல்லாம் மனிதர் சுமந்துசெல்லவேண்டும். இல்லாவிட்டால் குதிரை, கோவேறுகழுதை, கழுதை, இவைகளின் முதுகில் செல்ல வேண்டும். வந்த உந்தூர்திகளுக்குச் சேரவேண்டிய

பணமும் பக்ஷிஷும் கொடுத்து அனுப்பப்பட்டன. உத விக்கு வந்த ஆட்கள் கூலியாக எதுவும் பெற்றுக்கொள்ள மறுத்தனர். தாங்களும் இங்குக் கப்கோட்வரை வரவேண் டிய வேலை இருந்ததாகவும், ஆனால் மறுநாள் வருவதாக இருந்ததில் அன்றே வரவேண்டிய வசதி கிடைத்துவிட்ட தில் மகிழ்ச்சிகொள்வதாகவும், சாதுக்களுக்குத் தங்களால் அந்த நேரத்தில் உதவி செய்ய முடிந்ததைப் பெரும் புண் ணியமாகக் கருதுவதாகவும் சொல்லி உத்தரவு பெற்றுச் சென்றுவிட்டார்கள். இதுபோன்ற நல்லவர் பலர் அங்கிருக் கிறார்கள்.

கப்கோட் :

கப்கோட் ஒரு சிறிய ஊர். சரயு நதிக்கரையில் அமைந்தது. இந்தச் சுற்றுப்புறத்தில் பாகேஷ்வரத்திற்கு இப்பால் இதுதான் பெரிய ஊர். அஞ்சலகம், உயர்நிலைப் பள்ளி, மருந்தகம், வட்டார அபிவிருத்தி அலுவலகம், அரசாங்க வழிச்செல்வோர் தங்கும்விடுதி முதலியனவும் இருக்கின்றன. மக்களில் பலருக்கும் ஆங்கிலம் பேசத் தெரிகிறது. ஹிந்தியும், பகாடியும் பேசுவார்கள். தாய் மொழி பகாடி. இங்கு சரயு மிக ஆழத்தில் ஓடுகிறது. நடுநடுவே குண்டுகுண்டுப் பாறைகளும் நிறைந்திருக் கின்றன. அவைகளின் நடுநடுவே இவ்வாறு ஓடுவதால் வேகமும் இழுப்பும் அதிகம். வேகமில்லாத இடமாகப் பார்த்துக்குளித்தல் வேண்டும். இல்லாவிட்டால் ஒரு பாறையை அடுத்து அதன் முன் புறத்தில் நின்று குளித்தல் வேண்டும். சில பாறைகள் பாசிபிடித்து வழுக்கும். ஆகையால் இடங்கண்டு குளித்தல்தான் நல்லது. இல்லா விட்டால் கரையிலிருந்தே பாத்திரங்களில் மொண்டு குளிக்கலாம்.

இங்கு நாங்கள் அவ்வூர் கிராமத்தலைவருக்குச் சொந்தமான கடைக்கட்டிடத்தின் மாடியில் தங்கினோம். அவர்கள் மொழியில் கிராமத் தலைவர் என்பதை பட்வாரி என்று சொல்கிறார்கள். அவர் அங்குள்ள நிலம் படைத்த செல்வந்தர்களில் பெருநிலக்கிழார் கடைகளும் வைத்திருக்கிறார். அங்கே தங்கி மூட்டை தூக்கிச்செல்வதற்கு ஏற்பாடு செய்துகொண்டு மறுநாட்காலையில் அதைவிட்டுப் புறப்படுவதாகத் திட்டம். அன்று மாலையிலே சரயுவில் நீராடிப் பலரும் களைப்பைப்போக்கிக்கொண்டோம். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் மாலைத்திருமஞ்சனம்முடித்துச் செபமும் பாராயணமும் செய்துகொண்டு ஓய்வு கொண்டார்கள். இதற்குள் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்துக்காகசெய்திருந்த தண்டியும் அங்கு வந்துசேர்ந்தது. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் அந்தத் தண்டியில் எழுந்தருளிவர மற்றவர்கள் கால்நடையாகச்செல்வதுஎன்றும் எங்கெங்குத் தேவையோ அங்கங்கும் சவாரிக் குதிரைகள் திட்டம் செய்துகொள்வது என்றும் திட்டம்.

## தண்டி ஏற்பாடு :

தண்டி நயனித்தாலிலிருந்து புதிதாகச்செய்துவந்தது. அதனைச்சுமந்துசெல்ல ஆட்கள்ஆறுபேர்அமர்த்தப்பட்டார்கள். பாகேஷ்வரத்திலிருந்தோ அல்லது கப்கோட்டிலிருந்தோ நிலைமை எவ்விதம் ஒத்துவருகிறதோ அந்த ஊரிலிருந்து தண்டி எடுக்கவேண்டும். தண்டி என்பது ஒரு சாய்வுநாற்காலிபோல வெகுஎளிதில் எடுத்துச்செல்லத்தக்கதாக மரச்சட்டத்தால்செய்யப்பட்டு துணிஅடைப்புச்செய்து மேலே மடக்கக்கூடியதான விதானமும் அமைக்கப்பட்டிருப்பது நால்வரும் எடுக்கலாம்; அறுவரும் சுமக்கலாம். இலேசாக இருக்கும். அதன் விலை மிகக் குறைவுதான்.

ரூ. 35 க்குள். தண்டி சுமக்கும் ஆள் ஒன்றுக்கு நாள் ஒன்றுக்கு சம்பளம் ரூ. 5. தண்டி சுமக்காத நாட்களில் அவர்களுக்குக் கூலி நாள் ஒன்றுக்கு ஆள் ஒன்றுக்கு ரூ. 2-50 என்று திட்டம் செய்துகொள்ளப்பட்டு எழுதி வாங்கப்பட்டிருந்தது. பக்ஷிஷாக (இனுமாக) ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருவுள ளிறைவுக் கேற்றபடி கொடுத்தாலும் உண்டு; இல்லாவிட்டாலும் இல்லை. நயனித்தாலிலிருந்து பாகேஷ்வரம் வரையிலும் அவர்களுக்கு பஸ் சார்ஜ், திரும்பும்வழியில் எங்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் தண்டியைவிட்டு இறங்கி வேறு வாகன வசதி செய்துகொள்கிறார்களோ அந்த இடத்திலிருந்து நயனித்தாலுக்குத்திரும்பப்போவதற்கு வழிச்செலவும் படிச்செலவும் கொடுத்தல்வேண்டும். மிலம் வழியில் சென்று கர்ப்பியாங் வழியில் திரும்புவது என்பதும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதுபோன்ற கட்டுத்திட்டங்கள் செய்துகொண்டே அதை எடுத்துவரச் செய்யப்பட்டது.

### கூலிகளின் குணச்சித்திரம் :

அவர்கள் கூலிகளேயானாலும் உலகம் நன்றாகத் தெரிந்தவர்கள். நயனித்தாலில் பலர் பலதேசத்தவர்கள். வருவார்கள். அவர்களோடெல்லாம் பழகிய பழக்கமும் இவர்கட்கு இருந்தது. அவர்கள் மலைநாட்டினர்தான். ஆனாலும் அவர்களில் பலர் இந்திப் படிப்பறிவு பெற்றவர்கள், ஒரு சிலர் ஆங்கிலமும் தெரிந்துவைத்திருந்தனர். ஆங்கிலத்தில் பேசினால் புரிந்துகொண்டு சிலவார்த்தைகளில் மறுமொழி கொடுக்கத் தெரிந்தவர்கள். கண்டு பழகும் ஒரு சில நாட்களிலே அவர்களுக்கு எஜமானனாக வாய்ப்பவர்களின் மனோநிலையையும் அவர்களிடம் எவ்விதம் பழகினால் அவர்கள் மனம் திரியாது பணம்பெறலாம் என்பதையும்

நன்கு பயின்றவர்கள். ஆகையால் கண்டதுமே ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் உதாரகுணம் தெரிந்துகொண்டார்கள் போலும். அதனை முழுவதும் பயன்படுத்திக் கொண் டார்கள். வழியில் களைத்திருப்பார்போலக் காட்டிக் கொள்வார்கள். பிஸ்கோத்தும் பெப்பர்மிண்டும் பிறவும் கிடைக்கும். 'எதுவும் கிடைக்காது. காசு கொடுத்தாலும் வாங்கமுடியாத இந்த இடத்தில் நாங்கள் துன்பப்படு கிறோம். பசி எங்களை வாட்டுகிறது. கொஞ்சம் ஆட்டா இருந்தால் ஆளுக்கு ஒரு ரொட்டி செய்து தின்று களைப் பாறுவோம். எங்கள் ஒப்பந்தப்படி நாங்கள் அது கேட்கக்கூடாதுதான். என்ன செய்வது' என்பார்கள். கொஞ்சமாக, அந்த அறுவருக்கும் வேண்டிய அளவு மாவு பெற்றுக்கொள்வாாகள். 'கடுங்குளிரில் நாங்கள் இரவெல்லாம் உறக்கமில்லாமல் சுருண்டு கிடந்தோம். படே மகந்துவைச் சுமந்துசெல்லும் பாக்கியம் எங்களுக்கிருந்தும் இதே துன்பம் போகுமிடங்களி லெல்லாம் இருந்தால் நாங்கள் எப்படி வரமுடியும். வழியில் யாராவது நோய்கண்டு தங்கினாலும் உங்கள் பயணம் தடைப்படுமே. கம்பளிச்சட்டையோ அல்லது போர்த்திக் கொள்ள ஒரு முரட்டுக் கம்பளியோ எதுவானாலும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் உத்திரவாகிறபடிவாங்கிக்கொள்ளு கிறோம். அருள் செய்யவேண்டும். மகாதயாளுவான மகந்த் அவர்கள் இதற்கெல்லாம் மறுக்கமாட்டார்கள். பிறர் துன்பங் கண்டு இரங்கும் தன்மையாளர் அவர்கள்' என்று நயமாகக் கேட்பார்கள். பக்ஷிஷ் (இனாம்) கொடுப் பதில் வேண்டுமானாலும் பிறகு குறைத்துக்கொள்ளலாம் என்பார்கள்.

'சுவாமி வித்யானந்தாதானே உங்களைத் திட்டம் செய்தது. அவர்களிடம் கேட்டுக்கொள்ளுங்கள்' என்றால்

' அவர்கள் மிகவும் கடுமையான குணம் படைத்தவர்கள். கோடுப்பார்கள், எங்கள் சம்பளத்தில் அல்லவா பிறகு பிடித்துக்கொள்வார்கள். எல்லாவற்றையும் வழியில் செலவு செய்துவிட்டு வீட்டுக்குத் திரும்பும்போது வெறுங் கையோடு செல்லமுடியுமா? எங்களுக்கு ஏதாவது வருமானம் கிடைப்பதாக இருந்தால் இந்தத் தொழிலில் தான் கிடைக்கவேண்டும். அதுவும் இந்தக் கோடைக் காலத்தில் கிடைத்தால்தான். பிறகு எங்களுக்கு யாரும் இப்பக்கத்தில் வேலைகொடுக்கமாட்டார்கள். ஆகவே இப் பொழுது கிடைப்பதை வைத்துக்கொண்டு, மறுகோடையில் எங்களுக்கு வருமானம் வந்து வீட்டிலுள்ளோருக்கு அனுப்பும்வரை இந்தப் பணம்தான், எங்களுக்கும் எங்கள் ஏழைக் குடுபங்களுக்கும் உதவி ' என்பார்கள்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் சேவையில் ஈடுபட்ட நாங்கள் இதுபோல யாரை அணுகிக் கேட்கமுடியும்' என்பார்கள். இதுபோலவே ஒரு நாள் சத்து, மற்றொரு நாள் அதிகாலையில் தேநீர், மற்றொருநாள் தேயிலையும் சிறிது சர்க்கரையும் என்று ஏதாவது கேட்டுக்கொண்டே இருப்பார்கள்; வாங்கிக்கொண்டே இருப்பார்கள். அவர்கள் கேட்கும் முறையில் இல்லை என்றே சொல்லமுடியாது. ' ஆனால் நாங்கள் ஒப்பந்தப்படி எதுவும் கேட்கக்கூடாது தான் ' என்று சொல்லிச் சொல்லியே கேட்டுக்கொண் டிருப்பார்கள். வந்திருப்பவர்களில் யார் யார் செல்வாக் குள்ளவர்கள், யார்யாரை நயந்துகொண்டால் எல்லாம் பெற்றுக்கொள்ளலாம் என்பதையும் தெரிந்துகொண்டார் கள். வழியில் கூடாரம் அடிக்கவும் இன்னும் பலவிதத்திலும் உதவிகளும் செய்தார்கள். அன்பாகவும் நடந்துகொண்டார்கள். மரியாதை தெரிந்தவர்களாகவும் காட்டிக்கொண்டார்கள்.

இதுவல்லாது, ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் இளகிய திருவுள்ளம் நடுவழிகளில் பெரும் ஏற்றம் கடும் இறக்கத்திலெல்லாம் தண்டியையவிட்டுக் கீழே இறங்கியே நடந்து செல்லச்செய்யும். வழுக்கல் சறுக்கல்கள் உள்ள இடங்களிலும் இறங்கித் துன்பப்பட்டுக்கொண்டே நடப்பார்கள். கற்பாறைகளின் வழியே கடுவழி செல்லும் பொழுதெல்லாம் இறங்கி எவ்வளவு வெயிலானுலும் குளிரானுலும் நடந்தே செல்வார்கள். ஆறுகள் கடுவிசையுடன் செல்லும் பகுதிகளிலும் இறங்கிக்கொள்வார்கள். இவ்விதம் அக் கூலிகள்மிகத்துன்பப்படக்கூடிய இடங்களில் இறங்கியே செல்லுவார்கள். 'அவர்களும் மனிதர்கள் தாமே. நமக்கு மிகுந்த துன்பமாக இருந்தால் அவர்களுக்கும் அதே துன்பந்தானே. வழியில் உதவிக்காக அவர்களை அமர்த்திக் கொண்டோம். அவர்கள் காலை ஒடித்துக்கொள்ளும்படி அவர்களைத் துன்பப்படுத்தலாமா' என்று சொல்லிக் கொண்டே பல. இடங்களிலும் தாமே துன்பத்தை ஏற்றுக் கொண்டார்கள்.

இதனுல் எல்லாம் அக் கூலிகளும் எங்களிடம் அதுவும் தென்னுட்டினரிடம் அதிக மதிப்புக்கொண்டனர். எந்த வேலை சொன்னுலும் ஒப்பந்தத்தைக் காட்டிப் பேசமாட்டார்கள். அதற்கேற்பப் பயனும் பெற்ருர்கள். இவ்விதம் அவர்களிடம் கருணை காட்டியதன் விளைவால் யாத்திரை முடித்துத் திரும்பும்போது 'ஸ்ரீலஸ்ரீ குரு மகாசந்நிதானத்தில் தென்னுட்டிற்கே வரச் சொன்னுலும் அங்கே வந்துவிடுகிருேம், அவர்களை விட்டுப் பிரிந்து எப்படிப் போவது' என்று கண்ணீர்விடத் தொடங்கி விட்டார்கள் அக்கூலிகளும். அவர்களைத் தேற்றி அனுப்புவது மிகவும் மனத்துன்பத்தை விளைத்தது.

## அறுவகைக் குற்றங்கள் :

அவர்கள் அறுவர் தண்டிஎடுக்கவாய்த்தது காமக் குரோத லோப மோக மத மாற்சரியங்கள் என்ற அறு வகைக் குணங்களும் தம்மைச் சூழ்ந்து நிற்பதாகவும், அவற்றை என்று விட்டோழிக்கிறேமோ?, என்று அவற் னின்றும் விடுதலே நமக்கு கிடைக்கிறதோ அன்றே பெருமான் திருவருளுக்கு இலக்காகலாம் என்ற உண்மையை இக்கயிலே வழியில் பெருமான் உபதேசித்து வருவதாகத் திருவுளம் கோள்வார்கள் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில்.

அன்றிரவு நல்ல மழை. மறுநாட் காலேயில் நல்ல வேள்ளப்பெருக்கு. முதல்நாள் மாலே தேளிந்திருந்த தண்ணீரும் குழம்பிச் சேருக வந்தது. அங்குவந்த மறு நாள் அதிகாலேயில் புறப்படுவதாகத் திட்டம். ஆகவே அதி காலேயிலேயே ஸ்ரீலஸ்ரீ குரு மகாசந்நிதானத்தில் திருமஞ் சனமாகிப் பூஜை பாராயணங்களே முடித்துக்கோண்டு தண்டியில் பெருமான் திருநாமம் சோல்லி எழுந்தருளி ஞர்களீ. மற்றவர்களும் பின்னே சேல்லலாஞர்கள்.

## மூட்டைகட்டுங் கலே :

நானும் ஒரு சிலரும் தங்கி மூட்டைகளேக்கட்டி நிறை சேர்த்து மூட்டை தூக்கிகளிடம் ஒப்படைப்பதற்குக் காலே 9-30 மணிக்குமேலாகிவிட்டது. மூட்டை கட்டுவதில் துன்பம் இல்லே. ஆஞல் மனிதன் தூக்குவதற்கு 60சேர். குதிரை சுமப்பதற்காஞல் 80 சேர் இருத்தல்வேண்டும். குறைந்தால் அவர்கள் மறுப்புச் சேய்யார். அதிலும் குதிரை சுமக்கும் பாரத்தில் இரு மூட்டைகளின் எடை ஒன்ருயிருக்க வேண்டும். ஒரு மூட்டை ஒரு எடையும் மற்ருென்று கூடுதல்

குறைவாகவும் இருத்தல்கூடாது இருபுறமும் ஒரே எடையில் போடத்தக்கதாக இருத்தல்வேண்டும். ஆகையால் நாம் அவ்விதம் பார்த்துச் செய்துகொடுக்காவிட்டால் அக்கூலிகள் அவரவர் மனம்போனபடி எடை சரிசெய்து எல்லாவற்றையும் பிரித்துக்கட்டிவிடுவார்கள். ஒரு சேர், கால்சேர், அரைச்சேர். அதாவது ஒரு பவுண்டு, அரைப் பவுண்டு நிறை அதிகமாக இருந்தாலும் அதனை ஏற்க மாட்டார்கள். எடை எவ்வளவு குறைவாக இருந்தாலும் அந்த மூட்டையைப் பார்க்கப் பெரிதாகஇருந்து எடையில் குறைவாக இருந்தாலும் அதில் ஏதோ சூதிருக்கிறதென்று நம்மை நம்பமாட்டார்கள். ஆகையால் எல்லாவற்றையும் அடக்கமாக, பார்க்க ஒரே அளவாக எடையிலும் அவரவருக்குள்ளபடி சேர்த்துக் கட்டிக்கொடுக்கும் வேலை சிரமமானது

படுக்கைகள் பலவும் எடை குறைவாக இருந்தன. அவை மழையில் நனையாமல் இருப்பதற்காகவும் எந்த இடத்திலும் கீழே விரித்துப் படுக்கத்தக்கதாகவும் இருக்க எல்லோரும் எண்ணைத் துணியும் (Oil cloth) முரட்டு றேட்டும் வாங்கிப் படுக்கைச் சுருட்டின் மீது போட்டுக் கட்டியிருந்தோம். அவரவரும் ஒரு தலையணை, குளிருக்கு வேண்டிய கம்பளிப்போர்வை, விரிப்புக்கள் இரண்டு மூன்று கம்பளிப்போர்வை ஒன்றிரண்டு. இதுபோன்ற பொருள்களை படுக்கைகளோடு வைத்துக்கொண்டு இருந்தோம். அவற்றில் ரோட்டி, பால்தூள், பெப்பர்மிண்ட் இவை போன்ற டப்பிகளை எடைக்கணக்குக்கு ஏற்றவாறு வைத்துக் கட்டிச் சரிசெய்து கொடுக்கப்பட்டது. மற்றப் பொருள்களுக்கும் பொதுவாக கோணிகள் அல்லது தண்ணீர் புகாத கித்தான்களில் பைகள் தைத்து எடுத்து வந்திருந்தோம். அப்பைகளில் போட்டுக் கட்டி

வைத்தோம். இல்லாவிட்டால் மலைநாட்டு மழையிலும் பின்பு மேல்பகுதிகளில் பனி முதலியவற்றால் அரிசி முதலிய உணவுப் பண்டங்களும் பிறவும் நனைந்து கெட்டுப்போகு மல்லவா? அப்பொருள்கள் இரண்டு மாத காலத்துக்கு வேண்டியவை என்பது முன்னமே தெரிவிக்கப்பட்டிருக் கிறது. ஆகையால் கூலிக்காரர்களைக் கட்டச்செய்தால் நல்ல முறையில் அமையாது. அத்தோடு பொருளிழப்பும் ஏற்படலாமல்லவா? உறுதியாகவும் கட்டிக்கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் அவை பிரிந்து வழியில் கொட்டிப்போய்விட்டாலும் அவர்கள் கவலைப்படமாட்டார் கள். 'தாங்கள் நன்றாகக்கட்டிக்கொடுக்காததற்கு நான் பொறுப்பல்ல' என்றும் சொல்லிவிடுவார்களாம். இவ் விதமாக எல்லாப் பொறுப்பையும் நாம் ஏற்றுக்கொண்டு கட்டிக்கொடுத்தால் அதை அவர்கள் சுமப்பார்கள். நடுவழியில் எங்காவது இறக்கி இளைப்பாற வேண்டியிருந் தாலும் நின்ற நிலையிலே தள்ளிவிட்டு ஓய்வுபெற்றுப் பிறகு எடுத்துக்கொண்டு செல்வர். இதற்கெல்லாம் ஏற்றவாறு மூட்டைகட்டுதல் வேண்டும். ஆகவே அந்தக் கலையையும் பழக்கத்தால் கற்றுக்கொள்ளவேண்டியிருந்தது. அத்தோடு எவ்வளவு நன்றாகக் கட்டியிருந்தாலும், சரியாகக் கட்ட வில்லை; இவ்விதம் இருந்தால் என்றால் தூக்கமுடியாது என்பார்கள். அவர்கள் கண்ணெதிரே எடை போட்டுப் பார்த்துக்கொண்டாலும் சிறிது தூக்கிப்பார்த்துவிட்டு எடை அதிகம் இருக்கும்போல் இருக்கிறதென்பார்கள். இது போன்றே ஏதாவது ஒரு குறைபாடு சொல்லிக்கொண்டே இருப்பர். அவர்களோடு பேசிப்பழகியவர்களால் தான் அவர்களைக்கொண்டு வேலைவாங்க முடியும்,

எவ்வளவுபொறுமைசாலியாக இருந்தாலும், வெளியார் அவர்களோடு சண்டைபிடிக்கும்படி நேரிட்டுவிடும். அவர்

கள் பேசுகிற முறை. யாத்திரிகராகவரும் எல்லோரும் இது போன்ற நிலைகளில் பொறுமையை மேற்கொள்ளவேண்டி வரும். எப்படியாவது வேலை ஆகவேண்டும் என்ற எண்ணம்தான் வரவேண்டும். ஒவ்வொன்றுக்கும் மறுமொழி சொல்லிக்கொண்டே இருத்தலும் கூடாது. மூட்டையை அவர்களிடம் ஒப்படைத்துவிட்டால் பிறகு யாதொருகுறை யும் இல்லாமல் குறிப்பிட்ட இடத்துக்குத் தூக்கிவந்து விடுவார்கள்.

கூடியவரையில் அவர்கள் பண்டங்களைத் திருடமாட் டார்கள். ஏனெனில் அவர்கள் எங்காவது யாரிடமாவது தவறுசெய்துவிட்டதாகத் தெரிந்தாலும் வியாபாரிகள் அவர் களைநம்பித் திபேத் முதலிய வெளியிடங்களுக்கும் மலைகளி லுள்ள பலவூர்களுக்கும் அனுப்பமாட்டார்கள். அவனுக்குப் பிழைப்பு கெட்டுவிடும். அதிலும் கள்வராக உள்ளவர்கள் இல்லை என்றும் சொல்லமுடியாது. யாத்திரிதானே என்று துணிந்து செய்தும் விடுவார்கள். அவர்களைக் கண்டுபிடிப் பதற்காக அலைந்துகொண்டிருக்க முடியுமா? பட்வாரிகளி டம் அவர்களைப்பற்றிய அடையாளங்களைச் சொல்லிவந்து விட்டால், அவர்கள் அக்கள்வரைக் கண்டுபிடித்துத் தண் டிப்பர். இழந்தபொருள் இழந்ததுதானே. வறுமையில் உழல் வோரிடம் எதைக்கொண்டு வசூலிப்பது. பொதுவாகவே, நாம் வெளியிடங்களுக்குச்செல்லும்போது பிறர்மனத்தைக் கவரக்கூடியதாகப் பணத்தையோ பண்டங்களையோ விரித்துக்காட்டிக்கொள்ளக்கூடாது. அவ்விதம் செய்வ தால் நல்லவனையும் கெட்டவனாக ஆக்கிவிடுவோம். அவர்கள் கூலிக்காரர்கள். மிகவும் ஏழை எளியவர்கள் என்பதும் நமக்குத் தெரியும். அவர்கள் முன்னிலையில் நல்ல பண்டங்களைக்காட்டி அவர்கள் மனத்தைக் கவரும் படிச் செய்துவிட்டு, அவனைத் தவறு செய்யும்படி, அவன்

மனம் அவனைத்தூண்டும்படி நாமும் செய்யலாகாதல்லவா? ஆகையால், நாமே மூட்டை கட்டுவதை மேற்கொண்டு கட்டிவைத்து அதை அவர்களிடம் ஒப்புவித்தலே சிறந்த முறையாகும்.

சிலர் அந்த வேலையை இழிந்ததென்றோ தம்முடைய தகுதிக்கேற்றதன்று என்றோ பெருமை உணர்ச்சியால் அவர்களைக்கொண்டு கட்டச் செய்து நடுநடுவில் சில ஆசைப்பொருள்களை - இன்றியமையாதுவேண்டிய கம்பளி, கம்பளிச் சட்டை தலைக்குல்லாய் (பனிக்குல்லாய்) போன்ற பொருள்களை இழந்தார்கள். இதுபோல் இழப்பின்வழியே நாமும் அனுபவம் கொள்ளவேண்டாமல்லவா?

## வழியில் தவறு :

இங்கும் தவறு ஒன்று நடைபெற்றுவிட்டது. எங்களோடு படுக்கைக்கட்டு ஒன்று வந்துகொண்டே இருந்தது. அதை எங்களவர்கள் எங்களுடையதல்ல என்றும் சுவாமிகளோடு வந்தவர்கள் தங்களுடையதல்ல என்றும் ஒதுக்கிக்கொண்டேவந்தோம். அதுவரை உந்தூர்தியிலேயே அதனை ஏற்றி வந்ததில் துன்பம் தெரியவில்லை. ஆனால் இப்பொழுது ஆட்தலையில் அல்லவா பொருள்கள் போகவேண்டியிருந்தது. அந்த நிலையில் அந்தப்படுக்கை யாருடையது என்பதைப் பார்க்க எண்ணிப் பிரித்துப் பார்த்தேன். அது நாங்கள் நயனித்தாலில் அங்கேயே இருக்கட்டும் என்று கீதா சத் சங்கத்தில் விட்டுவந்த விலை உயர்ந்த பொருள்களைச் சேர்ந்தது. ஒரு வேல்வேட்டு மெத்தையும் தலையணைகளும். நான் அங்கு அதனைச் சுவாமிகளிடம் ஒப்புக் கொடுத்துச் சீட்டும் பெற்று வந்தேன். எப்படியோ தவறி அதுவும் மற்றப் பொருள்களோடு ஏற்றப்பட்டு இதுவரை வந்துவிட்டது.

இதேபோல பலவும் றெட்டுவிரிப்புப்போட்டுக் கட்டி இருந்த நிலையில் அதனைப் பிரிக்காமலே எல்லோரும் கழித்துக் கழித்துக்கொண்டே வந்திருக்கிறோம். இதனை அறிந்து நானும் வருந்தினேன். சுவாமிகள் அவர்களும் வருந்தினார்கள். அதிகப்படியாக உள்ள இதற்காகத் தனி ஆள் அமர்த்துவதா? சுவாமிகள் அந்தப் படுக்கைச் சுருளை அங்கேயே விட்டுச் செல்லும்படியும், அதனை அந்தப் பட்வாரியிடம் சொல்லி பாகேஷ்வரத்தில் கொண்டுசேர்த்து வைத்திருக்கும்படிச் செய்வதாகவும் சொன்னார்கள். அவ்விதமே அதை அங்கே விட்டுச்சென்றோம். விலை மதிப்பு அதிகமுள்ள அருமையான அந்தப்பொருளை அங்கேவிட்டுச் செல்கிறோமே; அது திரும்புங்காலையில் எங்களுக்கு வந்து கிட்டுமா? என்ற கவலை கொள்ளாமல் இருக்கமுடியவில்லை.

## என் பை போய்விட்டது ;

எங்களோடு வந்தவரில் ஒரு நண்பர். தன் உடமைகளைத் தனித் தனியே சிறுசிறு பைகளிலிட்டு, பல பைகளையும் தன் பக்கத்தில் வைத்துக்கொண்டிருப்பார். அவற்றில் குளிர் இடங்களில் பயன்பட வேண்டிய கம்பளிச்சட்டைகள், கம்பளிப் போர்வைகள் முதலிய அருமையான இன்றியமையாத பொருள்கள் இருந்தன. அவற்றை எல்லாம் ஒரே முட்டையாகக்கட்டிப் பெரிதாக, ஒரு எண்ணிக்கை வரக்கூடியதாக இருக்கும்படிச் செய்தல் நலம் என்று சொல்லிப்பார்த்தேன். அவர் அதைக் கேட்கவில்லை. எங்குச் சென்றாலும் தன் பொருள்களைத் தாம் பார்த்துக்கொள்வதாகவும், அதற்காக எவரும் கவலைகொள்ளவேண்டியதில்லை என்றும் சொல்லி வந்தார். இரண்டு மூன்று நாட்கள் அவ்விதமே பார்த்தும் வந்தார். அன்றும் அவ்விதமே முதலிலேயே தன் பொருள்களை எடுத்துவைத்துக்கொண்டார் பாகேஷ்வரத்தில்.

அன்று செல்வதற்கு ஊர்தியா. நடையா என்ற குழப்ப மிருந்த பொழுது அதை எடுத்துப் பத்திரமாக வைத் திருந்தார். புறப்படும் அவசரத்தில் அதை வெளியேயும் எடுத்துவந்தார். ஆனல் ஊர்தியில் எடுத்து வைக்க மறந்து விட்டார். அதைக்கண்ணில்படக் கூடிய இடத்திலில் லாமல் வேறு ஒரு தனியிடத்தில் வைத்துவிட்டார். எல்லாப் பொருள்களும் ஏற்றியாகிவிட்டதா என்று நாங்கள் தங்கி யிருந்த இடத்தைப் பலரும் சோதனை செய்து பார்த்து விட்டுத்தான் வந்தோம். அங்கில்லாது வேறிடத்தில் அவருக்குமாத்திரம் தெரியக்கூடியதாக வைத்திருந்த அவரும் சென்று பார்த்துவந்தார், ஆனல், அவசரத்தில் தனியிடத்தில் உள்ள அந்தப் பைகளை மறந்துவிட்டார். இங்குவந்ததும் பார்க்கவில்லை. இன்று புறப்படும்பொழுது தேடினர். கிடைக்கவில்லை. சுற்றிச்சுற்றி வந்தார். வெகு நீண்ட நேரத்திற்குப் பின்னர்தான் அப்பொருள்களைப் பாகேஷ்வரத்திலேயே விட்டுவிட்டு வந்தது அவர்நினை விற்குவந்தது. நாங்கள்வந்த ஊர்திகளும் திரும்பச்சென்று விட்டன. அவருக்காகப் பலரும் தங்கவும் முடியவில்லை. போகும் வழியில் கிடைப்பதை வாங்கிக்கொள்ளலாம் என்று அவரைத் தேற்றிவிட்டு எல்லோரும் புறப்பட்டோம்.

சுவாமிகள் அவரைத் தேற்றிப் ‘பாகேஷ்வரத்தில் கிடைத்தால் எடுத்துவைக்கும்படி இந்தப் பட்வாரி மூலமாகச் செய்தி சொல்லி அனுப்புகிறேன். கிடைத்தால் எடுத்துவைத்திருந்து இந்தப் படுக்கையோடு அது நமக்கு வந்துசேர்ந்துவிடும். மனம் வருந்தவேண்டாம்’ என்று சமாதானம் சொல்லி வைத்தார்கள். முதல்நாள் விட்டுச் சென்றது, பிறகு எப்பொழுது இப்படுக்கை அங்குப்போய் சேருமோ, அந்த நாள்வரை வைத்த இடத்திலேயே இருந்தால்தானே அது கிடைக்கும்.

**ஆள் கிடைத்தது :**

இந்த இடத்தில் எங்களுக்கு ஒரு நல்ல வாய்ப்பும் கிடைத்தது. அதுதான் கூலிகள். அதுவும் அத்தனை குதிரைகளும், முட்டை தூக்கிகளும். முதல் நாள் நாங்கள் வந்திறங்கியதும் அக்கூட்டத்தினர் தல் பகுதியிலிருந்து கப்கோட் கடைக்குப் பண்டங்கள் ஏற்றிவந்தார்கள். சுமை இறக்கிவிட்டுப் பாகேஷ்வரத்திற்குச் சென்று ஏதாவது முட்டைகள், சுமைகள் கிடைத்தால் ஏற்றிக் கொண்டு அம்மலை வழியே செல்லலாம் என்ற திட்டத்தோடுதான் அவர்கள் வந்தார்கள். அவர்கள் அப்பகுதியைச் சேர்ந்தவர்கள். நாங்கள் கூலி தேடி நின்றோம். இருவருக்கும் வாய்ப்பு ஒன்றாக அமைந்தது. இல்லாவிட்டால் அந்தப் பட்வாரியின் உதவிகொண்டு கிராமங்களுக்குச் சொல்லியனுப்பி, ஆட்களை அழைத்துவரச் செய்து, கூலி பேசி ஏற்பாடு செய்துகொண்டு புறப்பட வேண்டும். அவ்விதம் செய்வதில் மறுநாளே புறப்பட முடிந்தாலும் முடியும். இல்லாவிட்டால் இரண்டொரு நாட்கள் ஆனாலும் ஆகலாம். அவ்விதம் தங்கல் இல்லாமல் அன்றிரவே கூலி பேசிக்கொண்டு மறுநாளே நாங்கள் புறப்பட உதவியது கயிலைமலையான் அருள்தான்.

இந்த வாய்ப்பு எங்களுக்கு முன்னிருந்ததைவிட நல்லதொரு உற்சாகத்தை அளித்தது. பின் தங்கிய எல்லோரும் 10-30 மணிக்கு அவ்விடம் விட்டுப் புறப்பட்டோம். அன்று சியாமாதூராவில் இரவு தங்குவதாகவும். வழியில் தேவ்பகோரில் நடுப்பகல் உணவு கொள்வதாகவும் திட்டம். பலபல பகுதியினராகப் பிரிந்து நாங்கள் சென்றோம். அதில் கடைசிப் பகுதியைச் சேர்ந்தவன் நான்.

**பிண்டாரி :**

முதலில் வழி சரயுவை ஒட்டியே செல்கிறது. அவ்வழி ஆற்றின்பக்கத்தில் சென்ருலும் மிக ஆழத்தில் செல்கிறது. ஒருகல் தொலைவு சென்றதும் பாதை இரண்டாகப்பிரிகிறது. ஒரு வழி பிண்டாரி பனிப்பாறைக்கும், மற்றது சியா மாதூராவுக்கும். பிண்டாரி பனிப்படிவங்கள் உலகில் மிகச் சிறந்த பனி அடைவுப்பகுதிகளில் சிறந்தன. அதைப் பனிக்கடல் என்றே சொல்வர். அரிய காட்சி. ஆனுலும் அதற்குச் செல்லவேண்டுமானுல் மிக ஏற்றமானபாதையில் ஏறிச் செல்லுதல் வேண்டும். அதற்காக இரண்டு மூன்று நாட்கள் செலவிடவேண்டும். மழை அடிக்கடி வந்துவிடும். பனிமூட்டங்களும் ஏற்படும்.

**சுமை :**

அந்த வழியைவிட்டு எங்கள் வழியிலேயே சென்ருேம். உயரமான மேட்டிடத்தில்சென்றபாதை, கீழே இறங்கிச் சம வெளியில் செல்வதுபோல ஆற்றங்கரையிலே ஒரு கல் தொலைவு சென்று பிறகு சிறிதுசிறிதாக உயர்ந்து மேலே போகவேண்டியிருக்கிறது. காட்சிகள் மனதிற்கு மகிழ்ச்சி ஊட்டுவனவாக இருக்கின்றன. ஆனுலும் வழியில் இடிசல் கள் ஏற்பட்டிருந்ததால் வெகு நிதானமாகச் செல்ல வேண்டியிருந்தது. மேலே ஏறத்தொடங்கி அந்தப்பாதை யில் செல்ல நேரிட்ட பிறகு வழியோரங்களில் பெரும் பாலும் மரங்கள் இல்லை. மேலே வெயில்சூடும் அதிகமாக இருந்தது. அந்த நிலையில் நாங்கள் மேலே இரண்டொரு சட்டைகள் போட்டுக்கொண்டும், தலையில் கம்பளித் துண்டுகட்டிக்கொண்டும், கையில் கூர்க்கம்புங், குடையும், தோளில் வெந்நீர்க் குப்பி முதலியன இட்டபையும்,

எடுத்துச் செல்வது துன்பமாகவே இருந்தது. அது பெருஞ்சுமையாகவும் இருந்தது. அதுவுமல்லாமல் காலில் கனமான பனிமிதியணியும் போட்டு நடந்து பழக்க மில்லாதபடியால் அதையும் ஒரு பெருஞ்சுமையாக காலில் பூட்டி எடுத்துச் செல்லவேண்டியதாகவும் இருந்தது. பெருஞ்சுமைகளைத் தேவையில்லாது சுமந்து துன்பப்பட வேண்டியதாக இருக்கிறதே என்று வருத்தமும் கொண் டோம். இவ்விதமாகச் சில கல் தொலைவு சென்றதும் ஆற்றைவிட்டு அப்பாதை பிரிந்து திரும்பிவிட்டது.

## உருண்டு விழும் கல் :

சிறிதுசிறிதாக வழி ஏற்றமாகவும் போய்க்கொண்டே இருந்தது. வழியில் இரண்டொரு வீடுகள்கொண்ட வயற்புறங்கள் இருந்தன. பால் மாடுகளும் இருந்தன. வேப்பமிகுதியினால் தண்ணீர் வேட்கை மிகுதியாக இருந்தது. அம்மக்கள் உதவி செய்யக்கூடியவர்களாக இல்லை. ஆனால் பாகேஷ்வரத்திலிருந்து இதுவரையிலும் அப்பகுதிகளில் வயல் அமைப்புக்கள் செய்திருந்தார்கள். அது நல்லதொரு காட்சியாகவே இருந்தது. நாங்கள் சென்ற பகுதி ஒரு பெரிய மலைச் சரிவு. அது மிக உயரமாக மேலே சில ஆயிர அடி உயரம் சென்று கொண்டே இருந்தது. சிறிது தொலைவில் சரயுவின் உபநதி ஒன்றும் பக்கத்தில் ஓடிக்கொண்டிருக்கிறது. அந்தப்பக்கத்திலும் மலைச்சரிவுதான். ஆனால் அப்பகுதியி லுள்ள சரிவுகள் செங்குத்தாக இருந்தன. ஒருகணவாய்ப் பகுதியில் செல்வதற்கொப்பாகவே இருந்தது வழி. அப்பகுதிகளில் மழை பெய்யுங் காலங்களில் செல்வது நல்லதல்ல. மேலே யிருந்து கற்கள் உருண்டு வந்து விழுந்துகொண்டே இருக்கின்றன. மேலே இருந்து

கவண்கோண்டு வீசினுல் எவ்வளவு வேகமாக வந்து விழுமோ அதுபோன்ற வேகத்தில் சில சமயங்கள் கற்கள் உருண்டு வருகின்றன. ஆனுல் அவை உருண்டு வரும் சத்தம் கேட்கிறது. அந்த நேரத்தில் அங்கங்கும் நின்று மேலே பார்த்துச் செல்லவேண்டும். இல்லாவிட்டால் அவை நம்மீது தாக்கி ஊறுண்டாக்கிவிடும்.

அவ்விதமே எங்களோடு வந்த வயதான மலையாளி ஒருவருடைய காலில் ஒரு கல்வந்துதாக்கிப் புண்ணுக்கி விட்டது. பல நாட்கள் காலை ஊன்றி நடக்க முடியாமல் துன்பப்பட்டார். ஏற்றமாகச் சென்ற பாதையில் கூர்க்கம்பு நமக்கு நல்ல உதவியாக இருக்கிறது. அதை ஊன்றி நடக்காவிட்டால் ஒரு சில அடிகள் சென்றதுமே கால் வலி யெடுத்துவிடும். கம்பு ஊன்றிச் சென்ருலும் அந்த வலி இருக்கும். ஆனுலும் அது உதவியாக அமைவதால் அவ்வளவு துன்பம் தருவதாக இல்லை வழிச்செலவு. முதல் நாள், ஏற்றத்தில் ஏறுவதில் மேல்மூச்சு வாங்கவும் செய்கிறது. அப்பொழுதேல்லாம் சற்று நின்று ஓய்வு எடுத்துச் செல்லவேண்டி இருந்தது.

## இரு வாலிபர்கள் :

தேவ் பகோர் சென்றடையும் பொழுது பகல் 1 மணி ஆகிவிட்டது. சென்ற தோலைவும் 5, 6, கல். அங்கேயே எல்லோரும் தங்கியிருந்தார்கள். கடைசியில் சென்ற என்னைக் கண்டதும், லக்ஷ்மே சர்மா எங்கே என்ருர் சுவாமிகள். அவரை யாரும் காணவில்லை. ஆனுல் அவரும் கல்யாணியிலிருந்து வந்த பண்டிட் (மகாராஷ்டிர பிராமணர்) ஒருவரும் எல்லோருக்கும் முன்னதாகப் புறப்பட்டுவிட்டார்கள். அந்த சர்மா வடக்கு ரயிலில்

லக்ஷ்மணபுரி தொழிற்சாலையில் ஒரு அதிகாரி. இனிய சுபாவம் உடையவர். தம்மால் முடிந்தமட்டிலும் பிறருக்கு உதவிகள் செய்யவேண்டுமென்று ஆசையுள்ளவர். அவ், விதம் செய்வதில் மகிழ்வு கொள்ளக்கூடியவர். கேட்காமலே துன்பக்காலத்தில் அவராகவே வந்து உதவக் கூடியவர். வித்யானந்த சுவாமிகள் அவர்களிடம் மிகுந்த பற்றுக்கொண்டவர். இந்த யாத்திரையில் அவர் சுவாமி களுக்கும் மற்றும் உடன் வந்திருந்தோருக்கும் பல உதவி கள் செய்துமிருக்கிறூர். வயதில் இளேயவர். பந்தய விளேயாட்டுக்களில் பரிசுகள் பெற்றவர். சுறுசுறுப்பானவர். நடையில் வேகமாகச் செல்லக்கூடியவர். கண்ணியமான போக்குடையவர்.

அவரோடு சென்ற பண்டிதர் வயதில் மிகுந்தவர். வயது 60க்கு மேலிருக்கும். நல்ல படிப்பாளி. கல்யாணி யில் உள்ள பவானிதேவியைப் பூஜைசெய்யும் புண்ணியம் உள்ளவர். காலேயிலிருந்து மாலேவரை அந்தந்தக் காலங்களிலும் செய்யவேண்டிய அனுஷ்டானங்கள் முதலியவற்றை முறைதவருதுகாலத்தில்செய்துவந்த நல்ல வைதிக ஒழுக்கமுடையவர். அவரும் இனிய சுபாவம் உடையவர். வழிநடப்பில் அவரும் ஒரு இளேஞராகவே காணப்பட்டார். இந்த இரு இளேஞர்களும் எப்பொழுதுமே ஒன்ருகவே யாத்திரைமுழுவதும் காணப்பட்டனர். அந்த இரண்டு பேரையும்தான் அன்று காணவில்லே. ஒருக்கால் இருவருமாகச் சேர்ந்துகொண்டு பிண்டாரியைப்பார்க்கச் சென்றுவிட்டார்களோ என்று ஐயுற்ருேம். அவர்கள் இருவரும் எல்லோருக்கும் முன்னதாக முதலில்புறப்பட்டுச் சென்றதைப் பலரும் கண்டிருக்கிறூர்கள். ஆகையால் அவர்கள் அங்கு வராதது எல்லோருக்கும் கவலே யளித்தது.

## கிச்சடி :

இவ்விதம் எண்ணிக்கொண்டாலும் அப்பொழுது முதல் நாள் அனுபவத்தில் எல்லோரும் களைத்திருந்த நிலையில் யாரும் அவர்களைத்தேடி எங்கும் செல்வதாக இல்லை. அங்கு எல்லோருக்கும் கிச்சடி செய்து வைக்கப் பட்டிருந்தது. அதனை உண்டு ஒரு மணி நேரம் ஓய்வு கொண்டோம். கிச்சடி என்பது நம் நாட்டு வெண்பொங்கல். உப்புக் குறைவாக மஞ்சள்பொடி அதிகமாக நெய் மணமே இல்லாது செய்வதுதான் கிச்சடி. அதை அந்த வடநாட்டினர் பெருமையாகச் சொல்லிக்கொள்கிறார்கள்.

## புல்லரிசி :

நாங்கள் தங்கியிருந்த இடத்தின் அருகில் சரயுவின் உபநதியும், கட்டிடத்தை ஒட்டி ஒரு நல்ல சிற்றோடையும் ஓடிக்கொண்டிருந்தன. நாங்கள் வந்த வழியில் நல்ல அரிய காட்சிகள் நிறைந்திருந்தன ; மரமடர்ந்தகாட்டுப் பகுதிகளும், நல்ல புல்தரைகளும், நீர்வீழ்ச்சிகளும், வயல் வெளிகளும். பாகேஷ்வரத்திலிருந்து இந்த இடம் வரை நெல் வயல்கள் அதிகம். புல் வகையைச் சேர்ந்த ஒன்று அங்கு பயிரிடப்படுகிறது. அந்தப் புல்லரிசி நம் நாட்டுக் கம்பு என்பதைவிட மிகச் சிறியதாகவே இருக்கும். ஆனால் அதை அந்த மலைநாட்டினரும் மட்டமானதாகவே கருதுகின்றனர். கீழ்ச்சாதியினா உட்கொள்வதாகச் சொல் கிறார்கள். அதை நம்மவர்கள் உண்ண முடியாது. உண்டால் வயிற்றுக்கடுப்பும் போக்கும் உண்டாகிவிடுமாம். ஆனால் அந்தப் புல்லரிசி கொண்டுதான் இராமர் தசரதனுக்குக் கங்கைக்கரையில் பிதிர்க்கடன் செய்ததாக வும் இதுபோன்ற சிறப்புடையது அது என்றும் சொல்கிறார் கள். வால்மீகத்தில் அதன் சிறப்பு சொல்லப்படுகிறதாம்.

இதனுல் நமக்குக் கிடைக்கும் செய்தி இந்தப்புல் அரிசியைப் பல ஆயிரம் ஆண்டுகளாக மக்கள் புசித்து வருகிருர்கள் என்பது.

விந்யானந்தர் :

நாங்கள் இருந்த நிலையில் எங்காவது ஒரு நிழல் கிடைத்து எப்படியாவது தங்கவேண்டுமேன்று இருந்தது. நல்ல பசி. ஆகாரம் இல்லாமல் மேலே செல்வதும் முடியாது.

வித்யானந்த சுவாமிகள் அவர்கள் பல ஆண்டுகளாக இது போன்றே பலரையும் அழைத்துச்சேன்ற அனுபவம் மிக்குடையவர்கள். அவரவரும் அங்கங்கும் வசதியாக வாழ்ந்துவந்தவர்கள். இந்தக் கடுமையான யாத்திரையில் இன்றுதான் முதல்நாள். இந்த அனுபவம் அவர்களுக்குத் துன்பத்தைத் தரும். இதனுல் அவர்கள் மனம் துன்பப் படக்கூடாது. முதல் நாளே அவர்கள் யாத்திரையில் துன்பம் மிகுதியாக இருக்கிறதேன்று அஞ்சி மனந்தளரவும் கூடாது, என்பதையெல்லாம் அறிவார்கள். ஆகையால் இந்த நடுவிடத்தில் எல்லோரும் தங்குவதற்கும் உணவு கோள்வதற்கும் ஏற்பாடுகள் செய்து வைத்திருந்தார்கள். அவர்கள் அவ்வழியிலே பலமுறையும் சேன்றுவந்தவர்கள் அதனுல் அப்பகுதி மக்கள் அனைவரும் சுவாமிகள் வருவதை ஒரு சிறப்பாகக் கோண்டு வரவேற்கவும் அவர்கள் விரும்பிய உதவிகளைச் செய்யவும் தயாராக இருக்கிருர்கள். மேலும் அவர்கள் இப்பகுதிகளில் போது நலத்தோண்டராகக் காந்தீய ஊழியராக அரசியல்வாதியாக ஊர்ஊராகச் சேன்று தோண்டாற்றி இருக்கிருர்கள். அப் பகுதியில் உள்ள மக்களுக்குத் தம்மால் ஆன உதவிகளை

அரசியலில் செய்து வருபவர்கள். அவ்விதம் அங்கு பழகியதும் அவர்கள் துறவுநிலையும் அம்மக்களைப் பெரிதும் கவர்ந்திருக்கின்றன. அதுவல்லாமல் யாத்திரிகர்கள் பலரையும் இட்டுச்செல்வதாலும் கூலிகளுக்கும் வியாபாரிகளுக்கும் ஊதியமும் ஓரளவு அதிகமாகிறது. இப்பக்கங்களில் கல்விச்சாலைகள் அமைத்துக் கல்வித் தொண்டும் செய்திருக்கிறார்கள்.

## நண்பர் வீட்டில் :

தேசீய இயக்கத்தில் இப்பகுதி மக்கள் பலரும் உடனிருந்து தொண்டாற்றி அவர்களோடு சிறைவாசம் செய்த தோழர்களாகவும் பலர் இருக்கிறார்கள். அவ்விதம் சிறைசென்ற நண்பர் ஒருவர் வீட்டில்தான் தேவ்பகோரில் நாங்கள் தங்கியது. அவருக்கு வயது 70 க்குமேலிருக்கும். பிள்ளைகள் திபேத்தில் கயிலைப் பகுதியில் ஞானிமாமண்டியில் கடைகள் நடத்திவருகிறார்கள். இவர் இங்கு நிலங்களைச் செப்பனிட்டு வளப்படுத்தி விவசாயம் செய்து பெருக்கிவருகிறார். திபேத்திய வியாப்ாரத்திற்கு இங்கிருந்து சரக்குகள் அனுப்பித் தம் மக்களுக்கு உதவியும் செய்து வருகிறார். அவர் வீட்டில் பல திபேத்தியப் பொருள்களும் இருந்தன. நல்ல தெய்வபக்தியுமுடையவர். அங்கு நல்ல குளிர்ந்த நீரோடையில் குளித்து உணவுகொண்டு தங்கியிருந்ததில் பெரிதும் களைப்பு நீங்கியது.

## வழி :

பிற்பகல் 3-30 மணிக்கு அங்கிருந்து புறப்பட்டு மேலே சியாமாதூராவுக்குச் சென்றோம். இனி வழி முழுவதும் கடுமையான ஏற்றம்தான். இங்குத்தான்

அந்தக் கூர்க்கம்பின் உதவி தெரியவந்தது. மேலே சென்றது 6 கல் தொலைவிருக்கலாம். அதற்குள் 4500 அடி உயரம் ஏறிச்செல்கிறது அவ்வழி. இங்கிருந்து முதல் மூன்று கல் தொலைவு மிகக் கடுமையான ஏற்றம். பிறகு ஒரு கல் தொலைவு சம இடம். சரயுவின் உப நதியை ஒரு பாலத்தின் வழியே கடந்து மேலே செல்ல வேண்டி இருந்தது. அங்குள்ள பாலத்திற்குச் சிமிட்டி விட்டுக் கட்டாமல் கற்களை அடுக்கி அதன் மீது மரப் பாலம் ஒன்றமைத்து இருக்கிறார்கள். அதனைக் கடந்து மேலே செல்வதில் வழி மிக ஏற்றமாக இருக்கிறது. மிகக் களைத்து வந்திருக்கும் நிலையில் இந்த ஏற்றம் துன்பம் மிகத் தருவதாக இருக்கிறது. அதிலும் சுவாமி களுடன் வந்தவர்களில் பலர் வயதுமிகுந்தவர்கள். 60 க்கு மேலான வயதுடையவர்கள். அவர்களில் சிலர் தள்ளாடித்தள்ளாடிச் சென்றுகொண்டிருந்தார்கள். அவர் களுக்குத் துணையாக நான் நின்று நின்று வந்தேன்.

## மழைத்தூற்றல் :

சியாமாதூரா ஒருகல் தொலைவு இருக்கும் போழுதே மழைதூறத் தொடங்கிவிட்டது. ஏற்றத்தில் மழை பெய்ததும் வழுக்கல் ஏற்பட்டுவிட்டது. அந்த இடத்தில் எங்கள் பனிமிதியணி மிகவும் உதவியாக இருந்தது. கூர்க்கம்பும் அங்கு நல்ல உதவியளித்தது. முன்னே துன்பச் சுமையாக இருந்தவைகள் இப்பொழுது மிகவும் இன்றியமையாதவைகளாக ஆகிவிட்டன. இருளும் சூழ்ந்து கொண்டது. தங்குமிடம் எங்கென்று கண்டுகொள்வதில் சிரமம் ஏற்படும் போலவும் தெரிந்தது. ஆகையால் வழித் துணை வேண்டுமே என்று சிந்தித்துக்கொண்டே நடந்து சென்றோம். அவ்வழியில் சில கடைகள் இருந்தன. மழை மிகுதியாக இருந்தது. அங்கே தங்கிச் செல்லலாம் என்று

சென்றபோழுது எங்கள் நண்பர்கள் பலர் அங்குத் தேநீர் அருந்துவதற்காக வந்திருந்தார்கள். அவர்களோடு சேர்ந்து கொண்டு மேலே தங்குமிடத்துக்கு மழை குறைந்ததும் சென்றோம்.

## இரவு கழிந்தது :

அது ஒரு மலை உச்சியில் அப்போழுது கட்டிவரும் கடைஇடமாகஇருந்தது. கீழேயும் தளவரிசைபோடவில்லை. மேலே மாடிப் பகுதிக்கும் முழுவதும் பலகைகள் பரப்பி முடியவில்லை. அந்த ஒரு இடம்தான் அன்று அங்குக் கிடைப்பதாக இருந்தது. இதை முன்னதாக வந்த லக்னோ சர்மா ஏற்பாடு செய்துவைத்து எங்களுக்காகக் காத்திருந்தார். அவரையும் பண்டிதரையும் அங்கு மீண்டும் கண்டதில் எல்லோரும் மகிழ்வுகோண்டோம். அதுவல்லாமல் அவர்கள் எங்களுக்காகவே முன்னால் வந்து இந்த ஏற்பாடு செய்திருப்பதும் பெரிய நன்மைதான். மழை பெய்ததில் மேலே கூரையிலிருந்து மழைத் தண்ணீர் சொட்டவில்லை. ஆனாலும் அக்கட்டிடத்தில் வைத்துக் கட்டப்பட்டிருந்த ஜன்னல்களுக்குக் கதவில்லை. நல்ல உயரமான இடத்திலும் (உத்தேசம் 7000 அடி) கட்டப்பட்டிருந்தது அக்கட்டிடம். ஆகவே மழையோடு காற்றும் கலந்தடித்ததில் ஜன்னல் வழியே இரைச்சல் வந்து கோண்டே இருந்தது. அது உள்ளே இறைக்கப்படுவதால் அங்கு மழைக்கு ஒதுங்கியதாக இருந்தாலும் வசதியாக இல்லை. ஒருவழியாக அன்றிரவை இந்த நிலையில் கழித்தோம். முட்டைத்தூக்கிகள் முட்டைகளைக் கோண்டுவந்து இறக்கிவிட்டு அவரவரும் இடம் பிடித்துத் தங்கிக்கோள்ளச் சென்றுவிட்டார்கள். அன்றிரவு முழுவதும் மழை பெய்துகோண்டே இருந்தது.

மறுநாள் காலை 8 மணி வரையும் மழைதான். அந்த ஊரில் தண்ணீர் கிடைப்பது அரிதாக இருக்கிறது. சிலர் வயல் பகுதிகளில் பள்ளம் செய்து குட்டைகளாக்கித் தண்ணீரைத் தேங்கவைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆறு ஒருகல் தொலைவுக்குமேல் இருக்கும். அதுவும் போகும் பொழுதும் கடுமையான இறக்கம். வரும்பொழுதும் கடுமை யான ஏற்றம். ஆகையால் தண்ணீர் கிடைப்பது அருமை. நாங்கள் தங்கியிருந்த இடத்திற்கு அண்மையில் ஒரு மலை இடத்தில் தண்ணீர் கிடைத்தது. ஆனால் மழையைக் கண்டதும் அட்டையும் கிளம்பிவிட்டது. அன்று காலையில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் திருமஞ்சனம் முடித்துக் கொண்டு காலை வழிபாடுகளையும் செய்து மேலே செல்ல ஆயத்தமானார்கள். ஆனால் அன்று அப்பொழுதிருந்த நிலையில் மேலே செல்லமுடியாது என்று எண்ணிக் கொண்டு தண்டிக்காரர்களும் வரவில்லை. மூட்டைத்தூக்கி களும் வரவில்லை. வந்த ஒருசிலரும் அன்று புறப்பட முடியாது என்று சொல்லிச் சென்றுவிட்டார்கள்.

பனிமூட்டம் :

இந்நிலையில் 9 மணி அளவில் மழை நின்றது. ஆனால் அதை அடுத்துக் கடுமையான பனிமூட்டம் சூழ்ந்து வந்துவிட்டது. எதிரே ஒரு சில அடியில் வருவோரைத் தெரிந்துகொள்ள முடியவில்லை. இது ஹிருதயத்துக்கும் குடலுக்கும் நுரையீரலுக்கும் நல்லதுதான். இரத்த சுத்தி உண்டாகும். ஆயுள் விருத்தியுமுண்டு. இது போன்ற பல நன்மைகளும் உண்டு. ஆனால் புதியவழியில் வழிகண்டு செல்வதெப்படி ? பனிமூட்டத்தோடு குளிரும் அதிகமாக இருந்தது. கம்பளிச் சட்டைகளைப் போட்டுக் கொள்ளவேண்டியதாக ஆகிவிட்டது. அன்று காலையில்

புறப்படுவதாகத் திட்டமாகியிருந்தபடியால் காலையிலேயே சமையல் செய்து உணவுகொண்டு எல்லோரும் ஆயத்த மானோம். ஆனால்குதிரைக் கூலிகள் எங்கே? மூட்டைத்தூக் கும் கூலிகள் எங்கே? யாருக்குத் தெரியும் ? அவர்கள் வர வில்லையானால் இங்கேயே தங்கிவிடவேண்டியதுதானா ? போகாது, வசதியற்ற இந்த இடத்தில் இனியும் தங்கமுடி யுமா ? கீழே இறங்கினால் அட்டைக்கடி. மேலேயும் வசதி யில்லை. நேரம் ஏறிக்கொண்டேபோகிறது. அந்த நேரத்தில் கிடைத்த ஒருசிலரிடம் எங்கள் படுக்கைகள் உணவுப் பண்டங்களில் இன்றியமையாது வேண்டியவை இவற்றைக் கட்டிக்கொடுத்து எடுத்துவரச்செய்து மேலே செல்வது ; எஞ்சியதை சுவாமிகளின் உதவிக்கு வந்தவர் இருந்து எடுத்துக்கொண்டு க்வீட்டிக்கு வந்து சேர்ந்துவிடவேண் டியது. அவர்கள் வந்ததும் மேலே செல்லலாம் என்று முடிவுசெய்தோம். இந்த ஏற்பாட்டோடு புறப்பட்டோம் அப்போழுது மணி 11-30.

## வழியில் சர்மாவின் கவனக் குறைவு :

கப்கோட்டிலிருந்து இந்த வழியே தல்லுக்குச் செல்வ தற்குப் பாதையமைப்பு வேலைகள் நடந்துவருகின்றன. அது பகுதி பகுதியாக வேலை செய்யப்பட்டுவருகிறது. கப்கோட்டிலிருந்து பாதை அமைக்கப்பட்டிருந்தாலும் அது ஒடுக்கமாகவே இருக்கிறது. இதற்குமேல் உள்ள பகுதியில் சாலையை அகலப்படுத்தி நன்றாக அமைத்திருக்கின்றார்கள். நல்ல பாலங்கள் கட்டவேண்டி இருக்கிறது. அவ்விதம் செய்துவிட்டால் உந்தூர்திகள் விடலாம். நடுவில் பாலங் களும் அமைத்துவருகிறார்கள். இன்னும் சில ஆண்டுகளில் இவ்வேலை முடிந்து மக்கள் நன்மைபெறுவர். அந்தச்சாலை 4, 5 கல் தோலைவு ஏற்றமாகச் செல்கிறது. அதிலும்

புதிதாக அமைக்கப்பட்டிருப்பதால் மழையால் சருக்கலும் வழுக்கலும் ஏற்பட்டுவிட்டது. அதுவல்லாமல் பக்கங்களி லிருந்து கற்களும் சரிந்து விழுந்து வழிகளில் தடைசெய் தன. ஆனுல் அகலமான பாதையாக இருந்த நிலேயில் அடைத்துவிடவில்லே. தாண்டிச் செல்லவேண்டியதாக இருந்தது. மேதுவாக - நிதானமாகச் செல்லவேண்டி இருந்தது.

எங்களுடன் மதராசி நண்பர் ஒருவர் வந்திருந்தார். அவரும் சர்மாதான். அவர் ஒரு தோழிலதிபர். அவர்காலில் லேசான பாத அணி (பாட்டா மிதியணி) போட்டுக்கோண்டு நடந்துவந்தார். இதுபோன்ற பகுதிகளில் தமக்கு நடந்து பழக்கம்தான் என்று சோல்லித் தம் கையில் கூர்க்கம்பும் வைத்துக்கோள்ளவில்லே. சாலே அகலமாக இருந்தபடி யால் அதில் எளிதாக நடந்துவிடலாம் என்று நம்பிவந்தார். தலேயில் மழைக் குல்லாய் மட்டும் அணிந்திருந்தார். அதிக கனமாகத் தூக்கிச் சேல்லாமல் எளிதில் நடந்துசேல்வதை விரும்பியே அவ்விதம் அவர் வந்தார். அதுவல்லாமல் அன்று அந்தப் பகுதிகளில் இருக்கும் சூழ்நிலே தமக்குப் பிடித்தமானதாக நல்ல உடல் சுகம் தருவதாக இருப்பதைத் துன்பமாக சுமை கோண்டு வருந்தக்கூடாது என்றும் சோல்லிக்கோண்டார். அதிலும் முதலில் புறப்பட்டவர் களோடு சேர்ந்துகோண்டு முதல் வரிசையிலும் சென்ருர். ஆனுல் வழி போகப்போக இருந்த நிலேயில் அவரால் உதவியில்லாமல் சேல்ல முடியவில்லே. மேதுவாகவே நடக்கவேண்டி இருந்தது. அதுவும் இலேசாக உள்ள கால் அணியும் சேற்றில் தங்கிக் கழலத்தோடங்கிவிட்டது. இதுவல்லாமல் இருண்ட புகைப்படலம் போன்ற பனி முட்டம் வேறு.

## ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் கருணை :

அவரால் உத்தேசித்தபடி வேகமாகச் செல்ல முடிய வில்லை அதோடு வெகு நிதானமாகவும் வழிகண்டு செல்ல வேண்டியதாக இருந்தது. இவரோடு வந்த பலரும் அவரை மெதுவாக வரும்படிச் சொல்லிவிட்டு முன்னே சென்றுவிட்டார்கள். இவ்விதமாகத் தட்டுத்தடுமாறிக் கொண்டு நடந்துசென்றுகொண்டிருந்தார் சர்மா. ஸ்ரீலஸ்ரீகுரு மகாசந்நிதானத்தில் இவர்கள் புறப்பட்டபிறகு சிறிதுநேரங் கழித்துப் புறப்பட்டார்கள். தண்டிக்காரர்கள் இதுபோன்ற நிலைமையில் சென்று பழகியவர்கள். அவர்கள் ஒரு சீராகச் சென்றுகொண்டிருந்தார்கள். வழியில் நண்பர் மிக மெது வாகத் தனியேபோவதை ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் கண்டார்கள். தண்டி பின்னே வருவதை அவரும் பார்த் தார். அதற்காகச் சற்று விலகி வழிவிட நினைத்தார். சிறிது நகர்ந்தார். வழுக்கி விழுந்துவிட்டார். உடனே தண்டியை நிறுத்தி அவரைத் தூக்கிவிடச்செய்து உதவி இல்லாது இவ்விதம் தனியே போதல் கூடாது என்று சொல்லி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் உபயோகத்துக்காக வைத் திருந்த கூர்க்கம்பை அவரிடம் கொடுத்து மேலே வேறு சில நண்பர்கள் செல்லுமிடம் வரை தண்டியை மெதுவாக விடச்செய்து அவர்களோடு சேர்த்துவிட்டு இவரையும் சேர்த்து அழைத்துவரும்படிப் பணித்து மேலே சென் ளுர்கள்.

## மலை உச்சியிற் காட்சி :

‘நான்குகல் தொலைவு ஒரே ஏற்றம். சுமார் 3000 அடி உயரம் மேலே செல்லவேண்டும். அம்மலையின் உச்சியி லிருந்து கடுமையான இறக்கம். அது மூன்றுகல் தொலைவு.

அந்த முன்றுகல்லுக்குள் 3000 அடி இறங்கிச்சேல்கிறது இப்பாதை. இந்த உச்சியிடத்திற்கு அருகில் தல்லுக்குப் பாதை பிரிகிறது. இங்கு வந்துசேர்ந்ததும் மேகமுட்டம் கலைந்து வானம் வெளிவாங்கியது. அங்கு ஒரு மலைஉச்சியி லிருந்து பார்க்கக் காட்சி மிகச் சிறந்ததாக இருந்தது. அது வும் அங்கே ஒருபள்ளத்தாக்கும் அமைந்திருந்தது. இரண்டு தோடரின் நடுவில் அது அமைந்திருந்தது. பசுமை நிறைந்த தாக இருந்தது. மழை பெய்து குளுமையாகவும் இருந் தது. பல மரங்களும் துளிர்விடும் காலமாகவும் இருந்தது. பலபலநிறத்தில் மலைச்சரிவில் ஒவியம் தீட்டப்பட்டது போல மரஅடர்த்தியில் அத்தோற்றம் அழகாக அமைந் திருந்தது. இதை அனுபவித்துக்கோண்டு, அந்த மலை உச்சியில் சிறிது நின்று களைப்பாறிக் கீழே இறங்கத் தலைப் பட்டோம்.

## இராம்கங்கைக் கரையில் :

அங்கிருந்து இரண்டுகல் தொலைவு சென்றதும் நடுவில் ஒரு சிறு ஊர் இருக்கிறது. அங்குச் சில கடைகளும் உண்டு. அதிலிருந்து இறக்கம் மிகக் கடுமையானது. மழை வேறு பெய்திருந்தமையால் சரிவில் இறங்குவதில் துன்பம்மிக அதிகமாகஇருந்தது. கூர்க்கம்பு இவைபோன்ற சோதனைகளில் நமக்கு மிக இன்றியமையாத தோழனாக நின்று உதவுகிறது. அது இருந்தும்கூட சிலர் வழுக்கி விழுந்துவிட்டார்கள். இந்த இறக்கத்தைக் கடந்துவிட்டால் வழி ஒருகல் தொலைவு சமதரையில் சேல்கிறது. இருபுற மும் நல்ல புன்செய் நிலங்கள். அது இராம்கங்கையின் கரையில் அமைந்திருப்பது. இதுவரை வந்த வழியில் குதிரைகள், மாடுகள் முதலியன அப்பகுதிகளில் நடந்து பழகியவைகூட கால் சறுக்கி விழுந்து எழுந்தன.

மழை இல்லாத நாட்களிலேயே அந்த இறக்கத்தில் இறங்குவது பேரிதுந் துன்பமாக இருக்கும். பாதையின் மேலே மண்போட்டிருப்பதால் இந்தத் துன்பம். சாலையில் கப்பி போட்டிருந்தால் இத்துன்பம் இருக்காது. இதற்குப் பல ஆண்டுகளுக்குமுன்னே இந்த அமைப்புக்கூடக் கிடையாது வழிநடப்பான ஒற்றையடிப்பாதைபோல இருந்ததுதான். அந்தச் சமவெளியில் ஒரு சில வீடுகள் இருந்தன. ஆனால் வழியெல்லாம் குப்பையும் கூளமுமாக அங்கங்கும் சாணி எருக்குவியல்களும் கோட்டிக்கிடப்பதாக இருந்தது. மழை பெய்து அவைகளைக் கரைத்துநின்றது நடப்பதற்கு அருவருப்பாகவே இருந்தது. இவ்விதமாக இராம்கங்கைக்கரையை வந்து அடைந்தோம்.

## இராம்கங்கையில் வெள்ளப்பெருக்கு :

ஒரு சிறிது நேரத்துக்கு முன்தான் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில இராம்கங்கையைக்கடந்து அக்கரைசென்று மற்றவர்கள் வரவில்லையே என்று எதிர்பார்த்திருந்தார்கள். அதில் கடைசியாக வந்தது நான்தான். என்னைக்கண்டதும் உடன் வந்திருந்தோரைக்கோண்டு அக்கரையிலிருந்து விரைவில் நதியை தாண்டி வந்து பின்னே வரும்படிச் சைகைகள் காட்டச்செய்து தண்டியை விட்டுக்கோண்டு சென்றார்கள். அன்று அங்கு முதல் இரண்டு நாட்களில் மலைப் பகுதிகளில் பெய்த மழையால் இராம்கங்கை பெருகிக்கோண்டே வந்தது. அதன் இருகரைகளும் மிக உயரமாக இருந்தன. 100, 150 அடி உயரமிருக்கலாம். ஆனாலும் சாதாரண காலங்களில் அதைக் கடப்பதற்கு கற்களை அடுக்கி (சிமிட்டி இடாமலேயே) அதன்மீது மரத்தால் ஒரு பாலமும் அமைத்துவைத்திருந்தார்கள். ஆனால் உறுதியான பாலம் அமைப்பதற்காகக்

கல்லால் கட்டைச்சுவர்கள் கட்டிவிட்டிருக்கிறார்கள். அந்த இடத்தில் அதுபோன்றதோரு பாலம் இன்றியமையாது வேண்டப்படுவதுதான். அது கட்டிமுடிய இன்னும் இரண்டோரு ஆண்டுகள் ஆகலாம். அதுவரை ஆற்றுப்பெருக்காகும் நாட்களில் அதிகத் துன்பம்தான். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் அந்த ஆற்றை முன்னே சொல்லியிருக்கிற மரப்பாலத்தின்வழியேதாண்டிச்சென்றிருக்கிறார்கள். அப்பாலத்திற்குச் செல்லுமுன் கீழே இறங்கிப் பாறைகளில் நடந்து சென்று நடு ஆழப்பகுதிக்குமட்டும் சேர்த்திருக்கும் கல்லடுக்கில் ஏறி மரப்பாலத்தின் வழியே செல்லவேண்டும். மரப்பாலத்தின் அப்புறத்திலும் இதுபோலவே கல்லடுக்கில் இறங்கிப் பிறகு கற்பாறைகளில் நடந்து அக்கரை சேர வேண்டும். இதில் கற்பாறைகளைக் கடந்து ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் கல்லடுக்கில் ஏறத் தொடங்கியதுமே மேல்வரும் வெள்ளமும் அந்த இடத்தை எட்டித் தண்ணீர் மட்டம் ஏறத் தொடங்கியிருக்கிறது. அவர்கள் மரப்பாலத்தைவிட்டுக் கீழே இறங்கத்தொடங்கிய சமயத்தில் கல்லடுக்கின் அடி இடத்தை எட்டிவிட்டது. அதையும் தாண்டிக் கற்பாறைகளையும் கடந்து அக்கரை செல்வதற்குள் மரப்பாலப் பகுதியில் பாதி உயரம் வந்துவிட்டது. அக்கரைசென்று எங்களுக்காகக் காத்திருந்த நேரத்தில் அது மரப்பாலத்தையும் தொட்டுவிட்டது. ஆகையால் அவ்வழியே யாரும் அதற்குப் பிறகு செல்லமுடியாதாகிவிட்டது.

ஜூலி :

ஆனால் இதுபோன்றசமயங்களில் உறுதியாகக் கட்டப்பட்டிருக்கும் பாலக்கட்டைகளின் உச்சியில் உறுதியான இரும்புக் கயிறு பொருத்தியிருப்பதில் ஒரு வளைவு

கட்டையை மாட்டி அதன் இருநுனியிலும் மலைப்புல்லால் திரிக்கப்பட்டிருக்கும் கயிறுகள் மூன்றடி நீளத்துக்குத் தொங்கவிட்டு அதில் மரப்பலகை ஒன்றைச் சேர்த்து ஊஞ்சல் போல அமைத்து அதைப் பயன்படுத்துகிறார்கள். அதற்கு ஜூலி என்று பெயர். அந்த ஜூலியின் இருபுறத்திலும் அந்தப் புற்கயிறு கொண்டு கட்டி அக்கரையில் சிலரும் இக்கரையில் சிலரும் நின்று ஒருவர் சிறிது சிறிதாகத் தளர்த்திக்கொடுக்க மற்றவர் இழுக்கிறார்கள். அது அந்தரத்தில் செல்வதுபோன்றிருக்கிறது. அந்த ஊஞ்சலில் செல்வோரை வேறொரு கயிறுகொண்டு அந்த ஊஞ்சலோடு சேர்த்து இறுகக் கட்டியும்விடுவார்கள். ஆகையால் நம்மை அந்த இரும்புக் கயிற்றில் தொங்கவிட்டு இழுப்பதுபோலவே இருக்கும் அந்தச் செயல். செல்ல வேண்டிய தொலைவு 250 அடி இருக்கலாம். தண்ணீர் மட்டத்திலிருந்து மேலே 100 அடிக்குமேல் இருக்கும். அந்த இடத்தில் இராம்கங்கை தலைகீழாகப் பாய்வதுபோல சீறிச் சினந்து மரங்களையும் செடிகொடிகளையும் சில கால் நடைகளையும் அடித்தெடுத்து அமிழ்த்தி சுழலில் சுழல விட்டு சுழித்தெடுத்துச்செல்கிறது. இந்த அச்சந்தரும் நிலையில் பலரும் இக்கரையிலேயே தங்கிவிட்டார்கள்.

## ஜூலி அநுபவம் :

ஒவ்வொருவராக அந்த ஊஞ்சலில் உட்காரவைத்துக் கட்டி அக்கரைக்கு இழுத்து இழுத்துக் கரைசேர்த்தார்கள். இது சாலை அமைப்புப் பிரிவினரின் ஏற்பாடு. அப்படி அவர்கள் வலிந்திழுக்கும்பொழுது நாம் அமர்ந்திருக்கும் ஜூலியும் சேர்ந்துகொண்டு இப்படியும் அப்படியும் ஆடும். அவ்வளவு உயரத்தில் இந்த புற் கயிற்றுத் துணைகொண்டு கடந்து செல்வதில் அக்கயிறு அறுந்தால் இராம்கங்கை

விழுங்கி எடுத்துச்செல்ல முழுவேகத்துடனும் ஆர்ப்பரித்து ஒடிக்கொண்டிருக்கிறது. எவ்வளவு தைரியசாலியாக இருந்தாலும் இந்த நிலையில் கலங்கவேசெய்வர். ஆனால் அப்பக்கத்து மக்கள் பழக்கத்தால் அதில் எளிதாகச் செல் கிறார்கள்.

## தூலி :

அவ்வூர்வாசிகளில் சிலர் கவர் கம்பு ஒன்று எடுத்து வந்தார்கள். அதன் இருமுனைகளிலும் கயிறுபிணித்தார்கள். அதைத் தமது மார்பில் பூட்டி மேலே உள்ள கம்பிக் கயிற் றோடு வைத்துக்கொண்டு இறுகத் தானே பிணித்துக் கொண்டார்கள். கைகளால் அக்கம்பிக் கயிற்றைப் பற்றிக் கொண்டார்கள். கால்களையும் அக்கயிற்றின்மீது எடுத்துப் போட்டு மாறிக்கொண்டார்கள். தலைகீழாக அணில்கள் கொடிகளில் செல்வதுபோல கைகளால் கம்பிகளைப் பிடித்து உந்தி உந்தி வேகமாக அக்கரை சென்றுவிட்டார்கள். இது பார்க்க வேடிக்கையாகவும் புதுமையாகவும் இருந்தது. அதேநேரத்தில் அவர்கள் ஆற்றில் தவறி விழுந்துவிடுவார் களோ' என்று அச்சப்படும்படியாகவும் இருந்தது. இதற் குப் பெயர் தூலி. ஊஞ்சல் ஜூலி. இதுபோன்றவை நம் நாட்டில் பார்க்கமுடியாது. கிடையவே கிடையாது.

## கூலிகளின் குணங்கள் :

எங்கள் மூட்டைகளைத் தூக்கிவந்தவர்கள் பலரும் அங்கு வந்துசேர்ந்து மூட்டைகளை இக்கரையிலே விட்டு விட்டு அக்கரைக்கு இதன்வழியே செல்லலாயினர். அவ் விதம் கடப்பதில் யாத்ரீகர்களையும் முந்திக்கொண்டு மேலே போகவே அவரவரும் ஆசைப்பட்டுச் சென்றனர். எங்கள்

பொருள்கள் பலவும் இக்கரையில் பார்த்துக்கொள்வதற்குக் கூட ஆளில்லாது அப்படி அப்படியே விடப்பட்டுக்கிடந் தன. அவர்களிடம் ஒப்படைத்த பொருள்களை இவ்விதம் விட்டுச் செல்வது பொறுப்பற்ற செய்கையாக இருந்தது. “ உங்களிடம் ஒப்படைத்த பொருள்கள் இக்கரையிற் கவ னிப்பாரற்றுக் கிடக்கின்றனவே. ஏற்ற பொருள்களை இவ் விதமாகப் பொறுப்பில்லாது விட்டுச் செல்கிறீர்களே? கூலி பேசும்பொழுது கண்டிப்பாகப் பேசினீர்கள்; முன்பணமும் பெற்றுவிட்டீர்கள். சுமையைத் தூக்கிக்கொண்டு இப் போதே போகமுடியாவிட்டாலும் பண்டங்காவலாகவாவது இருந்துஇன்றோநாளையோஅவைகளைஎடுத்துச்செல்லவேண் டாமா? அதிலும்இன்றிரவே வேண்டியபடுக்கைகள் போன்ற பொருள்களையாவது இன்று கொண்டுவந்து கொடுத்தால் தானே வசதியாக இருக்கும் ’ என்று எவ்வளவுசொல்லியும் அவர்கள் அதைக் காதில் வாங்கிக்கொள்ளவே இல்லை. அவர்களில் பலரும் அந்த ஊஞ்சலில் எங்களோடு போட்டி போட்டுக்கொண்டு ஏறி அக்கரைக்கு வந்துவிட்டார்கள்.

### வித்யானந்தரும் வந்தார் :

பலரும் அக்கரைசேர்ந்துவிட்டோம். எங்களில் பலரும் மேலே சென்றுகொண்டிருந்தார்கள். அக்கரையில் எல்லாப் பொருள்களும் இருக்கும்பொழுது மேலே செல்லவும் மனம் இல்லை. அங்கேயே தங்கவும் திடமில்லை. சிறு தூற்றலும் போட்டுக்கொண்டிருந்தது. கூலிகளில் சிலரைக் ‘ காவலா கவாவது இரு ’ என்றால் ‘துஸ்ரா கப்படா நை’; ‘மர்க்கயா’ “ மர்க்கயா ”; ‘ ‘ பாரீஸ் ஆத்தாஹே ’’ என்று சொல்லிக் கொண்டே விரைவாக அங்குள்ள தேநீர்க் கடைக்குள் நுழைந்துகொண்டார்கள். அந்தநேரத்தில் அங்கே ஸ்ரீமத் வித்யாநந்த சரஸ்வதி அவர்களும் வந்துசேர்ந்தார்கள்.

அக்கரையிலிருந்து என்னைக் கண்டதும், மேலே உள்ள வற்றைத் தாம் பார்த்து ஆகவேண்டியவைகளைச் செய்து எல்லாவற்றையும் எடுத்துவருவதாகவும் மேலே மழையின் அறிகுறிகள் இருப்பதால் வேகமாகப் போய்விடும்படியும் சைகைகள் காட்டினார்கள். ஒருவாறு மனந்தேறி மேலே நடந்துசென்றேன்.

அடிச்சுவட்டில் :

அதற்குள் எங்களுடன் வந்த பலரும் வெகுதொலைவு சென்றுவிட்டார்கள். ஆற்றின் மறுகரையில் பல இடங் களிலும் மலை அருவிகளும் சிற்றாறுகளும் ஓடிக்கொண்டே இருந்தன. இரண்டொரு இடத்தில் தண்ணீர் வேகமாக ஓடிற்று. அங்கெல்லாம் நிதானமாகக் கடந்து செல்ல வேண்டியதாயிருந்தது. செல்லும் வழி இதுதான் என்று கண்டுகொள்ளவும் முடியவில்லை. எதிரே யாரும் வரவும் இல்லை. இருந்தாலும் ஒரு உத்தேசமாக அங்கு சென்ற அகலமான வழியிலே சென்று கொண்டே இருந்தேன். ஒருகல் தொலைவு சென்றதும் வழி ஆற்றை விட்டு விலகிச் சென்றது. சாலை அமைப்பும் உடைய தாக இருந்தது. முன்னே செல்வோரின் அடிச்சுவடும் கூர்க்கம்பு முனைபட்ட இடங்களும் தெரிந்தன. சரியான பாதையிலே செல்கிறோம் என்ற உறுதியோடு நடந்து சென்றேன்.

நண்பர்களின் கலக்கம் :

மேலும் இரண்டுகல் தொலைவு சென்றதும் அங்கே தொலைவில் டாக்டர் ஸ்ரீநிவாசய்யரும், கந்தசாமி செட்டியா ரும், மதராஸ் சர்மாவும் அங்கே நின்றுகொண்டிருப்பது

தெரியவந்தது. துணைகிடைத்த மகிழ்ச்சியில் மேலே சென்றேன். ஆனால் அவர்களை அணுகியதும் அங்குள்ள நிலை மனக்கவலை தருவதாக இருந்தது. சாலையில் மூன்று இடங்களில் மலைச்சரிவு ஏற்பட்டிருந்தது. அப்போழுதுதான் மண்ணும் கல்லும் சரிந்துகொண்டிருந்தன. சில விநாடிகள் முன்புதான் அது நிகழ்ந்திருக்கவேண்டும் என்றும் தெரிந்தது. சர்மா உடல் நலக்குறைவால் மிகக் களைத்திருந்தார். மேலேசெல்ல வழி தெரியாத நிலையில், அந்த இடிசல்களைத் தாண்டி எவ்விதம் செல்வதென்று மயங்கி, கீழே கிட்டத்தட்ட ஒரு கல் தொலைவில் மலைச் சரிவுப் பள்ளத்தாக்கில் தெரிந்த ஊரருகே வந்து கொண்டிருந்த ஒரு ஆளை இவர்கள் உரக்கச் சத்தமிட்டும் வெள்ளைத்துண்டுகளை ஆட்டியும் மேலே அழைத்துக் கொண்டிருந்தார்கள். அவரும் அச்சத்தத்தைக் கேட்டு மேலே வருவதற்கு முயன்றுகொண்டிருந்தார்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தைப் பார்த்தீர்களா என்றேன் அவர்களிடம். ''ஆம்; பார்த்தோம். அவர்கள் முன்னே சென்றுகொண்டிருந்தார்கள். தொலைவில் தண்டி செல்வது எங்களுக்குத் தெரியக்கூடியதாகவும் இருந்தது. ஆனால் அவாகள் அதோ தொலைவில் சரிந்து வருகிறதே அந்த இடிசல் தாண்டியபிறகு மேலேசென்றதுதான் தெரியவில்லை; இதுபோன்றே மேலும் பல இடங்களிலும் இடிசல்கள் ஏற்பட்டிருக்கலாமல்லவா'' என்றார்கள் கவலையோடு. அப்போழுது மாலை மணி 6 இருக்கும். சாலை வழியெல்லாம் மரமடர்ந்து இருந்தது. உள்ள வெளிச்சத்தைக் குறைத்து அதிக நேரமானதுபோலக் காட்டியது. 'இந்த நிலையில் மேலே என்ன செய்வது? வழி அடைத்திருப்பதால், கீழே தெரியும் அந்தக் கிராமத்துக்குச் சென்று, அன்றிரவு தங்கி, இன்று செல்வதாக இருந்த க்வீட்டிக்கு

வேறு வழி ஏதாவது இருந்தால் அது வழியே செல்ல லாமா' என்றும் யோசித்துக்கொண்டிருந்தார்கள். 'அவ் விதம் செய்தல் கூடாது. எது எப்படி இருந்தாலும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் தங்கியிருக்கும் இடத் திற்கு எப்படியேனும் போதல்வேண்டும். இவ்வழி இல்லா விட்டால் வேறு மாற்று வழியிருந்தால் அதுவழியாக வேனும் போதல்வேண்டும்' என்று சொல்லி இடிசல் இருந்தாலும் அதன்மீது மேதுவாகவாவது நடந்து சென்று விடமுடியாதா என்று பார்க்க அவ்வழியே விரைந்து சென்றேன்.

மலைச் சரிவு :

முதல் இரண்டு இடிசல்களும் குறைவாக இருந்தது. அவைகள் அப்போழுதும் சரிந்துகோண்டிருந்தாலும் கூர்க்கம்பின் உதவியால் அப்புறம் சென்றேன். நான் போவதைக்கண்ட டாக்டரும் என்னுடன் வந்துவிட்டார். ஆனால் இரண்டு பர்லாங் தோலைவு சென்றதும், சுமார் அரைக்கல் அகலத்துக்கு ஒரு பெரிய இடிசல் இருந்தது. அதுவும் வேகமாக மண்ணும் கல்லும் கீழே ஆற்றில் வெள்ளம் போவதுபோல சரிந்துகோண்டே இருந்தது. அது மரம் செடி கொடிகளையும் இழுத்துச் சென்று கோண்டிருந்தது. அந்த அச்சந்தரும் காட்சியை - இயற்கையின் பயங்கர வேலையைக் கண்டு வியந்து கோண்டே இருக்கும்போழுது எனக்கு சில கஜ தோலை வில் உள்ள சாலைப்பகுதியும் சரிந்தது. இனி அங்கே நிற்பதும் தவறு. அதை அப்போழுதிருந்த நிலையில் கடப்பதும் தவறு ; பேரிய ஆபத்துங்கூட என்று கண்டு திரும்பினோம். மீண்டும் திரும்பி வந்தவழியே சாலையை அணுகிவிட்டோம்.

வழிகாட்டி :

ஒரு சில கஜதோலேவுதான் இருந்தது அப்போழுது. அந்த இடத்திலும் மேலே இருந்து மண்ணும் கல்லும் சேடிகளும் பெயர்ந்து விழத் தோடங்கின. அப்போழுது தான் மேலேவந்த அந்தக் கிராமவாசி, ‘ஜல்தி ஜல்தி மேலே வாருங்கள். கீழே சிறிது இறங்கி பக்கத்தில் உள்ள சேடிகளேப் பிடித்துக்கோண்டு விரைவில் வாருங் கள். இடிசல் வந்துகோண்டிருக்கிறது ஆபத்து’ என்று சோல்லிக்கோண்டே நாங்கள் இருக்கும் பக்கத்துக்கு இறங்கி வந்து எங்கனே விரைவில் இட்டுக்கோண்டு மேலே சாலேக்கு வந்துசேர்ந்தார். அங்கேயும் எங்க ளுக்குத் துணேபுரிய ஆண்டவன் வந்து நின்ருன். பிறகு அவரிடம் பேசிப்பார்த்ததில் இந்தச் சாலே வழியே இன்னும் சில நாட்களுக்குப் போவது இயலாது என்றும் அவரும் இந்தச் சாலே அமைப்புப் பிரிவைச் சேர்ந்த வர்தான் என்றும் அன்று அப்போழுதிருந்த நிலேயில் க்விட்டிக்குக் கட்டாயம் போதல்வேண்டும் என்றிருந் தால் பக்கத்தில் மலே மீது ஆடுமாடுகள் மேய்ச்சலுக்குப் போகும் அந்தக் கரடுமுரடான வழியில் போனுல் இரண்டு கல் தோலேவிற்குள் சாலேயில் கோண்டு விடும் என்றும் சோன்னுர். ‘ஆனுல் மழை பேய்திருப்ப தால் ஏற்றமான அப்பாதையில் சறுக்கல் அதிகமாக இருக்கும். சேருகவும் இருக்கும் பார்த்துப் போகவும்’ என்று சோல்லி விடைபேற்றுச் சேன்ருர். நாங்கள் நால்வர் சேர்ந்து விட்டபடியால் ஒருவருக்கு ஒருவர் துணேயாக மேலே சேல்வதேன்றும் ஒருவர் விழுந்தாலும் மற்றவர்கள் அவருக்குத் துணே சேய்து மேலே இட்டுச் சேல்வதேன்றும் முடிவு சேய்துகோண்டு மலேக்காட்டின் வழியே அந்தச் சரிவில் ஏறினேம்.

## சுற்று வழியில் :

அந்த அன்பர் சொன்னதுபோல் அவ்வழி சேருகவும், வழுக்கல் உள்ளதாகவும், சில இடங்களில் முழங்காலளவு பதியக்கூடியதாகவுமே இருந்தது. அத்தோடு வளைந்தும் நெளிந்தும் போயிற்று. நேர்வழியில் செல்லுகிறோமா அல்லது வேறு வழிகளில் செல்லுகிறோமா என்பதும் தெரியவில்லை. ஆனால் வந்தவர் அவ்விதம் ஏதாவது கிளைவழி பிரிவதாக இருந்தால் சொல்லியிருப்பாரே என்ற நம்பிக்கையில் வழுக்கும் இடங்களில் பக்கத்தில் உள்ள செடிகளையும் புற்புதர்களையும் பிடித்து உந்திஉந்தி அம்மலையின் முகடுவரை ஏறி அவ்வழி கடந்து நல்ல நேர் சாலையில் நாங்கள் வந்து சேரும்பொழுது மணி 7 ஆகி விட்டது.

## இருட்டுவழி :

இமயப் பகுதிகளில் இரவு 8 மணிக்குமேல்தான் அக் காலங்களில் இருட்டத் தொடங்கும். அன்று அமாவாசை கழிந்த மூன்றும் நாள். மேலேயும் மப்பும் மந்தாரமும், சாலை வழியில் மரமடர்த்தியும் இருந்தபடியால் கப்பிய இருட்டாக இருந்தது. ஆனால் எங்களில் மூவரிடமும் கை மின்விளக்கு ( Torch Light ) இருந்தது; அது பெரிய உதவியாக இருந்தது. அதிலும் களைப்பாக இருந்தபடியால் எங்களிடமிருந்த வெந்நீர்க் குப்பிகளி லிருந்து சிறிதுசிறிது வெந்நீர் குடித்துக் களைப்பை மாற்றிக்கொண்டு மேலே செல்லலானோம். காலில் கன மான மேற்சோடு, மேலே சில கம்பளிச் சட்டைகள், தலை யில் பனிக்குல்லாய், கையில் கம்பு. குடை, தோளில் ஒரு துணிப்பையில் வெந்நீர்க்குப்பி, கை மின்விளக்கு, துணித்

துண்டு இவைபோன்ற சுமைகளைச் சுமந்து செல்லுகிறோ மே என்று முதலில் நினைத்தோம். இப்போழுது அதததுவும் இன்றியமையாதவைகள்தாம் என்பதை எடுத்துக்காட்டின.

மன ஆறுதல் :

அவ்வழியே சிறிது தொலைவு சென்றதும் தேநீர்க் கடைகள் இரண்டு இருந்தன. அங்கேசென்று தேநீர் அருந்திக் களைப்பைப் போக்கிக்கொண்டு 'இவ்வழியே தண்டியில் சாது மகராஜ் ஒருவர் வந்தார்களா' என்று கேட் டேன். 'ஆம். உத்தேசமாக இரண்டுமணி நேரத்துக்கு முன் இங்குத் தண்டியில் வந்தார்கள். அவர்களோடு வந்த வர்கள் எல்லோரும் இங்குத்தான் தேநீர் அருந்தினர். அவர்கள் சென்று அரைமணிநேரம் கழித்து இருவர் வந்தனர். அவர்களில் ஒருவர், பாவம் இடிசலில் விழுந்து புரண்டுவந்ததுபோல சட்டையெல்லாம் சேறுபட்டு இருந்தது. மிகவும் களைப்பாகவும் காணப்பட்டார். அவ் விருவரும் இங்குத் தேநீர் அருந்திக் களைப்புமாறிச் சென் றார்கள். அவர்கள் சென்று ஒருமணிக்குமேலிருக்கும். தாங்களும் அவர்களைச்சேர்ந்தவர்களா? தட்சிணவாசிகளா? கயிலைக்குச் செல்கிறீர்களா?' என்று எங்களைப்பற்றியும் கேட்டு விபரமறிந்தார்கள். அவர்கள்கொடுத்த தேநீரைவிட அவர்கள் சொன்ன செய்திதான் மேலே செல்ல எனக்கு உற்சாகத்தைக் கொடுத்தது.

தோடாதூர்ஹை :

அங்குத் தங்கிச் சிறிது ஒய்வு எடுத்துக்கொண்டதில் ஒரு சிறிது களைப்பு நீங்கிற்று. 'க்வீட்டி எவ்வளவு தொலைவு இருக்கும் இங்கிருந்து' என்று கேட்டதற்

'தோடாதூர்ஹை' என்றனர். எவ்வளவுதொலைவிருந்தாலும் அப்பக்கங்களில் தொலைவு எவ்வளவு என்று கேட்டால் 'தோடாதூர்ஹை' என்பார்கள். அல்லாமல் இவ்வளவுமைல் என்று சமயங்களில் சொல்வார்கள். ஆனால் அதுபோலப் பல மடங்கு அதிகமிருக்கும். ஆகையால் அங்கு மைல் அளவில் தொலைவு சொல்ல அவர்களுக்குத் தெரியாது. பழக்கத்தால் அவர்களுக்குப் பாதை எளிதாக இருப்ப தால் தொலைவும் தெரியாது.

## இருளில் வழி :

மேலே வழி சிறிதுசிறிதாக மேலேமேலே உயர்ந்து கொண்டே சென்றது. இருளில் சென்றதில் தொலைவு எவ்வளவு இருக்குமென்று சொல்லக்கூடியதாக இல்லை. ஆனாலும் ஒரு மணி நேரத்துக்குமேல் நடந்த பிறகு ஒரு சிற்றாறு குறுக்கே ஓடியது, அதற்கு நல்ல பால அமைப்பு இருக்கிறது. அதைத் தாண்டி ஒரு சிறிது சென்றதும் பாதை இரண்டாகப் பிரிந்து செல்கிறது. அதில் இடது புறப்பாதை அகலமாக இருந்தது. ஆகை யால் அதுவே நாங்கள் செல்லவேண்டிய பாதையாக இருக்குமென்று எண்ணி ஒரு சிறிது தொலைவு சென்றோம். ஆனால் அவ்வழியே எங்களவர்கள் சென்ற அடையாளங்கள் எதுவும் இல்லை. அவ்வழி எங்குச் செல்கிறதென்பதும் தெரியவில்லை. வழிகேட்டறிந்து கொள்வதற்கு அங்கே அருகே ஊரிருக்கிறதா? எவ் வளவு தொலைவில்? என்பதும் தெரியவில்லை. நான் "இதன்வழியே நம்மவர்கள் சென்றிருப்பதாகத் தெரிய வில்லை. ஆகையால் வந்தவழியே திரும்பிச் சென்று மற்ற பாதையில் சென்று பார்ப்போம்" என்றேன். உடன் வந்தவர் ஒருவர் "இவ்வழியே இன்னும் சிறிது மேலே

சென்ருல் எப்படியும் ஏதாவது ஒரு ஊர் தானே வரும். அங்குச் சென்று பார்த்துக்கொண்டு இவ்வழியில் இல்லை யாஞல் அங்கேயே தங்கி மறுநாட் காலையில் உதவிக்கு ஆள் அழைத்துக்கொண்டு க்வீட்டிக்குச் செல்லலாம்'' என்ருர். ''இனி இந்த இருளில் தெரியாத வழியில் சுற்றிச்செல்ல முடியாது. கால்கள் நோவெடுத்துவிட்டன'' என்று உறுதியாகச் சொல்லத் தலைப்பட்டார். மற்ற இருவரும் அதையே ஏற்பார்கள் போலவும் இருந்தது. 'பொறுமை வேண்டும். உறுதி பிறக்கவேண்டிய நேரத் தில் இவ்விதம் அவலப்படக்கூடாது. சிறிது அயர்ந் தாலும் அது மேலும் நம்மைப் பலவீனப்படுத்தும். ஆகையால் அந்த மாற்று வழியே சென்றுபார்ப்போம். அதிலேயும் அடையாளங்கள் ஒன்றுங் கிடைக்காவிட்டால், அவ்வழியே தாங்கள் செல்வது போல முதலில் வரும் ஊரில் விசாரித்துக்கொண்டு, அது வழியில்லையாஞலும் ஒரு இடத்தில் இரவைக் கழித்து காலையில் செல்லலாம்' என்று விநயமாகச் சொன்னேன். அவர்களும் ஏற்றுக் கொண்டு என்னேடுவந்த வழியே திரும்பி மற்ற பாதையில் வழி நடக்கலாஞர்கள். அங்கே அரைக்கல்தொலைவு வரை யிலும் முன்னே அவர்கள் சென்ற அடையாளங்கள் ஒன்றும் கிடைக்கவில்லை. எனக்கும் மனதில் மயக்கம்தான் இது நேர்வழியாக இல்லாவிட்டால் நண்பர்களின் சீற்ற மும் நம்மை எதிர்பார்த்துக் கவலைகொள்ளும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் ஆயாசமும் ஏற்படுமே என்ற அச்சமும் வந்துவிட்டது. ஆனல் மேலே ஒரு சிறிது சென்றதும் ஒரு சேற்றுப்பகுதியில் பனிச் சோட்டின் பதிவுகள் இருந்தன. ஆகையால் அதுவே நேர் பாதை என்பதைக்கண்டு எல்லோரும் மகிழ்ந்தோம். இன்னும் சிறிது சென்றதும் நாய்கள் குலைக்கத் தொடங்கின

உக்கிரமாக. கட்டிப்போடப்பட்டிருந்தபடியால் அவை எங்கள் மீது வந்து பாய்ந்து கடிக்கவில்லை. ஆனல் அந்த இரவு வேளையில் பல நாய்கள் சீறிக் குலைப்பது அச்சந்தருவதாகவே இருந்தது.

அசரீரி :

அங்கே மனிதர்கள் குடியிருப்பு இருக்கிதென்பதற்கு அதுவே அறிகுறியாகவும் இருந்தது. ஆகையால் தோலை வில் நின்றபடியே "இதர் கோன்ஹை" என்று உரக்கக் கத்தினர் எங்களுடன் வந்த இந்தி தெரிந்த சர்மா. தோலைவிலிருந்து ஒரு மனிதக்குரல் 'யாத்திரிதானே. உங்கள் வரவை எதிர்பார்த்துத் துன்பப்படுகிறர்கள் உங்களைச் சேர்ந்தவர்கள். இதே பாதையில் மேலே சிறிது சென்றதும் ஒரு திருப்பம், அதில் திரும்பிச் சென்றல் ஒரு பள்ளிக்கூடம் இருக்கும். அங்கு இருக்கிறர்கள்.' என்று சொல்லிற்று அசரீரியாக நின்று. அங்கே இருளில் வீடு இருப்பதும் ஆள் இருப்பதும் எங்கள் கண்ணுக்குப் புலப்படவில்லை. கை விளக்கை உயர்த்திப் பிடித்துப் பார்த்ததில் மர அடைசல்தான் தெரிந்தது. வீடோ விளக்கோளியோ எதுவும் தெரிய வில்லை. எப்படி இருந்தாலும் எங்களுக்கு வேண்டிய செய்தி கிடைத்துவிட்டது. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் முன்னேயே இருளும் ஒளியும் கலந்துவரும்போழுதே அங்குத் தங்கலுக்கு வந்துவிட்டார்கள் என்பதுதான் அது. மனமகிழ்ச்சியோடு மேலே சென்றேம். குறிப்பிட்ட இடத்துக்கு வந்து பள்ளிக்கூடக் கட்டிடத்தில் நுழைந் ததும் எல்லோரும் எங்களைக்கண்ட மகிழ்ச்சியில் வர வேற்றர்கள். அங்கு ஒரு சில படுக்கைகளே வந்திருந்தன.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் இடுப்பில் ஒரு சிறு காவிதுண்டுப் பரிவட்டம் அணிந்து ஒரு மேஜையின் மீதமர்ந்து ஜபம் செய்துகொண்டிருந்தார்கள். அருகே ஒரு சிறு படுக்கை விரிக்கப்பட்டிருந்தது. மற்றவர்களில் ஒரு சிலர் கம்பளிகளையும் போர்வைகளையும் விரித்துப் போட்டுக்கொண்டு நின்றும் உட்கார்ந்தும் இருந்தனர். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை வணங்கி பூதி பெற்றுக் கொண்டோம். அப்பொழுது இரவு 9-30 மணி.

## க்வீட்டிப்பள்ளி :

அப்பள்ளிக்கூடத்துக்குள் கூரை என்று ஒன்றும் தரைப்பகுதியும் இருந்தன. ஆனால்மேலே மழைபெய்ததால் அப்பொழுது சொட்டுவதோடு நின்று விடுவதில்லை. அது நின்ற பிறகும் அத்தண்ணீரைத் தான் வாங்கி வைத் திருந்து வெகுநேரம் சொட்டிக்கொண்டே இருக்கும் திறனுடையது. தரையோ மலைக்காட்டு வழிபோல மேடும் பள்ளமுமாக இருந்தது. ஆனால் ஒரு கட்டிடத்தில் தங்குகிறோம் என்ற மன அமைதி பெறத்தக்கதாக சுவர் சூழ்ந்து காவலுடையதாக இருந்தது. மழையில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் உடைகள் எல்லாம் நனைந்துபோய் விட்டன. மாற்றுடைகள் எல்லாம் பின்னே வரும் மூட்டை களில் இருந்தன. படுக்கையும் வரவில்லை. இதெல்லாம் அவர்களுக்குத் துன்பமாகத் தோன்றவில்லை. 'கயிலையில் பிரதிஷ்டைசெய்து வழிபடுவதற்காகத் தருமையிலிருந்தே செய்து எடுத்துச்சென்ற இலிங்கமூர்த்தமும் நந்தியும் உள்ள மூட்டை வந்துவிட்டதா பாருங்கள்' என்றார்கள். அதுவும் வரவில்லை. 'நாளைக்குக் காலையில் அது வரா விட்டால் உடனே ஆள் அனுப்பிப் பார்த்து வரச்செய்ய

வேண்டும்; நினைவில் இருக்கட்டும். எல்லோரும் ஊறேதும் இல்லாமல் வந்துவிட்டீர்கள் அல்லவா? களைப்பாக இருக்கும். நல்ல இடமாகப் பார்த்துப் படுத்து அயர்வு போக்கிக்கொள்ளுங்கள்' என்று உத்தரவாயிற்று, அப் பள்ளிக்கூடத்தின் முன்புறத்தில் ஒரு சிறு அறை இருந்தது. அதில் ஒரு அதிகாரி வந்து தங்கியிருந்தார். அதுசிறிதேயாயினும் அங்கு எல்லாம் சரியாகவேஇருந்தன. மேலேயிருந்து மழை ஒழுக்கில்லை. தரையும் ஓரளவு ஒத்தடியாக இருந்தது. அங்கே அவர் அனுமதியின்றியே உட்புகுந்து பார்த்தோம். 'பொறுத்துக் கொள்ளுங்கள்' என்று மரியாதைக்குச் சொல்லிக்கொண்டோம். உடனே அவர் 'நீங்கள்வேண்டுமானால் இங்கேயும் வந்து தங்கலாம். எனக்கு அதனால் துன்பம் எதுவுமில்லை. உற்ற நேரத்தில் உதவி செய்ததாகவும் நினைத்துக்கொள்வேன். இருக்கு மிடத்தில் எவ்வளவுபேர் தங்கலாமோ அவ்வளவு பேரும் தங்கலாம். நான் இக்கயிற்றுக்கட்டிலில் படுத்துகொள் கிறேன்.' இந்த நேரத்தில் உங்களுக்கெல்லாம் உணவு எதுவும் வழங்கத்தான் முடியவில்லை. இது உதட்டளவில் செய்யும் உபசாரம் அன்று. நான் நினைப்பதையே சொல் கிறேன், என்று வருந்திச்சொன்னார். அப்பொழுதிருந்த நிலையில் அவர் படுக்க இடங்கொடுப்பதாகச் சொன்னதே எங்களுக்கு ஒரு பெரும் உதவியாக இருந்தது. நாங்கள் மூவர். அதற்கு ஒரு படுக்கை இருந்தது. அதை விரித் துக்கொண்டு உடைமைக்காரர் படுத்துக்கொண்டார். அதிலுள்ள விரிப்புக்கள் கம்பளிப்போர்வைகளை விரித் துக்கொண்டு மற்ற இருவரும் படுத்துக்கொண்டோம். படுத்ததும் உறங்கிவிட்டோம். மறுநாள் விடிந்து நல்ல வெளிச்சம் வந்த பிறகே கண் விழித்தோம். நேரமாகி விட்டதைக்கண்டு உடனே எழுந்து வெளியே வந்தோம்.

## ஸ்ரீ கயிலாயபதிக்கு ஜே!

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் திருமஞ்சனத்துக்கு எழுந்தருளிக்கொண்டிருந்தார்கள். நாங்களும் அவர்கள் பின்னே சென்றோம். பக்கத்தில் மிக நல்லதொரு தாரா இருந்தது. பாசனத்துக்காக வரும் ஒரு வாய்க்காலைத் திருப்பி, தொட்டிகட்டிக் குளிப்பதற்கு வசதியாக நீர் வீழ்ச்சி அமைத்திருந்தார்கள். அத்தண்ணீர் குளிப்பதற்கும் குடிப்பதற்கும் நன்றாக இருந்தது. அதில் குளித்தால் அதிலிருந்து விழும் குளிர்ந்த தண்ணீர் உடலுக்கு இதமாக இருக்கும். அயர்வைப்போக்கி நல்உணர்வைக் கொடுக்கும். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் எழுந்தருளும் பொழுது 'எல்லோரும் ஸ்ரீ கயிலாசபதிக்கு ஜே என்று சொல்லிக் கொண்டே வாருங்கள். அதுதான் நமக்கு உற்ற துணை' என்று திருவுள மகிழ்வோடு சொல்லி, அந்த நாம மந்திரத்தைப் பல முறை அவர்களும் சொன்னார்கள்; எங்களையும் சொல்லச் செய்தார்கள். அதன் உட்பொருள் எங்களுக்கு அப்பொழுது விளங்கவில்லை,

''இனி யாரும் கவலை கொள்ளவேண்டியதில்லை. நமக்கு உறுதுணையாக நம் குருநாதர் நம்முடனே வந்து கொண்டே இருக்கிறார். நேற்று மாலை இங்கு வந்ததும் உடன் வந்தவர்களில் பலரைக் காணவில்லையே என்று கவலையாகவே இருந்தது. இரவில் எல்லோரும் வந்த பிறகுதான் மன ஆறுதல் ஏற்பட்டது. ஆனால் அன்று இரவு வெகுநேரம்வரை உறக்கமே வரவில்லை. ஜபம் செய்துகொண்டே இருந்தோம். பின்னிரவு பெரும்பகுதி கழித்தே உறக்கங்கொண்டோம்.

ஒரு பெரிய சாதுக்கள் கூட்டம், இது போன்ற நல்ல அழகான அமைதியான மலை இடத்தில் கூடி இருக்கிறது.

அதில் நாமும் ஒருவராக இருக்கிறோம். அங்கே நல்ல அழகான அம்மையார் - நல்ல சுமங்கிலி - ஒருவர் வருகிறார். எல்லோரும் எழுந்து வணக்கம் தெரிவித்து அவர்கள் அமர்ந்ததும் நாங்களும் அமர்ந்துகொண்டோம். சமய சர்ச்சைகள் நடைபெற்றன. அதன் நடுவில் அவரவரும் தாம்தாம் சென்று வந்த யாத்திரைகளைப் பற்றி எடுத்துச்சொல்லி மகிழ்வுகொள்ளும் நேரம். என்பக்கத்தில் அமர்ந்திருந்த வயதான சாது ஒருவர் என்னை உற்று நோக்கினார்.

அவர் வெள்ளைச் சடை முடியும் தாடியும் கொண்டவர். மிகவும் எடுப்பான தோற்றமுடையவர். கருணைபொழியும் முகமண்டலமுடையவர். முழுநீறுசண்ணித்த மேனியர். சிறிது நேரம் அப்படியே பார்த்துக்கொண்டிருந்துவிட்டு அருகில் வந்தார். 'ஏன் கவலை. கவலை விட்டொழிக. இறைவன் துணை இருக்க யார் வந்தாலும் யார் வராவிட்டாலும் கவலைப்படவேண்டாம். அவனல்லவா எல்லாவற்றையும் காக்கும் பொறுப்புடையவன். வழியில் 'ஸ்ரீ கயிலாசபதிக்கு ஜே' என்ற அந்த நாம மந்திரத்தையே சொல்லிக்கொண்டு போதல் சிறப்பு. அதுவே நம்மை உடன் நின்று அழைத்துச் செல்லும். வேறு எதைப் பற்றியும் நினைக்கவேண்டாம். எங்கே சொல்லிப்பாருங்கள். 'ஸ்ரீ கயிலாசபதிக்கு ஜே' என்று சொல்லிக்கொண்டே இருந்தார்கள். கண்விழித்துப் பார்த்ததில், அது கனவு என்பது தெரியவந்தது. இப்பொழுதும் அது நனவிலே காட்சி கொடுக்கிறது. உடனே எழுந்து அவயவங்களைச் சுத்தி செய்துகொண்டு அந்த நாம மந்திரத்தையே ஜபம் செய்துகொண்டிருந்தோம். நம் குருநாதன் துணை வருகிறான். துன்பம் வரும்பொழுதெல்லாம் உடன் நின்று

நம்மைக்காத்து வருவார். இனி எல்லோரும் இம்மந்திரத்தைத் தாரகமாகக்கொண்டு ஜபித்துக்கொண்டே வாருங்கள். நமக்கு அதுதான் உற்றதுணை.' என்று பெருமிதத்தோடு இந்த ஆனந்தானுபவத்தை எங்களிடம் சொல்லி மகிழ்ந்தார்கள். இந்த நிலையில் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் திருமஞ்சனம் முடித்துச் சென்றார்கள் நாங்களும் அங்குக் குளிக்கலானோம்.

## கல்லோடு புரண்டவர் :

அப்பொழுது எங்களவர் ஒருவர் தம் உடையெல்லாம் சேறும் சகதியும் தோய வந்தார் அங்கே. அவர் கால்களிலும் கைகளிலும் உராய்வுகளும் இருந்தன. அவ்விதம் இருப்பதற்குக் காரணம் என்ன என்று கவலையோடு கேட்டோம். முதல்நாள் அவர் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் பின்னே ஒரு சிறு தொலைவில் வந்துகொண்டே இருந்திருக்கிறார். வழியில் பெரிய இடிசல் ஏற்பட்டிருந்ததே, அந்த இடத்துக்கு வந்ததும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் தண்டி அந்த இடிசலுக்கு அப்புறம் சென்றுவிட்டது இவர் இப்புறத்தில் நின்றிருந்தார். ஒரு பேரிடி போன்றதொரு சத்தம். மேலே இருந்து மரங்களும் கல்லும் மண்ணும் சரிந்து விழுந்து வழிந்துவந்தன வேகமாக. ஒரு சிறிது நின்றார். இவர்நின்ற பகுதிகூட சரியும் போலத் தோன்றியது. உடனே வந்தவழியே மீண்டும் சென்று மலைப் பகுதியின் மேலே ஏறி அந்த இடிசலைத் தாண்டிச் சாலைக்கு வந்துசேரும் எண்ணத்தோடு ஏறினார். நடுவில் இவ்விடிசல் ஏற்பட்ட முகட்டிற்கு அருகில் மேலே சென்றிருக்கிறார். அந்தநேரத்தில் இவர் அருகில் இருந்த கற்பாறை ஒன்று புரண்டு ஓடத் தொடங்கி இருக்கிறது.

இவரும் தவறிக் கீழே விழுந்துவிட்டார். பக்கத்தில் உடன் வந்த நண்பர் இவரைப் பிடித்து இழுத்துவிட்டார். இல்லா விட்டால் இவர்மீதே கல் உருண்டிருக்கும். அதனுல் ஒரு சிறிது உராய்வோடு தப்பினுர். இச்செய்தி எங்களுக்கு மிகவும் வருத்தத்தைத் தந்தது. ஆனுலும் இதுபோன்ற இடையூறு நேரும்போழுதேல்லாம் யாரோ ஒருவர் உதவ முன்வந்து நிற்பதில்தான் எங்களுக்குக் கயிலேமலேயான் உறுதுணேயாக வந்து உதவுகிருன் என்பதும் உறுதி யாயிற்று.

## பெருத்த சோதனே :

அந்தநேரத்தில் அங்கே தண்டியாட்களில் ஒருவன் தாராவுக்கு வந்துசேர்ந்தான். அவன் அவர்களுடைய அனுபவத்தை எடுத்துச்சோன்ஞன். தண்டி வந்து கோண்டிருந்தபோழுது அவர்களுக்குப் பின்புறத்தில் பெருத்த ஓசையோடு அந்த மலேச் சரிவு விழுந்தது. ஒரு சில விநாடிகள் அவர்கள் பின்தங்கியிருந்தாலும் பெருந் துன்பத்துக்கு இடமேற்பட்டிருக்கும். அவர்களில் இருவர் தண்டிக்குப் பின்னே மற்றவர்களின் மூட்டைகளேச் சுமந்து வந்துகோண்டே இருந்தார்கள். அப்போழுது அவர்கள் தலேயிலும் மண்ணும் கல்லும் விழுந்தன. அவர்கள் ஓடோடிச் சேன்று மற்றவர்களோடு சேர்ந்துகோண்டார் கள். பின்புறத்தில் பேரோசையோடு இடிசல் ஏற் பட்டதும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் தண்டியை நிறுத்தச் செய்து அவர்களுக்குப் பின்னே வருபவர் களில் யாராவது அப்பகுதியில் வந்து துன்பத்துக்குள்ளா ஞர்களா என்பதைப் பார்க்கச்சேய்து அதற்காக அங்கே சிறிதுநேரம் தங்கியிருந்து யாரும் வரவில்லே என்பதை நன்ருகத் தேரிந்துகோண்டே மேலே தண்டியை

செலுத்திச்சென்ருர்கள். பின்வந்ததண்டிக்காரர்களுக்குஒரு சிறு துன்பம் ஏற்பட்டதையும் அவர்கள் அதில் தப்பிவந்த தையும் கண்டு மனமிரங்கி அதிலிருந்து சற்றுத் தொலைவி லுள்ள தேநீர்க்கடைகளில் அவர்களுக்குத் தேநீர்கொடுக்கச் செய்து அவர்களைத் தேற்றி மேலே சென்ருர்கள் ''. இந்தச் செய்திகள் முதல்நாள் அந்தத் தேநீர்க் கடைக்காரன் சொன்னவற்றிற்குப் பொருத்தமாகவே இருந்தன. இவ்வித மாக அன்று எங்களுக்கு ஒரு பெருஞ்சோதனைநாள்தான்.

உதவிக்கு ஆள் :

க்வீட்டியில் காலை 10 மணி வரை சுவாமிகள் வித்யாநந்தாவோ அவருடன் பின்தங்கியவர்களோ யாரும் வரவில்லை. இது எங்களுக்கு மிகவும் வருத்த்த்தையும் கவலையையும் கொடுத்தது. உடனே எங்களோடு வந்த சுவாமிகளின் ஆள்ஒருவனை வந்தவழியேபார்த்துக்கொண்டு சென்று சுவாமிகளை அழைத்துவர அனுப்பும்படி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திலும் உத்தரவாயிற்று. அப்படியே ஆளும் அனுப்பப்பட்டான். அன்று மாலை மூன்றுமணியி லிருந்து ஒவ்வொரு மூட்டையாக வந்துகொண்டே இருந்தன. அன்று பகல் எங்களுக்கு வேண்டிய பொருள் களைப் பக்கத்தில் இருந்த கடையொன்றில் வாங்கிக்கொண் டோம். அக்கடைக்காரன் சமையல் செய்வதற்குப் பாத் திரங்களும் கொடுத்துதவினுன்.

கூலிகள் கைவிட்டனர் :

அன்று மாலை 7 மணி இருக்கும். ஸ்ரீமத் சுவாமிகள் வந்துசேர்ந்தார்கள். மிகக் களைத்து வந்திருந்தார்கள். உடனே அவர்களுக்குத் தேநீர் சூடாகக் கொடுத்து களைப்பு நீக்கி இவ்வளவு நேரமான காரணத்தை வினவினேம்.

அவர்கள் முதல்நாள் காலையில் எங்களோடு உணவுகொண்டதுதான். பிறகு நடுவழியில் மலை இடிசலுக்கு இப்புறம் உள்ள கடையில் தேநீர் அருந்தி இருக்கிறார்கள். அதுவல்லாமல் முதல்நாள் வந்த கூலிகள் எல்லோரும் அவர்களுக்குத் துன்பம் கொடுத்துவிட்டார்கள். ஆற்றின் அக்கரையில் எல்லா மூட்டைகளையும் போட்டுவிட்டு அவரவரும் சென்றுவிட்டார்கள். சுவாமிகள் எவ்வளவு எடுத்துச் சொல்லியும் யாரும் இப்பால்வர ஒப்பவில்லை. அத்தோடு அதுவரையில் உள்ள கூலியையும் கேட்டு வாங்கிக் கொண்டு போய்விட்டார்கள். அங்கு மூட்டைகளின் காவலுக்குக்கூட ஒருவரும் தங்கவில்லை.

## புல் வீடு:

அந்த இடத்திலே சுவாமிகளும் அவர்களுடன் துணைக்கு அழைத்துவந்த இரண்டொருவரும் இரவெல்லாம் இருக்கவேண்டியதாகிவிட்டது. பாலத்தின் அருகில் ஒரு புல் வீடு இருந்தது. அதில் தங்கினார்கள். அது மழைக்கும் உதவாது; வெய்யலுக்கும் உதவாது. ஆனால் வீடாகக் காட்சியளித்து நின்றது. அங்கே எல்லாப்பொருள்களையும் எடுத்துச் சேமித்துவைத்துவிட்டு மறுநாட்காலையில் அந்த ஊர்த் தலைவரை அழைத்துவரச்செய்து அங்கு உள்ள நிலையை விளக்கி கூலிஆட்கள் அமர்த்திக்கொடுக்க வேண்டுமென்று கேட்டார்கள். அவரும் முயன்று ஒருவாறு உச்சிப்பொதில் ' ஒரு சில கூலிகளை அமர்த்திக்கொடுத்தார். அவர்களில் ஒருசிலர் க்வீட்டி வரும்வரை கூலி பேசிவந்தவர்கள். ஒருசிலரே முன்சியாரிவரை ஒத்துக் கொண்டு வந்தவர்கள். தக்கபடி பயன்படுத்திக்கொள்ளவும் ' என்று கூறிச்சென்றார் கிராமத்தலைவர். அந்தக்கூலிகள்தாம் க்வீட்டிக்கு மூட்டைகளை எடுத்துவந்தவர்கள்.

## சருக்கி விழுந்த குதிரை :

இதுவல்லாமல் சுவாமிகள் சியாமாவை விட்டுப் புறப்பட்டு ஒரு சிறு தொலைவு வந்ததும் அங்கே ஒருவன் நின்று அழுதுகொண்டிருந்தான். அவனை அணுகி அவன் அழுகைக்குக் காரணம் என்ன என்று கேட்டதற்கு மறுமொழி ஒன்றும் சொல்லாமல் மேலும் மேலும் தேம்பித் தேம்பி அழுததோடு கீழே பள்ளத்தைச் சுட்டிக்காட்டிச் சுட்டிக் காட்டி அழுதுநின்றான். அங்கேபார்த்தால் வழியை ஒட்டியுள்ள பள்ளத்தாக்கில் ஒரு குதிரை சில மூட்டைகளோடு புரண்டு விழுந்து ஒரு ' புதரில் மாட்டிக்கொண்டு கிடப்பது தெரிந்தது. அது அவன் குதிரை ; அவன் நமக்காகச் சுமை எடுக்க வந்தவன். குதிரை பனிமுட்டத்தில் வழி தவறிச் சருக்கி விழுந்துவிட்டது. அப்படியே அது சரிவில் போய் அங்கு மாட்டிக்கொண்டுகிடக்கிறது' என்பது தெரிய வந்தது. உடனே சியாமாவுக்குச் சென்று துணை ஆட்களை அமர்த்திக்கொண்டு அப்பள்ளப்பகுதிக்குச் (சுமார் 500 அடி ஆழமிருக்கலாம்) சென்று குதிரைமீதிருந்த பொருள்களை அகற்றி எடுத்துச் செல்லும்படிச் செய்து, குதிரையையும் தூக்கி நிறுத்தி மேலே சாலைக்கு எடுத்துவரும்படி ஏற்பாடுகள் செய்துவிட்டு வந்தார்கள். இதனால் இராம்கங்கைக் கரை வந்துசேர நேரம் அதிகமாகிவிட்டது. அவர்கள்வந்த நேரத்தில் பெரும்பகுதியான கூலிகள் மூட்டைகளை விட்டுவிட்டு ஆற்றைக்கடந்து சென்றுவிட்டசெய்தி அறிந்தார்கள். நின்ற இரண்டொருவரும் உதவியாக இல்லை. இவ்வளவு துன்பப்பட்டுப் பொருள்களை எடுத்துவரச்செய்து தாம் புறப்பட்டதில் அதுவரை உணவுகொள்ளவேண்டுமே என்ற எண்ணமே எழவில்லை அவர்களுக்கு. எல்லா ஏற்பாடுகளும் செய்துவிட்டபிறகுதான் பசியும் தெரிந்திருக்கிறது.

வழியில் தேநீர்மட்டும் அருந்தி இங்குவந்து சேர்ந்திருக்கிருர்கள். இன்னும் பொருள்கள் முழுவதும் வந்து சேரவில்லே. ஆனல் அவை முழுவதும் வரும்வரை அங்கு சுவாமிகள் தன் ஆள் ஒருவரை இருந்து எடுத்துவரச் செய்தே வந்திருக்கிருர்கள். அன்றிரவுக்குள் எல்லாம் வந்துவிடும் என்றும் சொன்ஞர்கள். மன ஆறுதல் பெற்று அவர்களே ஒய்வு எடுத்துக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டோம்.

## இருந்தும் இல்லே :

மேலே சொல்லியதெல்லாம் ஒரேநாளில் பலருக்கும் ஏற்பட்ட அனுபவம். அது ஒரு ஆயுள் முழுவதற்கும் நினேவிலிருக்கவேண்டிய அனுபவம்தான். இந்த மலேவழியில் இந்த ஒருநாளில் கீழேவிழுந்து எழுந்திருக்காதவர்கள் ஒருசிலரே. மற்றவர்கள் எல்லோரும் அந்த அனுபவம் உடையவர்கள்தான். சேதம் ஏற்படவில்லே. எல்லோரும் ஒரு இடத்தில் எப்படியோ வந்துசேர்ந்தும்விட்டோம். எல்லோருக்கும் வேண்டிய அளவுக்குமேலே உணவுப் பொருள்கள் எல்லாம் இருக்கின்றன. ஆனல் எல்லாம் இராம்கங்கையின் அக்கரையில். இதுவல்லாத மற்றப் பொருள்களும் அவரவருக்கும் வேண்டிய அளவு எடுத்துச் சென்றிருந்தோம். ஆனல் அன்று க்வீட்டியில் கட்டிக் கொள்ள ஆடைகளும் இல்லே ; படுக்கப் படுக்கைகளும் இல்லே. எல்லாம் இருந்தும் அந்த ஓரிருநாட்களில் அவை இல்லேயாகவே ஆயின. ஆனல் இல்லே என்று ஆகிவிடவும் இல்லே; எங்கோ இருக்கின்றன. என்றைக்கு வரும் ? எவ்விதம் வந்துசேரும் ? புரியவில்லே நம்முடைமைகள் எல்லாம் நம்மை விட்டுக் கழன்றுநிற்கின்றன. அதை நினேத்து வருந்திப் பயன் இல்லே.



க்வீட்டியில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் (6900 அடி)

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களுக்கு
டிக்சனில் பகாடியார் செய்த உபசாரம்



**உறுகயிறூசல் :**

மனத்தை அடக்கவேண்டும் ; இருப்பதை உடுத்து இருக்கும் வசதிகளை இன்பமாகக்கொண்டு ஏற்று இனிது இருக்கவேண்டும். ஏன் எல்லாம் வரவில்லை என்றோ, ஏன் அவைகளைச் சுமந்து வரவில்லை என்றோ, யார் யாரிடம் கோபிப்பது. யாரிடமும் பிழைகாணவும் முடியவில்லை. கூலிகள் உறுதியாக இல்லை. அவர் களிடம் நம் கோபம் செல்லாது. ஆகையால் பயன் இல்லாத இடத்தில் கோபம் செல்லாததாகிறது. இதை வாழ்க்கை அனுபவங்களில் ஒன்ருக ஏற்றுக்கொள்ள முடிந்தால் அது மகிழ்ச்சியையும் கொடுக்கும். எது இருந்தாலும் அதனை அனுபவிக்க விதியும் கூட்டிவைக்க வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலான ஆண்டவன் தரிசனத்துக்குப் போகும்போழுது ஊனினைப் பெருக்கி உடலையே வளர்த்துப் போதல் சிறப்பாகாது. அதற்கு அவாவுற்று அதற்கான வழிகளில் மனம் மயங்கலாமா ? எல்லாப் பற்றும் என்று நம்மைவிட்டுக் கழலுகிறதோ அன்றே இறைவன் திருவடியைப் பற்றிக்கோண்டவர்களா வோம் ; அன்றே நமக்கு விடுதலை ; அன்றே வெற்றியும் கண்டவர்களாவோம்.

அடியவர்கள் வாழ்க்கையில் அவர்கள்கண்ட சோதனை கள் எங்களுக்கும் இந்த ஒரு நாளில் ஏற்பட்டிருக்கின்றன. எங்கள் உறுதி சோதிக்கப்பட்டிருக்கிறது.

'உறுகயிறூசல்போல' என்று அப்பர் சுவாமிகள் சொல்லியிருக்கும் அனுபவம் அன்று எங்களுக்கு நிகழ்ந் தது. பெருமான் எங்களுக்கு அன்று வழங்கிய உப தேசமும் அதுவே. எதுவும் சதமல்ல. மனம் செல்லும்

வழியில் சென்ருல் அது ஒன்றுவிட்டு, ஒன்றைப்பற்றி அதனையும் நிறைவாகக் கொள்ளாமல் வேருென்றில் நாட்டங்கொண்டு நிலையில்லாது அதனையும் விட்டுவிட்டு மாறிமாறிச் சென்றுகொண்டே மறுகி நிற்கும். இவ்விதம் யாதொரு பற்றுக்கோடும் இன்றித் திரியும் இந்த ஆன்மா அற்றுவிழுந்தால் - நாங்கள் ஜூலாவில் வரும் பொழுது அந்தப் புற்கயிறு அறுந்து விழுந்தால் எங்களை ஏற்று விழுங்கக் காத்து ஓடிச்சென்ற இராம்கங்கைப் பெரு வெள்ளத்தைப்போல, ஆண்டவன் அருள்வெள்ளமும் (திரு வருளும்) திருவடியும் காத்துநிற்கின்றது. ஆற்றில் அறுந்து விழுந்தால் மீளாத் துன்பம்; இங்கு அறுந்து விழுந்தால் நிறைவான இன்பம். ஆறு சீறி எழுந்து சினந்து ஓடிற்று. பெருமான் ஆறி அமர்ந்து ஆனந்தவடிவாக உடன் நின்று காக்கிருன். யார் எவ்விதம் தவறி விழுந்தாலும் அதுவே (அவன் திருவடியே) பற்றுக்கோடாக நின்று காக்கும் வன்மை உடையது. எப்பொழுதும் எதிரேற்றுக் காப்பதும் உறுதுணையாவதும் அதுவே.' என்ற அருமையான அருளுபதேசத்தையும் சொல்லாமல் சொல்லிற்று அந்த ஒருநாள்.

அன்று பின்னிரவு வெகு நேரம்வரையிலும் மூட்டைகள் வந்துகொண்டே இருந்தன. வந்த கூலிகளில் சிலர் அதற்குமேல் வர இயலாது என்று சொல்லிக் கூலி பெற்றுப் போயினர்.

கடல்மட்டத்திலிருந்து க்வீட்டி 4000 அடி. க்வீட்டிக்கு வந்த மூன்ரும்நாட் காலை இருக்கும் கூலிகளை வைத்துக் கொண்டு எங்களுக்கு இன்றியமையாதுவேண்டிய படுக்கைகள், சமையல் பாத்திரங்கள் உணவுப் பொருள்களில் ஒரு பகுதி இவைகளைமட்டும் எடுத்துக்கொண்டு அங்கும்

காவலுக்கு ஒருவரை வைத்துவிட்டுப் புறப்பட்டோம். அவர்களுக்கும் நிறையிட்டுக்கொடுக்கவேண்டியிருந்தது. அன்று காலையிலேயே பலரும் சென்றுவிட்டார்கள். மூட்டைகளைக் கட்டிப் பொறுப்பாக ஒப்புக்கொடுத்துவிட்டு நானும் இன்னும் சிலரும் புறப்பட்டோம். சுவாமிகளும் எங்களுக்கு முன்னதாகப் புறப்பட்டுவிட்டார்கள். அன்று உச்சிப் போதில் வழியில் கிர்காம் (Girgaum) என்ற இடத்தில் தங்கி அங்கு உணவுகொண்டு அன்று மாலைக்குள் டிக்சன் ( Tiksen ) சென்றடைதல் வேண்டும் என்பது திட்டம். அதற்கு முன்னதாகவே சமையல் காரர்களும் இரண்டொருவரும் முதல் தொகுதியாக அனுப்பிவைக்கப்பட்டனர். மற்றவர்கள் ஒரு சிறிது நேரம் கழித்தே புறப்பட்டார்கள். மூட்டைகளை ஒப்புக் கொடுக்கவேண்டியவர்கள் கடைசியில் செல்லவேண்டியதாக இருந்தது.

## அதிகாரியின் உதவி :

எங்களுக்குக் க்வீட்டியீல் முதல் நாளிரவு தங்க இடங் கொடுத்த அந்த அதிகாரியும் அங்கேயே இன்னும் சில நாட்கள் தங்கியிருப்பதாகத் திட்டமிட்டிருந்தபடியால் அவரும் தன்னால் ஆன முயற்சிகளைச்செய்து கூலிகள் சேர்த்து மற்றப் பொருள்களைகளையும் அனுப்புவதாகவும் சொன்னார். அவர் ஒரு கார்வாலி இளைஞர். விவசாயப் பட்டம் பெற்றவர். அப்பகுதிகளில் புகையிலையும் உருளைக் கிழங்கும் சாகுபடி செய்வதுபற்றிய ஆராய்ச்சியில் ஈடு பட்டிருந்தார். அது இப்பொழுது நமது அரசாங்கம் செய்ய முற்பட்டிருக்கும் தேசீய அபிவிருத்தி இயக்கத்தைச் சேர்ந்தது நல்ல பக்தி உள்ளவர். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் தங்கியிருந்தபொழுது தாம்

அங்கு வர நேர்ந்ததையும் தனக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் தரிசனம் கிடைத்ததையும் ஒரு பெரிய பாக்கியமாக எண்ணி மகிழ்ந்தார். தம்முடைய சேவகனைக்கொண்டு எங்களுக்கு அங்குத் தங்கிய காலத்தில் பல உதவிகளையும செய்துகொடுத்தார். இது போல அந்த அதிகாரியும் முட்டைகளை எடுத்து அனுப்பு வதில் உதவி செய்வதாகச் சொன்ன தேறுதலையும் கொண்டு நாங்கள் கவலையில்லாமல் மேலே செல்ல லானோம்.

ஜகூல் ஆற்றின் கரை :

முதல் இரண்டு கல் தொலைவு வழி சிறிது ஏற்றமும் இறக்கமுமாக இருந்தது. வழியின் இரு புறங்களிலும் நல்ல பசுமையான காட்சிகள். உயரமான மலைகளும் அவற்றில் வயல்களும் எதிர் மலையின் அருகே ஓடும் ஆற்றின் கரைகளில் வயற்புறங்களும் கண்ணுக்கு நல்ல தொரு விருந்து. இளங் காலை நேரமாகவுமிருந்தது நல்ல காற்றும் நல்ல காட்சிகளும் வழிச் செலவில் இன்பம் விளைத்தன. துன்பம் தெரியவில்லை. இரண்டு மூன்று கல் தொலைவு சென்றதும் தேஜம் என்னும் ஊர். அதனருகில் ஜகூல் ஆறு ஓடுகிறது. அதற்கு ஒரு பாலம், அதைக் கடந்து அந்த ஆற்றின் கரை வழியே செல்லவேண்டி யிருக்கிறது. வழிகளில் மலைகளிலிருந்து அழகான நீர் வீழ்ச்சிகள் பல விழுந்துகொண்டிருக்கின்றன. ஆனால் மிக உயரத்திலிருந்து அவை விழுவதால் அவற்றில் குளிக்க முடியாது. அக்காட்சிகளைக் கண்டு செல்லலாம். இவ்வாறு ஜகூல் ஆற்றின்கரை வழியே செல்லவேண்டி யிருக்கிறது இரண்டு கல் தொலைவு. அங்குள்ள ஒரு நல்ல பாலத்தின் வழியே அவ்வாற்றையும் கடந்து மறுபுறம்

உள்ள மலைப் பகுதியில் ஏறவேண்டியிருக்கிறது. மிக உயரமாகப் பாதை ஏறிச்சென்றுகொண்டே இருக்கிறது. ஏறத்தாழ 5000 அடி மேலே ஏறிச் செல்லவேண்டியிருக்கிறது. வெய்யிலும் ஏறிக்கொண்டே வந்தது. அதன் கடுமையும் ஏறிக்கொண்டே வந்தது

இவ்விதமாக ஒரு மலை உச்சியை அடைந்து அங்குள்ள கணவாயைக் கடந்ததும் மறு மலைக்கு வழி இறங்குகிறது. அந்த இடத்தில் பாமன் என்னும் ஊர் மிக அழகாக அமைந்திருக்சிறது. மக்கள் அம்மலை உச்சியிலும் பாடுபட்டுச் சாகுபடி செய்து வருகிறார்கள். உருளைக் கிழங்கு உணவு தான்யங்கள் அங்கே பயிரிடப்படுகின்றன. வழியில் ஆங்காங்கும் சிறு சிறு நீர் ஊற்றுக்கள் வழிந்து ஓடுகின்றன. பாதையில் மேற்பகுதி மண்ணாக இருப்பதால் அதில் ஈரக் கசிவு ஏற்பட்டு சிறிது வழுக்கலாகவும் இருக்கிறது. இனி வழி ஏற்றமே. இறக்கமாக இல்லை. வழியில் பாதை ஓரத்தில் மரங்களும் இல்லை. ஆகையால் வெய்யிலின் கொடுமையும் மிக அதிகமாக இருந்தது. மழை பெய்தாலும் துன்பமாக இருக்கிறது. வெய்யில் எரித்தாலும் துன்பமாகவே இருக்கிறது. அவ்வழியில் சென்று நண்பகல் 12-30 மணிக்கு ஒரு மலையின் உச்சிப் பகுதியில் உள்ள கிர்காம் அரசாங்க வழிச்செல்வோர் விடுதியில் சென்று தங்கினோம். இதற்குள் நல்ல களைப்பு. இதுபோன்ற வழிகளில் காலையில் அதிகமாக உணவு உண்டு சென்றாலும் வழி நடப்பது சிரமமாக இருக்கும். இல்லாது இதுபோல வந்தாலும் சிரமமாகவே இருக்கிறது. நடுநடுவில் தேநீர்க் கடைகள் இப்பகுதியில் கிடையாது. தேஜம் என்ற ஊரில்தான் இரண்டோரு கடைகள் இருந்தன. அங்கும் 10 மணி அளவில் தேநீர் கிடைக்கவில்லை. க்வீட்டியில்

ஒரு கோப்பை தேநீர் அருந்தியதுதான். வழியும் மிக ஏற்றம். நிழலே இல்லாது கடும் வெய்யிலில் வரவேண்டி இருந்தது. இதனுல்தான் களைப்பு மிகுதியாக இருந்தது. கிர்காமில் எல்லோரும் வருவதற்கு முன்னே கிச்சடி செய்துவைத்துக் காத்திருந்தார்கள். அதை உட்கொண்டு சிறிதுநேரம் தங்கி ஒய்வு எடுத்துக்கொண்டோம்.

பரிசு கிடைத்ததா ? :

பகல் இரண்டு மணி அளவில் பயணத்தை மீண்டும் தொடங்கினேம். இரண்டு கல் தொலைவு பாதை அதிக ஏற்றமும் இறக்கமும் இல்லாது இருந்தது. ஆனுல் கிர்காம் விடுதியைவிட்டுப் புறப்பட்டுச் சில அடிகளில் ஒரு திருப்பம். அங்கே சரிவு ஏற்பட்டு ஒரு அடி அகலமே உள்ள பாதையில் செல்லவேண்டியிருந்தது. சுமார் 50 கெஜத் தொலைவு ஒரு புறம் செங்குத்தான மலை. மறுபுறம் 100 அடிக்குமேல் உள்ள பள்ளம். பாதையும் பள்ளத்தை நோக்கிச் சரிந்திருந்தது. அதில் எல்லோரும் நிதானமாக நடந்து கடந்து சென்ரேம். இரண்டு கல் தொலைவுக்குமேல் வழி மேலும் ஏற்றமாகச் செல்லத் தொடங்கியது. மலை உச்சியிலிருந்து டிக்சன் 5 மைல் தொலைவு. கடல் மட்டத்திலிருந்து அவ்வூர் 6000 அடி உயரத்தில் உள்ளது. அவ்வழியில் 4 கல் தொலைவுகள் கடுமையான ஏற்றம். அந்தத் தொலைவுக்குள் 3500 அடி உயரம் ஏறிச்செல்லவேண்டி இருந்தது. அன்று பகல்வெய்யிலும் மிகக் கடுமையாகக்காய்ந்தது, காலாமுனி என்ற மருத்துவ மலையில் உச்சியில் ஏறிப் பிறகு அங்கிருந்து இறங்கவேண்டிவருகிறது. உச்சியின் உயரம் உத்தேசம் 10,000அடிக்குமேலிருக்கும். அவ்வுச்சிசென்றடைவதற்கு முன்னேயே மாலை 5 மணி அளவில் மழை பெய்யத்

தோடங்கிவிட்டது. காலாமுனி உச்சியிலிருந்து டிக்சன் 5 மைல். உத்தேசம் 4000 அடி கீழே இறங்கிவரவேண்டும். வழியெல்லாம் பெருங்காடடர்ந்த பகுதி. மழை வந்தவுடன் அட்டைகளும் வந்துவிட்டன. அங்குப் பக்கத்தில் ஒரு தேநீர்க்கடை இருந்தது. மழை மிகுதியாக இருந்த படியால் அதில் சிறிதுநேரம் ஒய்வு எடுத்துக்கோண்டோம். அங்குச் சுவாமி வித்யாநந்தா இருந்தார்கள். ‘உங்களுக்கு எத்தனை பரிசுகள் கிடைத்தன’ என்று கேட்டார்கள். அங்குள்ள எல்லோரும் ‘ஜோங் காட்தா ஹை’ ‘ஜோங் காட்தா ஹை’ என்றுசோல்லிச் சிரித்துக்கோண்டே இருந்தனர். அதன் போருள் எனக்கு விளங்கவில்லை. நம் உடைகளிலோ அல்லது நடையிலோ ஏதோ வேடிக்கையாக இருந்திருக்கிறது. அதனால்தான் சிரிக்கிறார்கள் என்று என்னையே முன்புறமும் பின்புறமும் பார்த்துக்கோண்டேன். அப்போழுது போருள் விளங்கவில்லை. பிறகு சுவாமிகள் ‘தங்கள் காலணியைக்கழற்றிப்பாருங்கள்; அங்கேதேரியும் பரிசு விபரம்’ என்றார்கள். அவ்விதமே செய்து பார்த்ததில் மிதியணியின் நாடாத்தோளையின் வழியே புகுந்து காலுறையையும் துளைத்துக்கோண்டு நாலைந்து அட்டைகள் கடித்துக்கோண்டிருந்தன. இதுபோலவே அங்குப் பலருக்கும் இருந்தது. அவர்களும் அதைத்தான் எண்ணி எண்ணி வேடிக்கை பார்த்துக்கோண்டிருந்தார்கள்.

## இளமை நினைவு :

எங்களோடு வந்த மலையாளத்து நண்பர் காலில் 10, 15 அட்டைகள் கடித்துநின்றன. ‘அவரே எல்லோரையும் வேன்றவர் இப்போட்டியில்’ என்று சுவாமிகள் வேடிக்கையாகப் பேசிக்கோண்டிருந்தார்கள். அந்த மலையாள நண்பருக்கு வயது அதிகம்; ஆகையால்

அவரால் மேலே நடக்க முடியவில்லை. அவர் அங்குத் தங்கித்தான் வரவேண்டும் என்று சொல்லிவிட்டார். அவருக்கு உதவியாக ஒரு கூலியை அங்கேயே இருக்கச் சொல்லிவிட்டு மற்றையோர் மழை குறைவாக இருந்த சமயத்தில் மேலே செல்லப் புறப்பட்டோம். அம்மலை உச்சியை அடைந்து அப்புறம் இறக்கம். அப்பொழுது மாலை மணி 6 இருக்கலாம். அங்கிருந்து பார்த்தால் பஞ்சசூலி மிக அருகில் அழகாகக் காட்சி அளித்தது. ஒரு சிறிது நேரத்தில் அதைப் பனிமூட்டம் வந்து மூடிக் கொண்டது. அத்தோடு மறுபடியும் மழைத் தூற்றலும் தொடங்கிவிட்டது. அவ்வழி சறுக்கல் அதிகமுள்ளது. அட்டையும் அதிகம். இங்கெல்லாம் கூர்க்கம்பின் உதவியும் பனிமிதியணியின் உதவியும்கொண்டுதான் நடக்கவேண்டியிருந்தது. ஆனால் சுவாமிகள் அந்த இறக்கத்திற்கு வந்ததும் பஜனைப் பாடல் ஒன்றைப் பாடிக்கொண்டே வெகுவேகமாக ஓடத் தலைப்பட்டார்கள். அவர்கள் கீழே விழுந்துவிடுவார்களோ என்று எங்களுக்கு அச்சமாகவும் இருந்தது. ஆனால் அவர்கள் வேகமும் குறையவில்லை. ஓட்டமும் நிற்கவில்லை. அங்கு வந்ததில் அவர்கள் உள் மனத்தில் தனி மகிழ்ச்சி ஏற்பட்டதே அதற்குக் காரணம். சுவாமிகள் அங்குப் பலநாள் தங்கித் தொண்டுகள் பல செய்திருக்கிறார்கள். அந்த நல்நினைவே அவர்களை அவ்விதம் ஓடச் செய்திருக்கிறது. பழைய இளமைக்காலத்தை அவர்களுக்கு நினைப்பூட்டியது என்ற செய்தி பிறகு எங்களுக்குத் தெரியவந்தது. நாங்கள் மிக நிதானமாக நடந்து சென்றோம். ஆனால் அட்டைக் கடியிலிருந்துதப்பச் சேற்றுப்பகுதிகளில் கால் வைக்கா மலும் அவை அதிகமாக இருந்த இடங்களில் சிறிது எட்டி நடைபோட்டும் நடந்து சென்றோம். அந்த வழியில்

சிலர் விழுந்துவிட்டார்கள். இவ்விதமாக ஊர் எல்லையில் வந்துசேரும்போழுது நன்ருக இருட்டிவிட்டது. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் எல்லோருக்கும் முன்னதாக நாங்கள் தங்கவேண்டிய இடத்துக்குச் சென்றுவிட்டார் கள். பிறகு சுவாமிகள் அங்குச் சென்றிருக்கிருர்கள். வழி தேரியாமல் நாங்கள் துன்பப்படக்கூடாதேன்பதற்கு அவ்வூர் ஆள் ஒருவனிடம் விளக்குக் கொடுத்தனுப்பி எங்களே அழைத்துவரச் செய்திருந்தார்கள். நாங்கள் தங்கலுக்குச் சென்றபோது இரவு மணி 8-30.

காலாமுனி :

டிக்சனே ஒட்டி உள்ள அந்த உச்சி மலேயின் பேயர் காலாமுனி. உயரம் 10,000 அடிக்குமேற்பட்டது. அது டிக்சனிலிருந்து மேலே செல்கிறது. அம்மலேச் சாரல் பச்சிலே மூலிகைகள் நிறைந்த இடம். அங்கு முன்காலத்தில் பேரிய முனிவர்கள் தங்கித் தவம் சேய்துவந்ததாகவும், அவர்கள் சேலவுக்குப் போருள் தேவைப்பட்டபோழுது பச்சிலேச் சாற்றிலிருந்து தங்கம் சேய்து தம் தவவேள்விகளுக்கு வேண்டிய போருள் களே வாங்கித் தவம் முற்றுப் பேறச் சேய்து கோண்டார்கள் என்றும் சோல்லப்படுகிறது. இது ஒரு சஞ்சீவி மலே. அனுமான் சஞ்சீவி பருவதம் எடுத்து வந்த பகுதி என்பதாகவும் சோல்லப்படுகிறது. அரசிய லார் இங்கு இப்போழுது மருந்துப் பச்சிலேகள் பயிரிட்டு வளர்த்து ஆராய்ச்சி நடத்திவருகிருர்கள். தாவர சாத் திரம் பயிலுவோர் பலர் இங்கு வந்து ஆராய்ச்சிகள் நடத்திவருவதாகவும் சோல்லப்படுகிறது. பசிய புல்லும் இம்மலேயில் உண்டு. ஆடு மாடுகள் வைத்திருப்போர் இங்கு வந்து மாதக்கணக்கில் தங்கி மேய்த்துக்கோண்

டிருப்பர். ஆகையால் இங்குப் பால் அதிகமாகக்கிடைக்கும். அகத்தியர் இங்கு வாழ்ந்ததாகவும் சொல்லப்படுகிறது. இந்த மலை உச்சிப் பகுதிகளில் காலை மாலை நேரங்களில் வந்து உலவிச் செல்லுதலே உடலுக்கு உரம் அளிக்கும் என்றும் சில நோய்கள் நீங்குமென்றும் நம்புகிறார்கள். பச்சிலைகளின்மேல் பட்டு வரும் காற்றில் அவற்றின் மருந்துச் சத்தும் சேர்ந்து வருவதாகவும் அதுவே நல்ல பயனை அளிப்பதாகவும் சொல்கிறார்கள்.

தங்கலுக்கு வந்ததும் கால் சோடணிகளைக் கழற்றிப் பார்த்ததில் அட்டைகளும் உள்புகுந்து கடித்துக்கொண்டிருந்தன. அவற்றை அகற்றிவிட்டுக் கால்களைச் சுத்தம் செய்து டேட்டால் மருந்து விட்டுக் கழுவிக்கொண்டு படுப்பதற்கு மணி 10 க்கு மேலாகிவிட்டது. பகல் முழுவதும் கடும் வெய்யில், மாலையில் மழையும், அட்டைக்கடியும். வழியில் மிகக் கடுமையான ஏற்றமும் இறக்கமும் ஆகிய இவைகளால் எல்லோரும் மிகக் களைத்துப்போயிருந்தனர். நடந்த தொலைவு 15 கல்லுக்கு மேலிருக்காது என்று சுவாமிகள் சொன்னார்கள். அங்கிருந்த எவரும் அதை நம்பவில்லை. அவர்கள் சொன்னதுபோல இரண்டு மடங்காவது இருக்கும் என்றே பலரும் வாதிட்டனர். ஆனால் அங்குள்ள மைல் கல்லை வைத்துத் தாம்சொன்னது சரியானது என்று காட்டினார்கள் சுவாமிஜி.

## போக்கு வரவு வசதி :

இக்கால சாதனத்தில் இன்றியமையாது வேண்டப்படுவதாகிய சாலை அமைப்புச் செம்மைப்பட்டு உந்தூர்திகள் அங்குச் செல்லக்கூடியதாக ஏற்பட்டுவிட்டால் சமவெளிகளில் உள்ள பொருள்கள் அங்குச் செல்லவும்

அங்கிருக்கும் மலைவளங்களும் அவர்கள் கையால் நெய்யும் கம்பளங்கள்போன்ற அருமையான பொருள்களும் சமவெளி இடங்களில் மலிவாகக் கிடைக்கவும் வசதி ஏற்படும். அதற்கான முயற்சிகள் நடைபெற்றுவருகின்றன.

## பஞ்சசூலி தரிசனம் :

அங்குச் சென்ற மறுநாட்காலையில் நாங்கள் எழுந்ததும் எங்கள் தங்கலுக்கு எதிரே கிழக்கில் பஞ்ச சூலிச் சிகரங்கள் மிக அழகாகக் காட்சி அளித்தன. அந்த நேரத்தில் தெளிவாக அவை தெரியக்கூடியன வாகவும் இருந்தன. அவ்வைந்து சிகரங்களையும் ஐந்து லிங்கத் திருமேனிகளாகவே அன்பர்கள் கண்டு வழிபடு கிறார்கள். பஞ்சபாண்டவர்கள் சுவர்க்கத்துக்குச் செல்லும் காலத்தில் அவ்வழியே சென்றதாகவும். இந்த ஐந்து சிகரங்களிலும் சிவபெருமான் திருவுரு விளக்கங்கள் அவர்களுக்குத் தோன்ற அவர்கள் அவ்விதமே வழி பட்டார்கள் என்றும் அங்குச் சொல்லப்படுகிறது. அவர் களுடன் வந்த திரௌபதியும் கிருஷ்ணரும்கூட அங்கு வழிபட்டார்கள் என்றும் சொல்கிறார்கள். சுவர்க்கம் சென்ற காலத்தில் கிருஷ்ணன் உடன் வந்தார் என்ற ஆதாரம் இல்லாவிட்டாலும் அவ்வூர் மக்கள் அதையும் சேர்த்தே சொல்லிவருகிறார்கள். அவைகளும் பனிபடர் சிகரங்கள்தாம். 20,000 அடிக்கு மேற்பட்ட இமயச் சிகரங்களைச் சேர்ந்தவை.

காலையில் எழுந்ததும் இந்த நல்ல தரிசனம் எங்க ளுக்கு அன்று கிடைத்தது. பிறகு அங்குத்தங்கிய எஞ்சிய நாட்களில் கிடைக்கவில்லை. மலைச் சிகரங்கள் உள்ள பகுதிகளில் பனிப்படலங்கள் படர்தல், பனிபெய்தல், பனி மூட்டம், மழை முதலிய ஏதோ ஒரு காரணத்தால் நாங்கள்

தங்கியிருந்த பகுதியில் மற்றநாட்களில் காணக்கிடைக்க வில்லை. அன்று நாங்கள் அக்காட்சி கண்ட நேரத்தில் இளஞ் சூரியன் மலைவாயிலிருந்து வெளிவந்துகொண் டிருந்தது. அப்பொழுது அச்சூரியன் அம்மலைச்சிகரங் களின் அடிவரையிலிருந்து புறப்படுவதைப்போன்றே காட்சி அளித்தான். அப்பக்கத்திலிருந்து வந்த ஒளி அவ்வைந்து சிகரங்களையும் தனித்தனியே பிரித்தும், அவற்றின் பனிபடர் ஓரங்களில் அச் செங்கதிர்பட்டுப் பொன்னொளி ஊட்டியும், அவ்வொளி படாத பின்புறப் பகுதிகளில் முதல்நாளிரவு பெய்த பனிப்படிவால் தூய வெள்ளையாகவும், அதற்குக் கீழே உள்ள மர அடைசல்கள் இருட்கலந்த ஒளியும் கொடுத்து ஒரு உயிரோவியம் தீட்டிக் காட்டியது. சிறந்த ஓவியரும் தீட்டமுடியாத அருமையான காட்சி. ஆனால் சிறிது நேரத்தில் நாங்கள் இருந்த பகுதியில் பனிமூட்டம் வந்து கவிந்து விட்டது. ஆகையால் பஞ்சசூலியும் கண்ணுக்குப் புலப்படாது மறைந்துவிட்டது. பெருமான் எங்களுக்குக் காட்சி கொடுப்பதற்கெனவே அன்று அதிகாலை உதய நேரத்தில் நல்ல ஒளியை ஏவியிருப்பான் என்றே நாங்கள் எண்ணிப் பெருமை கொண்டோம்.

## தங்குமிடம் :

நாங்கள் தங்கியிருந்த கட்டிடம் அவ்வூர் பெருநிலக் கிழார் இந்திரசிங் பாங்தேக்குச் சொந்தமான இரண் டடுக்குக் கல் கட்டிடம். அவருக்கு இதுவல்லாது வேறு இரண்டு புல்வீடுகளும் இருந்தன. அவற்றில் அவர் தம் குடும்பத்தை அமர்த்திக்கொண்டு இவ்விடத்தைப் பள்ளிக் கூடம் ( ஆரம்பப்பள்ளி ) வைத்து நடத்தக் கொடுத் திருந்தார். நாங்கள் தங்கிய நாட்கள் பள்ளிக்கூடத்திற்கு

விடுமுறை நாட்களாயின. பெரும்பாலும் அந்தப்பகுதி களில் இதுபோன்று கயிலை யாத்திரை செல்வோர் பள்ளிக் கூடங்களில் தங்குவதும், அந்த நாட்களில் ஆசிரியர் களும் மக்களும் இடங் கொடுத்துவிட்டு மற்ற நாட்களில் பள்ளிக்கூடம் வைத்து நடத்திக்கொள்வதும் வழக்கம் தான். கீழே உள்ள பகுதியை அவர்கள் மாடுகள் கட்டிவைத் துக்கொள்வதற்கும் அப்போதைக்குவேண்டாத பொருள் களைப்போட்டு வைத்துக் கொள்வதற்கும் பயன்படுத்திக் கொண்டிருந்தார்கள். அது முற்பகுதி பிற்பகுதி என்ற இருபகுப்புடையது. பிற்பகுதியில் வேண்டாத பொருள்கள் மழைக்காலச் சேமிப்புக்கள் இவற்றைப் போட்டுக்கொண்டு முன்னிடங்களில் அவர்களுடைய ஆடு மாடுகளைக் கட்டிக் கொள்வார்கள். அப்பகுதி இப்பொழுது எங்களுக்குச் சமய லிடமாயிற்று. மேலேயும் இதேபோல முன்னிடம் ஒரு ஒட்டமும் (Verandah), அப்பால் இரண்டு அறைகளுமாக அமைத்து விட்டிருந்தார்கள்.

ஆகையால் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமும் மற்றவர் களும் துன்பமில்லாமல் வசதிபோலத் தங்க முடிந்தது. ஆனால் மாடிக்குச் செல்வதற்குப் படிகள் மாடுகள் ஏறாத அமைப்புடையன. மிகவும் உயரமானவைகளாகவே படிகளை அமைத்திருந்தார்கள். அவ்விதம் ஏறிப் பழக்கமில்லாத எங்களுக்கு அது துன்பம் தந்தது. ஆனால் மேலே இருந்து சுற்றுப்புறங்களைப் பார்த்துப் பரவசமடையக்கூடிய பெருவாய்ப்பும் எங்களுக்குக் கிடைத்தது. அங்கிருந்து சுற்றுப்புறங்களை நாள் முழுவதும் பார்த்துக்கொண்டே இருக்கலாம். பசிகூடத் தெரியாது. அவ்வளவு அழகிய காட்சிகள் அங்கு நிறைந்திருக்கின்றன. ஒவ்வொரு வேளை யிலும் ஒவ்வொரு விதமான காட்சி. அவ்வூரிலிருந்து

ஒருகல் தொலைவுக்கு மேலே உள்ள பள்ளப் பகுதியில் கௌரிகங்கை ஆறு ஓடிக்கொண்டிருக்கிறது. ஆனால் அதன் இரைச்சல் இங்கு இரவு நேரங்களில் கேட்டுக் கொண்டே இருக்கும்.

## புலம்பெயர் மக்கள் :

அக்கட்டிடம் உருளைக்கிழங்கு வயல்களின் நடுவில் அமைக்கப்பட்டிருந்தது. வீட்டிற்கு உரியவர் அந்தக் கட்டிடத்தை எங்களுக்குத் தங்கக் கொடுத்துவிட்டுத் தாம் அதன் அருகில் உள்ள விழல்வீட்டில் தங்கியிருந்தார். அவர் தங்கியிருந்த வீட்டின் சுவர்ப்பகுதி மண்ணாலும் கூரை காட்டில் கிடைக்கும் ஒருவித புல்லாலும் கட்டப் பட்டிருந்தது. சற்றுத் தொலைவில் நல்ல தாராவும் ஒரு சிற்றோடையும் அமைந்திருந்தன.

இவ்வூர் ஒரு மலைச்சரிவில் அமைந்திருக்கிறது. பெரிய ஊர். ஆனால் பேட்டைகள் பல உண்டு. அதாவது சிற்றூர் பல சேர்ந்த ஒரு பெரிய பகுதியைத்தான் ரேதி, முன்சியாரி, டிக்சன் என்று பல பெயரிட்டு வழங்குகின் றார்கள். மல்லா ஜோஹார் பூட்டியர்களுக்கு இது ஒரு முக்கியமான பெரிய ஊர். இந்த ஊரில் பனிக்காலங்களில் பனி விழுந்து ஒரு சில நாட்களில் உறைந்துவிடும். அக் காலங்களில் குளிர் அதிகமிருந்தாலும் ஊர் உறைபனியால் மூடப்படமாட்டாது. இதற்குமேலே உள்ள பகுதிகள் கௌரிகங்கை ஆறு உள்பட எல்லாம் பனிக்காலத்தில் உறைந்துவிடும். பல அடிக்கணக்கில் பனி உறைந்து கிடக்குமாம். அப்பொழுது அப் பகுதிகளில் உயிரினம் இருந்து வாழ முடியாது. உலகத்தில் உறைபனி



டிக்சன் உருளைக்கிழங்கு வயலில்

இடங்களில் உள்ள எல்லாத் துன்பங்களும் அக்காலத்தில் அப்பகுதிகளிலும் இருக்குமாம். பனிப்புயல், பனிவிழுதல் இவைபோன்ற பல துன்பங்கள்.

ஏப்ரல் மாதத்தில் கடும் வெய்யில் தாக்கி பனி உருகி மேமாதம் முடிவில் தரைதெரியத் தொடங்கிய பிறகுதான் இதற்குமேலுள்ள பகுதிகளில் இவர்கள் செல்வர். அதுவு மல்லாமல் இமாலயக் கணவாய்ப் பகுதிகள் திறந்து திபேத்துக்குச்செல்ல வாய்ப்பு ஏற்படும் வரை இவர்கள் அதற்கு மேலே செல்லமாட்டார்கள். அந்தக்காலங்களில் இவர்கள் மிலம் வரை சென்று குடியேறுவர். கோடைக் காலங்களில் அப்பகுதிகள் இந்த ஊரைவிடக் குளிர் மிகுந்திருக்கும். இங்குள்ள இளவேனில் இம்மக்களால் தாங்கமுடியாத வெப்பமாக இருக்கும். இங்கு இவர்களுக்குக் கடுங் கோடையாகத் தோன்றுங்காலங்கள் நமக்கு மிகக் குளிர் உள்ளதாக இருக்கிறது. எவ்விதமாக இருந்தாலும் இப்பகுதி மக்கள் அல்மோராதாண்டிக் கீழே சென்றதில்லை. திபேத்துக்கு வழியமைப்புக்கள் நன்ருகத் திறப்பது ஜூன் மாதம் முதல்வாரம் அல்லது அதற்கடுத்தவாரத்தில்தான் நிகழும்.

இம்மக்கள் மேமாதத்தில் மேலே உள்ள மிலம் வரை தங்கள் குடும்பங்களை அழைத்துச்சென்று அங்கு அவர்களைத் தங்கவிட்டு ஆண்கள் திபேத்திய வாணிபத்தைக் கருதி மேலே சென்றுவிடுவார்கள் வியா பாரிகள், மூட்டைத்தூக்கிகள் அல்லது குதிரை ஓட்டிகள் என்ற ஏதாவது ஒரு தொழிலில் இவர்கள் சென்றுவிடுவார் கள். ஆகையால் இம்மக்களுக்கு முன்சியாரிப் பகுதியில் - அதாவது தேஜத்திலிருந்து உள்ள ஜோஹார்ப் பகுதியில் ஒரு வீடும், மிலம் வரையில் உள்ள பகுதிகளில் ஒரு வீடும்

ஆக இரண்டு வீடுகள் இருக்கும். அவர்கள் ஒரு வீட்டை விட்டு வேறு வீட்டிற்குச் செல்லும்பொழுது அவர்களுடைய பொருள்களேயும் ஆடுமாடுகளேயும் ஓட்டிக்கொண்டு சென்று விடுவார்கள். கீழ்ப் பகுதியில் சாகுபடி வேலேகளேப் பெண்கள் வந்துவந்து பார்த்துக்கொள்வார்கள். இப்பகுதி களில் தங்குவோரிடமும் ஒப்படைத்துவிட்டுச் செல்வர். அக்டோபர்மாதக் கடைசி அல்லது நவம்பர் முதல்வாரத் துக்குள் இங்கும், இதற்கு மேலே உள்ள பகுதிகளிலும் பனி விழத் தொடங்கும். அக்காலங்களில் கீழே வரு வார்கள். வீடுகளே இவர்கள் பூட்டுவது கிடையாது. மலேக்கற்களில் துண்டு துண்டாக உள்ளவைகளே எடுத்து வாயிலில் இட்டு அடைத்துவிட்டுச் செல்வர்.

## பூட்டியரின் பண்பு :

பெண்களிற் சிலர் தவிர மற்றவர்கள் பெரும்பாலும் கயிலேக்கும் மானசசரோவரத்திற்கும் தம் வாழ்நாளில் பல முறையும் சென்றுவந்தவர்களாகவே இருப்பர். யாத்ரி கர்களுக்கு வழிகாட்டிகளாக வரக்கூடியவர்கள் பலர் இங்குக் கிடைப்பர். வாணிபத்தில் ஈடுபட்டுச் செல்பவர் களில் பலர், ஞானிமாமண்டி, தர்ச்சன், தக்களக்கோட்டை சந்தைகளில் பலமாதங்கள் தங்கித் தொழிலில் ஈடுபட் டிருப்பர். ஆகையால் அங்குள்ள திபேத்திய அதிகாரிகள் லாமாக்கள், யாக்வாலாக்கள் முதலிய பலரையும் இவர் களுக்குத் தெரியும். அவர்களில் பலர் இவர்களுடைய வியாபாரத்தில் ஏஜண்டாகவோ ஊழியர்களாகவோ கமிஷன் ஏஜண்டாகவோ இவை போன்ற ஏதாவது ஒரு நிலேயில் இவ்வியாபாரிகளுக்கு உதவிகளாக இருப்பர். ஆகையால் திபேத்திய அரசியலில் பலர் நல்ல செல்வாக்குப் பெற்றவர்கள். இந்தப் பூட்டியர்கள் தெய்வபக்தியும்

அடியார்களிடம் நல்ல ஈடுபாடும் உடையவர்கள்; யாத்திரிகர்களுக்கும் அடியார்களுக்கும் பலவிதத்திலும் உதவிகள் புரிவார்கள். அதுவும் ஆர்வத்தோடு செய்துகொடுப்பர்.

வணிகருக்கு உள்ள தொழிற் குறிப்பும் இவர்களிடம் மிகுதியாக உண்டு. அவர்களிடம் பொருள்களை விலைக்கு வாங்கச் சென்றால் அங்குள்ள வாடிக்கைகாரர்களுக்கு ஒரு விலையும், இந்த யாத்திரிகருக்கு ஒரு விலையும் அதாவது ஒரு சிறிது வட்டம் சேர்த்தும் விலைசொல்வர். இது வியாபார நோக்கம். யாத்திரிகர்கள் எப்பொழுதும் புண்ணியங் கருதி எந்தப்பொருட் செலவையும் நோக்காது வருபவர்கள். மற்றவர்கள் அவர்களிடம் பலகாலும் வழக்கமாக வாங்கிக் கொண்டே இருப்பவர்கள். அதுவுமல்லாமல் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள். அந்த இனப்பற்று இங்கும் தலை தூக்கத் தலைப்பட்டிருக்கிறது. அதற்கான முன்னேற்றத் தொண்டுகளில் பல செல்வந்தர்களும் முற்போக்கு எண்ணம் உள்ளவாகளும் இப்பொழுது பல சங்கங்கள் அமைத்துக்கொண்டு ஈடுபட்டு உழைத்து வருகின்றார்கள்.

நாங்கள் டிக்சன் சென்ற அன்று பால் ஒரு சேர் விலை ரூபாய் அரை. மறுநாட்காலையில் அது பத்தணா; இரண்டு மூன்று நாட்கள் சென்று அது இன்னும் சிறிது விலை ஏறிவிட்டது. இங்கு மேய்ச்சல் வசதிகள் இருப்பதால் மாடுகள் அதிகம் என்று முன்னமே சொல்லியிருப்பது நினைவிருக்கலாம். பால், தயிர், வெண்ணெய் அதிகமாகக் கிடைக்கும். கோதுமை, மட்டமான அரிசி, உருளைக் கிழங்கு, மிளகாய் வெங்காயம் இவைகள் இங்கே மிகுதியாகக் கிடைப்பன.

கல்விநிலை :

இவர்களுடைய பேச்சில் மூக்கொலி அதிகமாகக் கலந்திருக்கும். இந்தியும் திபேத்திய மொழிக் கலப்பும் இருக்கும் என்று சொல்லுகிறார்கள். அதற்குப் பகாடி என்று பெயர். இங்கு உயர்நிலைப்பள்ளியும் முதல்தரக் கல்லூரியும் இருக்கிறது. உயர்நிலைப்பள்ளிவரை அதை வைத்து நடத்தி வந்தவர்கள் சுவாமி வித்யானந்தா அவர்கள் தாம். பிறகு ஏற்பட்ட சில தேசீய இயக்கங்கள் காரணமாக அதை அரசியலாரிடம் ஒப்படைத்துவிட்டார்கள். இப்பொழுது சில லட்ச ரூபாய்கள் செலவில் அழகான - உறுதியான கட்டிடங்கள் முதலியன அதற்கேற்பட்டு கல்லூரியாகவும் உயர்ந்துவிட்டது.

பெரும்பாலும் இங்கு ஆங்கிலக் கல்வியும் இந்தியும் படித்த ஆண்கள் அதிகம். ஆடைகள் எல்லாம் மேனாட்டுப்பாணியில் இருக்கும். ஆனால் அவர்கள் இக்கால பிரயாண வசதிகளான இரயில் ஆகாயவிமானம் போன்றவைகளைப் புத்தகத்தில் பார்த்திருக்கின்றார்கள். அவற்றை நேரில் பார்த்தது கிடையாது. அவை எப்படி இயங்குகின்றன என்பவற்றைக்கூட அவர்கள் அறியார்கள். இன்னும் பெண்களில் சிலர் மின்விசைக் கைவிளக்குகளைப் பார்த்ததுகூட கிடையாதென்று சொல்கிறார்கள். புகைப்படம் எடுக்கப்போனால் அப்பெண்கள் அஞ்சி ஓடி விடுகிறார்கள். அதற்கு உள்ள ஸ்டாண்டை எடுத்துக் கீழே பூட்டிவைத்தால் அதை ஏதோ துப்பாக்கி என்று எண்ணி ஆண்களும் ஓடுவார்கள் என்று சொல்லப்படுகிறது.

மருத்துவம் :

குழந்தைகளுக்குக் கரப்பான்நோய் அதிகம். அதாவது மண்டை, காதுப்பகுதி, மூக்குப்பகுதிகளில் சோரிசிரங்கு

இருக்கிறது. பெரியவர்களுக்குக் கழுத்துக்கட்டி என்ற நோயும் இருக்கிறது. சிலருக்கு யானைக்காலும் உண்டு. இங்கு நல்ல வைத்திய வசதி கிடையாது. அரசியலார் சில மருத்துவச் சாலைகள் வைத்திருக்கிறார்கள். அவற்றில் வைத்தியர் இருப்பது கிடையாது. கம்பவுண்டர் என்ற மருந்து கலந்து கொடுப்பவர்கள்தாம் இருப்பர். வைத்தியர்கள் பட்டப்படிப்புப் பெற்றவர்களாகையால் இங்குத் தங்கியிருந்து தொண்டுசெய்ய அவர்களுக்கு விருப்பம் இருப்பதில்லை. கீழே சமவெளிப்பகுதிகளில் உள்ள நகரங்களிலும் அதுபோன்ற பெரிய ஊர்களிலும் இருந்தால் அங்கே அவர்களுக்கு வருமானம் அதிகம் கிடைக்கும் அல்லவா ? இது ஒரு பெருங்குறைதான்.

## பெண்கள் ஆட்சி :

கோடைக்காலங்களில் ஆண்கள் அப்பகுதிகளில் அதிகம் இருக்கமாட்டார்கள். மேலே செல்ல முடியாதவர்கள், வயதானவர்கள் சென்று திரும்பவும் போவதற்கு வாய்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர்கள் தாம் அங்கங்கும் கண்ணில் படுவர். கோடைக் காலங்களில் ஆண்களைவிடப் பல மடங்கு பெண்களே அதிகமாக இருப்பார்கள். அப்பெண்கள் வயல்வேலைகள் எல்லாவற்றையும் செய்வார்கள். உழவு வேலைகளுக்கு மட்டும் அங்குவரும் ஆண்மக்களைப் பயன்படுத்திக் கொண்டு, பலன் எடுப்பதற்குக்கூட அவர்களை எதிர்பார்க்காமல் தாங்களே கண்டுமுதலும் செய்துவிடுவார்கள். ஆகையால் இங்குப் பெண்களுக்கு பெரிய அளவு சுதந்திரமும் ஆட்சியும் உண்டு. அதிலும் கோடைக்காலங்களில் ஆட்சி அவர்கள் கையிலேயே இருக்கிறது. வயது வந்த பெண்களுக்கு ஆதிக்கமும் ஆட்சியில் பெரும் பங்கும்

உண்டு. ஊர் வழக்குகள் தீர்த்துவைப்பது உள்பட பல வற்றிலும் அவர்களுக்குச் செல்வாக்கு அதிகம் இருக்கும் என்று சொல்லப்படுகிறது. ஓய்வுநேரங்களில் அப்பெண் கள் வீண்பேச்சுக்கள் பேசிப் பொழுது போக்குவதில்லை. கம்பளங்கள், கம்பளித்துணிகள் முதலியவை நெய்தல், கம்பளிச்சட்டைகள், மேற்சட்டைகள், தலைக்குல்லாய்கள், கம்பளி நூலால் பின்னுதல் இவைபோன்ற ஏதாவது ஒன்றைச் செய்துகொண்டே இருப்பார்கள்.

கையுறை காலுறை முதலியனவும் நெய்வர். அவ் வேலைகள் மிக அழகாக இருக்கும். சிறுவர்களும் சிறுமி களும் இவ்வேலைகள் செய்வர். இங்குள்ள கம்பளி ஆடு களிலிருந்து எடுக்கும் கம்பளியைக்கொண்டும் திபேத்தியப் பகுதிகளிலிருந்துவரும் கம்பளியைக்கொண்டும் நூல்களும் இவர்களே நூற்பர். ஆண்கள் பலர் கோடைக் காலங்களில் இப்பகுதிக்கு வரும் ஆடுகளின் உரோமங்களைக் கத்த ரிக்கும் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். கத்தரித்த கம்பளி உரோமங்களைச் சிக்கெடுத்து நூற்பதற்கு உதவியாகப் பாகுபாடு செய்துகொடுப்பதிலும் பலர் ஈடுபட்டிருக் கிறார்கள். இரவு தூங்கச் செல்லும்வரை இவர்கள் கை ஓயாது உழைக்கிறார்கள். வாய் தோத்திரம் சொல்லும். எல்லோரும் ராம, கிருஷ்ண மந்திர பஜனையில் ஆர்வத் தோடு ஈடுபடுவார்கள்.

அலங்காரம் :

பெண்கள் இடையில் பாவாடை உடுத்து அதன்மீது சிலர் புடவை கட்டி அதற்கு மேலே முரட்டுக் கம்பளி யால் ஆன துணியைச் சுற்றிக்கொண்டிருப்பர்.

மேலேயும் கம்பளி பனிக்காலக் சட்டை முழுக்கை யளவு போட்டுக்கொள்வர். தலையில் துணிமுண்டாசு யிருக்கும். காதுகளில் தொங்கல்கள் இருக்கும். கைகளில் வளையல்கள் அணிந்திருப்பர். காலில் வெள்ளிக்கம்பிக் காப்புக்களும் இருக்கும். கழுத்தில் பல மணி மாலைகளும் வெள்ளி நகைகளும் அணிந்திருப்பர். சிலர் இரட்டைச் சடை இட்டிருப்பர். சிறுமிகள் சிறுசிறு பின்னல்களாகப் பல நூற்றுக்கணக்கானவை போட்டு அவற்றைப் பிடரிப் பக்கத்தில் சேர்த்து இரட்டைப் பின்னலாக ஆக்கி இடுப்புப் பகுதிவரை நூல் சவுரி சேர்த்துப் பின்னி அந்த இரட்டைச் சடையையும் கடைசியில் ஒன்ருகச்சேர்த்து அதில் நீள மாகக் குஞ்சங்கள் வைத்துத் தொங்கவிட்டுக்கொண்டிருப் பார்கள். அவர்கள் கோடையில் அடிக்கடி குளித்தாலும் பனிக்காலங்களில் குளிப்பதேகிடையாது. தலைஅலங்காரம் மேலே சொல்லியிருக்கிற நிலையில் அவர்கள் தலைமுழுகு வதும் மிகக் குறைவுதான்.

## பூட்டிய உணவு :

உணவு வகைகள் பெரும்பாலும் ரோட்டி, சத்துமா, அரிசி, உருளைக்கிழங்கு, சப்ஜி ( கறி ) சில கீரைகள், ஹல்வா, பால் இட்ட அல்லது உப்பும் வெண்ணெயும் இட்ட தேநீர்ப்பானம். இவைதான் அங்கு அதிகம். அதில் உப்பிட்ட திபேத்திய முறை அவர்களுக்கு அதிகமாகப் பிடிக்கும். அதை அதிகமாக அருந்துவார்கள் என்று சொல்லப்படுகிறது. நண்பர்கள் வந்தால் உப்பிட்ட பானம்தான் கொடுப்பார்கள். அது அல்லது பால் இட்ட தேநீர் ஏற்றுக்கொள்ளவேண்டும். மறுப்பது அங்கு பண்பாட்டுக்குறைவாக மதிக்கப்படுகிறது.

## குடியும், பட்டப்பெயரும் :

அவர்கள் பலபல கூற்றங்களாக வகுத்துக்கொண்டு தம்முடைய வகையின் பெயர் சொல்லுவர். ஜோவார்பகுதியினர், தர்மாப்பகுதியினர், பியான்ஸ்பகுதியினர் இதுபோன்று பலவகை. அதிலும் ஊர்ப்பெயராலும் பட்டப்பெயர்வைத்துக் கொள்ளுவர். கர்ப்பியாங்கிலுள்ளவர் கர்ப்பியால்ஸ், புதி (Buddhi) யிலுள்ளவர் புத்தியால்ஸ், குட்டியிலுள்ளோர் குட்டியால்ஸ் என்று இதுபோன்றே பட்டப்பெயர் அமையும்.

## பழக்கவழக்கங்கள் :

குழந்தை பிறந்தவுடன் பெரியோர் 'நீ முப்பதுசேர் எடை தூக்கும் வல்லமையுடையவனுகவேண்டும்; ஐம்பது சேர் தூக்கும் வல்லமையுடையவனுகவேண்டும்' என்று ஆசி வழங்குவர். குழந்தைகளுக்குத் தீங்குநேராமலும், அந்திசந்திகளில் பேய், பூதத்தால் துன்பம் வராமலும் காக்கவும், திருஷ்டி முதலியவை நீங்கவும் அவற்றின் நெற்றியில் விபூதி பூசுவதுபோல் கரித்தூளிட்டும், பொட்டிட்டும் அவரவர் தெய்வங்களை வேண்டிக்கொள்வர். வெளி ஊருக்குச் செல்வோருக்குப் பெண்கள் நெற்றியில் குங்குமப் பொட்டிட்டு, மஞ்சள் நீர் சுற்றி, மாலையிட்டு, தாம்பூலம் அல்லது பெருஞ்சீரகமாவது வழங்கிக் கடவுள் வாழ்த்துச் சொல்லி வழியனுப்புவர். ஊரெல்லைவரையிலும் அல்லது ஆறுகளோ, அருவிகளோ குறுக்காகும் இடம் வரை உடன் வந்து இக்கரையில் நின்று வாழ்த்தி வழியனுப்புவர். பெரியோர் ஊருக்கு வந்தாலும் அல்லது வந்து திரும்பினுலும் தப்பட்டை முழங்கிக்கொண்டு குழந்தைகளும் பெரியோர்களும் அருட்பாடல்களைப் பாடிக்கொண்டு உடன்வந்து வழியனுப்புவர். சந்நியாசிகளிடம்

நல்ல பக்தியுண்டு. வாழ்த்துரை வழங்குவதில் பெரும் பாலும் வியாபாரப் பொருள் படக்கூடியதான சொல்ல மைந்த வாழ்த்துக்களாகவே இருக்கும். ஆண்களும் பெண்களும் கடும்உழைப்புடையவர்கள். வெளியிடங்களில் இறந்தவர்களை அங்கேயே தீயிட்டெரித்து அவர்களுடைய சாம்பலை ஒரு பாத்திரத்தில் அடைத்து எடுத்துவந்து அவர வர்கள் ஊரில் ஈமக்கடன் செய்து அவர்கள் முன்னேரைக் கொளுத்திய இடத்தில் அல்லது ஆற்றில் விடுவார்கள். இதனுல் இறந்தவர் அவர்வழி முன்னேரோடு சேர்க்கப்பட் டவராவார் என்று கருதுகிருர்கள். நண்பர்களில் யாருக் கேனும் நோய்வந்தாலும் அவர்கள் யாத்திரை சென்ருலும் சுகம்பெற வேண்டியும் யாத்திரை தீங்கின்றி முடிய வேண்டுமென்றும் பிரார்த்தித்து 10, 108, 1008 என்ற எண்ணிக்கையில் சிவலிங்கங்களை மண்ணில் செய்து வைத்துப் பூசை செய்து ஆற்றிலோ அல்லது ஏரிகளிலோ செலுத்திவிடுவர். நாங்கள் கயிலை யாத்திரை சென்றபிறகு யாத்திரிகர்கள் எல்லோரும் சுகமே யாத்திரை முடித்துத் திரும்பி வரவேண்டுமென்று பிரார்த்தித்துப் பலர் நயனி டாலிலும் வழியில் உள்ள ஊர்களிலும் சிவ பூஜை செய் திருக்கிருர்கள் என்பது பின்பு தெரியவந்தது

## திருமணம் :

இரவு நிலாக் காலங்களில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து ஆடிப்பாடி மகிழ்வதுண்டு. வயதுவந்த பெண் அயலூர் சென்று அங்குக் கண்டாலும் அல்லது தம் ஊருக்கு வந்திருக்கும் காலத்தில் கண்டாலும் அல்லது ஆடுமாடு மேய்க்குமிடங்களில் கண்டாலும் அவர்களுக்குப் பிடித்தமான மணமாகாத வாலிபர்களை இரவு நிலவில் ஆடிப்பாட தம்மூருக்கு அழைப்பர். நிலவு விளையாட்டில்

துதிப் பாடல்களும், உலகியற் பாடல்களும், நிலாப் பாடல்களும் பாடி ஆடுவர். குறித்தபடி இளைஞனும் குறித்த இடத்தில் வந்து சேர்ந்துகொள்வான். இதுபோல பல பெண்களும் இளைஞர்களும் அங்கே கூடுவர். மனமகிழ ஆடிப்பாடி நிற்பர். இப்படி நாட்கள்பலசெல்ல இரண்டுமனமும் ஒன்றுகும். முடிவில் முதலில் இளைஞன் '' நேரமாகிவிட்டது; மழை வரும் போலவும் இருக்கிறதே '' என்று சொல்வானும். அவளும் '' வழியும் மலைவழி; நிலவு மறைந்து இருட்டிவிட்டாலும் விடலாம்; அச்சந்தரக்கூடியதாகவும் இருக்கும் '' என்று சொல்வாளாம். அந்தக்குறிகண்டு அவன் அவள் வீட்டில்தங்கி மறுநாட்காலையில் தன்னூர்செல்வான். பெண்ணோடு உடனிருக்கும் அவள் தாய் பாட்டி முதலியோரும் அவனுடைய ஊர், தாய் தகப்பன் பெயர் முதலியவற்றைக் கேட்டறிந்துகொண்டு பெண் விருப்பத்துக்கு இடங்கொடுப்பர் வாணிபத்தை மேற்கொண்டு திபேத் முதலிய இடங்களுக்குச் சென்றிருக்கும் தந்தை முதலிய பெரியோர் வந்ததும் செய்தி சொல்லி மணம் முடித்து வைப்பர். இதில் கூடா ஒழுக்கம் எதுவும் நிகழாது என்று சொல்லுகிறார்கள். இதுவல்லாது பெரியோர் பார்த்து மணம் பேசி முடிப்பதுமுண்டு. இது நமது பழய இலக்கியங்களில் காணப்படும் களவுவழி கற்புவழித் திருமணங்களைஒத்திருக்கின்றனவல்லவா ? பொருள்வயிற் பிரிதல் முதலியனவும் அங்கே அடிக்கடி நிகழ்வதாகும். ஆகையால் தமிழிலக்கியப் பயிற்சியுடையோர் அவர்களுடைய பழக்கங்களைக் கண்டு மகிழ்வர்.

ஆடல்கள் :

பூட்டியர்களின் கிராமிய நடனங்கள் பலவகைப்படும். தண்டியாலா, ரசகர்ப்பா, ஜப்பூலி, தூங்கா, துராங் இவை போன்ற பல. சொபானம் கொட்டல் (கைகளைத் தட்டி,

ஒலி எழுப்பிக்கோண்டும் பாடிக்கோண்டும் சுற்றிச் சுற்றி வருதல்). ஐப்பூலி ; ஆணும் பேண்ணும் ஒருவரை ஒருவர் இடுப்பை அணேத்துக்கோண்டு சுற்றி வருதல். தூங்கா ; இறந்தவர்கள் வீட்டில் உடல் வளேத்து வளேத்து ஆடுவது. துராங் ; எல்லாவற்றிலும் ஆணும் பேண்ணும் சேர்ந்து சேர்ந்து பாடி ஆடுவர். ஒருவர் முதலில் பாட மற்றவர்கள் பின்பற்றி ஒவ்வோரு அடியாகப்பாடி ஆடுவதும் உண்டு. பாடல்களிலும் வியாபாரப் பேச்சும் வழக்கங்களும் கலந்திருக்கும். நம்மூரில் ஆடுவதுபோல ஆடுகளும் புலியும் என்ற விளேயாட்டும் அதிகம். போதுவாக அவர்கள் எப்போழுதும் மகிழ்ச்சியாகப் பேசியும் பாடியும் போழுதைக் கழிப்பர்.

## பூட்டியரின் சமயக் கொள்கைகளும், விரதங்களும், பண்டிகைகளும் :

அதிகாலேயில் அவர்கள் எழுந்து காலேவேலேகளேப் பார்த்துவிட்டுத் தோத்திரங்கள் பாடிக்கோண்டே மற்ற வேலேகளேப் பார்ப்பாகள் அவர்கள் வீட்டில் சாதுக்கள் வந்தால் வரவேற்றுச் சத்சங்கங்கள் வைக்கச் சோல்வார்கள். அவர்கள் வீட்டில் ஓரிடத்தில் பல மூர்த்திகளின் திருவுருவப்படங்களே மாட்டி வைத்திருக்கிறுர்கள். அங்கு விளக்குகள் ஏற்றிவைத்துத் தூபதீபங்காட்டி வழிபாடுகள் செய்து மகிழ்வர். அப்பகுதிகளில் க்ஷத்திரியர்கள் தாம் அதிகம். பிராமணர்களும் இருக்கிறுர்கள் வீட்டுத் தரைப் பகுதிகளே அவர்களும் சாணம் இட்டுமெழுகித் தூய்மை செய்கிறுர்கள்.

போதுவாக இந்து மதத்தைச்சேர்ந்தவர்களே அதிகம். முகம்மதியம், கிறிஸ்தவம் அங்கு இல்லேயேனலாம்.

பஜனைப் பாடல்கள், துளசிராமாயணம், மகாபாரதம் முதலியனவற்றைப் பாராயணம் செய்வர். சைவ வைணவ பேதம் அங்கில்லை. பெரும்பாலும், கிருஷ்ண மந்திரமும், இராம மந்திரமுமே அதிகமாக முழங்கப்படும். பஞ்சசூலி, திரிசூலி நந்தாதேவி, கௌரி சங்கரம் முதலிய பனியுறை உயர் சிகரங்களையும், காளி, கோசி முதலிய நதிகளையும் வழிபடு கடவுளாகக் கோண்டவர்கள். ஆடு மாடு பலியிடும் வழக்கமும் உண்டு. மலை வழிகளில் கல் துண்டுகளை அடுக்கி அதன்மீது கோடிகட்டி வனதேவதைகளையும் மலைத்தேய்வங்களையும் அங்கே கண்டு வழிபடுதலுமுண்டு. நிலங்களைப் பயிர் செய்வதில் ஹர்த்தியால் காப்லா (Gabla) என்ற கடவுளர்களை வழிபட்டு மழை வேண்டிப் பெற்றும், பெருமழை பெய்தால் மழை நிற்கச் செய்தும் பயன்கோள்வர். மழை அதிகமாகப் பெய்தால் தர்மா என்னும் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்வர். பணியாரங்கள் செய்து மழை வேண்டுமானுல் தண்ணீரில் ஊர வைத்தும், மழை நிற்க வேண்டியதற்கு அதனை நன்ருகக் காயவைத்தும் நிவேதனம் செய்வர். தரும தேவதை வழிபாட்டுக்காலத்தில் திரிசூலம் ஒன்றை நட்டுவைத்து அதன் அடியில் மனித உரு ஒன்றையும் செய்தமைத்து யாக் சவுரிகளைத் தொங்கவிட்டு ஆடிப்பாடி ஆடு பலியிட்டு வழிபடுவர். நாட்டு நலன், மழை, பனி முதலியவற்றிற்கு வருணனே அதிதெய்வம் என்று கோள்ளுகிருர்கள். இவை வேண்டியிருந்தாலும், அதிகமாகப் பெய்து நிறுத்த வேண்டியிருந்தாலும் அவ் வருணனுக்கே வழிபாடுகள் நிகழ்த்தப்பெறும்.

**வசந்தபஞ்சமி :**

சரஸ்வதி வழிபாடு. குளித்து முழுகி மஞ்சளாடை உடுத்தி விரதமிருப்பர். அன்பர்கள் ஒருவருக்கோருவர்

நெற்றியில் மஞ்சளிடுவார்கள். தலைப்பாகைகளில் பார்லி கொத்துக்களைச் சொருகிக்கொள்வர். மஞ்சள் கைக்குட்டை களைப் பிரசாதமாகவும் பரிசாகவும் வழங்குவர்.

## புத்தாண்டுப் பிறப்பு :

சாந்திரமானத்தைக் கொண்டு ஆண்டுக் கணக்கிடுவர். ஆங்கில ஆண்டு மார்ச் மாதத்தில் ஆண்டுப் பிறப்புவரும். கடவுள் வழிபாடு, விருந்து முதலியன நடத்துவர்.

## சிவபார்வதித் திருமணம் :

அவர்களுடைய பகாடி வழியில் அடார் மாதத்தில் இது நிகழும். எல்லோரும் கூடியிருந்து நடத்திவைப்பர். சிவபார்வதிக்கு வழிபாடுகள் செய்து தோத்திரப் பாடல்கள் இசைப்பர். எல்லோரும் சேர்ந்து நின்று “ ஓம் ஹரிகாளி ! உன்னை வணங்குகிறோம். ஹரியால் நீ இங்கு வந்தாய். அவன் அன்பு முழுவதும் உனக்கு உண்டு. உயிர்களில் நீ கலந்து நிற்கிறாய். துன்பந் துடைத்து எங்களைக் காப்பா யாக ” என்று தோத்திரம் சொல்லி வணங்குவர்.

## மகரசங்கிராந்தி :

இதுவும் சிறப்பான பண்டிகையே. நம் நாட்டில் தைப்பொங்கல் விழாப்போல பண்டிகையும் வழிபாடும் கலந்தது. பெண்களுக்குச் சீர்வரிசைகள், வேலையாட் களுக்குப் பரிசுவழங்குதல், அட்சதை அளித்தல் முதலியன வும், ஆடு மாடுகளுக்கு வழிபாடுகளும் நடைபெறும்.

தீபாவளி, சிராவணம், குருபூர்ணிமா முதலியனவும் நடத்தப்பெறும். ஜோஹார்பகுதி மக்கள் வைதிக காரியங் களைப் பண்டிதர்களை (பிராமணர்களை)க் கொண்டும்

கர்ப்பியாங் வழியில் தர்ச்சூலா வரை திபேத்திய லாமாக் களைக் கொண்டும் நடத்துவார்கள் என்று சொல்லப் படுகிறது.

நிம்க்கின்சா :

டிக்சனிலில் தங்கிய நாட்களில் இதுபோன்ற பல செய்திகள் தெரியவந்தன. அங்கு ஐந்து நாட்கள் தங்கி யிருக்க நேர்ந்தது. க்வீட்டியில் நாங்கள் விட்டு வந்த பொருள்கள் பலவும் வந்துசேர இத்தனை நாட்களாகி விட்டன. எல்லாம் வந்தும் கயிலையில் வழிபட எடுத்துச் சென்ற லிங்கமும் நந்தியும் அடங்கிய பெட்டி வந்து சேரவில்லை. அது வந்த பிறகுதான் இங்கிருந்து புறப்பட வேண்டுமென்று ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் உறுதியாக உத்தரவாயிற்று. அவ்விதமே ஏற்பாடு செய்து ஆள் கிடைத்து வந்துசேர அத்தனை நாட்களாகிவிட்டன. நாங்கள் தங்க இடங்கொடுத்து உதவியவர் பெயர் இந்திர சிங் பாங்தே. இப் பகுதிகளில் பாங்தே வகுப்பார்தான் அதிகம். செல்வாக்கும் செல்வமும் படைத்தவர்கள். இந்திர சிங்குக்கும் நிலமும் வீடுகளும் திபேத்திய வியாபாரமும் உண்டு. அவருடைய குடும்பத்தினரும் அடியார்களிடம் அன்புமிக உடையவர்கள்.

ஒருநாள் அக்குடும்பத்தில் உள்ள மூதாட்டியார் தம் முடைய வீட்டிலுள்ள பெண்கள் பிள்ளைகள் எல்லாரையும் அழைத்துவந்து ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்துக்குப் பாதபூஜை செய்து வணங்கி ஆசிபெற்றுக்கொண்டார். கையுறையாகப் பசுவின்பாலும் தேயிலைப்பானமும் கொண்டுவந்திருந்தார். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் உடன்வந்திருக்கும் பரிகலச் சமையல் அல்லாத எதுவும் உட்கொள்ளுவதில்லை என்று அறிவிக்கப்பட்டது. அம்மையாருக்கு வருத்தம் அதிகம்.

பாலையாவது ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று வேண்டிக் கொண்டார். அதை ஏற்றுக்கொள்வதாகச் சொன்னதும், தாம் கொண்டு வந்த சாயை (தேயிலைப் பானத்தை) உடன் வந்தவர்களை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். "இது உடலுக்கு மிகவும் நல்லது. தண்ணீரில் தேயிலைத் தூளைப் போட்டு சேர்த்து ஒரு பாத்திரத்தில் இட்டு அதில் வெண்ணெயும் சேர்த்துக் கடைந்து எடுத்து வந்திருக்கிறேன். இந்தப் பானத்தை நாங்கள் காலையிலிருந்து இரவுபடுக்கைக்குப் போகும்வரை பலமுறை அருந்துவோம். உடலுக்கு மிகச் சிறந்தது. நாங்கள் தேயிலைப்பானத்திற்குப் பாலும் சர்க்கரையும் சேர்த்து அருந்துவது கிடையாது. அது அவ்வளவாக எங்களுக்குப் பிடிக்காது. திபேத்திய வழியில் பெரும் பாலும் இதுதான் வழக்கம். இதை மறுக்காமல் ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும். மறுத்தால் நாங்கள் அதை விரோதமாக எடுத்துக் கொள்வோம். உற்ருருக்கும் உறவினருக்கும் கொடுத்து அன்பு செலுத்துவோம்" என்று சொன்ஞர். அவ்விதமே எங்களில் பலரும் அதனை ஏற்று அருந்திஞேம்.

நமக்கு வழக்கமில்லாத ஒன்றை அருந்துவதில் ஏற்றுக்கொள்வதாகவோ நாவின் சுவைக்கு ஏற்ற தாகவோ இல்லை. இருந்தாலும் கயிலை யாத்திரிகர் களுக்கு விருந்தோம்பும் செயலாக மனம் கனிந்து கொடுப் பதை ஏற்றுக்கொள்ளாவிட்டால் அக் கிழமுதாட்டியின் மனம் வருந்துமல்லவா! பசித்தால் பலரும் இந்தத் தேயிலைப் பானத்தில் கோதுமைச் சத்துமா அல்லது பார்லி சத்துமாவைப் போட்டுக் குழைத்து அதை உண்டு முடிவில் தேநீர் அருந்திப் பசியாறுவதுமுண்டு. அந்தக்

குடும்பத்தினர் தம் வயலிலிருந்து செடியோடு உருளைக் கிழங்கு, வெங்காயம், பச்சைமிளகாய் முதலிய காய்கறிகளும் கொண்டுவந்து கொடுத்தார்கள்.

சத்சங்கம் :

ஒருநாள் தம் வீட்டில் சத்சங்கம் நடத்தவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார்கள். நாங்கள் டிக்சன் வந்து சேர்ந்த மறுநாள் சத்சங்கம் நடத்தப்பட்டது. பல மொழிகளில் துதிப்பாடல்கள் பாடப்பட்டன. திருமுறையும் ஓதப்பட்டது. சத்சங்கம் என்றால் பலரும் ஒன்று கூடித் துதிப்பாடல்கள் பாடுவதும் எல்லோரும் சேர்ந்து பஜனை நடத்துவதுமாகும். பிறகு நல்ல பொருள்களைப் பற்றிச் சமயச் சொற்பொழிவுகளும் உண்டு. சுவாமி வித்யாநந்தாவும் தமது இனிய குரலால் பக்திப் பாடல்களும் பகவத்கீதைச் சுலோகங்களும் சுருதிப்பெட்டியைத் துணையாகக்கொண்டு பாடினார்கள். இந்திரசிங் பாங்தேயின் வீட்டிலுள்ள பூஜை அறையில் சுவாமிகளும் எங்களில் சிலரும் சென்று சத்சங்கம் நடத்திவந்தோம். அங்குள்ள கடவுள் திருவுருவப்படங்களுக்குத் தூபதீபங் காட்டிப் பூக்களைக் கொண்டு அர்ச்சனைசெய்து வழிபாடு முடித்துத் துதிப்பாடல்கள் பாடினர். எல்லாம் பெரும்பாலும் ராம், கிருஷ்ணநாம பஜனைதான், இருந்தாலும் சிவதோத்திரமும் பாடப்பட்டது. வழிபாட்டு முடிவில் பிரசாதங்கள் வழங்கப்பட்டன. மிட்டாயும், காய்ந்த திராட்சையும் வழங்கப்பட்டன. வழிபாட்டுக் காலங்களில் அங்குள்ள பெண்களும் குழந்தைகளும் சேர்ந்து துதி பாடினர். கண்களில் நீர்வார அவர்கள் நடத்திய பஜனை நம்மையும் உருக்கும் திறத்தது.

## இரண்டாயிற்று :

யாத்திரையை மேலே தொடர்ந்து செல்ல சுவாமி வித்யானந்தா அழைத்துவந்த வடநாட்டவர்கள் பலரையும் முதல் தொகுதியாக அனுப்பிவைத்தார். இதற்குமேல் மார்த்தோலி வரையில் உள்ள பகுதிகளில் குகைகளில் தங்கிச்செல்லுதல் வேண்டும். சேர்ந்தாற்போல் 40, 50 பேர்கள் சென்று தங்கமுடியாது. ஆகையால் இவ்விதம் ஏற்பாடுசெய்யவேண்டியதாயிற்று.

## டிக்சனில் ஏற்பாடு :

வந்த கூலிகள் எல்லோரும் எங்களைவிட்டு வந்த அன்றே சென்றுவிட்டார்கள். ஆகையால் புதிதாகக் கூலிகள் திட்டம் செய்யவேண்டியதாயிற்று, தக்களக் கோட்டைவரை உடன்வந்துதவ வழிகாட்டி ஒருவனும், சமையல் உதவி ஒருவனும் அமர்த்திக்கொண்டோம். வழி காட்டியாக வருபவன் கூலிகள். சவாரிக் குதிரைகள், யாக் முதலியன திட்டம்செய்து கொடுப்பதும், சமையற் பொருள்கள் தட்டுப்பாடு ஏற்பட்டால் கிடைக்கக்கூடிய இடத்தில் வாங்கிவந்து கொடுத்தல் கூடாரங்கள் அமைக்க உதவுவது இவைபோன்ற எல்லாநலன்களும் யாத்திரையில் திட்டம் செய்து கொடுப்பது என்று பேசி அதற்குக் கூலி இவ்வளவு என்றும் ஏற்பாடு செய்யப்பட்டது. சமையல் ஆளுக்கு நாள் ஒன்றுக்கு உணவு அளிப்பதன்னியில் கூலி இவ்வளவு என்றும் பேசிக்கொள்ளப்பட்டது.

மேலே குளிர்மிகு பகுதிகளில் பயன்பட கம்பளியில் அதிகப்படியாக இரண்டு மேற்சட்டைகளும் கால் சட்டைகளும் இவ்வூரிலேயே தைத்துக் கொண்டார்கள் பலரும்.

இவைகளை முடித்துக்கொண்டு அவ்வூரைவிட்டு நாங்கள் 14—7—1959 காலை 11-மணிக்குப் புறப்பட்டோம். முன் தொகுதியினர் சென்ற மூன்றுவது நாள் அது. நாங்கள் எடுத்துச் சென்றவற்றில் சில பொருள்களை இங்கும் குறைத்துக்கொள்ள வேண்டி வந்தது. அவற்றை வீடு கொடுத்து உதவிய பாங்தேவுக்குக் கொடுத்துவிட்டு மேலே சென்றோம்.

## ரத்திவரை :

இங்கிருந்து இரண்டு கல் தொலைவுவரை பாதை இறக்கம். பிறகு வழி ஏற்றமும் இறக்கமுமாகச் செல் கிறது. மேலும் இரண்டு கல் தொலைவு சென்றதும் சுரிங்காட் என்னும் ஊர் வருகிறது. வழியைவிட்டுச் சிறிது தொலைவு அப்பாலேயே ஊர் அமைந்திருக்கிறது. பிறகு வழி இறக்கமாகச் சென்று கௌரி கங்கைக் கரையை அடைகிறது. இனி மிலம் வரையில் கௌரி கங்கையின் கரையை ஒட்டியே வழிசெல்கிறது. ரதியைத் தாண்டி ஒரு சிறு தொலைவு சென்றதும் பாதை இரண்டாகப் பிரிகிறது. அதில் ஒன்று அகலமான பாதை ; மற்றொன்று முதலில் ஒற்றையடிப் பாதையாகத் தொடங்கிச் சிறிது தொலைவு சென்ற பிறகு பெரும்பாட்டை ஆகிறது. இந்த ஒடுங்கிய வழி ஊருக்குள் சென்று பிறகு ஊரின் வெளிப்புறத்தை ஒட்டிச் செல்கிறது. ஊருக்குள்ளும் இரண்டு தெருக்கள் குறுக்கே வருகின்றன. ஆகையால் இங்கு வழி மயக்கம் ஏற்படுகிறது.

வழி சொல்ல பகல் வேளைகளில் அங்கு யாரும் எதிர்படுவது அரிது. இவ்வூரில் அப்போது உள்ள ஆண்களும் பெண்களும் வயல் வேலைகளுக்குச் சென்று விடுகின்றார்கள். ஊரைச்சுற்றிப் பசிய வயல்வெளிகள்.



மலைவழியில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்



லிலம் குகைக்குச் செல்லும் வழியில்



மலைவழியில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களும்
உடன் சென்ற மற்றவர்களும்

இந்தநிலையில் புதிதாகவரும் இதுபோன்ற பெரும் யாத்திரை செல்வோர் ஒடுங்கியவழியைவிட்டுப் பெரிதாக அமைக்கப் பட்டிருக்கும் பாதையில்தான் செல்ல நேரும். எங்களில் சிலர் அவ்வழியேயும் சென்றுவிட்டார்கள். ஆனால் அந்த ஒடுங்கிய வழியே மிலத்துக்குச் செல்வது. எங்களுக்கும் வழிமயக்கம் ஏற்பட்டது. ஆனால் இங்கும் ஆண்டவன் உதவி எங்களுக்குக் கிடைத்தது ஒரு பெரும் மூதாட்டி யின் மூலமாக. நாங்கள் அவ்வூரில் நுழைந்த சமயம் அந்த முதியவரும் வயற்புறத்திலிருந்து வீடு திரும்பி வந்து கொண்டிருந்தார். அந்த அம்மையாரிடம் கேட்டுப் புரிந்து கொள்வது சற்றுத் தொல்லையாகவே இருந்தது. வயது மிகுதியான நிலையில் (80க்கு மேலிருக்கும்) காதும் கேட்க வில்லை. உரத்துச் சத்தமிட்டுக் கேட்டுப் புரிந்துகொண்டு மேலே சென்றோம். அன்போடு அந்த அம்மையார் எங்களுக்குப் பகாடி மொழியில் ஏதேதோ சொன்னார். அது ஒன்றும் எங்களுக்குப் புரியவில்லை. ‘மிலம்கே ஃபாட்டா ஈப்பக்கல்'' என்று சொல்லிக் கையை அவ்வழியே ஆட்டியதுதான் புரிந்தது

## மலைநாட்டுக் கடை :

நேர் வழியில் இங்கிருந்து இரண்டு கல் தொலைவு இறக்கம். நடு நடுவில் ஒவ்வொரு தேநீர்க்கடையும் இருந் தது. பாதையை ஒட்டி மலைகளில் உள்ள சிறுசிறு குகைப் பகுதிகளைக் கடையாக்கிக் கொண்டிருந்தார்கள். அந்த இடத்தில் பாறையின்மீது அவர் குடியிருக்க வீடுகளும், கீழே குடைவுப் பகுதியில் கடையும். கடைக்கு முன்பக்கம் காட்டுப் புல் வேய்ந்த பந்தல். அதேபோல வீடுகளுக்குக் கூரைகளும் அவ்விழற் புல்கொண்டே அமைத்துக் கொண் டிருந்தனர். வீட்டுக்குப் போக ஒரு ஏணி, கடையில்

வருவோர் தங்க இயற்கையாக அமைந்திருந்த பாறைகளே விசுப்பலகைகள். மலை இடுக்கிலிருந்து கசிந்து கசிந்து வரும் நீரூற்றுக்களை மூங்கில் பட்டையில் ஏந்திவிட்டு அதுவே என்றும் வற்ருத முட்டாத தண்ணீர்க் குழாய். அவனும் அவன் மனைவி மக்களுமே கடையில் வேலை ஆட்கள் எப்பொழுதும் அலுமினியக் கேட்டிலில் தேயிலைத் தண்ணீர் கொதித்துக்கொண்டே யிருக்கும். தேநீர் விரும்பி யார் வந்தாலும், மேலும் சிறிது தேயிலைத் தூளை அந்தக் கஷாயத்தில் இட்டுப் பாலும்சர்க்கரையும் சேர்த்துக் கொடுக்கிருர்கள். கிடைக்கும் இடம் நோக்கி அது மிக அருமையாகவும் இருக்கிறது. இயற்கையாக அங்குள்ள இடத்தையும் பொருள்களையும் பயன்படுத்திக் கொண்டு சிக்கனமாகக் கடையும் வாழ்க்கையும் நடத்தி வருகிருர்கள் அவர்கள். கூட்டம் அதிகமாக இருந்தால் பால் கிடைக் காது வெறும் தேத்தண்ணீர்தான் அருந்த வேண்டும். கயிலை யாத்ரி என்ருல் அருமையாக அவர்கள் மொழியில் பேசி உபசரிக்கின்றனர்.

ராபின்சன்குருசோ வாழ்க்கை :

இது போன்ற கடை ஒன்றில் பலரும் தேநீர் அருந் திேைம். ராபின்சன்குருசோ (Robinson Crusoe) என்பவர் அங்கங்கும் இயற்கையாகக் கிடைத்த பொருள்களைக் கொண்டு ஒரு தீவில் பல ஆண்டுகள் வாழ்ந்தார் என்ற கதையினை மெய்ப்பித்து இப்பகாடியர் வாழ்க்கை நடத்து கிருர்கள். அங்குக் கடையில் சென்று தங்கிய காலத்தில் எங்களோடு உடன் வந்தவர்களில் சிலர் வழிதவறிச்சென்ற செய்தி தெரியவந்தது. அவர்களைக் கண்டு அழைத்துவர ஆள் அனுப்பிவிட்டு அங்கேயே தங்கினேம். சிறிது நேரத் திற்குள் மழையும் பெய்தது. எதிரே கௌரி கங்கை முழங்

கிச்சேல்வதும் அதன் அக்கரையில் மரமடர்ந்த காடும் மிக அழகாக இருந்தன. மழை நின்று வேளியே ஆற்றின் போக்கின் வழியைப் பார்த்தால் அது இதைவிட அழகு மிக்கிருந்தது. கண்ணுக்கு எட்டிய தோலைவு வரை பசிய மரமடர்ந்த மலைகளும் அதனிடையில் கௌரி கங்கை குதித்துக் குதித்துச் செல்வது போல நடுநடுவில் உள்ள பாறைக் கற்களின் மீது வழிந்து ஓடுவதுமாகக் காட்சி அளித்தது.

லிலம் குகை :

மழை நின்று சிறிது நேரத்தில் மற்றவர்களும் வந்து சேர்ந்தார்கள். அவர்களையும் உடனழைத்துக் கோண்டு மேலே சிறிது தோலைவு சென்றதும் அங்கே மூட்டைத் தூக்கிகளும் மற்றவர்களும் நடுவழியில் தங்கி யிருந்தனர். அந்த இடம்தான் லிலம். ஆனால் அங்குத் தங்க வீடுகள் எதுவுமில்லை. வீட்டு இடமாகத் தங்க நினைத்துப் பார்த்தால் மேலும் 4 பர்லாங் தோலைவு சென்று கௌரி கங்கைக்கு அமைக்கப்பட்டிருக்கும் மரப்பாலத்தின் வழியே கடந்து அக் கரையில் சேங் குத்தாகச் செல்லும் மலை வழியே 500. 600 அடி மேலே ஏறிச் சென்றால் அங்கோன்றும் இங்கோன்று மாக இரண்டு வீடுகளிருப்பதில் தங்கலாம். ஆனால் அங்கும் இடம் கிடைக்காவிட்டால்... .. பாதையோரத்திலா வது தங்கலாமென்றால் துணிக் கூடாரம் அமைக்க வேண்டும். மழை தூறினாலும் அட்டைகள் வந்து தோல்லை கோடுக்கும். வழி காட்டி அங்குக் குகைகளிருப்பதாகவும் அங்குச் சென்று தங்கலாமென்றும் சோன்னான். கீழே யிருந்து பார்ப்பதற்குக் குகையிருக்குமிடம் தேரியவில்லை.

மலை சரிவாகச் சென்றது. செடியும் கொடியும் அடர்ந்து வளர்ந்திருந்தன. அந்த மலைச் சரிவில் ஏற வேண்டி வந்தது. வழி துன்பந்தரத் தக்கதாக இருந்தது. ஒற்றையடிப்பாதை கூட இல்லை. புல்லும் புதருமாக மண்டியிருந்த வழியில் முன்னே வழி காட்டியும் கூலிகளும் செல்வதைப் பின் பற்றிச் சென்றோம். சிறிது நேரத்துக்கு முன் பெய்த மழையினாலும் ஆங்காங்கும் இருந்த சிறுசிறு நீரூற்றுக்களாலும் சேறும் சகதியுமாக சருக்கல் அதிகமாக இருந்தது. வழுக்கி விழாதபடி பக்கத்தில் உள்ள புல் புதர்களைப் பிடித்து ஆதரவுபெற்று ஏறிச்சென்றோம். செடிகள் புல் நுனியில் அட்டைகளும் காத்திருந்தன. அவை பலரையும் கடித்து இரத்தத்தை உறிஞ்சுகின்றன. இப்படியாகத் துன்பப்பட்டு 300, 350 அடி உயரத்துக்கு வந்ததும் அங்கு ஒரு பெரிய குகைஇடம் கிடைத்தது. அதன் அருகில் ஒரு சிறுதெளிந்த நீரூற்றுமிருந்தது. அங்கேயே தங்கினோம். கூலிகள் எங்கள் மூட்டைகளை அங்குச் சேர்த்துவிட்டு வேறிடம் தேடிச்சென்றுவிட்டார்கள்.

வழிகாட்டியாகவந்தவன் அப்புதரில் கிடைத்த ஒரு வகைக்கீரையைப் பறித்தெடுத்துவந்துகொடுத்தான். அதை அவர்கள் மொழியில் ஃபத்துவ (Phatua) என்று சொல்லுகிறார்கள். சமைத்து உண்டதில் மிகவும் ருசியாகவே இருந்தது; குகையின் கூரையாக மலைப்பாறை ஒன்று 15 அடி நீண்டுநின்றது. குகைவாயில் உயரம் 10, 12 அடி இருக்கலாம். அது அடியிடத்தை நோக்கிப் போகப் போகச் சரிவாகிக்கொண்டே செல்கிறது. அதிலும் ஒழுங்காக இல்லாமல் பல இடங்களில் பதிவும் பாறை துருத்திக் கொண்டும் இருந்தது. ஆகையால் அங்குத் தங்குவோர் நிதானமாக இருத்தல் வேண்டும். குகை உட்பகுதியில்

தங்கக் கூடிய இடத்தில் மறந்தும் வேகமாக எழுந்து நிற்றல் கூடாது. தவறினால் மேலே உள்ள பாறையில் தலை மோதி உடைத்துக்கொள்ளவேண்டிவரும். குகையின் அகலம் 50 அடிக்கு மேலிருக்கும். உயரம் குறைவாகச் சரிவாக வரும் பக்கத்தில் எங்கள் மூட்டைகளையும் பிறவற்றையும் வைத்துவிட்டு முன்னிடத்தில் படுக்கைகளை விரித்துப் போட்டுக்கொண்டு தங்கினோம். இதுதான் குகை வாசத்தின் முதல் அனுபவம். புது அனுபவம். படுக்கை போட்டுக்கொள்ளும் அளவுக்குத்தான் இடம் கிடைத்தது. கால்மாட்டுப்பக்கம் குகையின் வெளிமுனையில் வந்து நின்றது. குகையை விட்டுக் கீழே இறங்கினால் மலைக் காஞ்சூரு, அந்தச் செடியின் இலை நம்முடைய தோல்ப் பகுதியில் பட்டுவிட்டால் நெருப்பைவைத்துச் சுட்டதைப் போல எரிச்சலும், அதைத் தொடர்ந்து கடுமையான நமைச்சலும் உண்டாகிறது. அது ஒரு நாள் இரண்டு நாளளவுக்குக் கூட இருக்கும். பட்ட இடத்தில் வீக்கமும் காணப்படும்.

## குகைவாசம் :

அதனருகில் உள்ள குழந்தை ஓடையில் தண்ணீர் எடுத்து அன்றிரவு உணவு தயாரித்துக்கொண்டோம். முதலில் தேனீர். பிறகுதான் மற்றவை, (ரொட்டியும், உருளைக்கிழங்கும்). இருட்டத் தொடங்கியதும் பாராயணமும் துதிப்பாடலும் நடைபெற்றன. இயற்கைச் சூழ்நிலையில் அன்றையபாராயணம் மிகவும் அமைதியாக மனத்தில் பதிவதாக அமைந்தது. இலேசான மழையும் தூறத் தொடங்கியது. பக்கத்தில் மண்டிக்கிடந்த மலைக் காஞ்சூருக்கு அஞ்சிப் பலரும் குகையைவிட்டு வெளியே வரவே இல்லை. அன்றிரவு உணவருந்திப் படுத்த

போழுதும் சிறு மழை பேய்திருந்தது. குகையில் நாங்கள் வைத்திருந்த விளக்கொளியையும் மங்கவைக்கும் கப்பிய இருட்டு உள்ளும் புறமும். எங்களுக்கு மனதிற்குள் கயிலே யாத்திரையில் பல அனுபவங்கள் நிறைந்த மகிழ்ச்சியால் போங்கும் ஆனந்த ஒளி.

அரிசிச்சாதம், கிச்சடி, ரொட்டி :

மறுநாட் காலேயில் நாட்கடன்களே முடித்துக் கோண்டோம். காலே உணவாகக் கோதுமைரோட்டியும், உருளேக்கிழங்குக் கறியும், காப்பியும் வழங்கப்பட்டன. எங்களுக்கு ரோட்டி தின்று பழக்கமில்லே. அதிலும் காலே நேரத்தில் ஏற்பதாக இல்லே. சாதமாக இருந்தாலும் கிடைத்த உபகரணங்களேக்கோண்டு ஓரளவு ஏற்கும். வேண்டாம் என்று சோல்லவும் முடியாது. கிடைத்ததைத் தான் ஏற்கவேண்டும். இந்த நிலேயில் பேயரளவில் ரோட்டியைத் தின்ருேம். ஆனுல் சுவாமி வித்யாநந்தா தனக்கு வேண்டிய மட்டும் வாங்கி வாங்கி ஏற்றுக் கோண்டார்கள். எங்களேயும் வயிறு நிரம்ப ஏற்றுக் கோள்ளும்படியும் வற்புறுத்திஞர்கள். "வயிற்றில் ஒன்றுமில்லாது மலேப்பாதைகளில் சேல்வது உடலுக்கு நல்லதல்ல. இதன் பின்விளேவு மிகவும் துன்பந்தருவ தாகும். உடலுறுப்புக்கள் பலவீனப்படும்." என்று சோன்ஞர்கள்.

அவர்கள் சோன்னதற்காக மேலும் இரண்டு மூன்று வாங்கி வைத்துக்கோண்டோம். இவ்விதம் வேண்டாவேறுப்பாக ஓரளவு வாங்கிக்கோண்டதைக் கண்ட சுவாமிகள் இது தவறு. இப்போழுது நாமிருக்கும் சூழ்நிலேயில் தட்ப வேப்பநிலேயில் ரோட்டியே மிகச்சிறந்த

உணவுப் பொருளாகும். இல்லாவிட்டால் கிச்சடியாவது எடுத்துக்கொள்ளவேண்டும். மலை ஏற்றத்தில் ஏறி இறங்குவதால் உடலுறுப்புக்களுக்குச் சத்துள்ள உணவு வழங்கவேண்டும். இல்லாவிட்டால் அயர்வு ஏற்படும். நீங்கள் உணவு கொள்ளும் வழியில் மிளகாய்க் குழம்பும், ரசமும், அரிசிச்சாதமும் உண்ணுவது நல்லதல்ல. குடலைக் கெடுத்துவிடும். அதில் சத்துக் கிடையாது. மிளகாய், புளி முதலியவை சேர்த்துக்கொள்வது ஏற்கக் கூடியதல்ல. ஊறு விளைப்பவை, நல்ல பச்சைக் காய் கறியும் நமக்கு உபகரணங்களாக இனி கிடைக்காது.

## மலை ஏறுவேன், இறங்கவும் முடியும்; ஏறுவேன் இறங்க முடியாது; ஏறவே முடியாது.

இந்த மூன்று உணவுப்பொருள்களைப் பற்றிய சிறு கதை இங்கு வழங்கப்படுகிறது. அரிசிச்சாதம், கிச்சடி, ரோட்டி மூன்றும் சேர்ந்து மலைநாட்டில் யாத்திரை சென்றன. ஒரு பெரிய மலை ஏற்றம் எதிர்ப்பட்டது. அதில் ஏறி அப்புறம் இறங்கவேண்டும். கடுமையான ஏற்றம் இறக்கம். அடிவரையில் வந்ததும் அரிசித் சாதம் அப்படியே மலைத்து நின்றுவிட்டது. மற்ற இரண்டும் அதைப்பார்த்து மெல்லச் சிரித்தன. அரிசித் சாதத்துக்குக் கோபம் வந்தது. "ஏன் சிரிக்கிறீர்கள். காரியம் செய்யவேண்டும். நமக்கு இந்தத் தொல்லை எதற்கு? ஏன் மலைமீது ஏறவேண்டும்? பிறகு இறங்க வேண்டும்? வேறு வழி இல்லையா?" என்றது. "இல்லை மேலே செல்லவேண்டுமானால் இந்தவழியேதான் போதல் வேண்டும். இல்லையானால் திரும்பவேண்டியதுதான்" என்றன மற்ற இரண்டும். "என்னால் இவ்வளவு கடுமையான ஏற்றத்தில் ஏறவே முடியாது. துன்பப்படுவதைவிட

வந்தவழியே திரும்பிவிடுதலே சிறப்பு'' என்றுசொல்லியது. அரிசிச்சாதம். கிச்சடி ' என்னுல் இந்த ஏற்றத்திலும் ஏற முடியும் ஆனுல்...... '' என்றது. ஆனுல் என்ன ? என்றது ரோட்டி. ''ஏறுவதில் உள்ள துன்பம் உனக்குத் தெரியுமே. ஏறி மறுபக்கம் இறங்குவதென்பது மிகுந்த துன்பம் தராதா ? ஆகையால் ஏறினுலும் இறங்கமுடியாது '' என்று மெதுவாகச் சொல்லிற்று. ரோட்டி ' ஏன் இந்தத் துன்பம் என்னுல் துன்பமில்லாது ஏறவும் முடியும் அப்பால் இறங்கவும் முடியும் உங்கள் இருவரையும் எடுத்தும் சென்று விடுவேன். வருந்தாது என்னேடு வாருங்கள்'' என்று அழைத்துச்சென்றது. இதுபோன்ற அனுபவக் கதைகள் பல சுவாமிகள் எங்களுக்கு வழி நெடுகிலும் சொல்வார்கள்.

சுற்றுப்புறக் காட்சி :

பின்னிரவு நேரத்திலிருந்து அன்று விடிந்தும் காலை 8 மணி வரை பனிமூட்டம் ( fog ) வந்து கவிந்து கொண்டது. மழை நின்றதும் பனிமூட்டம் வந்துவிட்ட படியால் வெளி இடத்தில் அதிலும் உயரமான பகுதியில் தங்கியிருந்த எங்களுக்குக் குளிர் தெரியவில்லை. பனி மூட்டம் எங்கள் குகையின் உட்புறத்திலும் பரவிநின்றது. முன்னே சொல்லியிருப்பதுபோல அதுவே எங்களுக்குக் குளிர் காப்பதாகவும் சுவாசாசயங்களுக்கு நன்மையளிப்ப தாகவும் இருந்தது. நாங்கள் தங்கியிருந்த இடத்துக்குச் சிறிது தொலைவில் கௌரி கங்கை கடுவிசையோடு மலைப் பாறைகளில் மோதிப் பொங்கி எழுந்து விழுந்து ஒடுகிறது. அதன் இரைச்சல் கடல் இரைச்சல்போல இரவு பகல் முழங்கிக்கொண்டே இருக்கும். எதிர்க் கரையில் மலைப் பகுதி செங்குத்தாக உயர்ந்துநிற்கிறது. அதில் மரம் செடி

கோடிகள் மண்டிக்கிடக்கின்றன. அப்பக்கம் உயர்ந்த ஒரு மலை உச்சியும் கண்ணுக்குப் புலனாகிறது. 15,000 அடி உயரத்துக்கு மேலிருக்கும் அதன் உச்சிப்பகுதி. நாங்கள் தங்கியிருந்த இடமே கடல் மட்டத்திலிருந்து 9000 அடிக்கு மேலிருக்கலாம். கௌரி கங்கையை ஒட்டிச் செல்கிறது அந்த மலைத்தொடர். சில இடங்களில் செங்குத்தாகவும் சில இடங்களில் ஓரளவுசெங்குத்தாகவும் பிறகு சரிவாகவும் அம்மலைத்தொடர் செல்கிறது. நேர் செங்குத்துப் பகுதிகளிலும் மரம் செடி கோடிகள் இருக்கின்றன.

சரிவாகச் செல்லும் பகுதிகளில் வயல் அமைப்புக்கள் செய்து மலை உச்சியிலிருந்து வரும் சிற்றருவிகளைப் பாசனத்துக்குப் பயன் படுத்திக் கொண்டிருக்கிறார்கள். பசிய வயற்புறத்தில் நடுநடுவே உயர்ந்து ஓங்கிச் செழித்துத் தழைத்து நிற்கும் மரங்கள் ஒரு சில அங்கங்கும் வளர்ந்துநிற்கின்றன. நடுநடுவில் ஒன்றிரண்டு வீடுகள். மேலே திட்டுத்திட்டாக மேகக் கூட்டங்களும் நீலநிற வானமும் விதானமாகக் காட்சி அளிக்கின்றன. வயற்புறங்களிலும் மலை உச்சிப் பகுதிகளிலும் ஆடுகளும் மாடுகளும் மேய்ந்துநிற்பவை விளையாட்டுப் பொம்மைகள் போலக் காட்சி அளிக்கின்றன. நாங்கள் தங்கியிருக்கும் பகுதிக்கு எதிரே பல சிறிய பெரிய நீர்வீழ்ச்சிகள். அவற்றில் பெரியது பல்திக்காடு ( Palti Gad ) என்னும் நீர்வீழ்ச்சி.

இது மிக உயரமான செங்குத்துப் பகுதியிலே மிகப் பெரிய ஒலியோடு கௌரிகங்கையில் நேரே வந்து விழுகிறது. அந்த இடத்தில் ஆறு பாதாளத்தில் வேகமாகப் புகுந்து அதேவேகத்தில் கொப்பளித்து மேலே

கிளம்புவதைப் போலக் குமிழியிட்டுவருகிறது. பார்க்க அச்சந்தருவதாகவும் அதே சமயத்தில் மனதை மயக்கு வதாகவும் அமைந்திருக்கிறது அக்காட்சி. அதன் இரு புறத்திலும் அடர்ந்த காடுகள் இருப்பதும் அவைகளின் இடையில் இதுவந்து விழுதல் வானத்தைப் போத்துக் கோண்டு இறங்கும் நீர்வீழ்ச்சி எனக் காட்சிவழங்குகிறது. நடுநடுவே மலைப்பாறைகளையும் அடித்தெடுத்து வந்து உருட்டிவிடுகிறது. அந்த இடத்தின்மீது ஒரு சிறு இளம் பிறைவந்து நிற்கும் நேரத்தில் இக்காட்சி உலகை அழிக்கும் வேகத்தில் வந்திறங்கிய ஆகாயகங்கையைப் பெருமான் இருட்கற்றைச் செஞ்சடையில் தாங்கித் தரித்து கங்கை யின் இறுமாப்பு அடக்கிவிட வந்து நிற்பதுபோலவும் இருக்கும். நாங்கள் தங்கியிருந்த மலைப்பகுதியும் சரி வாகவே உயர்ந்துசெல்கிறது. கௌரி கங்கையின் இக் கரையிலும் அக்கரையிலும் உள்ள மலைப்பகுதியின் உச்சி உயரம் 14000, 15000 அடி. இவ்விரு தோடர்களின் இடையில் இங்குக் கௌரிகங்கை ஓடுகிறது. இதனால் காட்சியும் மிகவும் இனியது.

## வனஸ்ரீ (சுந்தரவனம்) :

இதுபோன்ற நல்லுணர்வும் சிறந்த அனுபவமும் மேலோங்கக் காலை 10 மணிக்கு லிலத்தை விட்டுப் புறப்பட்டோம். டிக்சனிலிருந்து புறப்படும்பொழுது எங்களுக்கு மிகவும் இன்றியமையாது வேண்டிய போருள் களை மட்டும் எங்களுடன் எடுத்துவரச் செய்தோம். மற்றப் போருள்களை எடுத்துக்கோண்டு கூலிகள் எங்களைப் புகுதியா மலைக் குகையில் இன்று காண வேண்டும் என்று திட்டம் செய்யப்பட்டிருந்தது குகைப் பகுதிகளில் பெருங்கூட்டம் தங்க முடியாதாகையால்



புகுதியார் வழியில் கௌரிகங்கை வனஸ்ரீ
மபான்லி (8600 அடி)



லிலம் குகையில் உணவு தயாரித்தல் (7500 அடி)

அவரவரும் இடங்கண்ட இடத்தில் தங்கிக் குறிப்பிட்ட நாளில் குறிப்பிட்ட இடத்தில் சந்திப்பது என்ற ஏற்பாடு செய்துகொள்ளவேண்டியதாகிறது.

மேலே நாங்கள் இரண்டு கல் தொலைவு சென்றதும் ஒரு அழகான பகுதி எங்கள் மனதைக் கவர்ந்தது. அந்த இடத்தில் எங்கு நோக்கினாலும் அமைதி குடிகொண்டிருக்கிறது ; மகிழ்ச்சி அளிக்கிறது. சூழ்நிலை கவர்ச்சிகரமாக இருக்கிறது. அங்கேயே சில நாட்கள் தங்கிச் செல்லக்கூடாதா என்ற எண்ணம் உண்டாகின்றது.

நான்கு புறமும் உயரமான மலைகளும், அழகிய சோலையும். நடுவில் கௌரி கங்கை அமைதியே உருவெடுத்தாற் போல அசைந்தாடிச் செல்கிறது. தரையெங்கும் புல்லும், அழகிய சிறுசிறு பூச்செடிகளும். மலையிடங்களில் வானோங்கி உயர்ந்த மரக்காடுகளும் உள்ளன. பலயிடங்களில் மலைப்பாறைகள் துருத்திக்கொண்டு நீண்டு நிற்கின்றன. அப்பகுதிகளில் நீண்டுநிற்கும் பாறைகளின் உட்பகுதிகளில் 10, 12 அடி அகலமும், 4, 5 அடி உயரமும் கொண்ட பலபல தேனடைகள் தொங்கிநிற்கின்றன. இந்த இடம் ஐந்து ஆறுபர்லாங் அகலமும், இரண்டு மூன்று மைல் நீளமும் உள்ள பள்ளத்தாக்கு. இவ்வளவு அழகான இடத்திற்குப் பெயர் வனஸ்ரீ. அதாவது அழகிய காடு. பொதுவாகவே டிக்சன் தாண்டிய பிறகு மிலம் வரையுள்ள பகுதி வனஸ்ரீ என்றே வழங்கப்படுமாம். பார்வதி தேவியின் நந்தவனம் என்றும் சொல்கிறார்கள். அதிலும் நாங்கள் நின்று பார்த்த இடத்திற்கு ருப்ஷிக்கார் (சுந்தர மேடு) என்று பெயர்.

**தேனெடுத்தல் :**

தேன் சேகரித்தல் இங்கு இது ஒரு அறிவும் ஆற்றலும் மிக்க தொழில். தொடக்கத்தில் அங்குள்ள ஒருவகைப் பச்சிலைச்சாற்றை எடுத்து உடல் முழுவதும் பூசிக் கொள்வர். பிறகு மலை முகட்டின் மீதுள்ள மரத்தில் ஒரு கயிற்றைப் பூட்டி அதில் சிறு நூலேணிகளைத் தொங்கவிடுவர். அக்கயிறு வழியே இறங்கிவந்து ஏணி யில் தங்கியிருந்துகொண்டு உடலை வளைத்து அதை ஆடவிடுவர். தேனடை கைக்கெட்டியதும் அதனைப் பிய்த்தெடுத்துக்கொண்டு கயிறு வழியே மேலே ஏறி வந்துவிடுவார்கள். பச்சிலைச்சாறு பூசப்பட்டிருப்பதால் தேனீ உடம்பின்மீது மொய்த்தாலும் கொட்டாது. பிறகு அடையைப்பிழிந்து தேனெடுப்பார்கள்.

**குண்டுக்கல் :**

இந்த அருமையான காட்சிகளைப் பார்த்துக்கொண்டே மேலே நடக்கலானோம். இப் பள்ளத்தாக்கின் - சுந்தர மேட்டின் முடிவில் ஒரு பெரிய நீர்வீழ்ச்சி வழி அருகே வந்து விழுகிறது. அதற்கு முன்னிடம் ஒரு பெரிய கற்பாறைப் பிலவழி. அங்குக் கீழே தண்ணீர் தேங்கி நிற்கிறது. அதில் புழுப்பூச்சிகள் அதிகமாக இருக்கும். கொசுவும் உண்டு. வழியும் அப்பாலத்தில் வளைந்து செல்கிறது. வழியில் கீழே சில குண்டுக்கற்கள் கிடப்ப தால் அவற்றின்மீதும் அது இல்லா இடங்களில் தண்ணீர் ஓரங்களில் நடந்தும் பிலத்தைக் கடத்தல்வேண்டும். இது போன்ற பல பிலங்கள் வழியில் இருக்கின்றன.

அங்கே விழும் நீர் வீழ்ச்சிக்கு ரலம்காடு (Ralam-gad) என்று பெயர். பிறகு வழி ஏற்றம். ஏற்றத் தில் மேலே ஏறிச் சென்றதும் காட்சி மாறிவிடும்.

கௌரி கங்கையை மிக அணுகிச்செல்கிறது வழி. பாதை மூன்று நான்கு அடி அகலமே இருக்கும்; அதிலும் அங்கு ஆறு ஏற்றத்திலிருந்து கீழே அதிவேகமாக அடித்துக் கொண்டு வருகிறது. நடுவில் ஒரு பெரிய குண்டுக்கல். ஆற்றின் இருகரையும் பாறைப்பகுதி. ஒன்றையொன்று 25 அடிக்குள் நெருங்கி வந்திருக்கிறது. நடுவில் உள்ள குண்டுக்கல் வழவழப்பு ஊட்டப்பட்டிருக்கிறது. ஆற்றின் வேகத்தில் அடித்தெடுத்து உருட்டி வரப்பட்டதில் தேய்ந் திருக்கலாம். ஆற்றின் வேகம் குறைந்ததும் அந்த இடத்தில் தங்கிநின்றிருக்கலாம். அக்கல்ஆற்றின் தண்ணீர் வேகமாக வந்து மோதும்பொழுது ஆடிக்கொண்டே இருக்கிறது. 7, 8 அடி விட்டமுடையதாக இருக்கும் அக்கல். அது ஆற்றின் குறுக்கே மேட்டிலிருந்து கீழே தண்ணீர்விழும்இடத்தின்நடுவில்நிற்பதால் தண்ணீர் இரண் டாகப்பிரிக்கப்பட்டு இரு வழிகளிலும் மிகக் கடுமையான வேகத்தில் உந்தப்படுகிறது. இது போன்று பல பல இடங் களிலும் ஆற்றின் நடு இடங்களிலும் பக்கங்களிலும் கற்பாறைகள் மோதப்பட்டும் உருட்டப்பட்டும் வருவது கௌரிகங்கையென்னும் ஒரு பெரும் பூதம் அம்மானை ஆடிவருதலை ஒக்கும்.

அரசாங்க வழிச் செல்வோர் விடுதி :

கௌரி கங்கையில் மேலும் பல சிற்றருவிகள் இரு கரைகளிலும் வந்து விழுந்துகொண்டே இருக்கின்றன. முதலில் குறுக்கே 'வருவது ரார்காட் (Rar gad). இதற்கு உறுதியான பால அமைப்பிருக்கிறது.மலையை ஒட்டிக் கீழே தண்ணீர் விழுவதற்கு இடம் விட்டுப் பாலமமைத்திருக் கிறார்கள். வழியில் இதுபோன்ற இன்னும் சில சிற்றருவி களுக்கும் மரக்கிளைகளை வேட்டிப்போட்டு அதன்மீது தழை களையும் குழைகளையும் இட்டு மண்போட்டிருக்கிறார்கள்.

மரநிழலுடன் அடர்ந்த காட்டுப்பகுதியாகவுமிருப்பதால் இங்கும் அட்டைகள் இருக்கின்றன. புகுதியார் ஒருகல்தொலைவு இருக்குமுன்னே அரசாங்க வழிச் செல்வோர் விடுதி ஒன்று இருப்பதாகச் சொன்னார்கள். வழியை விட்டு 3, 4 பர்லாங் தொலைவு குண்டுக்கற்களின்மீது சென்றதும் ஆற்றை ஒட்டி ஒரு நல்ல கட்டிடம் இருக்கிறது. அதில் இரண்டு வசதியான அறைகளும் முன்னே தளமிடப்பட்டும் இருக்கிறது. அமைப்பும் இருக்குமிடமும் அழகாகத்தான் இருக்கிறது. ஆனால் அதைப் பார்த்துக்கொள்வதற்கென ஆளில்லாமையால் ஆடு, மாடு, குதிரை இவற்றை ஒட்டிப்போவோர் மழை நேரங்களில் கட்டிடத்திற்குள் ஒட்டிநிறுத்தி அருவருப்பாகச் செய்துவைத்திருக்கிறார்கள். மாட்டுச் சாணமும் ஆட்டுப் புழுக்கையும் சிறுநீரும் கலந்து கெட்ட நாற்றமெடுத்தும் கொசு மொய்த்துக்கொண்டும் இருக்கிறது. ஆகையால் அதைவிட்டுப் புகுதியார் குகைப்பகுதிக்கே செல்லவேண்டியதாயிற்று. வழியில் பக்கத்தில் உள்ள மலை உச்சியிலிருந்து ஒரு ஆறு (Poting-gad - பொட்டிங் காட்) வேகமாக ஓடிவந்து கௌரி கங்கையில் கலக்கிறது. அதன் தண்ணீர் பனிக்குளிராகவும் தெளிந்ததாகவு மிருக்கும். அதனைக் கடக்க உறுதியான பாலம் மரத்தால் அமைக்கப்பட்டிருக்கிறது. நடை வழிக்குப் பரப்பப்பட்டிருக்கும் பலகைகள் ஒரளவுமக்கி மடித்திருந்தாலும் அதன்மீது கடந்து செல்லக்கூடியதாக இருக்கிறது.

## புகுதியார் குகை :

இதனைக்கடந்து இரண்டுபர்லாங் தொலைவு சென்றதும் மலைப்பகுதியில் 100, 150அடி உயரம் ஏறிச்செல்லவேண்டும். குகைக்குச்செல்ல ஒற்றை அடிப்பாதைகள் பல இருக்கின்றன. ஆனால் வழி யெல்லாம் 8, 10 அடி உயரத்திற்கு



விலம் குகையில் மாலை வழிபாடு



புக்தியார் குகையில் விடிந்தது

மேலுள்ளதாக மலைக்காஞ்சூரு மண்டிக்கிடக்கிறது. அதன் வழியேதான் செல்லுதல்வேண்டும்.

நாங்கள் பெரும்பாலும் காற்சட்டை மேற்சட்டை தலையில் முண்டாசு கையில் கூர்க்கம்பு இவ்விதமாக உடை உடுத்துச் சென்றபடியால் காஞ்சூரு மேலே படாமல் காத்துக்கொள்ள முடிந்தது. அப்படியும் முன்கையில் தப்பித்தவறி அந்த இலைகள் பட்ட இடத்தில் லிலத்தில் கண்ட அதே துன்ப அனுபவம் ஏற்பட்டது. இரண்டு நாட்களுக்கு இலைபட்ட பகுதியில் வீக்கங்கூட ஏற்பட்டிருந்தது. இவ்வாருகக் குகைவாயருகே சென்றதும் அங்கே எங்களுக்குமுன்வந்து தங்கிய மூட்டைத்தூக்கிகளும் வியாபாரிகளும் தங்கள் தங்கள் ஆடு மாடு, குதிரை இவற்றை நிறுத்திவைத்திருப்பர்போலும். அவற்றின் சிறுநீரும் சாணமும் கலந்து தேங்கிக் கொசுமொய்த்துக் கெட்டநாற்றமெடுத்தது. இதைத்தவிர்த்தால் 10 மைலுக்கிடையில் வேறுவசதியில்லாதநிலையில் அங்கேஉட்சென்று தங்கினேம். அது இரண்டடுக்காக அமைந்திருக்கிறது. 25, 30 பேர் தங்கலாம். மேலடுக்கின் அருகில் ஒரு சிறு அருவியும் ஒடுகிறது. அதிலிருந்து தண்ணீர் எடுத்து சமையலுக்குப் பயன்படுத்தவும் முடிந்தது. முதலில் கொசுக்களைவிரட்டப் புகைமூட்டம் போட்டுக்கொண்டோம். பிறகே எங்கள் உணவு ஏற்பாடுகள். தேனீர், ரொட்டி முதலியன செய்து உண்டு இரவைக் கழித்தோம். இரவிலும் மறுநாள் அதிகாலையிலும் சிறு தூற்றலும் மழையுமாக இருந்தது. இயற்கை அன்னையும், இமய அரசனும் தன்னிடம் வருவோருக்கு இதுபோன்ற பல சிறந்த அமைப்புக்களைச் செய்து வழிச் செல்வோர் தங்கவும் சமைத்து உண்ணவும் உதவி அளிக்கிருர்கள்.

மலைக்காஞ்சூரு, கோசு, அடர்ந்த செடி அடைசல்களில் வேறு ஏதாவது பூச்சிகள் விஷமுள்ளவை தங்கி இருந்தாலும் இருக்கலாம் என்ற அச்சத்தோடு அன்று இருட்டியபிறகு யாரும் வெளியிலே வரவே இல்லை. இரவு முழுவதும் குகை வாயிலில் கட்டைகளைப்போட்டு எரித்து வரச் செய்தோம். வரவேண்டிய எல்லாப் பொருள்களும் குறித்தபடி அன்று மாலையே அக்குகைக்கு வந்து விட்டன. நாங்கள் தங்கியிருந்த குகைப்பகுதி கடல் மட்டத்திலிருந்து 8600 அடிக்குமேல் உயரத்தில் உள்ளது. அதற்கு மேலும் மலை முகடு 1500, 2000 அடிக்கு மேலும் இருக்கும். இரவில் குளிர் அதிகமாக இல்லை. குகை வாய் உத்தேச உயரம் 50 அடிக்குமேலிருக்கலாம்.

## உறைபனியின்மீது :

மறுநாட் காலையில் 9 மணிக்குப் புகுதியார் குகையை விட்டுப் புறப்பட்டோம். முதலில் ஒருகல் தொலைவு ஏற்றம். பிறகு ஒடுங்கிய வழி. கௌரிகங்கையின் கரை வழியேதான் பாதை செல்கிறது மூன்றுகல் தொலைவு சென்றதும் திபு நஹார் (Tibu Nehar). அதாவது ஒற்றை வீடு என்னும் ஊரைத்தாண்டிச் செல்லுகிறது வழி. அங்கு நேஹார் என்னும் சிற்ருறு மலையிலிருந்து வழிந்தோடி கௌரியில் கலக்கிறது. இப்பகுதியில் ஒருகல் தொலைவுக்குப் பனி உறைந்து கௌரி கங்கையையும் நேஹார் ஆற்றையும் மூடிக்கிடக்கிறது. ஆனல் அந்தப்பனி உறைவின் உட்பகுதியில் ஆறுகள் பல வேகமாக ஓடிக் கலக்கும் ஓசை கேட்டுக்கொண்டே இருக்கிறது. உள்ளே ஆறு ஓட அதன்மீது உறைவுள்ள வழியைப் பனிப்பாலம் (Ice bridge) என்று சொல்கிருர்கள். அங்கு இரண்டு மூன்று பர்லாங் அகலத்துக்கு ஒருகல் தொலைவுக்கு



பனிப்பாலத்தில் புகுந்து கௌரி கங்கைப் பெருகிப் போவது



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
உறைபனிமீது நடந்து செல்லுதல்

இப்பனி உறைவின்மீது செல்லவேண்டி இருக்கிறது. பொதுவாகப் பனி உறைபகுதிகளில் நடக்கும்போது கூர்க்கம்பை குத்திக்குத்திப் பார்த்துக்கொண்டு உறுதியான பகுதியின்மீது நடத்தல் வேண்டும். பல பகுதிகள் உள்ளே உருகிக் கூடிட்டு நிற்கும். 5, 6 அங்குல கனமுள்ள பகுதிகள் மனிதர்களைத் தாங்கும் வலுவுள்ளதாக இருக்கும் என்று சொல்கிறார்கள். ஆனால் வலுக்குறைந்த பகுதிகள் மேலேயிருந்து பார்த்தால் கண்ணுக்குப் புலனாகாது. ஆனால் அதில் தப்பித்தவறி ஏறி நடந்தால் உள்ளே நம்மை வாங்கிக் கீழே ஓடிச் செல்லும் ஆற்றில் கொண்டு செலுத்திவிடும். உள்ளே வெடிப்புக்களும் ஏற்பட்டிருக்கும். பழைய உறைபனி மஞ்சள் நிறமுள்ளதாகவும் மேலே பெருமணல் போலவுமிருக்கும் மணல் வெளிகளில் நடந்து செல்லுவதுபோல கால் பதியக்கூடியதாகவும் இருக்கும். எற்றிவிட்டால் மணல் தெறித்து விழுவதுபோல் உதிரி உதிரியாக இறைக்கப் படுவதாகவுமிருக்கும். தட்பவெப்பம் சமனம் ( Air condition ) செய்யப்பட்ட இடத்தில் இருப்பது போன்ற உணர்வும் ஏற்படும். இதுவும் நல்லதொரு அனுபவம். இவ்வழியே இரண்டு மூன்றுகல் தொலைவு சென்றதும் லாஸ்பகாட்(Laspa-gad)என்னும் மற்றொருசிற்றாறு கௌரி கங்கையில் வந்து கலக்கிறது. அவ்வாற்றைக் கடப்பதற்கு நல்லதொரு பாலமும் உண்டு. அக்கரையில் தங்கச் சிறு குகையுமிருக்கிறது. நல்ல வெய்யில் நேரத்தில் தங்கினோம். அங்கு வெப்பம் குறைவாகவும் நல்ல இதமான காற்றோட்டமுடையதாகவுமிருந்தது.

### வழியில் அருவிகள் :

வரும் வழியில் மலை முகடுகளிலிருந்தும் மலை நடு இடங்களிலிருந்தும் பல அருவிகள் சொரிந்துகொண்டே

இருந்தன. மலையைக் குடைந்து குழாய் பொருத்தி வைத்திருப்பதுபோல வேகமாகத் தண்ணீர் கொட்டும் அருவிகள் சில. மிகப்பெரியவையாயும் மிகச்சிறிய குழந்தை அருவிகளுமாகப் பலப்பல. 400, 500 அடி உயரத்தி லிருந்து செங்குத்தாக விழும் அருவிகள் சில. அவ்வருவி களின் வேகத்தை அங்கே மலை இடங்களில் ஏற்படும் காற்று வாரி இறைத்து அழகு வேலைகள் செய்கிறது.

பாதையின் வலதுபுறத்தில் கௌரிகங்கையும் இடது புறத்தில் செங்குத்தாக உயர்ந்த மலைப்பகுதியும். அந்தச் செங்குத்துப் பகுதிகளிலிருந்துதான் அருவிகள் விழுந்து கொண்டிருக்கின்றன. அங்கு அவ்வருவிகள் விழுவதும் அவற்றின்மீது காற்று மோதிக் கலைத்து வாரி இறைப்பதும் சிறுவர்கள் நீர் விளையாட்டுச் செய்வதுபோல இருக்கும். காற்றின் வேகம் குறைவாக இருக்கும்போது நேரே வந்து விழும். காற்றின் வேகம் மிகுதிப்படும்பொழுது வழியெல் லாம் தண்ணீரை வாரி இறைக்கும். பெரும் தூற்றல்கள் வந்து விழுவதுபோல வழிச்செல்வோர்மீது வாரி இறைக் கும். சில அருவிகள் காற்றில் அலைக்கப்பட்டு நம்மூர் களில் குளிப்பறையில் பூச்சொரிவதுபோலச (Shower) சொரியும். காற்றினால் பரவலாக வீசும்போது மேலே இருந்து விழும் அருவி ஒரு இளம பெண்ணொருத்தி மேலாடை பாவாடைகளோடு மலைமுகட்டிலிருந்து இறங்கி ஆடிவந்து கொண்டிருப்பதுபோல அமைந்திருந்தது. கழுத்து, மார்பாகம், ஒடுங்கிய இடை. இடுப்பிலிருந்து கீழே வரவரக் காற்றில் விரிந்துநிற்கும் பாவாடை இவ்வாறு நீர்த்துளிகள். காட்சி வழங்குகின்றன.

இதுபோல அருமையான பல காட்சிகள் கண்ணுக் கும் மனதிற்கும் இன்பமூட்டுவனவாக அமைந்து இருந்தது

அப்பகுதி. அங்கேயே இரண்டோரு மணி நேரம் தங்கிச் சிற்றருவிகளில் குளித்து மகிழ்ந்தோம். இவ்வழியில் ஒருகல் தொலைவு மனமகிழ்வோடு சென்றபிறகு அங்கு மலைப்பகுதியை ஒட்டிக் கல்லடுக்கி உண்டாக்கப்பட்டிருக்கும் வனதேவதை ஆலயத்தை வழிபட்டுக்கொண்டு அதிலிருந்து மாடிப்படி அமைப்பாக உள்ள வழியில் கடுமையான ஏற்றப்பாதையில் ஏறிச்சென்றோம். 200, 300 அடி உயரத்திற்கு அப்படி வழியில் ஏறிச்செல்வது நம்முடைய கால் வலுவைச் சோதிக்கிறது. குளித்துவிட்டு இப்பாதையில் ஏறிச்சென்றதும் எங்களுக்கு நல்ல பசியும் எடுத்தது. பசியோடு லாஸ்பகாட் வந்தோம் முன்னேற்பாடாக அங்குக் கிச்சடியும் உருளைக்கிழங்குக்கறியும் சட்டினியும் காத்திருந்தன. வயிறார உண்டு குகையில் தங்கிக் களைப்பாறினோம். புறப்படுமுன் தேனீரும் பிஸ்கோத்தும் கிடைத்தன. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் கருணை எங்கள் இளைப்பைக் குறைத்துக்கொண்டேயிருந்தது.

### மந்தமாருதம் :

அருவி விழும் இடத்திலிருந்து மிலம் வரையில் உடலுக்கு இதமான காற்றடித்துக்கொண்டே இருக்கிறது. வேகமாகவுமில்லை. காற்றில்லாமலுமில்லை. சமநிலையில் சமதட்பவெப்பமுடையதாக இருக்கிறது. அதற்குத்தான் மந்தமாருதம் என்று பேயர்.

### ரீல்கோட் :

மாலை 2 மணி அளவில் நாங்கள் அங்கிருந்து புறப்பட்டு மேலே சென்றோம். இரண்டு மூன்று கல் தொலைவு சென்றதும் ரீல்கோட். அந்த ஊரில் 20, 30 வீடுகள்தாம் உண்டு. அவற்றிலும் 3, 4 வீடுகள் மிகப்

பேரியவை. மற்றவை மலைநாட்டு வீடுகள். மேலே தகட்டுக்கல். பக்கச் சுவர்கள் மலைக் கற்களாலானவை. ஊருக்குள் பேரிய வயற்பகுதி. மேற்குப் பகுதியில் மலை. மற்ற மூன்று புறங்களிலும் சுற்றுச்சுவர் கட்டியிருக்கிறார்கள். நுழைவு 3, 4 அடி உயரத்தில் நிலைகல்லால் அமைத்து மரக்கதவுமிட்டிருக்கிறார்கள். உள்ளே நுழைவதானல் குனிந்தே செல்லுதல் வேண்டும். பருத்த உடலுள்ளவர்கள் பக்கவாட்டில்தான் நுழையமுடியும். சுற்றுச்சுவர் உயரமும் 4 அடிக்கு மேலிருக்காது. பக்கத்தில் ஓடும் கௌரிகங்கையில் மாவு அறைக்கும் யந்திரம் அமைத்துக்கோண்டிருக்கிறார்கள். ஊருக்குள்ளும் பாதையின் ஓரங்களிலும் வால்கோதுமை, பார்லி, வெங்காயம் பயிரிட்டிருக்கிறார்கள். அது ஒருகோட்டை என்றபோருளில் பேயரிட்டிருக்கிறார்கள். இப்போழுதுள்ளது புதியரீல்கோட். அந்த ஊரில் 10, 15 பேண்களும் சில ஆண்களுமே அப்போழுதிருந்தனர். தேனீர்க் கடை ஒன்றிருந்தது. அதில் எங்களுக்குக் கோடுக்கத் தேனீர் இல்லை.

## பழயரீல்கோட் (ரீல்கோட்டை) :

இந்தக்கிராமத்தைக்கடந்து ஒன்றரைக்கல் சேன்றதும் ஒரு பேரிய சேங்குத்தான மலை ஏற்றம். ஒரு சிறிது மேலே ஏறியதும் மூச்சுவாங்கத் தோடங்கியது. தங்கித் தங்கி மேலே ஏறிச் சேன்றதும் அங்கு ஒரு சிற்ருறு ஓடுகிறது. அதற்கு ஒரு மரப்பாலமும் உண்டு. அதையும் கடந்து மற்ரேரு மலையில் சேங்குத்தாக ஏறுதல் வேண்டும். முன்னே சோல்லியிருப்பதுபோல மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்க நின்று நின்று உச்சியை அடைவதற்கு அரை மணி நேரத்துக்குமேல் ஆகிவிட்டது. அந்த உச்சி இடம் கடல் மட்டத்திலிருந்து 12000 அடிக்கு மேலிருக்கும்.



கௌரி கங்கை உற்பத்தி (மிலம் பனி உறைவு)

அதுவும் ஒரு பெருந்தோடரின் பகுதிதான். அங்கு இரண்டு மூன்று தோடர்கள் வந்து ஒன்று கூடுகின்றன. அதன் அருகில் இன்னும் சிறிது மேலே ஒரு பாழடைந்த கூரை களில்லாத வீடுகள் கோண்ட ஊர் இருந்தது. ஆள் நடமாட்டமே இல்லே. அதுதான் பழைய ரீல்கோட்டை. இங்கு இதை ரீல்கோட் என்பர். கோட் என்ருல் கோட்டை அல்லது மலே முகடு என்று போருள்படும். மலே உச்சியில் வந்தடைந்ததும் காற்றும் அதிகம். கடுவிசையில் இல்லே. ஆனல் குளிர்ந்தகாற்று. துன்பப்பட்டுக் களேத்து ஏறி வந்த எங்கள் துன்பம் போக்கிக் களேப்பைப்போக்குவதாக இருந்தது அக் காற்று. அவ்வுச்சியிலிருந்து வடக்கே திரிசூலிச் சிகரங்கள் காட்சி அளிக்கின்றன.

## மார்த்தோலி வழியில் :

சிறிது இளேப்பாறியபிறகு400, 500அடிகீழேஇறங்கிப் பின்னும் ஏற்றமும் இறக்கமுமான பாதையில் சேல்லவேண் டியிருக்கிறது. மேலே இரண்டுகல் தோலேவு சேன்றதும் பாதை இரண்டாகப்பிரிகிறது. ஒன்று கௌரிகங்கையை ஒட்டிச் சேல்வதாகவும் மற்ருென்று மார்த்தோலிக்குச் சேல்வதாகவும் அமைந்திருக்கிறது. மார்த்தோலிவழியில் இரண்டுகல் சேன்றதும் ஒரு அழகிய சமவேளியிடம். அழ கான புல்தரை.தோலேவிலே வடக்கே மார்த்தோலி. மேற்கே நந்தாதேவி, நந்தகோட், நந்தகுண்ட் சிகரங்கள். வடக்கே தோலேவில் திரிசூலி. மேற்கே ஊருக்கண்மையில் நந்தா தேவி ஆலயம். நாங்கள் நின்ற இடம் 12,000 அடிக்கு மேற்பட்ட உயரத்தில் உள்ளது. அந்த மைதானம் மிகப் பேரியது. வயற்புறங்களும் பசும்புல் தரையும் ஊருக்கு அழகு சேய்வதாக இருந்தன. அங்கு நாங்கள் சேன் றடைந்தபோது மாலே 6 மணி இருக்கும்.

## மார்த்தோலி :

ஊரின் எல்லையில் எங்களைத் தங்கவைத்துவிட்டு சுவாமி வித்யாநந்தா மட்டும் ஊருக்குள் சென்று தங்க இடம் பார்த்து ஏற்பாடு செய்துவருவதாகச் சென்றார்கள். சாது இருவர் வருவதைக் கண்ட ஊர் மக்களும் குழந்தைகளும் நாங்கள் தங்கியிருந்த இடத்துக்கு வந்து கூடி விட்டார்கள்.

அங்குப் பள்ளிக்கூடத்தில் தங்குவதற்கு ஏற்பாடு செய்து ஊர்க் குடிமகன் ஒருவனை அனுப்பி எங்களை அழைத்துவரச் செய்தார்கள் அந்தச் சுவாமிகள். தென்னாட்டு மகந்து ஒருவர் அங்கு வருவது அதுவே முதல்முறை. ஆகையால் ஊர்ப்பிரமுகர்கள்பலரும் அங்குக் கூடி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை வரவேற்றார்கள். அவ்வூரில் 200, 250 வீடுகள் இருக்கலாம். மக்களும் அதிகம். பக்கத்திலுள்ள மலை முகட்டிலிருந்து வரும் தண்ணீரை ஒரு சிறு வாய்க்கால் வழியே கொண்டுவந்து தாராவாக ஆக்கிக்கொண்டிருக்கிறார்கள். அது குடி தண்ணீருக்கும் குளிப்பதற்கும் பயன்படுகிறது. மாலைச் சூரியன் மலைவாயிலில் விழுமுன்னே குளிர் எடுக்கத் தொடங்கிவிடுகிறது. காலையில் 9 மணி வரையிலும் குளிர் இருக்கும். இரவுநேரம் ஆக ஆகக் குளிர் அதிகமாகிக் கொண்டேபோகிறது.

## பள்ளியில் :

நாங்கள் தங்கிய பள்ளிக்கூடம் ஒரு மலைநாட்டு வீடுதான். கீழே முன்னிடம் பின்னிடம்; மேலேயும் முன்னே ஒரு ஒட்டமும் (Verandah) பின்னே இரண்டு அறைகளும் கொண்டது. கீழே உள்ள பகுதியைச் சமையல்

உபயோகத்துக்கும் மேலே உள்ளவற்றில் முன்னுல் உள்ள ஒட்டத்தை (Verandah) நாங்கள் தங்கவும் பயன்படுத்திக் கோண்டோம். போஜமரத்தின் கிளேகளே அங்கு விறகாகப் பயன்படுகின்றன. புகைச்சல் எல்லாம் மேலே வந்து தாக்குகிறது. வேறு தனி இடமில்லாமையால் அங்கே எல்லாத் துன்பங்களேயும் ஏற்றுத் தங்கவேண்டிவந்தது. ஊர்ப்பெருங்குடிமக்கள் எங்களுக்கு உதவிசெய்வதாகச் சோல்லி வந்து சூழ்ந்து உட்கார்ந்துகோண்டார்கள். அப் பள்ளிக் கூடத்தின் தலேமை ஆசிரியர் படித்த பண்டிதர். சுவாமி வித்யாநந்தாவின் உற்ற நண்பர். அவரும் வந்து இரவு வெகுநேரம் தங்கியிருந்தார். வழியனுப்புவதிலும் உடன்வந்து பர்ஃபூ (Burfu) வரை வழிவிட்டுத்தான் பிரிந் தார். எல்லோரும் பிரியமாகப் பேசுகிருர்கள். பால் கிடைக்கவில்லே. கடைகள் இருக்கின்றன. உணவுப் போருள்கள் கிடைக்கும். விறகு கிடைக்கும்.

ஊர் அழகான சூழ்நிலேயில் அமைந்திருக்கிறது. தோலேவில் சுற்றிலும் பனிபடர் இமயக் கோடுமுடிகள்பல அமைந்துள்ளன. இரண்டுகல் தோலேவில் கேளரிகங்கை கடுவிசையுடன் ஒரு பேரும் பள்ளத்தில் ஓடுகிறது. இவ் வூரில் மரங்களே இல்லே. ஆனுலும் பக்கத்தில் உள்ள மலேப்பகுதிகளில் போஜ மரங்கள் அதிகம் உண்டு.

## நந்தாதேவி ஆலயம் :

இரவு கழிந்தது. விடியற்காலேயில் எழுந்து இருள் புலருமுன்னே நாட்கடன்களே முடித்துத் தாராவில் நீராடித் தூயராகி எங்கள் இருப்பிடம் வந்தோம். அவ் வூர்ப் பேண்கள் அதற்கு முன்பே தாராவில் வந்து குளித்துச் சேன்ருர்கள். காலேயில் தேநீர் அருந்திவிட்டு

நந்தாதேவியின் ஆலய தரிசனத்துக்குச் சென்றோம். எங்களுக்குமுன் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் அங்கு எழுந்தருளி வந்திருந்தார்கள். ஆலயம் ஊரின் தென் மேற்கே ஒரு மேட்டிடத்தில் கட்டப்பட்டிருக்கிறது. ஊருக்கும் ஆலயமிருக்குமிடத்துக்கும் தொலைவு அரைமைலுக்கு மேல் இருக்கும். கோவில் கல்லால் கட்டப்பட்டது. நந்தாதேவி, நந்தமாயி என்று பெயர் சொல்கிறார்கள். திருவுரு இருக்கிறது. முன்னே யாககுண்டம் ஒன்றிருக்கிறது. உத்சவர் ஒன்றும் இருக்கிறது. அது இயற்கை விளைவு. நல்ல ஒளியுள்ள பலநிறக் கற்கள் சூழ உயர்ந்த ஸ்படிகம் நான்கு, ஐந்து அங்குல நீளமும் இரண்டு அங்குல அகலமுமுள்ளதாக இரண்டு மூன்று படிந்திருக்கும் அத் திருவுரு சுயம்புவாக ஒரு அடி உயரமுடையதாக அமைந்திருக்கிறது. வைரம்போல ஒளி உள்ளதாகக் காட்சி அளிக்கிறது. தீபாராதனை செய்யும்பொழுது பார்த்தால் அதில் ஏழு நிறமும் ஒளிவிட்டு மிக அழகாக இருக்கும்.

அங்குத் தேவிக்கு அர்ச்சனை செய்யச் செய்து வழிபட்டோம். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் துர்க்கா சப்தசதி தோத்திரம் சொல்லி வழிபட்டார்கள். உற்சவ மூர்த்தியை எடுத்து ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருக்கரத்தில் கொடுத்து நன்றாகத் தரிசனம் செய்து கொள்ளும்படிச் சொன்னார்கள். பலர் சந்நிதியில் அமர்ந்து துர்க்கா சப்தசதி பாராயணம் செய்தார்கள். ஆலயத்தைச் சுற்றி நூற்றுக் கணக்கில் மணிகள் தொங்க விட்டிருக்கிறார்கள். காற்றடிக்கும்பொழுதெல்லாம் அவைகளில் ஒலி உண்டாகும். பக்தர்களும் வழிபாடு முடிந்து போகும்பொழுது மணி அடித்து ஒலி எழுப்பிச் செல்கிறார்கள்.



மர்த்தோலி நந்தாமாயி ஆலயப் பின்புறம் நந்தாகோட் - நந்தாதேவி சிகரங்கள்



திருக்கயிலாய தரிசன யாத்திரையில் - மார்த்தோலி நந்தாதேவீ தரிசனம்



மார்த்தோலி மக்கள் வழியனுப்புதல்



யிலத்தில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களுடன் திபேத்தியர்கள் (12,000 அடி)

## விழா :

ஆலயத்தின் உள்ளிடத்தில் கூடாரங்கள் பல அமைத்து நடுவில் மேடையிட்டுப் பூக்களால் அலங்காரம் செய்து வைத்திருந்தார்கள். அன்று பூர்ணிமா விழா. அந் நாளில் பலரும் வந்து தேவியை வழிபட்டுச் செல்வர். துர்க்கா சப்தசதி, தேவிபாகவதம் போன்ற பாராயணங் களும் பஜனையும் நடைபெறுமாம். உச்சிப் போதிலிருந்து அவ்விழா தொடங்குமென்று சொன்னார்கள்.

## நந்தாதேவி :

அவ்வாலயத்தை விட்டு வெளியே வந்ததும் நந்தா தேவி, நந்தக்கோட். நந்தகுண்ட் பனி மூடிய சிகரங் களும் தொலைவில் வடக்கே திரிசூலியும் (23, 360') காட்சி அளிக்கின்றன. இங்கிருந்து நந்தாதேவிச் சிகரங் களுக்குச் செல்லுதல் வேண்டும். அழைத்துச்சென்று வழிகாட்டக்கூடியவர்களும் அவ்வூரில் பலருண்டு.

சூரிய உதயகாலத்தில் அச்சிகரங்கள் அன்று எங்களுக்கு மிக நன்றாகக் காட்சி வழங்கின. அன்றிரவு பெய்த புது வெள்ளைப்பனி போர்த்துத் திருநீறணிந்த பெருமான் திருமேனிக்கோலத்தில் அவை விளங்கின. அம்மலை உச்சிப்பகுதிகளில் ஒவ்வொருநாளும் புதுப்பனிப் பெய்துகொண்டே இருக்குமாம். நந்தாதேவிச் சிகரத்தை இப்பகுதி மக்கள் நந்தகோபருடைய மகள் என்று கருதி வழிபடுகிறார்கள்.

## நந்தாதேவி வரலாறு :

வடமதுரையை ஆண்ட கம்சன் தன் தங்கை தேவகியை வாசுதேவருக்கு மணமுடித்துக் கொடுத்தான். மிகச்சிறப் பாகத் திருமண ஊர்வலமும் நடத்திவைத்தான். அது

நடைபெறும்போழுது "கம்சனே! உன் தங்கை வயிற்றில் பிறக்கும் குழந்தையே உன்னைக் கோல்லும் யமனுக இருக்கும்" என்று அசரீரி பிறந்தது. இதனைக் கேட்டுக் கடும்கோபங்கோண்ட அம்மன்னன் தன் தங்கை யையும் அவள் கணவனையும் அங்கேயே வேட்டித் துணித்துவிட எண்ணி வாளேடுத்து ஓங்கினுன். அவ் விருவரும் அவனை வணங்கி "நாங்கள் இப்போழுதுதான் மணவினை கோண்டிருக்கிருேம். எங்களைக் கோல்ல வேண்டாம். உலகியல் இல்லற இன்பங்களை நாங்களும் அனுபவிக்க எங்களை விட்டுவிடு. எங்களுக்குப் பிறக்கும் குழந்தைகளை உன்னிடம் கோடுத்து விடுகிருேம்" என்று வேண்டிக்கோண்டனர். "பிறக்கும் குழந்தைதானே தனக்குக் கூற்று. தன் தங்கையும் அவள் துணைவனும் அல்லவே; அவர்கள் சோல்வதுபோலச்சேய்ய அனுமதிப்ப தில் தவருேன்றுமில்லையே" என்று முடிவுசேய்து அதற்கு இசைந்தான். ஆனுல் அவர்கள் இருவரையும் சிறையி லிட்டு அடைத்து வைத்தான். சிறையிலிருக்கும்போழுது அவர்களுக்குக் குழந்தைகள் பிறக்கலாயின. குழந்தை பிறந்த உடனே சிறைக்காவலர் மன்னனுக்குச் சேய்தி சோல்லுவர். அவனும் ஒடோடி வருவான். பேற்ருேரும் குழந்தையை எடுத்துக் கோடுப்பர். அதை வாங்கி உயர வீசி எறிந்து கூரிய வாளை நீட்டி அதில் அதை ஏந்தி இரு துண்டாக்கிக் கோன்று விடுவான். இவ்வாறு ஏழு குழந்தை களின் கதியும் முடிவாயிற்று.

எட்டாவது ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அது பிறந்தவுடனே நல்ல சகுனங்கள் உலகில் தோன்றின. அக்குழந்தையே கண்ணன் (கிருஷ்ண பகவான்). அன்று சிறைக்கூடக்காவலர் அயர்ந்துஉறங்கிவிட்டார்கள். அசரீரி "வாசுதேவா! மன்னவா! இக் குழந்தையை உடனே

எடுத்துச் சென்று இதே நேரத்தில் அண்மையில் உள்ள கோகுல பிருந்தாவனத்தில் நந்தகோபன் மனையில் விட்டு விடு. அவனுக்கு ஒரு பெண் மகவு பிறந்திருக்கிறது; அம்மகவை இங்கே எடுத்து வந்துவிடு; இது உலக நன்மைக்காகச் செய்யவேண்டியது '' என்று கட்டளை யிட்டது. அவ்விதமாகவே வசுதேவரும் செய்துமுடித்தார். பெண்மகவு இங்குவந்து சேர்ந்ததும் பெரும் ஒலி எழுப்பி அழுதது. காவலர் விழித்தெழுந்தனர். குழந் தையின் அழுகை ஒலியைக் கேட்டனர். கம்சனுக்கு அறிவித்தனர். அவனும் வழக்கம்போலக் கையில் வாளேந்தி வந்தான். குழந்தையைக் கையில் எடுத்துக் காலைப் பிடித்து மேலே வீசிவிட்டு வாளை நீட்டி நின்றான். மேலே சென்ற குழந்தை விசுவரூபம் எடுத்து '' மன்னவ, உன்னைக்கொல்லப் பிறந்த குழந்தை வேறொரு இடத்தில் வளருகிறது; நான் வேறானவள் '' என்று சொல்லிக் காளிஉருவத்தில் ஆகாயத்தில் எழுந்துசென்றது. அதுவே இங்கு இமயச் சிகரமாக வந்து அமர்ந்திருக்கிறது. ஆகையால் அச்சிகரம் நந்தகோபர் மகள் நந்தாதேவி எனப் பெயர்பெற்றது.

## நந்தாஷ்டமி :

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பெருவிழா நடைபெறும். அது செப்டம்பர் மாதத்தில் வரும் நந்தாஷ்டமி அன்று கொண்டாடப்படும். அன்று மக்கள் திரளாகத் திரிசூலிச் சிகரத்தின் அடிவரைக்கு (மிலம்பனி உறைவு) செல்வர். அங்குள்ள பைதூர்னி என்னும் குண்டத் தில் (தீர்த்தத்தில்) குளித்து மூழ்கித் தங்களைத்தூயராக்கிக் கொள்வர். அதற்குமுன் ஒரு வேற்றுப் பல்லக்கை மணப் பெண் எடுத்துச் செல்வதாகப் பாவித்து மேளதாளங்

களுடன் பஜனைப்பாடல்களை இசைத்துக்கொண்டு சுமந்து செல்வர். மேலே சொல்லியிருப்பதுபோலத் தீர்த்தத்தில் மூழ்கிப் புனிதராகி அப்பல்லக்கை எடுத்துக்கொண்டு அப் பனி வரையில் (திரிசூலியின்மீது) எந்த அளவு போக முடியுமோ அதுவரை சென்று பல்லக்கை வைத்து வழி படுவர். அப்பகுதி நேளலி என்று வழங்கப்படுகிறது.

## நான்கு கொம்புள்ள ஆடு :

இவ்விழாவுக்கெனவே சந்தல்பூர் என்னும் ஊரில் 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை நான்கு கொம்புகள் உள்ள பெண் ஆடு ஒன்று பிறக்குமாம். அந்த ஆட்டையும் இப் பல்லக்கோடு அழைத்துச் செல்வர். அது திரிசூலி அடி வரையில் சென்றதும் மறைந்து உச்சியில் சென்று பாலைப் பொழிந்து நிற்குமாம். பிறகு அது மறுமுறையும் மறைந்துவிடுமாம். அடுத்த பன்னிரண்டாவது ஆண்டில் அவ்வாடு அடிவரையில் இறந்து வந்து கிடக்குமாம். அதன் ஊனினைப் பிரசாதமாக அம்மக்கள் எடுத்துக் கொள்வார்களாம். இவ்விழா நாட்களில் மலை இடத்தில் அம்மக்கள் அடுப்புவைத்துச் சமைப்பது கூடாது.

## மந்திரம் :

நந்தாதேவி ருத்ராம்சம்; அதற்கு மறுபெயர் உஃபாரிங் (Upharing). மந்திரம் "வஜ்ர க்ரோத ஹயக்ரீவ ஹ்லூ ஹ்லூ ஹூம் ஃபட்" என்பது.

## திரிசூலி நந்தாதேவி திருமணம் :

நந்தாதேவியைத் திருமணம்முடிக்கவே சிவபெருமான் திரிசூலியில் வந்து தங்கியதாகவும், அங்குத் தம்முடைய

திருக்கையில் உள்ள திரிசூலத்தை நட்டுவைத்திருப்ப தாகவும் கருதுகிருர்கள். அந்தத் திருமணப் பெருநாளாக நந்தாஷ்டமி இங்குக் கொண்டாடப்படுகிறது.

## நந்தாதேவிச் சிகரம் :

நந்தாதேவிச் சிகரம் இமய நடுப்பகுதியில் அமைந்தது. அதனைச் சுற்றிலும் பங்காட்டியா (Bankatia) 22,000 அடி உயரம், நந்தகாட் (Nandakat) 22,000 அடி உயரம். நந்தகோட் (Nandakote) 23,000 அடி உயரம். நந்தாதேவி 25600 அடி உயரம். நந்தகுண்ட் 23,000 அடி உயரம் உள்ள உயர் கொடுமுடிகள். அவை களுக்கு அருகில்தான் திரிசூலி உள்ளது. அதன் உயரம் 23,360 அடி. இவற்றுள் ஸ்ரீ நந்தாகுண்ட் சிகரம் தெய்விக மிக்கது என்று சொல்கிருர்கள். இதனருகில் உலகிலேயே மிகச்சிறந்த பிண்டாரி பனி உறைவு(Glacier) இருக்கிறது. அதைப் பனிக்கடல் என்றே சொல்வர். நந்தா தேவியின் மேற்குப் பகுதியில் ரிஷி கங்கை என்னும் நதியும் கிழக்குப்பகுதியில் கௌரி கங்கையும் உற்பத்தியாகின்றன. கௌரி கங்கை உற்பத்தி இடம் மிலம் பனி உறைவு (Glacier) என்று சொல்வர். கௌரி கங்கையில் வந்து சேரும் பாச்சோலி, மார்த்தோலி என்னும் உபநதிகளும் நந்தாதேவி அடியிடத்தில் உள்ள பனி உறைவுகளி லிருந்தே உண்டாகின்றன.

இந்த மலை உச்சியில் ஏறி நின்று உலகைப் பார்க்க முயல்வோர் பலர். இதன் அமைப்பால் உச்சி அடைவதில் மற்ற பனியடைகொடுமுடிகளைவிடத் துன்பம் மிக அதிகம் என்று சொல்லுகிருர்கள்.

## ரூப்குண்ட் :

அவ்வடிவரையில் ஐந்தாறு ஏரிகளிருக்கின்றன. அவற்றுள் தென்மேற்குப் பகுதியிலுள்ளதுதான் இப்போது சரித்திர ஆராய்ச்சியில் இடம் பெற்றுள்ள ரூப்குண்ட் (Rupkund) என்பது.

## மருத்துவரின் மகிமை :

எங்களுடன் டாக்டர் (மருத்துவர்) ஒருவர் வந்திருக்கிறார் என்ற செய்தி இரவே அவ்வூரில் பரவியிருக்கும் போலும். அதிகாலையிலிருந்தே பல பெரியவர்களும் குழந்தைகளும் எங்கள் தங்குமிடத்தில் வந்து கூடினர் பேரும்பாலும் குழந்தைகள்தாம் அதிகம். அவர்களுக்குள் தலை மண்டையிலும், காது ஓரங்களிலும், மூக்கு நுனிப் பகுதியிலும் சிரங்கு அதிகமுள்ளவர்களே மிகுதி. இதைக் கண்டு மனமிரங்கி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் எங்களுடன் வந்திருக்கும் டாக்டர் திரு. ஸ்ரீநிவாசய்யர் அவர்களை அழைத்து அவர்களுக்கு உதவி செய்யும்படிப் பணித்தார்கள். யாத்திரைச் செலவில் எங்களுக்காகவும் வழியில் இதுபோலுள்ளவர்களுக்காகவும் மருந்து வகைகள் அதிகமாக வாங்கி எடுத்துச் சென்றிருந்தோம். அது அங்கு உதவியாக இருந்தது. அங்கு வந்திருந்தோருக்கு மருந்து கோடுத்து இனி இவ்விவ்விதம் செய்தால் நோய்கள் தீரும் என்று குறிப்புங்கோடுத்தார் அந்தநல்லவர். இதுபோன்றே பல இடங்களிலும் மக்களுக்கு வைத்திய உதவிகள் பல செய்யப்பட்டன.

## வழியனுப்பு உபசரிப்பு :

மேலே சொன்னதல்லாமல் பள்ளிச்சிறுவர்களும் பேரியவர்களுமாகப் பலர் அன்று காலையிலிருந்தே

எங்கள் தங்கல் முன்னிடத்தில் வந்து கூடிநின்றனர். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் அந்த இடத்தைவிட்டுப் புறப்படும்போழுது காலை மணி 10. அன்று குருவார நன்னாள். மௌன உபவாச நாள். சிறுவர்கள் வரிசை வரிசையாக அணிவகுத்து நின்றுகொண்டார்கள். அவர் களுக்குப்பின் அவ்வூர்ப் பெரியவர்கள், யாத்திரை கோஷ்டி யார் மூன்ருவது வரிசையில் செல்ல முன்னேசெல்லும் பிள்ளைகள் துதிப்பாடல்களையும் காந்தியடிகளுக்குப் பிடித்த மான இராம்துன், தேசியப் பாடல்கள் முதலிய பாடல் களையும் பாடிக்கொண்டே வந்தனர். ஊருக்குள் பல தெருக்களின் வழியேயும் சென்று எல்லை வந்ததும் தேசிய வாழ்த்துப் பாடலைப் பாடிக்கொண்டு நின்று விட்டார்கள். இந்த வேடிக்கையைப் பார்க்கப் பலர் அவரவர் வீட்டுக் கூரைகளிலும் ஏறிநின்றுகொண்டார்கள். பெண்கள் அவரவர் வீட்டு வாயிலில் நின்றனர். அவ்வூருக்குப் புதிதாகப் பெரியவர்கள் வந்தால் இவ் விதம் வழி அனுப்புவது வழக்கமாம். பள்ளிப் பிள்ளை களுக்கு மிட்டாய்கள் வழங்கப்பட்டன.

### கடும் இறக்கம் :

ஊரின் முடிவில் 600, 700 அடி செங்குத்தான இறக்கத்தில் இறங்கவேண்டும். அதுவும் வழுக்கலுடைய மண் பகுதியில், அதில் இறங்கிப் பழக்கமுள்ள குதிரைகள் கூடக் கால் சறுக்கித் துன்பப்பட்டன. இது எங்களுக்கு ஒரு சோதனையாகவே இருந்தது. இரண்டோருவர் அதில் தடுமாறி விழுந்துவிட்டார்கள். அவர்களுக்கு உதவியாக வேறு இரண்டோருவர் உடன் வந்து இறக்கிவிட்டார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் தண்டியை விட்டிறங்கிக் கால்நடையாகவே இப்பகுதியில் இறங்கிநடந்தார்கள். கீழே

இறங்கிவந்ததும் ஒரு சிற்ருறு. அதுதான் மார்த்தோலி நதி. அதற்குப் பாலம் அமைக்கப்பட்டிருந்தது. அதைத் தாண்டி எல்லோரும் கீழே உட்கார்ந்து கால்வலி போக்கிக் கொண்டே மேலே நடக்கலானேம். வழியில் நடக்கமுடி யாதவர்களுக்கென நான்கு ஏறு குதிரைகள் திட்டம் செய்து கொடுத்தார்கள். இதுவல்லாது நாங்கள் அவ்வூருக்கு வந்தவழியே திரும்பிச்சென்று கௌரிகங்கைக் கரைவழியே வருதல் துன்பமில்லாதது. ஆனல் நடையில் நான்குமைல் அதிகமாகும் என்று சொன்ஞர்கள். அந்த நான்குமைல் நடப்பதைவிட இந்தக் கடும் இறக்கத்தில் இறங்கியது மிக்க துன்பத்தைத் தந்தது எங்கள் துன்பங்கண்டு அந்தச்சுவாமிகள் மெல்லச்சிரித்துக்கொண்டார்கள். 'பிறர் துன்பங்கண்டு சிரித்துக்கொள்கிறீர்களே' என்றேன். அதற்கு அவர்கள் '' இந்த நடைப்பயிற்சியும் வேண்டும், பின்னே இது உதவியாகவே இருக்கும்'' என்ருர்கள். வழிநடப்பில் நல்ல காற்று அடிப்பதால் களைப்பும் அயர்வும் நீங்கிவிடுகிறது.

லோவான் :

இதைவிட்டு ஐந்தாறு பர்லாங் தொலைவு வந்ததும் லோவான் என்னும் சிறு பனி ஓடை கௌரி கங்கையில் வந்து கலக்கிறது. இது பக்கத்திலுள்ள மலை உச்சியில் தேங்கியிருக்கும் பனி உறைவிலிருந்து உருகி ஓடிவரு கிறது. அப்பகுதிகளில் அடிக்கடி இரவு நேரங்களில் பனி பெய்கிறது அது பலநாள்தேங்கிச் சூரிய வெப்பத்தால் உருகி ஒடுகிறது. அப்பனி நீரில் மிதியணியோடு நடந் தாலும் கூட குளிர் தாக்குகிறது.

### பர்ஃபூ ( BURFU ) :

மேலும் ஒருகல் தொலைவு சென்றதும் கௌரி கங்கைக்குப் பாலம் இருக்கிறது. அதன் வழியே கௌரி யின் இடதுகரைக்குச் செல்லவேண்டியிருக்கிறது. அங்கு இரண்டுபாதைகள் பிரிகின்றன. ஒன்று, பக்கத்தில் ஒருகல் தொலைவுக்குள் பர்ஃபூவுக்கும், மற்றொன்று மிலத்துக்கும் செல்கின்றன. பர்ஃபூ அமைப்பிலும் நல்ல அழகுடையது. ஒருமலை உச்சியில் 12,000, 13,000 அடி உயரத்தில் அமைந்தது. அங்குக் கூலி ஆட்களும் குதிரைகளும் அமர்த்தலாம்.

### மாப்பா, பாச்சூ :

இனி மிலம்வரை மட்பாதை. அதுவும் சிறிது சிறிது ஏற்றமாகவே செல்கிறது. மழை பெய்தால் வழுக்கல் உடையது. மேலும் மூன்று நான்கு கல் தொலைவு சென்றதும் பாச்சூ என்னும் நதி கௌரி கங்கை யில் வந்து கலக்கிறது. அந்த இடத்தில் நந்தாதேவி மிகவும் நன்றாகக் காட்சி அளிக்கிறது. பாச்சூநதி பாச்சூ என்னும் ஊரையும் கங்கோர் என்ற ஊரையும் இரண்டு கரைகளிலும் கொண்டு நடுவில் பாய்ந்துவருகிறது.

### நந்தாதேவி காட்சி வழங்குகிறது :

ஒரு விராட் உருவில் வெள்ளைக்கலையுடுத்துத் தலையில் கிரீடத்தோடு ஒரு பெண் அமர்ந்திருக்கும் கோலத்தில் தோற்றமளிக்கிறது. அதன் அமைப்பில் ஒரு தெய்விகம் கலந்திருக்கிறது. இந்தக் காட்சியைக் கண்டவரின் கைகள் தாமே தலைமீது குவியும். அந்த இடத்தில் சிறிது நேரமா வது தம்மை மறந்து நின்று தெய்வச் சிந்தனையில் திளைக்கச்

செய்யும் ஆற்றல் அக்காட்சியில் கலந்திருந்தது. தெய்வ சந்நிதிகள் கிழக்கு நோக்கி அமைந்திருப்பதுபோன்ற அமைப்புடையது. பாச்சூநதி எதிர்மலைத் தொடரை இரண்டாகப் பிரித்துக்கொண்டு ஒரு மேட்டிடத்திலிருந்து சரிவாக ஓடிவருகிறது. அது தேவிசந்நிதியில் வீதி அமைத்து அன்பர்கள் வழிபட இடம் விட்டிருப்பதுபோன்றிருக்கிறது. இருகரையிலும் வீடுகள் இருப்பது சந்நிதித்தெருவிலிருப்பதுபோலவே காட்சி அளிக்கிறது. இயற்கையைக்கண்டு அனுபவிப்பவர்கூட அங்கு நின்று பார்த்தால் அந்த இயற்கையிலும் ஒரு தெய்விகம் இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்வர். வடக்கே தொலைவில் திரிசூலி, மேற்கே இந்தத் தெய்வச் சிகரம் ; நாங்கள் அந்த இடத்திற்கு வந்த நேரம் பகல் உச்சிப்போது. அன்று எங்களுக்குக் காட்சி கொடுக்கவே காத்திருப்பதுபோல பனிமுட்டம், மேகமுட்டமேதுவுமில்லாமல் தெளிவாகத் தெரியக்கூடியதாக விளங்கியது. அங்கே சிறிதுநேரம் நின்று தேவி துதி சொல்லி வழிபட்டோம். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் துர்க்கா சப்தசதி பாராயணம் செய்தார்கள். அன்று அங்கே நந்தா தேவியும் திரிசூலியும் ஒரே நேரத்தில் காட்சி அளித்தது. அம்மையும் அப்பனுமாக அமர்ந்திருந்து நமது யாத்திரை வெற்றிகரமாக முடிய அருள் பாலிப்பதாக இருக்கிறது என்று திருவுளம்பற்றினார்கள். இதுபோல இரண்டு சிகரங்களும் ஒரே நேரத்தில் காட்சியில் கிடைப்பது அரிது என்று அப்பக்கத்தில் உள்ளோர் கூறுகிறார்கள். எங்களோடுவந்த வடநாட்டுப் பகுதியினர் நாங்கள் மிலத்தில் சென்று சொன்னதும் மறுநாள் நந்தாதேவி தரிசனத்துக்கெனவே புறப்பட்டு வந்தார்கள். கங்கோர் வந்தும் அன்றிலிருந்து பல நாள் பனி முட்டம் அதிகமாகிக் காட்சி கிடைக்கவில்லை. ஏமாற்றத்தோடு திரும்பினார்கள். நாங்கள் அம்மையின்

தண்ணளிபெற்று அங்கிருந்து மேலே நான்குகல் தொலைவு சென்றோம்.

## கோபாங் :

அங்கே உண்டா துராக் கணவாயிலிருந்து வரும் உண்டாநதி (கோபாங் அல்லது கோங்கா) கடும் வேகத்தோடு ஓடி வந்து கலக்கிறது. அவ்வழியெல்லாம் களிமண் பகுதி. பாதை நதிப்புறத்தில் சரிவாக இருக்கிறது. ஈரக் கசிவுடையதாகவும் இருந்தது. ஆகையால் கூர்க்கம்பின் உதவிகொண்டே நிதானமாக நடக்கவேண்டி வந்தது. இல்லாவிட்டால் வழுக்கி நதியில் விழவேண்டியிருக்கும். அந்த நதிக்கு ஒரு மரப்பாலம் இருக்கிறது. அதன் வழியே கடந்து அக்கரை வந்ததும் மேலும் இரண்டு கல் தொலைவில் மிலம் என்னும் இந்தியக் கடைசி எல்லைக் கிராமம் கண்ணுக்குப் புலனாகிறது.

## மலை வழங்கும் ஒரு தெய்விகக் காட்சி :

கோபாங்கின் அக்கரையில் மிலத்தின் அருகில் மண் மலை ஆயிரக்கணக்கான அடி உயரம் நிமிர்ந்துநிற்கிறது. அதில் பெருமழை பெய்து பெய்து மண்ணைக் கரைத்துவிட்டிருக்கிறது. அதில் ஒரு தெய்விகக் காட்சி. அவற்றில் ஒரு உச்சி முகட்டில் இரண்டு கைகள் ஒரு தலையுடைய பேருருவம் முழங்காலளவுக்கு நிறுத்தப்பட்டிருப்பதுபோல அமைந்திருந்தது. திருவேங்கடமுடையான் நின்ற திருக்கோலத்தில் திருமுடியில் கிரீடம் விளங்க திருக்கரத்தில் சங்கு சக்கரம் ஏந்தி நின்றிருப்பதுபோன்ற உருவ ஒற்றுமை அங்கிருந்தது. அதுவும் கிழக்குநோக்கி. அம் மண்ணுண்ட மாலவன் தானே அம்மண்ணில் சுயம்புவாக

எழுந்தருளி திருவோலக்கம் வழங்கியதுபோன்றிருந்தது. இவ்வாருக எங்களுக்கு அன்று ஒருநாளில் அம்மையும் அப்பனும் திருமாலும் எங்கள் முன்னே சுயம்புவாக இயற்கையோடு இயற்கையாக அமைந்து நின்று எங்களைத் தெய்வ சிந்தனையில் திளைக்கவிட்டார்கள்.

மிலம் :

இவ்வாறு அருட்காட்சி கண்ட மகிழ்ச்சியோடு மிலத்துக்கு மாலை மூன்று மணிக்கு வந்து சேர்ந்தோம். அன்று முழுவதும் வெய்யில்காய்ந்தது. இது அப்பக்கங்களில் அருமையாக நிகழ்வதாகும். பெரும்பாலும் மழை மேகம், பனி மூட்டம். மழை இவைகளில் ஏதாவது ஒன்று இருந்துகொண்டே இருக்குமாம். இவ்வூருக்கு அப்பால் மலைப்பகுதிதான். இதற்கப்பால் உள்ள சிர்ச்சினை ஒட்டி நம் இந்திய எல்லைக்கோடு அமைந்திருக்கிறது. இவ்வூரில் 500 வீடுகளுக்குமேல் இருக்கின்றன. பெரும்பாலும் மக்கள் கூட்டம் இல்லை. வீடுகளை அடைத்துப் போட்டுவிட்டு ஞானிமாமண்டி முதலிய திபேத்திய மண்டிகளில் வியாபாரத்துக்குப் பலரும் போயிருந்தார்கள். இவ்வூரில் ஒரு ஆரம்பப் பாடசாலை, அஞ்சலகம். எல்லைக் காவல் படையினர் (Check Post Officers), கம்பி இல்லாத் தந்தி நிலையம், வானிலை ஆராய்ச்சிக்கூடம், சில கடைகள் முதலியனவும் உண்டு. ஊர்ப் பஞ்சாயத்துத் தலைவர், நியாய சபைத் தலைவராகவும் பணியாற்றுகிருர். இங்குத் தண்ணீர் கிடைப்பது அரிது. கௌரி கங்கையிலிருந்தோ அல்லது கோபாங் நதியிலிருந்தோ தண்ணீர் எடுத்து வருதல் வேண்டும். இரண்டும் ஒரு கல் தொலைவுக்கு மேலிருக்கும். ஆற்று நீர் மிகக் கலங்லாக மண் கலந்து ஒடுகிறது. ஒரு தாராவும் இருக்

கிறது. ஆனால் அங்குப் பெண்கள் குளிப்பதும் குடிக்கத் தண்ணீர் எடுப்பதுமாக இருப்பர். ஆண்கள் சென்று அங்கு அவர்களோடு கலப்பதை அவர்கள் விரும்பவில்லை. இவ்வூரில் திபேத்திய ஆடுகளைக் கொண்டுவந்து கம்பளி வெட்டி எடுத்துக்கொண்டு அப்பகுதிகளுக்குப் போதி எடுத்துப்போக விடுகிறார்கள். கம்பளி சேகரமும், சிக்கெடுத்து நூல் நூற்றலும் முக்கிய தொழில்களுள் சேர்ந்தவை திபேத்தியர் சிலர் இங்குச் சரக்கறை வைத்தும் வாணிபம் செய்கிறார்கள்.

மிலம் 11,750 அடி உயரத்தில் அமைந்த ஊர். கோடையிலும் குளிர் இருக்கும். ஆண்டில் சில நாட்களே சூரிய வெளிச்சம் இருக்கும். அந்த நாட்களிலும் சூரிய வெப்பம் தாக்காது. நாங்கள் வந்த ஒருநாள்தான் வெய்யில், மற்றநாட்களில் பனி மூட்டம், சிறு மழை இப்படி ஏதாவது ஒன்று சூரியனை மறைத்து இருந்தது. காற்றும் அதிகம். இங்கிருந்து 5, 6 கல் தொலைவில் மிலம் நதி உற்பத்தியாகி வெளிவரும் மிலம் பனி உறைவுப் பகுதி (Glacier) இருக்கிறது. 12 கல் தொலைவில் திரிசூலியின் அடிவரையும் பைதூர்ணி குண்டம் என்ற புநித தீர்த்தமும் இருக்கிறது. உலகில் சிறந்த பனி உறைவுப்பகுதிகளில் மிலமும் ஒன்று. இவ்வூரில் வால் கோதுமை, வெங்காயம். பார்லி இவை ஓரளவு பயிர் ஆகிறது.

### மிலம் பள்ளிக்கூடம் :

நாங்கள் தங்குவதற்கு அவ்வூர்த் தொடக்கப் பள்ளிக் கட்டிடம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது, ஐந்து வகுப்புக்கள் அங்கு நடைபெறுகின்றன. ஓராசிரியர்

பள்ளி. நல்ல கல் கட்டிடம். ஊரின் தென்கிழக்குப் பகுதியில் திறந்த வெளியில் அமைந்தது. நாங்கள் அங்குச் சென்ற மூன்ருவது நாள் அப்பள்ளி ஆசிரியர் கயிலை யாத்திரை சென்றுவிட்டார். எங்களுக்கு அந்தப் பள்ளிக்கட்டிடத்தைத் தங்க இடம் கொடுத்துவிட்டு வெளி யிடத்தில் வைத்துப் பள்ளிக்கூடத்தை நடத்திக்கொண்டார் அவ்வாசிரியர்.

அருட்பிரசாதங்கள் :

நயினிதாலிலிருந்து வந்தபிறகு தபால் எதுவும் கிடைக்கவே இல்லை. இங்கு வந்ததும் எங்களை எதிர் நோக்கிப் பலநாள் தபால்களும் பிரசாதங்களும் வந்து சேர்ந்தன. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் மாலைத் திருமஞ்சனம் முடித்துத் தபால்பார்க்கத் தொடங்கினுர்கள். முதலில் வந்தது ஆதீன ஆன்மார்த்த ஸ்ரீ சொக்கலிங்க மூர்த்தியின் அருட்பிரசாதம். அடுத்து வள்ளலார்கோயில் ஸ்ரீ மேதா தட்சிணுமூர்த்தியின் பிரசாதம் அடங்கியது.

குருவார மௌனநாட்களில் “ சொக்கலிங்கம், ஞான சம்பந்தம், மேதா தட்சிணுமூர்த்தி ” இந்தத் தியானம் திகமுண்டு. அதிலும் பல நாள் கிடைக்காத பிரசாதங்கள் அன்று அங்குக் கிடைத்ததில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத் தின் திருவுளம் கனிந்தது. சொக்கலிங்கமும் குருஞான சம்பந்தகுரவரும் உடன் நின்று உதவுகிருர்கள் என்றே திருவுளங்கொண்டார்கள். தபால்களை எல்லாம் பார்த்துப் பதில் எழுதவேண்டியவைகளை எழுதி முடிக்க இரவு மணி 8 வரை ஆகிவிட்டது.

அங்கு லட்சாதிபதியும் திபேத்திய வியாபாரத்தில் பெருஞ் செல்வாக்குமுள்ள ஸ்ரீ பகத்சிங் பாங்தே என்பவர்

எங்களுக்கு வந்த தபால்களை வாங்கி வைத்துத் தங்குமிடம் திட்டம் செய்து கொடுத்துதவினர். அவர் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் அங்கு எழுந்தருளியானதும் வந்து கண்டு வணங்கி ஆசி பெற்றுச் சென்றார்.

## மிலம் பனி உறைவு வழியில் :

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் மறுநாள் அதிகாலையில் எழுந்து திருமஞ்சனமாகி வழிபாடுகள் பாராயணங்கள் எல்லாம் முடித்துப் பாரணை ஆகி மிலம் பனி(ப் படிவுகள்) உறைவுப்பகுதி சென்று திரிசூலியை அண்மையில் நின்று தரிசிக்கத் திருவுளங் கொண்டார்கள். அவர்கள் தண்டியிலும் மற்றையோரில் சிலர் குதிரை கோவேறுகழுதை மீதும் சவாரி சென்றோம். ஊரெல்லை தாண்டியதும் வழி கரடு முரடான மலைப்பாதையாக இருந்தது. ஊருக்கு உள்ளும் தெருவெல்லாம் சுத்தமாக இல்லை. பச்சையாக ஆடுகளை உரித்தும் புலாலை வீட்டின் கூரையிலிட்டு வைத்திருக்கிறார்கள். அவை அப்படியே கெட்டுப் போகாது பல நாளிருக்குமாம். கெளரியின் வலது கரை செங்குத்தான மலைப்பாறையும் இடது கரையில் சரிவாக உயர்ந்து செல்லும் மலைப் பகுதியுமாக அமைந்திருக்கின்றன. நாங்கள் சென்றது இடது கரையின் வழியே. வலதுகரைப் பகுதியில் சிறு சிறு அருவிகள் மலை உச்சியிலிருந்தும் பல இடுக்குகளிலிருந்தும் நடுஇடங்களிலிருந்தும் வந்துவழிந்து கொண்டிருக்கின்றன. சில அருவிகள் மலை உச்சியிடங்களிலிருந்து வழிந்தாலும் அடியிடம்வரை ஓடிவந்து நதியில் கலப்பதில்லை; நடுவிலேயே மறைந்து விடுகின்றன. எல்லாவற்றிலும் ஊர்தாண்டி மூன்று நான்கு கல் தொலைவில் மலையின் நடு இடத்தில் வெள்ளையாகப் பால் நிறத்தில் அருவி ஒன்று பீறிட்டுக்கொண்டு வந்து ஆற்றில் விழுந்து

கொண்டிருக்கிறது. அதற்குப் பால் கங்கை (தூத்கங்கா) என்று பெயர்.

மிலம் உறைவு :

மேலும் 4, 5 கல் தொலைவு மேலே சென்ருேம். எங்களுடன் வந்த ஆட்கள் மிலம் உறைவுப்பகுதி அங்கிருந்து தொடங்குவதாகச் சொன்ஞர்கள். அங்குப் பனி உறைவு இருப்பதாகத் தெரியவில்லை. தரைப்பகுதியாகவே இருந்தது மேலே கல்லும் மண்ணும் சில சில இடங்களில் செடிகளும் முளைத்திருந்தன. ஆனுல் அங்கே ஒரு மேட்டிடமும், களிமண்போன்ற தோற்றத்தில் அதற்கு வாயும் அதிலிருந்து தண்ணீர் பீறிட்டு வேகமாக வெளி வருவதும் தெரிந்தது. ''எங்களுக்குப் பனி உறைவென்ருல் தெரியும். இங்கே பனி உறைவு எங்கிருக்கிறது. மண்ணும் கல்லும் களிமண்ணுமாகவல்லவா இருக்கிறது. நன்ருகத் தெரியுமா உனக்கு'' என்று கேட்டோம். ''தாங்கள்நிற்குமிடத்தின் அடியிலேயே பனிஉறைவு இருக்கிறது மேலே இருக்கும் கல்லும் மண்ணும் கடும்புயற் காற்றில் பக்கத்தில் உள்ள மலைப்பகுதியிலிருந்து வாரி இறைக்கப்பட்டது. 2, 3 அடி மண்ணுக்குக் கீழே எங்கும் பளிங்குப் பாறையென உறைபனிதான். தாங்கள் களி மண் என்று சொல்வதும் உறைவுதான். அருகில் சென்று பாருங்கள். பல நூற்றுக்கணக்கான ஆண்டுகள் ஆன பனி உறைவு. வாருங்கள் காட்டுகிறேன்'' என்று தண்ணீர் வெளிவரும் பகுதியின் அருகில் அழைத்துச்சென்ருன். அவன் காட்டிய இடத்தில் கண்ணுடியைக் காய்ச்சி ஊற்றியதுபோல பல அடிக்கணக்கான (40, 50 அடி) உயரத்தில் பனி உறைவும் அதனடியில் 10, 12 அடி அகலமும், 4 அடி உயரமுமுள்ள பாலத்திலிருந்து தண்ணீரே உந்தப்பட்டு

வருவதும் தெரிந்தது. அவ்விதம் வரும் தண்ணீர் 10, 15 அடி அகலம் 3, 4 அடி ஆழமுள்ள ஆருகப்பெருகி ஓடுகிறது. இராக்ஷச இயந்திரங்களைக்கொண்டு நம் நாட்டில் நெய்வேலியில் தண்ணீர் இறைக்கப்படுவதாகச் சொல்கிருர்களல்லவா. அதேபோல இத்தண்ணீரும் கடும் விசையுடன் வெளியே பீறிட்டு வருகிறது. வாயினருகில் பெரும்பாறைகளாகச் சில பனிப்பாளங்கள் வெடித்துநிற் கின்றன. வெடிப்பிலிருந்து சில பனித்துண்டுகள் சிதறப் பட்டும் கிடந்தன. அவற்றில் மூன்று நான்கு அடி நீளமும் ஒரு அடி கனமும் உள்ள ஒரு துண்டு எங்களுக்கு அண்மையில் கிடந்தது. அதனை வழிகாட்ட வந்த இளைஞன் ஒரு கையால் எடுத்துவந்து எங்களுக்குக் கொடுத்தான். இலேசாகவும் உருக்கி வார்த்த கண்ணுடிப் பாளம் போலவும் இருந்தது. அதைக் கீழே போட்டு உடைத்தோம். கண்ணுடி உடைபடுவதுபோலச் சிதறி விழுந்தது. அந்தக்கட்டி உடலில்பட்ட இடமெல்லாம் மறத்துப்போய்விட்டது. அதிகநேரம் கையில் வைத்திருந் தால் இரத்த ஓட்டம் நின்றுவிடும் என்றும் சொன்ஞர்கள். அப்பகுதியை வெட்டி எடுத்தாலும் நமக்கு உணர்ச்சி தெரியாதாம். அதற்கு (Snow Bite) பனிக்கட்டி என்று ஆங்கிலத்தில் சொல்லுகிருர்கள். உடைந்து விழுந்த பனித்துண்டங்களை எடுத்து வாயில் போட்டுக்கொண் டேன். நாக்கும் மறத்தது. கடித்துத் தின்றேன். பல்லும் மறத்தது. குடலில் சென்று சேரும்வரை உடலுக்குள் அக்குளிர்ச்சி தெரிந்தது. எங்களுடன் வந்த டாக்டருக்குத் தன் தொழிலனுபவமும் படிப்பனுபவமும் முந்தின. “அதற்கு உலர்ந்த பனி ( Dry - ice ) என்று பெயர். மருந்துச் சரக்குகளில் மிகச் சிறந்தது. நாம் எடுத்து உடைத்த துண்டுப்பகுதி ஒரு ஆண்டுக்குமேல் நல்ல வருமானத்தைக் கொடுக்குமே ” என்று சொன்ஞர்.

## அருகில் ஆபத்து :

கௌரி கங்கை வெளிவரும் பகுதியில் இறங்கிக் குளிக்க எங்களில் பலருக்கும் ஆசைதான். அவ்விதம் செய்தல் கூடாது. மேலே வேடித்துநிற்கும் பனிப்பாறை எப்பொழுது பெயர்ந்து விழும் என்று சொல்லமுடியாது. எந்த நேரத்திலும் அது விழக்கூடும். அது இங்கே பெரிய ஆபத்து. தண்ணீரில் “அமிழ்ந்து குளித்தால் உடல் விறைத்துவிடும். மீண்டும் உணர்வுவருதல் மறு பிறப்புப் போலத்தான். ஆகையால் யாரும் தண்ணீரில் இறங்கவேண்டாம், வேண்டுமானுல் ஆசமனம் செய்து கொள்ளுங்கள்” என்ருன் வழிகாட்டி. அவ்விதம் செய்து கொண்டு மேலே சிறிது தொலைவு சென்ரேம். திரிசூலி அடியிடம் சாண்டில்யகுண்டம் மேலும் 6, 7 கல் தொலைவு இருக்கும் என்று தெரிய வந்தது. கையில் எடுத்துச் சென்ற ரொட்டி முதலிய சிற்றுண்டிகளைத் தின்று காப்பியும் குடித்து உற்சாகமாக மேலே செல்ல எண்ணிேனும். ஒரு மேட்டுப் பகுதியில் எல்லோரும் சென்று அமர்ந்து கொண்டோம். எங்கள் எதிரே திரிசூலி; அதை அன்று பனிப்படலம் மூடிநின்றது. சுற்றுப்புறம் அழகாகக் குளுமையாக இருந்தது. சூழ்நிலை உடன்வந்த வடநாட்டினரில் ஒரு சிலரை ஜாவளி பாடச் செய்தது. சிற்றுண்டி முடித்துச் சாண்டில்ய குண்டம் சென்று முழுகி இரவு முன்னேரத்துக்குள் மிலம் மீண்டும் திரும்புவதாகத் திட்டம்.

மனநிறைவும் வயிற்றுநிறைவும் கொண்டு மகிழ்ச்சியோடு சிறிது அங்குள்ள காட்சிகளைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம். பக்கத்தில் சுமார் 100, 150 கெஜங்களுக்கு அப்பால் தட் (Thud) என்று ஒரு சிறு ஓசைகேட்டது. பிறகு மண்ணும் கல்லும் சரியும் ஓசை. திரும்பிப்

பார்த்தோம். ஒரு சிறிது தொலைவில் நாங்கள் இருந்த இடத்தை ஒத்த உயரத்தில் சிறிது முன்னே நின்ற பகுதியில் 100, 150 அடி நீள அகலத்துக்கு 40, 50 அடி ஆழத்துக்கு ஒரு குளம் போலப் பள்ளம் ஏற்பட்டு அதன் பக்கத்திலுள்ள கல்லும் மண்ணும் சரிந்து விழுந்துகொண்டிருந்தன. பனி உறைவுப் பகுதிகளில் இதுபோன்ற நிகழ்ச்சிகள் அடிக்கடி ஏற்படுவதுண்டு.

## வந்தவழியே திரும்பினோம் :

இதைக் கண்ட எங்கள் உற்சாகமும் மகிழ்ச்சியும் போன இடம் தெரியவில்லை. பாட்டும் நின்றது. எல்லோர் மனதிலும் அச்சமும் புகுந்துகொண்டது. நாங்கள் அமர்ந் திருக்கும் பகுதியும் உள்வாங்கிவிட்டால்.....யாரும் எதுவும் சொல்லாமலே எழுந்தோம். மிலத்தை நோக்கி வேகமாக நடக்கலானோம். சிறிது தொலைவு சென்று உறுதியான பாறைப் பகுதியில் வந்து திரிசூலியைப் பார்த்து நின்றோம். கைகள் தாமாகத் தலைமீதேறிநின்றன. அதில் சிலர் திரிசூலி தரிசனம் செய்யப் போகவேண்டாமா என்று கேட்டனர் சிரித்துக்கொண்டே. ‘‘ அந்தத் தரிசனம்தான் நடந்து கொண்டிருக்கிறதே ’’ என்றோம் பலரும். ‘‘ சாண்டில்ய குண்ட் ஸ்நாநம் ’’ என்றார். அதோ என்று புதிதாக உண்டாகிய பள்ளத்தைச் சுட்டிக்காட்டினோம். திரிசூலிப் பக்கத்திலிருந்து பனிமூட்டம் பரவி வந்துகொண்டிருந்தது. அதைக்காட்டி விரைவில் மிலம் திரும்பலாம் என்று பேசிக் கொண்டே நடந்தோம் வந்தவழியே.

மேலே சொன்ன நிகழ்ச்சிகள் பனி உறைவு உட்பகுதியில் பூமியில் விளையும் சூட்டினால் உருகி உருகி உட்கூடு உண்டாகும். பிறகு உட்புறத்தில் ஏற்படும்

காற்றமுத்தம் மேற்பகுதியில் தாக்கி அதைப் பிளந்து கொண்டு மேலேவரும். அதன்விளைவாக அப்பகுதி உள்ளே இறங்கிவிடும். இந்த நிலையில் மேலே செல்ல எல்லோருக்கும் அச்சம். திரிசூலியைத்தரிசித்ததாகச் சாண்டில்யத்தில் நீராடித் தூய்மைபெற்றதாக மனத்திலே எண்ணிக்கொண்டு திரும்பினேம். எங்களைப் பின்தொடர்ந்து பனிமுட்டமும் ஊரை நோக்கி வந்துகொண்டிருந்தது. மாலை 5 மணிக்குப் பள்ளிக்கூடக் கட்டிடத்தை வந்தடைந்தோம். இரவு சிறு மழை தூறவும் தொடங்கியது.

## யார் பிரும்மம் :

திரிசூலி உண்டான வரலாறு :— தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் பல காலங்களில் பல காரணங்களைக் கொண்டு சண்டைகள் மூண்டுள்ளன. அவற்றுள் ஒன்று. அதில் ‘ வலிமையுள்ளவர் யார் ’ என்பது குறித்து எற்பட்டது. அதில் தேவர்கள் வெற்றி பெற்றுர்கள்.

அந்த வெற்றி முழக்கத்தில் தேவர்கள், எல்லாம் வல்ல பிரும்மவஸ்துவின் ( பரம்பொருளின் ) அருளால் கிடைத்தது என்பதையும் மறந்தனர். பரம்பொருள் தம்மில் வேருனது, மேலானது என்பதையும் மறந்தனர். தாம் தாமே பரம்பொருள் ; அந்தப் பிரமம் என்பது தாமேதான். தம்முடைய தனி வல்லமையாலேதான் வெற்றி கிடைத்தது என்று வாதம் செய்து பிணங்கினின்றனர். பரம்பொருள் ( பரம் பிரமம் ) என்பது எது என்று முடிவாகாதநிலையில் அவர்களுக்குள்ளே பெருங்கலகம் உண்டாயிற்று.

அங்கு ஒரு யக்ஷன் வந்து தோன்றினுன். கலகத்துக்குக் காரணம் என்ன என்று வினவினுன். நடந்த வரலாறு சொல்லித் தம்மில் யார் அந்த பிரம்மம்

என்று விளக்கம் கேட்டார்கள். அவ்வியக்கன் அவர்கள் முன்னிலேயில் துரும்பு ஒன்றை எடுத்துப் போட்டு அதில் அவரவரும் அவரவர்வல்லமையைப் பயன்படுத்தும்படியும் அதில் வெற்றிபெற்றவரே அந்தப் பிரமம் என்றும் சொல்லி மறைந்தான்.

அக்னி தன் முழுசக்தியையும் பயன்படுத்தி அதை எரிக்க முயன்ருன். முடியவில்லே. இதுபோலவே வாயுவும் அதைத்தூக்கமுயன்று தோற்ருன். அதைக்கண்ட இந்திரன் தன் வலிமையையும் பயன்ப்படுத்த முற்பட்டான். அந்த வேளேயில் பராசக்தி அங்குத் தோன்றி அங்கு நிகழும் போட்டியைப் பார்த்து நின்ருள். அந்தப் பராசக்தியைக் கண்ட இந்திரன் ‘‘சிறிதுமுன்னே தோன்றிய யக்ஷன் யார்? அவன் ஆற்றல் எத்தகையது?’’ என்று வினவினுன். அங்கு வந்தது பிரும்ம வஸ்துவேன்பதையும் அதன் ஆற்றலேயும் தேவி விளக்கி அருளினுள். இந்திரன் அதனே நோக்கித் தவம் மேற்கொண்டான்.

அவன் அகங்காரம் குறையுமுன்னே உண்மைப் பொருளே உணர்த்தியதற்காகப் பெருமான் அம்மையைச் சபித்து நீங்கினுன். இதைக் கண்டு அஞ்சிய சக்தித் தாய் குறையிரந்து வேண்டிநின்ருள். தன்னே விட்டு அகலாது அருகில் ஏற்றருளவேண்டுமேன்று மனம் வருந்தி வேண்டினுள். தக்க சமயத்தில் வந்து ஏற்பதாகச் சொல்லிப் பிரம்மம் மறைந்தது.

### அம்பிகை தவம் :

பெருமாட்டி அங்கேயேதங்கிக் கடும் தவம் இயற்றினுள். பலகாலம் சென்றபிறகு பெருமான் சூலபாணியாகக்

காட்சி வழங்கி "வேண்டுவது என்ன?" என்றுகேட்டான். அம்பிகை "முன்போலவே திருமணத்தால் தன்னை ஏற்றுக் கொள்ளவேண்டும்" என்று வேண்டிக்கொண்டாள். "அவ் விதமே ஆகுக" எனப்பணித்து இந்த இடத்துக்கு வந்து சேரும்படிச் சொல்லி மறைந்தார். பெருமான் இங்குத் திரி சூலியாக நின்று கௌரியம்பிகையை மணந்துகொண்டான். "தேவர்கள் பிரமம் தாமல்ல, தம்மில் வேருக இருக் கிறது. அதன்இச்சையின்வழியேதான் நாம் இயங்குகிறோம். அதுவல்லாது தமக்குச் செயற்படுமாற்றல் எதுவுமில்லை என்பதையும் உணர்ந்து திருமணக்கோலங் கண்டு வணங்கி வாழ்த்தி நின்றார்கள். அந்த அம்பிகையின் அருள் வெள்ளமாக நந்தாகினி என்னும் கௌரி கங்கை பைதூர்ணி குண்டத்தில் உற்பத்தியாகி வெளிவந்து உலகைக் காக்கிறாள். அது ருத்ர அம்சம்.

இந்த வரலாற்றில் அம்பிகை இந்திரனுக்கு உப தேசித்தவரையுள்ள பகுதி கேனோபநிஷதத்தில் சொல்லப் பட்டிருக்கிறது.

சாண்டில்யகுண்டம் :

திரிசூலியின் அடிவரையில் இது ஒரு தீர்த்தம். பனி உறைவுப் பகுதியிலிருந்தாலும் இதன் நீர் உறைகுளிராக இராது. 500 அடி நீளமும் 250, 300 அடி அகலமும் இருக்கும். அதைச் சுற்றிலும் புல்வெளியுமிருக்கும். கோடையில் ஆடு மாடு மேய்ப்போர் இப்பகுதியில் வந்து பலநாள் மேய்த்துநிற்பர். சிரவணபூர்ணிமா (ஆவணிப் பௌர்ணமி) வில் இங்கு ஒரு விழா நடைபெறும். மிலம் பக்கத்தில் உள்ள மக்கள் பலர் இங்குவந்து தீர்த்தமாடுவர்.

**சிக்டம் :**

இதனருகில் சிக்டம் (Sikdam) என்ற பனி உறைவுப் பகுதி மிலம் பனி உறைவில் வந்து சேர்கிறது.

**சூரிய குண்டம் :**

இதற்குமேல் ஆண்டு முழுவதும் உறைந்துகிடக்கும் ஏரி ஒன்று இருப்பதாகச் சொல்லப்படுகிறது. அதற்குச் சூரிய குண்டம் என்று பெயர்.

**மலை உச்சியை எட்டுதல் :**

திரிசூலிச் சிகரத்தைக் கண்டுவரும் முயற்சியில் ஈடு பட்டு நடுவிடத்தில் பனிச்சரிவு ஏற்பட்டு பலர் அதில் புதை உண்டதாகச் சொல்லப்படுகிறது. இதில் ஈடுபட்டவர்கள் போலந்து தேசத்தவர். பிறகு இதுவரை வேறுயாரும் முயற்சிக்கவில்லை. இமயப் பகுதியில் ஊடுருவிச் சென்று பலப் பல சிகரங்களையும் புதிது புதிதாக முதன் முதல் கண்டு உலகுக்கு எடுத்துச்சொன்ன மலையேறு கலையில் வல்லவர்களாக அக்காலத்தில் விளங்கிய பண்டிட் நைன்சிங், பண்டிட் கிருஷ்ணசிங் என்ற சரித்திரப் புகழ் பெற்ற வீரர்களை உலகுக்கு அளித்த பெருமை உடையது மிலம். திரிசூலி, நந்தகோட், நந்தகுண்ட் நந்தகாட், நந்தாதேவி முதலிய கோடுமுடிகள் அடுத்தடுத்து உள்ளவை என்று விபரமறிந்தவர்கள் சொல்லுகிறார்கள்.

**அடையாளச் சீட்டுக்கள் :**

ஜூலை 16 ஆம் தேதியிலிருந்து 20 ஆம் தேதி நண் பகல் வரை மிலத்தில் தங்கியிருந்தோம். இதுவரையில்

எங்களுக்குத்தங்கியிருக்கக் கட்டிடங்கள்கிடைத்தன. இனி இதற்குமேல் திரும்பும் வழியில் கர்ப்பியாங் வரை எங்கும் கட்டிடங்கள் கிடையா. அங்கெல்லாம் கூடாரவாசம்தான். நடுவில் குடியிருப்பு ஊர்களே இல்லை எனலாம். எல்லாரும் கூடாரவாசிகளே. அதுவல்லாமல் இந்திய எல்லை தாண்டி திபேத் நாட்டில் பலநாள் தங்கவேண்டியதாகவும் இருக்கிறது. ஆகையால் இங்கு மிலத்தில் உள்ள எல்லைக்காவல் அதிகாரியிடம் (Check Post Officer) அடையாளச் சீட்டு வாங்கிவைத்துக்கொள்ளவேண்டும். வியாபார நிலையில் அல்லது வேறெந்தத் தொழில்முறையில் செல்வதாக இருந்தாலும் அனுமதிச் சீட்டு (Permit) வாங்குதல்வேண்டும்.

அடையாளச் சீட்டுப் பெறுவதில் நம்முடைய சொந்த ஊர், தபால் விலாசம், தாய்தந்தையர் பெயர், ஊரில் உள்ள நம்முடைய வாரிசு பெயர் இவைபோன்ற விபரங்களை ஒரு புத்தகத்தில் பதிவுசெய்து கையெழுத்துப் போடவேண்டும். அதை வைத்துக்கொண்டு அந்த அதிகாரி அலுவலக முத்தரையிட்டு அடையாளச் சீட்டு வழங்குகிறார். அந்த அடையாளச் சீட்டிலும் நாம் கையெழுத்திடவேண்டும்.

அனுமதிச்சீட்டுப் பெறுவோர் தம் புகைப்படம் இரண்டு பிரதிகள் கொடுத்து மற்ற விபரங்களை எழுதி மனுக்கொடுத்துக்கொள்ளவேண்டும். அயல்நாடுகளுக்குச் செல்வோர் கொடுத்துக்கொள்ளவேண்டிய விபரங்களையும் தருதல் வேண்டும். அவற்றில்ஒருபுகைப்படத்தைத்தம்அலுவலகப் பட்டியலில் ஒட்டி வைத்துக்கொண்டு மற்றதை அனுமதிச் சீட்டில் பதித்து அதிலும் முத்திரையிட்டு வழங்குகிறார்கள்.

தென்னாட்டு மகந்து வந்திருக்கிறார்கள் என்று அறிந்தவுடனே அவ்வூரில் உள்ள அதிகாரிகள் எல்லோரும் வந்து

கண்டு வணக்கம் தெரிவித்துக்கொண்டார்கள். அடையாளச் சீட்டுக்களையும் உடன்வந்த வழிகாட்டி முதலியோருக்கு அனுமதிச் சீட்டுக்களையும் விரைவில் வழங்கி உதவினர். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமும் மற்றும் பலரும் சேர்ந்த யாத்திரைக் கோஷ்டி அங்கு வந்திருப்பதையும் இன்னதேதியில் மிலத்தைவிட்டு கயிலையை நோக்கிப் புறப்பட்டுச் சென்றது என்ற விபரத்தையும் கம்பியில்லாத் தந்தி மூலம் அரசாங்கத்துக்கும் வானொலி நிலையத்தாருக்கும் அறிவித்தனர். வானொலியில் இரண்டு நாட்கள் இந்தச் செய்தியை ஒலிபரப்பினர்.

## உணவுப்பொருள் நிறைவுசெய்தல் :

உணவுப்பொருள்களில் ஏதாவது குறைபாடு இருந்தால் மிலத்திலேயே வாங்கிவிடவேண்டும். விலை அதிகமாகத் தான் இருக்கும். பொருள் விலையைவிட அதைத்தூக்கி எடுத்துவருவதில் கொடுக்கும் கூலியும் விலையோடு சேர்த்து அதற்கேற்ப லாபமும் கூடுவதால் விலை அதிகமாகத் தோன்றும். வேண்டிய பொருள்களை இங்கு வாங்கி நிறைவுசெய்து கொள்ளாவிட்டால் வழியில் தர்ச்சன், ஞானிமா, தக்களக்கோட்டை மண்டிகளில் சிலபொருள்களை வாங்கிக்கொள்ளலாம். ஆனால் நம்நாட்டுத் தேவைப் பொருள்கள் அங்குக் கிடைக்காது. பொதுவாகப் புளி, மிளகாய், கடுகு முதலியவை என்னவிலை கொடுப்பதாயிருந்தாலும் கிடைப்பதரிது. இருந்தாலும் இரண்டொரு பலமே கிடைக்கும். பார்லிச்சத்துமா பார்லியும் பட்டாணியும் வறுத்து அரைத்தமா, ஓரளவு கோதுமைச்சத்துமா, சிலவகை பிஸ்கோத்து சோப், வெல்லம், சீன Brick டீ இதுபோன்றவைதான் அங்குக்கிடைக்கும். வால்கோதுமை, பார்லி, பட்டாணி இவையும் கிடைக்கும். இங்கிருந்து

நமது வழிச்சேலவும் ஒருமாதத்துக்குமேல் ஆகும் ஆகை யாலும் வழியில் ஏதாவது சிறிதுதடையிருந்தாலும் தங்கித் தான் செல்லநேரிடும் ஆகையாலும் இதை எல்லாம் எதிர் பார்த்து 45 நாட்களுக்கு மேற்பட்ட தேவைக்கு நம்மிடம் எல்லாப் பொருள்களும் இருத்தல்வேண்டும். மண்ணெண் ணெய் விளக்கு (ஹரிக்கேன் விளக்கு) அடுப்பு, அவை களுக்கு வேண்டிய மண்ணெண்ணெய், நெருப்புப்பெட்டி இவை இன்றியமையாதன. தேவைக்குமேல் ஒருசிறிது அதிகமாகவே எடுத்துப்போதல் வேண்டும். பொதுவாக யாக் முதலியவற்றில் எடுத்துப்போக நேரிடும். ஆகை யால் எல்லாப் பொருள்களையும் பனி, மழையில் நனையாத எண்ணெய்த்துணிப் (Oil Cloth) பைகளில் இட்டு எடுத்துச் செல்லுதலே மேலாகும்.

பெட்டிகள், தகரங்கள், கண்ணாடிக்குடுவைகள் எல்லாம் உடைந்துபோகும். பிஸ்கோத், (பெப்பர்மிண்ட்) மிட்டாய், சாக்லெட், எலுமிச்சை ஊறுகாய், நுகர் உப்பு (Smelling Salt), தட்பவெப்பகுப்பியில் (Thermos Flask) வெந்நீரோ, தேநீரோ, காப்பியோ இதுபோன்ற சூடான குடிநீர் இவைகளை ஒரு பையில் போட்டுத் தோளில் இட்டுக்கொள்ளுதல் வேண்டும். மிக உயரமான பல பகுதி களில் செல்லும்போழுது மயக்கம், தலைச்சுற்றல், வயிற் றுப்புரட்டல் முதலியவைகளில் ஏதாவதொன்று ஏற்படும். அதுவல்லாது காலையில் உணவுகோண்டால் பிறகு மாலையில் தங்குமிடங்கண்டு தங்கும்வரை பசிக்கு உணவுப் பொருளும் உடனிருத்தல் வேண்டும்.

கூலிகளுக்குச் சட்டைகள் :

இவற்றிற்கு ஏற்ப, மேலேசோல்லியபடி சில உணவுப் பொருள்களும், மண்ணேண்ணேயும் இங்குவாங்கி நிறைவு

செய்யப்பட்டது. சிலர் கம்பளிச் சட்டைகள்கூட வாங்கிக் கொண்டார்கள். தண்டிக்காரர்கள் " குளிரால் விறைத்துப் போகிறோம் ; இனிமேல் வழியில் குளிர் மிக அதிகமாக இருக்கும்; அதற்குப் போர்வைவாங்கித்தரவேண்டும். இனு மாகவே வழங்கவேண்டும். இல்லையேல் எங்கள் கூலியிலா வது ஈடுசெய்துகொள்ளலாம். ஆனால் சுமந்து பிழைக்கும் எங்களிடம் பெரிய மகத்துவான அவர்கள் கணக்குப் பார்த்துப் பிடித்தம் செய்வார்களா? எப்படியோ உதவி வேண்டும் " என்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தினிடம் வந்து கேட்டார்கள். அவர்களுக்கு ஆளுக்கொரு கம்பளிப் போர்வையும், முழுக்கை கம்பளிச்சட்டை (Sweater) யும் வாங்கி வழங்கினார்கள்.

## மிலத்தில் விருந்து :

இவைபோன்றபொருள்களைச் சேகரிப்பதிலும், மூட்டை சுமக்கவும் உயரமான கணவாய்ப் பகுதிகளைக் கடக்கவும் உதவியாகப் போதிகுதிரைகளும், ஏறுகுதிரைகளும், கூலி ஆட்களும் திட்டம் செய்வதிலும் நான்கு ஐந்து நாட்களாகி விட்டன. கயிலைக்கு அவ்வூரைவிட்டுப் புறப்படுமுன் தான் அளிக்கும் ஒரு விருந்தை ஏற்றுக்கொள்ளவேண்டுமேன் றும், அவ்வூரில் ஒரு சத்சங்கம் நடத்தித்தரவேண்டு மென்றும், அவற்றில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமும் எழுந்தருளியாகியிருந்து ஆசி வழங்கவேண்டுமென்றும் ஸ்ரீ பகத்சிங்பாங்தே கேட்டுக்கொண்டார்.

அவ்விதமே 19—7—1959 இரவு ஸ்ரீ பகத்சிங்பாங்தே வீட்டில் சத்சங்கம் நடத்த ஏற்பாடாகி இருந்தது. அவர் வீட்டின் முன்னிடத்தில் ஒரு பெரிய கூடாரம் அமைத்து

அதில் இராமர், கிருஷ்ணர், சிவபார்வதிப்படங்கள் தொங்க விட்டு விளக்குகள் ஏற்றிவைத்து வழிபாடு பஜனைகள் நடத்த ஏற்பாடு செய்துவைத்திருந்தார்.

விருந்து :

இரவு 7 மணிக்கு நாங்கள் தங்கியிருந்த பள்ளிக்கூடத்திலிருந்து, ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் தண்டியிலும் மற்றவர்கள் கால்நடையாகவும் அங்குச்சென்றோம். ஸ்ரீ பாங்தே முன்முகப்பிலேயே ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தை முறைப்படி வரவேற்று அழைத்துச்சென்ருர். மேல்மாடியில் எல்லோரும் அமர சுற்றிலும் இருக்கைகள் அமைத்து முன்னே உணவுப் பொருள்வைத்து உட்கொள்ள வசதியாகப் பீடங்கள்போட்டு வைத்திருந்தார். வானொலிப் பெட்டியும் இயங்கிக்கொண்டிருந்தது. உணவுவைக்கும் பீடங்களின்மீது வெள்ளைத் துணிபோட்டு மூடிவைக்கப்பட்டிருந்தது. ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானமும், சுவாமி வித்யாநந்தாவும் அமரத் தனித்தனி உயர்வகை ஆசனங்களும், மற்றவர்கள் இருபுறமும் அமரக் கூடியதாக இருக்கைகளும் ஏற்பாடாகியிருந்தது. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தையும் வித்யாநந்த சுவாமிகளையும் மற்றவர்களில் தென்னுட்டிலிருந்து வந்த எங்களையும் அழைத்துவந்து உரிய இடங்களில் அமரச்செய்தார். சிறிதுநேரம் பேசிக்கொண்டிருந்தார். பிறகு வேலையாள் ஒருவர் கெண்டியில் தண்ணீர் எடுத்துவந்தார். மற்ருெருவர் கீழே சிந்தும் தண்ணீரை ஏந்தப் பாத்திரம் எடுத்து வந்தார். மற்ருெருவர் கைதுடைத்துக்கொள்ள வெளுத்த துண்டு ஒன்று ,எடுத்துவந்தார். ஒவ்வொரு விருந்தினரிடமும் சென்று சென்று ஒருவர் தண்ணீர்விட மற்ருெருவர் அதை ஏந்துவர். மூன்ருமவர் கை வாய் துடைக்கத் துண்டு கொடுத்து உதவுவர்.

இவ்விதம் கைசுத்தம் செய்துகொண்டதும் அவரவர் முன்னுள்ள உணவுப்பீடத்தின்மீதிருந்த மேல் துணியை எடுத்தார். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் முன்னுள்ளதில் பலவகைப் பழங்களும், கல்கண்டு. உலர்ந்ததிராக்ஷை முதலியவைகளும் மற்றவர்கள் முன்னிலையில் சாதம், ரோட்டி, கறிவகைகளும் இருந்தன. நம்நாட்டு முறையில் அரிசிச் சாதம், போண்டா, மோர்க்குழம்பு முதலியவையும் வடநாட்டு முறையில் தித்திப்புப் பண்டங்களும் இருந்தன. முதல் அமைப்பில் பீடத்தின்மேல் துணிபோட்டிருந்ததைப் போல இருந்த மேசையின்கீழ் எதிர்பாராதவகையில் இவ்விதம் உணவுப்பண்டங்களும் பழங்களும் திடீரெனத் தோன்றியதுபோல இருந்தது.

## வழிபாடு :

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் தங்கள் முன்னே வைக்கப்பட்டிருந்த பழங்கள் முதலியவற்றில் ஒருசிறிது எடுத்துவைத்துக்கொண்டு மற்றவற்றை அங்குக் கூடியிருந்த மக்களுக்கு வழங்கச்செய்தார்கள். அம்மக்களும் ஒரு பெரிய மகந்தின் பிரசாதமாகக்கருதி விரும்பி வாங்கி ஏற்று மகிழ்ந்தனர். விருந்து முடிவில் ஏலக்காய், கிராம்பு, ஜீரகம், மிளகு, பெருஞ்சீரகம் முதலியன வழங்கப்பட்டன.

இதுபோன்றே ஸ்ரீ பாங்தேயின் உபசரிப்பு மிகவும் மேலானதாகவும் அன்பின் அறிகுறியாகவுமே இருந்தது. தமது இடத்திற்கு அருட்பேரியார் வரும்படியான வாய்ப்புத் தனக்குக் கிடைத்தது குறித்துப் பெருமகிழ்ச்சி அவர் சொல்லிலும் செயலிலும் வெளிப்பட்டது. இதுமுடிந்ததும் கீழே வீட்டின் முன்னிடத்தில் அமைக்கப்பட்டருந்த கூடாரத்தில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திற்கும் சுவாமி வித்யாநந்தாவுக்கும் முன்போலவே பூஜை செய்யும்

இடத்தின் முன் உயர் ஆசனங்கள் அமைத்து மற்றையோர் அமரக் கீழே விரிப்புக்கள் போடப்பட்டிருந்தன. சுவாமிகள் தெய்வத் திருவுருவப் படங்களுக்குத் தூபதீபங்கள் காட்டி வழிபாடு செய்தார்கள். பிறகு வேத உபநிஷத வாக்கியங் களும் திருமுறை முதலிய தோத்திரப் பாடல்களும் அவரவ ரும் பாடினர்.

## வரவேற்புரை :

வழிபாட்டு முடிவில் ஸ்ரீ பாங்தே அப்பகுதிக்கு பெரிய மகான்கள் வருகைதருவது அரிதென்றும் சென்ற ஆண்டில் துவரகா ஸ்ரீமத்சங்கராசாரியசுவாமிகள் இதேபோலக்கயிலை யாத்திரையை மேற்கொண்டு வந்திருந்தார்கள் என்றும் இவ்வாண்டு தென்னாட்டிலிருந்து ஒரு பெரிய மடாதிபதி எழுந்தருளி வந்திருப்பதாகவும் தாங்கள் - அப்பகுதி மலைவாசிகள் - செய்த தவப்பயனால் இதுபோன்ற பெரிய வர்கள் தரிசனமும் ஆசியும் தங்களுக்குக் கிடைப்பதாக இருந்தது என்றும் அந்த வாய்ப்பை உண்டுபண்ணிக் கொடுத்த கயிலாயபதிக்கும் சுவாமி ஸ்ரீமத் வித்யாநந்தா வுக்கும் உரிய வணக்கங்களைத் தெரிவித்துக்கொள்வதாக வும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் ஆசி வழங்கவேண்டு மென்றும் கேட்டு வரவேற்புரை வழங்கினார்.

## ஆசியுரை :

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் தம் ஆசியுரையைத் தமிழில் அருளிச் செய்தார்கள். உடன்வந்த சென்னை சர்மாவால் இந்தியில் மொழிபெயர்க்கப்பட்டது. அதன் சுருக்கம் :-

"நமது பாரத தேசம் தேய்வபக்தி நிறைந்த தேசம். தேய்வபக்தியே இந்தியப்பண்பாடும், நாகரிகமுமாகும். அப் பண்பாடுகேடாது இந்த இமயஉச்சியிடத்திலும் நம்மவர்கள் வாழ்வதுபெருமகிழ்ச்சிக்குரியது. அதிலும்சேல்வச்சேழிப்பு உடைய பாங்தே அவர்கள் தோழிலதிபராக இருந்தும் தேய்வபக்தியும் அடியார்களிடம் ஈடுபாடும் உடையவராக இருப்பதும் மகிழ்ச்சி அளிக்கிறது. திரிசூலியும், நந்தா தேவியும் எழுந்து நின்று அருள் வழங்கும் இந்தநாட்டு மக்கள் என்றும் இன்பம் பெருக நல்லன எல்லாம் பெற்று வாழ்வார்களாக. பாங்தே குடும்பத்தினர் மேலும் இன் னலங்கள் பல பெருக வாழ்வார்களாக. சோக்கலிங்கப் பெருமான் திருவருள் நிறைவதாக. வாழ்க உலகேலாம்".

## பதிலுரையும் பஜனையும் :

சுவாமி வித்யானந்தா அவர்கள் "இதுபோன்ற வாய்ப்புக்கள் எல்லோருக்கும் கிடைத்தல் அரிது. இப் பகுதிகளுக்குக் கயிலை யாத்திரை வழியில் ஆண்டுதோறும் பலரும் வந்துகோண்டே இருக்கிறார்கள். ஆனால் உண்மை அடியார்களும், அருட் பீடத்தில் அமர்ந்து அருளரசு ஓச்சும் ஞானச்சேல்வர்களும், சமயத்தலைவர்களும் வருதல் அருமை. வருவார்கள் என்று எதிர்பார்ப்பதும் முடியாது. அவர்களுக்கேல்லாம் அவரவர் உள்ள இடத்தில் அங் கங்கும் பல வேலைகளிருக்கின்றன. பலஆயிரக்கணக்கான அன்பர்களுக்கு நல்லுரை வழங்கியும் தரிசனம் தந்தும் அருள்பாலித்தல் வேண்டும். அதையேல்லாம் ஒதுக்கி விட்டு இவ்வளவு தோலைவு வருதல் அவர்களுக்கு இயலாது. கயிலை யாத்திரையில் பேரார்வம் இருப்பதா லேயே சேன்ற ஆண்டில் துவாரகை ஸ்ரீமத் சங்கரா சாரிய சுவாமிகளும், இவ்வாண்டு தேன்னாட்டுப் பேரிய

மடத்தின் அதிபராகிய ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமும் எழுந் தருளி வந்திருக்கிறார்கள். இந்த அரியவாய்ப்புக்களை மிலம் வாசிகளாகிய நீங்களும் பயன்படுத்திக் கொண்டிருக் கிறீர்கள். இந்த வாய்ப்பும் தானாகவே உங்களுக்குக் கிட்டியிருக்கிறது. எல்லோரும் அவர்களுக்கு வாழ்த்துக் கூறுங்கள். யாத்திரை வெற்றிகரமாக முடிவடைய எல் லோரும் இங்குக்கூடி பிரார்த்தனை நடத்துவோம். 'போலோ மகாத்மாஜிக்கி ஜே' என்றார்கள். "ஜே ஜே" என்று ஜெயகோஷம் ஒரு பெரிய மகிழ்ச்சி ஆரவாரமாகச் சிறிது நேரம் ஒலித்துக்கொண்டே இருந்தது. பிறகு சுவாமிகள் துளசி இராமாயணப் பகுதிகள், பகவத்கீதை இவற்றி லிருந்து பல சுலோகங்களை அவர்களுடைய இனிய குரலில் எடுத்துப்பாடினார்கள். யாங்தேயும் மனமுருகிக் கண்ணீர் வர ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருவடிகளில்வீழ்ந்து வணங்கி ஆசி பெற்று வழி அனுப்பினார். தொடர்ந்து அங்கு இரவு வெகுநேரம் பஜனை நடந்துகொண்டே இருந் தது. இது மிக உருக்கமான-அடக்கமான வரவேற்புத்தான். ஆனாலும் அதிலிருந்த உண்மை வெளிப்பாடு எல்லோ ருடைய மனதையும் கவரக் கூடியதாக அமைந்தது. நாங்கள் தங்குமிடம் வந்து சேர்ந்தபொழுது இரவு மணி 12. அன்று அங்கு அந்த நேரத்தில் அதிகக் குளிர் இல்லை. பனி முட்டம் இருந்தது. எங்கள் மீதுள்ள கருணையினால் தான், பனி, மழை, நடுக்குங் குளிர் எதுவுமில்லாது அந்த நடுநிசி நேரமும் உதவிசெய்தது.

## உலகின் பெருமை :

அங்குத் தங்கிய நாட்களில் பாராயணத்தில் வந்த திருமுறைச் சிந்தனைகள் பல. அவற்றுள் :-

## வந்தான், படுத்தான் :

செவ்வம், கல்வி, அழகு, ஆண்மை முதலிய சிறப்புக்களாலும் மற்ற எல்லாவகையாலும் சிறந்த ஒரு தலைவன். அழகிய காதல் மனைவியும் அவனுக்குண்டு. அன்புக் குழந்தைகளுமுண்டு. அவனை விரும்பிப் பாராட்டும் உற்றார் உறவினர் பலருமுண்டு. ஒன்றாலும் அவனுக்குக் குறைவே இல்லை. எல்லாவகையாலும் நிறைவும் இன்பமுமே நிறைந்திருந்தன. மகிழ்ச்சியோடு வெளியிற் சென்று வந்தான். சென்ற காரியம் எளிதில் இவனுக்குப் பெருமை தர வீடு திரும்பினான். வாயிலிலேயே அன்பு மனைவி மன நிறை காதலோடு பெருமையாக வரவேற்றாள். இனிய மொழி பல புகன்றாள். பசித்திருப்பானே என்று அருமையாக அடுக்களை நோக்கி அழைத்தாள். அங்கு அவன் உண்பதற்கு அறுசுவை உண்டிகளும் ஆக்கப்பட்டிருந்தன. கலமும் எடுத்து இடப்பட்டிருந்தது. அவன் எழுந்து நடந்துவந்தான் மகிழ்ச்சி பொங்க. ஆசையால் அவன் மனைவி ‘ வருக ’ என மீண்டும் அழைத்தாள். கை கால் முகம் கழுவத் தண்ணீர் எடுத்துவந்து தந்தாள். அவனும் உடலுறுப்புக்களில் தண்ணீர்விட்டுக் கழுவித் துடைத்துக் கொண்டான். அவன் மார்பின் இடப்புறத்தில் சிறிது வலி. அப்படியே அங்கே கீழே படுத்தான். அவ்வளவுதான். அடுக்களை செல்லவில்லை. அறுசுவை உண்டி கொள்ளவில்லை. மடக்கொடிமாதரான் (மனைவி) தரும் மெல்லிய இன்பத்திற்காகக் காத்திருக்கவில்லை. படுத்தவன் மீண்டும் எழுந்திருக்கவே இல்லை. உணர்வு தேய்ந்தது. உயிர் உடலை விட்டு நீங்கிற்று, சில விநாடிகளில் அவன் இவ்வுலகை நீத்துச் சென்றுவிட்டான். மனைவி மக்கள் பதறி அழுதார்கள். உற்றார், பெற்றார் எல்லோரும் அலறினர். கீழேவிழுந்து புரண்டு அரற்றினர் பலர்.

## உயர்திணையிலிருந்து அஃறிணை :

ஊர் கூடியது. அவனுக்கிருந்த உலகச் சிறப்புக்கள் அழிந்தன. அவனுடைய உண்மைப் பேயர் மாறியது. உயர்திணையிலிருந்து அஃறிணையானுன். அவன், அது ஆயிற்று. எல்லோரும் வேறு பேயரிட்டனர் (பிணம்) சங்கோலித்தது. அதனை எடுத்துக் குளிப்பாட்டி சந்தனம் பூசி மலரிட்டுச் சுடுகாட்டிற்குச் சுமந்துசென்றனர். மனைவி முதலிய பெண்டிர் பலரும் வீட்டோடு நின்றுவிட்டார்கள். மைந்தரும் மற்ற உறவினர்களும் இடுகாடுவந்தனர். தீயிட்டுக்கொளுத்தினர். இதுமுடித்து நீரில் மூழ்கினர். அவன் நினைப்பும் ஒழிந்தது. அவன் பெற்றிருந்த போன்னும் மணியும் கூட அவனுடன் வரவில்லை. ஆனுல் அவன்செய்த நல்வினை, தீவினைப் பயன்கள் மட்டிலுமே புண்ணியபாவங்களாக உடன்வந்தன.

## உலகப்பெருமை :

அவன் சிறந்து வாழ்ந்தான். இவ்வுலகிற்கு ஒரு பேருமை உண்டு. உலகத்தில் தோன்றிய உயிர்கள் பிறந்து பிறந்து இறப்பதே அப்பேருமை. உலகந்தோன்றிய நாளிலிருந்து இன்றுவரை உயிரோடிருப்பவா யாரும் இல்லை. இப்படி இறப்பதால் பேருமை இழப்பது எது? அது அந்த உடம்புக்கூடேயாகும். அதற்குள் உயிர் இருக்கும்போழுதுதான் சிறப்புக்கள் எல்லாம். அணிகலன் களும், நறுமணக் கலவைகளும், பிற நலன்களும் உயிர் கூட்டைவிட்டுப்போனதும் எல்லாம் அப்போழுதே கழிந்து விடுகின்றன.. இங்கே சிறப்பாக வாழ்ந்த அந்த உயிர் பின்னும் சிறப்பாக வாழவேண்டாமா? அப்படிச் சிறந் திருக்க என்னசேய்தல் வேண்டும்? அப்படிச் சிறந்துவாழ

உதவக்கூடியது எது ? இப்பெருங்கேள்விகளுக்கு விடை தெரியவேண்டாமா ?

## புணையும் துணையும் :

உடல் எவ்விதம் உயிர்சேர்ந்த காலத்தில் நலம் பெற்றதோ அதேபோல உயிர்க்குச் சிறப்பு அது இறைவனை நாடினுல்தான். அதுதான் உயிருக்கு உறுதிதரவல்லது. அதற்காக நாம் செய்யவேண்டுவதெல்லாம் அவன் நாம மந்திரத்தை நினைத்தலும், சிந்தித்தலுமே யாகும். அந்தச் சிந்தனை (நம்மை) அவ்வுயிரை ஈடேற்றும். அதுவும் இடைவிடாத சிந்தனையாக மாறவேண்டும். இடைவிடாச் சிந்தனை நிலைத்தால்தான் புலன் ஐந்தும் மாறிப் போறிகலங்கிய அந்தநேரத்தில் அறிவும் உணர்வும் குறையும் அப்பொழுதும் அவன் நாவும் சிந்தையும் செய்த பழக்கத்தால் நாமமந்திரம் அவன் நினைவிலிருந்துகொண்டே இருக்கும். அந்த நன்னினைவே பெருமானை அழைக்கும். இறைவன் அஞ்சேல் என்று அங்கு வந்து தோன்றுவான். நம்மைத் திருவருள் விலாசத்தால் தன்வயமாக்குவான். திருவடிப்பேரானந்தப் பெருவாழ்வு கிட்டும். உடலோடு இருந்த சிறப்புக்களைவிட என்றும் நிலைத்த பேரின்பச் சிறப்பை அடையும் அந்த உயிர். ஆகையால் உயிருக்கு இம்மையிலும் அம்மையிலும் வாழ்வளிக்கவல்லது அந்தத் திருநாம மந்திரமே. அதுவே புணையும் துணையுமாகும்.

## இராமனுக்கு ஒரு புணை :

இராமன் மனிதனுகப் பிறந்தான். மனிதனுக வாழ்ந்தான். உலகியல் தருமத்தை நடத்திக்காட்டி நிலைநாட்டினுன். அந்தப் பிறவி ஒரு தெய்வப் பிறவி. அவதாரநிலை.

திருமாலின் பத்து அவதாரங்களிலே ஒன்று. அவனுடைய திருநாமச் சிந்தனை உலகமக்களின் உயிர்களை ஈடேற்ற வல்லது. அதுவே அவ்வுயிர்களுக்குப் புணையும் துணையு மாக அமைந்து அருளவல்லது. ஆனால் அந்த நாம மந்திரப் பேயர் தாங்கிநின்ற அத் திருவுருவம் ஒரு ஆற்றை (கங்கையை)க் கடப்பதற்கு ஒரு புணையும் துணையும் தேடிற்று. கங்கைக் கரையில் நின்ற படகு அவனுக்குப் புணையாக, தேப்பமாக, குகன் மூலம் அவனுக்குத் துணை யாக நின்று உதவி செய்தது.

### மகா மந்திரம் :

இங்கே நாம் அறியவேண்டுவது ஒன்றுண்டு. நேரே இறைவன் திருவருளைப் பெற்றவர்களாக இருந்தாலும், பிறக்கும்போழுதே ஆன்மஞானம் உடையவர்களாகவே பிறந்திருந்தாலும் அவர்களுக்கும், அவர்கள் ஆன்ம ஈடேற்றத்துக்கும் ஒரு துணைவேண்டும்; வழிகாட்டி ஒருவன் வேண்டும். அந்தத் துணைவன்தான் அவனுக்கு வாய்க்கும் நல்ல ஞானகுரு. அவனைக் கடத்திச் செல்ல ஒரு புணை வேண்டும் அதுதான் நாம மந்திரம் - பஞ்சாட் சரம். இந்தப் புணையில் பூட்டி நம்மை ஈடேற்றிவைப்பவன் ஞானகுரவன். பிறவிப் பெருங்கடலிலே மும்மலங்களாகிய ஆணவம், கன்மம், மாயை என்னும் வலிய கல்லில், நல்வினை தீவினையாகிய கயிறுகளைக்கோண்டு கட்டிக் கிடத்தப்பட்டு அலைக்கழிக்கப்படும் உயிர்களைக் கரை யேற்றவல்லது அந்தத் திருநாம ஐந்தெழுத்தேயாகும். அம்மந்திரம்தானே அன்று அப்பர் சுவாமிகளைக் கடலி னின்றும் கரையேற்றிக் காத்தருளியது. அதுவே உயிர் களைக் கரையேற்றும் மகாமந்திரம். அதுவே பிறவிப் பெருங்கடற்கு நாவாய்போன்றது.

அதை உபதேச வழியிலே பேறுதல்வேண்டும். ஞான குருமுகமாகக் கேட்டல்வேண்டும். பிறகு இடைவிடாது சிந்தித்துச் சித்திபேறுதல்வேண்டும். அந்த நாம ஜபமே அகப்பூசை. அந்த மந்திரத்தின் வணக்கமாக வெளியில் வழிபாட்டு முறையில் செய்யப்படுவதே புறப்பூசை. இந்த வழிபாடுகளால்தான் உயிர்கள் உய்திபெறும். இடைவிடாது ஓதும் பழக்கத்தால் அம்மந்திரம் இறக்கும் தறுவாயிலும் நம் நினைவில் பதிந்துநிற்கும். நாம் மறந்தாலும் 'நா மறக்காது. நா மறக்காத பழக்கம் அதற்கு வேண்டும். அண்மையிலே நம்மோடு இருந்து வாழ்ந்து தேச விடுதலைக்கு வழிகாட்டி நம்நாட்டிற்குச்சுதந்திரம் வாங்கித் தந்த உத்தமர் காந்தி அடிகளும் உயிர்விடுங் காலத்தில் ராம மந்திரம் ஜபித்துக்கோண்டே இறந்தார் என்ற செய்தி அறிவோம். இது எப்படி வந்தது. அவர் எப்போழுதும் இடைவிடாது செய்துவந்த ஜபத்தால்தானே ? அரசியலில் அவருக்குக் கிடைத்த வெற்றிக்குக் காரணமும் அந்தச் சிந்தனைதானே.

இயற்கையாக மரண காலத்தில் நம்மைச் சுற்றிப் பெண்டிரும் பிள்ளைகளும் உற்ருரும் உறவினர்களும் துயரந்தோய அழுது அரற்றிச் சூழ்ந்து நிற்பர். நமக்கு மாடு மனை சுற்றம் இவற்றின்மீது உள்ள பாசமும், இவைகளை விட்டுவிட்டுச் செல்லவேண்டுமே என்ற துன்பமும். சேர்ந்து நம்மைத் தாக்கும். எல்லாம் குழப்பமாக நம்மை வாட்டும். இந்தச் சூழ்நிலையிலும் நம்முடைய சிந்தை கடவுள் நினைவுபெறுதல் வேண்டுமே ? "அறிவு மறக்கும்போழுது - இறக்கும்போழுது என் முன்னே வரல்வேண்டும் வருந்தியுமே" என்று வேண்டு கிருர் சாமுசித்தரான அபிராமிப்பட்டரும். இதுபோன்ற அருளாளர் பலருமே கலங்குகிருர்கள் மரணகால நினைவு

பெருமான் நாம நினைவாக நிலைத்தல் வேண்டுமென்று. அதற்கு நாமும் பாடுபடுதல்வேண்டும். அதற்காக உழைத்துப் பழகுதல்வேண்டும். உய்திபெறுதல்வேண்டும். அதற்குச் சாதனை அவசியம். அந்தச் சாதனைகளில் ஒன்று இதை ஒத்த சிறந்த பெரிய யாத்திரையாகும்.

இதுபோன்ற சிறந்த கருத்துக்கள் பலவும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் திருமுறைப் பாராயண முடிவிலும் இடைநேரங்களிலும் உபதேசங்களாக வெளிவரும்.

மிலம்விட்டு :

20—6—59 திங்கட்கிழமை உச்சிப்பொழுது 1 மணி அளவில் அவ்வூர்ப் பெரியவர்கள் வந்து வழியனுப்ப ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் கயிலைநோக்கி எழுந்தருளினார்கள். அன்று காலையிலிருந்து சிறு மழை தூறிக் கொண்டே இருந்தது. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் தண்டியிலும் மற்றவர்கள் குதிரைமீதும் சென்றோம். மூட்டைகளும் நிறைபார்த்துக் குதிரைகள்மீது ஏற்றப் பட்டன. வழி கோபாங் (உண்டாதுரா ஆறு) கரையை ஒட்டியே செல்கிறது. களிமண் பகுதி இரண்டு கல் தொலைவு வரை இருந்தது. அதுவரையிலும் மழையும் தூறிக்கொண்டிருந்தது. பிறகு மழையும்நின்றது. கல்லும் மண்ணும் கலந்த பகுதியில் செல்லலானோம். இவ்வழியே செல்வதிலும் ஒரு சிறு துன்பம். பாறைகளை உடைத்து வழி அமைத்திருக்கிறார்கள். பாதை அகலம் 3, 4 அடி தான் இருக்கும். மேலே உடைத்தெடுக்கப்பட்ட பாறைப் பகுதிகள் முண்டும் முடிச்சுமாக நீண்டு நிற்கின்றன. நடந்து செல்லலாம். ஆனால் குதிரைமீது இவர்ந்து செல்லுதல் இயலாது. அப்படிச் சென்றால் மேலே நீண்டு நிற்கும் கற்பகுதியில் முட்டித் தலை உடைந்துவிடும்.

ஆகையால் அங்கேல்லாம் குதிரையைவிட்டிறங்கி நடந்து தான் செல்லவேண்டும். அப் பகுதியில் அவைகளைக் கடந்து குதிரைகளை நடத்திச் சென்று குதிரைக்காரர்கள் அப்பால்நின்றிருப்பர். பிறகு அவைமீது ஏறிக்கோள்ளலாம்.

ஸ்வாரிக் குதிரை :

குதிரை சவாரிக்கு அவரவரும் ஒவ்வோன்று தேர்ந்து கோள்ளுதல் வேண்டும். அப்படித் தேர்ந்துகோண்ட குதிரைமீது நாம் ஏறப்போகிரேும் என்பதன் அடையாள மாக முறட்டுக் கம்பளி அல்லது மழைச் சட்டை இது போன்ற ஏதாவது ஒன்றை சேணத்தில் அமரும் இடத்தில் இட்டுச் செல்லுதல்வேண்டும். அந்தக் குதிரை எவ்வளவு தோலைவு வந்தாலும் அதில் அதைக் குறிப்பிட்டவர் தவிர வேறு யாரும் ஏறமுடியாது. வழிகாட்டியாக வருபவன் சொன்னுலோழிய ஒருவரும் ஏறக்கூடாது. ஒருவரும் இல்லாமல் வேற்றுக் குதிரையாக வந்தாலும் வரும். வேறு யார் சென்று ஏறுவதாகச் சொன்னுலும் ஏற்றிக்கோள்ள மாட்டான் அக் குதிரைக்காரன். மீறி ஏறிஞல் ஏறியவர் இறங்கிஞலோழிய மேலே அதைச் செலுத்தமாட்டான். பிடிவாதமும் வீண்சண்டையும் உண்டாகும். சவாரி சேய் பவர்கள் குதிரைக்காரனுக்கு மிட்டாய், ரோட்டி முதலிய தின்பண்டங்கள், சட்டை முதலியன ஒன்றும் இல்லாவிட் டால் பக்ஷிஷ் (இனும்) ஏதாவது தந்துகோண்டேயிருத்தல் வேண்டும். எங்குக் குறைந்தாலும் குறைப்படுவான். சரியாக நடத்தமாட்டான். இறக்கிவிட்டுத் துன்பம் தருவான். பேசிய கூலியோடு முடிவில் பக்ஷிஷும் கோடுத்தாலும் இடையிலும் கோடுத்துக்கோண்டே இருத்தல்வேண்டும். கோடுத்தால் பெற்றுக்கோள்ளும் போழுது மகிழ்ச்சி தோன்ற நிற்பான். நமக்கு உதவிகள்

செய்வான். ஏறுவதிலும் இறங்குவதிலும் கடுமையான ஏற்ற இறக்கங்களிலும் உடன்வந்து கடிவாளத்தைத் தோட்டிழுத்து உதவிகள் செய்வான். குதிரை விட்டிறங்கி நடக்கவேண்டிய கடும் சரிவுப் பாதைகளில் உடன்வந்து கையைப் பிடித்து அழைத்துப்போவான். இது போன்ற சிறு உதவிகள் பலவும் செய்வான், பக்ஷிஷ் இல்லையானுல் அவன் நம்மைப் மதித்துப் பார்க்கக்கூடமாட்டான்.

ஆட்டுமந்தைகள் :

மேலே சொன்னவாறு வழியில் மேலே பாதை நீட்டிக் கொண்டிருக்கும் பகுதிகள் மூன்று இருக்கின்றன. வழியில் இரண்டு சிற்ருறுகள் கோபாங்கில் வந்து கலக்கின்றன. அச்சிற்ருறுகளைக் கடக்க சிறு கம்புகளைப் போட்டு அதன் மீது மண்ணிட்டுவைத்திருக்கின்ருர்கள். நடக்கும்போது பாலம் ஆடும். வழியும் குறுகலானது. திபேத்திலிருந்து வாணிபப்பொருள்களை ஏற்றிக்கொண்டு போதி ஆடுகள் ஆயிரக்கணக்கில் மந்தை மந்தையாக வந்துகொண்டே இருந்தன. அங்கங்கும் வழியிலே மலையை ஒட்டி நின்று நின்று அந்தந்த மந்தையும் கடந்து சென்றதும் மேல்வழியில் செல்லவேண்டியதாயிற்று.

இவ்விதமாக 5 கல் தொலைவு சென்றதும் நவ்காம் என்ற இடத்தில் கோபாங் ஆற்றை ஒட்டித் தங்கினேம்.

முதல் கூடாரவாசம் :

இங்குத் தங்குவதற்குக் கட்டிடங்களோ குகைப்பகுதிகளோ கிடையாது. ஆகையால் கூடாரங்கள் அமைத்துத் தங்கினேம். இதுதான் முதல் கூடாரவாசம். பாதைக்கும்



பால்கங்கை

ஆற்றுக்குமிடையே உள்ள படுகையில் தங்கினேம். தரை சமமாக ஒத்தடியாக இல்லை. ஆற்றை நோக்கிச் சரிவாகவும் மேடுபள்ளமாகவும் இருந்தது. மழைபெய்தால் தண்ணீர் கூடாரத்திற்குள் வந்துவிடும். ஆற்றுத் தண்ணீரும் கலங் கலாக ஓடியது. எங்களுக்கு வழிகாட்டியாக வரவேண்டிய ஜீவன்சிங், விஜயசிங் இருவருக்கும் அனுமதிச் சீட்டு காலத்தில் கிடைக்கவில்லை. ஆகையால் அவர்கள் வராமல் மேலே செல்லுதல் இயலாதென அங்குத் தங்கவேண்டி வந்தது. எங்கள் மூட்டைகளை இறக்கிவிட்டுக் குதிரைக் காரர்கள் போய்விட்டார்கள்.

## முதல் பழக்கம் :

இந்தநிலையில் மேடுபள்ளமான அத்தரையில் முன்பு படுத்துப் பழக்கமில்லாததால் எங்களுக்குத் துன்பமாகவும் நாகரிகக்குறைவாகவும் தோன்றியது. எங்கள் சமையல் கூடாரம் அமைந்த இடத்தில் ஆட்டுப்புழுக்கைகள் கிடந் தன. அதன்மீது தங்குவதும் சமையல் செய்து எடுத்து உண்பதும் அருவருப்பாக இருந்தது. சுத்தம் செய்யவும் முடியாது. வேறு சிறந்த இடமும் அண்மையில் இல்லை. மனதைத் தேற்றிக்கொண்டு எல்லாம் நடைபெற்றன. அன்றிரவு அங்குத்தங்கி மறுநாள் அதிகாலையில் அவ்விடம் விட்டு மேலே செல்வதெனத் திட்டம். ஆனலும் " கயிலை வழியிலே நீண்டதொலைவு வந்துவிட்டோம். அவ்வழி யிலே சிறிது சிறிதாக முன்னேறிவருகிறேம். என்றும் இல்லாத அனுபவங்கள் பல காட்சியாலும், சூழ்நிலையாலும் நமக்குப் புதிது புதிதாகக்கிடைக்கின்றன. வேறு எவ்விதத் திலும் உதவியே எதிர்பார்க்க முடியாத இடத்தில் இந்த இடமாவது கிடைத்திருக்கிறது. இயற்கையோடு இயற்கை யாக வாழக் கற்றுக்கொள்கிறேம் " என்று பலவாறன

எண்ணங்கள் நிறைந்துநின்றன. காட்சியாலும் இட அமைப்பாலும் எங்கள் மனம் என்றும்காணுத இன்பஅனுப வங்களால் நிறைந்திருந்தன.

கலகம் :

மறுநாட் காலையிலேயே குதிரைக்காரர்கள் வந்து விட்டார்கள். அவரவர் ஏற்றிவந்தவற்றுள் சமையல் பொருள்கள் தவிர மற்றவற்றைக் கட்டித் தம்தம் குதிரைமீது ஏற்றவும் தொடங்கினர். இரண்டு நாட்களுக்கு அவர்கள் குதிரைகளுக்கு வேண்டிய காட்டுப் புல்லும் சேகரித்து வந்திருந்தனர். சுவாமிகளை அணுகி "அடுத்த தங்கல் சிர்ச்சின்தானே' என்றனர். "இல்லை. துங்" என்ளுர்கள் சுவாமிகள். "வேண்டுவதில்லை. சிர்ச்சின் போக முடியாவிட்டாலும் செல்ல முடிந்தமட்டும் செல் வோம். எந்த அளவு அதிகத் தொலைவு செல்லமுடியுமோ அந்த அளவு சென்றுவிடுதல் வேண்டும். எங்களால் அதிகமாகத் தாமதிக்க முடியாது" என்றனர் குதிரைக் காரர்கள். மலைவாசிகள் எப்பொழுதுமே உரத்த குரலி லேயே பேசுவார்கள். இந்த இரைச்சல்கேட்டதும் குதிரைக் காரர்கள் எல்லோரும் அங்கு வந்து கூடினர். அங்கு நடப்பதைக் கேட்டனர். எல்லோரும் ஒரே மூகமாக முடிவு தெரிவிக்கலாயினர். சுவாமிகள் 'அவ்விதம் செய்தல் கூடாது.' கணவாய்ப் பகுதிகளில் இரவு நேரங்களில் தங்குதல் துன்பம் தருவதாகும். அதுபோன்ற துன்ப அனுபவங்கள் பல எனக்கு உண்டு. கணவாய்களை ஒரே நாளில் கடத்தல்வேண்டும். ஆகையால் இன்று துங்கில் சென்று தங்கி நாளை அதிகாலையில் புறப்பட்டு இருட்டும் முன்னே மூன்று கணவாய்ப் பகுதிகளையும் (உண்டா, ஜெயந்தி, குங்கிரிபிங்கிரி) கடந்து சிர்ச்சின்

சென்றடையலாம். இல்லாவிட்டால் கணவாய்ப் பகுதிகளில் பனியோ, மழையோ, பேய்க்காற்றோ ஏற்படக்கூடும். அதன்விளைவுபிறகுபெரிதாக இருக்கும். அதைத்தவிர்த்தல் வேண்டும்'' என்று சொன்னார்கள். குதிரைக்காரர்கள் தாம் சொல்லியதையே சொல்லிச்சொல்லி வற்புறுத்தி வந்தார் கள். சுவாமிகள் அதற்கிணங்கவில்லை. ''அப்படி இதற் கிணங்காவிட்டால் நாங்கள் மேலே வரஇயலாது. வந்த வழியே சென்றுவிடுகிறோம்'' என்று சொல்லி குதிரைமீது ஏற்றிய பொருள்களையும் அங்கங்கும் இறக்கிப் போட்டு விட்டுப் போய்விட்டார்கள். இரண்டொருவர் தங்கியதைக் கண்டு மற்றவர்கள் அவர்களை நோக்கிப் பகாடி மொழியில் வசைபாடினர். அவர்களும் முன்னே சென்றவர்களைப் பின் பற்றித் தம்மூருக்கே திரும்பிவிட்டார்கள். சுவாமிகளிடம் கீழ்த்தரமாகநடந்துகொண்டார்கள். புன்மொழிகளும் பேசி னர். சுவாமிகள்அவற்றைக் காதில்வாங்கிக்கொள்ளவில்லை. இதுவும் அவர்களுக்கு நீண்ட அனுபவத்தால் வந்தது தான். இல்லாவிட்டால் சிறிது பதட்டமிருந்தாலும் பெரிய கலகம் ஏற்பட்டிருக்கும். அடிதடியிலும் முடிந்திருக்கும்.

## இனிச் செய்வதென்ன ?

இனி மேற்கொண்டு என்ன செய்வதெனக் கேட் டோம். அதற்கும் சிரித்துக்கொண்டார்கள் சுவாமிகள். ''அவர்களே வருவார்கள். இன்றே வருவார்கள். பொறுத்துப் பாருங்கள். இல்லாவிட்டால் மிலம் சென்று மீண்டும் கூலி ஏற்பாடு செய்துவருதல் வேண்டும். முன் பிருந்த சட்டதிட்டங்கள், நியதிகள் கெட்டுவிட்டன. யாரும் பொதி சுமக்க மறுத்தால் அவனை நாம் ஒன்றும் செய்யமுடியாது. முன்கூலி பெற்றிருந்தால் பிராது செய்து வசூல் செய்யலாம். முன் ஒப்பந்தப்படி வருதல்வேண்டும்

என்று வற்புறுத்தமுடியாது. ஆகையால் இந்த நிலையில் பொறுமையாக இருப்பதுதான் சிறப்பு '' என்றார்கள்.

## பொறுமையின் எல்லையில் :

காலையில் புறப்படுவதென்ற திட்டத்தில் சமைத்து உண்டு மூட்டைகளைக் கட்டிவைத்துவிட்டோம். இந்த நிலையில் மேலே சொன்ன குழப்பம் வந்துவிட்டது. சுவாமிகள் சொன்னதெல்லாம் மனதிலிருந்த துன்பத்தைப் போக்குவதாக இல்லை. நேரம் ஆகஆகத் துன்பமாக இருந்தது. ஒரு நொடி ஒரு நாளாகத் தோன்றியது. இதற்கு மேலாக, எங்களுக்குப் பின் தனி ஏற்பாட்டோடு வந்த சிறு கோஷ்டி ஒன்று அங்கே முதல்நாளிரவு எங்களோடு தங்கியிருந்து காலையில் புறப்பட்டு மேலே சென்றுவிட்டார்கள். ' மேலே என்னசெய்வது. அவரவரால் முடிந்த பொருள்களைச் சுமந்து எடுத்துச்சென்றால் என்ன '' என்று எண்ணவும் அதையே சொல்லவும் முற்பட்டனர் பலர். சுவாமிகள் இதற்கெல்லாம் மறுமொழி சொல்லாமல் பொறுமையே உருவாக முகத்திலே மகிழ்ச்சி தோன்ற எப்பொழுதும்போல் பேசிச் சிரித்துக்கொண்டிருந்தார்கள்.

## உட்டோ, உட்டோ, ஜல்தி ஜல்தி :

இரண்டுமணிநேரம் சென்றது. வீடுதிரும்பிய குதிரைகளில் இரண்டொன்று பாதையில் எங்களிருப்பிடம் நோக்கி வந்தன. பிறகு மற்றவையும் வந்தன. குதிரைக்காரர்களும் வந்தார்கள். மனம் வருந்த எதுவும் முன்னே நிகழாததுபோல இயற்கையாகப் பேசிச் சிரித்துக்கொண்டே மீண்டும் அவரவர் சுமையை அவரவரும் குதிரைமீது ஏற்றினார்கள். சவாரிக் குதிரைகளுக்குச் சேணமிட்டு நிறுத்தினார்கள். தொலைவிலே வழிகாட்டிகள் இருவரும் படைத்

தலைவன் வருவதுபோல குதிரைக்காரர்களை முன்னேசெல்ல விட்டு பின்னேவந்தனர். தங்குமிடம் வந்ததும் '' உட்டோ, உட்டோ, ஜல்தி ஜல்தி '' என்றார்கள். போதிக்குதிரைகள் மேலே விரைந்துசென்றன. யாத்ரீகர்களும் அவரவர் குதிரையில் அமர்ந்து மேலே யாத்திரையைத் தொடங்கினர்.

## தஸ்மைகுருப்யோ நம :

மனக்கலக்கத்தோடு பொழுதுபோகாது வருந்தி இருந்த காலத்தில் சுவாமிகள் அவர்கள் வழியில் அறிவுரைவழங்கினார்கள். அது சிறு கதை உருவில் அமைந்தது.

'' வடநாட்டு சாது ஒருவர் தம்முடைய சீடர் ஒருவருடன் இராமேஸ்வர யாத்திரையை மேற்கொண்டு தெற்கே சென்றார். சென்னையில் இறங்கினார். அவரிடம் கையில் காசில்லை. சீடரிடமும் காசில்லை. பசி காதை அடைத்தது. பலரையும் அணுகி உதவிகேட்டார். அவருக்குத் தமிழ் தெரியாது. இந்தியில் இரக்கமொழி சொல்லி உதவிகேட்டார். அந்த நாட்டினரில் பலருக்கும் இந்தி தெரியாது. அவர் என்னசொல்கின்றார் என்பது புரியாமல் பலரும் அவரைத்தாண்டிச் சென்றுவிட்டார்கள். இந்தி தெரிந்த ஒருவர் வந்தார். இவர்கள் நிலையைக் கண்டார். மனம் இரங்கினார். தன் வீட்டுக்கு இருவரையும் அழைத்துச் சென்றார். கோதுமை ரோட்டியும் கீரும் ( பாயசம் ) செய்து வைத்தார். அவற்றுள் ரோட்டி அதிக அளவும் கீர் சிறு அளவும் இருந்தன. வடநாட்டினருக்கு கீர் அதிகமாகப் பிடிக்கும். குருவும் சீடரும் அழைக்கப்பட்டனர். அப்பண்டங்களை அவர்கள் கையில் கொடுத்து மேல்மாடிப் பகுதியில் சென்று உண்டுகளைப்பாறும்படிச் சொல்லிவெளியே சென்றுவிட்டார் வீட்டுத் தலைவர். இருவரும் மேலே சென்றார்கள்

உணவு உட்கொள்ள அமர்ந்துகொண்டார்கள். வழக்கம் போல துதிப் பாடல்களைப் பாடினர். இருவரும் சேர்ந்தே பாடிமுடித்தார்கள். முடிவில் கீரை எடுத்துத் தம்பக்கத்தில் வைத்துக்கொண்டு “ தஸ்மைகுரவே நம : ” என்றார் குரு. குரு காணிக்கை என்ற பொருளில் அவ்விதம் சொன்னார். சீடரும் அதே வாக்கியத்தைத் திருப்பிச் சொன்னார். ஆனால் பதத்தைப் பிரித்துப் பிரித்துச் சொன்னார். “ தஸ்மை குரவேந - ம(ா) ” என்றார். “ குருவுக்கு இல்லை ” எனக்கே என்று பொருள்படும்படியாயிற்று அச்சொல். இருவரும் அவரவர் சொன்னதையே மீண்டும் மீண்டும் பிடிவாதமாகச் சொல்லிச் சொல்லி முடிவில் அவரவரும் மனமாற்றங்கொண்டு சிறிச் சினந்து பேசிக் கொண்டார்கள்.

அவர்கள் பசி ஆறி ஒய்வுகொண்டிருப்பர். சாதுக்களிடம் சத்விஷயமாக ஏதாவது கேட்டுக்கொள்ளவேண்டுமென்ற எண்ணத்தோடு வீட்டுக்காரரும் அங்கு வந்தார். நடப்பதைக் கண்டார். ரோட்டி கீர் வைத்தது வைத்தபடியே இருந்தன. மனமாற்றத்துக்குக் காரணமென்ன என்று கேட்டார் விட்டுக்காரர். உண்மையைக் காரசாரமாக இருவரும் கூச்சலிட்டுச் சொல்லிக்கொண்டார்கள். அந்த நிலைமையை உணர்ந்து கீர் அதிக அளவு செய்தெடுத்து வந்து கொடுத்தார். அவர்கள் மனவருத்தம் நீங்கி வயிறு கொண்டமட்டும் கீர் குடித்தார்கள். மனமகிழ்வோடு சிறந்த உபதேசமொழிகளையும் சித்தாந்தக் கருத்துக்களையும் இரவு முழுவதும் பேசிக்கொண்டிருந்தார்கள். இதிலிருந்து வட நாட்டுச் சாதுக்களில் பலரும் தென்னாட்டுக்குச் சென்றால், தம்முள்ளே பூசலிட்டுக்கொண்டால் தென்னாட்டு மக்கள் சாதுக்களுக்கு வேண்டிய பொருள்களைக் கொடுப்பர் என்ற எண்ணம் பரவியிருக்கிறது. இதுபோலவே குதிரைக்

காரர்கள் செயலும் இருக்கும்'' என்று கதையை முடித்தார்கள். இக்கதை முடிவில்தான் மேலே சொல்லிய வண்ணம் குதிரைக்காரர்கள் திரும்பவும் வந்து மூட்டைகளையும் எங்களையும் ஏற்றிச்செல்ல இசைவளித்தது.

## ஷிலாங் :

நடுப்பகல் 12 மணி அளவில் நவ்காம் விட்டுப் புறப்பட்டோம். ஆற்றின்கரையை ஒட்டியே செல்லவேண்டியிருந்தது. பெரும்பாலும் இமயவழிகளே இப்படித்தான். வழி ஏதாவது ஒரு ஆற்றின்கரையிலேயே அமைந்திருக்கும். வேறுவிதமாகப்போதலும் முடியாது. நாங்கள் சென்ற வழியில் இருபுறமும் செங்குத்தான மலைப்பகுதிகளும், வழி ஏற்றமும் இறக்கமும், அங்கங்கே மலை அருவிகளும், தரையில் புல்லும் வண்ண வண்ண மலர் நிறைந்த சிறு சிறு செடிகளும் சூடு உறைக்காத வெய்யிலும் இவ்விதமாக அமைந்திருந்தது. இரண்டுகல் ஏற்றமும் அதன் முடிவில் அரைக்கல் இறக்கமும் கடந்துசென்றதும் ஆற்றைக்கடந்து அக்கரைவழியே செல்லவேண்டியிருந்தது. அங்கும் சிலர் வந்து தங்கள் பேசதிகளை இறக்கிவைத்துத் தங்கி சமைத்துக்கொண்டிருந்தார்கள். போதி குதிரைகள் புல்வெளிகளில் மேய்ந்துகொண்டிருந்தன. அந்த இடத்திற்கு ஷில்ாங் என்று பெயர். இவ்வழியில் பெரிய மரங்களே கிடையாது.

## நாட்டுப்பாலம் :

இங்கு ஆற்றைக்கடப்பதற்கு இருகரையிலும் அங்குச் சிதறிக்கிடக்கும் கற்களை அடுக்கி அவற்றின்மீது இரண்டு காட்டுக்கழிகளைப் போட்டு அவைகளின்மேலே தகட்டுப் பலகைக் கற்களை இட்டுவைத்திருந்தார்கள். ஆற்றில்

ஆழம் அதிகமில்லாவிட்டாலும் வேகம் கடுமையாக இருந்தது. பாலத்தில் நடக்கும்போழுது பாலமே ஆடுகிறது. நிதானமாக அதைக் கடத்தல் வேண்டும். குதிரைகளும் மனிதர்களும் தனித்தனியே ஒன்றுஅக்கரை அடைந்தபிறகு மற்ருென்று பின்தொடர்ந்து செல்லவேண்டியிருந்தது.

## சோட்பாணி :

இப்பாலத்தைக் கடந்து சிறிது தொலைவு சென்றதும் பரந்த மைதானமும் அதன் இருபுறமும் உயர்ந்த மலைகளும் இருந்தன. இங்குக் குதிரைகளை சிறிது மேயவிட்டுப் பிறகு மேலே செல்லவேண்டியதாயிற்று. ஒருகல் தொலைவு சென்றதும் அங்கே சோட்பாணி என்ற மலை அருவி உச்சி இடத்திலிருந்து வந்து கோபாங்கில் கலக்கின்றது. அங்கு வழி உயர்ந்து மலைச்சரிவில் செல்லுகிறது. அந்த மலைஉச்சியிலிருந்து சோட்பாணி வருகிறது. அம்மலைமீது மண்ணும் புல்லும் சிறுசெடிகளும் வளர்ந்திருக்கின்றன. ஆனாலும் மண்ணுக்கடியில் உறைபனி இருக்கிறது. அதிலிருந்து உருகிவருவதுதான் இந்த சோட்பாணி. மிலத்தில் கண்டதுபோன்ற அமைப்புடையது இம்மலை. அதன் உச்சிஇடம் கடல்மட்டத்திலிருந்து 14,000 அடிக்கு மேலிருக்கும்.

## விறிழந்த வெய்யோன் :

இங்குச் சூரியன் தன் வீறு இழந்து சந்திரனுக மாறி விடுகிருன். வெய்யில் காய்ந்தாலும் வெப்பம் இல்லை. குளிர்ச்சி அதிகமாக இருக்கிறது. இங்கிருந்து 6, 7 கல் தொலைவில் உண்டாதுரா பனிஉறைப் பகுதி இருக்கிறது.

குளிரும் சிறிது சிறிதாக நம்மைத் தாக்குகிறது. சூரிய ஒளியும் மங்கிய நிலவொளி போன்றிருக்கிறது. எதிரே ஒரு மலை உச்சியில் அது படும்போழுது அங்குள்ள பனி முட்டத்தின் விளைவாக அப்பகுதி முழுவதும் செம்மை படர்ந்து தோன்றும். மலைப் பகுதி செம்மை. மேலே வான வெளி கருமை. இடைவெளியிலும் பனி மேகமுட்டம். இக்காட்சியைக் கண்டு மகிழ்ந்து சென்றதில் வழியின் தொலைவும் நேரமும் தெரியவில்லை. பொதிக்குதிரைக் காரர்கள் குதிரைகளை நிறுத்தி மூட்டைகளைக் கீழே தள்ளி விட்டுக் குதிரைகளையும் அவிழ்த்து விட்டிருப்பதைக் கண்டதும் நாங்களும் அங்கே குதிரையை விட்டு இறங்கி ைேம். அந்த இடம்தான் துங். இங்குச் சில குகைகளும் உண்டு. இதற்குமேல் எரிவிறகு கிடைக்காது. சிறு முட் செடி (டாடு)தான் கிடைக்கும். ஆனால் அவை பச்சை யாகவே இட்டாலும் எரியும்.

### துருத்தியும் காற்றும் :

அந்த இடத்தைச் சுற்றி அரைவட்ட அமைப்பில் ஒரு மலை. எதிரே சுமார் ஒரு கல் நீள அகலத்தில் ஒரு புல் வெளி. அதன்முடிவில் கோபாங் நதி. அதன் அக்கரையில் செங்குத்தான மலை. இதில் எங்களுக்கு அரைவட்ட மலைச் சரிவில் கல்லும் கறடும் மேடு பள்ளமுமான இடத்தில் கூடாரங்களை அடிக்கத் தொடங்கினர் வழிகாட்டிகள். எதிர்ப்புறத்தில் கோபாங் நதி வளைந்து செல்வதாகவும் ஆற்றில் துருத்தி ஒன்று அமைந்திருப்பதாகவும், அங்குப் பசிய புல்லும் நிறைந்திருப்பதாகவும் ஒத்தடியான தரையை உடையதாகவும் எங்களுக்குத் தோன்றியது. வழிகாட்டி களை அழைத்து ''அந்தத் துருத்தியில் கூடாரங்களை அடித்தல்வேண்டும். மேடும் பள்ளமும் கல்லும் நிறைந்த

சரிவில் வேண்டுவதில்லே. இந்த இடத்தில் படுக்க முடியுமா? '' என்று சொன்னேம். ''அங்குத் தாங்கள் சொல்வதுபோல தரை ஒத்தடியாக இருக்கும். மற்றவை எல்லாம் பார்க்க நன்ருக இருக்கும். ஆனல் காற்று வேகமாக அங்கே அடித்துக்கொண்டே இருக்கும். இரண்டு உயர் மலேகளின் நடுவே ஆறு ஓடிவருகிறது. பனிஉறைப் பகுதிகளில் இயற்கையாக அடிக்கடி பெருங் காற்றுக்கள் உண்டாகும். ஆகையால் கூடாரங்கள் அங்கு நிலேக்காது. பிய்த்தெறியப்படும். குளிர்காற்றுத் துன்பமும் நம்மை வாட்டும். இங்கும், இதுபோன்று இனி மேலே செல்லும் இடங்களிலும் காற்றடக்கமான இடங்களில்தான் தங்கவேண்டும். முடிந்தமட்டும் கூடாரத்தின் உட்பகுதி யில் உள்ள கற்களே அப்புறப்படுத்திவிட்டு இருக்கிற நிலேயில் படுத்துக்கொள்வதுதான் நல்லது '' என்று அனுபவம் சொன்ஞர்கள்.

துங்கில் கிடைப்பவை:

நாங்கள் அங்குச்சென்று சேர்ந்தநேரம் மாலே மணி 3. அங்கு அருகில் தேநீர்க்கடை ஒன்றிருக்கிறது. அவ் வழியில் செல்லும் வியாபாரிகள், அவர்களே அடுத்துச் செல்லும் கூலிகள் இவர்களே நம்பி அங்கு வியாபார வழி திறந்ததிலிருந்து மறுபடியும் அடைபடும்வரை கடை வைத்திருக்கிருர்கள். அங்கு அவர்களிடம் ரோட்டி, மட்ட மான பிஸ்கோத், தேநீர் இவை கிடைக்கும். பால் தூளும் (Milk Powder) சர்க்கரையும் இருக்கும். பால் இட்டுச் சர்க்கரை கலந்த தேனிர் கிடைக்கும். வேருென்றுமே கிடைக்காத, எதிர்பார்க்கவும் முடியாத அந்த இடத்தில் அவர் கொடுப்பவை எல்லாம் மிகச் சிறந்தனவாகவே இருக்கின்றன.

## மிகப் பெரிய சோதனை :

மறுநாள் அதிகாலையில் புறப்பட்டு உண்டாதுரா, ஜெயந்தி, குங்கிரிபிங்கிரிக் கணவாய்களைக் கடப்பதென்று திட்டம். அதிகாலையில் புறப்பட்டால் வழியில் இயற்கை யன்னையின் அருள் பூரணமாக இருந்து தடை எதுவுமில்லா விட்டால் அன்று மாலைக்குள் அம்மூன்று கணவாய்ப் பகுதிகளையும் கடந்துவிடலாம். வழியில் நம்மீது இயற்கை திருவிளையாடல் புரிய நினைத்துவிட்டால் மீண்டும் அது வழி விட்டபிறகுதான் இப்புறமோ அப்புறமோ செல்ல முடியும். சிற்சில காலங்களில் உயிருக்கே ஆபத்து விளையவும்கூடும். இப்பகுதிகளைக் கடந்து விட்டால் பின்பு இதுபோன்ற மிகப் பெருந்துன்பங்கள எதுவும் கிடையாது. கணவாய்ப் பகுதிகளைக் கடக்கும்பொழுது கடும் பனிமூட்டம், பனிபெய்தல், புயல் அடித்தல் பனிப்பகுதிகளில் பனிப்பாறைகள் வேடித்து விழுதல் இவைபோன்ற துன்பங்கள் நிகழுமாம்; எப்பொழுது நிகழும் என்று சொல்லவும் முடியாது. எதிர்பார்த்தே போதல் வேண்டும். இவ்வழியே முந்தைய ஆண்டுகளில் வந்தவர் களில் சிலர் பல கொடுந்துன்பங்களுக்கு ஆளாகியிருக் கிறார்கள். உயிரிழப்பும் ஏற்பட்டிருக்கிறது. கடும் சோதனையில் வெற்றிபெறவேண்டிய இடங்களில் இது பெரிது.

## நேரமாகிறது ;

அன்று இரவு இரண்டு மணி அளவில் எல்லோரும் விழித்துக்கொண்டோம். அதிகாலையில் புறப்பட்டால்தான் நினைத்தபடி செய்யமுடியும் என்று சுவாமிகள் சொல்லி இருந்தார்கள். பின்னிரவு நேரத்தில் சிறுமழை தூறத் தொடங்கிவிட்டது. குளிரும் மிக அதிகமாக இருந்தது.

அன்று சோதனையில் வெற்றி அடைந்துவிடவேண்டும் என்ற ஆர்வம் எல்லோருக்கும் இருந்தது. அவரவரும் பெருமானை நினைத்து அவரவர் வழிபடுதெய்வங்களை நினைத்துப் பிரார்த்தனைகள் செய்திருந்தோம். மணி நான்கு. வழிகாட்டிகள் மூட்டைகட்டத் தொடங்கினர். கூடாரங்கள் கீழே தள்ளப்பட்டன. எல்லாம் கட்டிமுடிந்து நாங்கள் புறப்படும்பொழுது மணி 5. அவரவரும் சிறிது தேநீர் அருந்தினோம்.

## கணவாயில் செல்ல :

கணவாய்ப் பகுதிகளில் மயக்கம், பித்த அதிகரிப் பினால் வாந்தி, வயிற்றுப்புரட்டல், கண் சிவத்தல், மூக்கு நுனி, உதடுகள், காது ஓரங்கள் இதுபோன்ற நுட்பமான பகுதிகளில் வெடிப்புக்கள் இவை ஏற்படாது காத்துக்கொள் வதில் எல்லோரும் முயன்றனர். உள்ளே பல சட்டைகள், மேலே மழைச்சட்டை, தலையில் கம்பளிப் பனிக்குல்லாய், கையுறை, காலில் இரண்டு உறைகள், மேற்சோடு, முகத் திற்கு வாஸலின் பூச்சு முதலியன செய்துகொண்டோம். ஊர்க்கம்பை உற்ற துணையாகக் கொண்டோம். பனி உறையில் பார்வை கெட்டுப்போகாதிருக்க புகைநிற மூக்குக்கண்ணாடி அணிந்துகொண்டோம். வேட்டிகளைக் களைந்துவிட்டுக் கால்சட்டைகளை மாட்டிக்கொண்டோம். தலையில் பனிக்குல்லாய்மீது மழைக்குல்லாயும் போட்டுக் கொண்டோம். கழுத்தைச்சுற்றி கம்பளிப்பட்டை சுற்றிக் கொண்டோம். வாயும் மனமும் திருநாமச் சிந்தனையில் தாமாக ஈடுபட்டன. இவ்விதமாகக் கணவாய்களை வெற்றி காணப் புறப்பட்டது எங்கள் படை.

## துன்பமும் மாற்றும் :

வழியில் பயன்படுத்த பிஸ்கோத், பேப்பர்மிண்ட், சாக்லேட், வெப்பதட்பக்குப்பியில் வெந்நீர், உப்பிட்ட பழைய எலுமிச்சை ஊறுகாய், முகர் உப்பு (Smelling Salt) இவைகளை ஒரு பையில் போட்டுத் தோளில் இட்டுக்கொண்டோம். உச்சி இடங்கள் பனி உறைவுப் பகுதியில் (10,000 அடிக்குமேல் உள்ள பகுதிகளில்) பொதுவாகவே பிராணவாயு குறைந்து கரிமலவாயு அதிகமாக இருக்கும். அங்குச் செல்லும்பொழுது பித்தமயக்கம், வயிற்றுப் புரட்டல் முதலியனவும் நெஞ்சுத்துடிப்பும் ஏற்படும். இருதயம் பலவீனமானவர்கள் அங்குச் செல்லமுடியாது. இரத்தத்துடிப்பு அதிகமாகி உயிருக்கே ஆபத்தாக முடிந்து விடும். அங்குச் செல்லும்பொழுது இரத்தம் உறைந்து நல்ல ஓட்டமிராது. அதனால் கைகால்களில் உளைச்சலும் ஏற்படும். எவ்வளவு பாதுகாப்பிருந்தாலும் இத்துன்பங்களைத் தவிர்க்கமுடியாது. சிறுநீரின் நிறம் மஞ்சளாகவும் சிகப்பாகவும் மாறிவிடும். மலக் கட்டு ஏற்படும். இது போன்ற துன்பங்கள் பல உண்டாகும். வயிற்றில் அதிக கனமிருத்தல் கூடாது. கஞ்சி, காப்பி, தேநீர் போன்ற திரவமான உணவு வகைகளை அருந்திச் செல்லுதல் வேண்டும். மயக்கமும் முச்சுத்திணறலும் வந்தால் முகர் உப்பு அல்லது மிளகு சூடன் பொடிசெய்த கலவை இவைகளில் ஏதாவது ஒன்றை நுகரவேண்டும். பித்த அதிகரிப்பு, வாந்தி, வயிற்றுப்புரட்டல் வந்தால் எலுமிச்சை ஊறுகாய், எலுமிச்சை பேப்பர்மிண்ட் இவைகளை வாயிலிட்டு அடக்கி வைத்துக்கொண்டு ஊறும் உமிழ்நீரை உட்கொள்ள வேண்டும். எலுமிச்சை ஊறுகாய் ஓரளவு பிராணவாயுவைக் கொடுக்குமாம். அதனால் நெஞ்சுத் துடிப்பு (படபடப்பு)க் கூடக்குறையும்.

## வழியை மறைத்தது :

5 மணிக்குப் புறப்பட்ட நாங்கள் இரண்டு கல் தொலை விற்கு மேல் சென்றதும் அங்கு ஆற்றைக் கடக்க ஒரு பாலமிருப்பதைக் கண்டோம். இந்தத் தொலைவிற்குள் 1500 அடி உயரம் மேலே ஏறிவிடுகிறோம். ஆற்றின் அக்கரையில்தான் குதிரைமீது ஏற அனுமதிக்கப்பட் டோம். அதுவரை கால் நடையாகவே வந்தோம். ஆற்றின் அக்கரையைச் சேர்ந்ததும் எதிரே மிகக் கடுமையான பனி மூட்டம் சூழ்ந்து வழியை மறைத்திருந்தது. இரண்டு மூன்று அடிக்குமுன்னே செல்வோரையுங் காணமுடியாதபடி அவ்வளவு கப்பிய முட்டம் அது. குதிரைகள் ஒன்றன்பின் ஒன்ருக அடுத்தடுத்துச் சென்றுகொண்டிருந்தன ஒரு ஏற்றத்தில். பனிமுட்டத்தில் அப்பகுதியில் சுற்றிலும் காட்சி எவ்விதமிருக்கிறதென்பதைப் பார்க்கமுடியவில்லை. கடல்மட்டத்திலிருந்து 15,200 அடி உயரத்தில் நாங்கள் இருப்பதாகச் சுவாமிகள் அவர்கள் சொன்ஞர்கள்.

## பொம்லாஸ் :

மேலும் இதே நிலையில் சுமார் ஒருமணி நேரம் சென்ற பிறகு சிறிது முட்டம் கரைந்தது. ஓரளவு சுற்றுப்புறங்கள் கண்ணுக்குப் புலஞயின. கௌரி கங்கை உற்பத்தியைப் பார்க்கப்போன இடத்தில் கண்ட அதே நிலையில் பனி உறைவுகள் களிமண் மலையென உயர்ந்தும் வெடித்தும் தண்ணீரைக் கக்கிக்கொண்டும் நின்றன. ஒரே பனி உறை பகுதி. பனி வயல்கள் எனலாம். கண்ணுக் கெட்டிய தொலைவுவரை அப்படியே. தொலைவில் பலபல பனிமலைச் சிகரங்கள். அந்த இடத்திற்குப் பெயர் பொம்லாஸ் (BHOMLAS). இப்பகுதியைக் கடப்பதற்குள்

எங்களுடன் வந்தவர்களில் இரண்டொருவர் பனிஉறை பகுதிகளில் வரவேண்டிய முறையில் ஆயத்தம் செய்து கொள்ளாது வந்திருந்தபடியால் மயக்கம் வத்து குதிரை யிலிருந்து கீழே விழுந்துவிட்டார்கள். ஒருவருக்கு ஒருவர் அங்கு நின்று உதவிசெய்யமுடியவில்லை. குதிரையைவிட்டு இறங்கினல் இடங்கண்டு ஏறுவது முடியாது. நாம் விட்ட குதிரை நமக்காகக் காத்திராது. சென்றுகொண்டே இருக்கும். பின்வரும் சுவாமிகளும் யாரும் எங்கும் தங்கக்கூடாது; தங்கினுல் தங்கியதுதான்; அந்த ஒருவருக்காக அன்று முழுவதும் திட்டம் குலைந்து பலரும் துன்புறும்படியாகும்; யாராவது ஏதாவது ஒரு காரணத்தால் தங்கினுல் நாம் பார்த்துக்கொள்வதாகச் சொல்லி மேலே ஊக்கினுர்கள். மயங்கிக்கிடந்தவர்களுக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் ஊறுகாய் முகர்உப்பு முதலியன தந்து உதவியளித்து வந்தார்கள். தேநீர் கொடுத்து மயக்கம் தெளிவித்தார்கள்.

## காலா மட்டியா :

இதனை அடுத்து ஒரு மலைச் சரிவு. அங்குக் குதிரைக் காரர்கள் எங்களைக் குதிரைகளைவிட்டு இறங்கச்செய்தார் கள். கீழே களிமண் பகுதி. அதுவும் நிலக்கரிபோன்ற நிறம். ஈரக்கசிவும் இருந்தது. அதில் கால் வழுக்கிவிழுந் தால் 3000, 4000 அடி கீழே பனிவயலில் சென்று விழ வேண்டியதுதான். பிடிப்போ தடுப்போ எதுவும்கிடையாது. நேர் சரிவு. அந்த இடத்திற்குப் பெயா " காலா மட்டியா " (கருப்பு மண்). இங்கு நடந்துசெல்வதில் கால், கை ஒய்வு. மூச்சுத்திணறல் ஏற்பட்டன. ஓரளவு சரிவுப் பகுதி முடிந்ததும் மீண்டும் குதிரைமீது ஏறிச்சென்ருேம். அதை விட்டுக் கீழே இறங்குகிறது வழி. அது ஒரு பெரிய

சமவெளி. நடுநடுவில் குன்றுகள்போல பனி உறைவுகள் இருந்தன. சுற்றிலுமுள்ள தரைப்பகுதிகளும் உறைவுகளும் வெண்மை நிறமாகவும் குன்றுப் பகுதி கறுப்பாகவும் அவற்றின்மீது சுண்ணும்பை வழியவிட்டதுபோல் வார்ந் தோடிய வெள்ளை நிறம், இவ்விதம் காட்சி அளித்தது. கறுப்பாக உள்ளது நெடுங்காலமாக உறைந்து இறுகி உறுதியானதும் வெள்ளை முதல்நாளிரவோ அதற்கு முன் சில நாட்களிலோ பெய்த பனியும் ஆகும். அதில் வழி நடப்பின் அருகில் ஒரு சிறு ஊற்றும் ஓடையும்கூடக் காணப்பட்டன.

## உண்டகஜம் :

மேலும் ஒரு கல் தொலைவு சென்றதும் உண்டகஜம் என்னும் பகுதி வருகிறது. அது உண்டாவின் அடியிடம் என்ற பொருளில் வழங்கப்படுவதாகும். இரண்டு கல் அளவுக்கு 2,800 அடி உயரமுடையதாக அமைந்தது. மேலே கடுமையான ஏற்றம். மூச்சுத்திணறலும் மிகுதி யாகவே இருந்தது. முகர்உப்பை உறிஞ்சிக்கொண்டால் ஓரளவு பரிகாரமாக இருக்கும். எனக்கு மூக்கு நுனியில் தடவியிருந்த வாஸ்லைன் போதுமானதாக இல்லை. மூச்சு உள்ளே வாங்கும்பொழுது எரிச்சலுமிகுந்தது. குதிரைகள் அவ்வேற்றத்தில் சிறிது ஏறுவதும் மூச்சுத்திணறல் ஏற்பட்டுச் சற்றே நின்று மீண்டும் ஏறுவதுமாக நின்று நின்று ஏறிச் சென்றன. உச்சிப் பகுதியை அடைந்ததும் அருமையான காட்சி அங்குச் சுற்றிலும் நமக்காகக் காத்துக்கிடந்தது. எங்குத் திரும்பினும் பனிவயல்கள் தாம். பனிஅடை போர்த்த வெண்சிகரங்கள். இளநீலமும் வெள்ளையும் கலந்து கலந்து அளிக்கும் நல்லதொரு காட்சி. இங்கெல்லாம் வர்ணக் கண்ணாடி அணியாது



உண்டாதுரா (18,000 அடி)



ஜெயந்திக் கணவாய் (18.500 அடி)

காட்சிகளைக் காணுதல் கூடாது. அப்பாதுகாப்பில்லா விட்டால் கண்ணொளி மழுங்கி பனிக்குருடாக ஆதலும் உண்டு. உண்டாவின் உயரம் 18,000 அடி. அரக்கர்கள் கை கால்களைப் பரப்பிக்கொண்டு நீண்டு படுத்திருப்பது போல பல மலைத்தொடர்களும் பனியின் வெண்மையை அதிகரித்துக்காட்டுவதற்காக அமையப்பெற்றனவாக கருந் திடர்களும் திட்டுக்களுமாக இருந்தன. இந்த இடத்தை நாங்கள் சென்றடைந்தபோது காலை மணி 10.

## உறைபனியில்:

மேலும் கடுமையான இறக்கம். 4 பர்லாங் தொலைவில் 800 அடி, 900 அடி கீழே இறங்கவேண்டிவருகிறது. வழியெல்லாம் சேறு முழங்காலளவு பதிந்து போகக்கூடிய தாக இருக்கிறது. சேறு பனிக்குளிர் உடையதாக இருக்கிறது. இதன் பக்கத்தில் பனி உறைவு. இதிலும் பெருமான் கருணைபாலித்து பேருதவி செய்திருக்கிறார். நாங்கள் சேற்றுப்பகுதியில் இறங்குவது மிகவும் துன்பம் தருவதாகத்தான் இருந்தது. ஆனாலும் அதைவிடப் பெருந் துன்பத்தை எதிர்பார்த்தோம். சுவாமிகள் முன்னிரவில் இப்பகுதி வந்ததும் 'குதிரைகளின் கால்களைக்கட்டி பனிச் சரிவில் உருட்டி விட்டுவிட்டு யாத்ரீகர்கள் பனி உறைவில் உட்கார்ந்து குழந்தைகள் சறுக்கி விளையாடுவதுபோல சறுக்கிச்சென்று அடியிடத்தில் எழுந்து மேற்கொண்டு செல்லும்படியாக இருக்கும்' என்று எச்சரித்திருந்தார்கள். அதை எதிர்பார்த்து வந்த எங்களுக்குச் சேற்றில் இறங்கி நடந்து வரும்படியாக இருந்ததே பெரிய உதவி தான். இல்லாவிட்டால் உறைபனியில் அமர்ந்து சறுக்கித் தான் செல்லுதல் வேண்டும். பனிக்குளிரில் உடல் உறுப்புக்கள் விறைத்துப்போகும் அசதியும் மயக்கமும்

தூக்கங்களிலேயும் உண்டாதுமாம். உட்கார்ந்த இடத்திலேயே படுத்து உறங்கிவிடலாம் என்றே எண்ணம் எழுமாம். சிறிது உறங்கிவிட்டால் அதுவே நெடுந்தூக்கமாக ஆகி விடும் என்றும் சொல்லுகிறார்கள். இதுபோன்ற கொடுந் துன்பச்சோதனைகள் எங்களுக்கு ஏற்படவில்லை. முன் ஆண்டுகளில் இவ்வழியே சென்ற பலர் இதுபோன்ற பல அல்லல்களிடைப்பட்டு இந்த இடத்தில் சில மனிதர்களும் குதிரைகள் போன்றவைகளும் உயிரிழந்து துன்பப்பட் டிருக்கிறார்கள். இறங்கி வரவேண்டிய பகுதியும் வந்த பிறகு ஒரு கல் தொலைவு சரிவில் வழிந்து படர்ந்து நிற்கும் பனி அடையில் குறுக்கே நடந்து செல்லவேண்டியிருக் கிறது. அவ்விதம் நடப்பதிலும் துன்பந்தான். மூச்சுத் திணறல், நெஞ்சில் படபடப்பு, மயக்கம் இவைகள் உண் டாயின. சிறிதுதொலைவு (10, 15 அடி) நடப்பதும் சிறிது நேரம் (10. 15 நிமிடங்கள்) நிற்பதும் மீண்டும் தொடர்ந்து நடப்பதுமாகவே செல்லவேண்டியிருந்தது. அதிலும் உறைபனியில் நடக்கவேண்டியிருந்தது. தொண்டை வறண்டு கண்ணை இருட்டி மயக்கம் வந்தது. இந்தநிலையில் எங்களை மேட்டுப்பகுதியில் கீழே இறக்கிவிட்டு நடந்து வரும்படிச் செய்து குதிரைகளை ஓட்டிக்கொண்டு போய் விட்டார்கள் குதிரைக்காரர்களும் கூலிகளும்.

**கங்காபாணி :**

கால் துவள நடந்து அந்தப் பனிஉறை பகுதியைக் கடந்து அங்குப் பனி அடையிலிருந்து உருகி ஓடும் கங்கா பாணி என்ற ஓடையைக் கடக்கவேண்டி வந்தது. இந்நதியே பின்பு குனியாங்திநதியாகப் பெருகி சட்லீஜ்நதி யின் உபநதியாகஓடுகிறது. அந்த ஓடையைக் கடக்க இரு கரையிலும் கல்லடுக்கி குறுக்கே இரண்டு கழிகளைப் போட்டு வைத்திருக்கும் நாட்டுப் பாலம் ஒன்று

இருக்கிறது. அந்தக்கழிகளில் நடந்துசெல்வது அப்பொழு திருந்த நிலையில் இயலாததாகத் தோன்றியது. ஓடையில் தண்ணீர் 1, 1½ அடி ஆழமே இருந்தாலும் பனி உருகி வரும் தண்ணீரில் நடந்து செல்வதும் துன்பந்தான். முதலில் சொன்ன வழியில் சென்று ஒருக்கால் மரம் புரண்டு தவறினுல் ஓடையில் விழுந்து முழுவதும் நனைய வேண்டிவரும். அதைவிடத் தண்ணீரில் இறங்கிக் கடத் தலே மேலானதென்று அவ்விதமே செய்தோம். ஆனுல் முழங்காலளவு தண்ணீரில் குண்டுக்கல் பகுதியில் கீழே நடப்பது பேருந்துன்பமாக இருந்தது. உச்சிவரை குளிர் பரவி நடுக்கம் எடுத்தது.

### ஒத்துழையாமை இயக்கம் :

அதைக்கடந்ததும் மேற்கொண்டு அரைக்கல் தொலை' வில் 500, 600 அடி உயரம் ஏறவேண்டிவந்தது. இது வரை அனுபவித்த துன்பங்களைவிட இப்பொழுது மேட்டில் ஏறும்பொழுது நெஞ்சுத்துடிப்பு அதிகமாகிவிட்டது. ஊர்க் கம்பில்லாவிட்டால் சாய்ந்து விழுந்துவிட நேரிடும். அப்படியும் 5 அடி 10 அடி நடப்பதும் 10, 15 நிமிஷம் நின்று மூச்சு வாங்கி நெஞ்சுத்துடிப்பு ஓரளவு அடங்கிய தும் மேலே நடப்பதுமாகச் சென்றோம். தலை சுற்றி மயக்கம் வந்துகொண்டே இருந்தது. உடலும் உறுப்புக் களும் ஒத்துழைக்க மறுத்தன. இங்கு என் நிலையைக் கண்ட என் குதிரைக்காரன் கீழே வந்து எனக்கு உதவி செய்தான். கையைத்தாங்கி அழைத்துச்சென்ருன். ஆனுல் அவன் உதவியோடும் 10, 15 அடிக்குமேல் நடக்கமுடிய வில்லை. ஆனுல் அவன் பழக்கத்தால் என்னைவிட அதிகத் தொலைவு நடக்கலானுன். அவன் என்னைப் பற்றி இழுத்துப் போவதுபோல் எனக்கு இருந்தது.

## தேநீர்ப்பந்தல் :

இந்த நிலையில் உச்சி இடத்தை அடைவதற்கு ஒரு மணிநேரம் ஆகிவிட்டது. உச்சியை அடைந்ததும் எங்கள் சோர்வும் உச்சநிலை அடைந்துவிட்டது. அங்கு இரண்டு தேநீர்க்கடைகள் இருந்தன. குதிரைக்காரன் என்னைக் கீழே அமரச்செய்து ஓடிச்சென்று சூடான தேநீரும் தித்திப்புப் பணியாரம் (மால்புவா) ஒன்றும் வாங்கிவந்தான். சூடான தேநீர் அருந்தியதும் அயர்வு ஒருசிறிது நீங்கியது. பணியாரத்தைத் தின்னமுடியவில்லை. ஏற்கவுமில்லை. அந்தஇடத்தில் எங்கள் அயர்வுபோக்க தேநீர்க்கடை இருக்குமென்று நாங்கள் எதிர்பார்க்கவில்லை. இவ்விதம் அது அங்குக் கிடைக்காவிட்டால் பலரும் சொல்லவொண்ணுத் துன்பம் அடைந்திருப்பர். களைத்துவந்த அப்பர் சுவாமிகளுக்குப் பெருமான் திருப்பைஞ்ஞீலியில் பொதிசோறும் தண்ணீரும் கொடுத்ததைப்போல இதுவும் எங்களுக்கு அவனருளால் கிடைத்தது என்றே எண்ணி அயர்வுநீங்கியதும் பெருமானை நினைந்து மனதால் வழிபட்டோம். அங்கு அந்த நிலையில் எங்களுக்கு வழங்கப்பட்ட அந்தத் தேநீருக்கிணையாக வாழ்க்கையில் வேறு எதுவுமிராது. அவரவரும் மூன்று நான்கு கோப்பைகள் வாங்கி வாங்கி அருந்தினோம்.

## ஒன்று தாண்டினோம் :

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமும் முன்னே சொல்லப் பட்ட பனிபடர் இடத்தில் வந்ததும் மேட்டிடத்திலேயே கீழே இறங்கி நடந்து - பனி அடைமீது நடந்து நாங்கள் பட்ட துன்பங்களை எல்லாம் தாங்களும் அநுபவித்துக் கொண்டேவந்தார்கள். தண்டி சுமப்போர் வேண்டியும் அவர்கள் துன்பம் தம் துன்பம் போலக் கருதி அநுபவித் தார்கள். ஆனால் தண்டி ஆட்கள் இருவர் இருபுறத்திலும்

உதவியாக வந்தனர். நாங்கள் தங்கியிருந்த இடத்துக்கு வந்துசேர்ந்ததும் சுவாமி வித்யானந்தா "முதல் கணவாயைத்தான் கடந்திருக்கிறோம். மேலும் இரண்டு கணவாய்கள் கடத்தல்வேண்டும். உடனே புறப்படவேண்டியதுதான். தாமதித்தல் நல்லதல்ல" என்று எங்களை முதலில் புறப்படச்செய்து பிறகு அங்குத் தங்கிக்களைப்பாறினார்கள். புறப்பட்டோம். மேலே இன்னும் 1,000 அடி உயரம் ஏறவேண்டியதாக இருந்தது.

## பனி பெய்தல் :

மேலே சிறிது தொலைவு சென்றதும் பனிபெய்யத் தொடங்கியது. இலவங்காய் வெடித்து காற்றில் பஞ்சுத் துகள் பறந்து விழுவதுபோல அடர்ந்து பறந்துவந்து விழுந்தது. இப்பொழுது நாங்கள் மலைச்சரிவில் போக வேண்டியிருந்தது. குதிரைகளை விட்டிறங்கி நடந்தே சென்றோம். பாதை வழுக்குடையது. பனி வலுக்காமல் இருக்கவேண்டுமென்று இறைவனைப் பிரார்த்தித்துக் கொண்டோம். அதேபோல அரைமணி நேரத்தில் பனி பெய்வதும் நின்றது.

## ஜெயந்தி :

பிறகு ஒரு மலை உச்சி இடத்தை அடைந்ததும் குதிரைகள்மீது ஏறிச்சென்றோம். நீண்டு கிடந்த அம் முகடே ஜெயந்திக் கணவாய். அவ்வுச்சி இடத்திலிருந்து எங்குப் பார்த்தாலும் பனி அடை போர்த்த மலைஉச்சிகளும் பனிவயல்களுமாகவே காட்சி அளித்தன, எங்கும் எந்த அரவமும் இல்லாத மௌன நிலை. நடுநடுவே குதிரைக்காரர்கள் குதிரைகளை ஓட்டுவதற்கு எழுப்பும் ஒலியைத் தவிர வேறு அரவமே கிடையாது. எங்களைத் தவிர மனித

நடமாட்டமும் இல்லை. தனியாக அங்கு அந்தப் பேரமைதியான இடத்தில் செல்வது முடியாது. ஆனால் இயற்கை அற்புதங்கள் மௌனத்தின் பொருள் விளக்கத்தை அங்குச் சொல்லாமல் சொல்வதாகப் பேசாமல் பேசுவதாக அமைந்த இறைவனின் அற்புதப் படைப்பை எல்லையற்ற ஒரு பெருவெளியை அந்த உயர் உச்சியினின்றும் காணலாம். சூரியன் ஒளியிழந்து வெம்மையிழந்து தன் ஆற்றல் அழிந்து காணப்படுகிறான். அந்த உச்சி இடம் கடல்மட்டத்திலிருந்து 18,500 அடி உயரம், நீண்டு கிடந்த அம்மலை முகட்டிலே இரண்டு கல் தொலைவு செல்லவேண்டியதாக இருந்தது. அங்கு மண்பகுதியும் இருக்கிறது. அதில் தரையை விட்டு 3, 4 அங்குல உயரமே உள்ள புற்கள் இங்குமங்குமாக முளைத்திருந்தது. வேறு செடிகள் எதுவும் இல்லை. அப் புல்நுனி முள்ளைப்போலக் குத்தக்கூடியதாக அழுத்தமாக இருந்தது.

**சார்ட்டன் :**

இவ்வழியில் நடுநடுவில் பூட்டியர்கள் தங்கள் வழிபடும் மலைத் தெய்வங்களுக்குக் கல் அடுக்கி வண்ணத் துணி கிழித்துக் கொடிகட்டி வைத்திருக்கிறார்கள். அதற்குச் சார்ட்டன் (Chorten) என்று பெயர். அதை அவர்கள் வலம் வந்து மேலே செல்வர். அவ்விதமே நாங்களும் சென்றோம். முடிவில் மலைச்சரிவிலிருந்து இறங்கவேண்டிவந்தது. எதிரே கயிலைத் தரிசனம் செய்துவிட்டுச் சில சாதுக்கள் கால் நடையாகவே வந்து கொண்டிருந்தார்கள்.

**பனிவயல் படிவங்கள் :**

சரிவுப் பகுதி வந்ததும் எங்களைக் கீழே இறக்கிவிட்டுக் குதிரைகளை ஓட்டிச் சென்றுவிட்டார்கள் குதிரைக்

காரர்கள். இவ்விறக்கம் ஒருகல் தொலைவு இருக்கலாம். ஆனால் 2000 அடிக்குமேல் இறங்கியாகவேண்டும். மணற்பகுதியாக இருந்தது கூர்க்கம்பின் உதவிகொண்டு இறங்கினாலும் நம்மை முன்னேக்கித் தள்ளிவிடுவதாகவே அப்பகுதி அமைந்திருக்கிறது. பாதி அளவுக்குக் கீழே மறுபடியும் பனிஅடை பனிவயல். அதேபோல பனிச் சிகரங்கள் பல. அக் காட்சி காணவிரும்புவோர் கூர்க்கம்பு களைக் கீழேஊன்றி அதைப்பிடித்துக்கொண்டு அங்கங்கும் நின்று நின்று பார்த்துக்கொள்ளலாம். பார்த்து மகிழவேண் டியவைதாம். அவையும், கண்ணுக்கெட்டிய வரையிலும் பனி அடை, பனி வயல், அதில் மலை இடங்களில் பலபல உருவில் பாறைகள் வளர்ந்து நிற்பனபோல பலபல உருவ அமைப்பிலும் பலபல நிறத்திலும் (வெள்ளை, இளம்பச்சை, இளநீலம், களிமண் நிறம், சில சில இடங்களில் இவை களில் பல கலந்தும், இவ்விதமாக இயற்கையின் அற்புத வேலைத்திறங்கள். நிலவொளிபோன்ற வெய்யில் ஒளியும் குளிர்கலந்தகாலநிலையும் களைத்துவந்திருக்கும் எங்களுக்கு அங்கே பெருவிருந்தாகப் படக் காட்சி காண்பதுபோல அமைந்திருந்தன. ஜெயந்தியின் முடிவில் கற்பனைக்கும் எட்டாத கண்கொள்ளாக் காட்சிகள் மலிந்து கிடக்கின்றன. பனி அடைவுகளிலும் சறுக்கலான மலைச்சரிவிலும் சிலர் கவனக்குறைவால் தடுமாறி விழுந்துவிட்டார்கள்.

## தெய்விகக்காட்சி :

அந்தச் சரிவின் அடியிடத்திற்கு வந்ததும் அப்புறம் ஒரு மலைத்தொடர். இந்த இரண்டு தொடர்களுக்கும் இடை யில் ஒருபர்லாங் அகலமும் பலகல் நீண்டும் உள்ள பள்ளத் தாக்குப் பகுதி ஒன்று. அது கிழக்கு மேற்காக நீண்டு கிடக்கிறது. அந்த அடியிடத்தில் பனி உறைவு பல அடி

ஆழம் படிந்து கிடக்கிறது. அதில் நின்று மேற்கே பார்த்தால் ஒரு மறக்கமுடியாத அற்புதக் காட்சி. அது ஒரு தெய்விகக் காட்சி. பனிவயல்களின் நடுவே பெரிய தூண்போல, உயர்ந்து நிற்கும் ஒரு உறைபனிப் படிவம். அது எங்களுக்கு முன் நிகழ்ந்த ஒன்றை நினைவூட்டியது. குகை இடத்தில் ஒரு மூலையில் உறைபனியாக வளர்ந்தும் தேய்ந்தும் அற்புதம் விளைத்து அருள் வழங்குகிறான் இறைவன் அமரநாதத்திலே. அதேபோலவே தாணுவாக (உறைபனி இலிங்கமாக) பனிவயல்களின் நடுவே நின்று நினைவுபடுத்துகிறான் இங்கே. அமரநாத தரிசனத்துக்குச் செல்லும் வழியிலே கயிலைச் சிகரக்காட்சி வழங்கி கயிலை நாதனின் நினைவு உண்டுபண்ணினான். அதேபோல கயிலை யாத்திரை வழியிலே பனி லிங்கமாக வளர்ந்து நின்று அமரநாத தரிசனம் வழங்குகிறான் இன்று. இந்த அற்புதத் திருவுருவக் காட்சி கண்டவர்கள் கண்களில் ஆனந்த வெள்ளம் பெருக மெய்சிலிர்க்க அதனையேபார்த்து மெய் மறந்து நிற்பதைத் தவிர எண்ணும் மனமும் வேறொன்றில் ஈடுபடுத்த முடியாது மயங்கிநிற்பர். இது அனுபவம்.

### நாஸ்காம் :

கிழக்கு, தெற்கு, வடக்கு மூன்றுபுறமும் 2000, 2500 அடி உயரமுள்ள சிகரங்களையுடைய நீண்ட தொடர்மலை களும் மேற்கே பனி வயலுமாக அமைந்து கிடக்கிறது அங்கே. அந்த இடத்திற்குப் பெயர் நாஸ்காம் (Nhazgam) இங்குப் பனி உருகிய ஒடை ஒன்றும் ஒடுகிறது. இவ்வழி யிலே உறைபனியில் குதிரைமீது சென்றோம்.

### திருக்கோயில் கோபுரமும், கோட்டைச்சுவரும் :

இதேவழியில் செல்லும்போது கிழக்கே உள்ள மலைத் தொடரில் திருக்கோயில் இராஜகோபுர அமைப்பில்

மூன்று நான்கு (மலைச்சிகரங்கள்) இயற்கை விளைவுகள். தெற்கே 20, 25 அடி அகலமும் 150, 160 அடி உயரமுமுள்ள கோட்டைச் சுவர்போன்ற அமைப்புடைய ஒன்று தொடர்ந்து செல்கிறது. கோபுரங்களில் மாடங்கள் போன்று அடுக்கடுக்காக மாடப்பகுதிகளும், கல்லில் முடிவுசெய்யாது விடப்பட்ட துவாரபாலகாகள் போன்ற உருவங்களும், குந்து சிங்கம், குரங்குகள் போன்றவைகளும் மகாநாசி போன்ற அமைப்புகளும் உடைய கோபுரங்கள் 500, 600 அடி உயரமான மலைப் பகுதியின்மேலே 300, 400 அடி உயரத்தில் அமைக்கப்பட்டிருப்பதாக விளங்குகின்றன. உளிபடாத இயற்கை அமைப்புக்கள் அவை. அமெரிக்க பெரிய மலை விளைவுகள் இயற்கை அற்புதங்கள் (Great Canyans) என்று சொல்கிறார்களல்லவா, அவைகளைவிட மேலே சொன்ன அற்புதங்களை நம் நாட்டுமலைகளில் இங்கே காணலாம். நம்நாட்டு எல்லைக்குள்ளும் இருக்கின்றன. இந்த இடம் தான் குங்கிரிபிங்கிரிக் கணவாய். இவை கயிலைத் திருக்கோவிலின் முன்கோபுரங்களாகவும் கோட்டைச்சுவர்களாகவும் பனிஇலிங்கம், திருச்சுற்றில் அமைந்திருக்கும் சுற்றுக்கோவில் மூர்த்தமாகவும் பக்தியுணர்வுடையோருக்குத் தோன்றும். அங்குஅதே உணர்வு - கயிலைநாதன் நினைவு எங்கள் உள்ளத்தில் நிறைந்து நின்றன. நம்மூர்களிலும் பெருங்கோவில்களில் முன்கோபுரத்திலிருந்து பெருமான் எழுந்தருளியுள்ள இடம் இரண்டொரு பர்லாங் தொலைவிலிருப்பதுமுண்டல்லவா ? எல்லாத் திருக்கோவில்களிலும் உள்ள மூர்த்தங்களினும் பெரிய அமைப்பில் விராட் உருவத்தில் அமைந்த கயிலைநாதனுக்கு இத்தொலைவிலே கோபுரங்களும் சுற்றுச் சுவரும் அமைந்திருப்பது போலவும் திருக்கோவில பிரதான வாயிலின் அடியிடத்தில் வந்து நாங்கள் நிற்பதுபோலவுமே உள்ளுணர்வு சொல்லுகிறது.

## இரக்கத்தால் விளையும் கேடு :

இதற்குமேல் ஒரு கல் தொலைவு சரிவான ஏற்றம். பிறகு 1500 அடிக்குமேல் நேர் செங்குத்தான ஏற்றம். 70, 75 டிக்ரி சரிவுள்ளதாக இருக்கும் அவ்வேற்றம். ஒரு கோபுரத்தை ஒட்டி அமைந்த வழி. ஏற்றமான வழிகளில் இதுதான் மிகக்கடுமையானது. 5, 6 அடி நீளத்துக்கு மடித்து மடித்து (zig-zag) வழி ஏறிச்செல்கிறது. ஒரு மடிப்பில் ஒரு குதிரைதான் நிற்கலாம். அதுவும் அக்குதிரை செங்குத்தாக நிற்பதுபோலத் தோன்றும். கவனப்பிசகாக அதில் அமர்ந்திருந்தால் சேணம் வால் புறத்தின் வழியே நழுவிக் கழன்றுவிடும். குதிரைக்காரன் முன்னின்று குதிரைக் கடிவாளத்தைத் தொட்டிழுத்து ஒரு மடிப்பில் ஏறியதும் அக்குதிரை மூச்சுத்திணற நின்று விடும். திணறடி சிறிதுநின்றபின்னர்தான் அடுத்தமடிப்பில் ஏறும். குதிரைமீதுள்ளவர்கள் சேணத்தின் வார்ப்பகுதியை அதன் விலாப்புறத்தில் பொருந்தியிருக்கும்படியாக இழுத்துப் பிடித்துக்கொண்டு உறுதியாக முன்பக்கம் சாய்ந்து அமர்ந்திருத்தல்வேண்டும். இந்த நிலையில் 100, 200 அடி உயரம் செல்வதற்குள் சிலர் குதிரையிலிருந்து நழுவிக் கீழே விழுந்துவிட்டார்கள். சிலரைக் குதிரைக்காரர்கள் பயங்காட்டிக் கீழே இறங்கி நடந்துவரச் செய்துவிட்டார்கள். கீழே இறங்கியவர்கள் 10 அடி தொலைவுகூட நடக்க முடியாது கீழ்மூச்சு மேல் மூச்சு வாங்க நின்றிருந்தார்கள். ஏறிவரும் குதிரைகள் அவர்களையும் இடித்துத் தள்ளிக்கொண்டு ஏறின. அதைக் கண்டு முன்னேசென்றநான் இவ்வளவு கடுமையான ஏற்றத்தில் கீழே யாரும் இறங்கி நடக்கவேண்டாம் என்று எச்சரித்தேன். அதற்குமுன்னரே சிலர் கீழே இறக்கிவிடப்பட்டனர். 300, 400 அடி உயரம் ஏறியிருப்போம்.

## பணம் பறிக்கும் தந்திரம்:

என் குதிரைக்காரன் என்னைக் கீழே இறங்கி விடும்படி நச்சரிக்கத் தொடங்கினான். முதலில் இரக்கக்குறி, பிறகு வர வர கேள்விக்குறி, பிறகு அதட்டல், பிறகு பிடிவாத மாக ஓரிடத்தில் குதிரையை இழுத்து நிறுத்திக்கொண்டான். நான் எதையும் காதில் வாங்கிக்கொள்ளாது செவிடானேன். "பச்சா கோடா, மர்க்கயா, மர்க்கயா: க்யாஜி: உட்டோ" என்று உரத்துச் சத்தமிட்டான். நான் குதிரையையும் விடவில்லை; மறுமொழி சொல்லவுமில்லை. என் காலைத் தொட்டிழுக்க வந்தான் அவன். அப்பொழுது எனக்கு சினம் பொங்கி எழுந்தது. 'என்னைக் கீழே இழுத்து விட்டால் உன்னையும் விடேன், உன் குதிரையையும் மேலே நகரவிடேன். இது உறுதி' என்று அரைகுறை இந்தியில் இரைந்து சொன்னேன். இருவரும் சிறிது நேரம் பூசலிட்டுக் கொண்டோம். என் பிடிவாதம் தளருவதாக இல்லை. என் பின்னே வந்துகொண்டிருந்த மற்றக் குதிரைகளும் நின்றுவிட்டன. எங்கள் வாய்ப்போரின் முடிவை மற்றவர் களும் எதிர்நோக்கி வாளா இருந்தார்கள். 'அப்படியானால் ரூ. 10 பக்ஷிஷ் கொடு. குதிரையை மேலே இட்டுச்செல் கிறேன். இல்லாவிட்டால் இறங்கிவிட வேண்டியதுதான்' என்று கேட்டான். இதற்காகத்தான் இவ்வளவு ஆர்பாட் டங்களும் என்பது எனக்கு முன்பே தெரியும். 'மேலே குதிரையை நடத்து. நானாக உன் சேவையைப் பாராட்டிக் கொடுக்கவேண்டும். மற்றவர்களிடம் அடம்பிடித்து ஏமாற்றிப் பணம் பிடுங்குவது போல என்னிடம் வாங்க முடியாது. எவ்வளவு நேரமானாலும் இப்படியே இங்கேயே நின்றாலும் நான் குதிரையை விடப்போவதில்லை' என்று முடிவாகச் சொல்லிவிட்டேன். "சோர்ஹை" என்று

என்னை வைதுகோண்டே சிறிது வழியை விட்டு விலகிக் கோண்டான்.

## தந்திரம் பலிக்கவில்லை :

இந்தச் சண்டை நடந்த சுமார் அரைமணி நேரம் குதிரை ஓய்வு கோண்டிருந்தபடியால் நான் தட்டிவிட்டதும் முன்னே சேல்லத்தோடங்கியது. அவன் உதவியின்றியே குதிரையையும் சேலுத்திக்கோண்டுபோனாலும் போகக் கூடும் என்று கண்ட அவன் முன்போலவே ஏதேதோ முணுமுணுத்துக் கோண்டே கடிவாளத்தைத் தோட் டிழுத்துச் சேன்றான். மற்றவர்களும் பின்னே வந்தார்கள். இது நடப்பதற்கு முன் கீழே இறங்கி நடக்கமுடியாது துன்பப்பட்ட சிலர் ரூ. 5, ரூ. 10 பக்ஷிஷ் கோடுத்து மீண்டும் குதிரைமீது ஏறிக்கோண்டார்கள்.

வாயில்லாப் பிராணிகளான குதிரைகளும் அதனை நடத்துவோரும் படும் துன்பம் நமக்குக் கழிவிரக்கத்தை உண்டுபண்ணும், ஆனால் அவர்கள் அதை வைத்துக் கோண்டு நம்மிடம் பணம்பறிக்க, அதுவும் அதிகார முறை யில் அச்சமுட்டி வாங்கிவிட நினைப்பது நம் மனத்தையும் கேடுத்துவிடுகிறது. அந்த ஏற்றத்தில் குதிரைகள் சில இடங்களில் முன்கால் மடிந்து விழுந்தும் குதிரைக்காரர் களும் அதோடு கீழே விழுந்தும் எழுந்தும் வருகிறார்கள். அவ்வழியில் அவர்கள் பலமுறை போய்வந்து பழகிய வர்கள். நாங்கள் அக்கணவாய் உச்சி இடத்தை அடைய இரண்டு மணி நேரம் ஆகிவிட்டது. ஆனால் அங்குச் சேன்று நின்றதும் எங்கள் உள்ளமும் உடலும் புத்துணர்வு பெற்றன. அரைக் கல் தோலைவு சரிவான மலைப்பகுதியில் சேல்லவேண்டியிருந்தது.

## கயிலைக் காட்சி ;

அதன் முடிவில் நாங்கள் அனுபவித்த இவ்வளவு துன்பங்களுக்கும் மாற்ருக எங்களுக்குக் கிடைக்கவிருந்த ஒரு பேரின்ப விருந்து தோலைவிலே காட்சிதந்து நின்றது. நாங்கள் நின்ற இடத்தில் கல்லடுக்கிய கோவிலும் கோடிக் கம்பமும் இருந்தன. அங்கு வந்ததும் '' அதோ '' என்றனர் குதிரைக்காரர்கள், அங்கே கிழக்கே கயிலைச் சிகரம். அன்று அப்போழுது மணி 6. மாலைச் சூரியன் ஒளிக்கரம் நீட்டி நின்ருன். கயிலைப் பகுதியும் மிகத் தேளிவாகக் காட்சிவழங்கியது. தோலைவிலே பல பனிமூடிய சிகரங்கள் தேரிந்தாலும் இது அவற்றின் நடுவே தனிப்பேருமையோடு நின்றது. கண்டதும் '' கயிலாச பதிக்கு ஜே '' '' கயிலை மலையானே போற்றி போற்றி '' என்று எங்களை அறியாமலே எல்லோரும் வாய்விட்டு உரக்கச் சத்தம் இட்டோம். கைகள் தலைமீதூரக் கண்களில் நீர் துளிர்க்க எல்லோரும் அக்காட்சி கண்ட நிலையிலே வாய் ஜேயகோஷம் முழங்க உணர்வேல்லாம் கண் வழியே நிற்க அப்படியே நின்று விட்டோம். மண்ணில் வீழ்ந்து வீழ்ந்து வணங்கிேனும். சலியாத காட்சியாகப் புதுமைக் காட்சியாக அது இருந்தது. அக்காட்சியில் ஒரு தேய்விகம் கலந்து எங்களைக் கவர்ந்தது. சுற்றிலும் உள்ள சூழ்நிலை எங்களுக்குத் தேரியவில்லை. எங்களுக்குக்கிருந்த களைப்பும், அயர்வும் சேன்ற இடம் தேரியவில்லை. மனதிலே நிறைந்த ஒரு மகிழ்ச்சி.

## இயற்கையின் வண்ணக் களஞ்சியம் :

குதிரைக்காரர்கள் விரைவில் மேலே சேல்லவேண்டும் என்று எங்களை அடிக்கடி துன்புறுத்தத் தோடங்கினர்.

அங்குள்ள கல்லடுக்குக் கோவிலை வலம் வந்தோம். சுற்றிலும் உள்ள மலை உச்சிகளைப் பார்த்து மகிழ்ந்தோம். மாலை சூரிய ஒளிபட்டுப் பல சிகரங்களும் பலபல நிறத்தில் காட்சி தந்தன. எண்ணற்ற வண்ணக் களஞ்சியங்கள். நவமணிகளோ என ஐயுறத்தக்கதாக பல நிறங்கள். வெண்மை, கருநீலம், செம்பஞ்சுக்குழம்பு மஞ்சள் இது போன்ற எண்ணற்ற வர்ணஜாலங்கள். ஓரிடத்தில் சூரிய ஒளி ஒரு மலைப்பிளவின் வழியே வந்து மற்றொரு மலை உச்சிப் பகுதியில்மட்டுமே பட்டு அதை பழுக்கக் காய்ச்சிய இரும்புபோல ஆக்கியிருந்தது. இந்த இயற்கை விநோதங்களை இங்கு வந்து காண்போர் தம்வயமிழந்து ஆடிப்பாடி நிற்பர். சொன்னாலும் நம்பமுடியாது. ஆனால் அங்கே சென்று கண்டவர் கண்டதைக் கண்டபடியே விளக்கவும் முடியாது.

## குதிரைக்காரர்களின் நச்சரிப்பு :

குதிரைக்காரர்கள் நச்சரிப்பு அதிகமாகிவிட்டது. "எங்களுக்குப் பசிக்கிறது. நீங்கள் வராவிட்டால் அப்படியே விட்டு விட்டு நாங்கள் சிர்ச்சின் சென்றுவிடுவோம். விரைவில் வாருங்கள் போகலாம்" என்று அடிக்கடி அழைத்தனர்.

அங்கு நாங்கள் வந்து தங்கி ஒரு மணி நேரத்துக்கு மேலாகியும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமும், சுவாமி வித்யாநந்தாவும் வரவில்லை. மற்றவர் யாவரும் வந்தாயிற்று. அவர்களைக் காணாது மேலே செல்ல மனம் வரவில்லை. வந்த வழியே சென்று பார்த்துவரவும் உடல்நிலை இடங்கொடுக்கவில்லை. அவர்கள் வரும்வரை அங்கேயே தங்கியிருப்பதென்ற முடிவோடு நான் கீழே அமர்ந்திருந்தேன். வழிகாட்டி ஜீவன்சிங் வந்தான். "புறப்பட்டுவிட

வேண்டும் '' என்ருன். என் மனக்கவலையைத் தெரிவித்தேன். “ இங்கு இன்னும் சிறிது நேரத்துக்குள் பனி விழத் தொடங்கலாம். பலமான காற்றடிக்கவும் கூடும். குளிர் மிகுதியாகும். உயிருக்கே ஆபத்தாக முடியும். மகந்ஜியுடன் தண்டி ஆட்கள், வித்யாநந்தா, அவரது ஆட்கள் இருவர், இத்தனைபேர்களும் இருக்கிருர்கள். நல்ல முறையில் அழைத்து வந்துவிடுவார்கள். கவலை விட்டொழிக. மேலும் அதற்காக நீங்கள் இந்த ஆபத்தான மலைஉச்சியில் காத்திருத்தல் சரியல்ல. புறப்பட்டு வாருங்கள் '' என்று என் கையைப் பிடித்து அழைத்துச் சென்ருன். எழுந்து நின்று கயிலைப் பகுதியைப் பார்த்தேன். ஒரே வெள்ளையாகத் தெரிந்தது. சிகரம் தெரியவில்லை. வணக்கம் செய்து மனமில்லாமலே கவலை மிகவாட்ட அவனோடு சென்றேன். அதைவிட்டுக் கீழே மணல் சரிவான பகுதியில் 400, 500 அடி இறங்கவேண்டிவந்தது. அச்சரிவில் அப்பொழுதிருந்த களைப்பினுல் நாம் ஒரு இடத்தில் கால் வைத்தால் மணல் சரிந்து நம்மை ஓரிடத்திற்குக் கீழே இழுத்துச் சென்றது. எதோ ஒருவழியாக இறங்கினேம். குதிரைகள் எங்களுக்காகக்காத்துநின்றன. என்னைக்குதிரை மீது தூக்கி அமர்த்திவிட்டுக் குதிரைகளை நடக்கவிட்டு வழிகாட்டி பின்னேவந்தான். அப்பொழுது மாலை மணி 7.

### கூலிகளின் மது மயக்கம் :

குதிரைகளும் களைத்துப்போயிருந்தன. எங்காவது எங்களைத் தள்ளிவிட்டு மேய்ந்து வர அவை தாறுமாருக ஓடத்தலைப்பட்டன. ஆட்கள் எல்லோரும் எங்களுக்குத் தெரியாமல் வழிகாட்டிகள் உட்பட மது அருந்திவிட்டார்கள். அவர்கள் உரத்து ஒன்றுக்கொன்று தொடர்

பில்லாது பேசவும், பாடவும், ஆடவும் தொடங்கிவிட்டார்கள். குதிரைகளும் கட்டுக்கடங்கவில்லை. இவ்விதமான இத்துன்பமும் சேர்ந்து சோர்ந்து வரும் எங்களுக்கு மனக்கலக்கத்தையும் உண்டாக்கியது. இரவு 8 மணிக்கு சிர்ச்சின் ஆற்றங்கரையில் கொண்டுவந்து குதிரைகளை நிறுத்தி மூட்டைகளைக் குதிரை நின்ற நின்ற இடத்தில் அவிழ்த்துப் போட்டுவிட்டு எங்களையும் இறக்கிவிட்டுக் குதிரைகளின் மேலுள்ள சேணத்தை அவிழ்த்துக்கொண்டு விரட்டிவிட்டார்கள். அங்கே ஓரளவு புல் உண்டு.

## சிர்ச்சினில் கூடாரம் :

களைப்பு மேலிட்டினாலும் விழுந்து எழுந்த மயக்கத்தாலும் கூடாரம் அடிக்கக்கூட உதவி செய்யக் கூடிய நிலையில் யாரும் இல்லை. கூடாரங்கள் இல்லாமலும் மூட்டைகளை அங்கங்கே விட்டுவிட்டும் அவரவரும் அங்கங்கும் கீழே படுத்துவிட்டார்கள். பொறுப்புணர்ந்து ஒரு சிலர் சேர்ந்து இரண்டு கூடாரங்களை வழிகாட்டிகளின் உதவியையுங்கொண்டு பெயரளவில் போட்டு முடித்தோம். வழி காட்டிகளும் மது போதையில் இருந்த படியால் அவர்களும் அதிக உதவியாக இல்லை. பிறகு பெருந்துன்பத்தினிடையே படுக்கைகள், மூட்டைகளை எங்களுடையது வடநாட்டினரது என்ற வேறுபாடு தெரியாது எப்படியோ கூடாரங்களில் சேர்த்தோம். கப்பிய இருட்டாகவும் இருந்தது. கூடாரம் அடித்து முடிந்ததைத் தெரிந்துகொண்டு பலரும் அதற்குள் புகுந்து படுக்கைகளை விரித்தும் விரிக்காமலும் படுத்துக்கொண்டார்கள்.

## வழி நோக்கிய விழி :

நானும் எங்களில் துரைசாமிப் பிள்ளையும் ஸ்ரீலஸ்ரீ குரு மகா சந்நிதானமும் அவர்களுடன் வந்த சிலரும் வருவதை

எதிர்நோக்கிக் காத்திருந்தோம். எங்கள் கூடாரத்தில் பொருத்தி வைக்க விளக்குகள் இல்லை. ஹரிக்கேன் விளக்குகளைச் சமயல் உதவியாக நியமிக்கப்பட்டிருந்த இருவரும் கையில் எடுத்துவந்தார்கள். அவர்கள் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தோடு உடன்வந்தார்கள். நேரம் ஆக ஆக எங்களுக்குக் கவலை அதிகமாகிவிட்டது. அப்பொழுது அங்கே எங்களுக்கு உதவியாக வரக்கூடியவர்கள் யாரும் இல்லை. எதிர் சென்று பார்த்து வர வழியும் தெரியவில்லை. எங்களுக்கும் உடம்பு கை கால்களில் மிகுந்த வலி எடுத்தது. களைப்பும் மயக்கமுமாக இருந்தது. இருந்த இடத்தில் கீழே படுக்காமல் கவலைப்பட்டுக் கொண்டிருந் ததைத் தவிர வேறொன்றும் செய்யக்கூடியதாக இல்லை. அப்பொழுது யாராவது ஏதாவது ஒரு சிறு பிழை செய் தாலும் சினம் மிகுந்து எழுந்தது. பேசவும் பிடிக்கவில்லை. நிற்கவும் முடியவில்லை. உட்கார்ந்தால் அயர்ந்து கீழே படுத்துவிட நேரிடும் போலவும் இருந்தது.

## ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் வந்தார்கள் :

இந்த நிலையில் இரவு 9-30 மணிக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானமும் சுவாமிகளும், மற்றவர்களும் வந்து சேர்ந் தார்கள். படுக்கைகளை விரித்துத் தயாராக வைத்திருந் தோம். வந்தவுடன் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் அதில் படுத்துவிட்டார்கள். தண்டி ஆட்கள் யாரும் வரவில்லை. தருமையிலிருந்து உடன் வந்த பரிகலச் சமையல்காரனை ஒருவழியாக எழுப்பி மண்ணெண்ணெய் அடுப்பை(stove)ப் பற்றவைத்து கஞ்சி வைக்கச் சொன்னோம். உதவிகள் செய்து கஞ்சி வைத்து ஆளுக்குக் கொஞ்சம் கொஞ்சம் கொடுத்து அருந்தச் செய்தோம். பலர் அதை ஏற்றுக்

கொள்ளக்கூடிய உணர்வுகூட இல்லாமல் அயர்ந்து கிடந்தனர். இரவில் குளிரும் அதிகம்.

## பொழுது புலர்ந்தது :

மறுநாள் பொழுது புலர்ந்தது காலை 6-30 க்குமேல் தான் எல்லோரும் எழுந்தோம். சுற்றுப்புறக் காட்சிகள் மிக அழகாக இருந்தன. எங்களுக்குப் பக்கத்திலேயே மற்றுமொரு கோபுர அமைப்பு. எதிரே சிர்ச்சின் ஆறு, ஆற்றின் இருகரைகளிலும் மலை முகடுகள். நாங்கள் படுத்திருந்த இடம்முழுவதும் ஆட்டுப்புழுக்கையும் ஆட்டு ரோமமும் நிறைந்துகிடந்தன. முதல்நாளிரவு அப்பொழு திருந்த நிலையில் புழுக்கை நாற்றமோ அல்லது கீழே அது கிடப்பதோ எங்களுக்குத் தெரியவில்லை. ஆனால் குளிர் மிகுந்த இடங்களில் இதுபோன்ற புழுக்கைகளின்மீது படுத்துக்கொள்ளுதல் நலமாம். குளிரால் விறைத்து உணர் வற்றிருப்போரைக் குதிரைச் சாணக்குவியல், ஆட்டுப் புழுக்கைக்குவியல் இவற்றில் கிடத்திவைத்தால் உடம்பில் சூடேறி மீண்டும் உணர்வுண்டாகும் என்று சொல்கிறார் கள். அப்பொழுதும் எங்களுக்கு மயக்கமும் களைப்பும் மிகுந்திருந்தன. சமயல் கூடாரமும் மூன்றாவது கூடார மும் அமைத்தோம். சமையல் காரருக்கு உதவியாக இருந்து காலையில் காப்பிபோட்டு பிஸ்கோத்தும் காப்பியும் தகரக்குடுவையில் சேமித்து வைக்கப்பட்டிருந்த பழ வகைகளும் (Preserved Fruits) அருந்தினோம். அன்று காலை 9 மணி அளவில் யாத்திரையைத் தொடர்ந்து செல்வதெனத் திட்டம். காலைக் கடன்களை முடித்துக் கொண்டு பனிக்குளிருள்ள சிர்ச்சின் ஆற்றில் குளித்து முழுகினோம். படுக்கைகள், துணிமணிகள் எல்லாம் கணவாய்ப் பகுதியில் வந்ததில் ஈரமாக இருந்தது. அவற்றைக் காலை வெய்யிலில் இட்டுக் காயவைத்தோம்.

## மருத்துவ உதவி :

காலை 8 மணி அளவில் தண்டிக்காரர்கள் வந்தார்கள். அவர்களில் இருவர் கீழே விழுந்து அடிபட்டுக் காயமுற்று இருந்தார்கள். காய்ச்சலும் இருந்தது. இரவு வழியில் ஒரு குகையில் தங்கியிருந்ததாகச் சொன்னார்கள். அப் பகுதியில் ஓநாய்கள் அதிகம் என்றும் ஆகையால் விளக்கு களோ அல்லது நெருப்புக் கணப்புக்களோ இல்லாது படுத்திருந்தால் அவை வந்து தொல்லைதரும் என்றும் சொன்னார்கள். மலைக் குகைகளில்கூட அவை வந்து விடுமாம். வந்த தண்டி ஆட்களுக்கு மருந்து கொடுக்கப் பட்டது. பொதுவாக எல்லோருக்கும் உயிர்சத்து மாத்திரை கள் (Vitamin Pills) மயக்கம் தெளிவிக்கும் மாத்திரைகள் முதலியன கொடுக்கப்பட்டன.

## தொண்டு கிழவரின் மனவுறுதி :

எங்களுடன் வந்த வயோதிகர் ஒருவர் அந்நேரத் திலும் வந்துசேரவில்லை. அவருக்கு வயது 95. நயினி தாலைச் சேர்ந்தவர். அரசாங்க வேலையிலிருந்து விடுதி பெற்று உபகாரச் சம்பளம் பெற்றுவருபவர். அந்த வயதிலும் மிடுக்கான நடையும் உறுதியான பல்லும் சொல்லுமுடையவர். கண் பார்வையும் நன்ருக இருந்தது. பெரிய குடும்பமுடையவர். பெண்கள், பிள்ளைகள், பேரர் கள், கொள்ளுப்பேரர்கள் முதலியோரும் இருக்கின்றனர். வயது ஆன நிலையில் இரவில் அவருக்குத் தூக்கம் வருவ தில்லை. இருட்டிச் சிறிது நேரத்தில் ஒரு மணி ஒன்றரை மணி நேரமே உறங்குவார். அதிகாலையில் குளித்து சிவச் சின்னங்கள் அணிந்து பகல்முழுவதும் பாராயணம்செய்தும் இரவு முழுவதும் தோத்திரம் சொல்லியும் காலம் கழிப்பர்.

விண்பேச்சே கிடையாது. இந்த நல்லவருக்கு அந்த இளமைப் பருவத்தில் கயிலே செல்லும் விருப்பம் மேலிட்டது. கையில் பணம் இல்லே. வயது கருதி மக்கள் அவரைத் தனியே யாத்திரைக்கு அனுப்ப மறுத்தனர். ஆனால் உறுதி தளரவில்லே முதியவருக்கு. நயினிதாலில் உள்ள செல்வர்களேயும் வியாபாரிகளேயும் அணுகி நிதிசேர்த்தார். ரூ. 100, 150 சேர்ந்தது. அதுபோதாதாக இருந்தது. இரண்டு மூன்று வருடங்களாகச் சேகரம்செய்வதும் செலவுசெய்துவிடுவதாகவும் கழிந்தது. பிறகு எல்லோரும் அவரைப்பரிகசிக்கத் தொடங்கினர். முன்போலப் பணம் கொடுக்கவும் மறுத்தனர். இவ்வாண்டு கையில் கிடைத்தது ரூ. 75. அதை எடுத்துக்கொண்டு சுவாமி வித்யாநந்தாவிடம் வந்தார். சுவாமிகள் அந்த அளவு பொருள் போதாது; வயதும் அதிகமாகிவிட்டது. இந்த முயற்சி வேண்டாம். மனதில் உறுதி இருந்தால் கயிலேநாதன் இருந்த இடத்திலே காட்சி அளிப்பான் என்று சொல்லிவிட்டார்கள். பெரியவர் உறுதியாகப் புறப்பட்டுவிட்டார். பாகேஷ்வரம் வரும் வழியில் எங்களோடு வந்து சேர்ந்துகொண்டார்.

சிறு பையில் பாராயண நூல்கள். உடுத்தியிருந்த ஆடையோடு வந்திருந்தார். பலரும் எடுத்துச்சொல்லியும் அவர் கேட்பதாயில்லே. "எனக்கோ வயதாகிவிட்டது. இப்பொழுதோ இன்னும் சிறிது நேரத்திலோ இறக்கத்தான் போகிறேன். நான் இறப்பதால் என்னே எதிர்பார்த்து வருந்தவேண்டியவர்கள் யாருமில்லே. அருளிருந்தால் கயிலே வந்து தரிசனம் காண்பேன். இல்லேயேல் கயிலே செல்லும் வழியிலே அந்த முயற்சியிலே அந்த நினேப்போடு இறப்பேன். என்னே யாரும் தடைசெய்ய வேண்டாம். எனக்கு வேண்டுவதெல்லாம் ஒரு வேளே சிறிது உணவு. இரவில் தங்க ஒரு மூலே. அவ்வளவே.

அந்த உதவி செய்தால் போதும் '' என்றார். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் போர்த்திக்கொள்ள முரட்டுக் கம்பளியும் செலவுக்குப் பணமும் கொடுத்தார்கள். அவர் உண்டாதுரா கணவாய்ப் பகுதிவரையிலும் எங்களுடன் வந்தார். ஆனால் கால்நடையாகவே வந்தார். அக் கணவாயை அவர் கடந்ததை யாரும் பார்க்கவில்லை. முதல் நாள் நாங்கள் பட்ட தொல்லையில் யாரும் அவர் உடன் வருகிறாரா என்பதைப் பார்க்கவில்லை. இன்று முழுவதும் நாங்கள் தங்கியிருந்த இடத்திற்கு அவர் வந்து சேரவில்லை. என்ன ஆனாரோ ? யார் அறிவார் ?

## புறப்படலாமா ? :

புறப்படுவதற்கு ஏற்றாற்போல உணவு முடித்துக் கொண்டோம். எல்லோருக்கும் அன்று முழுவதும் தலைச் சுற்றல், மயக்கம், வாந்தி, மிகுந்த களைப்பு இவைகளில் ஏதாவது ஒன்றோ பலவோ இருந்தன. சிலருக்குக் காய்ச்சலும் கண்டுவிட்டது. உடம்பு கை கால்களில் வலியும் சோர்வும் எல்லோருக்கும் இருந்தன. '' புறப் படலாமா '' என்றார்கள் சுவாமிகள். '' புறப்படுவோம். சிறிது நேரம் சென்று புறப்படலாமே '' என்று பலவாறாகக் காலங்கடத்தும் முறையில் அவரவரும் சொல்லிக்கொண் டிருந்தார்கள். அங்குள்ள நிலைமையை ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தினிடம் தெரிவித்துக்கொண்டேன். மறுநாள் புறப்பட அனுமதியும் பெற்றுக்கொண்டேன். சுவாமிகளை அணுகி எல்லாவற்றையும் விளக்கமாகக் கூறி மறுநாள் புறப்படுவதென்று முடிவுசெய்தோம். குதிரைக்காரர்களும் எங்களுக்காக அன்று அங்குத் தங்கவேண்டியிருக்கிற தென்று சொல்லிக்கொண்டே தங்கிவிட்டார்கள். படுக்கை களை விரித்துப் போட்டுக்கொண்டோம். எல்லோரும்

உடம்பைக் கிடத்திப் படுத்தோம். நீண்டநேரம் அப்படியே கிடந்தோம். மாலை 3 மணி அளவில் மேலே சொன்ன களைப்பு முதலிய எல்லாம் படிப்படியாய்க் குறைந்து விட்டது. மாலையில் மகிழ்ச்சியோடு காப்பியும் சிற்றுண்டியும் தயார் செய்து எல்லோருக்கும் வழங்கினோம்.

**சாளக்ராமம் :**

அப்பகுதிகளில் சாளக்ராமம் கிடைக்குமென்று சுவாமிகள் சொன்னார்கள். லக்ஷ்மீ சர்மாவும் வேறு சிலரும் சிறிது தொலைவு சென்று பார்த்துவந்தார்கள். லக்ஷ்மீ சர்மாவுக்குக் கல்லாகிய மீன் (Fosilitised fish) ஒன்று கிடைத்தது. 4, 5 அங்குல நீளத்தில் ¾ அங்குல பருமனுடையதாக இருந்தது அது. உயிருள்ள மீனுக்குள்ள எல்லாம் அப்படியே அமைந்திருந்தது. உயிரில்லை. கல்லாக இருந்தது. பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் மண்ணில் புதைந்து கல்லானது அது.

**கூடாரத்தில் பாராயணம் :**

அன்று குருவாரநன்னாள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் மௌன உபவாச நாள். மாலை வந்ததும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் தங்கியிருந்த கூடாரத்திற்குச் சென்று கயிலைத் திருமுறைகளையும் பல தோத்திரப் பாடல்களையும் எல்லோரும் பாராயணம் செய்து மகிழ்ந்தோம்.

**மழையும் காற்றும் :**

ஒவ்வோரு கூடாரமாகச் சென்று அங்குள்ளோர் நலனறிந்து வந்தோம். மாலை 4 மணிக்குப் பெருந்தூற்றலும் பெருங்காற்றும் அடிக்கத்தொடங்கின. அரைமணி

நேரத்துக்குள் நின்றுவிட்டன. பிறகு இலேசாகக் காற்று அடித்துக்கொண்டே இருந்தது. மழை வந்ததிலிருந்து குளிரும் வந்துவிட்டது. சூரியன் மலைவாயிலில் விழும் நேரத்தில் முதல்நாள் கண்டதுபோலச் சுற்றிலுமுள்ள மலைச் சிகரங்கள் பலபல நிற ஒளி வண்ணங்காட்டி அழகு செய்தன. நாங்கள் தங்கியிருந்த இடத்திலிருந்து கிழக்கே அரைக்கல் தொலைவில் சிற்ருறு ஒன்று வந்து சிர்ச்சின் ஆற்றில் கலந்து ஓடியது. அதிகாலையில் இவ் வாறுகளில் தண்ணீர் குறைவாகவும் உச்சி வேளைக்குப் பிறகு பலமடங்கு பெருக்காகவும் ஓடுகிறது. அன்றிரவு குளிரும் அதிகமாக இருந்தது. மறுநாள் காலை 9 மணி அளவில் உணவு முடித்துக்கொண்டு புறப்பட்டோம்

## கயிலைக் காட்சி இரண்டாவது முறை:

வழி ஒரு கல் தொலைவு ஆற்றின் கரை வழியே சென்றதும் இரண்டு ஆறுகள் குறிக்கிட்டன. சிம்நாக், டோக்பூக் என்பன அவை. சிர்ச்சின் ஆறு மேலேகண்ட உபநதிகளும் கலந்து பெருநதியாகியிருக்குமிடத்தையும் கடந்து பிறகு ஒரு பெரிய மேட்டின்மீது ஏறிச்செல்கிறது வழி. அந்த மேட்டின் உச்சியில் ஏறியதும் இரண்டாவது முறையாகக் கயிலாய தரிசனம் கிடைத்தது. அங்கு இந்திய எல்லைக்கோடு அமைந்திருக்கிறது. அதைத் தாண்டி அப்புறம் இறங்கினுல் திபேத் பகுதி. அதைத் தாண்டி சிலிம்பாணி என்னும் ஆற்றைக் கடந்து செல்ல வேண்டி இருக்கிறது. இங்கே கயிலை வழி ஒன்றும் சிப்சிலின் செல்லும் வழி ஒன்றும் பிரிகிறது. இத னருகில் சுற்றிலும் கோட்டையின் வெளிச் சுற்றுச்சுவர் போன்ற அமைப்புடையதாக நடு இடத்தில் எதுவுமில்லாத

வேற்றிடமாக மலே வளர்ந்திருக்கிறது. வீடுகளே இல்லாத பாழடைந்த கோட்டைபோன்றிருக்கிறது அந்த அமைப்பு.

## வழி மயக்கம் :

இங்கிருந்து இரண்டு மூன்று கல் தோலேவு சென்றதும் தஜாங் என்னும் ஆற்றின் படுகை இடத்தை அடைந்தோம். அந்த ஆற்றுக்குப் பேயர் சுன்னுக் (Chunnak). இங்கு தங்குவதேன்ற திட்டத்தோடு வந்தோம். ஆனுல் அப்போழுது மதியம் மணி 1-30 தான். ஆகையால் மேலே சிறிது தோலேவு சேல்லலாம் என்று பயணம் தோடரப்பட்டது. வரவரக் கடல் மட்டத்தைவிட 12,000, 13,000 அடி உயரமான நிலத்தில் சேன்ருலும் உயரமான மலேகள் எதுவும் கிடையாது. சிறு சிறு மணற் குன்றுகள்தான் எதிர்ப்பட்டன. காட்டுக் குதிரைகள் (ராம்ஜிகோடா). முயல்கள் அங்கு மேய்ந்துகோண்டுநின்றன. வழியில் சிறிது புல்லும், டாடு என்ற சிறு முள்ளுள்ள குத்துச் சேடிகளும் முளேத்திருந்தன. அதுவும் அடர்ந்திருப்பதில்லே. திட்டுத் திட்டாக முளேத்திருந்தன. சரியான பாதை அமைப்புக்களில்லே. ஆகையால் அது வழியே பலமுறையும் வந்து பழகிய குதிரைக்காரர்களுக்கும் வழி மயக்கம் வந்துவிட்டது. வழிகாட்டிக்கும் வழி புரியவில்லே. இந்த நிலேயில் ஒரு கோடி வழியைப் பின்பற்றிச் சேன்றுகோண்டிருந்தோம். ஒருகல் தோலேவு சேன்றதும் இரண்டு திபேத்தியர்கள் சில யாக்குகளே மேய்த்து நின்றனர். அவர்களே அணுகி வழிகேட்கப்பட்டது.

## கும்சின் :

எங்களோடு போதி சுமந்து வந்த குதிரைகளே அவ்விடத்தில் அன்ருேடு கணக்குத்தீர்த்து அனுப்புவதாக இருந்தது. மேற்கோண்டு போதி சுமக்க யாக் அல்லது

குதிரை வேண்டும். அதேபோல அங்கு யாக் மேய்த்து நின்றவர்களும் கூலியை எதிர்பார்த்துக் கொண்டிருந்த வர்கள்தாம். ஒருவருக்கொருவர் தேவைப்பட்டவர்களாக ஆகிவிட்டபடியால் அவர்களும் எங்களோடு உடன்வர இசைந்தார்கள். அவர்களைப் பணியாட்களாக அமைத்துக் கொண்டு கும்சின் என்ற இடத்தை நாங்கள் அடைந்த பொழுது மாலை மணி 6. அங்குக் குணியாங்தி நதியைக் கடந்து அக்கரையில் ஒரு மணல் திட்டின் சரிவில் தங்கி னோம். குணியாங்தியில் தண்ணீர் பனிக்குளிர் உள்ளதாக இருந்தது. அதில் அரைக்கல் தொலைவு நடந்து சென்றதில் கால்கள் மறத்துவிட்டன. சட்லிஜ் நதியின் உபநதி குணியாங்தி. குங்கிரி பிங்கிரியில் உற்பத்தியாகி வருகிறது. நாங்கள் தங்கியிருக்கும் இடத்திற்கு அருகில் ஒரு லாமா மடம் இருப்பதாகவும் சொன்னார்கள்.

## திபெத் பீடபூமி :

திபேத் பகுதியில் பெரும்பாலும் மிக உயரமான மலைத் தொடர் அதிகமில்லை. சிறுசிறு மணற் குன்றுகளும் மலைகளுமே அதிகம். 12,000 லிருந்து 16,000 அடி உயர மான பீடபூமி. உலகில் உயரமான இடத்தில் அமைந்த நாடு திபேத். உலகின் கூரை. அங்கு முன்னேசொல்லப் பட்டிருக்கும் சிறு குன்றுகளுக்கிடையில் 8, 10 மைல் நீள அகலமுள்ள பெரிய பெரிய பொட்டல் வெளிகள் உள்ளன. அவ்வெளிகளில் ஒருபகுதியில்மழை ஒருபகுதியில் புழுதிப் புயல். ஒரு பகுதியில் நல்ல வெய்யில் ஒரு பகுதியில் ஆலங்கட்டி மழை, தண்ணீர் மழை இவைபோன்ற பலவும் ஒரே காலத்தில் நிகழ்ந்து கொண்டிருக்கும். முடிவில்லாத வழியில் சென்றுகொண்டேயிருப்பதாகத் தோன்றும். கோரைப்புல் போன்றதும், சிறு சிறு இலையும் பலநிறப்

பூக்களுமுடைய தரையோடு படரும் சேடிகளும், ஓரடி ஒன்றரை அடியே உயரமுள்ள சிறு முள்ளுள்ள குத்துச் சேடிகளும் (டாமா), சில இடங்களில் வேங்காயப் பூண்டு, மருக்கோழுந்து போன்றவைகளும், ஒருவகைக் கீரையும் ஆகிய இவைகள்தாம் அங்கு அதிகம். மரங்களே கிடை யாது. யாக்குகள், குதிரைகள், ஆடுகள் முதலியன இவற் றைத்தான் மேய்ந்து உயிர்வாழ்ந்து வருகின்றன.

## மழையும், பனியும், புயலும் :

அந்தப் போட்டல்வேளிகளில் காற்றும் அதிகம். போதுவாக உச்சி ஒருமணிக்கு மேல் காற்று அடிக்கத் தோடங்கும். வேய்யில்காய்வது அதிகமாக உறைக்காது. திடீரேன்று ஒரு காற்றடிக்கும். மேகம் வந்து கவியும். அந்த நிழல் வந்ததும் குளிரத்தோடங்கும். ஆலங் கட்டி மழை மிளகு அளவிலிருந்து சுண்டைக்காய் அளவு வரை பருமன் உள்ள பனிக்கட்டிகளாக விழும். அதுவும் வில்லிலிருந்து எய்யப்படுவனபோல நம்மீது வந்து தாக்கும். குடை பிடித்துக்கோள்ள முடியாது. உடனே கீழே குந்தியிருந்து டாமாப் புதர்போன்ற வற்றில் குனிந்து ஒண்டிக்கோள்ளவேண்டும். அந்த மழை 15 நிமிடங்கள் அல்லது 30 நிமிடங்கள்தான்பேய்யும். அது நின்றதும் தரையேல்லாம் முத்துக்களை வாரி இறைத்ததைப் போலப் பனிக்கட்டிகள் வேள்ளையாகப் பரவிக்கிடக்கும். கையில் அள்ளலாம். வாயில் இட்டுக்கோள்ளலாம். அரை மணி முக்கால் மணி நேரத்தில் கரைந்துவிடும். தண்ணீர் மழை அதிகம் இராதாம். ஆனால் அந்த மழையைத்தான் அம்மக்கள் எதிர்பார்க்கிறார்கள். பனிக்காலத்தில் எங்கும் பனி பேய்து உறைந்துவிடுமாம். அக்காலங்களில் புல் பூண்டுகள்கூடக் கிடைக்காது. ஆடு மாடுகள் குதிரைகள்

முதலியன துன்பப்படுமாம். காய்ந்த இறைச்சி, பார்லி முதலியனதாம் அவற்றிற்குத் தீனி. குளிரில் விரைத்து சில இறந்துவிடுவதும் உண்டு. காற்றும் புயல்வேகத்தில் இருக்கும். பனிஉறைந்த எல்லைகடந்த இமயம்முதலியவற் றிலிருந்து பனி உருகி வருவனவாகவும் பெரிய ஏரிகளி லிருந்து வருவனவாகவுமே அங்குள்ள ஆறுகள் எல்லாம் இருக்கின்றன. இந்தியப்பெருநதிகளான சட்லீஜ், சிந்து, பிரும்மபுத்திரா, காளி, கோக்ரா முதலியன அங்கிருந்து உற்பத்தியாகிவருவனவே. ஆலங்கட்டி மழைத்துளிகள் நம்மீது பட்டால் அந்தந்த உடலுறுப்பும் மறத்துவிடும். ஆறுகளைக் கடக்கும்போழுது தண்ணீர் பனிக்குளிராக இருக்குமாகையால் கை கால்கள் மறத்துவிடுகின்றன.

கும்சினில் :

நாங்கள் கும்சினில்வந்து தங்கியதும் 10 நிமிஷநேரம் தண்ணீர் மழைத்தூற்றல் போட்டது. சூரியன் மலை வாயிலில் விழத்தோடங்கியதும் குளிரும் மிகத் தோடங்கி விட்டது. எதிரே உள்ள டாமாச் சேடிகளைச் சமையல் உதவி ஆட்கள் ஒடித்தெடுத்து வந்தார்கள். பச்சையாக அடுப்பி விட்டு பற்றவைத்தார்கள். நன்றாக அவை கனிந்து எரியத் தோடங்கின. இங்கு வந்துசேரும் வழியில் குதிரையி லிருந்து சிலர் விழுந்து அடிபட்டுவிட்டார்கள்.

யாக் - சடைமாடு :

சடைமாடு பசு இனத்தைச் சேர்ந்தது. ஆனால் எருமையின் குணம் படைத்தது. உடல் முழுவதும், முக்கால் அடி, அரை அடி நீளமுள்ள அடர்த்தியான மயிரடர்ந்திருக்கும். வாலில் குதிரைவால்போல மயிர் அடர்த்தியாக இருக்கும். வேண்சாமரம் அதிலிருந்து

செய்யப்படுகிறது. கருப்பு, வெளுப்பு நிறங்களில் அவை அமைந்திருக்கும், ஆகையால் அவைகளை சமரி, சவுரி மாடுகள் என்றே அம்மக்கள் அழைப்பர். அதிக அளவு பால் தரும் இனம். பாலில் கொழுப்பு அதிகம். வெண்ணெ அதிகமாகக் கிடைக்கும். அந்தப் பால், தயிர் இவற்றில் மோச்சை நாற்றம் இருக்கும். அம்மக்கள் அதன் பால், தயிர் இவைகளையும் வெண்ணெயையும் உண வாகக்கொள்வர். முகத்தில் வெண்ணெயைப் பூசிக்கொள் வர். நெய் தயாரித்து விளக்கெரிப்பார்கள். கோவில்கள், மடங்களில், நெய் விளக்குகள் தாம் உண்டு. அவற்றின் மயிரைக் கத்தரித்தெடுத்து கூடாரத் துணிகள், முரட்டுக் கம்பளங்கள்நெய்துகொள்வர். உணவுத்தட்டுப்பாடு ஏற்பட் டால் அந்தமாட்டிறைச்சியே உணவுமாகும். கடாக்களை யாக் என்றும் கிடேரிகளை டேமோ என்றும் சொல்லுவர். அந்த மாடுகளும் நம் நாட்டு மாடுகளும் கலந்து உண்டாகும் மாடுகளை ஜப்பு என்று பெயர் சொல்வர். சவாரி செய்யவும் பொதி சுமக்கவும் இவைகளை அதிகமாகப் பயன்படுத்துவர். எருமைகளைப்போல் தண்ணீரைக் கண்டால் அவற்றில் அமிழ்ந்து படுத்துவிடும். 10,000 அடிக்குக் கீழே அவை வரமுடியாது. சுடுவெய்யலை அவை தாங்கமுடியாது. அவற்றில் சவாரி செய்வதும் கஷ்டம். சேணமிட்டாலும் தாறுமாறுகக் குதித்துக்குதித்து ஓடி மேலே உள்ளவர்களைக் கீழே தள்ளிவிடும். பொதிகளையும் கீழே தள்ளிச் சேதப்படுத்தும். ஆகையால் தகரடப்பாக்கள், கண்ணாடிக் குடுவைகள் முதலிய நசுங்கக்கூடிய உடையக்கூடிய பண்டங்கள் எதுவானுலும் அவற்றின்மீது ஏற்றிவிட்டால் அவை பிறகு நல்லநிலைமையில் நமக்குக்கிடைக்காது. வழி களில் மேய்ந்துகொண்டே செல்லும். அங்குக் கிடைக்கும் புல, டாமாக்கொழுந்துகள் சிறு படர்செடிகள் இவற்றைத்

தின்றுகொண்டே போகும். அவைகளின் சாணங்களை எரிபொருளாக அம்மக்கள் பயன்படுத்திக் கொள்கிறார்கள்.

யாக் சுமை :

எங்களோடு வந்த பொதி குதிரைகளுக்குக் கூலி கணக்குப் பார்த்துத் தீர்த்துக் கொடுத்தனுப்பப்பட்டது. அவற்றிற்கு மாற்றாக அன்று வழி காட்டவந்த யாக்குகள் ஏற்பாடு செய்துகொள்ளப்பட்டன. இரண்டு குதிரைகளில் ஏற்றக் கூடிய சுமையை ஒரு யாக் (சடைமாடு - சமரிமாடு) சுமக்கும். அதைவிட அதிகமாகவும் ஏற்றிக் கொள்வார்கள் யாக் வாலாக்கள். குதிரைக்காரர்கள் மூட்டை தூக்கிகள்போல அவர்கள் தராசுகொண்டு நிறுத்து எடை பார்த்து ஏற்றுவது கிடையாது. நிதானமாகத் தூக்கிப் பார்த்துக்கொள்கிறார்கள். பெருஞ்சுமையை அவர்களால் தூக்கவும் இயலும்.

யாக் சவாரி :

ஆனால் இவர்களாலும் சில துன்பங்கள். யாக்மீது சவாரி செய்யலாம், குதிரையைப் போல் அதையும் சேணமிட்டுத் தருவார்கள். கடிவாளங்கள் கிடையாது. ஆனால் அவைகளின் மூக்கில் குத்தி வளையமிட்டு அவைகளைக் கட்ட கயிற்றை அவ்வளையத்தில் பிணைத்திருப்பார்கள். அக்கயிற்றை லகானாகக் கையில் பற்றிக் கொள்ளலாம். யாக் வாலாக்கள் உடன் வருவார்கள். யாக்குகள் இயற்கையாக மந்தை மந்தையாகச் செம்மறி யாடுகள் போல ஒன்றோடு ஒன்று உரசிக்கொண்டும், இடித்துக்கொண்டும் சேர்ந்து சேர்ந்து போகின்றன. பொதி சுமக்கும் யாக்குகளும் சவாரி போகும் யாக்கு களும் ஒன்றோடு ஒன்று இடித்துக்கொண்டு பக்கம்

பக்கமாகச் செல்வதால் மேலே ஏறிச் செல்வோருக்குத் துன்பமாக இருக்கும். லகான் போன்ற வசதி இல்லாத படியால் அதன் கழுத்தின் மேற்பகுதியில் வளர்ந்து உள்ள மயிரைக் கையில் பற்றி நடத்திச் செல்லவேண்டும். இயற்கையாக முரட்டுச்சுபாவமுடைய பிராணிகளாகை யால் : அடிக்கடி தன்மீது உள்ளவர்களைக் கீழே தலைகுப்புற தள்ளிவிட்டு நாலுகால்ப் பாய்ச்சலில் ஓடவும் தலைப்படும். அப்போழுதேல்லாம் யாக்வாலா அவை களை அடக்கிக்கோண்டு வரமாட்டான். சவாரி செய்வோர் கீழே விழுந்து அடிபடுவதைக் கண்டு சிரிப்பான். சவாரியில் அவர் படும் துன்பத்தைக்கண்டு பரிகசித்துச் சிரிப்பான். அடிக்கடி பேப்பர் மிண்ட், ரோட்டி, சிகரேட், இவைகளில் ஏதாவது ஒன்று கோடுத்துக்கோண்டே வரல்வேண்டும். தங்கு மிடங்களில் கூடாரங்களினுள்ளே அழையாமலே வந்து அமர்ந்து கோள்வான். அங்குள்ள படுக்கை, தலையணை, போர்வை, சட்டை மற்ற எல்லாப் போருள்களையும் எடுத்துப் பார்த்துப் பார்த்துத் தம்முள் சிரித்துக்கோள்வர். உணவு அருந்தும்போழுது நமக்கு அருகில் வந்து அமர்ந்துகோள்வர். எச்சில் சோருக இருந்தாலும் ஒரு கை அள்ளிக் கோடுத்தால் அதையும் ஏற்று உண்பர். சமையலிடத்திலும் வந்து, நாம் சமைப்பதைப் பார்த்துப் பார்த்துச் சிரித்திருப்பர். நாகரிகமில்லாது நடந்துகோள்வர். இதைத் தடுத்தால் கோபங்கோள்வர்.

## கும்சினை விட்டுப் புறப்பாடு :

அன்று காலை 10 மணி அளவில் கும்சினை விட்டுப் புறப்பட்டோம். வழியேல்லாம் மணல் வேளி, 1000, 2000 அடி உயரமுள்ள மணற்குன்றுகளும், சிற்றோடை

களும், மழை பெய்து வார்ந்தோடிய பகுதிகளும், அறுத் தோடிய பகுதிகளும் பல இருக்கின்றன. வழி நடப்பில் துன்பந்தான்.

## குதிரைக்காரனின் வம்பு :

எங்களோடு வந்தவர்களில் ஒருவர் குதிரை மீது ஏறிக்கொள்ளாமல் துன்பப்பட்டு நடந்து வந்தார். சவாரிக் குதிரை ஒன்று ஆளில்லாது வந்துகொண்டே இருந்தது. அந்த நண்பரை வற்புறுத்தி அந்தக் குதிரை மீது ஏறிக் கொள்ளச்சொன்னோம். முன்னே சொல்லியிருப்பதுபோல் அன்று பயணத் தொடக்கத்திலேயே அதன்மீது அவர்தம் கம்பளியையோ அல்லது வேறு ஏதாவது ஒன்றையோ இட்டு அமர்த்திக் கொள்ளாமல் நடுவழியில் ஏறவந்ததும் குதிரைக்காரன் அவரை ஏற்றிக்கொள்ள மறுத்தான். இவர் அக்குதிரை மீது இடவந்த கம்பளியைக் கீழே தள்ளி விட்டான். நண்பருக்குக் கோபம் வந்துவிட்டது. இரைந்து சண்டையிட்டார். அவனுக்கு இவர் பேசும் மொழி தெரியாது. இவருக்கும் அவன் பேசும்மொழி தெரியாது. பகாடிகள் பொதுவாகவே இரைந்தே பேசுவர். இருவரும் உரக்கப் பேசிப்பேசி அவர்களின் சீற்றமும் உச்சநிலை அடைந்துவிட்டது. "மார்க்கயா, மார்க்கயா" என்று குதிரைக்காரன் சத்தமிட்டுக்கொண்டு அவரை அடிக்கவந்துவிட்டான். வெகு தொலைவில் பின்னே வந்துகொண்டிருந்த எங்கள் செவிகளில் "மார்க்கயா" என்ற சத்தம் விழுந்ததும் வேகமாக அங்குச் சென்று நிலைமையைக் கண்டு இருவரையும் விலக்கிவிட்டோம். அதற்குள் முன்னே சென்றுகொண்டிருந்த வழி காட்டி யும் வந்து சேர்ந்தான். "முன்னேற்பாடில்லாது இவர் வந்து என் குதிரையில் அதிகாரம் செய்து ஏறுகிறார்.

இது நியாயமா?'' என்றான் குதிரைக்காரன். அவன் நல்லவனில்லைதான். ஆனால் நண்பருக்கும் அவன் சொல்வது புரியாது தன்னை அவமதித்துவிட்டான் என்றே கடைசிவரை மனத்துன்பங் கொண்டார். பிறகு ஒரு வழியாக முடிவு செய்து வேறொரு நண்பர் வந்த குதிரையில் இவரை ஏற்றிவிட்டு வம்புக்காரன் குதிரையில் அந்த நண்பர் ஏறிக்கொண்டார். குதிரைக்காரன் சவாரிக்கு வாடகை பெற வந்தவன். வழியில் வந்த நண்பர் எங்கள் கோஷ்டியைச் சேர்ந்தவர். மதிப்புக்குரியவர் என்று தெரிந்தும் இது போன்று வம்பு செய்துவிட்டான். அவன் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு காரணத்தைச் சொல்லி வந்தவர்களிடம் மாறுகொள்வான். மற்றக் குதிரைக்காரர் களையும் தூண்டிவிடுவான். கடைசியாக கோபக்காரர் ஒருவர் அவனை நன்றாக அடித்து உதைத்தும் அவன் அடங்கவில்லை. ஆனால் முதலில் சொன்ன நண்பருக்கும் அவனுக்கும் உண்டாகிய குழப்பம் ஒருவர் மொழி ஒருவருக்குத் தெரியாத காரணத்தால் விளைந்ததுதான்.

கும்சினைவிட்டு 4, 5 மைல் தொலைவு சென்றதும் பனி உறை மாந்தாதா இடதுகைப்புறத்தே காட்சி அளித்தது. ஞானிமாமண்டியும் அப்பக்கத்தில்தான் என்று சொன்னார் கள். கயிலைப் பகுதியை நெருங்கிக்கொண்டிருக்கிறோம். இந்த இடங்களில் யாக்வாலாக்களுக்குத்தான் வழிதெரியும். மற்றவர்களுக்கு மயக்கமாகத்தான் இருக்கும். யாக் ஓட்டிகளும இதுபோன்ற பல சிகரங்களையும் குறிவைத்துத் தான் செல்கிறார்கள்.

வரி வசூலிப்பவர்:

கும்சினை விட்டுப் புறப்படுமுன் அந்த நாட்டு வரி வசூலிப்பவர் ஒருவர் மின்னல் வேகத்தில் அங்கு வந்து

சேர்ந்தார். அவர் அழகாக உடை உடுத்தியிருந்தார். அழகானதும் மிக வேகமாகச் செல்லக்கூடியதுமான திபேத்தியக் குதிரைமீது வந்தார். குதிரைமீது இருந்த படியே மிடுக்காகப் பார்வையிட்டார். இக் குழுவினர் யார் என்று கேட்டார். யாத்ரீகர் என்றதும் சுற்றிலும் நோட்டம் விட்டார். வேகமாக எங்களை விட்டகன்றார். வியாபாரிகள் என்றோ அல்லது எங்களிடம் வியாபாரப் பொருள் எதுவுமிருப்பதாகவோ சந்தேகம் கொண்டாலும் எல்லாப் பொருள்களையும் அவர் சோதனை இடலாமாம். நாம் மறுத்தால் அங்கேயே நம்மை நிறுத்திவிடவும் அவருக்கு அதிகாரம் உண்டு. அவரிடம் கைத் துப்பாக்கி, கூர்க்கிக் கத்தி முதலிய ஆயுதங்களுமிருக்கின்றன. யாக் வாலாக்கள் குதிரைக்காரர்கள் அவர் சொல்லைத் தட்டி மேலே போகமாட்டார்கள். அவருக்கே உதவியாகவும் இருப்பர். மேலும் அவருக்கு ஏதேனும் துன்பம் நேர்ந் தாலும் யார் எவ்விதம் செய்தி அனுப்பினார்கள் என்று தெரியாத நிலையில் அவரைப் போன்றே ஆயுதந் தாங்கிய பலர் சிறிது நேரத்தில் அவருக்கு உதவியாகவும் வந்து விடுவார்களாம். பலரையும் பார்த்துப் பழகிய அவருக்கு வியாபாரிகள் யார் என்பதைப் பார்வையிலே தெரிந்து கொள்ள முடியும். ஆனால் சந்தேகங்கொண்டால் அவ ருக்கு அவசரப்படத் தெரியாது. மிக மெதுவாகவே செயல் செய்வாராம். பிறர் துன்பத்தைக் கண்டு இரங்கவும் மாட்டாராம். அவர் ஏறிவந்த குதிரையின் வால்மயிரைப் பிரித்துக் குஞ்சம்போல பலநிற நூல்கள்கொண்டு கட்டி விடப்பட்டிருந்தது. பின்னல்கள் போடப்பட்டிருந்தன. பெண்கள் தங்கள் முடி அலங்காரங்கள் செய்துகொள்வது போல அங்குக்குதிரைகளும் ஒப்பனை செய்யப்பெற்றிருக் கின்றன.

மேற்குத் திபேத்தில் வீடுகள் உள்ள ஊரமைப்புக்கள் அதிகமில்லை. ஓரிரண்டு வீடுகள் உள்ள ஊர்களே பல. ஆனால் புல்லும் டாமா முதலிய செடிகளும் அதிகம். ஆகையால் இதை மேய்ச்சல் தரையாகக்கொண்டு திபேத்தியர் பலர் அங்கங்கும் வந்து பல கூடாரங்கள் அமைத்துக்கொண்டு பனிக்காலம் வரும் வரை தங்கி இருப்பார்களாம். அந்தக் கூடாரவாசம் எங்கெங்கிருக்கின்றன என்பது அவர்களுக்குள் தெரிந்திருக்கும். புதிதாகப் போவோருக்குத் தெரிந்துகொள்வது எளிதல்ல.

## மாணித்தங்கா :

கும்சினிலிருந்து ஆறு, ஏழுகல் தொலைவு சென்று மாணித்தங்கா என்னுமிடத்தில் ஒரு ஆற்றின் கரையில் தங்கினோம். அன்று பயணத் தொலைவு குறைவாக இருந்தாலும் திக்குத்தெரியாத வெளியில் வெகு தொலைவு கடந்ததாகவே தோன்றிற்று எங்களுக்கு.

## திபேத்தியச் சிறுவர் இருவர் :

அங்கு அண்மையில் குடியிருப்புக்கள் எதுவும் எங்கள் கண்களுக்குப் புல்ப்படவில்லை. எங்கிருந்தோ இரு திபேத்தியச் சிறுவர்கள் எங்கள் தங்குமிடத்திற்கு வந்தார்கள். ஒவ்வொரு கூடாரமாகச் சுற்றிச்சுற்றிப் பார்த்தனர். நான் தங்கியிருக்கும் கூடாரத்தின் முன்பும் வந்து நின்றனர். பிறகு உள்ளேவந்து உட்கார்ந்துவிட்டார்கள். எங்கள் பொருள்களை எல்லாம் தொட்டுத்தொட்டுப் பார்த்தனர். படுக்கைகளை விரித்துப் போட்டுக்கொண்டோம். உடுப்புக்கள், படுக்கை, தலையணை, மருந்துப் புட்டிகள் முதலிய எல்லாம் வைத்துச் சுருட்டி எடுத்துச் செல்லக்



மாணித்தங்காவில் யாக் மீது மூட்டைகள்



மாணித்தங்காவில் ஆற்றைக்கடத்தல்



மாணித்தங்காவில் யாக் சவாரி



மானித்தங்காவில் யாக்வாலா பேமா (தோளோடு தோள் சேர்த்து நிற்பவன்)

கூடிய அமைப்புடைய (Hold - all) ஒரு படுக்கைச் சுருட்டிலிருந்து பல உடைகளையும் வெளியே எடுத்துப் பார்த்தனர். கம்பளி, பருத்தி ஆடைகள், பிளாஸ்டிக் (Plastic) உறைகள் முதலிய எல்லாம் அவர்களுக்குப் புதிதாக இருந்தனபோலும். தொட்டுத் தொட்டுப் பார்த்து மகிழ்ந்தனர். அவர்களுக்கு ஓரளவு இந்தி தெரியும். ஏதாவது பாடும்படி கேட்டோம். "குரு நாமோ! குரு நாமோ" என்று கைகொட்டிப் பாடினர். அவர்கள் கழுத்தில் தலைலாமாவின் படங்கள் வில்லைகளாகச் செய்த மெடல்கள் தொங்கவிடப்பட்டிருந்தன. அது என்ன என்று கேட்டதும், அதைத்தொட்டு வணங்கிவிட்டுத் தலாய்லாமா "குரு ரிம்போஷி" என்றனர். அவர்களுக்கு மிட்டாய்கள் கொடுத்தோம். பெருமகிழ்வோடு பெற்றுத் தின்றனர். இருட்டும்வரை அங்கேயே தங்கியிருந்து எங்களைப் பார்த்துப் பார்த்து எங்கள் செயல் ஒவ்வொன்றிலும் ஏதோ புதுமை கண்டு சிரித்துக்கொண்டு நின்றனர்.

## கூடாரமில்லாது குளிர்காய்ந்த ஒருவர்:

அன்றிரவு குளிர் அதிகமாகஇருந்தது. நம்நாட்டு சந்நியாசி ஒருவர் எங்களோடுவந்து தாமாக வலுவில் சேர்ந்துகொண்டார். அவர் தங்குவதற்குக் கூடாரத்தில் இடமில்லை. உணவு எங்களிடம்கேட்டுவாங்கி உண்பார். இரவைக்கழிப்பதற்கு அவர் ஒரு புதுமுறையைக் கையாண்டார். நாங்கள் தங்கியிருந்த இடத்தில் யாக் சாணி காய்ந்து அதிகமாகக் கிடந்தது. அதைப் பொறுக்கிச் சேர்த்துக் குவித்தார். அதில் நெருப்பிட்டு கணப்பாக்கி அதனருகில் படுத்து உறங்கி அன்றிரவைக் கழித்தார். இதுபோலவே கூடாரம் அமைத்துக்கொள்ள இயலாதவர்கள் அப்பகுதிகளில் யாத்திரை செய்வதுமுண்டாம்.

## வழிதவறிய பழைய அனுபவம் :

கும்சினை விட்டுப் புறப்பட்டு வந்ததில் பலரும் முன்னும் பின்னுமாக நடந்து வந்தார்கள்; மாணித்தங்காவில் நேரங்கழித்தே வந்து சேர்ந்தார்கள். ஸ்ரீமத் வித்யாநந்தா அவ்விதம் பின் தங்கி வந்தவர்களைக் கடிந்து கொண்டார்கள். ' சென்ற ஆண்டில் எம்மோடு உடன் வந்தவர்களில் சிலர் எவ்வளவு சொல்லியும் கேளாது பின் தங்கியே வந்தார்கள். ஆனால் வழி தெரியாமல் மயங்கி ஏதோ ஒரு வழியில் சென்றுவிட்டார்கள். நாங்கள் திட்டப்படி உள்ள இடத்தில் அவர்களைக் காணுது மயங்கினோம். வந்த வழியே மீண்டும் சிறிது தொலைவு சென்றும் பார்த்து வரச்செய்தோம். தங்கியிருந்த இடத்தில் மேலும் ஒருநாள் அவர்களை எதிர்பார்த்துத் தங்கினோம். பயன் இல்லை. வருத்தத்தோடு மேலே சென்றோம். இரண்டு மூன்று நாள்கழித்து தீர்த்தபுரியை நாங்கள் சென்றடைந்து தங்கினோம். அன்றிரவு அந்த நண்பர் பேசக்கூட இயலாத நிலையில் உணர்விழந்து தடுமாறிக்கொண்டே வந்து விழுந்தார். பிறகு அவருக்கு வேண்டிய உடனடிச் சிகிச்சைகளைச் செய்தோம். உணர்வு வந்தபிறகு அவர் தம் தவறுணர்ந்து வருந்தினார். ஆனால் அவருக்கு இந்தி தெரியும். வழி தவறிய அந்த நண்பர் ஏதோ ஒரு வழியில் சென்றுகொண்டே இருந்திருக்கிறார். யாரும் வழியில் காணப்படவில்லை. இரவு ஒரு பெரிய மைதானத்தில் கூடாரமோ பிறவசதிகளோ இல்லாது தங்கி வருந்தி இருக்கிறார். மறுநாளும் கால்போன வழியே சென்றிருக்கிறார். அன்று இரவு ஒரு இந்தி தெரிந்த திபேத்தியரைக் கண்டு தம்நிலையை விளக்கித் தங்க இடம் கேட்டிருக்கிறார். அவரிடமும் அந்த வசதி இல்லை. அவரும் வழி நடையில் வந்தவர். அன்றிரவும் வெட்டவெளியில் தங்கியிருந்து

நாங்கள் தீர்த்தபுரி வழியாகச் செல்வதென்ற திட்டத்தை அறிந்தவராகையால் அந்தத் திபேத்தியர் உதவியால் தீர்த்தபுரி வந்து எங்களைக் கண்டுபிடித்தார். கயிலாய நாதன் அவரைக்காத்து எங்களிடம் கொண்டுவந்து சேர்த்தார் என்றுதான் சொல்லவேண்டும். அதுபோன்ற துன்ப அனுபவம் இப்பொழுதும் நமக்கு வேண்டுவதில்லை. ஆகையால் எல்லோரும் ஒன்ருகவே சேர்ந்துசெல்வோம். முடியாவிட்டால் தலைதெரியக்கூடிய தொலைவிலாவது தொடர்ந்து செல்வோம்; இதை மறக்கவேண்டாம். இதில் ஏதாவது சிறு தவறு நேர்ந்தாலும் இரு சாராருக்கும் துன்பந்தானே ' என்று எல்லோரையும் எச்சரித்தார்கள்.

## மாணித்தங்காவை விட்டுப் புறப்பாடு :

மறுநாள் மாணித்தங்காவைவிட்டு காலை 9 மணிக்குப் புறப்பட்டோம். ஆற்றைக் கடந்து ஒரு ஏற்றம். ஆற்றைக் கடப்பதில் ஸ்ரீ வித்யாநந்தாவின் சமையல்காரன் தன் முதுகின்மீது சுவாமிகளையும் ஸ்ரீ தாராதேவி என்ற பெண் மணியையும் சுமந்து சென்று அக்கரை சேர்த்தான். ஏற்ற மும் இறக்கமுமாகச் சில மலைப் பகுதிகளைக் கடந்ததும் இடதுகைப் புறத்தில் ஒரு பெரிய மண் மலைத்தொடரும் ஒரு பெரிய சமவெளியும். அம்மலையில் அழகிய பெரிய குகைகளும் சில இருக்கின்றன. குழந்தை வீடுகள், அழகிய சோபாக்கள், கட்டில்கள், சுற்றுச் சுவர்கள் குடைகள் போன்ற இயற்கையான அமைப்புக்கள் பல இருக்கின்றன. அம்மலையில் ஏறிச் சிலர் குகைப்பகுதிகளைக் கண்டு மகிழ்ந்து வந்து சொன்னுர்கள். அந்த மைதான முடிவில் சுகாடு (Chugad) ஆற்றின் கரையில் காட்டுக் குதிரைகளும், யாக்குகளும், ஆடுகளும், முயல்களும்

மேய்ந்துகொண்டிருந்தன. பசும்புல்லும் தரையோடு தரையாகப் படர்ந்திருந்த அழகிய பலநிறப் பூக்கள் கொண்ட செடிகளும் இருந்தன. காஷ்மீரச் சால்வை விரித்ததுபோல ஆற்றங்கரைப்படுகை அழகாக இருந்தது. ஆற்றைக் கடந்ததும் அவ்வழியே ஞானிமாமண்டிக்கு ஒரு பாதையும் இங்குப் பிரிகிறது.

## பிடியிலிருந்து தப்பிய ஆடு :

எங்களுடன் வந்த குதிரைக்காரன் ஒரு ஆட்டைப் பிடித்து எடுத்துவந்தான். சிறிது தூரம் வந்ததும் அந்த ஆடு அவன் பிடியிலிருந்து தப்பி ஓடிவிட்டது. எல்லாக் குதிரைக்காரர்களும் ஒன்று சேர்ந்து யாத்ரிகர்களை இறக்கிவிட்டு ஆட்டைத் தேடிச் சென்றுவிட்டார்கள். அதை நீண்டநேரம் தேடிக் கண்டு பிடித்தார்கள். உயிரோடு இருந்தால்தானே ஓடுகிறது என்று அதை அங்கேயே கொன்று உரித்து ஊனைத் தூக்கிக் கொண்டு மகிழ்ச்சிக்கடலில்திளைக்க வேகமாக வந்தார்கள். அவர்களை எதிர்பார்த்துக்காத்திராது நாங்கள்எல்லோரும் இரண்டு கல் தொலைவு நடந்து செல்லவேண்டியதாகிவிட்டது. சுகாடு ஆற்றின் அக்கரை ஒரு பெரிய பொறியியல் வல்லவர் அமைத்த நேர் கரையைப் போலவும் ஒத்தடியான படுகை உடையதாகவும் பல மைல் நீளமும் அமைந்திருந்தது

## சுகாடு நதியைக் கடந்ததும் :

ஆற்றின் படுகை வழியே நடந்து சென்றோம். இரண்டு கல் தொலைவு சென்றதும் அங்கே கற்களை அடுக்கி அதன்மீது கல்வேட்டுக் கற்களைப் பரப்பி வைத் திருந்தார்கள். அதன் தொடக்கத்திலும் முடிவிலும்

சுவஸ்திக் அடையாளம் இடப்பட்டிருந்தது. திபேத்திய மொழியில் அழகான எழுத்துக்கள் வெட்டப்பட்டிருந்தன. அங்கு ஒரு கோவிலோ மடமோ இருந்திருக்கவேண்டு மென்ற ஊகம் செய்ய முடிந்தது. சுவாமி வித்யா நந்தாவிடம் கேட்டதற்கு 1933லே அங்கு இருந்த லாமா மடத்தை மத்திய ஆசியாவைச் சேர்ந்த காஸ்கர் கள் (Khazkars) வந்து சூறையிட்டு இடித்து நாசம் செய்துவிட்டதாகவும் அந்த மடத்தில் பதிக்கப்பெற்றிருந்த கஞ்சூர் என்ற லாமா மதவேதமந்திரங்கள் பொறித்த கல் வெட்டுக்களை மட்டும் மதபக்தி உடைய திபேத்தியர்கள் எடுத்து அவ்விடத்தில் அடுக்கி வைத்திருப்பதாகவும் சொன்னார்கள். காஸ்கர்கள் இதுபோன்றே பல மடங்களை யும் அக்காலங்களில் சூறைஇட்டு இடித்து நாசம் செய்து இருக்கிறார்கள்.

### ஆற்றின் படுகையில் :

அக்கல்வெட்டுக்கள் அமைந்த பகுதியைக் கடந்து மேலும் ஒரு மைல் சென்று ஆற்றின் படுகையில் கூடாரம் அடித்துத் தங்கினோம். அன்றிரவு குளிர் மிக அதிக மாக இருந்தது. மாணீத்தங்காவில் செய்தது போலவே உடன் வந்த அந்த சாது இங்கும் சாணிக்குவியலில் நெருப்பிட்டுக் கணப்பாக்கி அதன் அருகில் தங்கி யிருந்தார்.

### அற்புதக் காட்சி :

மறுநாள் அதிகாலையிலேயேஎழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டோம். சூரிய உதய நேரத்தில் கிழக் குப்பக்கத்தில் தொலைவில் அற்புதக் காட்சி ஒன்றைக்

கண்டோம். வானவில்லின் பல நிற ஒளிக்கற்றைகளைப் பட்டையாகத் தீற்றி வானத்திற்கும் மண்ணுக்கும் தோங்கவிடப்பட்ட படுதாப் போன்ற ஒரு காட்சி. காலை 6-30, 7 மணி வரையிலும் இது காட்சி அளித்தது. பனி படர் இடங்களில் சூரிய ஒளி செய்து காட்டும் அற்புத வேலைகளில் இதுவும் ஒன்று என்று சொன்னார்கள். பிறகு சூரிய ஒளி அதிகமாக ஆகக் கொஞ்சம் கொஞ்சமாக நிறம் மங்கி மறைந்துவிட்டது. இதுபோன்ற இயற்கை அற்புதங்களை நம் நாட்டில் காணவும் முடியாது. சொன்னாலும் நம்பக்கூடியதாகவும்இராது. அந்த அற்புதக் காட்சியை இப்பொழுது நினைத்துக் கண்ணை மூடிக் கொண்டாலும் அப்படியே நமக்கு முன்னே வந்து நிற்கிறது.

## ஏற்க மறுத்தன எங்கள் நா :

பலநாள் ஒரேவகையான சமையலில் ரோட்டி உருளைக் கிழங்குக் கறி இவற்றையே ருசித்துவந்த நாக்கு அன்றும் அவற்றை ஏற்கமறுத்தது. பலருக்கும் இதேஉணர்வு இருந்தது. ஆகையால் புளிப்பு மாதுளைவிரையைக் கரைத்து புளியஞ்சாதமும் வடையும் செய்து தந்தார் எங்கள் சமையற்காரர். அதை எங்களுடன் வந்த செட்டியார் மேற்பார்வைஇட்டு மிக நன்றாக அமைத்துத் தந்தார். புளிப்பும் உரப்புங்கலந்த அந்தச்(சாதம்) சோறு அன்று தின்னத்தின்னத் தெவிட்டாத ஒன்றாக இருந்தது. அவரவரும் முடிந்த மட்டும் உண்டோம். தண்ணீர் அருந்தினோம். இது போன்ற சுவைமிக்க உணவைக் கண்ட நாங்கள் அன்றிரவு தீர்த்தபுரிவரையில் நடந்துசென்று தங்குவதென்று திட்டமும் செய்துகொண்டோம்.

## சோம்பேறித்தனம் :

காலே 9 மணிக்கே புறப்பட்டோம். வழியில் தண்ணீர் கிடைக்காது என்று தெரிய வந்தது. ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் கூலிகளேக்கொண்டு இரண்டு பெரிய பாத்திரத்தில் தண்ணீர் சுமந்து வரச் செய்யவேண்டு மென்று உத்தரவு செய்தார்கள். அவர்கள் முதலில் செய்வதாச் சொல்லிவிட்டுப் புறப்படும்போழுது சோம் பேறித் தனத்தால் தண்ணீர் எடுக்காது வந்துவிட்டார்கள். சுஞக், குணியாங்தி, தாமாயாங்தி, ஞானிமாசூ என்ற சிற்ருறுகள் கலந்து ஒடிவருவது சுகாடு ஆறு. (லாங்சேன் ஸாங்போ Langchen Tsangpo)

சிறிதுதோலேவுசென்றதும் மலேகளில்பெய்யும் மழைத் தண்ணீரை ஏந்திவந்து இவ்வாற்ருேடு கலக்கும் மழைக் கால ஆறு ஒன்றின் அடித்தளத்திலே செல்லவேண்டி வந்தது. அந்தஆற்றில் அப்போதுதண்ணீர் இல்லே. வேருெரு வழியும் உண்டு. அது சுகாடு ஆற்றின் கரை வழியே செல்வது. அவ்விதம் செல்வதில் மிகக் கடுமையான ஏற்றங்கள் இறக்கங்களின்வழியே மலே உச்சிகளில் ஏறி ஏறி இறங்கிச செல்லவேண்டும். அதைத் தவிர்க்கச சிறு ஏற்றம் இறக்கமுள்ள அவ்வாற்றுத்தளத்தில் நடந்து சென்ருேம்.

## பளிங்கு மணிகள் :

வழியில் மணலோடு கலந்து வயிர ஒளி வீசியது. அணுகி எடுத்துப் பார்த்தால் அவை (ஸ்படிகங்கள்) பளிங்குக் கற்கள். அவை ஆற்றில் தண்ணீரால் அடித் தேடுத்து வரும்போழுது உடன் உருளுங் கல்லும் மண்ணும்

அவற்றில்பட்டைதீற்றஒளிப்பேற்றுவிளங்கின. பலரும் பல பேரிய சிறிய பளிங்குக் கற்களைப் பொறுக்கிக்கோண் டோம். அவற்றில் புகை போன்ற நிறத்திலிருந்து பல நிறங்களும் கோண்டவை கிடைக்கின்றன. ஆனால் புகை நிறமும் மாசுமறுவில்லாத ஸ்படிகநிறமும்தான் அதிகம்.

## தண்ணீர் பெருத் தடுமாற்றம் ;

கயிலை வழியில் சிர்ச்சின்பகுதியில் சாலக்ராமங்களும், சுகாட்டுப் பகுதியில் ஸ்படிகங்களும் கிடைக்கின்றன. அவை நேபாள எல்லையில் தோடங்கி காஷ்மீரப்பகுதி வரை ஒரு ஒட்டமாக அம்மலைத் தோடரில் கிடைப்ப தாகவும் சில அடி நீள அகல உயரங்கோண்ட பளிங் குக்கற்கள்கூடக் கிடைக்குமேன்றும் சோன்னார்கள். இவ்வழியில் வேங்காயப் பூண்டும் காட்டு மருக்கோழுந்தும் முளைத்துக் கிடந்தன. வேங்காயப் பூண்டுச் சேடியை முடிந்தமட்டிலும் பறித்துச் சேமித்தனர் சமயல் உதவிகள். நாழிகை ஆக ஆக வேய்யலின் கோடுமையும் அதிக மாயிற்று. பளிங்குக் கல் பொறுக்குவதில் ஆசை கோண்டு நின்று நின்று ஒளிவரும் கற்களைப் புரட்டிப் பார்த்துப் போறுக்கி வந்ததில் நேரமும் அதிகமாகிக் கோண்டே வந்தது. எல்லோரும் நீர் வேட்கையால் களைப்புற்றனர். தண்ணீர், தண்ணீர் என்றனர். சிலர் சிறு குடுவைகளில் கோண்டுவந்த தண்ணீரைப் பலரும் பங்கு கோண்டார்கள். இரண்டோரு வாய்த் தண்ணீரே கிடைப்பதாயிற்று இந்தப் பங்கீட்டில். ஆள் சேய்த மோசத்தின் பயனை அவனும் அனுபவித்தான். ஆனால் அவன் பகாடி. "தேன்னாட்டவர் அதிகமாகத் தண்ணீர் அருந்துகிறீர்கள். இவ்விதம் தண்ணீர் குடித்தால் உங்கள் வயிறு பிறகு பேரிதாகிவிடும். நாங்கள் அவ்வளவு

அதிகமாகத் தண்ணீர் குடிப்பதில்லை '' என்று சொல்லிக் கொண்டான். அவனே எங்களிடமிருந்த மிட்டாய் உப்பிட்ட ஊறுகாய், தண்ணீர் எல்லாவற்றையும் வாங்கிக் குடித்தும் தாகம் தணியாது தவித்தான். தங்க நிழலுமில்லை, குடிக்கத் தண்ணீருமில்லை. நேரம் ஆக ஆக எல்லோருக்கும் நீர்வேட்கை மிகுந்தது. வேகமாக நடக்கவும் முடியவில்லை.

## தாகந்தணித்த தயாநிதி :

5, 6 கல் தொலைவு இவ்வழியில் சென்றதும் செங்குத்தானமணற்குன்றில் ஏறி அப்புறம் இறங்கவேண்டிவந்தது. அவ்வழியில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் தண்டியை நிறுத்தித் தம்முடன் வந்தவர் படும் துன்பங்கண்டு இரங்கி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திற்காகச் செய்து எடுத்துவந்த ஓட்ஸ் கஞ்சியில் சிறிது சிறிது எல்லோருக்கும் வழங்கினார்கள். தித்திப்புபிஸ்கோத்தும் மிட்டாயும் வழங்கினார்கள். அந்த நேரம் நாவுலர்ந்து மேலண்ணத்தில் ஒட்டிக்கொண்டிருந்தது. உதடு உலர்ந்துவிட்டது. இங்கும் கயிலைநாதன் எங்கள் குருநாதன் உருவில் வந்து நின்று நீர்வேட்கை தணிவித்தான்.

## ஆற்றைக் கண்டுபிடித்தோம்:

அந்த மேட்டிடத்தின் உச்சிப் பகுதியிலிருந்து பார்த்ததும் அண்மையில் ஒரு ஆறு ஓடுவது தெரிந்தது. அதைக் கண்டதும் எங்கள் மகிழ்ச்சி எல்லையற்றதாகிவிட்டது. விரைவில் தண்ணீர் கிடைத்துவிட்டதாகவே கருதி மகிழ்ந்தோம். உச்சியிலிருந்து பார்த்தபொழுது அரைக் கல் தொலைவுக்குள்ளிருப்பதாகத் தோன்றிய அவ்வாறு வழி நடக்க நடக்க தொலைவில் சென்றுகொண்டே இருந்தது.

ஆற்றின் அக்கரைப் பகுதிகளிலும், அப்புறமிருந்த எல்லை கடந்த இமயப் பகுதியிலும் மழையும் பனியும் பெய்வது தெரிந்தது. நடந்து நடந்து நடுநடுவில் களைத்து அமர்ந்து அமர்ந்து இரண்டு மணி நேரத்தில் ஆற்றின் கரையை அடைந்தோம். அது முதல் நாள் தங்கியிருந்த சுகாடு ஆறுதான். ஆனால் ஆற்றின் கரை இரண்டடுக்காக அமைந்திருந்தது. முதல் அடுக்கு 500, 600 அடி செங்குத்து. அதில் யாக்குகள், குதிரைகள்கூட இறங்க அஞ்சுகின்றன. அந்தச் செங்குத்தில் இறங்கியதும் படுகை நிலம் 200, 300 கெஜ அகலம். அதற்கடுத்து மறுபடியும் 100 அடி செங்குத்தான மற்றொரு கரை. அதிலும் துன்பப்பட்டு இறங்கினால்தான் தண்ணீரை அணுகமுடியும். ஆசையோடு ஆற்றங்கரையைக் கண்ட எங்களுக்கு இந்த இரண்டு செங்குத்து இறக்கங்களும் மிகுந்த துனபத்தைக்கொடுத்தன. தண்ணீர் இருக்குமிடத் திற்கு வந்து பார்த்ததில் ஞானிமா முதலிய பல பகுதிகளி லும் அன்று பெய்த மழையினால் ஆறு பெருகத்தொடங்கிப் பெருகிக்கொண்டே இருப்பது தெரிந்தது. நிமிஷத்துக்கு நிமிஷம் தண்ணீர் ஏறிக்கொண்டே வந்தது. வேகமும் இழுப்பும் அதிகமாகிககொண்டே இருந்தது. தண்ணீர் அருந்த தண்ணீரை அணுகிச் செல்லும்பொழுது பெரிய ஆலங்கட்டி மழை வேகமாக அடிக்கத் தொடங்கிவிட்டது. அங்கங்கும் நின்றவர்கள் அப்படி அப்படியே மழை மேற் சட்டையைத் தலையிலிட்டுக்கொண்டு உடலை மறைத்துத் தரையில்அமர்ந்துவிட்டோம். நாவறண்டு கண்ணிருட்டிவரு கிறது. வெளியே ஆலங்கட்டிமழை. சில அடி தொலைவில் ஓடுகிறது பனிக்குளிர்த்தண்ணீர். ஆனால் வெளியே தலை நீட்டமுடியவில்லை. சுண்டைக்காய் பருமனில் பனிக்கட்டி வேகமாக வந்து விழுகின்றன. இந்த நிலையில் அரை மணிக்கு மேல் துன்பபபட்ட பிறகு, அம்மழை நின்றதும்

தண்ணீர் மழை ஒரு அரைமணி நேரம் பெய்தது. இந்த நிலையில் சுற்றிலும் எங்கும் தண்ணீர். வறண்ட நாக்குகளை நனைக்கத் தண்ணீர் இல்லை. தண்ணீர் மழை நின்றதும் விரைந்து ஆற்றில் சென்று தண்ணீர் எடுத்து வயிறு முட்டக் குடித்தோம்.

ஆற்றைக்கடக்கப் பெருமுயற்சி :

ஆற்றைக்கடந்து அப்புறம் சென்று தங்கலாம் என்று முடிவு செய்தோம். முதலில் யாக்குகளைத் தண்ணீரில் இறக்கிவிட்டால் அவை கரைசேருவதைப் பொறுத்து நாங்களும் பின்பற்றுவதாக இருந்தோம். சில அடி தொலைவுகூட ஆற்றில் அவைகளால் செல்லமுடியவில்லை. அவற்றைப் புரட்டி அடித்தெடுத்து இழுத்துச் செல்லத் தொடங்கியது ஆற்று வெள்ளம். மிகவும் துன்பப்பட்டு அவற்றைக் கரைசேர்த்துப் பிழைக்க வைத்தார்கள் யாக் வாலாக்கள்.

கூடாரங்களை எங்கே அமைப்பது ? :

ஆற்றங்கரை 20, 30 அடி அகலங்கூட அங்கு இல்லை. அதுவும் மேட்டிலிருந்து சரிவாக இருந்தது. 3, 4 அடி உயரமுள்ள ஒருவகைக்கோரை அங்கு மண்டிக் கிடந்தன. இருட்டத் தொடங்கியது. மழைத்தூற்றலும் தொடங்கி விட்டது. எல்லோரும் முயன்று சமையல் கூடாரங்களை மேட்டிடத்திலும் தங்குங் கூடாரங்களை அந்தச்சரிவில் செடிகளின்மீதும் அமைத்துக்கொண்டோம். அங்குள்ள செடிகளை அப்புறப்படுத்திவிட்டுப் படுக்கைகளை விரிக்கலாம் என்று முயற்சி செய்தோம். சுவாமிகளும் வழிகாட்டிகளும் அவ்விதம் செய்தல்கூடாது. செடிகளைப்

பிடுங்கிவிட்டால் கீழே சேருகவும் இருக்கும். மழை பெய்தால் படுக்கைகள் நனைந்துவிடவும் கூடும். ஆகையால் செடிகளின்மீது படுக்கைகளைத் தொடர்ந்தாற் போல் போட்டு அமுக்கிவிட்டால் அதுவே நல்லது என்றனர். அந்த அடவிகளில் விஷப்பூச்சிகள் எதுவும் இருக்காது. அந்த அச்சம் வேண்டியதில்லை என்று சொல்லி அவ்விதமே செய்யவும் உதவினர். இது ஒரு அனுபவம். நாங்கள் தங்கிய கரை கூடாரம் இட்டிருக்கும் இடத்திற்கு அப்பால் 300, 400 அடி செங்குத்தாக உயர்ந்து நின்ற மண்கரை. மழை பெய்து கரைத்து விட்டிருப்பதில் நடுநடுவில் சுண்ணும்பும் செம்மண்ணும் கலந்திருக்கும்போலும். அவை கரைந்து வழிந்திருப்பதில் நமது கோவில் திருமதில்களில் வெள்ளையும் காவியும் பட்டைதீற்றி இருப்பதுபோலக் காட்சி வழங்கின.

அக்கரைக்கு அப்பால் உயர்ந்து நின்ற எல்லை கடந்த இமயச் சிகரங்கள் அன்று பெய்த பனியால் நீறுபூத்த மேனிகாட்டி நின்றன. நாங்கள் தங்கிய இடம் காற்றடக்க மானது. அன்றிரவு முன்னேரத்திலேயே ரோட்டி செய்து தின்று பசியாறிப் படுத்தோம். உணர்வில்லாத அயர்ந்த உறக்கம்.

### மறுநாட் காலை :

மறுநாட் காலையிலும் ஆற்றில் வெள்ளம் குறைய வில்லை. அங்கே தங்குவதும் முடியாது. ஆறு மேலும் பெருக்கெடுத்தால் கரைமேட்டில்தான் ஏறவேண்டிவரும். வழக்கம்போல் பகலுணவைக் காலை 9 மணிக்குள் முடித் துக்கொண்டு ஆற்றின் வேகம் குறைவதை எதிர்பார்த்துக் காத்திருந்தோம். பகல் 12 மணிவரை பார்த்தும் குறைவ தாகத் தெரியவில்லை.

### ஆற்றைக்கடந்தோம் :

அப்பகுதிகளில் இதுபோன்ற வேள்ள காலத்தில் அவ்வாறுகளைக் கடந்து பழகிய ஒருவர் முன்சேல்ல மற்றவர்கள் கீழுடையோடு அவரைப் பின்பற்றிச் சேல்வ தாக ஏற்பாடு சேய்துகோண்டோம். இழுப்பு அதிகமாக உள்ள இடங்களில் ஒருவர் கையை மற்றவர் பிடித்துக் கோண்டு நாலைந்து பேராக அக்கரை அடைவதேன்று திட்டம்சேய்து அதேபோல கீழுடையோடு புறப்பட்டோம். மற்ற உடுப்புக்களை அவிழ்த்து மூட்டையாகச் சேர்த்து தலையில் வைத்துக் கட்டிக்கோண்டோம். கூர்க்கம்பையும் ஊன்றி ஊன்றி ஆற்றைக் கடக்கலானோம். தண்ணீர் பனிக்குளிருடையதாக இருந்தது. இழுப்பும் மிக அதிகம். கீழே மணலாக இல்லாமல் கற்களாகவே இருந்தன. அவைகளும் ஆற்றின் வேகத்தில் உருட்டப்பட்டு ஓடிக் கோண்டிருந்தன. குளிரால் உடல்விறைத்தது. உள்ளத்தில் தைரியத்தைக்கோண்டு மேதுவாக ஆனால் காலை எடுத்து எடுத்து உறுதியாக ஊன்றி ஊன்றி நடந்துசேன்றோம். கைகோர்த்துச் சேல்வதிலும் துன்பம் ஒன்றுண்டு. ஒருவர் தவறி வழுக்கி விழுந்தாலும் மற்றவர்களும் அவரோடு சேர்ந்து இழுக்கப்படுவதாகவும் இருந்தது. கீழே காலை உறுதியாக வைத்துக்கோள்ள இயலாததே அதற்குக் காரணம். உருண்டோடும் கல்மீது நிலைத்து உறுதியாக நிற்கவும் நடந்து நடக்கவும் முடியவில்லை. இதுபோன்றே சிலர் வழுக்கி விழுந்து மற்றவர்க்கும் துன்பம் உண்டாக்கி விட்டார்கள். மிக வயதானவர்கள், பலவீனர்கள், பேண்கள் இவர்களை எங்களோடு வந்த வழிகாட்டியில் ஒருவரும் சுவாமிகளின் சமையல்காரரும் சுமந்து வந்து அக்கரை சேர்த்தார்கள். நாங்கள் அக்கரை சேர்ந்த

பிறகே போதி சுமக்கும் யாக்குகளை ஆற்றைக் கடக்கச் செய்தோம். அவற்றில் சில ஆற்றின் நடுவில் இழுத்துப் புரட்டப்பட்டு படுக்கைகள் முதலிய எல்லாப் பொருள் களையும் நனைத்தேடுத்துவந்தன. இவ்விதமாக ஆற்றைக் கடந்து அக்கரைசேர இரண்டுமணி நேரத்துக்கு அதிகமாகி விட்டது. முதல் நாள்வரை வந்த குதிரைக்காரர்கள் கணக்குத் தீர்த்துக்கொண்டு போய்விட்டார்கள்.

குர்க்கியம் ;

நாங்கள் தங்கியிருந்த இடத்திற்குப் பெயர் குர்க்கியம். குருஜெம் என்பதன் மரூஉ. அண்மையில் 300, 400 குகைகள் இருப்பதாகவும் அங்கு அக்காலத்தில் பல பெருந்தவ முனிவர்கள் பன்னூறு ஆண்டு வாழ்ந்து வந்ததாகவும், 200 ஆண்டு வயதினரான பெரியார் இரண்டு ஆண்டுகளுக்குமுன் முத்தியடைந்தார் என்றும் அவரை ஸ்ரீ சுவாமி வித்யானந்தா பார்த்திருப்ப தாகவும் சொன்னார்கள். நாங்கள் அந்த இடத்தில் ஆற்றைத் தாண்டாது அக்கரையிலேயே இரண்டொரு கல் தொலைவு சென்றால் சட்லீஜ் நதிக்கு ஒரு பாலம் இருப்பதாகவும் அவ்வழியே அதனைக் கடந்தும் வரலாம் என்றும் சொன்னார்கள். வழிச் சுருக்கங்கருதியும் தண்ணீர் வேட்கை மிகுதியாலும்தான் இவ்வழிவர நேர்ந்தது.

(Gerik-yung) கேரிக்யுங், பிறகு குர்க்கியுங், குர்க்கியம், குருஜெம், குருசெம் என்பன அவ்விடத் துக்கு உள்ள பெயர்கள். முன்பு காஷ்மீர மன்னன் அனுப்பிய ஜோரவார் சிங் (Joravar Singh) இந்த இடத்தை 1841ல் கொள்ளையிட்டு சூரையிட்டதாகவும் அப்பொழுதிருந்த மடங்கள் அழிக்கப்பட்டன என்றும் சொல்லப்படுகிறது. பிறகு ஒரு பெரிய லாமா இங்கு வந்து

ஆற்றில் நீட்டிநின்ற பாறைமீது அமர்ந்து தவம் பெருக்கிய தாகவும், அவர் மந்திர தந்திரங்களில் மிகச் சிறந்தவராக இருந்ததாகவும் அவருடைய கீர்த்தியைக் கண்டு மக்கள் ஆயிரக்கணக்கில் இங்கு வந்து கூடிக் காணிக்கைகள் செலுத்திக்கொண்டதாகவும், அதைக்கொண்டு பெரிய மடம் புதிகாக அந்த இடத்தில் கட்டியதாகவும் சொல்லப் படுகிறது. அந்தப் புதிய மடத்தையும் 1941ல் காஸ்கர்கள் (Khazkars) வந்து கொள்ளையிட்டுச் சென்றார்கள் என்றும் சொல்லப்படுகிறது. அந்த குருவினால் கட்டப்பட்ட மடம் ஆதலின் குரு+செம் (குரு தங்கிய இடம்) என்பது மருவி குர்க்கியமாக வழங்கப்படுகிறது.

## தெய்விகப் பாலம் :

சுகாடு நதியை லாங்சேன் ஸாங்போ என்று திபெத்தியர்கள் அழைக்கிறார்கள். இதுவும் சட்லீஜும் சேருமிடத்தின் அருகில் மரப்பாலம் இருக்கிறது. அப் பாலத்திற்குக் காவல்தெய்வம் ஒன்றுஉண்டு. அத்தெய்வக் கோவில் மணிமந்திரக் கற்குவியல் (Chorten) பாலத்தின் அருகில் இருக்கிறது. அக்கோவில் எப்பொழுதாவது யாராலாவது சிதைக்கப்பட்டாலும் தெய்விக நதியான (Langchen - லாங்சென்) சட்லீஜ் சீற்றங்கொண்டு அப் பாலத்தை அழித்துவிடுவாள் என்று நம்புகிறார்கள்.

## கைலாஸ் :

14,000 அடி உயரத்தில் அமைந்திருக்கிறது. இதன் அருகில் (KEILA) கேய்லா என்ற பனியடை போர்த்த சிகரம் ஒன்றிருக்கிறது. சொல்வழக்கில் அது கைலாஸ் என்று பேசப்படுகிறது. அதுவும் அழகான ஒரு மணி முடிதான். முடி அணிந்து அரசு வீற்றிருப்பதுபோன்ற

தோற்றமுடையது. சுற்றிலும் பனிமுடி உடைய சிகரங்களை உடையது. கம்பீரமான தோற்றமுடையது. ஆனால் உண்மையான கைலாசமல்ல அது.

## சட்லீஜ் கடந்தோம் :

நாங்கள் ஆற்றைக் கடந்து முன்போல உடுப்புக்களை அணிந்துகொண்டு மேலே சென்றோம். மண்மலையில் வழி அறுத்தோடியாகவும் மேடும் பள்ளமுமாகவும் இருந்தது. ஒவ்வொருபள்ளமும் 10, 15 அடி ஆழமுடையதாகக்கூட இருந்த்து. 3 கல் தொலைவு அவ்வழியில் சென்றதும் சட்லீஜ் நதி அங்குத் தெளிந்து விரைந்து ஓடுகிறது. தண்ணீர் பெருந்தொடைஆழம்தான்; என்றாலும் கடும் குளிர் நீராகவும் அடியில் கிடக்கும் சிறு கல்லும் தெரியக்கூடியதாகவும் தெளிந்த நீரை உடையதாகவும் வேகமான இழுப்புடையதாகவும் இருந்தது. 50, 60 அடி அகலமே இருந்தாலும் மேலே சொன்ன காரணங்களால் அதிலிறங்கி அதனைக் கடப்பது துன்பம் தருவதாகவே இருந்தது. அடியில் உள்ள கற்களில் பாசி பிடித்து அவை வழுக்குவனவாகக் கிடந்தன. அக்கல்லையும் அரித்தெடுத்துப் புரட்டிச்செல்கிறது அந்த நதி. ஆகையால் நடந்து செல்வதில் கால் நிலைத்து நின்று அடி எடுத்து வைப்பதில் மிகவும் கஷ்டமாகத்தான் இருந்தது. கூர்க்கம்பை நன்றாக ஊன்றிக் கொண்டு மெதுவாக நிதானமாகத்தான் நடந்து செல்லவேண்டியிருந்தது.

## எல்லை கடந்த இமயம் :

முன்போலவே பலரும் இந்த ஆற்றைத் தாண்டி அக்கரை சேர்ந்ததும் சிறு தூற்றலும் தொடங்கிவிட்டது.

அப்பகுதி சேறும் சகதியுமாகவே இருந்தது. புல், வெங்காயப் பூண்டு, ஃபாட்டுவா (Phatuva) என்ற ஒரு வகைக் கீரை இவை அதிகம். நடுநடுவில் இரண்டு மூன்று சிற்றோடைகளும் இருந்தன. அவை எல்லாம் சட்லீஜின் உபநதிகள். வழியில் தொலைவில் இரண்டு மூன்று நாட்களாகப் பனிப்பெய்திருந்தது. கருமேகம் சூழ்ந்து மப்பும் போட்டு மழை இருட்டாகவும் இருந்தது. இந்தச் சூழ்நிலையில் கண் பூத்துப்போகக்கூடிய வெண்மை யான புதுப்பனிபோர்த்த மலைத்தொடர் பக்கத்தில்சென்றது. அதுதான் கயிலை மலைத்தொடர். அவை எல்லை கடந்த இமயக் கோடுமுடிகள்.

## தீர்த்தபுரி :

இவ்வழியே இரண்டு கல் தொலைவு சென்றதும் வெந்நீர் ஓடை ஒன்றைக் கடந்து வெண்காரமும், சுண்ணும்பும் கலந்து எழுந்த சில மேடுகளைத் தாண்டி தீர்த்தபுரிக்கு மாலை 5 மணிக்கு வந்துசேர்ந்தோம்.

வெந்நீர் ஓடை தீர்த்தபுரியின் அப்புறத்தில் உண் டாகி ஓடிவருவது. தண்ணீர் வெதுவெதுப்பாக இருந்தது.

## வெந்நீர் ஊற்றுக்கள் :

தீர்த்தபுரியில் சட்லீஜ் நதிக்கரையில் பஸ்மாசுரன் சம்ஹாரமான இடத்தின் அருகில் தீர்த்தபுரி மலைச்சரிவில் கூடாரங்கள் அடித்துத் தங்கினோம். அதற்குப் பக்கத்தில் நதிக்கரை ஓரமாக இரண்டு மூன்று வெந்நீர் ஊற்றுக்கள் இருக்கின்றன. கீழேயிருந்து வெந்நீர் குமிழியிட்டு வெளி வருகிறது. அவ்விதம் வெளிவருமிடத்தில் 120 டிக்ரி சூடாக உள்ள வெந்நீர் பரவி ஓடிவருவதில் படிப்படியாகச் சூடு தணிந்து மிதமான சூடுள்ளதாக ஆகிறது.

பக்கத்திலே ஒரு சில அடிகளில் பனிக் குளிர்த் தண்ணீர் ஓடுகிறது. ஆற்றில் வெள்ளம் பெருகிவந்தால் வெந்நீர் ஊற்றுக்களின்மீதும் தண்ணீர் புரண்டோடும். அப் போழுதும் அந்த ஊற்றடியில் சூடான தண்ணீர் வெளி வருகிறது. இதுபோன்ற பல சிறு வெந்நீர் ஊற்றுக்கள் அம்மலை அடியிடத்தில் சுற்றிலும் இருக்கின்றன.

மேற்குத் திபேத்தின் தலைநகரான கர்டோக்கிலிருந்து திபேத்தின் தலைநகரான லாசாவுக்குச் செல்லும் பெரும்பாட் டையில் அமைந்திருக்கிறது தீர்த்தபுரி. பாரதப்பகுதியில் சிம்லாவிலிருந்து கர்டோக் வந்து அங்கிருந்தும் வரலாம். இப்பாதை சீனு வரை செல்வதாகவும் சொல்லப்படுகிறது. இங்குச் சுற்றுப்புறத்தில் நல்ல புல்வெளிகள் இருப்பதாலும் வியாபாரிகள் அடிக்கடி இவ்வழியே கர்டோக் லடாக், கயிலை வழியில் ஞானிமா, தர்ச்சன், தக்களக்கோட்டை முதலிய சந்தைகளுக்குச் செல்லக் கூடியதாகவு மிருக்குமாதலால் யாக்வாலாக்கள் பலர் எப்பொழுதும் அங்குக் காத்திருப்பார்கள் தீர்த்தபுரியில் லாமா மடம் ஒன்று இருக்கிறது. அதைத்தவிர வேறு குடியிருப்புக்கள் எதுவும் கிடையாது. கயிலை, பதரி கேதாரம் செல்வோர் இவ்வழியே வருகிறார்கள். இங்கு சட்லீஜும் தீர்த்தபுரி நதியும் (Tirthapuri Tsangpo) சங்கம மாகின்றன. தீர்த்தபுரி ஸாங்போ மிஸார் சூ (Missar chu) என்றும் அழைக்கப்படும். தீர்த்தபுரி இந்து தரும வழி யிலும் லாமா மதத்தின் வழியிலும் சிறப்பு மிக உடையது. அதைத் திரேதபுரி, பிரேதபுரி என்றும் வழங்குவர்.

## பஸ்மாசுர சம்ஹாரம் :

பஸ்மாசுரன் சிவபெருமானைநோக்கிக் கடுந்தவமிருந்து ஒரு கொடிய வரத்தைப் பெற்றான். யார் தலைமீது அவன்

கையை வைத்தாலும் அவர் எரிந்து சாம்பலாகிவிட வேண்டும் என்பதுதான் அந்த வரம். வரம் பெற்ற உடனே வரங்கொடுத்த கடவுள் உண்மையாகவே அருளியிருக்கிருரா என்பதைச் சோதிக்க அவர் தலையிலேயே கையை வைக்க முற்பட்டான். அவர் ஓட இவன் பின்னே துரத்திச் சென்ருன். தேவர்களும் முனிவர்களும் அஞ்சினர். விஷ்ணுவினிடம் முறையிட்டுக்கொண்டார்கள். திருமால் அழகிய பெண்ணுருக்கொண்டு யாரையும் மயக்கும் மோகினியாக எதிரே வந்தார். இதைக்கண்ட அசுரன் தன் வரத்தையும் மறந்தான்; தான் துரத்தி வந்த சிவபெருமானையும் மறந்தான். காமம் தலைக்கேற அந்த மோகினியினிடம் வந்தான். தன்னை மணந்து கொள்ளும்படி வேண்டினுன். அதற்கிசைவதாகச் சொல்லி தலை முழுகி வந்து தன்னைக் கூடும்படி அழைத்தாள் அம்மோகினி. தலைமுழுகத் தண்ணீர் தேடினுன். எங்கும் கிடைக்கவில்லை. அலைந்து மனம், மறுகி நின்ருன். மோகினியை மறக்கமுடியவில்லை.

நிகழ்ந்ததைச்சொல்லி அதற்கு மாற்று ஒன்று சொல்லும்படி அவளிடமே கேட்டான். உடனே அந்த இடத்திலேயே ஒரு சிறு ஊற்று உண்டாகும்படிச் செய்தாள் அம்மோகினி. அந்தத் தண்ணீரைக் கையில் எடுத்துத் தன் தலையிலிட்டுத்தேய்த்தான். வரத்தின்மகிமையால் எரிந்து சாம்பலானுன். தேவர்களும் முனிவர்களும் உய்ந்தார்கள். அவன் எரிந்து சாம்பலான இடத்திலே தான் வெந்நீரூற்று உண்டாகியிருப்பதாகச் சொல்லப் படுகிறது. அந்த ஊற்றின் வாயில் சுண்ணும்பு போன்ற வெள்ளைப் பொருள் தண்ணீரோடு கலந்து வெளிவருகிறது. வெந்நீர் ஊற்றில் முழுகி அதை விபூதியாக - பிரசாதமாக எடுத்துச் செல்வர் அன்பர்.

## தீர்த்தபுரியைத் தரிசிக்காமல் ... :

லாமா மதத்தினர்க்குரிய புராண ஐதிகப்படியும் இதற்குச் சிறப்புக்கள் உண்டு. இது ஒரு பெரிய யாத்திரை ஸ்தலம். ரேதபுரிவந்து தரிசனம் செய்யாதவர்கள் காங்ரிம்போஷி (கயிலாயம்) யைத் தரிசனம் செய்ய அருகதை அற்றவர்கள். ரேதபுரியைத் தரிசனம் செய் யாமல் கயிலேயைத் தரிசித்தால் பாதிப்பலன்தான் உண்டு என்று அவர்கள் நூல்கள் சொல்லுகின்றன. " இது வெறியாடும் பேய்ஙகரம் " என்று பால்டன் அதிஷா என்ற லாமா மத முதல் குரு கூறியுள்ளார். கியால்வா கோட்சாங் - பா என்னும் லாமா மதகுரு இங்கு மடம் உண்டாக்கினுர். அம்மடம் அமைந்திருக்கும்மலே பேய் சரணடைந்த குன்று (Devil Surrender Rock) என்ற பொருளில் அழைக்கப்படுகிறது.

## தீர்த்தபுரி லாமாக்கள் :

புத்தபிரானின் மறு அவதாரமான லோபான் ரிம் போஷி — பத்ம சுங்நே என்னும் லாமாமதத் தலேவர் தீர்த்தபுரி மடம் இப்பொழுதுள்ள இடத்தில் வந்து நின்ற தாகவும் சொல்லப்படுகிறது. அவர் லாமா மதத்தின் பழய பிரிவை உண்டாக்கியவர். இவ்வழியில் " சந்நி யாசிகள் நைஷ்டிக தர்மத்தை கைக்கொள்ளத் தேவை யில்லே. பெண்களோடு சேர்ந்து வாழலாம். புலால் உண்ணலாம், மது அருந்தலாம், ஆனல் புத்தபிரானிடம் அன்பு செலுத்தி, அவர் திருவடித் தியானம் செய்தல் வேண்டும். மதத்தின் பெயரால் உலகியல் இன்பங்கள் எதையும் வெறுத்துவிடவேண்டு மேன்பதில்லே. அவை

களையும் மனமார அனுபவித்துக்கொண்டே ஆன்ம லாபத்தையும் பெருக்கிக் கொள்ளலாம்'' என்பவை முக்கியமான கொள்கைகள். இவ்வகையினர் துவராடை உடுத்துச் சிகப்புக்குல்லாய் அணிந்திருப்பர். (சேவ்வாடை) சிகப்புக் குல்லாயினர் என்றழைக்கப்படுகிருர்கள்.

## வழிபடு தெய்வங்கள்:

பத்மசுங்கே வாழ்நாளில் பெண்ணின்பத்தில் திளைத்து நின்ருர்; நாள்முழுவதும் மதுபோதையிலேயே இருப்பாராம். அவரும் அவருடைய தேவியாரும் வந்து நின்ற இடம் இந்த ரேதபுரி. அவர் ஏறிவந்த குதிரையின் குளம் படியும் அவர் பதித்துவிட்டுச் சேன்ற திருக்கை அடை யாளமும் இன்றுமிருக்கின்றன. அவை புநிதமானவை; வணக்கத்திற்குரியன. அவர் நின்ற இடத்தில் திருவுருவம் அமைக்கப்பட்டிருக்கிறது. அத்திருவுருவை, நேரே பார்த்தால் கண்ணொளி மழுங்கிவிடுமாம். ஆகையால் அதைத் தரிசிப்போர் குனிந்து நின்று தரையைப் பார்த்த படி நின்று வணக்கம் சேலுத்துவார்களாம். அன்பர்கள் நின்று தரிசனம் செய்ய அப்பேருமானுடைய திருவுரு போன்றே தரையில் கோடிட்டு திருவுரும் வரையப்பட்டிருக் கிறதாம். அதைத்தரிசித்தாலே அத்திருவுருவைக் கண்ட பலன் உண்டு. அதைக் கீழேகுனிந்து தொட்டுக் கண்களில் ஒற்றிக்கோண்டு விழுந்து வணக்கம் செய்தல் முறை.

## தீர்த்தபுரி மடம்:

தீர்த்தபுரி மடம் அக்காலத்தில் லதக்நாட்டைச் சேர்ந்த ஹேம்மிஸ் கும்பாவைச் (Hemmis Gomba) சேர்ந்திருந்தது. 1941 ல் வந்த காஸ்கர் (Khazkars)

இந்த மடத்தையும் சூறையிட்டுத் தகர்த்துவிட்டார்கள். 1945 ல் ஷிப்ஜோ என்பவர் மடத்தைப் புதுப்பித்துக் கட்டித் தக்களக்கோட்டையிலுள்ள சிம்பிலிங் கும்பா வோடு இணைத்துவிட்டார். அதிலிருந்து இது சீர்திருத்த மதப்பிரிவை, மஞ்சள் குல்லாய் வகையைச் சேர்ந்ததாகி விட்டது. இம்மடத்தின் முன்புறத்தில் ஒரு மணிமந்திரச் சுவர் இருக்கிறது. அதற்கப்பால் கோரிம்போ (Gorimbo) என்னும் மணிமந்திரக் கற்குவியல் (ஓம் மணிபத்மே ஹூம்) ஒன்றுமிருக்கிறது.

## தேவி ஆலயம் :

இந்த மடத்திற்குச் சிறிது தொலைவில் மலை அடிவாரத்தில் தேவியின் ஆலயம் ஒன்றிருக்கிறது. தேவியின் பெயர் தோர்ஜி பங்மோ (Dorje Phangmo) - வஜ்ராவராகி. தெம்சோக் (Demchok) என்னும் கயிலைநாதனுடைய தேவி. அத்தேவி அமர்ந்திருக்கும் மலைப்பகுதி சிந்தூர மலை. அம்மலையின் மண் மஞ்சள்நிறமுடையது. அதைத் தேவியின் பிரசாதமாக எடுத்துச் செல்வர்.

## தர்ச்சோக், தோல்மா :

தீர்த்தபுரி மடத்தின் பின்புறத்தில் பாதை செல்கிறது. அதன் நுழைவில் யாக், ஆடுகள் இவற்றின் கொம்புகளைக் கொண்ட இரண்டு குவியல்கள் இருக்கின்றன. குறுக்கே கொடிச்சீலைகள் கட்டியிருக்கிறார்கள். மடத்தின் முகப்பில் ஒரு கொடி மரம் நடப்பட்டிருக்கிறது. அதற்கு தர்ச்சோக் (Dharchoke) என்று பெயர். கொம்புக் குவியல்களுக்குத் தோல்மா (Dolma) தாராதேவி என்று பெயர். வெந்நீர் ஊற்றுக்களில் பிரசாதமாக எடுக்கப்படும் வெண்மையான பொருளுக்கு சுகான் (Chugan) என்று பெயர்.



உண்டாதுராக் கணவாய் உச்சியில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்



தீர்த்தபுரி கும்பாவில் உள்ள ட்ராபாக்களும் லாமாக்களும்



தண்டியில் செல்லுதல் டபக்ஷேலா

தீர்த்தபுரி - பஸ்மாசுர சம்ஹாரமான இடத்தில் உள்ள வெந்நீர் ஊற்று



## கோரிம்போ :

கோரிம்போ என்பது கயிலேயின் உருவ அமைப்புக் கொண்டது. அதன் உச்சியில் சிவபெருமான் (தேம்சோக்) அவ்வப்போதும் வந்தமர்ந்து புராணபடனம் செய்வதாக நம்புகிறார்கள். மணி-மந்திரக் கற்குவியல், மணிச்சுவர், கோம்புக் குவியல் இவை புனிதமானவை. அவைகளின் மீது கால்படுதல்கூடாது. அந்த இடங்களை அணுகியதும் அவற்றை வலம் வந்து அப்புறம் செல்வர் அம்மக்கள்.

## யாக் வாலாக்களின் மாநாடு :

தீர்த்த புரியிலிருந்து கர்டோக் 50 மைல்; தர்ச்சன் 80 மைல்; ஞானிமாமண்டி வழியாக தக்களக்கோட்டை 80 மைல். தீர்த்தபுரி கடல் மட்டத்திலிருந்து 14,000 அடி உயரம்.

இங்கு வந்ததும் எங்களோடு வந்த யாக் வாலாக்கள் கணக்குகளைத்தீர்த்து அனுப்பி வைக்கப்பெற்றார்கள். இங்கு இன்னின்ன பகுதிவரை இன்னின்னார்தான் வரலாம் என்ற நியதி யாக் வாலாக்களுக்குள் இருக்கிறது. மறு நாளே வேறு யாக்குகளைத் திட்டம்செய்து யாத்திரையைத் தொடர்ந்து செல்வதென நினைத்து வந்தோம். அங்கு எதிர்பார்த்தபடி ஆட்கள் எவரும் கிடைக்கவில்லை. இந்த இடத்திற்கு அருகில் யாக் வாலாக்களின் மாநாடு நடைபெறுவதாகவும் அது அந்த நாட்டை அப்போழுது ஆளும் சீன அரசாங்கத்தினரால் நடத்தப்படுவதாகவும் அங்கு அப்பகுதியில் உள்ள யாக் வாலாக்கள் எல்லோரும் சேன்றிருப்பதாகவும் தேரியவந்தது. மகாநாடு இரண்டு மூன்று நாட்களே நடைபெறுமேன்றும், நாங்கள் அங்கு வந்த அன்று தொடங்கப்பட்டதேன்றும் சொன்னார்கள்.

கூட்டம் நடக்குமிடத்துக்கு ஆள் அனுப்பப்பட்டது. மறு நாள் இரவு வருவதாகப் பலரும் ஒப்புக்கொண்டு செய்தி அனுப்பினர். அதை நம்பி நாங்கள் அங்கு வந்த மூன்ருவது நாள் காலையில் அவ்விடம் விட்டுப் புறப்படத் தயாராக இருந்தோம். 5, 6 நாட்கள் வரை அவர்கள் வரவேஇல்லை இதற்குள் இரண்டு மூன்றுமுறை இங்கிருந்து ஆள் அனுப்பப்பட்டது. அன்றிரவு வருவதாக ஒவ்வோருநாளும் செய்தி சோல்லி அனுப்பிக்கோண்டே இருந்தார்கள். 27—7—59 முதல் 2—8—59 முடிய அங்குத் தங்கினேம். நாள் நீடிப்பதில் ஏதோ சூதிருப்ப தாகச் சந்தேகம் உண்டாயிற்று எங்களுக்கு.

## பாங்தேயின் ஏஜண்ட் :

மிலத்தில் எங்களுக்கு விருந்தளித்த பகத்சிங்பாங்தே யின் காரியக்காரர் (ஏஜண்டு ஒருவர்) அந்தப் பகுதியில் அரசாங்க வரி வசூலிப்பவர் (Garpon) அவருக்குச் செய்தி அனுப்பினேம். பணமும் செல்வாக்கும் மிகுந்தவர். திபேத்தில் அரசாங்க அலுவல் பார்ப்பவர்கள் மற்ற வியாபாரங்களிலும் ஈடுபடலாம். அதேபோல பாங்தேயின் வியாபாரக் காரியங்களை அவர் மேற்பார்த்து வந்தார். அவரும் அக்கூட்டத்துக்குச் சென்றிருந்தார். அரசாங் கத்தில் போறுப்புள்ளவராகையால் அங்குக் கட்டாயம் இருக்கவேண்டியதாக இருந்தது.

நாங்கள் திபேத் பகுதியில் சென்றபோழுது தலாய் லாமா அந்நாட்டைவிட்டு வேளியேறிப் பாரதத்தில் சரண்புகுந்திருந்தார். சீனர் திபேத்திய ஆட்சியைக் கைப்பற்றிச் சில மாறுதல்களைச் செய்துவந்தார்கள். அதற்காக இது போன்ற கூட்டங்களைக் கூட்டி அம்மக்களிடம் நயத் தாலும் பயத்தாலும் புது முறை ஆட்சியைப் பிரசாரம்

செய்துவந்தார்கள். ஆகையால் அரசாங்க அதிகாரியான கர்ப்பான்பதவியிலுள்ள அந்த நண்பர் அங்கிருந்து பிரிந்து வர முடியவில்லை, ஆனுல் பாங்தேயின் பெயர் சொல்லி அழைத்ததும் புறப்பட்டுவருவதாகச் சொல்லியனுப்பினுர்.

பொதுவாகத் திபேத்தியரிடம் ஒரு வேலையைச் சொன்னுல் முடிந்தால் உடனே செய்வர்; முடியாவிட்டால் முடியாது என்று சொல்வது கிடையாது. நாளைக்கு நாளைக்கு என்று சொல்லிக் காலத்தைக் கடத்துவர். முடிவை எதிர்பார்ப்பவர் தாமாகப் புரிந்துகொள்ள வேண்டியதுதான். ஆகையால், வருகிறேன், தருகிறேன் என்பதன் உண்மைப் பொருள் என்ன என்பதை நாம் புரிந்து கொள்வது அவ்வளவு எளிதல்ல.

## கயிலைநாதனுக்குப் பிரார்த்தனை :

குழம்பிக்கிடந்தநாளில் ஸ்ரீலஸ்ரீகுருமகாசந்நிதானத்தில் குருஞானசம்பந்தப் பெருமானுக்கும், கயிலைநாதனுக்கும் வழிபாடுகளும் பிரார்த்தனைகளும்செய்ய உத்திரவிட்டார்கள். நிராதரவான இடத்தில் அவர்களைத் தவிர கருணை கொண்டு உதவக்கூடியவர் யார்தான் இருக்கிறுர்கள்? 29—7—59 அன்று ஆடிக்கார்த்திகை. கயிலை நாதனைக் குறித்துச் சிறப்பு வழிபாடுகள் செய்யவேண்டுமென்று திருவுளம் பற்றினுர்கள். கற்கண்டுப்பொங்கல், வெண்பொங்கல், புளியஞ்சாதம், துவரைச்சாதம், தேங்காய்ச்சாதம், வடை, பாயசம், போளி முதலிய நைவேதனங்கள் தயாரிக்க உத்திரவாயிற்று. அன்று அதிகாலையிலேயே எழுந்து நீராடி ஈர ஆடையுடன் ஆசாரத்தோடு பிரசாதங்களைத் தயாரித்தோம். எங்கள் கூடாரத்தின் முன்னிடத்தைச் சுத்தம் செய்து நீர் தெளித்துக் கோல

மீட்டுப் பூஜை இடம் தயாரித்தோம். முதல்நாள் கயிலை வழியில் பெய்த மழையினுல் சட்லிஜ்நதி பெருக்கெடுத்து ஓடியது. ஆடிப்பெருக்காக இருந்தது அன்றையவெள்ளப் பெருக்கம். பூஜை இடத்தில் நைவேதனங்களை இட்டு வழிபாடுகள் செய்து, சாம்பிராணி தூபங்காட்டி சூட தீபாராதனை செய்து கயிலைத திருமுறைகளை ஓதினேம். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில்தான் வழிபாடுகளைச் செய் தருளினுர்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருவடி களில் நாங்கள் எல்லோரும் விழுந்து வணங்கி விபூதிப் பிரசாதம் பெற்றுக்கொண்டோம்.

## அன்னம் பாலிப்பு :

பிறகு அன்னம் பாலிப்பு. வடநாட்டு நண்பர்களும் இதில் பங்கு பெற்ருர்கள். அவர்களுக்கும் வர்க்கான்னங் களை ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் வழங்கினுர்கள். பெரியதொரு மாகேசுவர பூசையாகவே அது நடந்தது. வடநாட்டினர் அரிசியில் இவ்வகைத் தயாரிப்புக்களைக் கண்டு ருசிபார்த்தது கிடையாது. பல நிறங்களோடு பல வகை ருசிமிக்க அவ்வுணவை உண்ட வடநாட்டினர் படே பண்டாரா (அடியார்க்கு அன்னம்பாலிப்பு) என்று சொல்லிக் கொண்டார்கள். ஒவ்வொன்றின் நிறம் மாறி மாறி வழங்கப் பட்ட பல சுவைகள் இவற்றைப் பாராட்டிப் பேசினர் வட நாட்டினர். வெறும் ரோட்டி சப்பாத்தி (ஆலு சப்ஜி) உருளைக் கிழங்குக் கறி இவற்றை மிகுதியாக உண்டு வந்த எங்களுக்கும் இந்த வர்க்கவகை பெருமான் வந்து வழங்கிய அமுத வழக்கமாகவே இருந்தது. அப்பிர சாதங்கள் அங்குள்ள லாமா மதச் சாதுக்களுக்கும் ( டாபாக்கள் ) வழங்கப்பட்டன.

## குருஞானசம்பந்தர்க்கு வழிபாடு :

மறுநாள் குருவாரம். அன்று ஸ்ரீலஸ்ரீ குருஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகளுக்கு வழிபாடு. முன்னுள் போலவே அதிகாலையில் எழுந்து தீர்த்தத்தில் முழுகித் தூய்மை செய்துகொண்டு ஆசாரமாகக் கற்கண்டுச் சர்க்கரைப் பொங்கலும் வடை முதலியனவும் தயார் செய்தோம். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்துக்கு மௌன விரதநாள். அவர்கள் தூபதீபங்காட்டி வழிபாடுகளைச் செய்துமுடித்துப் பிரசாதங்களைப் பலருக்கும் வழங்கினுர் கள். மறுநாள் பாரணை செய்து முடித்துக்கொண்டு தீர்த்தபுரி மடாலயத்தையும் அங்குள்ள கோயில்களையும் பார்வை யிட்டு வந்தார்கள்.

## பிரார்த்தனைப் பயன் :

எங்கள் பிரார்த்தனை வீண்போகவில்லை. வெள்ளி யன்றிரவு 10 மணிக்கு கர்ப்பான் ஒருவருக்கும் தெரியாமல் அங்கு ரகசியமாகக் குதிரையில் வந்துசேர்ந்தார். அவரை சுவாமி வித்யாநந்தா வரவேற்றுப் பேசிக்கொண்டிருந்தார் கள். பிறகு அவரை அழைத்துவந்து ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தினிடமும் அறிமுகம் செய்துவைத்தார்கள். அவருக்குப் பிஸ்கோத், பேப்பர்மிண்ட், ரொட்டி முதலிய எல்லாம் கொடுத்தோம். பாலிட்ட தேநீரும் கொடுத்தோம். அவருக்கு எல்லையில்லாத மகிழ்ச்சி. “ நாளை இரவு இங்கு யாக்குகள் வரும். சொல்லமுடியாத சில காரணங்களால் தான் யாக்குகளை அனுப்பமுடியவில்லை. இங்கு வந்து இரண்டு பெரிய மகான்களைத் தரிசித்தபிறகு எப்படியேனும் யாக்குகளை அனுப்புவதென்று முடிவுசெய்துவிட்டேன். கவலை வேண்டாம் ” என்று சொல்லி விடைபெற்ருர்.

மறுநாள் அதிகாலையில் அவர் எங்களைவிட்டுப் புறப்பட்டு விட்டார். பார்வைக்கு வயதானவராகக் காணப்பட்ட அவர் குதிரை ஏற்றத்தில் மிக வல்லவர். அழகான அவருடைய குதிரை மிக விரைவாக நாலுகால் பாய்ச்சலில் ஓடுகிறது. "மேலாடை வீழ்ந்தது என்று சொல்லுமுன் நாலாறுகாதம் போயிற்றுத் தேர்" என்று பாகன் சொல்லிய தாகச் சொல்வார்கள் அக்காலத்தில் நளசாரத்தியத்தை வியந்து. அதுபோல இருந்தது அக்குதிரையின் வேகம்.

## லாமா சந்நியாசிகள் :

அந்த மடத்தில் உள்ள சந்நியாசிகள் லாமா மதத்தில் கடைசிப் படிமுறையில் உள்ளவர்கள். ட்ராபாக்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். அவர்கள் வழிபாடுகள் செய்த நேரம்போக மற்ற நேரங்களில் யாக்குகளை மேய்த்தல், கூலிவேலை செய்தல் முதலிய எல்லா வேலைகளையும் செய்கிறார்கள். பல் தேய்த்தல், குளித்தல், தலையை எண்ணெயிட்டுச்சீவிக்கொள்ளுதல், உடைகளைத்துவைத்து மாற்றுடை தரித்தல் முதலிய எதுவும் அவர்கள் செய்வ தாகத் தெரியவில்லை. அதிலும் யாக் வெண்ணெயை முகத்தில் பூசிக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் அருகில் வந்தாலே முடைநாற்றம் எடுக்கிறது. இந்த நிலையில் எங்கள் கூடாரங்களைச் சுற்றிச்சுற்றி வந்தனர். சமையல் செய்யும்போழுதும் உண்ணும்போழுதும் பக்கத்திலேயே பார்த்துக்கொண்டு இருந்தார்கள். கூடாரங்களிலும் உட்புகுந்து எங்களுக்கு அருகில் வந்து அமர்ந்து எல்லா வற்றையும் பார்த்துப் பார்த்து மகிழ ஆரம்பித்தார்கள். இது எங்களுக்கு அருவருப்பாக இருந்தது. சுவாமிகளிடம் 'மற்ற இடங்களில் இருந்தாலும் இருக்கட்டும்; உணவு சமைக்குமிடத்திலும் உணவுகொள்ளும்போழுதும் அந்த

இரண்டு நேரங்களிலாவது அவர்கள் வராது தடுக்க வேண்டு'மென்று கேட்டோம். வழக்கம்போலக் கதைமூலம் சிறந்த கருத்து விருந்தொன்று அளித்தார்கள் அவர்கள். அவர்களுடைய சொந்த அனுபவம் அது.

## புலியை அடக்கிய சாது :

மகாராஷ்ட்ரத்தில் சர்க்கஸ் நடத்திவந்தது ஒரு குழு. புலி, கரடி, யானை முதலிய பல காட்டு விலங்குகளையும் வைத்திருந்தார்கள் அவர்கள். ஒரு நாள் இரவு வேடிக்கைகள் காட்டிவரும்போழுது பெரிய வேங்கைப் புலி ஒன்று வெளியே பாய்ந்து ஓடிப் பக்கத்தில் உள்ள காட்டில் மறைந்துவிட்டது. மக்கள் அச்சத்தால் அலமந்தனர். அப்புலியைச் சுட்டுக் கொல்வோருக்கு வெகுமதி அளிப்ப தாக விளம்பரங்களும் வெளியிட்டார்கள்.

இதைக் கேள்விப்பட்டார் ஒரு சாது. அப்புலி நிற்கு மிடத்திற்கு வந்தார். அதை வா என்றார். பசுவைப்போல அவரோடு நடந்து வந்தது. சர்க்கஸ் கூண்டிருக்கும் இடத்திற்கு வந்து ''நல்லவனான உன்னைக்கண்டு மக்கள் மருள்கிறார்கள். இனி வெளிவராதே. உன் இடத் திற்குப்போ'' என்றார். அது தன் கூண்டுக்குள் போய் நின்றது. இதை ஆயிரக்கணக்கான மக்கள் கண்டதிசயித் தனர். செய்தித்தாள்கள் இச்செய்தியைப் பிரசுரித்தன.

## இது நேரமில்லை :

அந்த மகானைப் பார்க்க அவரிருக்குமிடம் சென்றேன். அன்று அங்கு ஒரு பெரிய அன்னம்பாலிப்பு. மகானைப் பார்க்க வேண்டுமென்றேன். அங்குள்ளோர் யாரும்

எதுவும் மறுமொழி சொல்லவில்லை. அவரவர் வேலையில் ஈடுபட்டார்கள். முடிவில் அங்கொரு வயதானவர் நின்றார். அவரை அணுகிக் கேட்டேன். அச்சாதுவைப் பார்க்க இது நேரமில்லை என்று சொல்லி அவரும் தம் வேலையில் முனைந்தார். மாலை 3 மணிவரை அன்னம் பாலிப்பு நடந்தது. பல ஏழை எளியவர்கள் அங்குவந்து வயிறார உண்டு சாதுவை வாழ்த்திச் சென்றார்கள்.

## மகானைப் பார்க்க முடியுமா ?

அதன் முடிவில் பலதரப்பட்டவர்கள், பலவேறு வகுப்பார், உணவு உட்கொள்ள ஒருசேர அமர்ந்தார்கள். அக்கிழவர் என்னையும் அதில் அமர அழைத்தார் சூழ்நிலை எனக்குப் பிடித்தமாக இல்லை. நான் முடியாது என்று சொல்லி அங்குள்ள மகானைப் பார்க்கவேண்டுமென்று மீண்டும் கேட்டேன். "முடியாது, அவரை நீ பார்க்கவே முடியாது. இங்கு நீ இருக்கவும் அருகதை அற்றவன். செல்லலாம்" என்று சொல்லி அப்பெரியவர் அப்பாற் சென்று அமர்ந்து உணவு கொண்டார். எல்லாம் முடிந்து எல்லோரும் போய்விட்டார்கள். முழங் காலளவு ஒரு துணியைக் கட்டியிருந்த அப்பெரியவர் மட்டும் அங்கேயேயிருந்தார். ஒருவாறு அவரே நான் தேடிவந்த மகான் என்பதைக்கண்டு நாணங்கொண்டு அவரடியில் வீழ்ந்து வணங்கி மன்னிப்புக்கேட்டேன். "உனக்குப் பக்குவம் இல்லை. அடியார்கள் அமர்ந்து அன்னம்பாலிப்பு நடக்கும் இடமே மிகவும் புனிதமானது. அங்கே பெருமான் வந்து நின்று மகிழ்ந்திருப்பான். பக்குவமிருப்பின் அவனை அங்கே நீ காணவும்முடியும். அங்கு எந்தப் பாகுபாடும் கிடையாது. அமுது

கோள்ளும் ஒவ்வோரு அடியாரும் பேருமானுடைய பிரதி பிம்பமே. இதை முதலில் தேரிந்துகோள். போகலாம்'' என்று என்னை வேளியே போகவிட்டார்.

வேறுபாடு கூடாது :

அதேபோல '' உலகுய்ய ஆட்கோள்ள எழுந்த புநிதப் பூமி இது இங்குக் கயிலைநாதன் உறைகிறான். இம்மலைத் தோடர் எல்லைகடந்த இமயப்பகுதி. இதிலிருந்தே கயிலாய எல்லை தோடங்குகிறது. கயிலாயபூமி. மிகப்புநிதமானது. உயிருள்ளவை உயிரில்லாதவை எல்லாமே புநிதமானவை. இங்கு வேற்றுமை உணர்ச்சிக்கு இடமில்லை. கோபம் முதலியவைகளும் கூடாது. நல்ல மேலான எண்ணங்களை வளர்க்கும் தேய்விக பூமி. இவர்கள் இங்கேயே பிறந்து வாழ்ந்து இங்கேயே மண்ணோடு கலக்கும் புண்ணியம் வாய்ந்தவர்கள். நாமும் வணங்கத்தக்கவர்கள். ஆகையால் வேறுபாடு கோள்ளவேண்டாம் '' என்றார்கள்.

மங்ரியாசா :

எங்கள் கயிலை யாத்திரை வேற்றிகரமாக முடிய வேண்டுமேன்று அம்மடத்தில் சிறப்புப் பிரார்த்தனைகள் சேய்தார்கள். காலையிலிருந்து இரவுவரை அவர்களுடைய மதத் தோத்திரங்களை ஒருவித இராகத்தோடு சோல்லிச் சோல்லி மணி, தப்பட்டை போன்ற ஒரு இசைக்கருவி முதலியன அடித்துக்கோண்டுமிருந்தனர். அதிகாலையி லிருந்து அவ்வழிபாடு முடியும்வரை உப்பிட்ட தேநீர் அருந்திக்கோண்டே இருந்தனர். நடுநடுவில் சத்துமாக் கலந்து குழைத்துத் தின்று தேநீரும் அருந்தினர். இந்த நிலையில் பிரார்த்தனைகள் நடைபேற்றன. அந்த நல்லவர் களுக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் திருக்கை வழக்கம் அளித்தார்கள்.

எவரேனும் நோய்வாய்ப்பட்டிருந்தாலும், இதுபோன்ற பெரிய யாத்திரைகளை மேற்கோள்வதாக இருந்தாலும் இம்மடங்களில் இதுபோன்ற பிரார்த்தனைகள் நடத்துவிப்பார்களாம். அதற்கு " மங்சியா சா " என்று பெயர். இதற்குள்ள கட்டணங்களும் மிகக் குறைவுதான். பத்துருபாய்க்குள் நடத்தச்செய்யலாம். இவைகளல்லாமல் அமாவாசை, பௌர்ணமி ஆகிய நாட்களில் மடங்களில் சிறப்பு வழிபாடு நடைபெறுமாம். தரையில் கோலம் போட்டு களிமண்ணும், பார்லி, கோதுமைச் சத்துமாவும் கலந்து கூம்புருளை வடிவில் சிவன் திருவுருவம் செய்து, அதன்மீது சகஸ்ரலிங்கங்கள் போன்ற மேடுகள் அமைத்து, அதன்மீது வைத்து நல்லெண்ணெய் (எள் எண்ணெய்) பெய்து யாகம் செய்வார்களாம். இதேபோல் இரவு பகல் முழுதும் 300, 400 கோப்பை உப்பிட்ட தேநீர் அருந்தி விடுவார்களாம். மறுநாள் வழிபாடு முடிந்ததும் அதிகாலையில் மலைக்குகைகளிலோ அல்லது ஆறுகளிலோ அவ்வுருவங்களை விட்டுவிடுவார்களாம். அதுபோன்ற மண்ணுருவங்களைத் தீர்த்தபுரிமலை அடிவாரத்தில் உள்ள குகைகளில் கண்டோம்.

## சட்லீஜ் உற்பத்தி :

தீர்த்தபுரிக்கருகில் தோல்ச்சூ கும்பா (Dolchu Gomba) என்று ஒரு மடம் இருக்கிறது அதுவும் இதேபோல ஒரு மலையின்மேல் கட்டப்பட்டிருக்கிறது. அதனடியிலிருந்தும் அதன் அருகில் உள்ள அளற்றுப் பகுதியிலிருந்தும் சதத்ரு என்று சுருதிகளில் வழங்கப் படும் சட்லீஜ் நதி உற்பத்தியாகிறது. அம்மலை தோலிவிலிருந்து நோக்கினால் யானை ஒன்று படுத்திருப்பதுபோல இருக்குமாம். அதற்கு யானைவாயிலிருந்து வெளிவரும் நதி

என்ற பொருளில் (Langchen Kambab) லாங் சென்கம்பரப் என்று திபெத்திய மொழியில் பெயரிட் டிருக்கிருர்கள். லாங்சென் என்னும் திபெத்திய வார்த் தைக்கு யானை என்று பொருள். மானசசரோவரத்திலிருந்து யானை வாய்வழியாக வெளிவருகிறது என்று திபெத்திய புராணங்கள் சொல்கின்றன. நம்முடைய நூல்களிலும் மானசசரோவரத்திலிருந்துஉற்பத்தியாவதாகவே சொல்லப் பட்டிருக்கிறது. நில நூல்வல்லார் இராக்ஷசதளத்திலிருந்து உற்பத்தியாவதாகச் சொல்கிருர்கள். அதிலிருந்து ஊறி வரும் தண்ணீர்தான் சட்லீஜ் என்று முடிவு செய்துள் ளார்கள். மானசசரோவரத்திலிருந்து அந்தர்வாகினியாகத் தொடர்பு உடையதென்றும் சொல்வார்கள். இது பாரதத் தில் வெளி வந்து பஞ்சாப் இராஜ்யத்தில் ஓடி சிந்து நதியோடு கலந்து பாகிஸ்தான் நாட்டில் அரேபியக் கடலில் வந்து கலக்கிறது.

## மூன்ருவதுமுறைக் கயிலைக் காட்சி :

தீர்த்தபுரியிலிருந்து ஞாயிறன்று காலை 10 மணிக்குப் புறப்பட்டோம். கார்ப்பான் அவர்கள் சொன்ன சொல்லைக் காத்துக்கொண்டார். அவர் உத்தரவிற்கிணங்க சனியன்று இரவு 10 மணி அளவில் யாக்குகள் வந்து சேர்ந்தன. அவர்களைத் திட்டம் செய்து அமர்த்திக்கொண்டு புறப் பட்டோம். பயணத் தொடக்கத்திலேயே கடும் ஏற்றம். பிறகு ஏற்றமும் இறக்கமுமான வழியில் 3, 4 கல் தொலைவு சில மலைத்தொடர்களைத் கடந்து சென்ருேம். நடு வழியில் ட்ரோப்பா நப் என்ற சிற்ருற்றைக் கடக்கவேண்டிவந்தது. அதன் கரைக்கு வந்து சேர்ந்ததும் கடுமையான ஆலங் கட்டி மழை பெய்தது. அது ஒய்ந்ததும் ஆற்றைக்கடந்து அக்கரை சேர்ந்து ஒரு உச்சி இடத்தை அடைந்தோம்.

அங்கிருந்து கயிலாய தரிசனம் எங்களுக்கு மூன்ருவது முறையாகக் கிடைத்தது. கண்மூடித் தோத்திரம் சோல்லி தரிசனம் முடித்துக் கண் விழித்துப் பார்க்கும்போழுது தன்னே மேகத்திரையிட்டு மூடிக்கோண்டு விட்டது அத்திரு மாமலே. மீண்டும் பயணம் தோடரப்பட்டது.

ஆடிப்பதினெட்டு :

சிறிது தோலேவு சேன்றதும் ( Drokpa Shar ) ட்ரோக்பா ஷார் என்னும் நதியைக் கடந்து சூடா என்னும் நதிக்கரையை அடைந்தோம். கரை 150 அடிக்கு மேல் உயரம் உள்ளது. அதிலிருந்து இறங்கி நதித் தண்ணீர்க் கரையை அடைந்ததும் கடுமையான தண்ணீர் மழை பிடித்துக்கோண்டது. நாங்கள் நின்ற இடத்தின் அருகில் ஒரு மலே உச்சியிலிருந்து அந்த நதி இறங்கிவருவதால் வேகமும் அதிகம்; மழைத்தண்ணீரும் சேர்ந்து பேருகி விட்டது. அங்கு அதைக் கடக்க யாக்குகளே ஏற்பாடு சேய்துகோண்டோம். ஆள் ஒன்றுக்கு இரண்டு ருபாய் கோடுத்தால்தான் நதி தாண்டி அழைத்துச் சேல்வோம் என்று கண்டிப்பாகக் கூறிவிட்டார்கள். பிறகு நீண்டநேரம் பேசி ஆள் ஒன்றுக்கு அரை ருபாய் கோடுப்பதேன்ற முடிவோடு யாக் மீது ஏறிக்கடந்தோம். யாக்குகளேயும் புரட்டிக் கோண்டு ஒடுகிறது ஆற்றின் வேகம். அக்கரையில் உள்ள மேட்டிடத்திலேயே அன்று தங்கிவிட்டோம். அந்த இடத்திற்கு டபக் ஷேலா என்று பேயர். இன்றுதான் ஆடி பதினேட்டு ; காவிரிப் பேருக்குத் திருநாள். அந்தப் பேருக்கை இங்குக் கண்டோம்.

வழியில் :

இன்னும் இரண்டோரு நாட்களில் கயிலேத் தரிசனம் கிடைக்கப்போகிறதேன்ற மகிழ்ச்சிதுள்ள அன்றுமாலேயில்

அல்வாவும் பக்கோடாவும் செய்து உட்கொண்டோம். எங்கள் பகுதியில் எப்பொழுதும் காப்பிதான். மற்ற வட நாட்டவர்கள் பகுதியில் தேநீர். இரவில் நல்ல குளிர். மறுநாள் காலை 10 மணிக்கு மீண்டும் யாத்திரையைத் தொடர்ந்தோம். 500, 600 அடி உயரமான மேட்டுப்பகுதி, பிறகு ஒரு பெரிய மைதானம், மீண்டும் ஏற்றம், மீண்டு மொரு மைதானம். வழியில் ஷெல்சாக் என்னும் பகுதியைக் கடத்தல் வேண்டும். அங்கு ஷெல்சாக் என்னும் நதி ஓடுகிறது. மலை எலிகள் வளைகள் பல அமைத்திருப்பதால் வழியில் நடப்பது துன்பந்தருவதாக இருக்கிறது. ஷெல் சாக் பகுதியைக் கடந்து வந்ததும் ஒரு பெரிய மைதானம். 7, 8 கல் தொலைவு இருக்கும். அதன் நடுவில் கர்டோக் - லாசாப் பெருவழி செல்கிறது. அதில் மோட்டார் லாரிகள் ஓடிய தடங்கள் தெரிந்தன. தீர்த்தபுரி மகாநாட்டுக்குச் சென்று திரும்பிய சீன ராணுவ லாரிகளின் தடங்கள் என்று சொன்னார்கள். அந்த மைதானத்திலிருந்து பார்த்தால் வானத்தின் முதலும் முடிவும் தெரியும். இடது கைப் பக்கத்தில் கயிலை மலைத்தொடர். வலது கைப்புறத்தில் இமயத்தொடர். இரண்டும் அதிகத் தொலைவில் கண் ணுக்குப்புலப்படுகின்றன. தொலைக்காட்சியாக அங்கங்கும் இடியும் மின்னலும் மழையும் பெய்வது தெரிகிறது. அம் மைதான முடிவில் கோய்க் சூக்த்தா என்னும் நதி கடும் வேகத்தில் குறுக்கே ஓடுகிறது. லாரிகள் கடப்பதற்கு மலைக் கற்துண்டுகளை நதியில் போட்டு தூர்த்து அதன் மீது ஓட்டியிருக்கிறார்கள். ஆனால் ஆற்றின் வேகத்தில் அக்கற்களும் புரட்டப்பட்டுக் கலைந்துவிட்டன. அதனை ஒட்டியே அவ்வாற்றைக் கடந்து சென்றோம். பல சிறு குன்றுகளைக் கடந்து ஒரு கணவாய் வழியில் செல்ல வேண்டி வந்தது. அதன் முடிவில் ஒரு அளற்றுப் பகுதி

(Marshes). இக் கணவாய்ப் பகுதிகளில் எல்லோரும் சேர்ந்தே செல்லுதல்வேண்டும். இரண்டோரு பர்லாங் தொலைவு பிரிந்தாலும், முன்னே போவோர் எந்தவழியில் போனுர்கள் என்பதைக் கண்டுபிடித்தல் அரிது. வழியில் சிறுசிறு குன்றுகளும் சிறுசிறு கணவாய்ப் பகுதிகளும் அதிகம். அளற்றுப்பகுதியில் உறுதியான இடத்தில் கால்வைத்துச் செல்லுதல்வேண்டும். இல்லாவிட்டால் சேற்றில் புதைந்துவிடும். அதன் முடிவில் ஒரு பெரிய மேட்டில் கூடாரங்களை அமைத்துத் தங்கினேம். அந்த இடத்திற்குப் பைலாகும்பா என்றுபேயர் (Paila Gomba). இங்குக் காற்றும் குளிரும் மிக அதிகம். எரிவிறகே கிடைக்கவில்லை. புல்லைத்தவிர வேறு எதுவும் கிடையாது. உயரம் கடல் மட்டத்திலிருந்து 16,000 அடிக்கு மேல் இருக்கும்.

## புதிய அனுபவம் :

வரும் வழியில் சமவெளிப் பகுதியில் ஒரு புதிய அனுபவம். பரந்த மிகப் பெரிய சமவெளிப் பகுதிகள் அவை. அங்குக் காலை 8, 9 மணிவரையும் மிகுந்த குளிராக இருக்கும். அதற்கு மேலும் இளவெய்யில்தான். 16,000 அடி உயரத்தில் வெய்யில் ஒளி வெப்பமில்லாமல் இருக்கிறது. சுடாது. மாலை இரண்டு மணிக்குமேல் காற்று மிகக் கடுமையாக வீசத்தொடங்குகிறது. ஒருபுறம் மப்பும் மந்தாரமும், சிறு மழைத்தூறலும். மறுபுறம் கடும் புயற்காற்று மண்ணைத் தூண்போல எழுப்பிச் சுழன்று சுழன்று வாரி எடுத்துச் செல்லும். வேகம் குறையுமிடத்தில் அம்மண் தானே கீழே விழுந்து குவிந்துகிடக்கும். இதுபோல அது இன்று ஓரிடத்தில் உள்ள மண்ணைச் சுமந்து சென்று நாளை வேருேரிடத்தில் கோட்டி மேடாகச்

செய்துவிடும். ஆகையால் மண்மேடுகள் அடிக்கடி இடம் பெயர்வதாகத் தோன்றும். மேகங்கள் புயல்வேகத்தில் ஓடிக்கொண்டே இருக்கும். இதனுல் அங்குப் பெய்யும் மழையும் ஓடிக்கொண்டே இருக்கும். மலேகளின் இடை வெளி தெரியும் இடங்களில் செல்லும்போது குளிர் மிகுந்த காற்று சமவெளியை நோக்கி வீசும். துருத்தி யிலிருந்து வெளிவரும்காற்றுப்போல வந்துவந்து மோதும். அங்கு உண்டாகும் இடிக்குரல் பேரிடிக்குரலாக இருக்கும். பயங்கரமாக நீண்டு கேட்டுக்கொண்டே இருக்கும். சமவெளியில் வரும்பொழுது எங்களேப் பின்புறமிருந்து காற்று உந்த நாங்கள் சிறிது வேகமாக நடக்கவேண்டி வந்தது. காற்றின் பின்னே மழையும் பெய்துகொண்டே வந்தது. அவை இரண்டும் எங்களே விரட்டிக்கொண்டே வருவதுபோல இருந்தது அன்றைய நிகழ்ச்சி. இதனுல் குளிர் மிகுதியாகவே இருந்தது. ஆனுல் நடையில் களேப்புத் தெரியவில்லே.

## கயிலேமலேயான் அழைப்பு :

பைலாகும்பாவில் தங்கிய மறுநாள் அதிகாலேயில் இரண்டு பெரிய காகங்கள் அங்கு வந்தன. அவற்றைக் கண்டவுடன் சுவாமி வித்யாநந்தா "நமக்குக் .கயிலே நாதன் அழைப்பு வந்துவிட்டது. காகபுசுண்டரே அதோ வந்திருக்கிருர்" என்று சொல்லி மகிழ்ச்சிகொண்டார்கள். இவையல்லாது சிவந்த மூக்குடைய கரிய பறவை - காகம் போன்றது மாக்பை (Magpie) இருக்கிறது. அவற்றின் இரத்தத்தை எடுத்துக் கண்ணிலிட்டுக்கொண்டால் பேய் பூத நடமாட்டமும் தெரியும் என்று சொல்லுகிருர்கள். இந்த ஒருவகையும் அங்கிருக்கிறது. தீர்த்தபுரியிலேயே இவ்வகைப் பறவைகளேக் கண்டோம்.

ஆடி அமாவாசை :

அன்று ஆடி அமாவாசை. குளித்துமுழுக அங்குத் தண்ணீர் கிடைக்கவில்லை. அளற்றுப் பகுதியில் சிறு சிறு பள்ளங்களில் ஊறிநிற்கும் தண்ணீரைச் சிறு பாத்திரங் கொண்டு மொண்டு எங்கள்மீது ஊற்றிக்கொள்ளவேண்டி வந்தது. அன்று அங்கு சிலர் பிதிர்க்கடன் செய்தார்கள். காலை 10 மணிக்கு உணவு ஏற்று அங்கிருந்து புறப்பட் டோம். அங்கிருந்து 1000 அடி உயரமுள்ள மணல் மலை மீது ஏறிஇறங்கவேண்டிவந்தது. போதிமணலில் நடப்பது துன்பமாகவே இருந்தது. இதுபோலவே ஏற்றமும் இறக்கமும் பல. நடுநடுவில் மலையிலிருந்து வரும் மழைத் தண்ணீர் பெரிய ஆறுகள் போன்ற 40. 50 அடி ஆழமுள்ள அறுத்தோடிகளை உண்டாக்கியிருந்தன. ஆனால் அவற்றில் அப்போது தண்ணீர் இல்லை. கரைகள் ஒழுங்கற்று ஆனால் செங்குத்தாக இருந்தன. அதுவும் மணலாக இருந்தபடியால் நிதானமாக இறங்கவேண்டி யிருந்தது. இல்லாவிட்டால் எளிதில் சரிந்து நம்மையும் கீழே தள்ளிவிடக்கூடும். மனிதர்களைவிட யாக்குகள் இந்த அறுத்தோடிகளைக் கடப்பதில் மிகுந்த துன்பப்பட்டன பனி உருகி வேகமாக ஓடிவரும் சிற்றோடைகள் சில வற்றையும் கடக்கவேண்டியிருந்தது. ஆழம் குறைவுதான். கால் வைத்தவுடன் மறத்துப்போகும்படியான கடுங் குளிராக இருந்தது தண்ணீர். கூர்க்கம்பைக் கீழே ஊன்றக் கூட முடியவில்லை. நம்மைவிட வலுமிக்க ஒருவன் பறித் தெடுப்பதுபோல அக்கம்புகளையும் பறிக்கக்கூடிய அவ் வளவு கடுமையான வேகம். பனி மிதியணி, காலுறை இவைகளைக் கழற்றி எடுத்துக்கொண்டு அவற்றில் காலை வைத்தவுடன் குளிர் உச்சிவரை சென்று தாக்குகிறது. ஆனால் இந்த யாத்திரையின் குறிக்கோள் மிக அண்மையில்

நமக்குக் கிட்டுவதாக இருக்கிறதே. இந்த நிலையில் இவையெல்லாம் பெரிய துன்பமாகத் தோன்றுமா. அதுவும் கயிலைப் பெருங்கோயில் உட்பகுதியை அடைந்துவிட்ட உணர்ச்சியும் பொங்கியது. காகபுசந்திச் சிகரம் அதோ தெரிகிறது என்றார்கள். இங்கிருந்து அப்பெருந் திருக் கோயிலின் /- அந்தப்பெருஞ் சந்நிதியின் முன்னிடம் வந்து விட்டோம். கயிலை அமைப்பில் பெரும்பாலான சிறப்புக்கள் மேற்கேதான்.

காகபுசந்தி :

காகபுசந்திப் பெருமுனிவர் சிரஞ்சீவியாக இன்றும் கயிலையையும் மானசசரோவரத்தையும் நாடோறும் வலம் வந்து வழிபடும் நியமமுடையவர். பெருஞ்சிவபக்தர். அவ்விதம் நியமம் தவறாது வழிபடவேண்டுமென்னும் பெரு விருப்பத்தைத் தெரிவித்து வரம்பெற்றவர். மனித உடலோடு நாடோறும் நடந்து நடந்து வலம் வருதல் இயலாது, ஆதலால் உலகில் பலரும் வெறுக்கக் கூடிய தாக உருவம் வேண்டிப்பெற்றார் அவர் இயற்றிய தோத் திரம் ஒன்று மிருக்கிறது.

அப்பகுதியில் (கயிலைப் பகுதியில்) வேறெங்கும் கருப்பு மூக்குடைய காகத்தை காணமுடியாதாம். இப் பறவை கயிலையை வலம் வருகிறது என்பதை நாங் களும் கண்டோம். தோரபூக்கிலும், மானசசரோவரத்திலும் நாங்கள் இதே பறவையைக் கண்டோம்.

காகபுசுண்டர் :

மதுவுண்டு அன்னங்கள் இரண்டு களிக்கும்போது சிவபெருமானின் திருநோக்குக்கு இலக்காயின. அந்த

அன்னங்களிடம் சிவகலை காகவுருவத்துடன் பதிந்தது. அன்னம் இருபது முட்டைகளைப் பொரித்தது. இருபத் தோராவது முட்டையிலிருந்து வெளிவந்தது ஒரு காகம். அதுவே புசுண்டர். இவர் வசிஷ்டரைக்கண்டு தன் வரலாறு முழுவதையும் சொன்னார். சதுர்யுகங்களிலும் கண்ட அதிச யங்கள் பலவற்றையும் எடுத்து இயம்பினார். தன் ஆயுளில் பலமுறை தேவர்கள் கடல் கடைந்ததையும் விஷ்ணுமூர்த்தி பலமுறை அவதரித்ததையும் கூறினார். இந்த வசிஷ்டரைப் போல எட்டு வசிஷ்டர்களைக் கண்டதாகவும் உணர்த்தினார். காக உருவிலேயே நிற்கிறார் அம்மாமுனி. இவர் புத்திரர் உரோமரிஷி.

## கயிலை மலைத்தொடக்கம்:

காகபுசந்தியிலிருந்து கயிலைத் திருமாமலைப் பகுதி தொடங்குகிறது. இங்கு வந்ததுமே எங்கள் உள்ளமும் உணர்வும் ஒருமுகப்பட்டன. நடையில் வேகம் உண்டா யிற்று. அயர்வும்களைப்பும் இருந்தஇடம் தெரியவில்லை. எல் லாருடைய சொல்லும் செயலும் ஒன்ருயின. பெருந்திருக் கோயிலைத் தீண்டிய உணர்வு ஏற்பட்டது. எங்களுக்குள் நிறைந்து நின்ற அனுபவத்தை எழுத்தில் உருவாக்க முடியவில்லை. வாய் தோத்திரம் சொல்லத் தொடங்கியது. ஓய்ந்த நேரத்தில் அவரவர் இஷ்ட தெய்வச் சிந்தனைகள் தோன்றின. காலையில் 8, 9 மணிக்கு உணவருந்திப் புறப் பட்ட எங்களுக்கு அன்று பசி, தாக உணர்ச்சிகள் உண்டாகவில்லை.

## விநாயகர் திருமலை:

அடுத்து வந்தது விநாயகர் திருமலை. பிள்ளையாரின் தலையைப் போலவே சிகரம் இயற்கையாக அமைந் திருக்கிறது. திருக்கோவில்களில் சந்நிதியில் விநாயகரும்

முருகனும் எழுந்தருளுவிப்பது வழக்கமல்லவா? அதே போல இங்கேயும் சந்நிதியில் விநாயகர் எழுந்தருளி இருக்கிறார். இங்கே எல்லா மூர்த்தங்களும் சுயம்புவாக நின்று அருள்வழங்குகின்றன. அதேபோல விநாயகரும் சுயம்புவாக, போள்ளாப்பிள்ளையாராக நின்று நம்மை அழைத்து அருள்வழங்குகிறார்.

## கார்த்திகேயர் திருமலை :

இதனை அடுத்து கார்த்திகேயர் திருமலை. ஆறுமுகச் சேவ்வேள் அமர்ந்திருக்கும் திருக்கோலம். ஆறு சிகரங்களை உடையது. பின் பக்கத்தில் மயில் தோகை விரித்து நிற்பது போன்ற அமைப்பு ஒன்று இருப்பதாக நம் தமிழ் நாட்டிலிருந்து கயிலையிலேயே தங்கித் தவம் பெருக்கும் மௌனிபாபா என்றழைக்கப்படும் முக்தானந்த சுவாமிகள் சொல்கிறார்கள்.

அவர்கள் கயிலைப் பகுதியில் உள்ள எல்லா இடங்களையும் நேரிற் சென்று கண்டு வந்தவர்கள். இம்முனிவர் ஒன்று விட்டு மறுநாள் ஒரே நாளில் கயிலைத் திருமலையை சுற்றி வலம் வரும் நியமம் பூண்டு பல ஆண்டுகளாகச் செய்துவரும் புனிதர். தார்ச்சனில் தங்கியிருக்கிறார்கள். பனிக்காலங்களில் மட்டும் கம்பிளி ஆடைகள் அணிவார்கள். மற்றக்காலங்களில் அவர்கள் இடுப்பில் அரைமுழத் துண்டு ஒன்றுதான் உடுத்தியிருப்பர். படுக்கை சாக்குப் பை. முழங்கையே தலையணை. இந்த நிலையில் கயிலைப்பகுதியில் இருபது, இருபத்திரண்டுஆண்டுகளாகத் தங்கித் தவம் பெருக்கி வருகிறார்கள். இங்கு சரவணப் போய்கையும் இருக்கிறதேன்று சொல்கிறார்கள் அவர்கள். கார்த்திகேயர் மலையின் உட்பகுதியில் ஒரு குண்டம் (சிறு ஏரி) இருப்பதையும் கண்டிருக்கிறார்கள்.

## முருகன் திருஅவதாரம் :

அரக்கர் தொல்லை ஆற்ருது தேவர்கள் திருக்கயிலைக்கு வந்து தேவதேவனுகிய சிவபரம்பொருளிடம் முறையிட்டுக் கொண்டார்கள். சூரபன்மன் ஆட்சிச் செருக்கால் தங்களுக்கு ஏற்பட்ட அவதிகளைச் சொல்லிக்கொண்டார் கள். பெருமான் ஐந்து திருமுகத்தோடு அதோ முகமும் தோன்ற எழுந்தருளிக் காட்சி வழங்கி அவ்வாறு திருமுகங் களிலிருந்தும் ஆறு தீப்பொறிகளைத் தோற்றுவித்தான். அத்தீப்பொறிகளை அக்னிதேவனும், வாயுவும் ஏந்தி எடுத்துச்சென்று கங்கையில் விட்டனர். கங்கை அதைச் சுமந்து சென்று சரவணப்பொய்கையில் புகவிட்டாள். அந்த ஆறு பொறிகளும் ஆறு திருமுகங்களோடு ஆறு குழந்தைகளாகத தோன்றி விளையாடிநின்றன. உமை யம்மையாரின் தோழியரான கார்த்திகைப் பெண்கள் அறுவரும் அவ்வாறு குழந்தைகளுக்கும் பால்கொடுத்து வளர்த்துவந்தனர். பெருமான் தேவியோடு அக்குழந்தை களைக்காண அங்கு எழுந்தருளிவந்தார். பெருமாட்டி அக்குழந்தைகளை வாரி எடுத்து முத்தங்கொடுத்தார். அவ்வாறு உடலும் ஒன்ருகி ஆறு திருமுகமும் ஒருடலும் பன்னிரண்டு கைகளும கொண்ட திருவுருவமாய்க் கந்தன் எனப் பெயர் பெற்றது. தேவர் துயா தீர்த்தருளியது. —இது கந்தபுராணப்பகுதி.

இவைகளைத் தரிசித்துக்கொண்டே செல்லும்போது தொலைவிலே இராக்ஷஸ்தால் என்னும் பெரும் ஏரியும் மாந்தாதாமலைச்சிகரங்களும் காட்சிவழங்குகின்றன. அந்த நீர்நிலைக்கரையில் தொலைவிலே யாக்குகள் குதிரைகள் முதலியன மேய்ந்து நிற்பதும் தெரிந்தது. நெடுந்தொலை வுள்ள(Land-scape) தரைக்காட்சி மிக அழகாக இருந்தது.

## நந்திதேவர் திருமலை :

கார்த்திகேய மலைக்கு அடுத்து நந்திமலை. (நியான்றி என்று திபேத்தியர் வழங்குவர்). இறைவன் திருமுன் நந்தி படுத்திருப்பதுபோல நீண்ட அமைப்புடையது இப்புனிதமலை. திருக்கயிலைக்கு இவர்தான் காவல் தெய்வம். அருளிப்பாடு சொல்லும் அதிகாரமுடையவர். இறைவன் சந்நிதியில் வந்து நிறையும் தேவர், முனிவர் திருக்கூட்டங்களை ஒழுங்குபடுத்தித் தரிசனத்துக்கு அனுப்பிக் கையில் பொற்பிரம்புடன் நின்றிருப்பவராயிற்றே. அவர் அனுமதி இல்லாமல் சந்நிதியில் நுழைதலும் முடியாதே. சுந்தரருடன் வந்த சேரர்பெருமானைத் திருவாயிலில் நிறுத்திப் பின்னர் இறைவன் அருளிப்பாடு சொல்லி உள்ளே புகவிட்டவரல்லவா? இவ்வளவு பெருமைமிக்க நந்திதேவரை வணங்கி அனுமதிபெற்றோம். மேலே சென்றோம்.

## கயிலாய தரிசனம் :

அடுத்து ஒரு பெரிய சமவெளி. நடுவில் இரண்டொரு பனியாறுகள். அண்மையில் கயிலைநாதன் காட்சிதரக் காத்திருக்கிறான். உள்ளுக்குள்ளே பரபரப்பு, நடக்கிறோமே, நேரமாகிறதே, விரைவாக ஓடிச்செல்லலாமே என்ற பரபரப்பு. ஆனால் வழியெல்லாம் மேடும்பள்ளமுமாக, டாமாச் செடியும் புல்லும் வாலில்லா எலி, முயல்கள் தங்கும் புதர் அடர்ந்த பகுதியாக இருந்தன. நடை விருவிருப்படைந்தது. சமவெளி இடத்தைக்கடந்தோம். எதிரே வலதுகைப்புறத்தில் ஒரு பெரியமைதானமும் அதில் சில ஆறுகளும் அவற்றின் முடிவில் இராக்ஷஸ்தாலும் இருக்கின்றன வலது கைப்புறம் நந்தி மலைத்தொடர். அம்மேட்டின் முடிவில் வந்து நின்றோம். ஒரு தெய்வீக ஒளி. அத்தெய்வீகத் திருமலை.

பனி உறையும் சிகரம். அதுதான் கயிலைத் திருமாமலை. பல முன் மண்டபங்களோடும், அர்த்தமண்டப மகா மண்ட அமைப்புக்களோடும் உள்ள பெரிய கோவிலிடம். மண்டப அமைப்புக்கள் எல்லாம் மலைச் சிகரங்களே. அவற்றின் முடிவில் வடபகுதியின் கடைசி இடத்தில் விளங்குகிறது அந்த வெள்ளிவெற்பு.

“ அதுதான் கயிலை. அதோ கயிலைநாதன் நமக்குக் காட்சி வழங்குகிறுன். விரைவில் வந்து கண்டு வணங்குங் கள் ’’ என்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் அருளிச் செய்தார்கள். அங்கேயே உணர்விழந்த நிலையில் எல் லோரும் நின்றுவிட்டோம். பின்னேவந்த வித்யாநந்தாவும் “ இன்று இத்திருமலை தெளிவாகக் காட்சி வழங்குகிறது ’’ என்று சொல்லி எங்களோடு உணர்விழந்த நிலையில் நின்று விட்டார்கள். நாங்கள் நின்ற இடம் தென்மேற்கு மூலையில் மேட்டிடம். மேலே செல்ல மனம் வரவில்லை. அத்திருக் காட்சியைக் கண்ட அவ்விடத்திலேயே அவ்வுச்சிச் சிகரத்தைப் பார்த்தபடியே கண்களில் நீர்வார, கைகள் தலை மீது குவித்து அமர்ந்தோம். நேரம் போனதேதெரியவில்லை. எங்கள் சுற்றப்புறமும் மறந்தது. கண்ணிமைத்தாலும் அச்சிகரம் மறைந்து விடுமோ என்று அச்சம். யாரோ ஒருவர் தீபம் காட்டி வழிபடச் சூடமுமிருக்கிறது என்பது காதில் விழுந்தது. உணர்வுபெற்று வழிபாட்டில் முற் பட்டோம். அதற்கென மிட்டாய்களும் சூடமும் எடுத்து வந்திருந்தோம். பனி, காற்று எதுவுமின்றி அப்பகுதி அந்நேரத்தில் நிச்சலனமாக இருந்தது. சிகரமும் தெவிட் டாத காட்சியை ஒளிக்காது எங்களுக்கு வழங்கி நின்றது. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் உரையுணர்வற்றுக் கண்ணீரருவி பெருகச் சூட தீபாராதனை காட்டினுர்கள்.

மிட்டாய்களும் உலர்ந்த திராட்சையும் இட்டு நைவேதனம் செய்தார்கள். எங்களையும் செய்யப்பணித்தார்கள்,

கயிலைத் திருமுறைப் பாராயணமும் செய்தோம். நாங்கள் நின்றிருந்த மேற்குப் பகுதி நந்தி என்று பெயர். திபேத்தில் " நியான்றி ". எதிரே கயிலைப் பகுதியில் நமது கோயில் கர்ப்பக்கிரகத்தைச் சுற்றிலும் வர்க்கவேலை செய்திருப்பதுபோல இயற்கையான வேலைப்பாடுகள் விளைந்திருந்தன. அதிலே கோடிமரம். அதுவல்லாது நூறடிக்குமேல் உயரமான கோடிமரம் ஒன்றும் தெற்கு முகத்தின் எதிரே நடப்பட்டிருந்தது. அதற்கு தர்ச்சோக் (Dharchok), தர்ச்சேன் (Dhachrchen) என்று திபேத்தியர் பெயர் சொல்கிறார்கள். தார் = கோடி; ச்சேன் = பெரியது மகத்வஜம் என்று பொருள்.

## கயிலைச் சுற்று :

மேற்கு, வடக்கு, கிழக்குப் பக்கத்தில் ஒழுங்கான பிராகார அமைப்புக்கள், மேற்குப் பக்கத்தில் நந்திமலையில் சுவர் அமைப்பு. திருமலையைச் சுற்றிக் கயிலைநதி. அத் திருமலையிலிருந்து பனி உருகி ஓடிவரும் தண்ணீர் அதற்கு மாலை பூட்டியதுபோல மேற்கு, வடக்கு, கிழக்குப் பக்கங்களில் ஓடிவந்து தெற்கு முகத்தின் எதிரே குஞ்சம் போல ஒன்றாகிப் பிரிந்து பல கிளைகளாகி ராக்ஷஸ்தாலை நோக்கி ஓடுகிறது.

அவரவரும் கையில் புத்தகம் வைத்துக் கயிலைத் திருமுறைப் பாராயணம் செய்தோம். ஆனால் கண்ணும் மனமும் புத்தகத்திலே பதியவில்லை. பனி மூட்டம் மேக மூட்டம் ஏதாவது வந்து சிகரத்தை மறைத்துவிட்டால் ............ இந்தச் சிந்தனையில் பாராயணத்தில் மனம்

பதியவில்லை. ஆனாலும் ஒருவாறு படித்து முடித்தோம். உணர்வில் நாம் எங்கிருக்கிறோம், என்ன செய்தல் வேண்டும், யார் யார் நம்மோடு இருக்கிறார்கள் என்பன பதியவில்லை.

## அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி...

இந்த நிலையில் மனம் ஒன்றியிருக்கும் நேரத்தில் ஒரு தெய்விகக் காட்சி. அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத ஒரு பெண். வாலைப் பருவத்தினள். மேலைநாட்டு முறையில் கால்சட்டை, மேற்சோடு, கையிலே குதிரைச் சாட்டை, தலையிலே - தொப்பி, தலையில் இரட்டைப் பின்னல், பொன் வண்ணத் திருமேனி, முகத்திலே பொங்கும் புன்னகை, வெண்முத்துப் பல், கையில் மோதிரங்கள், நடையிலும் உடையிலும் மிடுக்கு, அந்த நாட்டுப் பெண்ணாகவும் இல்லை. மேலை நாட்டினளும் அல்லள். சிரித்த படியே ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருமுன் வந்தாள். '' மிட்டாய் தே '' என்றாள். மிட்டாய் வழங்கினார்கள். வாங்கி ஆனந்தமாக வாயில் இட்டுக்கொண்டாள். எங்கள் புகைப்படக்காரர் அவர் கருவியைச் சரிசெய்து வைத்து படம் எடுக்க முயன்றார். '' நை, நை '' என்று சொல்லி மறைந்தாள். எப்படி எந்தப் பக்கம் போனாள்? தெரியவில்லை. பிறகு எவ்வளவு முயன்றும் அவள் சென்ற இடம் தெரியவில்லை. அங்கு அண்மையில் குடியிருப்புக்கள் எதுவுமே இல்லை. அவள் யார்? எப்படி வந்தாள்? யாருக்குத் தெரியும். 'அம்பிகையே வந்து நமக்கு அருள் வழங்கிச் சென்றாள்.' என்று ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் உத்தரவாயிற்று. அவளிடம் ஒரு தெய்விக சக்தி, கம்பீரம் வசீகரம் எல்லாம் நிறைந்திருந்தன. எங்களுக்கு அப்போழுதிருந்த நிலையில் இந்தக் காட்சியும்

சேர்ந்து சொல்லமுடியாத, விரித்து எழுதமுடியாத பெரு மகிழ்ச்சியும். கண்டதை இழந்ததில் ஏமாற்றமும் கலந்த ஒரு உணர்ச்சியில் சொல்லிழந்திருந்தோம். எனக்கு 'அழகுக்கொருவரு மொவ்வாத வல்லி' என்ற அபிராமி அந்தாதிச் சிந்தனை வந்து நின்றது மேலும் கண்களில் இடையறாது ஆனந்தக் கண்ணீர் பெருகிக்கொண்டே யிருந்தது. இப்படியே ஒரு மணி நேரத்துக்குமேல் அங்குத் தங்கியிருந்திருப்போம்.

## புறப்படுங்கள் :

"நேரமாகிவிட்டது இருட்டிவிடும். மழையும் வரு கிறது. விரைவில் புறப்படவேண்டும்" என்று உடன் வந்த தண்டிக்காரர்கள் பலமுறை அழைத்தபிறகே சூழ் நிலை புரியத்தொடங்கியது. எல்லோரும் மௌனமாகவே எழுந்தோம். சிகரம் தன்னை முடி மறைத்துக்கொண்டது. வடகோடியில் மழை பெய்வது தெரிந்தது. 40, 50 அடி கீழே இறங்கி மேற்குப் பிராகாரத்தில் இறங்கினோம். அதுதான் வெளிப்பரிக்ரமம் (வெளிச்சுற்று). 32 மைல் தொலைவுள்ளது. குறைந்தது மூன்று நாட்களாவது ஆகும் ஒரு சுற்றுவர.

## நந்திமுகம் அல்லது நியான்றிக்கும்பா :

நாங்கள் கூடாரமடித்துத் தங்குவதற்குக் குறிப்பிட் டிருந்த இடம் 2, 3 கல் தொலைவுக்குமேல் இருக்கும். கயிலை உச்சிச் சிகரத்தைப் பார்த்துக்கொண்டே நடந் தோம். பெருமழையும் பெய்யத்தொடங்கிவிட்டது தண்ணீர் மழை. அது அப்பக்கங்களில் அரிதுதான். நாங்கள் சென்ற நந்திமுகம் மேற்குப்பரிக்கிரமம். 16,000

அடிக்குமேல் உள்ள பகுதி. நாங்கள் கயிலை அடி வரையைத்தோட்டவுடன் இம்மழை பெய்தது நல்லஅறிகுறி என்று சொன்னர்கள். குடையிருந்தும் பயனில்லை. நாங்கள் மழையில் நனைந்துகொண்டே சென்ளேம். குடையையும் பொத்துக்கொண்டு மேலெல்லாம் தண்ணீர் வழிந்தது. அவ்வளவு பெருமழை. அது திருவருள் மழை. முன்னே பலர் சென்றிருந்தார்கள்.

நாங்கள் வருவதற்குள் கூடாரம் அடிக்கப்பட்டு எல்லாப் பொருள்களும் ஒழுங்கு செய்யப்பெற்றிருக்குமென எண்ணி வந்தோம். ஆனல் கூடாரங்கள் அடிக்கப்பட வில்லை, மழையைக் கண்டதும் கூடாரத்துணி, மூட்டை கள் எல்லாவற்றையும் போட்டுவிட்டுப் பாறை இடுக்கு களிலும் பிற இடங்களிலும் சென்று ஒளிந்து கொண்டு விட்டார்கள் பலரும். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் தங்கவாவது ஒரு கூடாரம் வேண்டுமே. மழையில் நனைந்துகொண்டே நானும் இன்னும் சிலரும் சேர்ந்து ஒரு கூடாரத்தைப் போட்டோம். கைகால் விறைத்துவிட்டது. அவ்வளவு குளிர். எல்லோரும் நடுங்கிக்கொண்டே கூடாரத்தில் புகுந்து கொண்டோம். இரண்டு மணி நேரம் பெய்த மழை சிறிது குறையத் தொடங்கியது.

## அருள்மழை :

இந்த மழையும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருவுளத்தில்ஒருசிந்தனையைஉண்டாக்கியது. திருவாசகத் திலே மாணிக்கவாசக சுவாமிகள் கண்டது. "காலை இளநேரம். வானத்தில் மழை மேகங்கள்வட்டமிட்டிருந்தன. அடர்ந்த கருநீல நிறத்தில் காட்சி அளித்தன. கருணை வழங்குவதற்குப் பராசக்தி காட்சி வழங்க வந்து நிற்பதைப்

போன்றிருந்தது அம்மேகக் கூட்டம். கதிரவனின் கிரணங்கள் வானத்தில் வண்ண வில் ஒன்றை மேகங்களில் தோற்றுவித்தன. அருள் பொழியும் கண்களின் மேல் வளைந்து நிற்கும் புருவமாகத் தோற்றமளித்தது அவ்வில். மேகங்களின் நடுவில் தோன்றிய மின்னல் அம்பிகையின் இடையையே ஒத்திருந்தது. இடியோசை திருச்சிலம்பின் ஓசையே போன்றிருந்தது. மழை பொழிந்தது. குளிர்தரு மழை. அம்பிகையின் தண்ணருள் வெள்ளமாக ஓடியது அம்மழை வெள்ளம். இதையே ஒத்திருக்கிறது இப்பகுதியில் இன்று பெய்யும் மழை. இது இல்லாவிட்டால் பனி, அல்லது ஆலங்கட்டி மழைதானே இங்குப்பொழியும். இன்று பெருமான், பராசக்தி காட்சி கண்டோம். அவர்கள் திருக்கை வழக்கமான தண்ணருள் மழையிலும் நனைந்துவிட்டோம். வாழ்நாளில் அடைய வேண்டிய குறிக்கோள் அடைவு இன்று பெற்றோம்'', என்று கூறியருளினார்கள்.

## நந்திமுகத்தில் கூடாரம்:

மழை குறைவாக இருந்தபொழுது மற்றுமொரு கூடாரத்தை அமைத்துக்கொண்டோம். இரவு முழுவதும் கடுங்குளிர். சுவாமி வித்யாநந்தா தம் சமையல் ஆளைக் கொண்டு எங்களுக்கும் சத்துமா அல்வா, பகோடா செய்து அளித்தார்கள். நடுக்கந்தரும் அக்குளிரிரவில் ஏதோ உண்டோம், படுத்தோம், உறங்கினோம். இரவும் கழிந்தது.

## கயிலைநதியை நோக்கி நடந்தோம்.

விடியற்காலையில் எழுந்தோம். எங்கும் பனிமூட்டம். “கயிலை நதியில் நீராடி இன்று இத்திருமலையின்

அடிவரையில் வழிபாடுகள் நடத்த வேண்டும். தருமையி லிருந்து எடுத்து வந்திருக்கும் இலிங்கத் திருமேனியையும் நந்தியம்பெருமானையும் பிரதிஷ்டை செய்து அதில் கயிலை நாதனுக்கு வழிபாடுகள்செய்தல்வேண்டும். அதற்கு ஐந்து வகை நிவேதனப் பொருள்களும் சமைத்துப் படைத்தல் வேண்டும். இப்புனிதப் பணியில் எல்லோரும் பங்கு கொள்ளுதல் வேண்டும், பாயசம், வடை இவைகளும் இருத்தல் வேண்டும்'' என்று பணித்தருளினார்கள் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தோடு அந்தக்காலை வேளையில் கயிலை நதிக்கரையில் நடந்து கொண்டிருந் தோம். முதல்நாள் அவர்கள் கண்ட அனுபவத்தைப்பற்றிச் சில வார்த்தைகள் அருளிச் செய்தார்கள்.

## ஊனுயிர் வேறு செய்தான் :

''கயிலை நாதனைக் கண்டதும் உலக வாழ்க்கை மறந்தது. நாமார், நம்உள்ளமார் என்ற நிலையில் எல்லாம் சுழன்ற நிலை ஏற்பட்டது. சுந்தரர் வெள்ளையானையில் ஏறிக் கயிலைக்கு வந்தபோது சொல்லியருளிய ''ஊனுயிர் வேறு செய்தான் நொடித்தான்மலை உத்தமன்'' என்பதற்குப் பொருள் விளக்கமான அனுபவம் அங்கே விளைந்தது. உலக வாழ்க்கையில் ஈடுபட்டு மனை வாழ்க்கையில் மகிழ்ந்து திளைத்து நிற்கின்ற உயிர் உடலோடே கூடி யிருந்தும் அதனைமறக்கும்செயல், நிலைமை ஊனுயிர் வேறு செய்தல். இச்சொல்லுக்குள்ள பொருள் விளக்கத்தைச் சொல்லால் எழுத்தால் எவ்வளவு எழுதினாலும் சொன்ன தாகாது. அனுபவப் பொருளாகக் காணவேண்டிய ஒன்று அது.

## தம்பிரான்தோழர் :

சுந்தரர் இத்திருமலையிலே எம்பெருமானின் அணுக்கத் தொண்டராக விளங்கியவர். மாதவம் செய்த தென் திசை வாழ்ந்திட தீதிலாத் திருத்தொண்டத் தொகை பணித்த திருவாளர் அவர். திருவருளால் தோற்றுவிக்கப் பட்டவர். திருநாவலூரில் தோன்றி இறைவனால் அற்புதப் பழ ஆவணங்காட்டித் திருவெண்ணெய்நல்லூரில் ஆட் கொள்ளப்பெற்றவர். இந்நிலவுலகிலும்பெருமான் தோழமை உரிமையை அவருக்கு அளித்தான். திருவும் மெய்ப் பொருளும் செல்வமும் பெருமான் சீருடைக்கழல்கள் என்றெண்ணி ஒருவரை மதியாது இறுமாந்து வாழ்ந்தார். தோழமையின் காரணமாக இருவரும் ஒருவரே ஆயினர். ஒருவர் செய்த குற்றத்திற்கு மற்றவர் உறுதுணை புரிந்தார்.

பெருமான் துணைசெய்ய இரு மனைவியரைப் பெற்று வாழ்ந்தார். ஆனால் ஊனுடல் உறவு கொள்ளாது முற்றுந் துறந்த முனிவராக பெருமிழலைக் குறும்பர் போன்ற பெரு மக்களும் பேணும் வகையில் வாழ்ந்தார். சத்தியம் பிழைத்துச் சங்கிலியாரைப் பிரிந்த குற்றத்திற்காக இவர்தம் கண்களை மறைப்பித்தார் இறைவன். அதற்காக மனம் தளர வில்லை சுந்தரரும். ''பிழை செய்ததற்காக என்கண் கொண்ட பண்ப'' என்றழைத்து, ''யான் செய்யும் துரிசு களுக்கு உடனாய் இருந்தீரே. மற்றுநான் பெற்றது ஆர் பெற வல்லார் வள்ளலே! கள்ளமே பேசிக் குற்றமே செய் யினும் (நீர்) குணமேனக் கொள்ளும் கொள்கைகண்டு மிகைபலச் செய்தேன். படுதுயர்களையாய்'' என்று கேட்கிறார்.

## தோழருக்குத் தோழர் :

இச்சுந்தரருக்குத் தோழர் வஞ்சி நாட்டு முடியுடைச் சேரர் பெருமான். தோழர்க்குத் தோழராம் புண்ணியம் பெற்றவர். சுந்தரரை உலகுக்கு அனுப்பிய தொண்டு முடிவடைந்தது. ‘வெள்ளை யானையை அனுப்பி நம் சுந்தரனை இங்கே கயிலைக்கு அழைத்துவருக’ எனப் பணித் தனன் இறைவன். அப்பொழுது திருவஞ்சைக்களத்திலிருந்த சுந்தரரிடம் பெருமான் உத்தரவு தெரிவிக்கப்பட்டது. இந்திரன், மால், பிரமன் எதிர்கொள்ள அங்கு வந்த வெள்ளையானையின்மீது ஏறிக் கயிலைநோக்கிப் புறப்பட்டார் சுந்தரர். அவர் கயிலை வரும்வழியில் அருளியதுதான் ‘‘நொடித்தான் மலைப்பதிகம்’’. ‘‘தான் எனை முன்படைத் தான்’’ என்றுதொடங்கும் அகச்சான்றுப் பாடல்கள் அவை. அவர் அப்பதிகத்தில்தான் ‘‘வான் எனைவந்துஎதிர்கொள்ள மத்தயானை அருள்புரிந்தான், ஊனுயிர் வேறு செய்தான்’’ என்ற செய்திகள் வெளியாவன. அதன் பொருள் விளக்க மான அனுபவத்தைத்தான் நாம் நேற்றுக்கண்டோம். மனை வாழ்க்கையில் மகிழ்ந்து சுந்தர வேடங்களில் சிறந்து, துரிசே செய்யும் தொண்டராய் விளங்கிய ஆளுடைய நம்பிகள் பரவையை மறந்தார்; சங்கிலியை மறந்தார்; சேரர்கோனையும் மறந்தார்; உலக வாழ்க்கையில் அவர் பழகிய அனைத்தையும் மறந்தார். உடலோடு உயிர் தொடர்பு கொண்டிருந்தும் அதனையும் மறந்தார். தன் தலைவன் தாளைத் தலைப்பட்டு நின்றார். கயிலையை வந்து அடைந்ததும் நேரே பெருமான் திருமுன் சென்றடைந்தார். மந்திரமாமுனிவராகிய நந்திதேவர் ‘‘இவர் யாரேன’’க் கேட்கும் ‘முன்னே நம்தமர் ஊரன் (ஆரூரன்)’ என்று பெருமானே அருளிச்செய்து தம்மருகில் சேர்த்துக்கொண் டார். சுந்தரர் கயிலைக்கு மீண்டும்வந்த ஒளியைக் கண்டனர்

உபமன்யு முனிவரின் சீடர்கள். முனிவர் சீடர்களுக்குச் சொல்லிய வரலாறே திருத்தொண்டர் புராணம் வெளிவரக் காரணமாயிற்று.

அழையாமே வந்ததேன் :

சுந்தரர் கயிலை சென்ற செய்தி சேரர் செவிக்கெட்டியது. அருகில் நின்ற பரியின் காதில் அஞ்செழுத்து ஓதி அதில் ஏறினர். கயிலை செல்லும் சுந்தரரை வலம் வந்து அவரைச் சேவித்துக்கொண்டே முன் சென்றார் சேரர் பெருமான். திருநந்திதேவர் இறைவன் உத்தரவில்லை என்று நிறுத்தினர். உள்ளே சென்ற சுந்தரர் பெருமானிடம் முதல் விண்ணப்பமாக " சேரர் உம்முடைய மணித் திரு வாயிலில் " என்றார். பெருமான் நந்திதேவரை ஏவி சேரர்கோவை அழைத்துவரப் பணித்தார். சேரரிடம் சென்று " அருளிப்பாடு " சொல்லி அழைத்து வந்து திருமுன் விட்டார் நந்திதேவரும். "நாம் இங்கு அழையாமே வந்ததேப்படி" என்று பெருமான் அருளிச்செய்தார். "சுந்தரரைச் சேவித்து அருள்வெள்ளம் கொடுபுக்க கயிலை வந்து திருமுன்னரும் வந்து சேர்ந்தேன். 'கயிலைஞான உலா' என்ற நூல் செய்துள்ளேன் ஏற்றருள வேண்டும்" என வேண்டிப் பரவிப் பணிந்தார். உலாவென்ற பிரபந்தத்தை நூலுடைத் தலைவன் முன்னரே பாடி அரங்கேற்றிக் கொண்ட பெருமை இந்த ஒரு நூலுக்கே உண்டு என்பர் புலவர் பெருமக்கள்.

குதிரை :

செவியாலே ஐந்தெழுத்தோதப்பெற்ற குதிரை ஆகாய வீதியிலே பறந்து வந்ததல்லவா? அதுபோலவே மனமென்னும் குதிரையைக் கற்பனை செய்து பெருமானை

நோக்கி வேண்டுகிறார் ஆதிசங்கரரும். ''எல்லா உலகங்களையும் இயக்கும் பெருமானே, நீர் இடப வாகனத்தின்மீது எத்தனை காலம் ஊர்ந்து செல்வது. என்னிடம் ஒரு குதிரை இருக்கிறது. அது குணத்தில் கல்யாணி (மங்கள குணமுடையது). விசித்திரமான நடையுடையது. மிக வேகமுடையது. எல்லா இடங்களிலும் எப்பொழுதும் இனிமையாகவே நடந்துகொள்வது. குற்றமற்றது. எல்லா அழகும் பொருந்தியது. அதனை ஏற்றருளவேண்டும்'' என்று வேண்டுகிறார். மனமாகிய குதிரையில் உறையுமாறு வேண்டுகிறார் பெருமானை.

இத் திருமலையை நொடித்தான்மலை என்றழைக்கிறார் சுந்தரர். நொடித்தல்=அழித்தல்; சம்ஹரித்தல். உலகுய்யப் பெருமான் செய்யும் ஐந்தொழில்களுள் ஒன்று. அந்தம் ஆதி என்மனார் புலவர். அந்தத்தைச் செய்பவனே ஆதியாகவும் உள்ளான். அவனே எல்லாம் வல்லவன். சங்கரன். அவனே நொடித்தான். அவன்மலை நொடித்தான் மலை.

## பெருமிழலைக்குறும்பர் :

பெருமிழலைக்குறும்பர் சிறந்த சிவயோகி. ஆருதார நிராதாரங்களை அறிந்தவர். முற்றுந் துறந்த முனிவரர். சுந்தரரையே வழிபடு தெய்வமாகக் கொண்டவர். சுந்தரர் மறுநாள் கயிலை செல்லுவார் என்பதைச் சிவயோகத்தாலே உணர்ந்தார். உடனே பிரமரந்திர வாயிலைத் திறந்து வெளிவந்துகயிலை இறைவன் திருமுன் வந்தார் சுந்தரர் அங்கு வருவதற்கு முதல்நாளே.

கயிலையைக் கண்டோம். அகண்டாகார சிவபோகமென்னும் பேரின்ப வெள்ளம் இங்கே பொங்கித் ததும்பிப்



நந்திகும்பா கயிலேயின் மேற்குமுகம் (15,500 அடி)

கய்லைநதிக்கரையில் பெருமானைப் பிரதிஷ்டைசெய்து வழிபடுதல்



பூரணமாய்க் கிடக்கிறது. அதில் கருணை வெள்ளம் பெருகக் கண்டோம். வாரி விழுங்குகிறோம். நம்மவர் களில் மற்றவர்களும் இங்கே வந்து இந்த அரிய அனுபவத்தைப் பெறுவார்களா '' என்று முடித்தார்கள். நம் அடியார்கள்கண்ட கயிலை அனுபவங்களும் இது போன்றே அவர்கள் திருவுள்ளத்தில் ஊற்றெடுத்தன.

### சிவலிங்கப் பிரதிஷ்டை :

காலையில் நேரமாகிக்கொண்டே போயிற்று. குறித்த படி பிரதிஷ்டை வழிபாடுகள் முடியவேண்டுமே. சிந்தனை யைப் பின்னே தொடரலாம். கயிலை நதியில் நீராடினோம். பனி உருகிவரும் குளிர்மிக்க தண்ணீர் அது. உடலுறுப்புக் களில் பட்டதும் பட்ட இடம் மறத்துப்போகிறது. ஆனாலும் எங்களுடைய உள்ளுணர்வு ' அப்புனித முழுக்கு நமக்கு இனியும் வாய்க்குமா, கிடைத்தபோதே எந்த அளவு அதிகமாகக் கண்டு பருகி, குளித்து முழுகிப் பயன்பெற முடியுமோ அந்த அளவு செய்துகொள்ள வேண்டும். வாய்ப்புள்ளதை முடிந்தமட்டும் முழுவதும் பயன்பெற்றுக்கொள்ளவேண்டும் ' என்று சொல்லிற்று. குளிர் தெரியவில்லை. அதன் விளைவான குளிரும் பிறவும் எங்களை அணுகவில்லை. எல்லோரும் ஆசைதீர நீராடினோம். செம்புகளிலும், தகரங்களிலும், கண்ணாடிக் குடுவை களிலும் முகந்துகொண்டோம்.

நதிக்கரையில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் லிங்கம், நந்தி இவைகளைப் பிரதிஷ்டை செய்து முறைப்படி வழிபாடுகள் நிகழ்த்தினார்கள். தமிழன்பர்கள் எல்லோரும் கயிலாயப் பதிகங்களைப் பாராயணம் செய்தோம். ஐந்து வகை அன்னங்களும், பாயசம், வடை, உலர்ந்த திராட்சை, மிட்டாய் இவைகளைத் திருமுன் இட்டு

நைவேதனம் செய்தார்கள். பெருமானுக்கு விபூதி அபிஷேகம் செய்தார்கள். சுவர்ணுபிஷேகமும் செய்தார்கள். எல்லோரும் உணர்ச்சி வயத்தராய் வழிபட்டு வணங்கினேம். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் வணங்கி எழுந்ததும் நாங்கள் எல்லோரும் பெருமானையும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தையும் வணங்கி அருட்பூதி பெற்ரேம். வர்க்கவகை அங்கு நின்ற யாவருக்கும் வழங்கப்பட்டன. திருக்கை வழக்கமாக ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் வழங்கியருளினுர்கள். வழிபாடு முடிந்ததும் சிவலிங்கமூர்த்தி நந்தி இவற்றைக் கயிலை நதியிலிட்டு விசர்ஜனம்செய்து வழிபாடு முடித்துக்கொண்டோம்.

திருநாவுக்கரசர், காரைக்காலம்மையார், ஔவையார் திருமூலர் போன்ற அடியார்கள் ஊனுடலோடு திருக்கயிலைத் தரிசனம் செய்த நினைவுகள் எங்களுள்ளே நிறைந்து நின்றன.

### அப்பர் சுவாமிகள் கயிலை யாத்திரை :

அப்பர் பெருமான் திருக்காளத்தித் திருமலையை (தேன் கயிலை) த் தொழுது வணங்கி வடகயிலையையும் வழிபட எண்ணினுர். வடதிசைநோக்கி நடந்தார். பலநாடுகளையும் கடந்து வாரணுசி வந்து வணங்கிக் கங்கைக்கரை வழியே இமய அடிவரை வந்துசேர்ந்தார். மலைமீது துன்பப்பட்டு ஏறினுர். கால் பறடுவரை தேய்ந்தது. கைகளை ஊன்றி நடந்தார். கைகளும் தேய்ந்தன. மார்பால் உந்தி உந்திச் சென்ருர். மார்பும் தேய்ந்தது. களைத்து மயங்கிக்கிடந்தார். பெருமான், அப்பர்பெருமான் உறுதியை அறிய அடியவர் உருவில் அவர்முன் தோன்றி ''அன்பனே இவ்வளவு கடுந்துன்பத்தோடு எங்குச் செல்கிருய்'' என்று வினவினுர். 'கயிலைக்கு' என்று மறுமொழி

கிடைத்தது. "தேவர்களும் செல்லுதற்கரியதான கயிலைக் குத் தாம் செல்லமுடியாதே" என்றார் பரமன். "கயிலை யில் எம்மையாளும் நாயகன் இருக்கை கண்டன்றி இம் மாளும் உடல்கொண்டு இனி மீளேன்" என்று உறுதி யாகப் பதிலிறுத்தார் அப்பர் சுவாமிகள். அவர் உறுதி கண்டு அங்கே ஒரு பொய்கையைத் தோற்றுவித்து அதில் மூழ்கித் திருவையாற்றில் கயிலைக் காட்சியைக் காணுமாறு பணித்து மறைந்தார். அவ்விதமே அப்பர் சுவாமிகள் அதில் மூழ்கி ஐயாற்றில் அங்கோர் திருக்குளத்தில் முழு உடம்பு பெற்றெழுந்தார்கள். எழுந்து கயிலைத் திருக்கோலங்கண்டு மகிழ்ந்து திருப்பதிகம் பாடினார்கள். இங்குக் கயிலைத் திருமாமலையை நோக்கி "வேற்றாகி விண்ணாகி" என்று தொடங்கும் பதிகமும் வேறு சிலவும் பாடிப் போற்றிப் பரவினார்கள். நாவுக்கரசாக வந்த சுவாமிகள் நிலவுலகில் செய்ய வேண்டிய தொண்டுகள் முற்றுப் பெறாதிருந்தமையால் மீண்டும் இவ்வுலகிற்கு அனுப்பியருளினார் சிவபெருமான் என்று பெரியபுராணம் காரணம் கூறுகிறது. இதில் ஒரு ஒற்றுமையிருக்கிறது. ஐயாற்றில் அவர் கயிலைக் காட்சி கண்டது ஆடி அமாவாசையன்று. அந்த விழா ஆண்டு தோறும் சிறப்பாக நடைபெற்றுவருகிறது. அந்தக் கோயில் தருமையாதீனத் திருக்கோயில்களில் ஒன்று என்பதை எல்லோரும் அறிவர். அதே ஆடி அமாவாசை யன்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திலும் முதன் முதல் திருக்கயிலாய தரிசனம் கண்டார்கள். இந்த நினைவு எங்கள் மனதில் உருக்கத்தை உண்டாக்கியது.

### அப்பர் சுவாமிகள் கண்ட கயிலைக் காட்சி ;

அவர்கள் கண்ட கயிலையில் பெருமான் "வெள்ளி வெற்பின்மேல் மரகதக்கொடியுடன் விளங்கும் தெள்ளுபே

ரோளி பவளவேற்பேன இடப்பாகம் கோள்ளும் மாமலேயா ளுடன் கூடவீற்றிருந்த வள்ளலாராக ''க் காட்சிதந்தருளி ஞர். அம்மையப்பராய்ப் பெருமான் எழுந்தருளி விளங் கியது போலவே, எல்லா உயிர்களும், பெண்ணும், ஆணுமாய் விளங்கின. காதல் மடப்பிடியோடு களிறுவரு வதைக் கண்டார். பேடையோடு சேவல் காட்சி அளித்தது. குயில், மயில், அன்றில், அன்னம், மான், பன்றி இவை போன்ற பலவும் ஆணும், பெண்ணுமாய் கூடித்தோன்றின. சக்தியும் சிவமுமாய்ச் சராசரங்கள் அனைத்திலும் இறைவன் விளங்கும் இனிய காட்சியைக் கண்டார்கள். திருமால் முதலிய தேவர் புடைசூழ, இந்திரன் முதலியோர் போற்றி யுரைசெய்ய, வேதங்கள் முழங்க, விண்ணவர் முனிவர் முதலியோர் வணங்க, அரம்பையர் ஆடலோடு பாடல் ஒலிசெய்ய, கங்கை முதலிய புண்ணியநதிக் கன்னியர் போற்றிப்பரவ எம்பெருமான் வீற்றிருக்கும் திருவோலக்கக் காட்சியைக் கண்குளிரக்கண்டார்கள். சிவானந்தப் பெருங் கடலைத் தமது இருகண்களால் முகந்து உண்டார்கள். கைகளை உச்சிமீது குவித்துக் கண்களில் ஆனந்தவெள்ளம் கரைபுரள ஆடினுர், பாடினுர், அழுதார். இவ்விதமாக வழங்கிய கயிலைக் காட்சியை ஐயாற்றிலே கண்டார். '' மாதர் பிறைக்கண்ணியானை '' என்று பதிகம் அருளினுர். பின்னும் பலகாலம் சிவத்தொண்டுகள் பல செய்து மண்ணில் வாழ்ந்து திருப்புகலூரில் பெருமான் திருவடி நீழலை அடைந்தார்.

## கயிலையில் பேயார் :

பேயார் என்ற காரைக்காலம்மையாரும் கயிலைக்காட்சி கண்டவர்கள். உலகியலை வெறுத்து, உடலழகை வெறுத்துப் பேயுருவை வேண்டிப் பெற்றுத் தலங்கள்

பலதரிசித்து வரும் நாளில் கயிலையில் வீற்றிருக்கும் கண்ணுதற் பெருமானைக் கண்டு வழிபடவேண்டுமென்ற பேருணர்வு நாளும் வளர்ந்தது. திருவருளும் துணை நின்றது. வடதிசைநோக்கி நடந்தார். கண்டவர் பேயென அஞ்சி அகன்றேடினர். 'இறைவன் ஒருவனே நம்மை அறிதற்குரியான்' என்றெண்ணி மேலும் சென்றார். திருக்கயிலைமலைச் சாரலை அடைந்தார். எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் இம்மலைமீது கால் படுதல் அனுசிதம் என்று எண்ணித் தலையால் நடந்து ஏறினார். தொலைவிலே பேயுருவம் தலையால் நடந்து வருவதைக் கண்ட உமாதேவியார் வியந்து பெருமானை நோக்கி "இவ் வேற்புடம்பின் அன்பிருந்த வாறென்னே" என்று வினவினார். திருவருட்பதிவாகிய சத்திநிபாதம் அங்கே காரைக்கால் அம்மையாருக்குக் கிட்டியது. பெருமான் "இவள் நம்மையே பேணும் அம்மையேயாவாள். நம்மைக் காணவருகிறாள்" என்றருளினார். அருகில் பேயார்வந்ததும் "அம்மையே" என்றழைத்தார். அவரும் "அப்பா" என்றார் அன்பொழுக. திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். அகங்குளிர அம்மையோடப்பனைக் கண்டுருகி நின்றார். "இங்கு நம்மிடம் வேண்டும் வரம் யாது" என்று பெருமான் கேட்டதற்கு, "நின்பால் இறவாத இன்ப அன்பு வேண்டும்; பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும் மறவாமை வேண்டும்; இன்னும் வேறு ஒன்றும் வேண்டும்; அறவா நீ ஆடும் போது உன் அடியின்கீழ் நான் இருக்க அருள்புரிதல் வேண்டும்" என்று வேண்டினார் அம்மையார். அவ்விதமே திருவாலங்காட்டில் தம் நடங்கண்டிருக்கப்பணித்தார் பெருமான். "அம்மையே" என்று இறைவனால் அழைக்கப் பெற்றவராதலால் தாயும் தந்தையுமில்லாப் பரம்பொரு

ளுக்கு ஒரு தாய் எனச் சமயமுதல்வர்கள் போற்றுகிறார்கள் காரைக்காலம்மையை. அப்பா என்று அம்மையார் அழைத்ததால் சிவகுமாரி என்றும் காரைக்காலம்மையைக் கூறுவர்.

## திருமூலர் :

திருவாவடுதுறையில் தங்கி மூவாயிரம் ஆண்டுகள் மோனத் தவமிருந்து ஆண்டுக்கொரு பாடலாக அனுபவப் பாடல் அருளிய திருமூலர் திருக்கயிலையில் வதிந்தவர். கயிலைக் காவல்பூண்டு வழிபாட்டுக்கு வரும் இந்திரன் முதலிய பெருந்தேவர்களுக்குச் சிவநெறி உபதேசித் தருளும் பணியைச் செய்யும் திருநந்திதேவரின் அருளுபதேசம் பெற்ற நான்மறைச் சிவயோகியார். அவர் இயற்பெயர் சுந்தரநாதன். அணிமா முதலிய எட்டு சித்திகளும் கைவரப் பெற்றவர். கயிலையிலிருந்து தென்திசை சென்றிருந்த அகத்திய முனியைக் காணத் தென்திசைக்கு வந்தார். சிவனுடுறையும் பேறுபெற்ற முதல்வர்களில் இவரும் ஒருவர்.

## ஔவையார் கயிலை கண்டது :

ஔவையாரும் கயிலைக்கு வந்தார். இவர் வந்த வழி குறுக்குவழி. சேரர்கோனாகிய கழறிற்றறிவார் அரண்மனையில் தங்கியிருந்த ஔவையாரும் சுந்தரர் கயிலைக்கு அழைப்பு வந்து சென்ற செய்தியைக் கேட்டார். அப்பொழுது அவர் விநாயகர் வழிபாடு செய்து மகிழ்ந்திருக்கும் நேரம். சுந்தரரோடு கயிலை செல்லும் பெருவிருப்பால் விரைந்து பூசையைச் செய்யலானார். ''அவசரம் வேண்டாம் சுந்தரருக்கு முன்னே நீ கயிலையை அடையலாம். முறையாகப் பூசனையை முடித்துக்கொள்'' என்று விநாயகர்

அருளிச்செய்ய, வழக்கம்போலப் பூசையைச் செய்து முடித்தார். பூசை முடிவில் தோத்திரம் சொல்லி நின்ற ஔவையாரைத் தம் துதிக்கையால் தூக்கிக் கயிலையில் நிறுத்தினர் விநாயகர். சுந்தரர் வருமுன் கயிலை வந்து கயிலைநாதனை வணங்கி நின்றார் ஔவையார்.

### கண்ணனின் கயிலை யாத்திரை :

கண்ணன் சாம்பனுக்காக ஜாம்பவதியின் வேண்டு கோளின்படி கயிலை சென்று உபமன்யு முனிவர் ஆஸ்ர மத்தில் தங்கி அவருடைய உபதேசம் பெற்றுத் தவமிருந் தார். பெருமானைத் தரிசித்து மக்கட்பேறு பெற்றுவந்தார். உபமன்யு முனிவர் கண்ணனிடம் 'சிவனுக்கு ஒப்பான தேவருமில்லை, சிவனுக்குச் சமமான தஞ்சமுமில்லை, கொடுப்பதில் சிவனைப் போன்றருமில்லை, யுத்தத்தில் சிவனுக்கு ஒப்பான வீரரும் இல்லை' என்று கூறினர். இக்கதை பாரதத்தில் கூறப்படுகிறது.

### அர்ச்சுனன் கயிலை வழியில் :

கயிலாய யாத்திரைக் காலத்தில் அர்ச்சுனன் சிவபூசை செய்ய வேண்டுமென்று கண்ணனிடம் சொன்னன். கண்ணன் அர்ச்சுனனைப் பார்த்து 'நான் சிவோகம் பாவனை யில் வீற்றிருக்கிறேன். என்னைச்சிவனகப்பாவித்துஎன்மீது பெருமானைப் பூசைசெய். அப்பூசனை அவனுக்குரியதாகும். பூசித்த மலர்கள் அப்பெருமானின் திருமுடியில் இருக்கக் காண்பாய்' என்று கூறி அவ்வாறே பூசனையை ஏற்றுப் பெருமான் திருமுடியிலிருக்கக் காட்டினன்.

### முனிவர்கள் :

சிரஞ்சீவித்துவம் பெற்ற பல முனிவர்களும் இங்கு வந்து நின்று தரிசித்து இன்புற்றிருக்கிறார்கள் என்பதை

நம் புராணங்களும் வேத உபநிஷதங்களும் சொல்லு கின்றன. ஆதிசங்கரர் கயிலேயில் வந்து தங்கித் தவமிருந் தார் என்றும், இங்குக் கிடைத்த சந்திரமௌளீஸ்வர ஸ்படி கத்தையும் இரத்தின கர்ப்ப விநாயகரையும் சிருங்கேரியில் பிரதிஷ்டை செய்தார் என்றும் வரலாறுகள் பேசுகின்றன. இதுபற்றிய குறிப்புக்கள் பல பதரிக்கருகில் உள்ள ஜோஷி மடத்தில் இருப்பதாக சுவாமி வித்யாநந்தா அவர்கள் சொன்னூர்கள்.

## யதிகள் :

கயிலேயைச் சூழ உள்ள மலேகளிலும் அங்குள்ள பல குகைகளிலும் இன்றும் பல பெருந் தவமுனிவர்களும், சித்தர்களும் தங்கித் தவமியற்றி வருவதாகச் சொல்லப் படுகிறது. சிறந்த புண்ணியசாலிகளின் கண்ணுக்கு அவர்கள் புலப்படுவதாகவும் சொல்லப்படுகிறது. மிகப் பெரிய உருவில் உடல் முழுவதும் உரோமங்களோடு அவர்கள் உலவிவருகிருர்களாம். அவர்கள் நடந்துசென்ற காலடிகளேக் கண்டு 'பனிமனிதன் காலடி' என்று முடிவு சொல்கிருர்கள் ஆராய்ச்சியாளர். பல நூறு ஆண்டுகள் உடல் தளராது வாழ்கிருர்கள். பனிச்சிகரங்களில் அவர் களின் திருவடிகளேக்கண்டுபடம்பிடித்துப் பத்திரிகைகளில் பலரும் பிரசுரித்திருப்பதையும் கண்டிருக்கிரோம். அத்திரு வடிகள் 2, 3 அடி நீளமிருக்குமாம். தொலேவில் கண்ட தாகப் பல மேனூட்டு ஆராய்ச்சியாளர்களும் சொல்லு கிருர்கள். அவர்களேத் தேடிப்பிடித்து வர முயன்றும் வருகிருர்கள். ஆனுல் இதுவரை அது பலனளிக்கவில்லே. அவர்களே யேதி (Yeti) என்றழைக்கிருர்கள். நமது சுருதிகளிலும் யதிகளேப்பற்றிப் பேசப்படுவதை நம் நாட்டு அறிஞர்கள் அறிவர்.

## கயிலாய விளக்கம் :

கயிலை நிரதிசய ஆனந்தம் அனுபவிக்கும் இடம். அது உத்தர கைலாசம், தட்சிண கைலாசம், ஊர்த்துவ லோக கைலாசம். மகா கைலாசம் எனப் பலவகைப்படும். காரியமூர்த்தியாகிய உருத்திரருடைய கயிலாசத்துக்கும், துரீய மூர்த்தியாகிய மகாசதாசிவருடைய கயிலாசத்திற்கும் வேறுபாடுண்டு. துரீய சிவன் எழுந்தருளியிருக்கும் நிலையான இடமே மகா கயிலாசமாகும். பெருமான் அசலனாக இருத்தல் போல் அவனது இருப்பிடமும் அசைவற்றதாக உள்ளது.

''வரங்கள் தந்தருள் என முதுவானவர் முனிவோர்
கரங்கள் தந்தலை முகிழ்த்திடக் கருணைசெய் தவிச்சை
உரங்கடந்து உரை உணர்வேலாங் கடந்து அருமறையின்
சிரங்கடந்தவன் இருப்பது திருக்கயி லாயம்''

என்பது திருவிளையாடற் புராணம்.

## கிரிசந்த :

வேதங்களும் உபநிஷதங்களும், திருமுறைகளும், ஏனைய நூல்களும் இவ்விடத்தைச் சுட்டிக் கூறுகின்றன. மலைமேலிருந்து இறைவன் உலகத்திற்கு இன்பம் செய்யும் காரணத்தால் பெருமானைக் ''கிரிசந்த'' என்றுசுவேதாசுவதரோபநிஷத் துதித்தது. 'கைலாச சிகராவாசம் ஓங்கார ஸ்வருபிணும்' என்று கயிலையில் ஓங்கார வடிவில் இறைவன் விளங்குவதை பஸ்மஜாபாலோபாநிஷத்தும் கூறுகிறது.

## கயிலை புகும்நெறி :

உலக மக்கள் பிறவிக்கடலிலிருந்து கரைசேர வேண்டுமானுல் பெருமான் திருவருள் இருக்கவேண்டும்.

திருப்பெருந்துறையில் இறைவன் அருள் வேண்டி மணி வாசகப் பெருமான் பாடிய அருட்பத்தின் கடைசிப் பாடல் கயிலை புகுநெறி வேண்டி அமைந்துள்ளது. திருப்பெருந்துறையில் பெருமான் குருந்த மரத்தடியின் கீழ்க் குருநாதனாக எழுந்தருளியிருந்து மணிவாசகரை ஆட்கொண்டான். ஆவியும் உடலும் உடைமை எல்லா மும் கொண்டான். பின்னர் அவரை நீங்கிப் பிரிந்து மறைந்தான். பிரிந்த நாளிலிருந்து அடிகளாரின் உள்ள மும் வருந்தியது. முதல் நாள் குருந்த மரத்தடியில் தனக்குக் கிடைத்த பேரின்பம் என்று மீண்டும் கிடைக்கு மென்று எண்ணி ஏங்கியது. அவ்வேக்கத்தால் வெளி வருகிறது ஒரு பாடல்.

திருந்துவார் பொழில்சூழ் திருப்பெருந்துறையில்
சேமுமலர்க் குருந்தம் மேவியசீர்
இருந்தவா றெண்ணி யேசரு இனைந்திட்டு
என்னுடை எம்பிரான் என்றென்று
அருந்தவா நினைந்தே ஆதரித்தழைத்தால்
அலைகடல் அதனுளே நின்று
பொருந்தவா கயிலை புகுநெறிஇதுகாண்
போதரா யென் றருளாயே.

திருப்பெருந்துறைச் சோலையில் குருந்த மர நிழலில் எனக்குக் கிடைத்த அவ்வின்பச் சிறப்பு எவ்வளவு மகிழ்வை விளைத்ததோ அதையே எண்ணி எண்ணி பெருமானே உன் பிரிவாற்றுமையால் மனம் வருந்தி அழுதுகொண்டிருக்கிறேன். என்னுடைய தலைவனே! அரிய தவ உருவத்தை உடையவனே! உன்னைப் பலகாலும் நினைந்து அன்பு செய்து அழைக்கின்றேன். பிறவிக் கடலிடை அலையாநிற்கும் என்னைப்பார்த்து

" அன்ப! என்னோடு போருந்தவா; என் கயிலைக்கு வரும் வழி இதுவாகும்; வருக " என்று கூறியருள்.

இவ்வாறு மணிவாசகர் திருவுள்ளம் சிவபெருமான் திருவடிகளில் கலந்து உறையும் சிவானந்தப் பேரு வாழ்வை சிவபோகத்தை வேண்டிற்று. துரியாதீத நிலையில் பெருமான் எழுந்தருளியுள்ள மகாகயிலாயத்திற்குச் செல்ல மணிவாசகர் விழைந்த குறிப்பு இது. அந்நிலையே இரண்டறக் கலக்கும் பேரின்ப நிலையாம் சுத்தாத்துவித நிலையாகும். இதுவே ஞானிகள் உறையும் கயிலாய மாகும்.

இத்திருவாசகப்பாடல் நந்திகும்பாவில் தங்கியிருந்த நாளில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் கயிலை நதியில் நீராடிச் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து வழிபாடு செய்து பாராயணம் செய்யத் தொடங்கியதும் பாராயணத்தில் வந்த திருப்பாடல்.

## பூ கைலாசம் :

இக்கயிலாயம் வேதங்கள் முதலிய சுருதிகளிலிலும், ஏனைய நூல்களிலும் சொல்லப்படுவது. உரை உணர்வுகளுக்கெட்டியதாய் மக்கள் யாவருஞ் சென்று காணுவதற் குரியதாய் உள்ளது இத்திருக்கயிலாயமே. இது பூகைலாசம் எனப்படுவது. இறைவன் எழுந்தருளியிருந்து ஐந்தொழில் புரிந்து உலகைப் பாதுகாக்குமிடம் இத்திருக்கயிலை (பூகயிலாயம்) என்று புராணங்களில் சொல்லப்படுகிறது. இங்குப் பெருமான் பெருமாட்டியோடு எழுந்தருளியிருந்து திருவருள் புரிந்துவருகிறான். சிவலீலைகளாக விளைந்தவை எல்லாம் இங்கு நிகழ்ந்தனவாகச் சொல்லப்படுகிறது.

விநாயகர், முருகன் முதலியோர் திருவவதாரமானதும் இங்குத்தான். சீகண்ட பரமசிவம் தட்சிணாமூர்த்தியாக எழுந்தருளியிருந்து உலகவர்க்கு உபதேசங்கள் வழங்கியதும் இங்கிருந்துதான் என்று சுருதிகளும் புராணங்களும் கூறுகின்றன.

## மந்திர ரூபம், யந்திர ரூபம் :

இறைவன் இத்திருமலை வடிவில் மந்திர ரூபமாகவும், யந்திர ரூபமாகவும் ஓங்காரப் பொருளாகவும் எழுந்தருளியுள்ளான். இத்திருமலையின் அமைப்பும் ஓங்கார வடிவிலே இருப்பதாகச்சொல்லப்படுகிறது. மேற்குமுகத்தைஓங்காரத்தின் தலையாகவும், தர்ச்சனை அதன் அடியிடமாகவும் கொள்வர். அகர. உகர, மகரங்கள் அம்மந்திரத்தின் எழுத்துக் கூட்டுக்கள். சிவலிங்கத் திருமேனிகளின் அமைப்பை ஒட்டியது. அடிப்பீடம், அதற்குமேல் அகரம், அதற்குமேல் உகரம், அதற்குமேல் மகரம், அதற்கு மேல் விந்து, அதற்குமேல் நாதத்தையும் வரைதல் வேண்டும். இதுவே சிவமகாயந்திரம். இங்ஙனம் எழுதியதைப்பிரணவத்தால்(ஓங்காரத்தால்)வளைத்தல்வேண்டும். இதுதான் சிவபெருமானின் யந்திரரூபம் என்று கைலாச சங்கிதை கூறுகிறது. இவ்வாறு அமைந்த யந்திர மந்திர ரூபங்களாகத் திருக்கயிலை விளங்குகிறது. மேரு என்னும் யந்திர ரூபமாக இடையறுது பிரணவ மந்திரமொலிக்குமிடமாக விளங்குகிறது இத்திருமலை.

## வியாபகம், வியாப்யம் :

திருக்கயிலையை வலம்வர வெளிப்பரிக்ரமம், உட்பரிக்கிரமம் என்ற இரண்டு பிராகாரங்கள் உள்ளன. எல்லோரும் வலம்வரக்கூடியது வெளிப்பரிக்ரமம்தான். பலமுறை

வெளிப்பரிக்ரமம் செய்தவர்களுக்கே உட்பரிக்ரமம் செய்ய உத்தரவு கிடைக்குமாம். உட்பரிக்ரமம் செய்பவர்கள் உயிரை வெறுத்து உலகப் பற்றில்லாதவராய்ச் செல்லுதல் வேண்டும். இறைவன் திருவருள் இருந்தாலன்றி அப் பரிக்ரமம் சென்று மீள்வது கடினம். சென்று பார்க்கலாம் என்று துணிந்து சென்றோர் சென்றோரே. மலைச்சிகரங் களில் உறைந்து நிற்கும் பனிப்பாறைகள் வெடித்துச் சரிந்துகொண்டே இருக்குமாம். அங்குச் செல்வோர் அதனுள் சிக்கி மீளமுடியாதாம். இறைவன் உயிருக் குயிராய் இருக்கும்நிலை உட்பரிக்ரமத்தின் தத்துவம். அவன் ஆதித்தனாக விளங்கும்நிலை வெளிப்பரிக்ரமம். இது வியாபகம், முன்னையது வியாப்யம்.

## சகள, நிஷ்கள ரூபங்கள் :

சிவபூஜையில் நாம் பெருமானைச் சிவசூரியனாக சகளவடிவில் பூசித்துப் பின் நிஷ்களரூபமாக அவ்விறை வனைப் பூசிப்பதுபோலவே இங்குச் சகளரூபமாக வெளிப் பரிக்ரமும், நிஷ்களரூபமாக உட்பரிக்ரமும் அமைந்திருக் கின்றன. சிவ சூரியனின் இரண்டு வீதிகள் அவை. சகள ரூபமாகப் பரம்பொருள் சூரிய வடிவில் இருந்து அருள் பாலிக்கும் நிலையை “ சௌரமண்டல மத்யஸ்தம்=சூரிய மண்டலத்தில் நடுவில் இருப்பவர் ” என்று வேதவாக்ய மும் குறிக்கும்.

## பொன்மலை :

திருமலைச் சிகரம் பொன்மயமானது என்றும் பனிப் படலம் எந்நாளும் மூடியிருக்கும் என்றும் எல்லாச் சமய நூல்களும் கூறுகின்றன. குபேரனுல் நவரத்தினங்களும்

சோரிந்து குவித்துவைக்கப்பட்ட மூலபண்டாரமே இத் திருமலை என்றும் அவை இயம்புகின்றன. "போன்னில் வேண்திருநீறு புனைந்தேன பன்னும் நீள்பனி மால்வரை" எனத் தேய்வச் சேக்கிழார் திருமலைச் சருக்கத்தில் தோடங்குகிறார். போன்மலை எனக் கூறும் இலக்கியப் பேருவழக்கும் உண்டு. போன்மயமாகவே அச்சிகரம் அமைந்திருக்கிறதேன்பதற் கேற்ப அம்மலை அடிவரை களில் மார்முட்டுகள் வளைதோண்டி எடுக்கும் மண்ணில் பேரும் அளவு தங்கத்துகள் கலந்திருப்பது கண்கூடு.

## நவரத்தினக் குவியல் :

நவரத்தினக் கற்குவியல்களால் ஆனது என்னும் நூல் வழக்கை இன்று நாமே நேரில் காணலாம். மலைப் பாறைகள் சரிந்துள்ள இடங்களில் பல நிறங்களில், பல வண்ணச் சேர்க்கைகளில் கற்கள் நிறைந்து கிடக் கின்றன. (Semi Precious Stones) முற்றும் விளையா மணிகள் அங்குக் கிடைப்பதாகவும் அவற்றைத் திபேத்தியர் எடுத்துப் பட்டை தீட்டி விற்பனைக்குக் கோண்டு வருகிறார்கள் என்றும் சோல்கிறார்கள். அவற் றிற்குத் திபேத்திய மணிகள் என்ற பேயர். இயற்கை ஒளியுள்ள கற்கள் பலவும் அங்கு விளைகின்றன.

## சிவசக்தி :

சிவபேருமான் விராட்சோருபமாக விளங்குவது இத் திருமாமலை - கயிலை. கயிலைச் சிகரம் கடல் மட்டத்தி திலிருந்து 22,023 அடி உயரம் உள்ளது. இது சிவ சோருபமானது. உட் பகுதியில் இதனருகில் இதைவிட உயரம் குறைவான சிகரம் ஒன்று மிருக்கிறது. அது

சக்தி சொருபம். தெற்கு முகத்துக் கெதிரேயும் நந்தி அமைப்பு ஒன்றிருப்பதாகவும் சொல்லப்படுகிறது.

## இயற்கை வழிபாடு :

" நீடுதேவன் நிலைகளும் வேண்டிடின் நாடும் ஐம் பெரும் பூதமும் நாட்டுவ " என்று தெய்வச் சேக்கிழார் இந்த நீடுயர்மலையைப்பற்றிச் சொல்கிறார்கள். மண், புனல், அனல், கால், வெளி ஆகிய ஐம்பெரும் பூதங்களும் பெருமானை அங்கே ஆரத்தழுவி அகங்குழைந்து வழி படுகின்றன. காற்றோடு மண்ணும் நீரும் கலந்து வழி படுவதையும் வளியோடு, அனலும் (சூரியன்) வழிபடு வதையும் பார்க்கலாம். இயற்கையே அங்கு அப்பெருமானை வழிபடுகிறது.

## அரவொலி :

கயிலை மலைச் சிகரங்களில் எப்போழுதும் இடை யருது " ஓம் " என்னும் பிரணவம் ஒலித்துக்கோண்டே யிருக்கிறது. சுற்றிலும் அமைதியான ஓசையே இல்லாத அந்த இடத்தில் இத் திருக்கயிலையிலிருந்து இந்த ஒலி பல காலும் கேட்பதாக அங்கேயே வசித்து வரும் லாமா மடத்தினர் சொல்கிறார்கள். " மேன்மை நான்மறை நாதமும் விஞ்சையர் கானவீணையின் ஓசையும் காரெதிர் தானமாக்கள் முழக்கமும் தாவில்சீர் வானதுந்துபி ஆர்ப்பும் மருங்கெலாம் " என்பது பெரிய புராணப் பாடல். சுந்தரர் " அரவொலி ஆகமங்கள் அறிவார் அறிதோத்திரங்கள் விரவிய வேத ஒலி விண்ணெலாம் வந்தெதிர்ந்திசைப்ப " என்று சொல்கிறார்கள். இதை இப்படியே லாமா மதத்தினரும் தங்கள் நூல்களில் சொல்லியிருக்கிறார்கள்.

## குழல் ஒலி :

அறிவியல்வல்லாரும் இங்கே குழல் ஒலி போன்ற இசை நாதம் கேட்பதை ஒத்துக்கோள்கிருர்கள். அதற்கு அவர்கள் சில காரணங்களேயும் சொல்லுகிருர்கள். கயிலேயைச் சூழஉள்ள சிகரங்களில் சிறுசிறு தோளேகளும் காற்று நுழையக்கூடிய வேடிப்புக்களும் இருப்பதாகவும், அங்கு அடிக்கடி வீசும் பேருங்காற்று, புயற்காற்று அத் தோளேகளின் வழியே உட்புகுந்து சேல்லும்போது இசை வேறுபாடுகள், நாதத் தோனி வேறுபாடுகள் உண்டாகும் என்று சோல்கிருர்கள். அதே போல மலேக் குகைகளில் மோதிக் காற்று வேளிவரும்போது ஒம் என்ற நாத வோலி எழும் என்றும் கூறுகிருர்கள்.

## சுவர்க்க பூமி :

அக்காலத்து நம் முன்ஞேர்கள் இமயம், கயிலே இரண் டையும் தனித்தனியேகண்டுவந்தவர்கள். இமயத்தை மகா மேருவேனக்கோண்டார்கள். அதற்கு வடபுறத்தில் கடவு ளின் இருப்பிடம் இருப்பதாகக்கண்டு சோன்ஞர்கள். பேரு மான் இருப்பிடம், அதாவது கயிலே இருக்குமிடத்தை உத்தரகுரு என்றழைத்தனர். இமயமலேக்கு அப்பால் ஒரு பேரிய சமவேளிப் பிரதேசமும் இந்த இமயப்பனி வரையில் வேறுபட்டதான பனிமலேயாக அது விளங்குகிற தேன்பதையும் கண்டார்கள். அவர்கள் கங்கை நதியின் உற்பத்தி இடத்தைக்காண முயன்றவர்கள். அந்த முயற்சியில்தான் இமயப் பேருவரையைக் கடந்து கயிலே யையும் அதனேச் சுற்றியுள்ள பல ஏரிகளேயும் கண்டு பேயரிட்டார்கள். அவ்வேரிகள் உலகம் முழுவதற்கும் வற்ருது முட்டாது தண்ணீர்வழங்குமேன்றும் கூறியுள்ளார் கள். அதுவே சுவர்க்கபூமி. போன்மயமானது என்றனர்.

அதற்கு முன்னே அவர்கள் கண்டு வழிபட்ட அக்னி, வருணன், வாயு, இந்திரனில் மேம்பட்ட மும்மூர்த்திகளும் அமர்ந்துறையுமிடமாக அக்கயிலை விளங்கியது. அம் மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்டதான பெருமான் அங்கு அரசு வீற்றிருப்பதையும் கண்டார்கள்.

## ஜம்புத்வீபம் :

உலகம் தாமரைமலர் போன்றது. மகாப்பிரளய காலத்தில் முதலில் வந்த விஷ்ணுவின் உந்திக்கமலத்தில் பிரமன் தோன்றினன். அவர் ஜம்பு, பிலக்ஷம், சான்மேலி, குசம், க்ரேளஞ்சம், சாகம், புஷ்கரம் என ஏழுத்வீபங்களை யும் படைத்தார். ஜம்புத்வீபம் உப்பு, கருப்பஞ்சாறு, மது, வெண்ணெய், தயிர், பால், தண்ணீர் என்னும் ஏழு கடல்கள் சூழ்ந்திருப்பது. இவைகளின் நடுவே மேரு பால் வெள்ளை நிறத்தில் இருக்கிறது. (அம்மேருவைச் சுற்றி நான்கு திக்குகளிலும் நான்கு தேசங்கள் திபேத்திய வழியில் அவற்றுள் Gyanak - க்யாநாக் = பெரும் கறுப்பு = சைனு; Gyagar - க்யாகார் = பெரும் வெள்ளை இந்தியா - பாரதத் ; Gyaser = க்யாசேர் = பெரும் மஞ்சள் ரஷ்யா). மேருவின் நிறம் கிழக்கே பிராமண வர்ணம் - வெள்ளை ; தெற்கே வைஸ்யவர்ணம் - மஞ்சள் ; வடக்கே க்ஷத்திரிய வர்ணம் - விடியல் (இளஞ்)சிகப்பு; மேற்கே சூத்ரவர்ணம்- கறுப்பு. மேரு வட்டவடிவமானது. தாமரையின் கர்ப்பம் போல அது ஜம்புத்வீபத்தின் மத்தியில் உயர்ந்த இடத்தில் இருக்கிறது.

மேருவுக்கு அணைவுகளாக நான்கு மலைகளுண்டு. அவை கிழக்கே மந்தரம் ; தெற்கே கந்தமாதனம் அல்லது மாந்தாரா ; மேற்கே விபுலா அல்லது குமுதா; வடக்கே சுபார்ஸ்வா.

**மரம், நந்தவனம் முதலியன :**

ஒவ்வொரு மலையிலும் ஒவ்வொரு மரம் உண்டு. கிழக்கே கடம்பு; தெற்கே ஜம்பு - நாவல்; மேற்கே - அரசு; வடக்கே ஆல். காடுகள் நான்குண்டு. கிழக்கே சைத்ராதமகாடு; தெற்கே நந்தனம் - தோட்டம்; மேற்கே - வைப்ராஹம தோட்டம்; வடக்கே - த்ருதிமான் காடு. நான்கு பெரும் ஏரிகள் உண்டு. அவை : கிழக்கே - அருணோதகம்; தெற்கே - மானசம்; மேற்கே - சித்தோதகம்; வடக்கே - மகாபத்ரம். புஷ்பங்கள் நான்கு. கிழக்கே - பொற்றமரை; தெற்கே - வெண்தாமரை; மேற்கே - செந்தாமரை; வடக்கே வாசனைத் தாமரை. நான்கு நதிகள் உற்பத்தியாகின்றன. அருணோதசத்தில் பிருமபுத்திரா; மானசத்தில் அபரகண்டகி; சித்தோதகத்தில் சதத்ரு - சட்லீஜ். மகாபத்ரத்தில் சக்ஷு. மேருவில் ஈசானத்தில் சிவபார்வதியும்; தென்கிழக்கில் விஷ்ணுவும்; தெற்கில் பிரும்மாவும் எழுந்தருளியுள்ளார்கள். மேலே சொன்னவை முதல் மூன்று நேமிகளில் அமைந்தவை. நான்கு அணைவுகளையும் அடுத்து ஒன்பது வர்ஷங்கள். மேருவை நடுவில் உடையது இளாவிருதம். அது ஐம்புத்வீபத்தில் மேருவுக்கு அடுத்தபடியாக உயரமான இடத்தில் அமைந்தது. மேருவின் தெற்கில் ஹரிவர்ஷம். ஹரிவர்ஷத்துக்கும், இளாவிருதத்துக்கும் மத்தியில் நிஷத மலை-; அதற்குத் தெற்கில் ஹரிவர்ஷத்துக்கும் கிம்புருஷ வர்ஷத்துக்கும் இடையில் ஹேமகூடம்; 2 கிம்புருஷவர்ஷத்துக்கும் பாரதவர்ஷத்துக்கும் இடையே ஹிமவத் 3; வடமேற்கே இளாவிருதத்துக்கும் ரம்யகா வர்ஷத்துக்கும் இடையில் நீலமலை4; ஹிரண்மயத்துக்கும் ரம்யகாவுக்கும்இடையில்சுவேதமலை 5 (ஹிரண்மயம் தங்கமிருக்குமிடம்); ஹிரண்மயத்துக்கும் உத்தரகுருவுக்கும்

இடையில் சிருங்கின் (கயிலை) 6. இளாவிருதத்துக்குக் கிழக்கே பத்ராஸ்வவர்ஷம். குருவர்ஷத்துக்கும் பாரத வர்ஷத்துக்கும்இடையில் மால்யவான்7;இளாவிருதத்துக்கு மேற்கே கேதுமாலாவர்ஷம். அந்த இரண்டின் இடையில் கந்தமாதனம்8. மேருவைச்சுற்றி எட்டு வர்ஷங்கள். பத்ராஸ்வம், பாரதம், கிம்புருஷம், ஹரி, கேது மாலவம், ரம்யகம், ஹிரண்மயம், குரு. இவற்றுள் பாரதவர்ஷத்தில் வசிப்பவர்களுக்கு யுகத்தினுல் மாறுதல்களும், மூன்றுவித துக்கத்தினுல் பீடிக்கப்படுவதும் கர்மாவினுல் பயன் பெருக் குவதும், அதனுல் விளையும் அனுபவமும் உண்டு. மற்றவர்ஷங்களில் இவை கிடையாது. கேவலம் போகமே பேற்றவர்கள். அதுவே அவர்களுக்கு அழிவைத்தருவது. இவைவாயுபுராணம்முதலியவற்றிலும் பௌஷ்கரம்முதலிய ஆகமங்களிலும் விரித்துப் பேசப்பட்டிருக்கின்றன. அவை களின்படி மகாமேருவின் தேன்கிழக்கில் கயிலாயம் அமைந்து விளங்குகிறது என்பதும், முன்னே வழியில் வந்த நந்தனம், மானசசரோவரம் முதலியனவும் அமைய வந்திருக்கின்றன என்பதும் யாத்திரைவந்த வழியில் சோல்லப்பட்டிருக்கிறது. இதன் பட விளக்கமும் இத் துடன் தரப்பட்டிருக்கிறது.

## கைலாச புராணம் :

திபேத்தியர்களின் லாமாமதவழியில் கயிலாய புராணம் என்ற ஒன்றிருக்கிறது. அதற்கு காங்ரி கர்சோக் (Kangri Karchoke) என்று பெயர். அதில் கயிலை வர்ணனைப் பகுதிகள் (Soldep) ஸோல் டேப் என்று சோல் லுவர். அதன்படி கயிலாயம் உலக மத்தியில் அமைந் திருக்கிறது. ஆகாயத்தையும் ஊடுருவக்கூடியதாக

உயர்ந்து ஓங்கி வளர்ந்திருக்கிறது. அதன் நடுவில் கற்பக விருக்ஷம் ஒன்றிருக்கிறது. வேண்டுவார் வேண்டுவதை அளிக்க வல்லது அத்தெய்வீக மரம். நான்கு சம சதுரப் பக்கங்களை உடையது கயிலை மலை. அவைகளில் தங்க மும ஒளிமிக்க மணிகளும் பதிக்கப்பெற்றிருக்கின்றன. கிழக்கு முகத்தில் ஸ்படிகம், தெற்கே (பச்சை) மரகதம், மேற்கே (இரத்தினம்) மாணிக்கம், வடக்கே தங்கம் பதிந் திருக்கின்றன. சிகரம் அழகிய மணம்மிக்க பூக்களாலும் பச்சிலைகளாலும் மூடப்பட்டிருக்கிறது.

தேவர்கள் மேலுலகத்துக்கு எடுத்துச்சேல்ல முடியாத படிக் காக்க நான்கு புறங்களிலும் புத்தபிரானின் திருவடி களும், அசுரர் கீழுலகத்துக்கு எடுத்துச்சேல்லமுடியாத படி நான்கு புறமும் சங்கிலிகளும் பதிக்கப்பெற்றிருக் கின்றன.

தேம்சோக்:

கயிலைக்கு நாயகன் தேம்சோக் (Demchok - Demchog) அதாவது தர்மபாலர். அவருடைய மறுபெயர் பவோ (Pavo). அவர் புலித்தோலாடை உடுத்து மண்டை யோடுகளைப் பூண்டு, கைகளில் தமருகம், (கடம் Khatam) திரிசூலம் ஏந்தியிருப்பார். கயிலையைச்சுற்றி மற்ற தேவர் கள் வரிசை ஒன்றுக்கு 500 பேர்களாக 990 வரிசைகள் அமர்ந்திருப்பர். இவர்களும் தேம்சோக் போன்றே புலித்தோலாடை முதலியன அணிந்திருப்பர். தேம்சோக் கின் (தேவி) சக்தியின்பெயர் தோர்ஜி ஃபங்மோ (Dorje Phangmo) அல்லது வஜ்ரவராகி. தேம்சோக் சிகரத்திற்கு மேற்கே உள்ள சிறு பனிஉறை சிகரம் திஜுங் (Tijung) எனப்பெயர் பெறும். அதுவே தோர்ஜி உறையுமிடம்.

இவர்களல்லாமல் புத்தபிரானும் 500 போதிசத்வர்களும் கயிலையிலேயே வசிக்கிறார்கள். கயிலையின் அடிவரையில் ஹனுமான்ஜு (Hanumanju) என்ற குரங்குத்தெய்வம் அமர்ந்திருக்கிறது. (இதுதான் மக்கள் உற்பத்திக்குக்காரண மானது). கயிலையைச்சுற்றிலும் தேவர்கள் பலர் நித்யவாசம் செய்கிறார்கள். பக்தியில் மேம்பட்டோரே இத்தேவர்களைக் காணமுடியும். மணி, தாளம், மற்றும் பல இசைக்கருவி களின் நாதவொலி கயிலைச் சிகரத்திலிருந்து கேட்டுக் கொண்டே இருக்கும். அதாவது கயிலையில் எப்பொழுதும் பலவித வாத்தியங்கள் முழங்கிக்கொண்டே இருக்கும்.

## ஞானபூமி :

சைவசமயத்தாருக்குக் கயிலை சிவராஜதானியாக, பெரு மான் திருவோலக்கம் அருளுமிடமாகக் கருதப்படுவதைப் போல, பௌத்தர்களும் லாமா மதத்தினரும் அதைச் சிறந்த ஞானபூமியாகக் கருதுகிறார்கள். திபேத்தியர்கள் ஙாரிகியாங்கார், ஙாரி, காங்திசே, திசே, ரிராப் மலை என்று இம்மலைக்குப்பெயர் சொல்லுகிறார்கள். 'காங்ரி' என்றால் பனி மலைகளில் மாணிக்கம். அம்மதத்தை மூதன்முதல் உண்டாக்கிய (பத்மசம்பவர்) உர்க்கியன் கயிலையில் வந்து தங்கித் தவம் இருந்தார். புத்தபிரானின் மறு அவதாரமான சென்ரேஸி (Chenrezi) என்பவரின் ஆவியே தலாய்லாமா வாக அவதாரம் எடுப்பதாகக் கருதுகிறார்கள். சென்ரேஸி உலக நன்மைக்காகத் தோன்றியவர். உலக உற்பத்திக்கு காரணமானவர். மானசத்தடாகத்தில் ஒரு தாமரை மலரில் தோன்றியவர்.

## சுமேரு :

கயிலை மலையைச் சுமேரு என்றும் உலக மத்தியாய் உலக அச்சாணியாய் இருக்கிறதென்றும் சொல்கிறார்கள்.

இதைச் சூரிய சந்திரர் சுற்றிவருகிறார்கள். இம்மலையைக் சூழ்ந்து ஏழு மலைகள், ஏழு கடல்கள் உள்ளன. நான்கு திசைகளிலும் நான்குநாடுகளும், நான்குநதிகளும் விளங்கு கின்றன. இக்கயிலை மலையில் (பகம்ஷிம்) கற்பகவிருக்ஷம் இருக்கிறது. அதன் கிளைகள் மந்தமாருதத்தினால் அசைக் கப்படும் போழுது ஏற்படும் ஓசையும், இலைகளின் சலசலப் பும் ஒரு தேய்விக இசையை எழுப்பும். அது தேவர்களுக்கு வேதகோஷமாக ஆகிறது. அதன் கிளைகளில் லாக்களும் (தேவர்களும்), வேர்களில் லாமைன்களும் (அசுரர்களும்) தங்கியுள்ளனர். அம்மரத்தில் பழுக்கும் பழங்களை யார் பேறுவது என்பதில் அவர்களுக்குள் அடிக்கடி சண்டை மூளும்.

## மண்டலம் :

கயிலைச் சிகரம் ஒரு மண்டலம் (யந்திரம்). அதில் ஆதி புத்தர் அமர்ந்து தவம் புரிகிறார். அங்குத்தான் பௌத்தர்களுக்கும், லாமா மதத்தினருக்கும் மகாநிர் வாணம் கிடைக்கிறது. இதைத் தரிசிப்பதே ஒரு பெரும் தவம். நினைப்பதே ஜபம். அதைக் கண்டாலும் வலம் வந்தாலும் மூன்று காலங்களிலும் (இம்மை, அம்மை, மறுமை) செய்யும் பாபங்கள்கழியும். வீடுபேறு கிடைக்கும்.

## யிடம் :

கயிலையைத் திபேத்தியர்கள் எவ்வாறு கண்டு வணங்கு கிறார்கள் என்பதற்குக் கீழே உள்ள குறிப்புக்களும் துணை செய்வனவாகும்.

அவர்களின் முக்கியமான யிடம் (வழிபடுகடவுள்) தேக்சோக் என்னும் *சிவசக்தி*. அவர்கள் மதவழியில் யிடம் என்ற சொல்லுக்கு வழிபடுகடவுள், இஷ்ட தேய்வம் என்று

பொருள். இவ்வழிபாட்டைச் சந்நியாசிகள்தாம் செய்யலாம். கிரகஸ்தர்கள் செய்தல் கூடாது. சந்நியாசிகளைக்கொண்டு செய்விப்பர் ; அதிலும் தாரா தேவியையே (அன்னை பரா சக்தி) விரும்பி வழிபடுவர். அறுகோணயந்திரங்கள்போட்டு அதில் அட்சரங்கள் அடைத்து வழிபாடுகள் செய்வார்கள். அதை யுப்யும் முத்திரை ( சிவசக்தி முத்திரை ) என்று பெயர் சொல்வர். இதன் தத்துவம் சிவசக்தி - பதிபசு ஐக்யம் (இரண்டறக் கலத்தலாகும்). கடவுளோடு உயிர்கள் கலக்கும் நிலையைக் குறிப்பதே அந்த யுப்யும் சக்கரம்.

## யுப் யும் :

அறுகோணச் சக்கரத்தை அமைப்பதில் இரண்டு முக்கோணங்களை ஒன்றின்மிது ஒன்ருக மாற்றி வரையப் படும், கீழே அமைக்கப்படும் கோணம் சக்தி. மேலே அமைக்கப்படுவது சிவம். இதனை முறையே ‘‘யுப்’’ ‘‘யும்’’ என்று சொல்வர். யுப் புருஷ சக்தி, தெய்விகமானது ; வஜ்ர தாது, விஷயம், காரணம், சிவன் என்ற பொருள் உடையது. யும் - சக்தி, உற்பத்தி சக்தி, பிரகிருதி, சர்ப்பதாது, காளி, குறிக்கோள் காரியம் என்னும் பொருள்களை உடையது. யுப்யும் ஆன்மீக உறவைக் குறிக்கும் உயர்ந்த லட்சியமாக, குறிக்கோளாகக் கருதப் படுகிறது. அறுகோணச் சக்கரத்தில் சக்தியை வைத்து வழிபட்டால் விசேஷப் பலன்களைக் கொடுக்கும். முக் கோணங்களில் மேல் நோக்கியது யோனி முத்திரை, பிரகிருதி, அபூர்ணம், பகிர்முகம், உயர்தந்திரம், குறிக் கோளடைவு என்றெல்லாம் சொல்லப்படுகிறது. கீழ் நோக்கியது இலிங்க முத்திரை, புருஷ சக்தி, பூர்ணம், அந்தர் முகம், குறிக்கோள் என்று சொல்லப்படுகிறது. இவை இரண்டின் தொழிற்பாடுகளால்தான் உலக இயக்கம்

நடைபெறுகிறது. பல்வேறு உயிர்வகைகள் உண்டாகின்றன. இந்த யந்திரம் பிர்ம்மானந்த சக்கரம், சமஷ்டிச் சக்கரம் என்றும் கொள்ளப்படுகிறது. மூலப்பிரகிருதியின் பலவிதமான தியானங்களைச் சொல்லி இதில் வழிபாடுகள் செய்தல்வேண்டும். ஒவ்வொரு தெய்வத்துக்கும் தியானம் வேறுவேறாகவும், அட்சரம் வேறுவேறாகவும் இருக்கிறது.

சாம் :

மந்திரபீஜாட்சரங்களைப் பல நிறங்களிலும் வடிவங்களிலும் எழுதுவர். யந்திரங்கள்போடப் பலவகை நிறங்களில் அமைந்த கற்பொடிகளைப் பயன்படுத்துவர். சிறு குற்றமும் இல்லாதவாறு இப்பொடிகளைக்கொண்டு யந்திரங்கள் வரைவதில் மிகவும் வல்லவர் பலர் அங்கிருக்கிறார்கள். 4, 5 அடி நீள அகலத்தில் தரையில் யந்திரங்களைப் போடுவர். அடிக்கடி வெளியிடங்களுக்கு எடுத்துப் போவதற்கு உதவியாக அந்த அளவுள்ள பலகைகளிலும் துணிகளிலும் வரைவதும் உண்டு. சில துறவிகள் இச் சக்கரத்தியானத்தை மேற்கொண்டு குகைகளில் தனியாக அமர்ந்து தவமியற்றுவதுமுண்டு. இக்குகைவழிபாட்டுக்கு சாம் (Cham) என்று பெயர். குகைக்குள் சென்று வழிபாடு தொடங்குமுன் அந்த இடத்திற்குத் திக்பந்தனம் செய்துகொண்டு உள்ளே செல்வார்கள். தவம் செய்யுங் காலங்களில் வெளியே வருவதும் இல்லை. யாருடனும் பேசுவதுமில்லை. குகையிடத்தில் சிறு துவாரம் விட்டு சுவர் வைத்து மூடிக்கொள்வதும் உண்டு. குறிப்பறிந்து ஏவல் செய்வோரை நியமித்துக்கொள்வர் உதவிக்கு. நாள் முழுவதும் இரவு பகல் என்று பாராமல் ஜபம் செய்வர். லக்ஷம், பத்துலக்ஷம், கோடி இப்படி எல்லை

வகுத்துக்கொண்டு உருவேற்றிவருவர். அது முடிந் ததும் பூர்ணுகுதி செய்து தவம் முடிப்பர். இந்தப் பூர் ணுகுதிக்கு 4, 5 மணி நேரம் ஆகுமாம். சத்துமாவும் வெண் ணேயும் கலந்து பிசைந்து விரும்பிய தெய்வத் திருவுருச் செய்து, சக்கரத்தின்மீது அமைத்துப் பூசை செய்வர். சமித்து, நெய், துர்வம்புல், பார்லி, சோளம், அரிசி, பட்டாணி, எள், கடுகு சாதம் இவைகளை ஆகுதியிலிடு வார்கள். இவ்வாறு செய்து தவசித்தி பெற்றோரை மற்ற வர்கள் தெய்வ அம்சமாகக் கருதி வழிபடுவார்களாம்.

பெரும்பாலும் லாமா மதத்தினரின் வழிபடு கடவுள் கயிலேயின் அதிதேவதை தெம்சோக் (Demchoke) தான்-சிவசக்தி, மாந்தாதாவின் அதிதேவதை சாங்தூல் (Sangdul), ஜிக்ஜே (Jigje), குன்றி (Kunrie) இவை சிறப்பானவை. கார்த்திகேயனையும் வழிபடுவர்.

தெம்சோக் ;

தெம்சோக், தெம்சாக் என்னும் தர்மபாலர் கயிலேயின் அதிதேவதை. தெம்சோக்கைச் சம்பரன் என்றும் கூறுவர். நம் புராணத்தின்படி சம்பரன் ஒரு அசுரன். இந்திரனுக்கு இடையூறுகள் பல செய்தவன். மோட் சத்தைத் தடுத்தவன் என்று பேசப்படுபவன். சம் - மோட்சம் ; வர - மிக மேலான ஜோதி ; பெருஞ்சோதி ; மோட்சமளிக்கவல்ல மிகப் பெருஞ்சோதியாயுள்ளவனே கயிலாயத்திலிருந்து அருள்பாலிக்கிறன் என்ற பொருளில் சம்வரன் என்று அத்தெய்வத்தைப் பெயரிட்டு வழிபடு கிறார்கள் அவர்கள். இவ்வழிபாட்டின் பயன் பரமானந்தத் தில் திளேத்தலாகும். தெம்சோக் என்ற சொல்லும் சச்சி தானந்தம் என்ற பொருளேத் தருவதுதான்.

உருவத்தியானம் :

நான்கு திருமுகங்கள், பன்னிரண்டு கைகள் உடைய சிவனது திருமேனியை உமையம்மை ஆரத்தழுவிய நிலையில் அம்மையப்பராய் விளங்கும் சிவசக்தி சம்மேளன மாகும். நான்கு முகங்களில் நடுவில் உள்ளது நீலம். வலது முகம் வெள்ளை, இடது முகம் பச்சை, பின் முகம் சிவப்பு. இவை நான்குவித மூலப்பொருளைக் குறிப்பன வாகும். அவை மண், நீர், நெருப்பு, காற்று. பயன் கழி விரக்கம் (கருணை), ஆசை (காமம்), அன்பு (பக்தி), சமநோக்கு (நியாயம்). ஒவ்வொருமுகத்திலும் மும்மூன்று கண்கள். அவை அந்தமூர்த்தி முக்கால உணர்வுடையவர், மூவுலகும் அவராளுகைக்குட்பட்டது, இவைபோன்ற பல வற்றைத் தெரிவிக்கும். ஒவ்வொரு சிரசிலும் ஐந்தைந்து (கபாலங்கள்) மண்டையோடுகள். இவை ஐந்தறிவுகளைக் குறிப்பதாகும். அதிகக் கோபமுள்ளதாகப் பற்களைக் கடித்துக்கொண்டு இருக்கும் நிலையில் உள்ள முகபாவம் தீமையைக் காயும் குறிப்பு. ஒவ்வொரு தலையிலும், சிகையிருத்தலும், ஒவ்வொரு மண்டையோட்டிலும் முத்து, இரத்தினம் போன்றவை பதித்திருத்தலும் அவருடைய முழுத்தன்மையைக் குறிக்கும். சிரமாலை அணிந்திருப்பது அவர் தியானித்திருப்பதைக்காட்டும். காதுகளில் அணி கலன்கள் சகிப்புத்தன்மை, பொறுமை இவற்றைக் குறிப்பனவாகும். கழுத்துக்களில் மாலை தர்ம சிந்தனை யாகும். கைகளில் உள்ள காப்புக்கள் தூய்மையைக் குறிக்கும். இடுப்பில் அணிந்துள்ள கச்சு ஆற்றலை வெளிப்படுத்தும். அவரது நீல உடல் ஒருநிலைத்தன் மையைக் காட்டுவது. பன்னிருகைகள் பன்னிரண்டு மூலகாரணங்களைக் குறிப்பன. பன்னிரு கைகளும்

முறையே அவித்தை, சமஸ்காரம், விஞ்ஞானம், நாமரூபம், ஷடயாதனம், ஸ்பரிசம், வேதனம், திருஷ்ணம், உபாதானம், பாவம், ஜாதி, ஜரமரணம் என்பன.

மேல் இரண்டு கைகள் வஜ்ரசக்தியை (உமையை) அணைத்துக்கொண்டுள்ள நிலையில் இருக்கும். அதிலும் ஒருகை அணைத்திருக்கும். அதற்கு உதவியாக உள்ள மற்றொரு கையில் மணி இருக்கும். அணைக்குங்கை ஞானத்தையும், மற்றது அதை அடையும் மார்க்கத்தையும் குறிப்பது. தேவியை அணைத்துக்கொண்டிருப்பது சிவ சக்தி ஒன்றுபடுவதைக் காட்டும். அதை அடுத்த இரண்டு கைகள் பச்சை யானைத்தோலை உரித்தெடுப்பதாக உள்ளது அஞ்ஞானத்தை அழித்தலாகும். மூன்றாவது வலதுகை டமருகம் ஏந்தியிருத்தல் அறவுரை (உபதேசம்) வழங்குவதைக் குறிக்கும். நான்காவது வலது கையில் கோடரி பிறப்புக்குக் காரணமான பந்த பாசங்களை ஒழித்தல். ஐந்தாவது வலது கையில் கட்கம், ஆணவம், கன்மம் முதலான ஆறு குற்றங்களைக் கடிதலாகும். ஆறாவது வலதுகை மூவிலைச் சூலத்தை ஏந்தியிருப்பது ஆசைக்கு மூலகாரணமான காமக்ரோதாதிகளை ஒழித்தலின் அடையாளம். இடது மூன்றாவது கையில் (தோர்ஜி, வஜ்ராயுதம்) கட்வாங்கத்தையும் அமுதகலசம் எழுதப் பெற்ற கொடியையும் ஏந்துதல் பேரானந்தத்தை அறிவிக்கும். நான்காவது இடதுகையில் இரத்த கபாலம் உலகியல் ஆசைகளை வேரறுத்தல். ஐந்தாவது கையில் (தக்பா) பாசம் ஏந்தியிருத்தல் நிலையான பொருள்களைப் பற்றிய சைதன்ய அறிவை விளக்குவதாகும். ஆறாவது கையில் நான்குமுகமுடைய சாங்பா (Chchangba) பிரம்ம கபாலம், உலக சம்சார மாயைகளிலிருந்து விடுபட்டதைக் காட்டுவது.

இந்தத்திருவுருவின் இரண்டுதிருவடிகளின்கீழும் இரண்டிரண்டு உருவங்கள் ( அபஸ்மாரங்கள் ) படுத்திருக்கும். வலது காலடியில் ஆணுருவும், இடது காலடியில் பெண்ணுருவும். இவை காலத்தை வென்றிருப்பதைக் காட்டும். சில இடங்களில் நான்கு உருவங்கள் இருப்பதாகவும் அமைந்திருக்கும். தேம்சோக்கின் இடையில் தளரக்கட்டிய புலித்தோலாடை விஷயஞானம் எல்லாவற்றையும் கடந்து நிற்கும்நிலை. முகத்தில் வீரமும், குரூரமும் பிரதிபலிக்கும்; அது இறைவனது வரம்பில் ஆற்றல் வெளிப்படுத்துவாக அமைந்தது. பயங்கரமானதும், அதேநேரத்தில் கருணையும் சாந்தமும் பொழியும் நிலையில் அமைந்திருக்கும் தேம் சோக்கை, உக்ரஸ்வருபம், ரஞ்சகஸ்வருபம், சாந்த ஸ்வருபம் உடையதாக அவ்வவரும் விரும்பும் பயனுக் கேற்றதாக வழிபாடு செய்பவரின் ஆற்றலுக்கேற்றதாக அமைத்துக்கொள்ளலாம் என்று அவர்கள் நூல்கள் விதி வகுத்திருக்கின்றன.

## தோர்ஜி :

தோர்ஜி பங்மா ( Dorje Phangma ), வஜ்ரவராகி, காண்டோ ( Kanto ) என்னும் பெயர்களால் வழங்கப் படும் பராசக்தி ; அங்கு, பெருமானை ஆரத்தழுவிப் பிரியாவிடையாக விளங்குகிறாள். இவள் நிறம் சிவப்பு. உயிர்களிடம் அன்புடையவள் என்பது அதன் உட்பொருள். ஒருமுகமுடையவள்; மாறுதலில்லா ஒரே சுவையைக் குறிக்கும். இரண்டு கைகள் அகமும் புறமும் ஒரே தன்மையாக உண்மையே வடிவாய் அமைந்திருத்தலைக் குறிக்கும். வலதுகையில் வளைவான அரிவாள். ஞானத்தைக் குறிக்கும்; உலக இச்சைகளையும் அவைகளால் விளையும்

பயனையும் ஒழிப்பதைக்காட்டுவது அது; எல்லாத்திசைகளை யும் இயக்கிக்கொண்டிருக்கும் உண்மையை உணர்த்துவது மாகும். இடதுகை இறைவனை அணைத்திருக்கிறது. இது தன்னை அன்போடு ஏற்பவரை அணைப்பதையும் உள்ளதை உள்ளபடியே இணைப்பதையும் அறிவிக்கும். அந்த அம்பிகையின் தலைமயிர் அவிழ்ந்து தொங்குவதாகவும் காற்றில் அலைந்துகொண்டிருக்கும் நிலையிலும் ஆடையே இல்லாது நிர்வாணமாக இருத்தலும் காமத்திற்குக் காரணமான இச்சையை வென்றவள் என்பதைக் குறிப்பன. இவளுக்கும் மூன்று கண்கள் உண்டு. ஐந்து மண்டை யோடுகளை அணிந்திருப்பாள். இவை ஐவகை ஞானங் களைக் காட்டும்.

## திருமணக்கோலம் :

தேம்சோக் புருஷசக்தி, தோர்ஜி பிரிக்ருதி சக்தி. அவர்களைப் பிரிக்க முடியாது. கூடியிருந்தே அவர்கள் காட்சி வழங்குவார்கள். இவ்வுருவங்கள் ஜோதியின் நடுவில் சேர்ந்து திருமணக்கோல உருவில் நிற்பதாக இருக்கும். ஜோதி உயர்ஞானத்தைக் குறிப்பது, உயிர் களுக்கு உள்ள தடைகளை சுட்டெரித்து போசுக்குவதையும் காட்டுவது.

## மூலப்பொருள் :

உலக ஊழியில் பெருமான் தனக்குள் எல்லாவற்றை யும் ஒடுக்கிக்கொண்டு சக்தியையும் தம்முள் சேர்த்து சக்தியும் சிவமுமாய் ஒன்றியிருத்தலை உணர்த்துவதே இத்திருவுரு. அப்பொழுது தம்முள்ளே எல்லாவற்றையும் ஒடுக்கி மீளவும் தோற்றுவிக்கும் மூலப்பொருளாய்

விளங்குகிருன். ''ஊழிபடையாமுன் ஏக உருவாகி'' ''மூலமாகிய மூவர்க்கும் மூர்த்தி'' என்பனவற்றின் கருப் போருளில் அமைந்தது அத்தேய்வத்திருவுரு.

## ஆனந்தம், பக்தி :

நீலவண்ணத்தில் பேருமானும் சிவப்புவண்ணத்தில் பேருமாட்டியும் விளங்கும் திருவுருவங்கள் ஆனந்தம் பக்தி இவற்றை உணர்த்துவதாகும், இச்சிவசக்தியின் புணர்நிலே நம் சிவலிங்கத்திருமேனி அமைப்பிலேயே விளங்குவதை ஒப்பாய்க் காணலாம். இதுவே கயிலே மலேயானின் திருவுரு என்று அவர்கள் கோள்கிருர்கள்.

## வலம் வருகை :

கயிலேச் சிகரத்தைக் கண்டவுடன் அவர்கள் 108 முறை கீழே விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்வர். 1 முறை. இச்சிகரத்தை தரிசித்தாலே முத்தி கிடைக்கும். ஒரே நாளில் வேளிப்பரிக்ரமத்தைச் சுற்றி வந்து விடுவார்கள். 3 அல்லது 13 முறை கயிலேயையும் மானசத்தையும் தனித்தனியாக அவர்கள் வலம் வருவர். சாஷ்டாங்க தண்டப்பிரதட்சிணம் செய்தலும் உண்டு. கீழேவிழுந்து வணங்கி தலேக்குநேரேகோடிட்டு அக்கோட் டில் வந்துநின்று மறுபடியும் விழுந்துவிழுந்து வணங்கிச் சேல்லுதலே அது. இவ்விதமாகக் கயிலேயை 15நாளிலும், மானசத்தை 28 நாளிலும் வலம்வருவர். தம்மால் முடியா விட்டால் ஏழைகள் எளியவர்களேக் கூலிக்கு அமர்த்திச் செய்யச்செய்து பூர்த்திசெய்துகோள்வதும் உண்டு. அவர் களுக்குக் கூலியாகப் போருளும், உணவுப்போருள்களும்

அளிப்பார்கள். பணக்காரர்கள் தம்முடைய இறந்த முன்னோர் நற்கதி அடையவேண்டி இவ்விதம் செய்யச் செய்தலுமுண்டு. ஒரு சுற்றுக்கு ஒரு ஆடு அல்லது 5, 6 ரூபாய் கூலிகொடுப்பர். ஒரு சுற்று இந்த ஆயுளில் செய்த பாவங்களையும், 10 சுற்றுக்கள் ஒரு கல்பகாலத்தில் செய்தவைகளையும், 108 சுற்றுக்கள் இந்த ஜீவித காலத்திலேயே எல்லாப்பாப புண்ணியங்களும் ஒழிந்து மகாநிர்வாணம் (மோட்சம்) அளிப்பதாகக் கருதுகிறார்கள். பொதுவாக பரிக்ரமம் செல்லுவதை இரவு நடுநிசியில் தொடங்குவர்.

## பரிக்ரம வகை :

மூன்றுவகைப் பரிக்ரமங்கள் மேற்கொள்ளப்படுகின்றன. வெளிப் பரிக்ரமம். எல்லோரும் செய்வது; அடுத்து கௌரிகுண்டத்தை வெளியே வைத்துச்செல்வது முதல் உட்பரிக்ரமம். பனிமலைச்சிகரத்தை மாத்திரம் வலம் வருதல் இரண்டாவது உட்பரிக்ரமம். முதல் உட்பரிக்ரமம் செய்தால் கயிலைச்சிகரத்தின் அமைப்புக்கள் முழுவதையும் காணலாம். இதையும் ஓரளவு எளிதில் செய்யலாம். இரண்டாவது உட்பரிக்ரமம் செய்வதில்தான் உயிரை வெறுத்துச் செய்தல்வேண்டும். இங்குத்தான் பனிச்சிகரங்களிலிருந்து பனித்துண்டுகள் வெடித்து விழுதல், வழிதல், சரிந்துவிழுதல், பேய்க்காற்று, அதிலும் தென்மேற்குமூலை, வடக்குமுகத்தின் அடிவாரம் இவற்றில் உறைபனியில் செங்குத்தாகவும் 100, 150 அடி நேர்செங்குத்துப் பள்ளங்களிலும் இறங்கி ஏறவேண்டுமென்று சொல்கிறார்கள். சுவாமி முக்தாநந்தா இந்தப் பரிக்ரமத்தை யாரும் செய்தல் கூடாது. செய்தால் உயிருக்கு ஆபத்து என்று வற்புறுத்திச்

சொன்னார்கள். சுற்றளவு 8 மைல்கள்தாம். வெளிப் பரிக்ரமத்தில் 13 சுற்று, 21 சுற்று வந்தவர்களுக்குத்தான் இதைச்செய்ய அனுமதி கிடைக்குமாம்.

## கயிலைமலையின் இயற்கை அமைப்பு :

வெளிப்பரிக்ரமத்திற்கு வெளியே மேற்குத் திக்கில் ஙியான்றி, ஜுசுன்டோமா, ச்சேபமே, நாம்கேமா, கேசர்டேகா (முறையே நந்தி, கார்த்திகேயர், விநாயகர், காகபுசந்தி) என்ற கிகரங்களும், வடக்கே தேராபூக்கில் தக்கள்யோலா, சரோக்டாங்க்ச்சேன், கிழக்கில் ட்சேரிங் சேங்கா, மேன்லா ஃபூடாங் சிகரங்களும் இருக்கின்றன. இவை எல்லாம் 18,000 அடிக்குமேல் உயரமுள்ளவை.

அடுத்து வெளிப்பரிக்ரமத்தின் மேற்கில் நந்திகும்பா, வடக்கில் தேராஃபூக், கிழக்கில் சுண்டல்ஃபூக் (சுதல்ஃபூக் என்றும் சொல்லலாம்), தெற்கில் சிலுங்கும்பா (தர்ச்சனுக்கு மேலே) அதற்குமேலே கேங்க்டா கும்பா என்னும் ஐந்து மடங்களும் இருக்கின்றன.

பிரதான சிகரமுள்ள கயிலை மலையின் நடுவில் கயிலைச் சிகரமும் அதை ஒட்டி மேற்கில் டிஜங் (தேவியின்) சிகரமும், இவைகளுக்கு வடக்கில் சக்ன தோர்ஜி (வஜ்ரபாணி - காவலர்), சேன்ரேசி (அவிலோகிதேஸ்வரர் - கருணைவடிவு), ஐம்ப்யங் (மஞ்சு கோஷ் - ஞானமயமான உடம்பேடுத்தவர்.) ஷவாரி, சோகல் நார்சாங் என்னும் குட்டிச் சிகரங்களும், தெற்கில் முன் வரிசைகளில் ஃபக்ன சிமோட், ஃபக்ன, கண்டோ (துர்க்கை, காளி), அதற்குத் தெற்கில் குரு ரிம் போஷி சத்தூர் (தக்ஷிணாமூர்த்தி). அதற்குத் தெற்கில்

கோம்போ ஃபாங், நேடேன் யேலக், ஜஉங், அதற்குத் தெற்கில் குயாகாங், சங்கே டோங்கு — ஷுக்டே, சகே டோங்கு ஃபூடாங் முதலிய பல தெய்வீகக் குட்டிச் சிகரங் களும் இருக்கின்றன. பிரதான மூர்த்தியைச் சுற்றி நம் திருக்கோயில்களில் அமைந்திருக்கும் சுற்றுக்கோவில் மூர்த்தங்களுக்கு ஒப்ப இவை அமைந்திருக்கின்றன.

### கபாலா ஏரி :

இவையன்றி ட்சோ கபாலா (ட்சோ கவாலி) என்ற போதுப் பெயர் கொண்ட இரு சிறு நீர்த்தேக்கங்களிருக் கின்றன. தனித்தனியே ராக்தா, தூர்ச்சி என்று பெயர் பெறும். அவற்றில் ராக்தா என்பது கருநிறத்தண்ணீர் உடையதென்றும், தூர்ச்சி வெள்ளை நிறத்தண்ணீர் உடைய தென்றும் சொல்லப்படுகிறது திபேத்திய கைலாச புராணத்தில் இவைகளைப் பற்றியும் விரிவாகச் சொல்லப் பட்டிருக்கிறது. ராக்தாவின் தண்ணீர் திபேத்திய மது-சாங்கைப்போலக் கருப்பாகவும், தூர்ச்சி பாலைப்போல வெளுப்பாக இருக்குமென்றும், கயிலாயத்தின் சாவி தூர்ச்சி ஏரியிலும், மானசத்தின் சாவி நந்திகும்பாவின் அருகில் உள்ள லாங்சேன் ஃபூக் குகையிலும் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. தூர்ச்சி பைரவர் ஸ்தானம். இங்கு வருவோர் கரையில் ஒதுங்கும் வெள்ளை மண்ணைப் பிரசாதமாக எடுத்துச்செல்வர்.

### தெற்கு முகம் - அகோரம் :

தெற்கு முகத்தின் அடி இடத்துக்கு சேர்டுங் சூக்சும் என்று பெயர். இங்குப் பகல் உச்சி வேளையில் பெரிய பெரிய பனிக்கட்டிகள் மலை உச்சியிலிருந்து வெடித்து வந்து கடும் வேகத்தில் சீறிச் சிதறிவிழுமாம். அப்பொழுது

அதைப் பார்க்கவும் அணுகவும் மிகவும் பயங்கரமாக இருக்குமாம். அப்பனித்துண்டு நம்மீது விழுந்தால் நம்மை நசுக்கிக்கொன்றுவிடவும் கூடும். இதுபோன்ற பல கொடுந் துன்பங்கள் இந்த உட்பரிக்ரமத்தில் நிகழக் கூடும்.

## பிரமன், நந்தி :

தேவியின்சிகரத்திற்குத் தெற்கில்உள்ளசிகரம் ஃபக்ஞ சிமோட் (த்யூ-புஞ்சுங்-ஹனுமான்ஜு) என்று பெயர்பெறுவதாகவும், மனித உற்பத்திக்கு ஆதி காரணமானதென்றும் (பிரும்மா) கயிலாய புராணத்தில் சொல்லப்படுகிறது. நேடேன் யேலாக் ஜூங் என்பது நந்தி படுத்திருப்பதைப் போன்ற உருவ அமைப்புடையது. தெற்கு முகத்தில் உள்ள நந்தி இது. கயிலை மலையின் உட்பகுதிகளில் உள்ள சிகரங்கள்தாம் மண்டபங்களாகவும் பிறவாகவும் வெளியிலிருந்து பார்ப்பதற்குத் தோற்றமளிப்பனவாகும்.

## கயிலைநதிகள் :

கயிலையைச் சுற்றியுள்ள நதிகள் மேற்கில் லா சூ (தேவநதி). வடமேற்கில் பெலுங் சூ துங்லுங் சூ, என்னும் இருநதிகள் இதில் வந்து கலக்கும். இது(லா சூ) கயிலையின் வடபுறத்தில் சிந்து உற்பத்தி ஸ்தானத்துக்குச் செல்லும் வழியில் உற்பத்தியாகி வடக்கு மேற்கு இரு பிராகாரங்களிலும் ஓடிவருகிறது. இதுவல்லாது டோல்மா சூ என்ற சிற்றாறு கௌரிகுண்டத்தில் உற்பத்தியாகி ஓடி வந்து இதில் கலக்கிறது. கிழக்கில் ஸோங் சூ (Zhong chu) (திருவடி நதி) என்னும் நதி வடகிழக்கில் உற்பத்தியாகி ஓடிவருகிறது. (Shoe - dropping river) திருவடி கழன்ற நதி என்று மறு பெயருடையது. ஹம் ஹுங் கி சூ (Hum - hung - gi - chu) என்ற பெயருமுண்டு.

கயிலைப் பிரதான மலையில் சிலுங் சூ, கேங்க்டா சூ இரண்டும் கலக்குமிடத்திலிருந்து உமா சூ என்ற பெயரோடு ஓடி தர்ச்சூங் சூ என்பதை ஏற்று தர்ச்சன் சூ என்ற பெயர் பெற்று ஸோங் சூவில் கலக்கிறது.

சிலுங் சூ நேரே கயிலை தெற்கு அடிவரையிலிருந்து ஓடிவருவது. கிழக்கில் கண்டோ துர்க்கை ஸங்லாங் நதி என்பது கண்டோ சிகரத்தின் அருகில் உற்பத்தியாகி ஓடி வந்து ஸோங்சூவில் கலக்கிறது. இது கிழக்குப் பிராகாரத்தில் வழிநடுவில் குறுக்கே ஓடுகிறது. இவைகளல்லாது வடக்கே வடக்கு முகத்திலிருந்து சாஸ்ஜம், ஜம்யாங்கிலிருந்து போலுங், கண்டோவிலிருந்து கண்டோ (துர்க்கை) என்னும் பனி ஓடைகள் தோல்மா சூவில் வந்து கலக்கின்றன. இவையெல்லாம் சேர்ந்து தெற்கு முகத்தில் புங்துவில் கலந்து ராக்ஷஸ்தாலை நோக்கி ஓடுகின்றன. மிகப் புநிதமான தீர்த்தங்கள் இவை.

நந்தி கும்பா :

இது மேற்குப் பிராகாரத்தில் அமைந்திருக்கும் மடம். நியாங்தி, நியான்றி என்றும் நந்தி, நியாம்பே - ரிஸான் (Nyembo-rizon) என்றும் வழங்குவர். இந்துக்கள் நந்தி என்பர். நியான் என்றால் திபேத்திய புராணத்தில் வரும் தேய்விக (Oris Ammani) ஆடு; ரி - மலை : ஆட்டு மலை. அத்தேய்விக ஆடு இங்கு வந்து மறைந்துவிட்டது. அந்த இடத்தில் உண்டாக்கப்பட்ட மடம். இதன் எதிரே லாசூவில் நாட்டு மரப்பாலம் ஒன்றிருக்கிறது. அக்கரையில் கயிலை மலையில் பேமேஃபூக் என்ற குகை இருக்கிறது. இந்த மடத்தைச் சுகு கும்பா என்றும் சொல்வர். இது உயரமான இடத்தில் அமைந்திருக்கிறது. இங்குள்ள

பிரதான தேய்வம் ச்சுகும்போஷி. வேள்ளை சலவைக்கல் லால் ஆனது. அதன் இருபுறமும் பேரிய யானைத் தந்தங் கள் முழு அளவில் உள்ளவை வைக்கப்பட்டிருக்கின்றன. 54 அங்குலம் உயரம். அங்கு பூடானிய லாமா ஙவா நாங் யால் (Ngava - Nangyal) என்ற திருவுருவும், காங்ரி லாப்சேன், மகாகாளி, மகாகாளர் திருவுருவங்களும் இருக்கின்றன. ஙவா - நாங்யால் என்னும் பூடானிய சந்நியாசி இம்மடத்தை 300 ஆண்டுகளுக்கு முன்னே கட்டியதாகச் சோல்லப்படுகிறது. ஸோரவார் சிங்கிட மிருந்து கைப்பற்றப்பட்ட யுத்தக்கருவிகளும் சரித்திரச் சின்னங்களாக இங்கு வைக்கப்பட்டிருப்பதாகச் சோல் கிறார்கள். இங்குள்ள ஒரு கண்ணாடியில் கைலாச சிகரங்கள் எல்லாவற்றையும் பார்க்கலாமாம். இதனடியில் லாங்சேன் ஃபூக் என்ற குகையும் இருக்கிறது. அதில் தான் மானசசரோவரத்தின் சாவி இருப்பதாகச் சோல்லப் படுகிறது.

## தேரா ஃபூக்: (திரா ஃபூக்): திதின் ஃபூக்:

வடக்கு முகத்திற்கெதிரே அமைந்த மடம். இங்கு முக்கிய வழிபடும் தேய்வம் சக்ய பேண்டே. கயிலைப் பரிக்ரமத்தை இவ்விதம் சேய்தல் வேண்டுமேன்று கண்டு திட்டம் சேய்த முதல்வர் கேவா - கோசாங்பா (Geva Gozangpa) திருவுருவமும், மடத்தின் முன்னிடத்தில் ஒரு கோடி மரமும் இருக்கின்றன. இங்குக் கயிலை மலையானின் முழுத்திருவுருவம் விராட் (இலிங்கத் திரு மேனி) நிலையில் நமக்குக் காட்சி அளிக்கும். இம்மடத்தின் மேல்தளத்தில் நின்று பார்த்தால் கயிலைத் தோற்றம் மிக அற்புதமாக இருக்குமேன்று சோல்கிறார்கள். இங்கு நின்று கண்ட பலரும் நேரம்போவது தேரியாது காட்சியில்

மயங்கி இரவு பகல் தெரியாது பார்த்துக் களித்திருக்கிறார்கள். அந்நிய மதத்தினர், அந்நிய நாட்டினர் நிலையே அப்படி.

கயிலை வடக்கு முகத்தின் இருபக்கங்களிலும், இடது கைப்புறத்தில் (சக்யதோர்ஜி) வஜ்ரபாணி, வலதுகைப் புறத்தில் சென்ரேசி (அவலோகிதேஸ்வரர்) என்னும் சிகரங்களும், அடுத்து ஜம்ப்யூங் (மஞ்சுகோஷா) முதலியனவும் காணப்படும்.

## திரிபுரம் எரித்தல் :

தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்துன்மாலி என்ற இவ்வசுரர்கள் தாரகாசுரன் குமாரர்கள். சிவபூஜா பலத்தால் பொன், வெள்ளி, இரும்புக் கோட்டைகளைப் பெற்றனர். அவை அவர்கள் நினைத்த இடத்துக்குப் பறந்துசெல்லும் சக்தி உடையவை. அவர்கள் அக் கோட்டைகளுடன் பறந்துசென்று தேவர்களைத் துன்புறுத்தி வந்தார்கள். எல்லாத் தேவர்களும் சிவபெருமானிடம் முறையிட்டுக் கொண்டார்கள். சிவபெருமானிடத்தில் அவர்களுக்குள்ள பற்றுக் குறைந்தால் அவர்கள் செல்வங் குறைந்தழிவர் என்று கூறக்கேட்ட தேவர்கள் விஷ்ணுவினிடம் அதை முறையிட்டுக் குறையிரந்தார்கள். விஷ்ணு புத்தராய் அவதரித்து நாரதமாமுனியைச் சீடராகக் கொண்டு திரிபுராதிகளிடம் சென்று அவர்கள் மனம் மயங்கச்செய்தார். மனம்மாறிச் சிவப்பற்று அவர்களுக்குக் குறைந்தது. இந்நிலை அறிந்து தேவர்களை அழைத்துத் தாம் திரிபுராதிகளைப் போரில் வெல்லத் தேர் கொண்டு வருமாறு பணித்தார் சிவபெருமான். பல தேவர்களையும் தேர் உறுப்புக்களாக்கிச் சேர்த்து, பிரமனைத் தேர்ச் சாரதியாகவும், மேருவை வில்லாகவும், விஷ்ணுவை

சரமாகவும் ஆக்கிக்கொண்டு யுத்தத்துக்கு எழுந்தருள யிருந்தார். அப்போது விஷ்ணுவின் மனதில் தோன்றிய ஒரு சிறுஎண்ணத்தையும் அதேபோன்று மற்றமற்றதேவர்களும் எண்ணியதையும் திருவுளத்தில்கொண்டு பெருமான் சிரித் தார். மூன்றுகோட்டைகளும் எரிந்து அழிந்தன. தம்முடைய மடமையை எண்ணித் திரிபுராதிகள் மூவரும் வந்து திருவடி களில் சரணடைந்தார்கள். அவர்களில் தாரகாக்ஷன், கமலாக்ஷனைத் தமது கோவிற் காவலராக்கி வித்யுன் மாலியைத் தம் திருநடத்திற்குக் குடமுழா முழக்கவும் நியமித்துக்கொண்டார். இதனை

மூவெயில் செற்றஞான்(று) உய்ந்த மூவரி லிருவர்
நின்றிருக் கோயிலின் வாய்தல்
காவ லாளரென் றேவிய பின்னை
யொருவன்நீ கரிகாடரங் காக
மானை நோக்கியோர் மாநடம் மகிழ
மணிமு ழாமுழக் கஅருள் செய்த
தேவ தேவநின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூ ருளானே.

என்று சுந்தரமூர்த்திசுவாமிகள் விளக்கமாகச் சிறப்பித்துக் கூறியிருக்கிறார்கள்.

கயிலைச் சிகரங்களிலிருந்து எப்பொழுதும் பெரிய மணிகள் (நவரத்தினங்கள்) உதிர்ந்து விழுவதாகவும் அவைகள் மிக்க ஒளியுள்ளவை என்றும் சொல்கிறார்கள்.

## சிந்து வழி:

தேராஃபூக் கணவாய் வழியேதான் சிந்துநதியின் உற் பத்தி ஸ்தானத்துக்குப் போகவேண்டும். அந்நதி உற்பத்தி இடத்தில் அமரநாதத்தில் உள்ளதுபோன்றே பனிஉருவில் பெருமான் எழுந்தருளியிருப்பதாகச் சொல்லப்படுகிறது.



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
கயிலைநதிக்கரையில் பெருமானைப் பிரதிஷ்டை செய்து
அபிஷேகஞ் செய்தல்



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
திருக்கயிலையின் மேற்குமுக தரிசனம் செய்தருளல்



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
கயிலைநதியில் பெருமானை விசர்ஜனம் செய்ய எழுந்தருளல்

ரி-ரா-புரி :

தேராஃபூக்குக்கு மறுபெயர் ரிராபுரி (RI-RA-PURI). யாக்பசுவின் கொம்பு என்ற பொருளில் அமைந்தது. பூடானியலாமா கீர்வா கோட்சாங் பா (Girva-Gott-sang-pa) என்பவர் கயிலே யாத்திரையை மேற்கொண்டு வந்தார். கயிலேயை வலம் வரவேண்டுமென்று விரும்பினூர். அப்பொழுது இங்கெல்லாம் காடடர்ந்திருந்தது. வழி தெரியாது திகைத்து நின்ருர். கவலேயோடு பெருமானைப் பிரார்த்தித்தார். அப்பொழுது அங்கே ஒரு பசு வந்து நின்று ஓடத் தலேப்பட்டது. அதைப் பின்பற்றி இப் பெரியவரும் சென்ருர். இப்பொழுதுள்ள பரிக்ரம வழியில் அவரை அப்பசு இட்டுச்சென்று இங்கு வந்ததும் இங்குள்ள மலேவெடிப்பில் மறைந்துவிட்டது. ஆனுல் அதன் கொம்புகளிரண்டும் வெடிப்புக்களின் மேற்பகுதியில் தங்கிவிட்டன. அந்த இடத்தில்தான் இந்த மடம் கட்டப்பட்டிருக்கிறது. புத்தபிரானின் அன்னே வஜ்ர வராகியே அப்பசுவாக வந்து வழிகாட்டியது என்று அச் சமயநூல்கள் சொல்லுகின்றன. அந்தத் தேவி காட்டிய வழியில்தான் இப்பொழுது பலரும் கயிலேயை வலம் வருகின்றனர். நமது சமய வழியிலும் அன்னே பராசக்தி தானே திருவருள் சக்தி. அவ்வருள் வழியேதான் நாம் நடத்தப்படுகிறேம். செலுத்தப்படுகிறேம்.

சுண்டலஃபுக்: சுதலஃபுக் :

கிழக்கு முகத்தில் அமைந்தது. பௌத்தசமய சித்தர் ஜெட்சும் மில்ரேபாவைப் பிரதான தெய்வமாகக் கொண்டது. இங்கு ஙவா நாம்க்யால் திருவுருவமும் மற்றும்பலவு மிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இங்கே மடத்தின்

பக்கத்தில் 7 அடி நீளமுள்ள சதுரக்கல் ஒன்று கிடக்கிறது. அதை மில்ரேபாவின் கைத்தடி என்று சொல்கிறார்கள். அக்கல்லைத் தூக்கித் தம்முடைய உடல் வலிமையைப் பலரும் சோதித்துப் பார்த்துக்கொள்வர் என்றும் சொல்லப்படுகிறது. இங்கும் ஒரு குகை இருக்கிறது. மில்ரேபா இங்குவந்து தங்கிப் பல அற்புதங்களை நிகழ்த்தியதாகச் சொல்லப்படுகிறது. ஆகையால் அற்புதங்கள் நிறைந்த குகை என்று பெயர் பெறுவதாயிற்று. சுதல் (Zuthul) = அற்புதம்; ஃபூக் (Phuk) = குகை. மில்ரேபா திபேத்திய குருபரம்பரை நூல்களில் சிறப்பான இடம் பெற்றவர். எல்லோருடைய வணக்கத்துக்கும் உரியவர். பெரும் புலவர். பல நூல்கள் செய்திருக்கிறார். அவரைப்பற்றிப் பல புராணங்கள் எழுந்துள்ளன.

சிலுங், கேங்க்டா, என்ற இரு மடங்கள் தெற்கு முகத்தில் உட்பரிக்கிரமத்தில் அமைந்தவை. அங்குத்தான் உட்பரிக்ரமம் செல்வோர் அனுமதி பெறுதல் வேண்டும். கேங்க்டாவில் தோர்ஜி, கர்மோ (Garmo), வெள்ளை வஜ்ரா முதலிய மூர்த்தங்களிருக்கின்றன.

## தர்ச்சன் :

அங்குத்தான் இந்தக் கயிலை நிர்வாகத்தை நடத்தி வரும் லாமா மடமும், பூடானிய கவர்னரும் இருக்கிறார்கள்.

## ஆட்சி :

200 ஆண்டுகளுக்கு முன்னே கயிலையை வலம்வந்து தங்கியிருந்தார் ஒரு பூடானிய லாமா. தவசீலர் அவர். அப்பொழுது அங்கே இந்த நாட்டை ஆளும் தலைலாமா வந்ததாகவும், இவருடைய உண்மை பக்தியைக்கண்டு வேண்டுவது யாது என்று கேட்டதாகவும், கயிலைப்பகுதி மட்டிலும்

தம்முடைய ஆட்சியில் இருக்கவேண்டும் என்று கேட்டுப் பெற்றதாகவும், அதிலிருந்து இங்கே பூட்டானிய நிர்வாகம் நடைபெறுவதாகவும் சொல்லப்படுகிறது. கயிலைப்பரிக்ரமத்தில் உள்ள பகுதிகள் மட்டும் பூடானிய அரசாங்க மேற்பார்வையில் உள்ளன. அதனைச்சூழ உள்ளவை திபேத்திய அரசாங்கத்திற்குட்பட்டன.

## பான் போவும் லாமாவும் :

கயிலையின் தெற்கு முகம் நடுவே ஏணியைச் சார்த்தியதுபோலப் படிப்படியாக ஏறக்கூடிய அமைப்புடையதைப் போலவும், உயரே அன்னம் அமர்ந்திருப்பது போலவும் காட்சியில் விளங்கும். அது ஒரு புராணக் கதையை ஒட்டி அமைந்ததாகும்.

பழைய பான் போ (Bon-bo) வகையைச்சேர்ந்த சந்நியாசி ஒருவரும், புதியலாமாமதத்தைச் சேர்ந்த செவ்வாடையுடுத்த சந்நியாசி ஒருவரும் கயிலை யாத்திரைக்கு வந்தார்கள். தர்ச்சேனில் சந்தித்தார்கள். இருவரும் சிறந்த ஞானத்தவச் செல்வர்கள். இருவருள்ளும் யார் கொள்கையில் உயர்ந்தவர்கள் என்ற எண்ணம் எழுந்தது. சொல்லால் பேசவில்லை. செயலால் காட்ட முற்பட்டார்கள். மறுநாள் சூரிய உதயத்தில் யார் கயிலைச்சிகரத்தின் உச்சியில் ஏறி நிற்கிருரோ அவரே பெரியவர்; அவர் கொள்கையே சிறந்தது என்று பேசிக்கொண்டார்கள்.

சூரியோதயத்திற்குள் சிகரத்தை எட்டிவிடவேண்டுமென்ற எண்ணத்தில் பான்போசந்நியாசி தெற்கு முகத்தில் நேரே உறைபனியில் காலால் நடந்து ஏறத்தொடங்கினுர். மிகுந்த கஷ்டப்பட்டு ஏறிக்கொண்டே இருந்தார்.

சேவ்வாடைச் சந்நியாசி படுத்து நன்ருக அன்றிரவு உறங்கினுர். தேன்முகத்தின் அடிவரையிலேயே படுத்திருந்தார். இரவு நேடுநேரமாயிற்று. அவர் எழுந்திருக்கவே இல்லை. அயர்ந்து நிம்மதியாக உறங்கிக்கோண்டே இருந்தார். பான்போ சந்நியாசி உச்சியை அடைய ஒவ்வோரு கணமும் நடந்துகோண்டே இருந்தார். சேவ்வாடைச் சந்நியாசியின் சீடன் அவரை அணுகி எழுப்பி, “பான்போ சந்நியாசி வேகுதோலைவு ஏறி விட்டாரே, தாங்கள் இன்னும் உறங்கிக்கோண்டே இருக்கிறீர்களே” என்று நினைவுபடுத்தினுன். அப்போழுதும் அவர் படுத்த இடத்திலிருந்து எழவே இல்லை. ‘‘சூரிய உதயமாகும்போது என்னை எழுப்பு’ என்று சோல்லி மீண்டும் ஆழ்ந்து உறங்கினுர். போழுது விடிந்தது. இன்னும் சில அடி உயரமே எஞ்சியுள்ளன பான்போவுக்கு. கடுந்துன்பத்தோடு அப்போழுதும் ஏறிக்கோண்டே இருந்தார்.

சூரிய உதயம் ஆயிற்று. சூரிய கிரணங்கள் கயிலைச் சிகரத்தில்பட்டு ஒளி பேருக்கியது. சீடன் லாமா மதத்தவரை எழுப்பி சூரிய உதயமானதைச் சுட்டிக் காட்டினுன். எழுந்தார்; சூரிய கிரணத்தைப் பிடித்துக் கோண்டு அதன்வழியே சிகரத்தை அடைந்து நின்ருர் யாவரும் வியக்க.

பான்போ அப்போழுதும் சிகர உச்சியை எட்டவில்லை. நடந்துகோண்டேதான் இருந்தார். மேலே சிகரத்தைப் பார்த்தார். அங்கே சேவ்வாடைத் துறவியார் களிப்புடன் நிற்பதைக் கண்டார். உருண்டு விழுந்தார். அவர் கையில் வைத்திருந்த டமருவும் உருண்டுகோண்டேவந்தது. அந்த டமருவை லாமா எட்டிப்பிடித்துக் கையில் ஏந்தி

ஒலிமுழக்கம் செய்தார். அதில் தம்முடைய வேற்றி முழக்கத்தை அறிவித்தார். பான்போ காலால் ஏறிய அடிச்சுவடு பட்ட இடம் கருப்பாக படி அமைப்புப் போலக் கருப்புத் தேரிவதாகச் சோல்லப்படுகிறது.

பண்டி :

பண்டி மனம் உடைந்து கீழே விழுந்த பான்போவை நோக்கி " நண்பரே! வருந்த வேண்டாம் " என்று சோல்லி கயிலேச் சிகரத்திலிருந்து இரண்டு கைகளாலும் பனிக் கட்டிகளை அள்ளிக் கிழக்கே வீசினார். அது மானசத்தின் வடக்கில் உள்ள பண்டி (பன்றி) (Pundi - Punri) மலையில் சென்று விழுந்து அச்சிகரத்தையும் மூடியது. (Pundi) பண்டிமலை 19,664 அடி உயரமுள்ளது. அதைச் சுட்டிக் காட்டி அங்குச்சென்று உச்சியில் வசிக்கும்படிச் சோன்னார் லாமா. " இதேபோல அந்தச் சிகரமும் புனிதமானது தான். அதில் உள்ள பனி உறைவு எந்த நாளில் உருகி மலைவேளிப்படுகிறதோ அன்று கயிலேயிலும் பனி எல்லாம் உருகிக் கற்பகுதி வேளிப்படும். அந்த நாளில் உலகமும் அழிந்துவிடும் " என்று சோல்லிப் பான்போவை அங்கு அனுப்பிவைத்தார். கயிலேயை அவர்கள் நாரி, ரிராப் சேன்போ, கியாங்கார், காங்திசே, திசே, திசி, ரிராப் என்று பேயர் வழங்குகிறார்கள். இங்கே மகாதேவர் வாழ்வதாகவும் சோல்கிறார்கள்.

மறு பிறவி கிடையாது :

இந்தத் தேற்குவாயில் வழியாகவே சுந்தரும் சேரரும் கயிலேப் பேருங்கோயிலுட் சேன்றனர். இராவணன் கயிலேயைப் பேயர்த்த கையடையாளம் மலை உட் பகுதியில்

இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இராவணன் கயிலேயின் அடியிடத்தைப்பெயர்க்கக் கைவிட்ட இடத்தில் முழை இருக்கிறது என்றும், அந்த இடைவெளியில் சீரான உடல் உடையவர் கஷ்டப்பட்டு நுழைந்துசெல்ல முடியுமெனவும், உடல் பருத்தவர் நுழைதல் முடியாதென்றும், அதில் நுழைந்து அப்பால் சென்றவர்களுக்கு மறுபிறவி கிடையாது என்றும் சொல்கிறுர்கள். மேற்கு முகத்திற்கு அடுத்து அதன் முடிவில் உள்ள சிகரமே இராவணன் என்றும் சொல்லப்படுகிறது. அதாவது வடமேற்குப் பகுதியாக உள்ளது.

## தென்னிந்தியர் நிர்வாகம் :

இக்கயிலேயின் நிர்வாகமும், அங்குள்ள மடங்களும் பழங்காலத்தில் தென்னிந்தியர்களிடம் இருந்ததாகவும், அக்காலத்தில் சங்கரர் வந்திருப்பதாகவும், ஊக்கமில்லாது அவ்வழிபாட்டை விட்டுவிட்டு அவர்கள் ஓடிவீட்டதாகவும் செய்தி சொல்லப்படுகிறது. இதற்கு ஆதாரங்கள் பல ஜோஷி மடத்தில் இருப்பதாகச் சுவாமி வித்தியாநந்தா சொல்கிறுர்கள். பிறகு லாமா மதத்தினர் அதைக் கைப்பற்றி இங்குள்ள மடங்கள் பலவும் முறை ஏற்பாடு செய்துகொண்டு கயிலே வழிபாடுகளேச் செய்து வருவதாகவும் சொல்லப்படுகிறது. மாலே நேரத்தில் எல்லா மடங்களும் ஒரு குறித்த நேரத்தில் கயிலேமலேயானுக்கு வழிபாடுகள் நடத்துவது உண்டு. மிகுந்த செல்வம் படைத்தவர்கள், புநிதமான பெரியோர்கள் இறந்தால் அவர்களின் சடலங்களேச் சுட்டெரித்து அந்தச் சாம்பலே எடுத்துவந்து கயிலேப்பகுதியிலிட்டு சமாது (Chorten) கட்டிவைப்பார்களாம். இதனுல் அவ்வுயிர் புநிதமாகி ஞானமயமாகிச் சிரஞ்சீவிகளாகப் புத்தரிலே அடைந்துவிடும் என்றும் நம்புகிறுர்கள்.

### உலக அச்சாணி :

இம் மலையைச் சுமேரு என்றழைப்பர். சந்திர சூரியர் களும் நக்ஷத்திரங்களும் நாள் முழுவதும் இதையே சுற்றிச் சுற்றி வருகிறார்கள். பல உலகங்கள் இருக்கின்றன. அவற்றில் இந்நிலவுலகும் ஒன்று. இது அந்த மேருவைச் சுற்றித் தட்டையாக வட்டவடிவில் அமைந்திருக்கிறது. அதன் நடுவில்தான் மேரு அமைந்திருக்கிறது. இது உலக அச்சாணி. ஜம்புலிங்கத்தின் வடகோடியில் கூர் வடிவில் அது அமைந்திருக்கிறது. சூரிய சந்திரர் இதை நடுவாகக் கொண்டு சுற்றுவதில் சூரியன் உள்ள பக்கம் பகல், சந்திரன் உள்ள பக்கம் இரவாகிறது. ரிராப் (மேரு) ஆகாயத்தைத் தொட்டுக்கொண்டிருக்கிறது.

### ஜம்புலிங் :

மேருவைச் சுற்றி நான்கு தீவுகள். ஏழு புனித மலைகள். மேருவைச் சுற்றியுள்ள நிலப்பகுதி ஜம்புலிங்கம் என்று பெயர். ஜம்புலிங் என்ற தேசம் இதை ஒட்டியும் சற்று விலகியும் அமைந்திருக்கிறது. அதைச்சுற்றி ஏழு கடல்கள்; நிறத்தால், ருசியால் வேறுபட்ட தண்ணீரை உடையவை. முற்பிறவியிலே செய்த பெரும் புண்ணியத்தின் வாய்ப்பாகப் பெரிய ஞானிகள் மற்று எங்கிலும் விட ஜம்புவில் அதிகமாக வந்து அவதரிக்கிறார்கள். அங்கே ஞானிகளும் ஆசாரியப் பெருமக்களும் பலர் இன்றும் வாழ்ந்துவருகிறார்கள். இங்குப் பிறந்தால்தான் ஆன்ம ஈடேற்றம் கிடைக்கும்.

### ரிராப்பில் :

மேருவுக்கு வடக்கிலுள்ள தீவில் உள்ள மனிதர் களுக்கு மதம், கோள்கைகள் எதுவும் கிடையாது.

நன்மை செய்யும் நாட்டமே அவர்களுக்கு இராது. பாவிகள் தாம் அங்கே பிறவி எடுக்கிறார்கள். மேற்கி லுள்ள தீவில் செல்வமும் அழகும் மலிந்துகிடக்கும். மற்ற இரண்டு தீவுகளிலும் நல்லவர்களும் கெட்டவர் களும் நிறைந்திருப்பர். ஆனால் அவர்கள் உயர் நற்பதவிகள் அடையமுடியாது. லாக்கள் ( சுரர்கள் ) அவருடைய தவ வலிமைக்கு ஏற்றவாறு ரிராப்சேன்போவில் ( கயிலையில் ) படிப்படியாக உயர் வரிசைகளில் இடம் பெறுவர்.

## கிரகங்களில் உயிர்வகை :

சூரியன், சந்திரன் முதலிய கிரகங்கள், சில நக்ஷத் திரங்கள் இவைகளில் சில உயிர்வர்க்கங்கள் பெருகப்பெற் றவைகளாக, சுரர்களும் ( லா ), அசுரர்களும் ( லாமைன் ) வசிக்கும் இடங்களாக அமைந்திருக்கின்றன.

உலகம் தட்டையாக நீண்ட சதுரமான அமைப் புடையது. கிழக்கு மேற்கில் ரேகைகள் உடையது. கிழக்கு மேற்கு நீளத்தைவிட தெற்கு மேற்கு நீளம் இரண்டு பங்குள்ளது. இதுதான் ஜம்புலிங்கம், இவ்வித மாகவும் சொல்லலாம். உலகைச் சுற்றிப் பெருமதில்கள் கிழக்கு மேற்காக அடிநுனியால் அரைவட்ட வடிவுடைய தாக அமைந்திருக்கின்றன.

## கயிலாய தரிசனத்தால்...

கயிலை தரிசனம் செய்து இறந்தால் இப்பிறவியிலேயே இறந்த காலம் வருங்காலங்களில் செய்யும் பாவங்கள் அழி யும் என்ற நம்பிக்கையும் சாமானியர்களிடம் பரவியிருக் கிறது. அதற்கு உதாரணமாக அங்கு நிகழ்ந்த கதை ஒன்று.

ஷ்ரமண - ஏகை - காவாகுச்சி என்னும் ஜப்பானியத் துறவி கண்டது. அவர் கயிலையை வலம்வரும்போழுது கம்பா (கொள்ளையர் தலைவன்) ஒருவனும் வலம்வந்தான். அவன் உணர்ச்சிவயப்பட்டு இரைந்து வாய்விட்டுத் தன் பிரார்த்தனையைச் சோல்லிக்கோண்டான். "பேரிய புத்த பகவானே! புத்தசக்யமுனியே! கயிலாய யாத்திரையாலும், கயிலாய தரிசனத்தாலும் முன்சேய்தனவும், இனிச்சேய் வனவுமான பாவங்கள் எல்லாம் ஒழிகின்றன. நானே பல தீமைகளைச் சேய்திருக்கிறேன். பேண்களைக் கற்பழித்தல், கடத்திச் சேல்லுதல், கோள்ளை கோலைகள் முதலிய எத்தனையோ தீமைகள். அவைகளால் ஏற்படும் பாவங்கள் இந்த யாத்திரையாலும் தரிசனத்தாலும் (இப்போழுது சேய்யும் தவம்) கழிந்துவிட்டன. இனி என் ஊருக்குப் போனதும் முன் சேய்த பழக்கத்தால் வாழ்க்கையில் இனியும் அவைகள் அவ்வளவையும் சேய்யும்படி நேரிடலாம். ஆகவே, இறைவனே! உன்னைத்தரிசித்ததால் அப்பாபங்களுக்கு மன்னிப்புக்கிடைக்கும் என்றும் நம்பு கிறேன். பரிசுத்தமடைந்துவிட்டேன்; புநிதநிலையை அடைந்துவிட்டேன்" என்று உள்ளபடியே மனம் நிறைந்த பக்தியோடு உடல் கம்பிக்க கண்களில் நீர்வாரச்சோல்லி வேண்டினான். இதுபோன்றே இந்தத் திருமாமலை மிசுப் புநிதமானதாக எல்லாம், அளிக்கவல்ல பரம்போருள் உறையும் இடமாகத் திபேத்தியர் கருதுகிறார்கள்.

## நாங்கள் கண்ட நற்காட்சி :

கயிலை வழிபாடு முடிந்தபிறகு பிரசாதங்கள் எல்லோருக்கும் வழங்கப்பட்டன. திருக்கை வழக்கமும் ஆயிற்று. அன்று எங்கள் உறுதியைச் சோதிக்கும் சேயல் ஒன்று

நடந்தது. அதில் நாங்கள் வெற்றிபெற்ருேம். அவனருள் இருக்க எங்களுக்கு வருத்தம் ஏது ?

பரிக்ரமத் தொடக்கம் :

நந்திகும்பா-மேலைப்பிரகாரம் 5, 6 பர்லாங் அகலமும் 7, 8 கல் நீளமும் உடையது. உச்சிப்பொழுதில் நாங்கள் நந்தியைவிட்டுப் புறப்பட்டோம். அங்குக் கயிலைநதிக்கு இப்பால் ஒரு சுற்றுவழியும், அப்பால் கயிலை மலையை ஒட்டி ஒரு வழியும் இருக்கின்றன. வெளிப்புறவழியில் செல்வதால் கயிலைச் சிகரங்களை நன்ருகப் பார்க்கமுடியும். நாங்கள் சென்றது அவ்வழி, சிறு சிறு கறடுகளின் இடையிலும், சரளைக்கற்களின் வழியேயும், ஆற்றங்கரையிலுமாக வழிசெல்லுகிறது. 2, 3 கல் தொலைவுசென்றதும் சருக்கு உடைய ஒரு மண்சரிவுவழியேயும் செல்லவேண்டிவருகிறது. அதைத் தாண்டியதும் தண்ணீர் மழை அன்று பெய்ததுபோல இன்றும் பெய்தது. அங்குப் பக்கத்தில் இருந்த மலைக்குகையில் தங்கியிருந்து மழைவிட்டதும் புறப்பட்டோம்.

இராவண சிகரம் :

வடமேற்குமூலையில்வந்ததும் அங்கு முதலில் இராவண சிகரம் காட்சி அளிக்கிறது. அதற்குக் கோம்போ ஃபாங் அல்லது இராவணபர்வதம் என்றுபெயர். அதை அடுத்து கயிலைநாதனின் பனிமுடிய சிகரமும் மிக அண்மையில் தெரிகிறது. அரைவட்ட அமைப்பில் கயிலைச் சிகரம் விளங்குகிறது. அங்கேயே நின்று தரிசித்துத் தோத்திரங்கள் சொல்லி வழிபட்டு மேலே சென்ருேம். நந்தியில் நாங்கள் புறப்பட்டபொழுது கயிலைச் சிகரத்தை மேகங்கள் மறைத்துவிட்டிருந்தன. ஆனல் வடமேற்கு மூலையில்

நாங்கள் வந்தபோழுது மாலே மணி 6. மாலேச் சூரியன் அம்மலேயைப் போன்மலேயாக்கிக் காட்சி வழங்கினுன். மேகங்கள்கலேந்து மிகத் தேளிவாகத்தேரிந்தது திருமலேச் சிகரம். அங்கு அடிமுதல் முடிவரை நன்ருகத்தேரிகிறது. சிதம்பரம் சிற்சபை மண்டப அமைப்பில் கோடுங்கைகள் குறட்பூதங்கள் முதலியன அமைந்ததுபோல இருக்கிறது. தேற்கு முகத்தின் எதிரே நந்தி அமைந்திருப்பதும் இங்கிருந்து தேரிகிறது.

## இலங்கை மாமன்னன் :

இராவணன் கயிலேயைப் பேயர்க்கவந்த வரலாறு நமது இலக்கியங்களிலும், இதிகாசங்களிலும், புராணங் களிலும், திருமுறைகளிலும் போதுவாக எல்லா நூல்களி லும் விரிவாகச் சோல்லப்பட்டிருக்கிறது. இதேபோன்ற வரலாறு லாமா மதத்தினரும் சோல்லுகிருர்கள்.

தன் மூத்தோனுகிய குபேரனே இலங்கையைவிட்டு ஒட்டி அந்நாட்டின் அரசனுய் விளங்கினுன் இராவணன். அழியா ஆற்றல் பேற்று அவனியை ஆண்டான். சிவபக்தியிற்சிறந் தவன். திக்விஜயம் சேய்யும்போருட்டுத் தன் புஷ்பகவிமா னத்தில் ஏறிவந்தான். கயிலே அருகில் அதுவந்தது. ஆனுல் அது தடைபட்டுநின்றுவிட்டது. தேர்ப்பாகன் " கயிலேமீது இரதம் சேல்லாது நின்றுவிட்டது. இங்கு மகாதேவர் வீற்றிருந்து அருள்வழங்குகிருர். ஆகையால் அதன்மீது சேல்லாது வலமாகப்போதலே சிறப்பு " என்ருன். அங்கே நந்திதேவர் எதிர்ப்பட்டார். " உமாதேவியாரோடு சிவபேரு மான் வீற்றிருக்கிருர். இதன்மேல் உன்தேரைச் சேலுத்து தல் கூடாது" என்று தடைசேய்து எச்சரித்தார். நந்திதேவ ரைப்பார்த்து வானர முகம் என்று ஏளனம் சேய்தான் அம் மன்னன். நந்திதேவர் சினந்து 'இராவணு ! என்முகத்தை

வானரமுகம் என்று ஏளனம் செய்தமையால் அந்தவானரங்களாலேயே நீ அழிவாய்'' என்று சபித்து அகன்ருர்.

''நம்முடைய புஷ்பகத்தையும் தடைசெய்யவல்லது எது? அது நம்முடைய வலிமைக்கு எம்மாத்திரம்'' என்று சொல்லித் தேரைவிட்டுக் கீழே இறங்கி ஓடிக் கயிலேயைப் பெயர்க்க முற்பட்டான் இலங்கையர்கோன், கயிலேயின் அடி இடத்தில் கையைவிட்டு அசைத்தான். திடீரென்று அம்மலேயில் அசைவு ஏற்பட்டதைக்கண்டு அஞ்சிய உமையம்மை பெருமானைத் தழுவிக்கொண்டாள். தேவ கணங்களும் அஞ்சி நடுங்கின பெருமான் புன்சிரிப்புக்கொண்டு தமது வலதுகாற்பெருவிரலைக் கீழே ஊன்றினுர். (இடது கால் சம்ஹாரத்தைச் செய்வது என்றும், வலது கால் அருளே வழங்கும் திருவடி என்றும் சொல்வர்). அவ்வளவிலே இராவணன் மலேயின்கீழ் அகப்பட்டுத் தலேகள் நெரிந்து, தோள்கள் அழுத்தப்பட்டுக் கதறி அழுதான். ''இவ்விடையூற்றினின்றும் விடுபட்டுய்யும் நெறி உளதோ'' என்று ஏங்கி நெட்டுயிர்ப்போடு வருந்திஞன் அவ்வேளேயில் ''சம்புவே! சாமகானப்பிரியா'' என்று ஒரு குரல் கேட்டது. (கயிலேயில் வாசம் செய்யும் வாகீசமாமுனி இதைச் சொன்னதாகவும், அவரே பிறகு அப்பர் சுவாமிகளாக அவதாரம் செய்ததாகவும் கூறுவர்) தன் தலேகளில் ஒன்றையும் கைகளில் ஒன்றையும் வெட்டி யாழாகச் செய்து மீட்டிக்கொண்டு சாமகீதம் இசைத்தான். பெருமான் திருவுளம் இரங்கியது. இராவணனே அந்தநிலேயிலிருந்து விடுவித்தார் பெருமான். அவன் தனக்கு நீண்ட ஆயுளும் அவர் கைவாளும் தந்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தான். அவன் பெருங்குரலில் அழுதமையால், இராவணன் (அழுதவன்) என்ற நாமத்தையும், நீண்ட ஆயுளேயும்,

சந்திரகாசம் என்ற வாளையும் பெற்ருன்*. அவன் கயிலே அடிவரையில் கையை நுழைத்த இடத்தில் இன்றும் ஒரு முழை இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

இராக்ஷசதஸ்தால் என்னும் ஏரிக்கரையில் அவன் தங்கிப் பெருந்தவம்செய்து அருள்பெற்றதாகத் திபேத்திய புராணங்களிலும் சொல்லப்படுகின்றன. அதனுலேயே அவ் வேரிக்கு லங்காக் ட்சோ (Langak - tso), இராவண ஹிருதயம் (Ravanan Hirt) என்ற பெயர்கள் ஏற்பட்டன என்றும் சொல்லப்படுகிறது.

காட்சி :

இந்த வரலாறுகள் இராவண சிகரத்தைக் கண்டதும், எங்கள் நினைவில் வந்தன. மேற்குப் பிரர்காரத்தில் கயிலேச் சிகரத்திலிருந்து பலபல இடங்களிலும் பனி உருகி சிறுசிறு அருவிகள் வந்து விழுந்துகொண்டே இருக்கின்றன. அதேபோல நந்திமலேயின் உச்சி யிலிருந்தும் பல அருவிகள் வந்து விழுந்துகொண்டே இருக்கின்றன. சில அருவிகள் 400, 500, 1000 அடி உயரத்திலிருந்தும் வந்து விழுகின்றன. இவ்வ

---

* கடுகிய தேர்சே லாது கயிலாய மீது
கருதேலுன் வீர மொழிகீ
முடுகுவ தன்று தன்ம மேனநின்று பாகன்
மொழிவானே நன்று முனியா
விடுவிடு வென்று சென்று விரைவுற் றரக்கன்
வரையுற் றெடுக்க முடிதோள்
நெடுநெடு விற்று வீழ விரலுற்ற பாத
நினைவுற்ற தென்றன் மனனே.

அங்குள்ள அழகான சூழ்நிலையை மேலும் சிறக்கச் செய்கின்றன. ஆனால் அங்குள்ள ஒரு பேரமைதி அச்சமும் அன்பும்கலந்த உணர்வை நம்முள் உண்டாக்குகிறது. தானாகவே பேச்சுக்குறைந்துவிடுகிறது. காட்சிகளைக்காண்பதும் கயிலைச்சிகரத்தையே மனத்தாலும் காட்சியாலும் கண்டுகொண்டே யிருப்பதுவும்தான் முடிகிறது. வேறு வழியில் - இயற்கையில் மனம் பதியவில்லை.

## இந்திரன் :

நந்திமலையின் வடகோடியில் இந்திரன் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. அந்தப்பகுதி ஒரு பெரிய யானை தன் துதிக்கையை முன்னே நீட்டிக் கிடப்பது போன்ற மலை அமைப்புடையது.

## தேரா ஃப்பூக் தங்கல் :

வடமேற்கு மூலையில் வந்து சேரும் சிற்றாறுகளைக் (பேலுங், டுங்லுங் Belung, Dunglung) கடந்து செல்ல வேண்டி வருகிறது. ஆழமும் அகலமும் குறைவாகவே இருந்தாலும் அப்பனித்தண்ணீரில் இறங்குவதும், அது வரும் கடும்வேகத்தில் அதைக் கடப்பதும் யாராலும் முடியாது. யாக்குகள் கூடத் தட்டுத் தடுமாறிச் செல்கின்றன. ஆகையால் யாக்குகளின்மீது ஏறி அவ்வாறுகளைக் கடந்து வடக்குப்பிராகாரத்தில் தேராஃபூக்பகுதியில் வந்து விட்டோம். வடமேற்கு மூலையிருக்கும் கணவாய் வழியேயும் சிந்துநதி உற்பத்தி இடத்துக்குப் போக வழி இருக்கிறது. அங்கு வந்ததும் கயிலையின் மணிமுடி மறைந்து விடுகிறது. கயிலையின் வடக்குவரிசையில் உள்ள வேறுசிகரங்கள் தாம் காட்சி வழங்குகின்றன. இந்தப் பிராகாரம் 4, 5 பர்லாங் அகலமும், 3, 4 கல் நீளமும்

திருக்கயிலாய தரிசன யாத்திரை :



நந்திகும்பா கயிலேநதி - வழிபாடு, 15,500 அடி



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
திருக்கயிலை வடக்குமுக தரிசனம் செய்தருளல்

உள்ளதாக இருக்கிறது. அதன் முடிவில் தேராஃபூக்கும்பா அமைந்திருக்கிறது.

அங்குள்ள மடத்தில் தங்குவதென்ற திட்டத்தில் வந்தோம். அற்குச் சூழ்நிலை ஒத்துவராததால் கயிலை நதியின் கரையில் உள்ள மேட்டில் கூடாரங்களை அமைத்துத் தங்கினோம். மடத்தின் முன்னிடத்தில் கோடி மரமும், மணிச்சுவர்களும் இருக்கின்றன.

### வடக்குமுக தரிசனம் :

நாங்கள் தங்கிய இடத்திலிருந்து கயிலையின் வடக்கு முகம் மிகத்தெளிவாகத் தெரிகிறது. அங்கிருந்து பார்க்கும்பொழுது பனி மூடிய கயிலைச் சிகரம் ஒரு பெரிய இலிங்க அமைப்பாகத் இருக்கிறது அதன் இருபுறத்திலும் துவாரபாலக மலைகளும் இருக்கின்றன. மேலே வெள்ளை ; பதிவுகளில் வெளிர்நீல நிறத்தில் அவ்விலிங்கம் விளங்கு கிறது. நம்மூர்ச் சிவாலயங்களில் மூலஸ்தானத்தில் நின்று தரிசிப்பது போன்ற எண்ணமும் உண்டாகிறது. நம்மை உருக்கும் ஒரு தெய்வீகத் தோற்றம் அமையப் பெற்றிருக்கிறது. சிறிது நேரத்தில் பனிமூட்டம் அதை மறைத்து விட்டது. கூடாரம் அடித்த சிறிது நேரத்தில் அடிக்கடி பெய்யாத தண்ணீர் மழையும் பெய்யத் தொடங்கிவிட்டது. இரவு எல்லோருமாகச் சேர்ந்து ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருமுன்னிருந்து கயிலைப் பதிகம் பாராயணம் செய்தோம். இரவு முழுவதும் நல்ல நடுக்கும் குளிர்.

### விராட் சொரூபம் :

மறுநாள் வியாழக்கிழமை. விடியற்காலையிலேயே கௌரிகுண்ட ஸ்நானம், தரிசனம், கிழக்குமுக தரிசனம்

இவற்றிற்காக எங்கள் பயணத்தைத் தொடங்கினேம். நாங்கள் தங்கியிருந்த இடத்திற்கு அருகில் உள்ள கணவாய் வழியேயும் சிந்துநதி உற்பத்தி இடத்துக்குப் போகலாம். நாங்கள் இருந்த இடம் கடல் மட்டத்தி லிருந்து 16,500 அடி உயரம். இங்கிருந்து நேரே வடக்குமுகத்தை அதன் அடியிடத்திலிருந்து தரிசிக்க அந்தக் காவல் மலைகளினிடையே செல்லவேண்டும். 2, 3 மைல் கடும் ஏற்றத்திலும் பிறகு உறை பனிகளிலும் நடந்து சென்ருல் அங்கே வடக்கு முகத்தின் விராட்சோருபத்தில் அற்புதலிங்கத்திருவுருவைக் காணலாம். ஆனுல் உறைபனி கடத்தலும், கயிலாய சிகரத்திலிருந்து அடிக்கடி பெயர்ந்து சீறி எழுந்து விழும் பரல்களும், பனிக்கட்டிகளும் ஆபத்தானவை என்று சொல்லப்படுகிறது சென்று கண்டால் இறைவனின் அற்புதப் படைப்பைக் கண்டு மெய்ம்மறந்து இருப்பிடம் திரும்பவும் மனமில்லாது நம்மைப் பிணித்து விடுமாம். அங்குள்ள அமைப்புக்கள், உறைபனிகளில் (பனியாலான) இலிங்கத் திருமேனிகள் முதலிய அற்புதக் காட்சிகள் பலவும் காணலாமாம்.

## கயிலைப் பிரசாதம் :

அதிகாலையில் 5 மணிக்குள்ளே காகத்தை - காக புசந்தியைக் கண்டோம். பக்கத்து மடத்திலிருந்து பலரும் கயிலாயப் பிரசாதம் (வெள்ளை மண்), தூமா என்ற செடி காயவைத்ததூள் (பூஜாகாலங்களில் தூபமிட லாமாம்) இவைகளை எடுத்து வந்து விலைக்குக் கொடுப்ப தாகச் சொன்ஞர்கள்.

தங்யூ :

அங்கிருந்து புறப்பட்டு லாசூவைக் கடந்து அக்கரை சேர்ந்தோம். இங்கு ஒரு நாட்டு மரப்பாலம் பேயரளவில் அமைந்திருக்கிறது. மிக உயரத்திலிருந்து போங்கிப் போழிந்து அவ்வாறு ஓடுகிறது. ஆகையால் மிகவும் விழிப்பாக ஓரளவு ஆற்றில் இறங்கியும், நடு இடத்தில் பாலத்தில் ஏறிக்கடந்தும், பின்னும் ஆற்றில் சில அடி தூரம் இறங்கி நடந்தும் கடக்கவேண்டியிருந்தது. அதைத்தாண்டி அக்கரையை அடைந்ததும் மிகவும் கடுமையான மலே ஏற்றம் ஒன்றிருக்கிறது. கறடுகள். பாறைத் துண்டுகள் இவைகளின் வழியே அவ்வேற்றத்தில் ஏற வேண்டும் வழி வளேந்து வளேந்து செல்கிறது. இவ்விதமாக ஒருகல்தோலேவுக்குமேல் மேலே ஏறியதும் அங்கேதங்கிக் களேப்பாறி வழிநடந்தோம். அந்தஇட்ம் தங்யூ (Thangyu).

தூமா :

வழியேல்லாம் வேள்ளேப்பூவை உடைய் தூமச் சேடிகள் வளர்ந்திருக்கின்றன. அவற்றைத்தான் அம் மக்கள் பறித்தேடுத்துக் காயவைத்து பூஜாகாலங்களில் தூபமிடப் பயன்படுத்துகிருர்கள்.

குபேரன் :

இங்கிருந்து உட்பரிக்ரமம்போக வழி பிரிகிறது. இது கேளரி குண்டத்தை ஒதுக்கிவிட்டு கயிலேமலே வழியே சேல்வது. இவ்வழியில் சேன்ருல் உள்ளே உள்ள அமைப்புக்கள் நன்ருகத்தேரியுமாம். இதனருகில் குபேரன் சிகரமிருப்பதாகச் சோல்லப்படுகிறது. 12 முறை

வேளிப்பரிக்ரமம் சென்றவர்கள் 13 ஆவது முறையில் இவ்வழியே செல்லலாமாம். இங்குக் கயிலைச் சிகரம் ஆவுடையாரோடு அமைக்கப்பட்ட இலிங்கம்போலக் காட்சி வழங்குகிறது. இது கிழக்கு முகம்.

## ஞானப் பிழம்பு :

இதற்கப்பால் ஒருகல் ஒன்றரைக்கல் தொலைவில் சிவாசல்துதுப் (Shivachal thuthup) என்ற இடம் வருகிறது. இங்கே திபேத்தியர்கள் முடியிறக்கிக் கொண்டு பல்லடியிலுள்ள ஈறைக்குத்திச் சில சொட்டுக்கள் இரத்தம் சிந்தி அங்கே இறந்தவர்போலச் சிறிதுநேரம் கிடப்பார்களாம். அங்கு உயிர் நீத்தவர் ஞானப்பிழம்பாகிய புத்தராவாராம்.

## வழியில் பூ :

மேலும் 2, 3 கல் தொலைவு கற்பாறைத் துண்டுகளின்மீது நடந்துபோதல் வேண்டும். இங்கு அக்கற்களின் இடையில் நதித்தண்ணீர் ஒடிக்கொண்டே இருக்கிறது. அதன் சலசலப்புச்சத்தம் மட்டிலுமே கேட்கும். தண்ணீர் கண்ணுக்குப் புலப்படாது. வழி களில்நடுநடுவில் வெளிர்ஊதாத்தாமரைப்பூப்போன்றனவும் நீலோத்பலம் போன்றனவுமான பெரிய கொட்டைப்பாக் களவுள்ள பூக்கள் தரையிலிருந்து செங்குத்தாக இங் கொன்றும் அங்கொன்றுமாக 3, 4 அங்குல உயரமுள்ள தண்டோடு நிற்பது மிகவும் கவர்ச்சிகரமாக இருக்கிறது. இலைகள் காணப்படுவதில்லை. ஆகையால் பூக்களை மட்டிலுமே தரையில் பதித்துவைத்தது போன்றிருக்கும்.



வழியில் கௌரி கங்கை



தோல்மாக் கணவாய்-கௌரிகுண்டக் கணவாய் (18,500 அடி)

காலால் நடந்து இவ்வழியைக் கடத்தல் மிகவும் சிரமம். ஆகையால் முதலில் உள்ள கடுமையான ஏற்றத்தைக் காலால் நடந்தும், பிறகு பெரும் பகுதி யாக் மீதும் சென்றோம். யாக்குகளில் செல்வது ஆபத்தாகத்தான் இருக்கிறது. இருந்தாலும் அதைவிட அங்குள்ள பாறைகளின் இடிபாடுகளில் செல்வது நம் போன்றோர்க்கு முடியாத காரியம்.

மேலும் வழிநேடுக ஏற்றம். கௌரிகுண்டத்தின் கரையாக அமைந்திருக்கும் டோல்மாக் (தேவி) கணவாய் 18,600 அடி உயரம். அதன் அருகில் வந்ததும் செங்குத்தாக 300, 400 அடி ஏறவேண்டியிருக்கிறது. அந்த உயரத்தில் பனி உறை நாட்டில் வாழும் யாக்குகள்கூட முச்சுத்திணறிக்கோண்டுதான் ஏறுகின்றன. அக்கணவாய் உச்சியை அணுகும்போது பனி பெய்யத் தோடங்கிவிட்டது. அங்கேல்லாம் பனி பெய்வது ஆபத்தானது. ஆனால் ஏழைகளாகிய எங்களிடம் பெருமானும் பெருமாட்டியும் கருணைகாட்டி உய்வித்தார்கள். 15 நிமிஷ நேரம் பஞ்சுத்துகள் போல விழுந்த பனி வலுக்காமல் நின்றுவிட்டது. அக்கணவாய் உச்சியில் கல்லடுக்கி டோல்மா (தேவி)க்குக் கோவில் அமைத்துப் பலநிறத் துணிகளைக் கிழித்துக் கோடிகட்டி இருக்கிறார்கள். இங்குத் தேவி 21 ஓநாய் வடிவில் வந்து நின்றதாகத் திபேத்தியர் நம்புகிறார்கள். அதற்காக 21 கற்களை நட்டு வைத்துமிருக்கிறார்கள்.

### கௌரி குண்டம்:

இங்குத்தான் பார்வதிதேவி (உமை) சிவபெருமானை நோக்கிக் கடுந்தவம் புரிந்ததாகவும், பெருமான் காட்சி

தந்து 'திருமணத்தால் நம்மை அடைக' என்று அருளியதாக வும். இப்போழுதும் அடிக்கடி தோழியருடன் தேவி இக் குண்டத்தில்வந்து படகுகள் விட்டு விளையாடுவதாகவும் சொல்லப்படுகிறது. குபேரனுடைய இடம் இதனருகில் இருக்கிறது. குபேரன் இங்குத் தன் தேவியருடன் வந்து இதில் ஸ்நானம்செய்து போவதாகச் சோல்லப்படுகிறது.

## எந்நாளும் உறைந்து கிடப்பதாக :

அக்காலத்தில் இது முழுவதும் நல்ல தண்ணீர் பெருகி நின்றதாகவும், அவ்வழியே தன் குழந்தை களுடன் வந்த பெண்ணொருத்தி கரையில் பிள்ளைகளை விடுத்து, இதில் இறங்கிக் குளிக்கச் சென்றதாகவும், அப்பொழுது அக்குழந்தைகள் விளையாட்டாக இதில் இறங்கிச் செத்துவிட்டதாகவும், அதைக்கண்ட அப் பெண் மனம் நொந்து தன் துன்பம் தன்னோடு போகு லும் இனி இதுபோன்ற அசம்பாவிதம் எதுவும் நிகழா திருக்க வேண்டுமென்று நினைத்து 'இதில் உள்ள தண்ணீர் எந்நாளும் உறைந்து கிடப்பதாக' எனச் சபித்துச்சென்றாள் என்றும் ஒரு வரலாறு சொல்லப்படுகிறது. அதிலிருந்து இது உறைபனி நீர்நிலையாகவே இருந்து வருகிறது.

## கௌரி குண்ட ஸ்நாநம் :

எங்களுக்கு முன் பல ஆண்டுகளிலும் இதில் ஸ்நானம் செய்ய விரும்பிய பலரும் உறை பனியை உடைத்துக் குடைந்து. இருபுறம் ஆட்களைவிட்டுத்தம்மைப் பிடித்து இதில் நனைத்தெடுக்கச் செய்து, உணர்வு வரும்வரை கம்பளித்துணியால் தேய்த்துச் சூடுண்டாக்கச் சொல்லி நீராடுவர். பின்னர் உணர்வு பெற்று எழுவர் என்று.



கௌரி குண்டம்



கௌரிகுண்டத்தின் அருகில் உறைபனி

சொல்லியுமிருக்கிறார்கள்; புத்தகங்களில் தம் அனுபவங்களை எழுதியுமிருக்கிறார்கள். அதை நம்பி அங்கு ஸ்நானம் செய்வது இயலாது, வேண்டுமானால் முன்அவர்கள் சொல்லி யிருப்பதுபோலப் பனிப்பாறையை உடைக்கச் செய்து தண்ணீரை முகந்துவரச்செய்து தலையில்தெளித்துக் கொண்டு அமைதிபெற நினைத்தோம். ஆகையால் கையில் மாற்றுடை எதுவும் எடுத்துக்கொள்ளவுமில்லை. உயரமான கணவாய்ப் பகுதிகளில் செல்லும் முறையில் காற்சட்டை போட்டுக்கொண்டு மிருந்தோம் பலரும்.

ஆனால் நாங்கள் அங்குச் சென்றபொழுது மற்ற நீர் நிலைகள் போலப் பனிக்கட்டியே இல்லாது முழுவதும் தண்ணீராக இருந்தது. அதன் கரையிலிருந்து கீழே 400, 500 அடி இறங்கவேண்டி யிருந்தது; அதுவும் உடைந்த கற்பாறைகளின் வழியே. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் அருளாலேயே எல்லோருக்கும் இந்த நிலையில் இங்கு ஸ்நானம் கிடைத்தது என்று பலரும்சொல்லிச் சொல்லிப் பெருமைப்பட்டனர்.

அதில் இறங்கி எல்லோரும் உடுப்புக்களைக் கழற்றி வைத்துவிட்டுக் கைதுடைக்க வைத்திருந்த துண்டைக் கட்டிக்கொண்டு அதில் இறங்கி நீராடினோம். மனமார ஆசைதீர பல முழுக்குகள் போட்டோம். பனிக் குளிருள்ள தண்ணீராகையால் 10, 15 நிமிஷங்களுக்குள் எல்லாவற்றையும் முடித்துக்கொண்டு விட்டோம். கயிலாய மலையை ஒட்டியே ஈசானத்தில் இது அமைந்திருக்கிறது. சுமார் 1 மைல் நீளமும் 5, 6 பர்லாங் அகலமும் இருக்கும். முட்டை வடிவில் அமைந்திருக்கிறது. உச்சி நேரங்களில் கயிலைச் சாரலிலிருந்து உறைபனி அடிக்கடி உடைந்து சிதறித் தண்ணீரில் விழுந்து

கொண்டே இருக்கிறது. நாம் குளிக்கும்போழுது நம் தலையில் விழாதிருக்கவேண்டுமே. இதைத் திபேத்தியர்கள் துக்கி - ஸின்பூ (Thuki - Zinboo) என்று அழைக்கிறார்கள். இங்கு நாங்கள் நீராடும்போழுது பகல் மணி 12. அங்கிருந்து மறுகரையில் பாறைத்துண்டுகளில், ஏறுவது துன்பமாகவே இருந்தது. இதேபோல 400, 500 அடி கீழே செங்குத்தாக அப்புறத்திலும் உடைந்த பாறைத்துண்டுகளின் வழியே இறங்கவேண்டியிருந்தது. அதனடியில் 2 பர்லாங் நீளம் 1 பர்லாங் அகலத்துக்கு உறைபனிப் பகுதியிருந்தது. பிறகு 3, 4 கல் தொலைவு வழி இறக்கம். இதில் 2000 அடி இறங்க வேண்டும். கௌரிகுண்ட ஸ்நானம் கிடைத்ததில் பேரும் மகிழ்ச்சியே யானாலும் ஏறி இறங்கியதில் துன்பமும் களைப்பும் ஏற்பட்டன.

லாம் சுக்கீர் :

மேலே சொன்ன தொலைவு கீழே வந்ததும் அங்கே ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமும் மற்றவர்களும் தங்கியிருந்தார்கள். அங்கு ஒரு ஆறு (லாம் சுக்கீர்-Lham Chukkir) வடகிழக்கு மூலையிலிருந்து வந்துகொண்டிருக்கிறது. அதன் கரையில்தான் மேலே சொன்னபடி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமும் மற்றவர்களும் சிறிது தங்கிக் களைப்பாறி யிருந்தது. பிஸ்கோத், பேப்பர்மிண்டு, சத்துமாவை நீர்விட்டு சர்க்கரை சேர்த்துப் பிசைந்தது இவற்றைத் தின்று பசியை ஆற்றிக்கொண்டோம். கீழே அளற்றுப் பகுதி (Marshy). நடுநடுவில் உடைந்த பாறைத்துண்டுகள். அந்த வழியில் நடப்பது கஷ்டமாகத்தான் இருந்தது. நடு வழியில் கண்டோமலை அடியிலிருந்துவரும் ஆற்றைக் கடந்து செல்ல வேண்டியிருந்தது.



திருக்கயிலையின் வடகிழக்கு மூலை (17,000 அடி)



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
திருக்கயிலையின் கிழக்குமுக தரிசனம் செய்தருளல்



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
திருக்கயிலையின் தென்முக தரிசனம்செய்தருளல்

## கிழக்கு முகம் :

இதைக்கடந்து சிறிதுதொலைவு சென்றதும் கயிலையின் கிழக்குமுகம் மிக நன்ருகத் தெரிந்தது. நாங்கள் இருந்த பகுதியிலும் வெய்யில். பெரிய ஆவுடையார்மீது சிறிய லிங்கம் அமைந்திருப்பது போன்ற காட்சி. ஆவுடையாரின் கோமுகைப் பகுதி தெற்கு நோக்கி சில கல் தொலைவு நீண்டிருப்பதுபோலவும் தெரிந்தது.

## ஸோங் நதிக்கரை :

அதைக் கடந்து சிறிது தொலைவில் லாம் சுக்கீ ரோடு மற்ருெரு நதி கலக்கிறது (Topchen Chu - டாப்சென் சூ). டாப்சென் சூ வழியாகவும் சிந்து உற்பத்தி ஸ்தானத்துக்கு போகலாமாம். இந்த ஆறு சங்கமமாகும் இடத்திலிருந்துதான் அந்த நதி (Zhong Chu) ஸோங் சூ என்று பெயர் பெறுகிறது. 7, 8 கல் தொலைவு இவ்விதமாக வழிநடந்து சுண்டல்பூக்குக்கு அண்மையில் ஸோங் நதியின் கரையில் கூடாரம் அமைத்தோம். அதற்கருகில் பெரிய மணிச்சுவர் ஒன்றுமிருக்கிறது. நடுவில் மேலே சொன்னதல்லாது வேறு சில அருவிகளும் கயிலையிலிருந்து பெருகிவந்து ஸோங்கில் கலக்கிறது. அங்குத் தங்குமிடம் வரும்போழுது மாலை மணி 5 இருக்கும். பெரிய ஏற்றம் இறக்கங்கள், அளற்றுப் பகுதி இவற்றில் நடந்து வந்த கஷ்டங்கள் எல்லாம் எதிர் பாராத புநித கௌரிகுண்ட ஸ்நானம் கிடைத்த பெரு மகிழ்ச்சியில் மறைந்தேபோயின. கூடாரம் அமைத்து முடிந்ததும் அன்று இரவு முன்னேரத்தில் தண்ணீர்மழை பெய்தது.

## அம்மையும் அப்பனும் :

மறுநாள் வெள்ளிக்கிழமை ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் பாரணை முடிந்ததும் அவ்விடம் விட்டகன்றோம். 4, 5 கல் தொலைவு ஆற்றின் கரைவழியே செல்ல வேண்டியிருக்கிறது, வழியில் பலபல நிறத்தில் கற்களும் பலபல நிறத்தில் மணல்களும் இருக்கின்றன. ஓரிடத்தில் செம்மண்பகுதி, அதை ஒட்டிக் கருப்பு மண். செம்மேனி அம்மானும் மரகதக் கோடியாகிய பெருமாட்டியும் எங்கும் இணைந்தும், பிரிந்தும் நிற்கும் காட்சிகளை நினைவூட்டின. பல சிறு அருவிகள் நடுவில் வந்து ஸாங்சூவில் கலக்கின்றன. கயிலைமலையின் தென்கிழக்கு மூலையில் ஸாங்சூவைக் கடந்து அப்புறத்தில் மானசசரோவரத்துக்கு வழி பிரிகிறது.

## தெற்கு முகம் :

ஆனால் பரிக்ரமத்தைப் பூர்த்திசெய்ய விரும்புவோர் இங்குக் கயிலைமலையை ஒட்டி மேற்கு நோக்கிப் போதல்வேண்டும். இந்த இடத்திற்கு ஸோங் - சு கோ (Zhong - chu - go) என்று பெயர். அங்கு நின்று பாாத்தால் பார்க்கா மைதானமும் தொலைவில் இராக்ஷஸ்தால், மாந்தாதா சிகரங்களும் காட்சி அளிக்கின்றன. நில அழகுப் படம் வரையவல்லவர் பார்த்து மகிழ வேண்டிய இடம். அல்லது இயற்கை அழகைக்கண்டு தம் வாக்கின் வல்லமையால் படம் பிடித்துக் காட்டக் கூடிய புலவர்கள் காண வேண்டிய வியத்தகு காட்சி அது. அங்கிருந்து மேற்கு நோக்கி இரண்டு மூன்று கல் தொலைவு சென்றதும் ஒரு சிற்றாறு

குறுக்கிடுகிறது. அதைத் தாண்டியதும் தேற்கு முகத்திற்கு நேரே ஒரு மணிச் சுவர். அங்கு நின்று கயிலை மலையானை வணங்கி வழிபட்டுச் சூட தீபாராதனை செய்து கொண்டோம். இங்கிருந்து கயிலை உட்பரிக்ரமத்திற்கு வழி பிரிகிறது. இதேவழியில் மேலும் இரண்டு கல் தொலைவு சென்றால் தார்ச்சேன் (தார் - கொடி; சேன் - பெரியது ). அவ்வழியில் தர்ச்சேன்சூ, உமாசூ என்கிறஇருபுநிதசிற்றாறு களைக் கடத்தல்வேண்டும். தர்ச்சேனில் பூட்டியர் மண்டியும், பூட்டானிய கவர்னர் தங்கியுள்ள ஒரு இடமும் இருக்கின்றன. ஏதாவது உணவுப் பொருள்களோ பிறவோ வேண்டியிருந்தால் இங்குள்ள மண்டியில் வாங்கிக் கொள்ளலாம்.

## மூன்று நாடிகள் :

திபேத்தியர்கள் கயிலையை ஒரு சகஸ்ரார சக்கரமாக (ஆயிரமிதழ்த் தாமரைச் சக்கரமாகக்) கொண்டு அதில் இடை, பிங்கலை, சுஷும்னு (கெங்மா, ரேங்மா, உமா) நாடிகளாக லாசூ, ஸோங்சூ தர்ச்சேன்சூ மூன்றுநதிகளையும் கொள்கிறார்கள்.

## கொடி ஏற்றுவிழா :

கைலாச கிரியிலிருந்து வெளிவரும் நதிகளும் சுற்றிலும் உள்ளவையும் எல்லாம் தேற்கு முகத்தில் பார்க்காவில் ஒன்றுகூடி ராக்ஷஸ்தாலில் விழுகின்றன. அந்நதிகளே கயிலை மலையானுக்கு இயற்கை அணிவித்திருக்கும் பெரிய மாலை. தர்ச்சேன் 15,100 அடி உயரத்தில் உள்ளது. இங்கிருந்து 5 6 மைல் மேற்கில்தான் கயிலைக் கொடிமரம் நாட்டப்பட்டிருக்கிறது. அதற்கு தார்போஷி என்று பெயர் (தார் = கொடி,

ஷி = பேரிது; சிறந்தது) மகத்வஜம். இது ஆண்டு தோறும் வைசாக பூர்ணிமா புத்தர்ஜயந்தி அன்று புதிதாகச் செய்து ஏற்றப்படுகிறது. அவ்விழாவில் பல நூற்றுக் கணக்கானவர் இங்கு வந்து கூடுவர். அது ஒரு பெரும் விழா. அந்த இடத்திற்கு ஸேர்ஷங் (Sershung) என்று பேயர். அக்கோடிமரத்தை தர்ச்சேன்குஷோக் (Tarchchen Kushok) என்று மரியாதை காட்டிச் சோல்வதுமுண்டு. (குஷேக்-மேலானவர்). முதல்நாள் பழையகோடிமரத்தைக் கீழேஇறக்கி அதிலுள்ள பழையகோடியை அகற்றுவார்கள். புதுக்கோடிகள் கட்டுவர். அன்றுமாலே அக்கோடிமரம் பாதி அளவு நிமிர்த்திவைக்கப்படும். பௌர்ணமி அன்று காலே யில் அதை நிமிர்த்திநட்டு விழாவை முடித்து அன்று மாலே தேராஃபூக்குக்கு வழிபாடுகள்செய்யப் போய்விடுவார்கள்.

## குதிரை வருஷம் :

அறுபது வருஷங்களேயும் திபேத்தியர்கள் ஒவ்வோரு பன்னிரண்டு வருஷத்தையும் ஒவ்வோருகூருக 5 கூறு கள் செய்து கணக்குக்கோண்டிருக்கிறூர்கள் அதில் 7 வது வருஷம் (Ta-lo) டாலோ (குதிரை) வருஷம் என்பது. இந்தக் குதிரை வருஷத்தில் கயிலே ஸேர்ஷங் கில் ஒரு பேரிய மேளா நடத்தப்படும். பல ஆயிரக் கணக்கான மக்கள் வந்து கூடுவர். அந்த ஆண்டில் கயிலேயையும் மானசசரோவரத்தையும் ஒருமுறை வலம் வந்தால் 13 முறை வலம் வந்த பலன் உண்டாம்.

## வடமோழி இலக்கியங்களில் தத்துவ கயிலாயங்கள் :

1. சத்தி சிவதத்துவங்களில் ஆதி எனப்படும் உமை யம்மையாரோடு கூடிய சிவபிரான் எழுந்தருளியிருப்பது ஓர் கயிலாயம்.

2. சாதாக்கிய தத்துவத்தில் சதாசிவ நாயஞர் எழுந்தருளியிருப்பது ஓர் கயிலாயம்.

3. சுத்த வித்தை ஈசுர தத்துவத்திலேயுள்ள மகேசுவரர் எழுந்தருளியிருப்பது ஓர் கயிலாயம்.

4. ஆன்ம தத்துவத்தின் உபரிபாகத்திலுள்ள பிரகிருதிக்கு மேலே ஸ்ரீ கண்ட நாயஞர் எழுந்தருளியிருப்பது ஓர் கயிலாயம்.

5. ஜம்புத்தீவு எனப்படும் பரதகண்டத்து உத்தர திசைக் கண்ணதாகிய இமாசலச்சாரலில் ஓர் கயிலாயம்.

6. சிவபிரான் தம்மை வழிபட்டுய்யும் பொருட்டு தியான பூஜாதிகளுக்குப் பூவுலகில் அங்கங்கே எளிவந்து அடியார்களுக்கு அனுக்கிரகிக்குமாறு சாந்நித்தியமாயிருக்கும் தானங்களும் ஓர் கயிலாயம்.

மேலே சொன்ன அறுவகைக் கயிலாயங்களில் முதலாவதாகிய சத்தி சிவதத்துவங்களில் ஆதி எனப்படும் உமையம்மையாரோடு கூடிய சிவபிரான் எழுந்தருளியிருக்கும் கயிலாயத்தை முதலாக வைத்துத் திருக்கயிலாயபரம்பரை கணக்கிடப்படும்.

சுவச்சந்த ஆகமம் :

ஹிமயமலேயின் ஒரு பகுதிதான் கைலாஸம். மேரு மலேயை அசையாமல் நிறுத்துவதற்கு ஒவ்வொரு திக்கிலும் இரண்டு இரண்டு பர்வதங்கள் உள்ளன. அவைகளுக்கு விஷ்கம்ப பர்வதம் என்று பேயர். தேற்குத் திக்கில் ஹிமவானும் கைலாஸமும்.

कैलासो हिमवांश्चैव दक्षभागे व्यवस्थितौ

## பிருதிவீ :

அதர்மத்தில் ஈடுபட்ட வேனன் என்ற அரசன் முனிவர்களின் சாபத்தினுல் மரித்தான். அவனுடைய வலது கையிலிருந்து பெருமுயற்சியினுல் பிருது என்ற அரசனை முனிவர்கள் உண்டாக்கினுர்கள். அவன் விஷ்ணுவினிடம் வரம்பெற்று மிகவும் பலவான் ஆனுன். பூமி தர்ம சூன்யமாக இருப்பதைக்கண்ட அவன் கோபம்கொண்டான். அவனுடைய கோபத்திற்கு அஞ்சிப் பூமி பசு உருவத்தோடு ஓடிற்று. அதைப் பின்தொடர்ந்துசென்று நிறுத்தினுன். அப் பசுவினிடமிருந்து பலரைக் கன்ருகச்செய்து கறப்பவர்கள் பலரையும் நியமித்துப் பற்பல பொருள்களைப் பிருது என்ற அரசன் உண்டாக்கினுன். பிருது என்ற அரசனுல் நிறுத்தப் பட்டபடியால் பூமிக்குப் பிருதிவீ என்று பெயர் வந்தது. மேரு மலை கறப்பவனுகவும், ஹிமவான் கன்ருகவும் இருந்து பல ஒஷதிகளையும் ரத்னங்களையும் மலைகள் பெற்றன. - (மத்ஸ புராணம் அத் - 10)

ओषधानि च दिव्यानि दोग्धा मेरुर्महाचलः ।
वत्सोऽभूद्धिमवांस्तत्र पात्रं शैलमयं पुनः ॥

கூறுகிறது. இதைக்கொண்டுதான் காளிதாஸன்,

यं सर्वशैलाः परिकल्प्य वत्सं मेरौ स्थिते दोग्धरि दोहदक्षे ।
भास्वन्ति रत्नानि महौषधीश्च पृथूपदिष्टां दुदुहुर्धरित्रीम् ॥

என்று வர்ணித்தார்.

गिरिभिर्वसुधा दुग्धा रत्नानि विविधानि च

—மத்ஸபுராணம் 120 அத்தியாயம்

## மந்தாகினி : நந்தனம் :

ஹிமய மலையில் கைலாஸம் உள்ளது. அம்மலையின் பாதத்தில் குளிர்ந்த நீருள்ள சரஸ். மந்தார புஷ்பங்களின் துளி அதில் நிரம்பியிருக்கிறது. அதிலிருந்து மந்தாகினி என்ற நதி உற்பத்தியாகிறது.

मन्दाकिनी - मन्दं अकितुं शीलं अस्याः इति

(மெதுவாகச்செல்லும் தன்மையுள்ளது மந்தாகினி என்றும் சொல்லலாம்.) அந்நதிக் கரையில் நந்தனம் என்ற வனமும் உள்ளது.

## அச்சோதம் : சைத்ர ரதம் :

கைலாஸத்திற்கு வடகிழக்கில் ஸௌகந்திக மலை முதல் ஸர்வ தாதுக்கள் நிரம்பிய சுவேல மலை வரையில் சந்திரபிரபம் என்ற மலை. அதன் பாதத்தில் அச்சோதம் (தெளிந்த நீருடையது) என்ற சரஸ். அதிலிருந்து அச்சோதிகா என்ற நதி உற்பத்தியாகிறது. அதன் கரையில் சைத்ரரதம் என்ற வனம். அதில் மணிபத்ரன் யக்ஷ சேனாபதி வசிக்கிறான். இந்த அச்சோதசரஸ் பாணகவியினால் எழுதப்பட்ட காதம்பரியில் விரிவாக வர்ணிக்கப் பட்டுள்ளது. மந்தாகினி, அச்சோதிகா என்ற இரு நதிகளும் பூமண்டலத்தில் பிரவேசித்துக் கடலை அடைகின்றன.

## லௌகித்யம் : விசோகம் :

கைலாஸத்திற்கு தென்மேற்கில் ஸர்வௌஷதி மலை தொடங்கி மனோசிலாமயமான சுவேலபர்வதம் வரை தங்கச் சிகரமுடைய லோஹித மலை. அதன் பாதத்தில்

லோகிதம் என்ற பெரிய சரஸ். அதிலிருந்து லௌஹித்யம் என்ற நதம் (பிர்மபுத்ரா) உற்பத்தியாகிறது. அதன் கரையில் விசோகம் என்ற வனம். அதில் மணிதரன் என்ற யக்ஷன் வசிக்கிறுன்.

சரயூ : வைப்ராஜம் :

கைலாஸத்தின் வடமேற்கே ககுத்மான் என்ற ஒஷதி மலை. அது வரையில் வைத்யுதம் என்ற மலை. வைத்யுத மலையடியில் மானஸ சரஸ். அதனின்றும் சரயூ என்ற நதி உற்பத்தியாகிறது. அதன் கரையில் வைப்ராஜம் என்ற வனம். அதில் ப்ரஹேதியின் பிள்ளை பிர்மதாதா ராக்ஷஸன் வசிக்கிறுன்.

சைலோதகா :

கைலாஸத்தின் மேற்கே அருண என்ற மலை. சிவனுக்குப் பிரியமானது. அதன் பாதத்தில் சைலோதம் என்ற சரஸ். அதிலிருந்து சைலோதகா என்ற நதி உண்டாகி மேற்குக் கடலை அடைகிறது.

பிந்துசரஸ் : சப்த நதிகள் :

கைலாஸத்திற்கு வடக்கே கௌரம் என்ற மலை. அதன் பாதத்தில் பிந்து சரஸ். சிவபெருமான் பகீரதனுடைய வேண்டுகோளுக்கு இரங்கி தன் சடையிலிருந்து கங்கையை விடுவித்தபொழுது சில பிந்துக்கள் (துளிகள்) சிதறி விழுந்து இந்த சரஸ் உண்டாயிற்று. ஆதலால் பிந்து சரஸ் என்று பெயர். இதிலிருந்து ஏழு நதிகள் உண்டாகின்றன.

प्रसूताः सप्त नद्यस्तु शुभाः बिन्दुसरोद्भवाः

நந்தினீ, ஹ்ராதினீ, பவானீ இம்மூன்றும் கிழக்கே செல்லுகின்றன. சீதா, சக்ஷு, சிந்து இம்மூன்றும் மேற்கேசெல்லுகின்றன. சைலோதா என்ற நதி அருணகிரியின் பக்கத்தில் சைலோதசரஸிலிருந்து உண்டாகி, சீதா சக்ஷு என்ற நதிகளின் நடுவில் சேன்று மேற்குக் கடலே அடைகிறது. ஏழாவது பகீரதனைப் பின்பற்றி தேற்கே சேல்லுகிறது. (மத்ஸபுராணம் - அத்தியாயம் 120.)

மந்தாகினி : நந்தனம் :

ஹிமவானுக்கு இடது பக்கத்தில் கைலாசம். அதன் பாதத்தில் மந்தம் என்ற சரஸ். மந்தாகினி அதில் உண்டாகிறது. அதன் கரையில் நந்தனம்.

அச்சோதம் : சைத்ர ரதம் :

வடகிழக்கே திவ்ய ஓஷத மலைமுதல் சுவர்ணமலை வரை சந்திரப்பிரபம் என்ற மலை. அதனடியில் அச்சோதம் சரஸ். அதிலிருந்து அச்சோதா என்ற நதி. அதன் கரையில் சைத்ர ரதம். அதில் மணிபத்ரன் உள்ளான்.

லோகித்யம் : விசோகம் :

தேன்மேற்கே சிவசத்வ ஓஷதிமலை முதல் பிசங்கமலை வரை லோஹிதமலை. அதனடியில் லோஹித சரஸ். அதிலிருந்து லோஹித்யம் என்ற நதம். அதன் கரையில் விசோகம் என்ற வனம். அதில் மணிவரன் என்ற யக்ஷன் உள்ளான்.

சரயு : வைப்ராஜம் :

தெற்கே க்ரூரசத்வ் ஓஷதிமலை முதல் விருத்திராசுர னுடைய உடலிலிருந்து உண்டான த்ரிககுமலை வரையில் வைத்யுதமலை. அதனடியில் மானஸம். அதினின்றும் சரயூ. வைப்ராஜம் என்ற வனம் அதன் கரையில் உள்ளது. அதில் பிர்மபாதன் என்ற அரக்கன் வசிக்கிறான்.

சைலோதா : சுரபி :

மேற்கே முக்ய ஓஷதி மலை முதல் அருண மலை வரை சிவனுக்குப் பிரியமான ஸஞ்சவான் என்ற மலை. அதன் பாதத்தில் சைலோதம் என்ற சரஸ். அதிலிருந்து சைலோதா நதி. அந்த நதி ஸீதா, சக்ஷு என்ற இரு நதிகளின் நடுவே சென்று மேற்குக் கடலை அடைகிறது. (ஸீதா, சக்ஷு இவ்விரண்டும் சிவபெருமானுடைய சிரஸி லிருந்து விழுந்து உண்டாய ஏழு நதிகளில் அடங்கியவை. ஸீதா, சக்ஷு, சிந்து மூன்றும் மேற்கே செல்லுகின்றன). சைலோதா நதிக்கரையில் ஸுரபி என்ற வனம்.

ஹரிதாளம் : பிந்துசரஸ் :

வடக்கே ஹரிதாள மயமான மலை. அதனடியில் பிந்து சரஸ். (வாயுபுராணம் அத்தியாயம் 47.)

இவ்விதம் இரண்டு புராணங்களிலும் பெரும்பாலும் ஒத்திருக்கின்றன. சில பெயர்கள் மட்டும் மாறியுள்ளன. மேலும் பிந்துசரஸிலிருந்து உண்டாய நதிகள் பாயும் தேசங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன.

## மஹாகைலாசம்: ஜம்பூத்வீப கைலாசம்:

மஹாமேரு மலைக்கு வடக்கே மஹாகைலாஸம் இருக்கிறது. அவ்விடத்தில் மஹாஸதாசிவர் இருக்கிறது. ஜம்பூத்வீபத்தில் உள்ளது மற்றொரு கைலாஸம். இதில் ஸ்ரீகண்ட பரமேச்வரன் இருக்கிறார். இரண்டு கைலாஸங்களும் ஞானஸ்வரூபமுடையன. மஹாகைலாஸத்திற்கு எட்டுத் திக்குகளிலும் எட்டுக் கோபுரங்கள் உள்ளன. இந்த கோபுரங்களில் வாசல் காவலராக கிழக்கு முதல் முறையே விக்னேஸ்வரர், வீரபத்ரர், நந்திகேசர், பைரவர், சுப்பிரமணியர், துர்கா, மஹாகாளன், மஹாசாஸ்தா என்ற தேவர்கள் தம்முடைய கணங்களுடன் இருக்கிறார்கள். மஹாகைலாஸம் ஹேமபூமியில் உள்ளது. (ஸ்காந்தம் உபதேச காண்டம் அத்தி. 2.)

மஹாகைலாஸம் மேரு மலைக்கு வடக்கில் இல்லை என்கிறது ஞானாவரணம் * (715 பக்கம்).

திகழ்கயிலை வடமலையிற் சோதிடக மேன்று
 சிறந்த வந்த மேருவிற்கு வடபாலாகத்
தருமண்ட பித்திகையி னணீத்தா மேன்றும்
 சாற்றுமகா கயிலையேன்றும் தருத லன்றிப்
புகலவரும் வருடகண்ட மிருநான் குள்ளும்
 போருந்திமையப் போருப்படுத்த வேள்ளிமலை என்றும்
பகர்தலினிக் கயிலைமலை யடுக்க வந்த
 பரதகண்டம் பிறகண்டம் போற்சிறப்பு முடைத்தே.

(ஞானுவ - சுபக்கம் - 497)

---

* கைலையங்கிரியைப் பற்றிய குறிப்புக்கள் ஞானாவரண விளக்கம் அரும்பத விவேகத்தில் 896, 898, 899, 900, 915, 1002, 1003 பக்கங்களிலும் உள்ளன.

வான ளங்தெழு வடவரை மேருவின் வடபால்
மேனி வங்தெழு மண்டபித் திகைப்பட மேவி
யான மாபெருங் கயிலையோன் றுளதென வறைந்தாய்
ஞான நாயக வக்கிரி வளம்சொல்வா னயங் தேம்

(உபதேசகாண்டம் - கயிலைமா - 13)

அவர்புவனம் பருதிகளா யிரஙிகராய் விளங்கும்
ஆயிரங்கை காலாதி விசுவரு பியுமாம
உவமையிலைம் முகனுயு மீசனுயு
முருத்திரலோ கத்துறையு மிறைதானுயும்
நவமணிகளா லிலங்கு மேரு சிகரத்து
நம்பனேடு வெள்ளிமலை நாதனுயும்
தவமுனிவர் பரவுமகா சதாசிவங் தானுயும்
சார்ந்தபிற ராயும் தருந்தலைவ ரென்பர்.

(ஞானுவ - சுபக்கம் - 553)

இமையகிரிப் பருவவட்டா விமையவர்க டொழுதேத்த
வுமையுடனே பசுபதிதா னுறையுமொரு கிரிமிசையிற்
றமையுணர்ந்த தபோதனருங் தங்குவரச் சயிலத்திற்
கமைவுடையா ரதன்பெயரைக் கயிலையெனக் கழறுவரால்.

(சிவதர்மோத்தரம் - கோபுர - 49)

## சங்குபோல் காந்தி :

தேவபக்தர்களுக்கும், புண்யசாலிகளுக்கும் இருப்பிடம் கைலாஸம். தனிமையான அழகிய சிகரமுடையது; தூய்மையானது. சங்குபோல் காந்தியுடைது என்கிறது வாயுபுராணம்

विविक्तचारुशिखरं पवित्रं शंखवर्चसं ।
कैलासं देवभक्तानामालयं सुकृतात्मनां ॥

(அத்தி 41- சுலோக 1)

## சித்தாந்தசாரோபநிஷத் :

ஸம்ஸாரமற்றது. சோகம், மோஹம், காமம், குரோதம் முதலிய தோஷங்களில்லாத இடம். சாந்தமானது. பரமோக்ஷஸ்தானம் கைலாஸம்.

स एष परम कैवल्यः कैलासः ।

## இராமாயணம் :

இலங்கையில் வசித்த குபேரனை இராவணன் துரத்தினான். குபேரனின் தந்தை விச்ரவஸ் முனிவரிடம் சென்று தான் என்ன செய்வது என்று வினவியபொழுது "இலங்கையைவிட்டு நண்பனான சிவனுடைய இல்லமாகிய கைலாஸத்திற்குச் செல்" என்றான். பிறகு குபேரன் கைலாஸம் சென்று அளகாபுரியில் வசிக்கலானான். (உத்தரகா - சர்க்கம் 11)

குபேரனுடைய புஷ்பக விமானத்தில் செல்லும் இராவணன் கைலாஸமலையில் விமானத்தின் நடை தடைப் பட்டது கண்டு கோபித்து கைலாஸமலையைத் தூக்கினான். பரமசிவன் கால் கட்டைவிரலால் மலையை அழுத்தினார். இராவணன் சாமவேதத்தைக் கானம் செய்து சிவனை சந்தோஷப்படுத்தினான். ஆயிரம் ஆண்டுகள் அழுது விடுதலை பெற்றான். சந்திரஹாஸம் என்ற கத்தியையும் சிவனுடைய அருளோடுகூடப் பெற்றான். (உத்தரகா - சர்க்கம் 16)

## சிவ ரஹஸ்யம் :

கைலாஸ மலையில் உள்ள சிவலிங்கங்கள் இத்துணை என்று எண்ணுவது முடியாது. வானத்திலுள்ள விண் மீன்களையும், பூமியிலுள்ள மணலையும் எண்ணிவிடலாம்.

இந்த இலிங்கங்களை எண்ணவே முடியாது. ஹிமவான் மேனை என்ற தன் மனைவியுடன் சிவனை (மாப்பிள்ளையை)க் காண கைலாஸம் சென்றார். அப்போழுது சிவபெருமானுடைய கட்டளையினால் நந்திகேஸ்வரர் ஹிமவானுக்கு சிவாலயமாகிய கைலாஸத்தின் நாற்புறங்களிலும் உள்ள சிவரூபமாகிய இலிங்கங்களைக் காட்டி அந்தந்த இலிங்கங்களின் பெயரையும் சோல்லுகிறார். இவ்விதம் சுமார் 1000 பெயர்கள் அம்சம் 1 அத்தியாயம் 38 முதல் 43 வரையில் உள்ளவற்றில் கூறப்பட்டுள்ளன.

பூமியில் உள்ள சகல தேவாலயங்களும் கையிலை மலையில் உள்ளன என்று நந்திகேசர் ஹிமவானுக்கு சிவபெருமானுடைய கட்டளையால் காண்பிக்கிறார். பெயர்களையும் கூறுகிறார் - (அம்சம் 2-அத்தியாயம் 22 to 24.)

**கிராதார்ஜுனியம் :**

இம்மலையில் சுவர் வைத்ததுபோல் காந்தி இருக்கிறது. அடிக்கடி வீசும் காற்று ''சுவர் உள்ளது'' என்ற பிராந்தியான எண்ணத்தைப் போக்குகிறது.

नानारत्नज्योतिषां सन्निपातैः छन्नेष्वन्तः सानुवप्रान्तरेषु
बद्धां बद्धां भित्तिशङ्काममुष्मिन् आवानावान्मातरिश्वा निहन्ति ।

சிவபெருமானுடைய பிரீதிக்காக குபேரன் உயரமான கோபுரத்தைக் கைலாஸ மலையில் ஏற்படுத்தினான். இம்மலை உயரமாக இருப்பதால் ஞாரியனை மறைக்கிறது. ஆதலால் அகாலத்தில் அஸ்தமித்தது போல அங்கே காணப்படும்.

व्यधत्त यस्मिन् पुरमुच्चगोपुरं पुरां विजेतुर्धृतये धनाधिपः
स एष कैलास उपान्तसर्पिणः करोत्यकालास्तमयं विवस्वतः ॥

(சர்க் 5 - சுலோகம் 35)

## மேகதூதம் 56 :

இம்மலையின் உச்சியில் மேகம் தங்கியிருப்பது, சிவ பெருமானுடையகாளை நதிக்கரையை முட்டி விளையாடிக் கொம்புகளின் நுனியில் மண்ணைக்கொண்டதுபோல் இருக்கிறது.

## கிரணுகமம் :

கருடன் இறைவனைப் பார்த்துத் துதித்து கைலாசத்தில் அம்பிகையுடன் கூட பிறை அணிந்தவராய் வீற்றிருக்கும் சிவனை வணங்கி சிவஞானத்தைக் கூற வேண்டும் என்று கேட்க இறைவன் கிரணம் என்ற ஆகமத்தில் ஞானபாதத்தைக் கூறுகிருர்.

कैलासशिखरासीनं सोमं सोमार्धशेखरम् ।
हरं दृष्ट्वाऽब्रवीत्ताक्ष्यः स्तुतिपूर्वमिदं वचः ॥

எனத் தொடங்கிக் கூறப்படுகிறது. இதனுல் கைலயங்கிரியும் அதனில் உமையுடன்கூட இறைவன் காட்சியளிக்கிருன் என்பதும் புலனுகின்றன.

## சிந்தியம் - மூலாகமம் :

रजताद्रौ महारम्ये रत्नसिंहासनेऽपि च ।
सुखासीनं भवं तस्मिन्नुमादेव्या च संयुतम् ॥
भूतैश्च लोकपालैश्च गणैश्च मुनिभिस्तथा ।
सर्वैर्देवैश्च यक्षैश्च सेव्यमानैः पृथक् पृथक् ॥

வெள்ளி மலையில் மிக்க அழகு பொருந்திய ரத்ன மயமான சிங்காஸனத்தில் உமையோடுகூட சுகமாய் உட்கார்ந்திருப்பவர். பூத கணங்களாலும், மஹரிஷி கணங்களாலும்,

தேவர்கள், யக்ஷர்கள், லோகபாலர் இவர்களாலும் தனித்தனி சேவிக்கப்படுபவர் என வெள்ளிமலையான கைலயங்கிரியில் உறைந்திருப்பவரான சிவபெருமான் கூறப்பெறுகிறுர்.

ரௌரவம் - ஆகமம் - கிரியாபாதம்

कैलास शिखरासीन देवदेव त्रिलोचन
सर्वलोक हितार्थाय रौरवं वद मे प्रभो ।

ருரு என்பவர் கைலாஸ சிகரத்தில் உட்கார்ந்து இருப்பவராயும் முக்கண்ணனுயுமுள்ள இறைவனை ரௌரவம் என்ற ஆகமத்தைக் கூறும்படி கேட்கிறுர் என்று காணப்படுவதால் கைலாஸகிரியும் அதனில் இறைவன் வீற்றிருக்கிறுர் என்பதும் அறியப்படுகிறது.

சிவசங்கல்போபநிஷத் :

कैलास शिखरे रम्ये शंकरस्य शिवालये ।
देवतास्तत्र मोदन्ते तन्मे मनश्शिवसङ्कल्पमस्तु ॥

'எல்லோருக்கும் மங்களத்தைச் செய்பவனுன சிவபெருமானுடைய இருப்பிடமான அழகு பொருந்திய கைலாஸ மலையின் சிகரத்தில், தேவர்கள் சந்தோஷிக்கின்றுர்கள். அந்த இடத்தில் எனது மனம் ரமிக்கிறது; அதுவும் சிவனின் சங்கல்பமாக ஆகட்டும்' என்று காணப்படுவதால் கைலயங்கிரியில் விளங்கும் சிவபெருமானும் அங்கு ஆனந்தத்தை அனுபவிக்கும் தேவர்களும் கூறப்படுகின்றனர்.

ஸ்காந்த புராணத்தில் ப்ரதோஷ மகிமையைக் கூறுமிடத்தில்,

कैलासशैल भुवने त्रिजगज्जनित्रीं गौरीं
निवेश्य कनकांचितरत्नपीठे ।
नृत्यं विधातु मभिवांछति शूलपाणौ
देवाः प्रदोषसमये नु यजंति सर्वे ॥

கைலாச மலையிலுள்ள பூப்ரதேசத்தில் உலக மாதாவான கௌரியை ரத்னங்களால் இழைக்கப்பட்ட பொற்பீடத்தில் அமரச் செய்து இறைவன் பிரதோஷ காலத்தில் நடனம் செய்யவிரும்புகிறார். அக்காலத்தில்தேவர்கள் யாவரும் துதி செய்கிறார்கள். இதனால் கைலாய மலையும், அதனில் இறைவன் நர்த்தனம் செய்கிறார் என்பதும், தேவி பொற்பீடத்தில் வீற்றிருந்து அந்த நடனத்தைபார்த்துக்கொண்டிருக்கிறாள் என்பதும், தேவர்கள் அவர்களைப்பார்த்து வணங்குகிறார்கள் என்பதும் புலனாகின்றன.

சுப்ரபேதம் - ஆகமம் - கிரியாபாதம்

कैलास शिखरासीनं मुनिसङ्घैस्समावृतं ।
देवैर्यक्षैस्सगान्धर्वैः सिद्धविद्याधरैरपि ॥
ब्रह्मामृगाङ्क सूर्यैश्च लोकेशै रिह संवृतम् ।
दृष्ट्वा प्रणम्य देवेशं विघ्नेशोऽस्वाक्यमब्रवीत् ॥

கைலாச சிகரத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானைப் பற்றி விக்னேஸ்வரர் கூறுகிறார். அந்தக் கைலயங்கிரியானது மஹரிஷிகளால் சூழப்பட்டது. தேவர்கள், அசுரர்கள், கந்தர்வர்கள், சித்தர், வித்யாதரர், பிரமன், சூரியன், சந்திரன், திக்குபாலர்கள் இவர்களால் சூழப்பட்டது.

## ச்வச்சந்திர தந்திரம் :

" ஹிமவதோ மத்யே கைலாச; ச்ருங்க ரூபவான் "

ஹிமயமலேயின் நடுவில் கைலாயம் சிருங்க வடிவமாக உள்ளது.

## தேவியாமளம் :

தஸ்யமத்யே மஹாச்ருங்கம் சதயோஜன விஸ்த்ருதம் |
தத்ராஸாவமரைஸ்ஸாகம் சூலீ வஸதி ஸர்வதா ||

அதனுடைய நடுவின் உயர்ந்த சிகரம் நூறு யோஜனே உயரமுடையது. அதில் சூலத்தை வைத்திருக்கும் இறைவன் தேவர்களுடன் வசிக்கிறுர். இதுபோன்ற பல.

## மாற்று ஏற்பாடு : யாத்திரைத்தொடர் :

நாங்கள் அங்கிருந்து புங்துவிற்குத் திரும்பிவிட்டோம். சுவாமி வித்யாநந்தாவும் இரண்டோரு நண்பர்களும் தர்ச்சேன் மண்டிக்குப் போனுர்கள். எங்களோடு வந்த யாக்வாலாக்கள் அன்றுவரைத்தான் ஏற்பாடு செய்து வந்தவர்கள். மேலும் அவற்றில் சிலவற்றிற்கு கோமாரி போன்றதோரு பிணியும் கண்டுவிட்டது. தர்ச்சேன் மண்டியில் எப்போழுதும் போதி சுமக்கும் யாக் முதலியன கிடைக்கும். ஆகையால் அங்கே சென்று ஏற்பாடுசெய்து வரத்தான் சுவாமிகள் அவர்கள் தர்ச்சேனுக்குப்போனது.

## ஆலங்கட்டி மழை :

புங்து, அங்கிருந்து 4, 5 கல் தோலேவு. ஆனுலும் டாமா புதர் மண்டிய வழியில் செல்லவேண்டிவந்தது.

( அதைக் காடு வனம் என்றும், ஆடுகள், மனிதர்கள் செல்லும் ஒற்றையடிப் பாதைகளைப் பெரிய சாலைகள் என்றும் சொல்வர் திபேத்தியர் ). அதன் முடிவில் லோங் நதியைக் கடக்கவேண்டியதாகவுமிருந்தது. அகலமான இடத்தில் தண்ணீர் ஆழம் ஒரடிக்குக் குறைவாகவே இருந்தது. அந்த நதியில் இறங்கிக் கடக்கத்தொடங்கியதும் ஆலங்கட்டிமழை அடிக்கத்தொடங்கிவிட்டது. பனித்துளி சுண்டைக்காய் பருமனிருக்கும். குடைகளை எல்லாம் பொத்துவிடும் போலிருந்தது. ஆறு அப்பகுதியில் 2, 3 பர்லாங் அகலமிருக்கும். அதைக்கடந்து அக்கரை சேர்வதற்குள் பெரும்பாடாகிவிட்டது. அக்கரை சேர்வதிலும் பாதங்களில் மிதியணி இல்லை. ஆகையால் அத்துளி காலில் வந்து தாக்கினால் கல்லெடுத்து அடிப்பது போல வலிக்கவும் செய்தது. பிறகு எரிச்சலும் உண்டாகிவிட்டது. சிறிது நேரத்தில் மறத்தும்போய்விட்டது. அங்கு ஒரு டாமாப் புதரடியில் ஒண்டிக்கொண்டபிறகுதான் ஓரளவு துன்பம் குறைந்தது. எங்களைப்போலவே பலரும் அந்த டாமாச் செடிப் புதர்களில் மறைந்துகொண்டிருந்தார்கள் என்பது அது நின்ற பிறகுதான் தெரியவந்தது. அரைமணி நேரம் இம்மழை பெய்து நின்றுவிட்டது.

புந்துவில் வழிபாடு :

பிறகு மாலைச்சூரியன் மேகங்களிலிருந்து வெளிப்பட்டு மிகுந்த ஒளியோடு பிரகாசித்தான். மாலை 5 மணி அளவில் புந்து மைதானத்தின் நடுவில் எங்கள் கூடாரங்கள் அடிக்கப்பட்டன. அங்கிருந்து பார்த்ததில் கயிலையின் தெற்கு முகம் மிகவும் தெளிவாக அன்று இருட்டும்வரை வரையில் காட்சியளித்தது. அங்கிருந்து தென்முகத்துக்கு வழிபாடுகள் செய்து தூப தீபாராதனை செய்து மகிழ்ந்தோம்.

அன்று கயிலைப் பகுதியை விட்டு அகன்று செல்லத் தொடங்கினோம். ஆகையால் கயிலைக் காட்சி மிகவும் உருக்கம் அளிப்பதாக இருந்தது. கண்ணிமையாமல் அவரவரும் வெளியிடங்களில் தங்கி ஆசைதீர அக்காட்சி கண்டு ஆனந்தக்களிப்பில் ஆழ்ந்தோம். முதல் தரிசனம் கிடைத்த அன்று தண்ணீர் மழை; விட்டுப் பிரியத் தொடங்கிய அன்று ஆலங்கட்டி மழை.

## தெற்குமுக தரிசனம் :

அன்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருவுளமும் கனிந்ததுபோலும். கயிலை நினைவான அருளுரை வழங்கிற்று அதன் சுருக்கம் :-

" கயிலை யாத்திரையில் தென்னாட்டுமக்கள் விரும்பி வழிபடுதற்குரியது தெற்குத் திருமுகந்தான் கயிலாயத்தில் நம் நாட்டை நோக்கியிருக்கும் திருமுகம் இது. 'பிறப் பிறப்புக்களால் அச்சமுற்றவர்கள் பரம்பொருளாகிய சிவ பெருமானையே பிறப்பிலாப் பொருள் என்று அறிந்து, வீடு பேறு அடைய அப்பெருமானின் ( தெற்கு முகத்தை ) தக்ஷிணமுகத்தைச் சரண் அடைகிறார்கள்' என்பது உபதேச காண்டம். உயிர்கள் பிறப்பிறப்புக்கள் என்னும் காலச்சக்கரத்தில் சிக்குண்டு மாறிமாறிப் பிறந்து இறந்து எய்க்கும். அவ்விளைப்பு நீங்கவேண்டுமானால் தெற்கு முகத்தையே வழிபடல்வேண்டும். 'புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகி கல்லாய் மனிதராய்ப் பேயாய் கணங்களாய் வல்லசுரராகி முனிவராய்த் தேவராய் எல்லாப்பிறப்பும் பிறந்திளைத்தேன்; எம்பெருமான் மெய்யே உன் பொன்னடிகள் கண்டு இன்று வீடுற்றேன்' என்று குருந்தமரத்தடியில் தக்ஷிணாமூர்த்தமாய்

எழுந்தருளி வந்து ஆட்கொண்ட இறைவனை நோக்கி, மணி வாசகர் கூறும் அருள்மொழிகள் அவ்வுபதேசங்கண்ட உரையோடு ஒத்திருப்பதைப் பாருங்கள். இறைவன் நம் நாட்டு மக்கள் உய்யுமாறு கருணைபாலிக்கும் செயலைப் பற்றிப் பல செய்திகளை நம் சமய நூல்கள் கூறுகின்றன.

தமிழ் மொழியின் இனிமையைத் திருச்செவிகளில் மாந்தி உண்ணவும், தென்றலின் இனிமையை நுகரவும் இறைவன் தென்திசை நோக்கித் திருக்கூத்தாடுகிறான். கல்லாலின் கீழிருந்து நால்வேதம் ஆறங்கங்களைக் கற்றுத் துறை போகிய சனகாதி நால்வருக்கு தாமிருந்த நிலையை சொல்லால் சொல்லாது சின் முத்திரையால் இருந்து காட்டியவன் தென்முகப்பரமன் (இந்த நிலையில் பெருமான் அமர்ந்த போதுதான், தாக்ஷாயணியாக இருந்த அம்பிகை பார்வதியாக அவதரித்து இறைவனை நோக்கித் தவம்புரிந் ததும், காமன் இறைவன் மீது அம்பெய்ய அவனைப் பெருமான் எரித்ததும், பின்னர் பார்வதி திருமணமும், தேவர்கள் உய்யத் திருமுருகன் அவதாரம் முதலியனவும் நிகழ்ந்தன ) அவாகள் வழியில் அந்த அருளுபதேசம் நிலைக்க வழிவழியாய்க் குருசந்தானத்தையும் உண்டாக்கி அருளினுன். நம் குருஞானசம்பந்தருக்குச் சித்தீஸ்வரம் தக்ஷிணாமூர்த்தியின் சந்நதியில் உபதேசம் கிடைத்ததை யும் சிந்தித்தல் வேண்டும். பொருளே பெரிதென்று எண்ணும் மக்கள் மன நிறைவு காணுமல் தவிக்கிறார்கள். ஆனால் அருளையே நம்பியிருக்கும் நம்நாட்டு மக்களுக்குக் குறையில்லாத வாழ்வளித்துக் காப்பது இத்திருமுகமே. மார்க்கண்டேயர் சனகாதி முனிவர்க்குச் சிவதத்துவ ரகசி யத்தைச் சொல்லும்போழுது 'என்றும் தாம் இளமைமாறாது சிரஞ்சீவியாக இன்புற்றிருப்பதற்குக் காரணம் தக்ஷிணா மூர்த்தியின் தரிசனத்தால்விளைந்த பயனாகும்' என்று

கூறுகிறார். "ஜனனமரணத்துக்குப் பயந்தவன், பெருமான் ஒருவனே பிறப்பிறப்பில்லாதவன் என்று கண்டு வழிபடுகிறான்; பெருமானே எது உனதுதென்முகம் அதனால் என்னை தினமும் காப்பாயாக" என்று வேண்டுகிறார் ஒரு அருளாளர் "யார் என்னை அல்லது சிவனை ஆராதிக்கிறார்களோ அவர்கள் தர்ம லோகத்திற்கோ, ருத்ர லோகத்திற்கோ செல்கிறார்கள். யார் என்னை ஆச்ரயித்து என்னுடைய மூர்த்தியிலாவது ருத்திரருடைய தக்ஷிணாமூர்த்தியிலாவது ஆத்மாவைப் பிரவேசிக்கும்படிச் செய்கிறானோ அவன் என்னையாவது சங்கரரையாவது அடைவான். அவனுக்கு மறுபடியும் பிறத்தல் என்னும் துன்பம் இல்லை" என்று திருமால் கூறுவதாக ஆஸ்வமேதிகம் என்னும் நூல் சொல்லுகிறது. சுந்தரர் கயிலைக்கு மீண்டும் வந்த போழுது இந்தத் தென்திருமுகத்தின் வாயில்வழியே சென்றிருக்கிறார். இதுபோன்ற பல சிறப்புக்களும் உள்ள இத்திருமுக தரிசனத்தோடு நம்முடைய கயிலையங்கிரி யாத்திரை முடிவடைகிறது.

அகோரமுகம் :

கயிலாயநாதன் பஞ்சமுகப் பிரம்மமாக இங்கு விளங்குகிறான். அவ்வைந்து திருமுகங்களில் இது அகோரமுகம். (தொங்கிய தாடி, கோரப்பற்கள, கரியநிறம், விருத்தர் முகம், சந்திரனைத்தரித்த சடை, விரித்த சடை, புருவ நெரிப்பு, செம்மையும் வட்டமுமுடைய மூன்று கண்கள், வெற்றிகொள்ளும் தோற்றம் இவற்றோடு வலது தோளின் மீது தெற்கு நோக்கியிருக்கும் திருமுக மண்டலமுடையவர்). இது ஞான வடிவம். கோரமாகிய மலத்திற்கு விரோதியாய் நின்று அதைக்குறைப்பவர் என்னும் பொருளுடையது இப்பெயர். அகோர முகத்திலிருந்து கஜாரி,

வீரபத்திரர், தக்ஷிணாமூர்த்தி, கிராதர், விக்ஷாசனர் ஆகிய மூர்த்தங்கள் தோன்றின. இந்த முகத்திலிருந்து தேக்ஷிணா மூர்த்தி தோன்றியிருக்கிறதென்பதையும் நினைவிலிருத்திக் கொள்ளவேண்டும். இதைத் தரிசிப்பதால் பலன் :- 'மல மாயைகள் நீங்கி ஞானம் சித்திக்கும். சிறிது நேரம் ஜபம் செய்திருப்பதே மேல்' என்ற உருக்கமான அருளுபதேசம் கிடைத்தது.

## பதிகங்கள் : திருஞானசம்பந்தர் :

திருஞானசம்பந்தர் திருக்காளத்தி மலையிலிருந்தே திருக்கயிலையைத் தரிசித்தார். அங்கிருந்தே இரண்டு திருக்கயிலாயத் திருப்பதிகங்கள் பாடினார். பல தலங் களிலும் பாடிய திருப்பதிகங்களிலும் திருக்கயிலாயத்தைக் குறிப்பிட்டுப் பாடியுள்ளார். கயிலைத் திருப்பதிகத்தில் இறைவன் வெள்ளிப் பனிமலையாய் விளங்கும் திரு வுருவத்தையும் அம்மையும் தாமுமாய் விளங்கும் கயிலைச் சிகரங்களையும் அவனுடைய உறுப்புக்களையும் ஆயுதங் களையும் குறித்துப் பாடியுள்ளார்.

" தாதார் கொன்றை தயங்கும் முடியர் முயங்கும் மடவாளைப்
போதார் பாகமாக வைத்தபுனிதர் பனிமல்கும்
மூதாருலகின் முனிவருடனாய் அறநான் கருள்செய்த
காதார்குழையர் வேதத்திரளர் கயிலைமலையாரே "

கயிலைமலையில் சிவசக்திசிகரங்களையும், அங்குப்பெருமான் தக்ஷிணாமூர்த்தியாயிருந்து அருள் செய்ததையும் இப்பாடல் குறிக்கும். இரண்டாவது திருப்பதிகம் இறைவன் செய்த வீரச் செயல்களையும், அவனுடைய புகழையும், அடியார் பரவப்படுவதையும் எதுகைமிடுக்கு அமையக் கூறுகிறது. இவர்கள் கூறுவதுபோல இடியகுரல் இன்றும் எங்காவது

கேட்டுக்கொண்டே இருக்கிறது. இப் பதிகங்களுக்குப் பயன் 'பிணிகளின்றி வானேருகில் மருவிய மனத்தராய் இருப்பர்' எனவும் 'வினைநைந்து பரலோக மேளிதாகும்' எனவும் கூறப்படுகிறது.

## திருநாவுக்கரசர் :

வாகீசமுனிவராய் இராவணனை உய்வித்த இவர் தம் முற்பிறவிச்சரித்திரம் முன்பேகூறப்பட்டது. திருநேரிசைப் பதிகம் ஒன்று, திருத்தாண்டகம் மூன்று ஆக நான்கு பதிகங்கள் உள்ளன. திருவிருத்தம் இராவணனுக்கு இறைவன் திருவருள்புரிந்த நிகழ்ச்சியையே பெரும்பாலும் சொல்லுகிறது. இறைவன் இராவணனை அழிக்க எண்ணி பிழைக்க ஊன்றிய கருணையைப் பேசுகிறது.

திருத்தாண்டகப் பதிகங்களில் திருநாவுக்கரசர் கூறும் கயிலைமலையானின் இயல்பு வியந்து போற்றுதற் குரியது. இன்றும் நாங்கள் அக்காட்சிகளைக் காண நேர்ந்தபோது அப்பாடிகள் ஐயாற்றில் கண்டு சொல்லிய காட்சி அப்படியே அங்கும் ஒத்திருக்கக் கண்டோம்.

வேற்றாகி விண்ணாகி, ஒவாதசத்தத்து ஒலியாய், காற்றாகி எங்கும் கலந்துநிற்கும் கயிலைமலையான் இன்றும் அங்கு அவ்வாறே விளங்குகிறான். பிரணவ ஓசையும் வேத மந்திர ஒலிகளும் அங்கே ஒலிக்கின்றன. பெருங் காற்று அம்மலையைச் சூழ்ந்து வலம் வரும் வண்ணமே இருக்கிறது. கருவாகி ஓடும் முகில்களின் காட்சி அடிக்கடி நிகழ்கிறது. அங்கே இறைவன் நீராவியான நிழலாய் விளங்குகிறான். கயிலைச் சிகரங்கள் உமைபாகமாகத் தணிந்துநிற்கும் நிலையைக் காட்டும். கடிய இடியும் மின்னலுமாய்க் காட்சிதரும் இயற்கை இன்றுமுண்டு.

கயிலை, தொண்டர் பரவுமிடமாக விளங்குவதையும், பெருகி அலைக்கும் ஆறுகளை உடையதாயிருப்பதையும் காண லாம். செம்மை, கருமை, வெண்மை, பொன்மை நிறங் களில் அத்திருமலை விளங்குவதை செய்யாய் கரியாய் வெளியாய் என்றும் ஆகாயவண்ணமுடையாய் என்றும் கூறுகிறார் அப்பர். இவ்வாறு போற்றியுரைத்ததோடு கயிலைக் காட்சி கண்ட நினைவில் பார்க்கும் உயிரெலாம் சத்தியாய்ச் சிவமாய்க் காட்சி அளிக்க ஐயாற்றில் ‘மாதர்ப் பிறை’ என்று தொடங்கிப் பாடிய பதிகத்தில் களிறு சேவல் முதலியன தத்தம் பெண்ணினங்களோடு கூடிய நிலையில், காட்சிகள் கண்டதுபோல, நாங்கள் கயிலைச் சாரலில் முயல் மான் முதலிய உயிரினங்களைக் கண்டோம். அப்பரடிகளுக்குக் கயிலாய சிந்தனை மேலோங்கிநின்றது என்பதற்குப் பல தலங்களிலும் பாடிய திருப்பதிகங் களிலும் கயிலையைக் குறித்துப் பாடுவதிலிருந்து நாம் அறியலாம்.

சுந்தரர் :

சுந்தரர் கயிலைத் திருப்பதிகம் அருளிச்செய்த வரலாறு முன்பு கூறப்பட்டது. கயிலைமலையை நொடித்தான் மலை என்று பெயர் கூறியவர் இவர். நொடித்தல் - அழித்தல். சர்வ சங்கார காரகனாகிய சிவபெருமான் எழுந்தருளிய மலை என்பது பொருள். இவர் திருக்கயிலைத் திருப்பதிகமாக அருளிச்செய்த பதிகம் ஒன்று, இத்திருப்பதிகம் வெள்ளை யானைமீதேறிக் கயிலை செல்லும் வழியில் ஓதியருளப் பட்டது. வழியிடை ஓதிய அத் திருப்பதிகம் வருணனால் இந்நிலவுலகிற்குக் கொண்டுவரப்பட்டது என்பது திருத் தொண்டர் புராணத்திலும் அகச்சான்றாக சுந்தரர் பதிகத் திலும் தெரியவரலாம். வானெனை வந்தெதிர்கொள்ள

மத்தயானை அருள் புரிந்த அந்தத் திருவருட் பெருக்கை ஒவ்வொரு திருப்பாடலிலும் விவரிக்கின்றார். மண்ணுலகிற்பிறந்து இறைவனை வாழ்த்தும் அடியார்கள் பொன்னுலகம் பெறுதலுக்கு இது ஒரு எடுத்துக்காட்டு என்று கூறுகின்றார். கயிலையங்கிரியில் 'அரவொலி முதலிய தோத்திர ஒலி' எங்கும் செறிந்துள்ளது என்றும், இந்திரன் முதலாய தேவரெல்லாரும் எதிர்கொள்ளக் கயிலை சென்ற செலவையும், இறைவனருகில் இருக்கும் மந்திரமா முனிவர் இவனார் என்றுகேட்கப் பெருமான் 'நம்மைச்சேர்ந்த உறவினனாகிய ஆரூரன்' என்று அறிமுகம் செய்தருளியதையும் கூறுகின்றார். கயிலைத் திருமலை பல்லூழி காலமாக நிலைபெற்றது என்பதும் இத் திருப்பதிகம் வருணனால் நிலவுலகிற்குக் கொண்டுவரப்பெற்றது என்பதும் கடைசித் திருப்பாடல் குறிக்கும் செய்தி. இத்திருப்பதிகம் சிந்தித்தற்குரிய பல அரிய குறிப்புக்கள் அடங்கியது.

## புங்துவில் : மேலே யாத்திரை அனுபவம் :

அன்றிரவு குளிர் அதிகம். காற்றும் அதிகம். மைதான நடு இடத்தில் இருந்ததாலேயே இவ்விதம் இருந்தது. மைதான முடிவில் சிறு சிறு மணற்குன்றுகளும் இருந்தன. அங்குச்சென்று தங்கியிருந்தால் இவ்வளவு குளிரும் காற்றும் இராது. நாங்கள் தங்கியிருந்த இடத்திலிருந்து குன்றுள்ள பகுதியும் அதிகத் தொலைவிலுமில்லை. ஆனால் அவ்விதம் செய்ய முடியவில்லை.

## மைதான வெளியில் கூடாரம் :

குன்றுப்பகுதிகளுக்கு அப்பால் கம்பாக்கள்(Khamba-கொள்ளைக்காரர்கள்) வந்து கூடாரமடித்துத் தங்கியிருப்ப

தாக ஒரு செய்தி வந்திருந்தது. அப்பகுதிகளில் நல்லவர்கள் யார்? இது போன்ற கொடியவர்கள் யார்? என்று நம்மால் அறிந்துகொள்ள முடியாது. கொள்ளையர்களும் ஆடு மாடு முதலியன வைத்திருப்பர், மனைவி மக்களோடு கூடி வாழ்வர் பகிரங்கமாக. ஆனால் மற்றவர்களிடம் உள்ளதைக் கொடுமைப்படுத்திப் பறித்தெடுத்துச் செல்வார்களாம் ஈவு இரக்கமில்லாத கொடியவர்கள். கொலை கொள்ளை எல்லாம் அவர்களுக்கு இயற்கையான விளையாட்டு.

ஆகையால் நடு இடத்தில் இருந்தால் தொலைவிலே அவர்கள் வருவதும் தெரிந்துகொள்ளலாம். இப்பகுதியிலிருந்து இராக்ஷஸ்தால் பகுதி கடக்கும் வரை இரவு நேரங்களிலும் விழிப்போடு இருத்தல் வேண்டுமென்று சுவாமி வித்தியாநந்தாஅவர்கள் வழிகாட்டிகளுக்கு உத்தரவிட்டிருந்தார்கள். இவ்வேற்பாடு பற்றிய செய்தி பலருக்கும் தெரிவிக்கப்படாமல் ரகசியமாகவே வைக்கப்பட்டிருந்தது.

### யாக்வாலாக்களில் கொள்ளையர் :

அங்கு உடன் வரும் யாக்வாலாக்களில் நல்லவர் கெட்டவர் பாகுபாடு செய்து கண்டறிய முடியாதாகையால் ஏதாவது ஒரு காரணத்தைச் சொல்லி நடுநடுவில் யாக்குகள் கிடைக்குமிடங்களில் கணக்குப் பார்த்து அனுப்பிவிட்டு வேறு புதிதாக ஏற்பாடு செய்துகொள்ளுவதே நல்லது. இல்லாவிட்டால் உடன் வருபவனே கொள்ளையனாகவோ அவனது உளவாளியின் வேலைக்காரனாகவோ இருக்கலாமாம். அவர்கள் வேற்றுமையில்லாமல் கூடாரத்தில் எங்கும் வரவும் செய்வர். எந்த வேலை செய்வதாக இருந்தாலும் பக்கத்திலேயே அமர்ந்தும்

வேடிக்கை பார்ப்பர். அவர்கள் உடன் வரும் வரையில் அவர்களுக்குத் தெரியாமல் எதுவும் நாம் செய்யமுடியா தென்ற செய்தி முன் ஓரிடத்தில் சொல்லப்பட்டிருப்பது நினைவிருக்கலாம்.

## மிளகாய் :

இத்தடவை எங்களோடு வந்தவர்களை புங்துவிலேயே விட்டுவிட்டு வேறு ஏற்பாடு செய்துகொள்ளவே தர்ச்சன் மண்டிக்கு சுவாமிகள் போனது. உணவுப் பொருள்களில் ஒரு சில தீர்ந்துபோய் விட்டதையும் அம்மண்டியில் வாங்கிவருவதாகச் சொன்னார்கள். எங்கள் சமையல்காரர் மிளகாய், புளி, பெருங்காயம் என்று இது போன்ற பல பொருள்களும் நம் பக்கத்தில் வாங்குவது போல அங்கும் கிடைக்குமென்று கருதி ஒரு பெரிய பட்டியல் போட்டு அனுப்பினார். அதில் உள்ளவற்றில் ஒரு பலம் மிளகாய் மட்டுமே வாங்கிவந்தார்கள். அந்த மிளகாய் அந்த மண்டியில் உள்ள 100, 150 கடைகளில் ஒரு கடையில் மட்டும் இருந்ததாகவும், அப்பொருளை அங்கு யாரும் விரும்பி வாங்கமாட்டார்கள் என்றும், வியாபாரிகளுள் யாராவது எப்பொழுதாவது விரும்பி வாங்கினால்தான், இல்லையானால் தங்கிவிடக்கூடுமென்றும் சொன்னார்கள். அதற்குள் வழி காட்டி "இவ்வளவு மிளகாயையும் என்ன செய்வீர்கள். எங்கள் குடும்பத்துக்கு ஒருஆண்டுக்கு ஆகுமே" என்றான். எங்களவருக்கு ஒருவேளை சமயலுக்கு அது போதாததாகத் தோன்றியது. மற்றப் பொருள்கள் அங்குக் கிடைக்க வில்லை.

## கூடாரம் விளைத்த அச்சம் :

அங்கு தர்ச்சேன் செல்வதிலும் ஒரு சிறு வேடிக்கைச் சம்பவம். தெற்குப்பிராகாரத்தில் மணிச்சுவர்ப் பக்கம்



புங்க்து - யாத்திரைக் கோஷ்டியினரின் கயிலே தெற்குமுக தரிசனம் (15,000 அடி)



கர்ம சக்கரம் (லாமா மதம்)

தீபாராதனைசெய்து கயிலையில் உத்தரவுபெற்ற இடம் வரை நாங்களும் சுவாமிகளோடு சென்றோம். தர்ச்சேன் இருக்கு மிடம் மிக அண்மையில் தெரிந்தது. ஆனால் வெள்ளைக் கூடாரங்கள் 100, 150க்குமேல் போடப்பட்டிருந்தன, அதைக்கண்ட சுவாமிகள் "அங்கே தெரியும் கூடாரங்கள் ஒருக்கால் சீனப்படையினரதாக இருந்தாலும் இருக்கலாம். இந்தநிலையில் தர்ச்சேன் செல்வோமா அல்லது திரும்பிவிடு வோமா" என்று மனம் குழம்பினார்கள். எப்படியும் யாக் ஏற்பாடு செய்து ஆகவேண்டுமே, தைரியமாகச் சென்று வருவதென்று முடிவு செய்துகொண்டு உதவிக்கு மூவர், வழிகாட்டியில் ஜீவன்சிங் இவர்களை அழைத்துக்கொண்டு சென்றார்கள். இரவு 8 9 மணி வரை அவர்கள் திரும்பி வரவில்லை புங்துவுக்கு. அது எங்களுக்கு மிகுந்த கவலை யைத் தந்தது. 9-30க்குமேல் அவர்களைக் கண்டதும் தான் மகிழ்ச்சி. வந்ததும் கேட்டதற்கு "அக்கூடாரங்கள் எல்லாம் மண்டிகள்தாம். எல்லோரும் வந்திருக்கலாம். பல நண்பர்கள் அங்கு வந்திருக்கிறார்கள்" என்று சொன் னார்கள் மகிழ்ச்சி பொங்க.

## சேற்றில் துன்புற்ற குதிரை :

மறுநாட்காலையில் பழைய யாக்குக்காரர்களை அனுப்பி விட்டுப் புதிதாக வந்தவர்களைக்கொண்டு பொதிஎடுத்துவரச் செய்து மேலேசென்றோம். ஒரு கல் தொலைவு நல்ல சதுப்பு நிலம் (அளற்று நிலம்). மேலே புல் முளைத்திருப்பது போல உள்ள பகுதிகளுங் கூட அடியில் சேறுடையதாக இருக் கிறது. தெரியாது அவசரப்பட்டு நடந்தால் சேற்றில் அழுந்த வேண்டியதுதான். எங்களுடன் வந்த குதிரை ஒன்று சேற்றில் அழுந்தித் துன்பப்பட்டது. பலர் முயன்று அப்புறப்படுத்தவேண்டியதாகிவிட்டது. அது கடந்ததும்

போதி மணல உடைய சிறு சிறு குன்றுகள் 100, 200 அடி உயரமுள்ளவை. புங்துவிலிருந்து இவ்வழியே 4, 5 கல் வந்ததும் டாமா புதர் மண்டிய வழியில் 4, 5 கல் நடக்க வேண்டியிருந்தது. வலது கைப்புறத்தில் தொலைவில் இராக்ஷஸ்தால் தெரிகிறது. அதன் கரையில் நூற்றுக் கணக்கான யாக்குகளையும், குதிரைகள் ஆடுகளையும் மேய்த்து நின்றனர் பலரும். பல திபேத்திய கூடாரங்களு மிருந்தன. அந்த இடத்திலிருந்து குறைந்தது 3, 4 கல் தொலைவு இருக்கலாம் இராக்ஷஸ்தால் கரை. இடது கைப்புறத்தில் கயிலைத் தென்முகம் மிக நன்ருகக் காட்சி அளித்தது.

## இராக்ஷஸ தீர்த்தம் - புண்ணியமான கதை :

மானசசரோவரம் ஒரு கல் தொலைவு இருக்கும் இடத்தில் கங்கா சூ என்று வடிகால் நதியும், ஸ்யூ கும்பா (Ziu gomba) என்ற லாமா மடமும் இருக்கின்றன. கங்கா நதி என்ற பொருளில் அதற்கு அப்பெயர் வழங்கப்படுகிறது.

இதுபற்றிய புராண வரலாறு ஒன்றும் உண்டு. முன் காலத்தில் இராக்ஷஸ்தால் எல்லோராலும் வெறுக்கப் பட்டது. அதன் தண்ணீரைத் தொட்டாலே பாவம்; அரக்கர்களுடையது என்று வெறுக்கப்பட்டது. மானசசரோவரம் மிகப் பழங்காலந்தொட்டே புனிதமானதாகக் கருதப்பட்டு வரப்படுவது. அவ்வேரியிலுள்ள பொன் மீன்களில் ஆண் ஒன்றும் பெண் ஒன்றும் தம்முள் சச்சரவிட்டுக்கொண்டு ஒன்றை ஒன்று துரத்திவந்தது. பெண் மீனை ஆண் மீன் துரத்தியது. அவை இரண்டும் மானசக் கரையையும் குடைந்துகொண்டு ஓடின. கடைசியாக இராக்ஷஸ்தாலில் வந்துசேர்ந்தன. அவ்வழியே மானசசரோவரத்திலிருந்து

தண்ணீரும் ஒரு ஆருகப் பெருக்கெடுத்து ஓடிச்சென்று இராக்ஷஸ்தாலில் கலந்தது. அதிலிருந்து அதுவும் புநித மாயிற்று. இப்பொழுது மானசசரோவரம், இராக்ஷஸ்தால் இரண்டையும் புநிதமாக மக்கள் கருதுகிருர்கள்.

கங்காரூ :

இந்த கங்காரூ 2, 3 பர்லாங் அகலமுடையதாக 3, 4 அடி ஆழமுடையதாக 8, 10 மைல் நீளமுடைய தாக மானசத்தின் வடமேற்குமூலையிலிருந்து இராக்ஷஸ் தால் வடகிழக்கு மூலையில் போய்ச் சேருகிறது. அதன் அடித்தளத்தில் பல இடங்களில் வெந்நீருற்றுக்கள் இருக் கின்றன. எப்பொழுதும் அதில் தண்ணீர் ஓடுவது கிடை யாது. மானசத்தில் தண்ணீர் நிறைந்து வழியுங் காலத் தில்தான் ஓட்டம். 10, 12 ஆண்டுகளுக்கோரு முறை மானசத்தில் தண்ணீர் மிக அதிகமாகப் பெருகு மாம். அப்பொழுது இந்த ஆற்றிலும் முழு அளவு தண்ணீர் ஓடிக்கோண்டிருக்குமாம். மானசத்தை விட இராக்ஷசஸ்தால் உள்ள பகுதி கடல்மட்ட உயரத்தில் 50 அடி குறைவானது. இந்த ஆற்றைக் கடந்து ஸ்யூகும்பாவையும் தாண்டி மானசக்கரைக்கு மாலை 4 மணி அளவில் வந்து சேர்ந்தோம். அன்று நடந்த தோலைவு 15 கல். மானச ஏரியின் வடமேற்கு மூலையில் அமைந்திருக்கிறது, ஸ்யூகும்பா. அது அமைப்பால் திருச்சி மலைக்கோவிலையும் அங்குள்ள மௌனமடத்தையும் நினைவுக்குக் கோண்டுவந்தது.

நல்விருந்து :

நாங்கள் மானசக்கரைக்கு வந்த மாலை நேரத்தில் ஒரு அரியகாட்சி விருந்தை எங்களுக்குப் படைத்தளித்தது அவ்

ஏரி. தண்ணீர் கருநீலநிறத்தோடு விளங்கியது. அதன்மீது காற்றில் சுருண்டு புரளும் அலைகள் வெள்ளியை உருக்கி ஓடவிட்டது போல வந்துவந்து கரையில் மோது கின்றன. நீர்க்கரையிலும் ஏரி உள்ளிடங்களிலும் பல் லாயிரக் கணக்கான நீர்ப்பறவைகள், அன்னங்கள் உள்ளன. கரை ஓரமாக நீர்ப்பூண்டுகள் மண்டிக்கிடந்தன. அவை அழுகி அதில் கொசுக்கள் மொய்த்துப் பறந்தன. சுற்றிலும் பலப்பல மலைச்சிகரங்கள். அதன் கிழக்குக் கரையில் உள்ள மலைகளுக்கு அப்பால் செந்தீ வளர்த் திருப்பதுபோல வானத்துக்கும் மண்ணுக்கும் ஒரு படலம்.

அது இளஞ் சிவப்பாகவும் நடுநடுவில் மஞ்சள் கலந்தும் காட்சி அளித்தது. மேலேயும் நீலநிறவிதான மாக வானவெளி. வடக்கே தொலைவில் பனிபடர் கயிலை, வடகிழக்கே பனியடை போர்த்த பண்டி, தெற்கே பனிபோர்த்த மாந்தாதா. இவ்விதமாகப் பேரழகு செய்து நின்றாள் அந்த மானசா. தெற்கே இருந்து அருட்செல்வர் வரும்போழுது தானும் ஒரு நல்லவிருந்து, வரவேற்பு அளிக்கவேண்டாமா? தன் பங்கும் வீணபோகலாமா? இக் காட்சி மாலை 6, 6-30 வரை நீடித்தது. ஆனால் இளஞ் சிவப்பு நிறம் நேரம் ஆக ஆகக் கருஞ்சிவப்பாக மாறி நின்றது.

இந் நல் விருந்தைக் கண்ணால் பருகிக் கருத்தில் பதித்துக்கொண்டோம். இந்த அற்புதக் கோலத்தைக் கண்டு மகிழ்ந்தவாறே அதன் மேற்குக் கரையில் 2, 3 கல் தொலைவு சென்று தண்ணீர்க் கரை ஓரத்தில் 20, 25 அடி தொலைவில் எங்கள் கூடாரங்களை அமைத்துக் கொண்டோம்.

## மானசசரோவரம் :

மானசசரோவரம் 62 மைல் சுற்றளவு உள்ளது. முட்டை வடிவில் அமைந்தது. ஆழம் 250, 300 அடி. கடல் மட்டத்திலிருந்து 15,000 அடி உயரத்தில் அமைந்தது. சுற்றிலும் 8 லாமா மடங்கள் இருக்கின்றன. அன்பர்கள் இதையும் வலம் வருவார்கள். ஒரு வாரத்துக்கு மேல் ஆகும் என்றனர். கரையோரங்களில் பல மலைகள் இருப்பதால் பல ஆறுகள் இதில் வந்து விழுந்து கொண்டே இருக்குமாம். அவற்றைக் கடத்தல் மிகவும் கஷ்டம். ஆகையால் இதை வலம் வரவிரும்பும் திபேத்தியர் பலர் பனி உறை காலத்தில் வலம் வருவார்களாம். அப்பொழுது மானசத்தின் தண்ணீரும் கரைப்பகுதியும் ஒன்ருக ஒரே உறைபனி மயமாக இருக்குமாம். எளிதில் நடக்கலாமல்லவா?

## நானே ? :

இங்கு 3 நாட்கள் தங்கியிருந்து ஸ்நானம் செய்தல் வேண்டும் என்பது எங்கள்திட்டம். யாத்திரையில் மறுநாள் என்ன செய்வதென்பதை முதல் நாளிரவே சுவாமி வித்யானந்தாவோடு கலந்து முடிவுசெய்தல்வழக்கம். அதே போல அன்றும அவர்களை அணுகிக் கேட்டேன். அவர்கள் சொன்ன செய்தி எங்களைத் திடுக்கிடவைத்தது. அது வேருென்றுமில்லை. மறுநாள் அதிகாலையில் மானசத்தில் நீராடி அங்கிருந்து புறப்பட்டுவிடவேண்டுமென்பதுதான். "இங்கு அருகாமையில் திபேத்தியக்கொள்ளையரும், மறு புறத்தில் சீனப்படையினரும் தங்கியிருக்கிருர்கள் என்று செய்தி வந்திருக்கிறது. நாம் வந்த குறிக்கோளடைந்து விட்டோம். இனி இப்பகுதியில் இக்குழப்பமான நாட்களில்

தங்குதல் கூடாது. அதற்குத் தக்கபடி ஸ்ரீலஸ்ரீ குரு மகாசந்நிதானத்தில் தெரிவித்து ஏற்பாடு செய்யுங்கள்'' என்று சொன்னார்கள். எங்கள் மனம் குழம்பியது.

## நாளை பொழுது விடியட்டும் :

ஸ்ரீலஸ்ரீகுருமகாசந்நிதானத்தினிடம்வந்து பக்குவமாக சுவாமிகள் சொன்ன செய்தியை அறிவித்தேன். ''இது பற்றிய சிந்தனை எதுவும் இப்போது வேண்டாம். நாளை பொழுது விடிந்த பிறகு பார்த்துக்கொள்வோம். கவலையை விட்டொழித்து நிம்மதியாகத் தூங்குங்கள். நாளைக்கு இதே இடத்தில் நமது செலவில் எல்லோருக்கும் பண்டாரா உண்டு. அதற்காவன செய்க'' என்று திருமுகத்தில் எவ்வித மாறுதலுமில்லாமல் மகிழ்ச்சியோடு உத்தர வாயிற்று. எங்களில் சிலர் அன்றிரவெல்லாம் நித்திரையில் கம்பாக்களோடும் சீனர்களோடும் போரிட்டுக்கொண்டே இருந்தார்கள். இரண்டொருவர் இரவுமுழுவதும் விழித் திருப்பதாக நினைத்துக்கொண்டே. நன்றாக உறங்கி விட்டார்கள்.

## அஞ்சுவது யாதொன்றுமில்லை :

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் ''கொள்ளையரோ அல்லது சீனரோ யாராயினும் வருபவர்கள் வரட்டும். நம்மை அவர்கள் ஒன்றும் செய்யமாட்டார்கள். அதற்காக யாரும் அஞ்சவேண்டாம். அவர்கள் வந்தால் நம்மிடம் உள்ள பொருள்களை நாமாகவே அவர்களிடம் கொடுத்து விடுவோம். எங்கள் தெய்விக யாத்திரை இனி முற்றுப் பெற எங்களுக்குச் செலவுக்கு வேண்டியதைக்கொடுத்து விட்டு மிஞ்சுவதை எடுத்துச்செல்லலாம் என்போம்.

கொடுத்தாலும் சரி, அல்லது முழுவதையும் எடுத்துச் சென்றாலும் சரி. நமக்கு எதுவும் உகந்ததுதான். இது வரை எவ்வளவோ துன்பங்களில் உடனிருந்து காத்து யாத்திரையை நடத்துவிக்கும் இறைவன் நம்மைக் கைவிட மாட்டான். "நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்" என்ற திருமுறைப் போதனை நம்முள் ஊறிக்கிடக்கிறது. "மலையே வந்து வீழினும்" என்ற பதிகப் பாடலை எல்லோரும் மறந்துவிட்டோமா. அதையெல்லாம் அருளிச் சென்ற ஞானச் செல்வர்கள் நம்மைக் காப்பார்கள்" என்று துணிந்து உத்தரவாயிற்று.

## மானசவாவியும் கயிலைத்திருமலையும் :

மனம் தேறி சுவாமிகளிடம் மறுநாள் அங்கு அப்புனித வாவிக்கரையில் பண்டாரா (அன்னம் பாலிப்பு) நடக்க வேண்டும் என்ற ஸ்ரீலஸ்ரீகுருமகாசந்நிதானத்தின் திருவுளக் குறிப்பையும் தெரிவித்தேன். இச்செய்தி அங்கு நின்ற அனைவருக்கும் நாக்கில் நறுஞ்சுவை ஊட்டியதுபோலும். "கல்கே பண்டாரா தய்யார்" என்று உற்சாகமாகப் பேசிக் கொண்டார்கள். சுவாமிகளும் மேற்கொண்டு ஒன்றும் சொல்லவில்லை.

இரவு 8 மணி வரை அன்று கயிலாயம் எங்களுக்குக் காட்சி வழங்கியது. முன்நிலவுக்காலம் அது. குளிர்ந்த மானசத்தின்கரையில் இளநிலவொளியில் நாங்கள் கயிலைத் தரிசனம் செய்து அமர்ந்திருந்தோம். எங்கள் உணர்வெல்லாம் அந்த இரண்டு புனித இடங்களிலுமே லயித்திருந்தன. காட்சி மிகவும் அரியது.

## இன்பப் போதை :

"இளவேனிற் காலம். பூம்பொழில் ஒன்றினிடையில் குளிர்ந்த பொய்கையினருகில் ஏழிசை வீணை பாட

இளந்தென்றல் வீச தண்ணிலவில் அமர்ந்திருந்தால் எப்படியிருக்கும். மனதில் சொல்லிறந்த மகிழ்ச்சி பொங்கு மல்லவா ? ஐம்புலன்களுக்கும் அக்காட்சி விருந்தளித்து இன்பம்செய்யும் அல்லவா ? அதேபோலத்தான் இறைவன் திருவடி நிழலும் நமக்கு எல்லையில்லாப் பேரின்ப நலன் அளித்து நிற்கும்'' என்று அப்பரடிகள் கண்ட அந்த இன்ப அனுபவம் அன்று அங்கு எங்களுக்கும் கிடைத்தது. மானசவாவி பூம்புனல் பொய்கை. இளந்தென்றல் அங்கே வீசிநின்றது. இளநிலவும் அங்கே இன்பந் தந்தது. ஆனால் நாங்கள்கண்ட திருவடி உண்மையானதிருவடியே. மானசத் திருவடி அல்ல. அது காட்சியாலும் அனுபவத்தாலும் குளிர்ந்து ஒளிவிடும் கயிலைத் தென்முகம். எங்களுக்குத் தரிசனம்தந்து விவரிக்க இயலாத இன்பப் போதையில் எங்களை ஆழ்த்தியது. இந்த இன்ப அனுபவமும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் வழங்கிய உறுதிமொழியும் எங்களில் பலருக்கும் மனதில் அமைதியை உண்டாக்கின. இன்ப உணர்வைத் தந்தன. அன்றிரவு குளிர் அதிகமாக இருந்தும் நல்ல உறக்கம் வந்தது.

## பண்டாராவுக்கு ஆயத்தம் :

மறுநாள் அதிகாலையிலேயே எழுந்து பண்டாராவுக்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் சுவாமிகளின் சமையற்கூடாரத்தில் இட்டு நிரப்பினோம். வழிகாட்டிகளும் பகாடிகளில் பலரும் முடியிறக்கிக் கொண்டு மானசத்தில் இளங்காலை நேரத்திலேயே நீராடி அன்று அளிக்க இருக்கும் பண்டாராவுக்கு உணவு வகை தயாரிப்பதில் மனமகிழ்வோடு ஈடுபட்டார்கள். அந்த நேரத்தில் ஸ்யூகும்பாவிலிருந்து ஒரு சந்நியாசி நம்நாட்டு பட்டணம்பக்கா வில் 20, 25 படி உறைதயிர் (யாக் தயிர்) எடுத்துவந்தார்.



மானஸசரோவரம் கரையில் (15,000 அடி)



மானஸசரோவரம் கூடாரத்தில் காலை வழிபாடு



மானஸசரோவரத்தின் கரையில் காலவழிபாடு செய்தருளல்



மானஸசரோவரக்கரையில் தியானம்

அகப்பை போட்டு வெட்டி எடுக்கவேண்டிய அவ்வளவு கெட்டியாக உறைந்திருந்தது தயிர். விலையும் மிகக்குறைவு தான். யாக் வெண்ணெயும் அதிக அளவு கிடைத்தது.

## மானசவாவியில் திருமஞ்சனம் :

மானசசரோவரக் கரையில் அருணோதயம் மிகமிக அழகாக இருக்கும். மாந்தாதாவின் அப்புறத்திலிருந்து இளங்காலை நேரத்தில் இருளை ஓட்டி வரும் விடியல் நேர அருணோதய ஒளி வரவர அதிகமாகிக்கொண்டே வருவதும், சூரியன் மலைவாயிலிருந்து தங்கப்பாளம்போல வெளிப்படுவதும் ஓடும் படக்காட்சி போலவே நிகழ்கின்றன. காலை இளநேரத்தில் நடுக்குங் குளிராக இல்லை. காற்றும் குறைவாகவே இருக்கிறது. சூரிய ஒளி படுமுன் தண்ணீர் குளிர்நீராக இருக்கிறது. சூரிய ஒளி பட்டதும் குளிர்நீர் உடலுக்கு இதமான தண்ணீராக மாறுகிறது. காலை 5 மணிக்கே அங்கே சூரிய உதயம் ஆகிறது. அங்கே அக்காட்சிகளை அனுபவித்துக்கொண்டே ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் திருமஞ்சனத்துக்கு எழுந்தருளினார்கள். நாங்களும் உடன் சென்றோம். தண்ணீரில் இறங்கினோம். அந்தநேரத்தில் ஒரு பெரிய மேகம் சூரியனை மறைத்தது. தண்ணீரில் இறங்கியதும் குளிர்நடுக்கத் தொடங்கிவிட்டது. குரு தோத்திரம், கோளறு பதிகம் இவற்றைச் சொல்லித் திருமஞ்சனம் செய்து முடித்தார்கள் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில். நாங்களும் அவர்களோடு நீராடினோம். அடியிற் கீழே கிடக்கும் கற்கள் 5, 6 அடி ஆழத்திலுங் கூடத் தெளிவாகத் தெரிகின்றன. அவ்வளவு தெளிவான தண்ணீர்; குடிப்பதற்கு மிகவும் மதுரமாக இருக்கிறது. இறங்கி முதலில் தலைமுழுகும் பொழுது நடுக்குங் குளிராக இருந்த தண்ணீரில் பிறகு

நின்று குளிப்பது ஒரு தனி இன்பமாகவே இருந்தது. தோலைவிலே கயிலை வெள்ளை நிறத்தில் காட்சி வழங்கியது. திருமஞ்சனம் முடித்து ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் அதன் கரையிலமர்ந்து அனுஷ்டானுதி வழிபாடுகளைச் செய்து தியானத்தில் அமர்ந்தார்கள்.

## தீர்த்த வழிபாடு :

மானசத்தடாகம் புனிதமானது; வழிபாட்டுக்குரியது. ஆகையால் அதற்குத் தூபதீபங்காட்டி நிவேதனமிட்டு வழிபாடுகள் செய்தோம். இவ்வழிபாடுகளை ஸ்ரீமத் சுவாமி வித்யாநந்தா அவர்கள்முன்னின்றுநடத்திஞர்கள். பண்டாராவுக்காகத் தயாரிக்கப்பட்டவைகளே நைவேதனங்கள்.

அங்கு ஸ்யூகும்பாவிலுள்ள திபேத்திய டாபா சந்நியாசிகள் மானசத்துக்கு வழிபாடுகள் செய்கிருர்கள். அவர்கள்வழி வைதிக சம்பிரதாயத்தில் பூசைகள் செய்ய ஏற்பாடுசெய்யப்பட்டன. கலசங்கள்வைத்து ஒருவித இசை ஒலியில் மந்திரங்கள் ஓதினர். கலசத்தில் தண்ணீர் வைத்து அதன் மீது முடியிட்டு அதில் மயில் இறகுகள் சோருகி அதற்கு மணிமாலை இட்டு அலங்கரித்தார்கள். கையில் மயிற்பீலியும் வைத்திருந்தார்கள். அந்தப்பீலியிஞல் அக்கும்பங்களைத் தோட்டுத்தோட்டு மந்திரம் சோன்ஞர்கள். நம் நாட்டில் தர்ப்பை வைத்துச் சேய்வது போன்ற சடங்கு அது. இரண்டு மூன்று மணி நேரம் கையில் மணி வைத்து அடித்து அடித்து வழிபாடுகள் சேய்தார்கள். அதற்குரிய சேலவு ரூ. 10. பிறகு அவர்களுக்கு நாமாக ஏதாவது இனும் கோடுக்கலாம். மதிய உணவும் கோடுக்கலாம். மானசத்தை அம்பிகையின் அருள்வேள்ளமாக எண்ணி இவ்வழிபாடுகள் நடத்தப்பட்டன.

## அன்னம் பாலிப்பு :

உச்சிவேளை. நல்ல சூரிய ஒளியில் எல்லோரும் வரிசையாக அமர்ந்தோம்; பண்டாரா தொடங்கப்பட்டது. முதலில் துதிப்பாடல்களைப் பலரும் பாடினர்; பல மொழி களிலும் பாடப்பட்டன; உடன் வந்த செட்டியார் நம் தமிழ்த் திருமுறைப்பாடல்கள் பாடினுர். உணவு வகைகள் பரிமாறப்பட்டன. அல்வா, கிச்சடி, வெண்சாதம், பக்கோடி, மால்புவா (அதிரசம்), மோர்க்குழம்பு, வடை முதலிய பல வகைகள். வடநாட்டவர் பெரிதும்விரும்பி ஏற்றவை அல்வாவும், கிச்சடியும், மால்புவாவும், தயிரும் தான். சிலர் பக்கோடி வாங்கிக்கொண்டார்கள். காரப் பகோடாவை பக்கோடி என்பர். தென்னுட்டு நண்பர்கள் தித்திப்புக் குறைவாக பக்கோடி, கிச்சடி, வெண்சாதம், மோர்க்குழம்பு, வடை, தயிர் இவற்றை மிகுதியாக வாங்கி உண்டனர். வடவர்கள் மெதுவாக சுவைத்துச் சுவைத்து உண்டுகொண்டே இருந்தார்கள். நம்மவர்கள் ஒரு சில நிமிஷ நேரங்களில் அதை முடித்துக்கொண்டு அதிக அளவு தண்ணீர் குடித்து எழுந்தார்கள். வழக்கம் போல சுவாமி வித்யாநந்தா அவர்கள் "பார்த்தீர்களா. சாப்பாட்டிலும் தென்னுட்டவர் சோஸ்திதான்" என்றார்கள். எல்லாவற்றிலும் தயிர், மோர்க்குழம்பு, வடை இவை அன்று நல்ல முறையில் அமைந்ததைப் பாராட்டினுர்கள் நம்மவர்கள். அவர்கள் அல்வா, மால்புவா, பக்கோடி, கிச்சடி இவற்றைப் பாராட்டினர். இவ்விதமாகச் சிரிப்பும் விளையாட்டுமாக அன்று அப்புனித இடத்தில் ஒரு பெரிய அன்னம் பாலிப்பு எல்லோரும் மகிழும் வண்ணம் நடை பெற்றது. மானச வழிபாட்டுக்காக வந்த திபெத்திய சந்நியாசிகள், அவர்களில் வேறு சிலர், யாத்திரை

கோஷ்டியார், இதுவல்லாது உடன்வந்த வேறு யாத்திரைக் காரர்கள், குதிரைக்காரர்கள், யாக்வாலாக்கள், தண்டியாட் கள் முதலிய யாவரும் இந்த விருந்தில் ஆசைதீர, வயிறு புடைக்க பலநாள் காத்திருந்த் உணவுவகை பலவற்றை யும் உண்டார்கள். அந்தத் தண்ணீரும் அமுதபானம் போன்றே ருசித்தது. நம்மவர் சிலர் அந்தத் தயிரைப் பலமுறையும் வாங்கிவாங்கி அருந்தினர். வாய்க்கு ருசியாக இருந்தது. ஆனால் சிறு மோச்சையடித்தது. வெண்ணெ யும் அப்படியே. இது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருமுன்னரே நடைபெற்றது. ஈத்துவக்கும் இன்பம் கண்ட அவர்கள் ருசிதேடிய பல நாக்குக்களுக்கும், வயிறு களுக்கும் இன்விருந்தளித்து ஏற்பவர்கொள்ளும் மகிழ்ச்சி யைக் கண்டு தம்முள்ளே மகிழ்ந்திருந்தார்கள். அன்று எல்லாருடைய பேச்சிலும் ஒரு தனி மகிழ்ச்சி துள்ளியது.

## உண்ட களை :

உண்டகளை தோண்டர்க்குமுண்டு என்ற வேடிக்கைப் பேச்சு நம் நாட்டில் உண்டல்லவா ? அது அனுபவத்தில் அன்று கைகூடியது. உண்ட சிறிது நேரத்தில் அவரவரும் படுக்கையில் படுத்துறங்கினார்கள். சுவாமி வித்யாநந்தா உள்படத்தான். இவ்விதமாக ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத் தில் முதல்நாள் அருளிச் செய்ததன் போருள் விளக்கத்தைச் சேயலில் - அனுபவத்தில் கண்டோம். மாலை 4 மணிக்கு மேல்தான் பலரும் எழுந்தார்கள்.

## மானஸவாவியின் ஞாபகார்த்தம் :

எங்களில் சிலர் உச்சி 2 மணி அளவில் எழுந்தோம். கரை ஓரமாகத் தேற்கு நோக்கிச் சென்றோம். அலை அடிக்குமிடங்களில் சில ஒளியுள்ள மணிக் கற்கள் சூரிய

ஒளியில் பளிச்சிட்டன. முழுவிளைவில்லாத நல்ல நவ மணிகள்தாம் அவை. அந்த ஏரியின் அடித்தளத்தி லிருந்து அரித்து வெளியே தள்ளப்படுபவை. அவைகளில் நல்ல மணிகள் சில பொறுக்கி எடுத்துவந்தோம். வட நாட்டினரில் சிலர் மானசக் கரையில் இறந்து ஒதுங்கிய மீன்களை எடுத்துவந்து மகிழ்ந்தார்கள். அவைகளை வெய்யிலில் காயவைத்து பதம்செய்துவிட்டால் பேய், பிசாசு, பில்லிசூனியம் போன்றவற்றைப் போக்கடிக்க உதவுமாம். புனிதப் பிரசாதமாகவும் ஊரில் கொண்டுபோய் விநியோகிக்கவும் செய்வார்களாம்.

## உறைவும் உருகும் நிலையும் :

இந்த வாவியில் கரை ஓரங்களில்தான் அலை அடிக்கு மாம். நடு இடங்கள் நிச்சலனமாக இருக்குமாம். அதில் கயிலைச்சிகரமும்,மாந்தாதாச்சிகரங்களும்மிகத்தெளிவாகக் காட்சி வழங்குமாம். நடுவில் பெருஞ்சுழல் ஒன்றிருப்ப தாகவும் சொல்லப்படுகிறது. வடகிழக்கு ஓரங்களில் மானசத்தில் வெந்நீர் ஊற்றுக்கள் பல இருப்பதாகவும், அங்கு எக்காலத்திலும் தண்ணீர் வெதுவெதுப்பாகவே இருக்குமென்றும் கண்டு எழுதி வைத்திருக்கிறார்கள். நவம்பர் மாத மத்தியில் உறையத் தொடங்கி ஏப்ரலில் உருகத்தொடங்குமாம். உறையும் காலத்திலும் உருகும் காலத்திலும் மானசத்தின் அடியில் முக்கல்முனகல் முதலிய வேதனை ஒலிகளும், யானை, புலி முதலியன சீறுவதைப் போன்ற பெரும்முழக்கங்களும் கேட்டுக்கொண்டே இருக்கு மாம். வேதனைக்கும் பயங்கரத்துக்கும் நடுவில் மெல்லிசை ஒலியும் எழும் என்று கண்டுவந்தவர்கள் சொல்லுகிறார்கள். உருகிக் கெட்டியானதும் கடப்பாறைக்கும் பெயராத அப் பனிக்கட்டி உருகுங் காலத்தில் கண்ணாடி உடைவதுபோல

எளிதில் உடைந்து தூளாகுமாம். முழுவதும் ஒரே பாளமாக உறைந்து பிறகு உருகும்காலத்தில் அதில் வேடிப்புக்கள் ஏற்பட்டுக் கொஞ்சம் கொஞ்சமாக அவை சிதைந்து தண்ணீர் வெளிப்பட்டு அதில் மிதந்து அலைக்கரங்களால் கரைகளில் துண்டங்கள்ஒதுக்கப்படுமாம். அக்காலங்களில்கரை ஓரங்களில் கண்ணுடிப் பாளங்களை ஒதுக்கியிருப்பது போலக் காட்சி வழங்குமாம். தண்ணீரிலும் துண்டு துண்டாகப் பிரிந்த பனிக்கட்டிகள் பல மாதங்கள் மிதந்துகொண்டே இருக்குமாம். மே மாதக் கடைசியில் - பொதுவாக சித்திரை கிருஷ்ணபக்ஷம் துவாதசி அன்று பனி உருகிப் பழைய உருப் பெறும் என்று திபேத்தியர் நம்புகிறுர்கள். பனிக்கட்டியே இல்லாது தண்ணீராக மாறும். உருகத் தொடங்கியதும் இதற்குத் திபேத்தியர் வழிபாடுகள் செய்வர்.

## காற்றும் புயலும் :

இப்பகுதியில் எப்பொழுதும் காற்றும் அதிகம் ; புயல் வேகத்தில் அடிக்கடி வீசுதலும் உண்டு. பனிக்காலத்தில் பனிப் புயல்கள் உண்டாகுமாம். மழை மிகக் குறைவு. வாவிக் கரையில் இடும் கூடாரங்கள் பிய்த்தெறியப்பட்டுப் பலர் துன்புற்றிருக்கிருர்கள். மேகச்சேறிவில்லாமலே இப்பகுதியில் ஆலங்கட்டிமழை பெய்யுமாம்.

## சிந்தையில் உறைவு :

மனதிற்கு அமைதியையும் மகிழ்ச்சியையும் தந்து தெய்வீகம் விளங்க அமைந்திருக்கிறது இவ்வேரி. இவ் வெழில்மிக்க ஏரியைக் கண்டவர்கள் வாழ்நாளில் இதை மறக்கமுடியாதபடி அவர் சிந்தையில் ஊறிப் பதிந்து நின்று

விடும்: உலகில் மிக உயரமான இடத்தில் அமைந்த பெரிய ஏரி. மானசக் கரையில் பல சித்தர்கள் இன்றும் வாழ்ந்து வருவதாகச் சொல்லுகிருர்கள். விஷ்ணுபீடம் அதன் வடக்கே இருக்கிறது.

### தோற்றம்:

ஸ்காந்தம் - மானச காண்டம் என்னும் பகுதியில் இதைப்பற்றி விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. மகா விஷ்ணுவின் அவதாரமான தத்தாத்ரேய மகரிஷி காசி யரசன் தன்வந்திரிக்குக் கயிலாயத்தின் சிறப்புக்களைச் சொல்லும் பகுதியில் இத்தடாகத்தின் சிறப்புக்கள் கூறப் பட்டிருக்கின்றன.

### பிரமபுத்திரர்கள் தவம்: மானசம்:

பிருமபுத்திரர்கள் இமயத்தின் வடக்குப் பகுதியில் கையிலையங்கிரியை நோக்கித் தவம் செய்தனர். சிவ பார்வதி தரிசனத்துக்காகப் பன்னிரண்டு ஆண்டுகள் தங்கி உபவாசமிருந்து தவம் மேற்கொண்டார்கள். அக் காலத்தில் அங்கே தண்ணீரே கிடையாது. மழையும் பெய்யவில்லை. தண்ணீர் இல்லாது அவர்கள் தவித்தனர். அதைப் போக்கிக்கொள்ளப் பிரமனை நோக்கி வேண்டினர். கடும் தவமும் செய்தனர். பிரமன் அவர்கள் முன் தோன்றி, 'உற்ற குறை யாது' என்று வினவினுன். அவர்கள் " கயிலையை நோக்கித் தவமிருக்கிருேம். நாள் தோறும் ஸ்நானம் செய்ய மந்தாகினிக்குச் செல்லவேண்டி யிருக்கிறது. நாங்கள் ஸ்நானம் செய்யவும் தவம் செய்யவும் ஏற்ற இடம் ஒன்று உண்டாக்கித் தர வேண்டும் " என்று வேண்டினர். பிரமன் தன் மனச்

சங்கற்பத்தால் மானசீகமாக இவ்வாவியை உண்டாக்கினுன். பிரமபுத்திரர்கள் ஆனந்தமிகக் கோண்டனர். அத்தடாகத்தில் நீராடி உண்ணு நோன்பு மேற்கோண்டு குறித்து வந்த தவத்தை அதன் கரையில் செய்து முடித்தார்கள், பன்னிரண்டு ஆண்டுக் காலம் அவ்வரிய தவத்தை இயற்றினர்.

## தங்கப்பிழம்பு :

பிரமன் மனச்சங்கர்ப்பத்தால் உண்டாகிய அவ்வேரி மானசசரோவரம் எனப்பேயர் பேற்றது. அத்தடாகத்தின் நடுவில் தங்கப் பிழம்பு ஒன்று தோன்றி நின்றது. பேருமான் அவ்வேரியின் நடுவில் அப்பிழம்பு உருவில் எழுந்து காட்சி வழங்கினுன். அவர்கள் குறிக்கோள் முற்றுப்பேற்றது.

## முத்துத்தண்ணிர் :

மேலும் தத்தாத்ரேயர் பல அரிய காட்சிகளேக் கண்டனர் அங்கே. அவை :

“கயிலே பரசிவம் எழுந்தருளியிருக்கும் இடம். அங்கிருந்து விஷ்ணுபாதத்தின் வழியாக தாமரைத் தண்டில் தண்ணீர் ஒழுகி வேளிவருவதுபோல கங்கை ஊறி ஒடிவருகிருள். மானசசரோவரத்தில் சிவபேருமான் பார்வதி சகிதராய் அரச அன்னவடிவில் உலவி வருவதைக் கண்டேன். பிரமனுடைய மன எழுச்சியால் இவ்வேரி எழுந்தது. அதில் எப்போழுதும் மகாதேவரும் (சிவன்), தேவர்களும் வசித்துவருகிருர்கள். சதத்ரு, சரயு நதிகளும் மற்றும் ஆண் பேண் நதிகள் பலவும் அதில் உற்பத்தியாகின்றன. அதன் அடிமண்ணே எடுத்து உடம்பு



மானஸசரோவரத்தில் அனுஷ்டானம் செய்தல்



மானஸசரோவரத்தில் திருமஞ்சனமாடுதல்

முழுவதும் பூசிக்கொண்டு அதில் நீராடுவோர் பரம லோகத்தை அடைவர். அத்தண்ணீரைக் குடிப்பவர் சிவலோகத்தை அடைவர். நூறு பிறவிகளில் செய்த பாவம் கழியும். இத்தடாகத்தின் பெயரைக் கேட்ட மிருகங்களும் பிர்மலோகத்தை அடையும். இதன் தண்ணீர் முத்துப்போன்றது. கயிலை மானசசரோவரம் இரண்டும் இருப்பதால் இமயத்திற்கு ஒப்பான சிகரங்கள் எதுவும் இல்லை. இமாலய தரிசனம் கிடைத்த உடனே நம் பாவங்கள் நீங்கத் தொடங்குகின்றன.''

## பார்வதீ தோற்றம் :

பராசக்தி இவ்வுலகில் அவதரித்துப் பரமேஸ்வரனை மணந்த மூன்று கதைகள் உலகப்பிரசித்தம். தக்கன் மகளாய்ப்பிறந்து தாட்சாயணி என்ற பெயர் ஏற்றுப் பரமனை மணந்தாள். தக்கன் பரமனை மதியாது தவம் செய்து அல்லல் மிகப்பட்டதும், அவனால் மற்றதேவர்கள் பல துன்பங்களை ஏற்றதும் பலரும் அறிந்த ஒன்றுதான்.

பெருமானை அவமதித்தொழுகிய தக்கன் மகளாய்த் தான் தோன்றியமைக்கு வருந்தினாள் தேவி; அப்பெயர் தாங்கிய உடலையும் விட்டு நீங்கினாள். அப்பெயர் அழியத் தவம் ஏற்றாள். விருப்பத்தைப் பெருமானிடம் விண்ணப் பித்துக்கொண்டாள். 'இமயமலையின் அரசன் மகளாய்ப் பிறந்து எம்மை மீண்டும் மணத்தால் வந்தடையலாம்' என்று வரங்கொடுத்துப் பரமன் யோகத்தில் ஆழ்ந்தான்.

இமய அரசன் (பர்வதகுல அரசன்) மேனகை என்ற மனைவியை உடையவன். இருவருக்கும் மகப்பேறில்லை. இருவரும் பல நோன்புகள் நோற்றனர். பரமனை நோக்கித்

தவமிருந்தனர். காட்சி வழங்கி, அவர்களுக்கு ஒரு பெண் மகவு கிடைக்குமென்றும், உரிய பருவத்தில் தாம் வந்து அதை மணத்தால் ஏற்பதாகவும் வரமருளி மறைந்தார் அப்பரமன். அவர்கள் நாள்தோறும் விடியலில் மானச சரோவரத்தில் நீராடிக் கயிலேயை வலம் வந்து தரிசிக்கும் நியமம் உடையவர்கள். அவ்வாறே மானசசரோவத்திற்கு நீராட வந்தனர். அதன் நடுவில் நீலோத்பல மலர் ஒன்றில் தேவி சிறிய பச்சிளங்குழந்தையாய்த் தோன்றியிருந்தாள். அதைக்கண்டு மிகக்களிப்போடு எடுத்துத் தன்மனேவியிடம் தந்தான் பர்வதமாமன்னன். பர்வத அரசன் மகள் பார்வதி ஆனுள். அத்தம்பதிகள் நேசம் மிகக்கொண்டு அக்குழந்தையை அருமையாக வளர்த்துவந்தார்கள். பரமனேயே பதியாகக் கொள்ள வேண்டித் த்வம் செய்து அவ்வாறே சிவபெருமானே மணந்தாள் அப்பராசக்தி.

அடிச்சுவடுகள் :

वीतजन्मजरसं परं शुचि ब्रह्मणः पदमुपैतुमिच्छताम् ।
आगमादिव तमोपहादितः संभवन्ति मतयो भवच्छिदः ॥

மலர்ந்ததாமரையும் இனிமையாகக் கூவும் ஹம்ஸக்கூட்டமும் நிரம்பிய மானஸம் என்ற சரஸ் இங்கு உள்ளது.

विकचवारिरुहं दधतं सरः सकलहंसगणं शुचिमानसं
शिवमगात्मजया च कृतेर्ष्यया सकलहं सगणं शुचिमानसं

(கிராத - சர்க் 5 - சுலோ. 13)

சிவபெருமான் உமையுடன் விடியற்காலேயில் கங்கா நதியில் நியமத்துடன் ஸ்நானம் செய்து செல்லுகிருர்.

பூமியில் படிந்துள்ள இடதுபக்கத்து அடிச்சுவடு செம் பஞ்சுக்குழம்பிஞல் நிறம் மாறியுள்ளது. சுவடுகள் பெரியனவும் சிறியனவுமாக உள்ளன. இவ்வழியைக் கூர்ந்து நோக்கிஞல் சிவபெருமான் மாதொருபாகஞய் இருப்பது தெளிவாகிறது.

इह सनियमयोः सुरापगायामुषसि सयावक सव्यपादरेखा
कथयति शिवयोः शरीरयोगं विषमपदा पदवी विवर्तनेषु

(கிராத - சர்க் 5 - சுலோ 40)

तत्र व्यक्तं दृषदि चरणन्यासमर्धेन्दुमौलेः (மேகம் - 40)

அங்குக் கற்களில் பிறைமுடியரின் அடிச்சுவடுகளைத் தெளிவாகக் காணலாம்.

## கயிலாய புராணம் : (காங்ரி கர்ச்சோக்)

மானசசரோவரத்தைச் சுற்றி ஏழு வரிசை மரங்கள் உள்ளன. வாவியின் நடுவில் நாகர்களின் அரண்மனை ஒன்றிருக்கிறது. ஏரியின் மேற்பரப்பு அரை வட்டவடிவம். இவ்வேரியின் நடுவில் தெய்வீக நாவல் மரம் ஒன்று வளர்ந்துநிற்கிறது. அம்மரத்திலிருந்து இவ்வேரியில்அதன் பழம் விழுகிறது. ''ஜம்'' என்ற ஒலி எழும்பிப் பரவுகிறது. அதஞல் அம்மரத்திற்கு ''ஜம்பு'' என்று பெயர். அப்பழங்களை நாகர்கள் உண்ணுகிருர்கள். சில பழங்கள் தங்கமாகி அவ்வேரியின் அடியிடத்தை அடைகின்றன.

மாந்தாதா முதன் முதல் இவ்வேரியைக் கண்டுபிடித்தான். இந்த ஏரியின் கரையில் அமர்ந்து தவம்செய்தான். அதஞல் இவ்வேரி ''மான்றி'' என்ற பெயர் பெற்றது. உர்க்கியன் இதில் அவதரித்தார்.

புத்தபுராணம் :

அனவதப்தம் என்று பெயர். வெப்பமும் சஞ்சலமும் இல்லாதது. நடுவில் நாவல்மரமிருக்கிறது. அப்பழம் உடல்துன்பம் மனத்துன்பங்களைப் போக்கவல்லது. உயிருக்கு உய்வளிக்க வல்வது, அனவதப்தம் என்ருல் மோட்சம் என்ற மறு பொருளும் உண்டு. இதில் தாமரை மலர்கள் பூக்கின்றன. அவற்றில் ஒரு பெரிய மலரில் புத்தர் அவதரித்தார். போதிசத்வ அமிதபா அதில் அவதரித்தார். ஏனைய மலர்களில் புத்தர்களும் போதி சத்வர்களும் எழுந்தருளியுள்ளார்கள். அன்னங்கள் இதில் நீந்தி விளையாடுகின்றன. சூழ உள்ள மலைகளில் சதமூலிகைகள் இருக்கின்றன.

சொர்க்கபூமி கயிலைமானசப் பகுதி. அங்குத் துக்கம் கஷ்டம், கவலை, ஆசை, இறப்பு இவை எதுவுமில்லை. பன்னிரண்டாயிரம் ஆண்டுக்காலம் அங்குப் பலரும் வாழ்ந் திருப்பர். இங்கு மழையில்லை. வேற்றுமை உணர்ச்சி, பிரிவுணர்ச்சி, யுக மாறுதல் எதுவும் கிடையாது.

தேவகட்டம் :

அது மனிதத்தலை போன்ற அமைப்புடையது. மானசத்தின் தலைப்புறம் குர்க்கியால் சுங்கோ (Gurgyal chungo) என்று பெயர். அங்குத்தான் தேவர்கள் நீராடுவர். அவர்கள் உறைவிடமும் அதுவே. மிக அழகான இடம். அங்கே நாம் தவருது நீராடுதல் வேண்டும். (அது இப்பொழுது வடகிழக்குப்பகுதியில் சிறு நீர்நிலையாகத் தனித்திருக்கிறது. இதைச் சுற்றிலும் பல சிறு ஏரிகள் இருக்கின்றன.)

## ஏரிப் பெயர்கள் :

திபேத்தியர்கள் இவ்வாவியை ட்சோரிம்போஷி (Tso - Rimpoche), மஃபாங் ( Maphang-வேல்லமுடியாதது ), ( Mapham yum - Tso ) மஃயாம் யும் ட்சோ, மதோவா ( Mathova ), மவாங் ( Mavang ) என்றும் பேயரிட்டு அழைப்பார்கள். இதுபற்றிப் புத்த கோசத்தில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

## சீன புராணம் :

சீன புராணத்தில் இந்தச் சின் ( Chin ) ஏரியில் குழந்தை உருவில் புத்தர் ஆயிரமிதழ்த் தாமரையில் அறிதுயிலமர்ந்திருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அவர்கள் மா - பியூ - மு - டா - லை ( Ma-piu-mu-ta-lai) என்றும் இவ் ஏரிக்குப் பேயர் சொல்கிருர்கள். அவர்களுடைய ஷூயி - டவோ - டி - காங் (Shui - tao - ti - kang) என்ற ஒரு சிறந்த இலக்கியத்தில் இவ் வேரியைப் பற்றி விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

இங்கு ஸ்நானம், ஜபம், தர்ப்பணம் முதலியன மிகச் சிறந்த பயன்தருவனவாகும்.

## ஜப்பானிய இலக்கியம் :

கேகன் ( Kegon ) என்னும் ஜப்பானிய புராண இலக்கியம் பிரபலமானது. அனவதப்தத்தைக் கருப்பொருளாகக்கோண்டு அமைந்தது. புத்தநூல் '' ஆர்ய புத்த அவதர்ன்சக நாம மகா வைபுல்ய சூத்திரம் '' என்பதை அடியோற்றியது.

## ஜம் :

அதில்; ஜம்புத்வீபம் இதற்குத் தேற்கே இருக்கிறது. கனமான போருள் கீழே விஞுதல் என்ற போருளில் ஜம்புத்வீபம் என்ற பேயர் ஏற்பட்டது. இவ் வேரியின் நடுவில் ஒரே ஒரு பேரிய மரம் இருக்கிறது. அதினின்றும் தண்ணீரில் பழம் வீழுந்துகோண்டேயிருக்கும். ஆன்ம வர்க்கத்திற்கு ஏற்படும் எல்லாத் துன்பங்களும் அந்தப் பழத்தை உண்ணுவதால் நீங்கும். அம் மாபேரும் சக்தி உடையது அப்பழம். ஆகையால் அதை அடையத் தேவரும், மனிதரும் பேரும் முயற்சி சேய்கிறுர்கள். அப்பழம் தண்ணீரில் விழும்போழுது " ஜம் " என்ற ஒலி எழும்.

## நான்கு ஆறுகள் :

இந்த ஏரியிலிருந்து நான்கு போக்குகள் ( ஆறுகள் - வடிகால்கள் ) ஓடிக்கோண்டிருக்கின்றன. தேற்கே மாப்சா கம்பாப் - மயில் வாயிலிருந்து வேளிவருகிறது ; மேற்கே லாங்சேன் கம்பாப் - எருதின் வாயிலிருந்து வேளி வருகிறது ; கிழக்கே தம்சோக் கம்பாப் - குதிரை வாயிலிருந்து வேளிவருகிறது ; வடக்கே சிங்கி கம்பாப் - சிங்க வாயிலிருந்து வேளிவருகிறது. இந்த நான்கு நதிகளும் மிகப் புநிதமானவை.

## நதி மணல் :

தேற்கேயிருந்து வேளிவரும் ஆற்றின் மணல் வேள்ளி ; மேற்கில் தங்கம் ; வடக்கில் வயிரம் ; கிழக்கில் பச்சை (மரகதம்). இந்த ஆறுகள் இவ்ஏரியை ஏழு முறை சுற்றி வலம் வந்து பிறகு தன்தன் வழியே சேல்கின்றன.

## தாமரை மலர்கள் :

புத்த அமிதபா விளங்கும் சுவர்க்க லோகத்தில் அமைந்திருக்கக்கூடிய பெரிய தாமரை மலர்களைப் போலவே இவ்வேரியிலும் மிகப் பெரிய அளவில் தாமரை மலர்கள் பூத்து அழகு செய்கின்றன.

## புத்தரும், போதிசத்வர்களும் :

புத்தரும் போதிசத்வர்களும் அந்தத் தாமரை மலர் களில்வீற்றிருந்து அருட்காட்சி வழங்குகிறார்கள். சுற்றிலு முள்ள மலைகளில் நூற்றுக் கணக்கான மூலிகைகளும் பச்சிலைகளும் படர்ந்து விளங்குகின்றன. அங்குத் தேவ லோகப் பறவைகள் தெய்விகப் பாடல்களை இசைத்துக் கொண்டு நிற்கின்றன. சுருக்கமாகச் சொன்னால் அனவ தப்தம் பூலோக சுவர்க்கம். உயிர் வாழும் புத்தரும் 500 போதிசத்வர்களும் இந்த ஏரியின் வடமேற்கில் அமைந்திருக்கும் கைலாச சிகரத்தில் அமர்ந்திருக் கிறார்கள்.

## மான்றி :

500 நித்திய சூரியர்கள் (ஒளி உடம்பு பெற்றவர்கள்) மான்றி (மாந்தாதா) மலையில் தங்கியிருக்கிறார்கள். அங்கே தங்கி எல்லையற்ற தவத்தைச் செய்துவருகிறார்கள். இது மானசசரோவரத்தின் தெற்குக் கரையில் அமைந்தது.

## ஞானிகள் காணக்கூடியது :

இந்த உண்மைகள் நம்முடைய மாயை சூழ்ந்த புன்புலால் யாக்கையோடு ஊனக் கண்களைக்கொண்டு காண முடியாது. தவவாழ்வு வாழ்ந்து முதிர்ந்த ஞானிகள் தாம் காணலாம்.

## மணப்பெண்ணும் கணவனும் :

லாக் - கால் - ஸோ (Lak - gal - Tso) ராக்ஷஸ்தால் 10, 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை போங்கிவரும். அத் தண்ணீரும் மானசசரோவரத்தின் தண்ணீரும் ஒன்ருகிக் கலந்துவிடும். மணப்பேண்ணுகிய மானசசரோவரத்தை அதன் கணவனுகிய இராட்சஸ்தால் வந்து தழுவிக் கோள்கிறது, கூடுகிறது என்று அப்புராணத்தில் சோல்லி யிருக்கிறது. அதன் சுருக்கம் இது.

## ஒரே நீர்நிலே :

நிலநூல் வல்லார் மிகப் பழங்காலத்தில் இது ஒரு பேரிய மலேப்பகுதியாக இருந்ததாகவும், பிறகு இங்கு ஏற்பட்ட நிலநடுக்கத்தால் ஒரு பேரிய பள்ளம் ஏற்பட்ட தாகவும், மானசசரோவரம், இராக்ஷஸ்தால் என்ற இரண்டு ஏரிகளும் அப்போழுதில்லாது; ஒரே பேரிய நீர்நிலேயாகிப் பக்கத்தில் உள்ள உயர்மலேகளில் போழியும் மழையாலும் பனியாலும் நிரம்பியதேன்றும், பின்ஞெரு காலத்தில் உண்டான மற்ருெரு நில நடுக்கத்தில் அவ்வேரியின் நடுவில் மண் வேளிப்பட்டதால் மானசம், இராக்ஷஸம் என்ற இரண்டு நீர்நிலேகளாகப் பிரிக்கப்பட்டன என்றும் சோல்லு கிருர்கள். ஆதிகாலத்தில் கயிலே மானசசரோவரப் பகுதி முழுவதும் கடலுக்குள் இருந்திருக்கிறதேன்பதற்குள்ள அடையாளங்கள் பல இருக்கின்றன.

## தொட்டிலாட்டல் :

அருமையிடத் தாயுள்ள பிள்ளேகள் பிறந்ததிலிருந்து அழகான தோட்டிலில் கிடத்தப்பட்டு தாலாட்டுச் சோல்லி ஆட்டப்பேறுவர். அந்த இசையிலும் ஆட்டத்திலும்

ஆனந்தமாகப் படுத்து உறங்கிவிடும் அக்குழந்தை. தாய் தந்தையற்ற கயிலேநாதனைத்தோட்டிலிலிட வல்லவர் ஆர்? அவருக்கு அருமையிட யார் இருக்கிறுர்கள்? இந்த ஏக்கமும் பரமேஸ்வரனுக்கு இருக்கும் போலும். அதைத் தீர்த்துக்கொள்ள ஒரு தாயையும் ஏற்ருன். அதுதான் மானசம். அத்தாய் தன் மடியிலே கயிலேநாதனைக்கிடத்தி ஓயாது நாள்முழுவதும் தாலாட்டிச் சீராட்டிக்கொண்டே இருக்கிறுள். இது புராணவரலாற்றில் கிடையாது. ஆனுல் நித்தமும் நிகழ்வதுதான். மானசத்தின் நடு இடத்தில் அலேயே இல்லாது தண்ணீர் நிலேத்து நிற்கும் என்ற செய்தி மேலே சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் கயிலேச் சிகரத்தின் மிக அழகான பிரதிபலிப்பு அங்கே இருக்கு மாம். நேரில் காண்பதைவிட அந்த நீரில் காண்பது மனதை மயக்குவதாக இருக்குமாம். மாந்தாதாப் பக்கம் நின்று பார்த்தால் நடுத் தண்ணீரில் கயிலேச் சிகரமும், கயிலேப்பக்கம் நின்று பார்த்தால் மாந்தாதாச் சிகரமும் அங்கே மானசத்தின்மடியில் கிடத்தப்பட்டு துயின்றிருப்ப தாகத் தெரியுமாம். இரண்டு சிகரங்களும் அங்கே தங்க நிறத்தில் நிழலுருவில் காட்சி அளிக்குமாம். ஆகவே எம்பெருமானேயும் மடியில் கிடத்தித் தோட்டிலிலிட ஒரு தாயாக விளங்குகிறது இவ்வாவி. அவனே உலகத்தாயும் தந்தையும். அவனுடைய தாய் நமக்கு என்ன உறவோ! அவ்வுறவில் நமக்குக் கிடைக்கும் அருமை அறியாதார் வெகு சிலரே அல்லவா!

அன்னங்கள்:

சிவனும் பார்வதி தேவியும் இதனிடையில் அன்னங் களாகத் திருவிளேயாடல்புரிகிறுர்கள் என்று புராணங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அன்னப் பறவைகளேப் பற்றிய

குறிப்புக்கள் நம் நாட்டில் பல பெரும் இலக்கியங்களில் சொல்லப்படுகின்றன. அவைகளின் அமைப்பு, இயல்புகள் முதலியன விளக்கப்படுகின்றன. ஆனால் அவ்வியல்புள்ள வைகளை இக்காலத்தில் கண்டோர் இல்லை. மேனாட்டில் ஜெர்மனிபோன்ற சில இடங்களில் இருப்பதாகச் சொல்லு கிறார்கள். பெரும் அளவில் அன்னங்கள் மானசவாவியில் இருப்பதாகவே கூறப்பட்டிருக்கின்றன. இப்பொழுதும் அங்கே கண்டதாக முக்தானந்தாபோன்ற பல பெரியவர் களும் சொல்லுகிறார்கள். நாங்களும் அங்குப்பலநீர்ப்பறவை களைக் கண்டோம். அவற்றில் அன்னங்களை ஒத்த பறவை களும் இருக்கின்றன. அவைகளின் பெயர் ஙங்பா (Ngang - ba) என்று திபேத்திய மொழியில் வழங்கப்படு கிறது. அவைகளே அவர்கள் புராணத்தில் சொல்லப் படும் அன்னங்கள் என்றும் அவர்கள் சொல்லுகிறார்கள். இப்பறவைகள் மீன் முதலிய எதையும் தின்பதில்லை. சாக பக்ஷிணி. வாவியில் உள்ள பூண்டுகளையும் சில கிழங்கு களையுமே உண்ணுமாம்.

## மேகதூதம் :

குபேரன் தன் செல்வங்களைக் கயிலை மலையில் புதைத்து வைத்திருக்கிறான். அங்கிருந்து தன் ஆட்சியை நடத்தி வருகிறான். இயக்கர்கள் அவனுடைய குடிமக்கள். மானசசரோவரம் அவன் ஆட்சிக்குட்பட்டது. அங்குள்ள தங்க நிறமுள்ள தாமரைகளைக் காவல் புரிய இயக்கரில் ஒருவனை நியமித்திருந்தான். தன் காதல் மனைவியின் நினைவால் கடமையில் தவறினான் இயக்கன். அஷ்டதிக் கயங்கள் தடாகத்தில் புகுந்து தாமரை மலர்களைச் சிதைத்தன. இதை அறிந்த குபேரன் கோபங்கொண்டான். மனைவியின் நினைவால் மானசத்தைக் காக்கத் தவறிய

குற்றத்திற்காக அவ்வியக்கன் ஓராண்டுக் காலம் தன் மனைவியைப் பார்க்கமுடியாது போகச் சபித்தான். அவனை நாடு கடத்தினுன். அவன் இராமா மலைக்காடு களில் வசிக்க நேரிட்டது. மனைவியின் நினைவு அவனைப் பெரிதும் வாட்டியது. செய்தி சொல்லத் தூதுவர் எவரும் கிடைக்கவில்லை. கார்காலம் வந்தது. வானத்தாலே மேக ஓட்டம் ஏற்பட்டது. அவைகளைத் தூதாக விடுத்தான். செல்லவேண்டிய வழிகளும், அங்கங்குமுள்ள அற்புதங் களும், தன்னுட்டில் (கயிலைப் பகுதியில்) தன் மனைவி இருக்குமிடம் எல்லாம் விளக்கமாகச் சொல்லி, தன் நிலைமையை அவளிடம் எடுத்தியம்பும்படி கேட்கிருன். இதுதான் மேக தூதம். இந்நூலில் மானசம், கயிலைப் பகுதி விளக்கமாகச் சொல்லப்படுகிறது. இந்நூல் காளி தாசன் இயற்றியது. அவன் இயற்றிய குமாரசம்பவத்திலும் கயிலையைப் பற்றிய குறிப்புக்கள் வருகின்றன.

## முத்துப்போன்ற மழை :

'மேகங்களே! என் மனைவி கயிலை மலைச்சாரலில் குபேரனுடைய நாட்டில் இருக்கிருள். இந்திர வாகனங் களாகிய நீங்கள் அங்குச் செல்லுங்கள். கயிலைமலையைப் புஷ்பாஞ்சலி செய்து வணங்குங்கள். பாரத தேசத் திலிருந்து மழைக்காலங்களில் அன்னங்கள் மானசசரோ வரத்தை நோக்கிச் செல்கின்றன. கயிலைமலைச் சிகரம் ஒளியுள்ளது. பளிங்குபோன்றது. அழகானது. இராவண னுல் அசைக்கமுடியாத அந்த மலையில் வெண் தாமரை பூத்ததுபோல சிவபெருமான் ஆனந்த மயமாக வீற்றிருப்பார். என்றும் நிலைபெற்ற அம்மலை எல்லாத் தேசங்களுக்கும் புலனுக விளங்குவது. அதுதான் தேவர்கள் வாழும் இடம். அங்கிருந்து கங்கை உற்பத்தி

ஆகிருள். அம்மலையை அவள் சுற்றிவந்து அழகு செய்கிருள். அங்கு முத்துக்கள் போல மழை பொழியும். மேகங்கள் அச்சிகரங்களுக்கு அழகிய கூந்தல் அணிவித்ததுபோல அவைகளின் உச்சிகளில் அமைந்து விளங்கும். இந்த அழகிய காட்சிகளைக் கண்டுகொண்டே என் மனைவியின் இருப்பிடம் செல்லுங்கள். யானைக் கன்றுகள் போன்ற அச்சந்தரும் உருவங்களோடு அங்குச் செல்லக்கூடாது. உருமாறி வேகமின்றி அமைதியாகச் செல்வீர்களாக. அங்கே உள்ள பெரிய அரண்மனையில் உட்புகுந்து பாருங்கள். அங்கே ஒரு மணி விளக்குத் தெரியும். என்மனைவி அங்கிருப்பாள். என் நிலைமையைச் சொல்லுங்கள். இயக்கன் சொல்லியவழியில்.

நைடதத்தில் :

நளன் தமயந்தியிடம் தன் காதல் சொல்ல அரச அன்னத்தைத் தூதனுப்புகிருன். அப்பொழுது ''நீ இவ்வளவு அழகாக இருப்பதற்குக் காரணமென்ன'' என்று கேட்கிருன். "நான் மானசசரோவரத்திலுள்ள தாமரைகளின் அடித் தண்டுகளை உண்பேனுகையால் இவ்வழகு பெற்றேன' என்ற குறிப்பும் காணப்படுகிறது.

துளசி ராமாயணத்தில் :

மானசத்தை ஒரு தத்துவப் பொருளாகக்கொள்ளுகிறது. மானசசரோவரத்தை மனத்தால் நினைத்த அக்கணமே மனதிற்கு அமைதியும் காமக்குரோதாதிகளினின்றும் விடுதலையும் கிடைக்கும். மானசத்தை அடைந்தவர்கள் பரம சுகத்தை அடைந்தவர்களாவார்கள். இத்தடாகம் முனிவர்களின் இருப்பிடம். இது சிவபெருமானுல் படைக்கப்பட்டது. த்ரிவிஷ்டபம் (ஆகாயம், சுவர்க்கம்,

பூமி இடங்கள்) என்ற முப்பாவங்களையும் போக்கவல்லது பரமேஸ்வரரே இதைபற்றிப் பார்வதி தேவியிடம் புகழ்ந் துள்ளார் என்றால் இதன் பெருமையை விளக்கவும் வேண்டுமோ ? அழகிய கரைகள், அதிகமான ஆழம், கடவுளுடைய வடிவம்போன்ற அமைப்புக்களை உடையது. அதன் தண்ணீர் வெண்மை, இனிமை, தெளிவு இவற்றுடன் மங்களத்தைக் கொடுக்கக்கூடியது, இத்தடாகம் பெருமா னுடைய லீலைகளுக்கென்றே ஆக்கப்பெற்றது. இதில் ஒரு முறை நீராடினோர் எல்லா நன்மைகளையும் பெறுவர்.

நான்கு வேதங்களும் இவ்வேரியின் நான்கு கரைகள். இவ்வேரியின் அலைகள் எம்பெருமான் புகழ்பாடும். இங்குள்ள தாமரை மலர்கள் எழுதிக்காட்ட இயலாத எழிலுடையவை. முத்துச்சிப்பிகள் பல இருக்கின்றன. புண்ணியங்களின் உருவங்களாய் அன்னங்கள் இதில் நீந்தி விளையாடும். பல வண்ண மீன்கள் இதில் துள்ளி விளையாடும். இவை கவிஞர்களுடைய வஜ்ரோக்தி, ஸ்பாவோக்தி, த்வனி முதலியவற்றின் வடிவங்கள். அறம், பொருள், இன்பம், வீடு, ஜபம், தவம் முதலியன போன்றே நீர்வாழ்வனவும், புண்ணியாத்மாக்களை ஒத்தே நீர்ப்பறவைகளும் இங்குள்ளன. சாதுக்களின் கூட்டம் இவ்வேரிக்கரையில் நிறைந்திருக்கும். இங்கு எப்பொழுதும் இளவேனில் இன்பம் நிலைத்து நிரம்பியிருக்கும். பல வகைப் பறவைக் கூட்டங்கள் பாடிப் பறந்துகொண்டே யிருக்கும். இவை இறைவனின் புகழ்பாடுவன. துன்புற்று யாத்திரை செய்து இங்கு வரும் மக்களுக்கு வியத்தகு காட்சி அளிப்பது இப்பரப்பு. பக்தியில்லாதவர்கள் இவ் வேல்லையை அடைய முடியாது. மானச ஏரியில் நீராடுவ தால் அறிவுத் தெளிவு, மகிழ்ச்சி, மன அமைதி, பக்தி, ஞானம் இவை உண்டாகும்.

## மானசத்தின் புதல்வி :

அன்பர்களின் பக்தி, உத்சாகம், தோத்திரம், பஜனை முதலியவைகளே நதியாகப் பெருகிக் கயிலைநதி என்ற பெயரோடு ஓடிவருகிறது. இதை மானசவாவியின் புதல்வி என்று கூறுவர் மேலோர். லௌகிகமதம், வைதிகமதம் என்ற இருமதங்களும் கயிலை நதியின் இரு கரைகள். இக் கயிலைநதி எல்லாப் பாவங்களையும் போக்க வல்லது. இமவான் அளித்த சீதனப் பொருள்களே கயிலை நதியில் உயிர் வாழ்வனவாக உருவெடுத்துள்ளவை. இந் நதிக்கரையில் விநாயகர், முருகர் இவர்கள் விளையாடி இருக்கிறார்கள். இங்குச் செய்யும் ஸ்நாநம் இங்குத் தங்கித் தவம் செய்தவற்கு ஒப்பாகும். இந்நதியில் குளிரை வெறுத்தவர்களே மிக மேலானவர்கள். இந்நதியில் நீராடுவோர் பாவங்கள் நீங்கித் தெளிந்த ஞானச்செல்வத்தைப் பெற்று, இறைவனிடம் என்றும் நீங்காத அன்பைப் பெறுவார்கள்.

| | | |
|---|---|---|
| சிவ பார்வதித் திருமணம் | — | ஹேமந்த ருது |
| அவர்கள் மனோரம்மியமாய் விளங்கியது | — | சிசிர ருது. |
| மணப்பேச்சுத் தொடக்கம் | — | வசந்த ருது. |
| பார்வதி தவம் | — | வர்ஷ ருது. |
| பெண் கேட்டல் | — | சரத் ருது. |

தேவி தாக்ஷாயணியாயிருந்தது, தக்கன் வேள்வி, பெருமானை அவமதித்தது, அதைப் பொருது தேவி அத் தேகம்விட்டு தன் அவப்பெயர் நீங்கவும் மீண்டும் தன்னைத் தேவியாக ஏற்கவும்வேண்டுமென்று பெருமானை வேண்டி வரம் பெற்றது, பெருமான் தேவியை நீங்கி கயிலையில் வடவாலடியில் தக்ஷிணாமூர்த்தியாக யோகத்தமர்ந்தது,

சூரபன்மன் முதலிய அசுரர்கள் தேவர்களைத் துன்புறுத்தியது, அவர்கள் வேண்டுகோளுக்கிணங்கி மன்மதன் பேருமானுடைய யோகத்தைக் கலைத்தது, சிவ பார்வதி திருமணம், அவர்கள் இன்புற்றிருந்தது, குமரன் திருவவதாரம் இச்சேய்திகளும் துளசி இராமாயணத்தில் சோல்லப் பட்டிருக்கின்றன. பேருமான் கயிலையில் திருவோலக்கக் காட்சி வழங்கும் சிறப்பும் அதில் சோல்லப்பட்டிருக்கிறது.

### நதி உற்பத்தி :

| முகம் | | | நதிப் பேயர் | | மானசத்தின் கரை | |
|---|---|---|---|---|---|---|
| காங்ரி கர்ச்சோக் | புத்த கோசம் | தமிழ் | காங்ரி கர்ச்சோக் | தற்போழுது வழங்கும் பேயர் | காங்ரி கர்ச் சோக் | புத்த கோசம் |
| லாங்சேன் கம்பாப் | யானை | யானை | கங்கை | சட்லீஜ் (சதத்ரூ) | மேற்கு | தேற்கு |
| மாப்சா கப்பாப் | மயில் | காளை | சிந்து | கார்ஞலி (சரயூ) | தேற்கு | வடக்கு |
| தம்சோக் கம்பாப் | குதிரை | குதிரை | பக்ஷு (வக்ஷு) | பிரமபுத்ரா | கிழக்கு | மேற்கு |
| சேங்கி கம்பாப்* | சிங்கம் | சிங்கம் | சீதா | சிந்து | வடக்கு | கிழக்கு |

* கம்பாப் - நதி (திபேத்திய மோழி).

கைலாசபுராணப்படி கங்கைநதி உற்பத்தி கைலாச மலையில். அது சும்மிக் தங்டால் (Chummik - Thangtol) என்னும் ஊற்றில் வந்து விழுகிறது. மானசத்தின் நான்கு மூலையிலும் நான்கு சேப்புக் குழாய் மூலமாக அதனதன் முடிவிலுள்ள முகங்களின் வழியே நான்கு ஆறுகள் ( கங்கை, சிந்து, பக்ஷு (வக்ஷு), சீதா ) வெளிவருகின்றன.

நமது புராணங்களிலும் மானசசரோவரத்திலிருந்து நான்கு நதிகள் உற்பத்தியாவதைப்பற்றிப் பேசப்படுகின்றன.

## சத்சங்கம் :

இனி யாத்திரைச் செய்திகளை மேலே தொடரலாம். அன்று மாலையில் சிலர் ஏரிக்கரையில் சில கல் தொலைவு சென்று காட்சி கண்டுவந்தார்கள். அன்று மாலை மூன்று மணிக்குமேல் ஒரு பெருங்காற்று வீசியது. இரவு முன்னேரத்திலும் அடித்தது. ஆனால் கூடாரங்களுக்கு எவ்விதச் சேதமுமில்லை. இரவு சுவாமி வித்யாநந்தாவின் தலைமையில் சத்சங்கம் சிறப்பாக நடைபெற்றது. தோத்திரங்கள் பாடி முடிந்ததும் அவர்கள் அன்று துளசி இராமாயணத்தில் கயிலை மானசசரோவரத்தைப்பற்றி வரும் செய்திகளை விளக்கிச் சொன்னார்கள். இரவு 9 - 30 மணி வரை சத்சங்கம் நடைபெற்றது. முடிவில் இரவு உணவு பெற்று ஒய்வுகொண்டோம்.

## புறப்பாடு :

மறு நாள் திங்கட்கிழமை. அதிகாலையில் மானசத்தில் முடிந்த மட்டும் ஸ்நானம் அனுஷ்டானம் வழிபாடு முதலியவற்றைச் செய்து மகிழ்ந்தோம். காலை 9·30 மணிக்கு



மானஸசரோவரக் கரையில் பண்டாரா (அடியார்களுக்கு அன்னம்பாலிப்பு)



ராக்ஷஸ்தால் கரையில் தண்டியில் எழுந்தருளல்

அதைவிட்டுப் புறப்பட்டோம். புறப்படும் முன் அவரவ ரால் இயன்ற மட்டும் அத்தண்ணீரை ஆசையோடு பருகி ேனும். நாங்கள் அடுத்து அன்று கௌரி உட்யார் தாண்டி விடுவதென்பது திட்டம். நாங்கள் தங்கியிருந்த இடத்தி லிருந்து ஒரு சிறிது தொலைவில் சர்டோக் லாசாப் பெரு வழி (மோட்டார் ரோடு) இருந்தது. அதைச் சீனர்கள் நன்ருக அமைத்திருக்கிருர்கள். ஆனுல் வழிகாட்டிகள் எங்களை அவ்வழியில் அழைத்துச் செல்லவில்லை. மலை களில் ஏறியும் இறங்கியும் செல்லும் ஒரு பாதையில் அழைத்துச் சென்ருர்கள். காரணம் கம்பாக்கள், சீனப் படையினர் நடுவில் தங்கியிருப்பதாக வந்த செய்திதான். மானசவாவியைஒட்டி வழியில் ஒருசிறு ஏரி, ஸேட்டிஸோ (Tsetti Tso) என்பது அதன் பெயர் அதற்கும் மானசத் துக்கும் இடையில் அவ்வழி சென்றது. மானசவர்விக்கரை 15,000 அடி உயரம். அங்கிருந்து 16,207 அடி வரை உயரமான மலை உச்சிகளில் ஏறிஏறி இறங்கிச் சென்ருேம். நடுநடுவில் பெருவழியிலும் நடக்கும்படி யாயிற்று. இவ் வழியே இராக்ஷஸ்தாலின் வடகரைஃதென்கீழ்கரை வழியே கிழக்குப் பக்கத்தில் உள்ள லங்காக் டோங்காங் (Lankak Donkhang)குக்குவந்துசேர்ந்தோம் மாலை 4மணி அளவில்.

ராக்ஷஸ்தால் :

இராவண்ஹிர்த் - இராவண ஹிருதயம், லங்காக் ட்சோ, இராவணசரோவாம், இராக்ஷஸசரோவரம் என்ற பல பெயர்களை உடையது. சுற்றளவு 80 மைல். 14,950 அடி உயரத்தில் அமைந்த பெரு நீர்ப்பரப்பு. மானசத்தை விட 40, 50 அடி ஆழம் குறைவானதென்றும் சொல்லு கிருர்கள். நடுவில் இரண்டு பெரிய குன்றுகளை உடையது. இவ்வாவி அகல நீளத்தாலும் மானசத்தைவிடப் பெரியது.

மானசவாவியைவிடத் தண்ணீர் குளிர்ச்சியாக இருக்கிறது. இவ்வேரியின் கரையில் ஒரு லாமா மடம் இருக்கிறது.

மானசத்தைப்போலவே பனிக்காலத்தில் உறைந்தும் வேனிற்காலத்தில் உருகித் தண்ணீராகவும் மாறுகிறது. இதன் கரையிலும் பல நிற மணிக்கற்கள் கிடக்கின்றன. நாங்களும் சில மணிகளைப் பொறுக்கி எடுத்துக்கொண்டோம். வடமேற்கு மூலையில் நாங்கள் வந்ததும் இதில் இறங்கிக் கைகால் சுத்தம் செய்துகொண்டு தலையில் தெளித்துக்கொண்டு தண்ணீரை மொண்டு குடித்தோம். மானசத்தைப் போன்று மதுரமாக இல்லை ருசியால். சிறிது கைப்பாக இருக்கிறது. இதன் கரை ஒழுங்கற்ற அமைப்புடையது.

கரையில் கூழாங்கற்கள் நிறைந்து கிடக்கின்றன. அவற்றில் நடப்பது துன்பமாகவே இருக்கிறது. வடக்கே தொலைவில் கயிலைச் சிகரமும் தெற்கே மாந்தாதாவும் காட்சி வழங்குகின்றன. மானசமும் இராக்ஷஸமும் பக்கம் பக்கமாக ஒன்றுக்கொன்று 4, 5 கல் இடைவெளியுடையனவாக அமைந்திருக்கின்றன. தண்ணீரின் நிறம் அலை ஒளி எல்லாம் முன்னையதைப்போலவே இருக்கின்றன. உச்சி வேளையில் அலை அதிகமாக இருந்தது. லங்காக் ட்சோ என்றால் ஐந்து மலைகளை உடையது என்று பொருள். ல = மலை : ங = ஐந்து ; ட்சோ = ஏரி.

## இராக்ஷஸர் தவச்சாலை :

இராவணனும் பல அரக்கர்களும் கயிலையை நோக்கி இங்குத் தவம் செய்ததாகவும் அருள் பெற்றதாகவும் ப

புராணக்கதைகள் இருக்கின்றன. இராவணன் சிவபக்தி யிற் சிறந்தவன், திருமுறைகளில் இடம் பெற்றவன். எல்லா இதிகாசங்களிலும், புராணங்களிலும், இலக்கியங் களிலும் இடம் பெற்றவன். சிவநேறி நின்றும் சேய்யத் தகாத சேயல் சேய்தமையாலே முடிவில் எல்லாமிழந்தான், கடைசி நாள் போருக்குப் புறப்படு முன்னும் சிவபூசை சேய்து வந்தான். அதனுலே அவனே ஒத்த ஆற்றலும் வீரமும் படைத்த திருமாலின் அவதாரமாக வந்த இராம பிரான் கையினுல் கோல்லப்பட்டான். சிவகதி அடைந் தான். கயிலேத் திருமுறையில் அப்பர் சுவாமிகள் பத்துப் பாடல்களிலும் கயிலேயை இவ்வரக்கன் பேயர்க்க முயற்சித்து அதனுல் அடைந்த இன்னலேக் குறித்தே பாடியிருக்கிருர்கள். (வாகீச முனியாக கயிலே அடி வரையில் இவனேக் கண்டவராயிற்றே. அந்த முன்னுணர்வு இப்போழுதும் வந்து முந்துற்றதுபோலும்.) இவ்வேரிக்குச் சீன மோழியில் லாங் - சுவான் - கா - ப - பூ - ஷான் (Lang - chuan - ka - pa - pu - shan) என்று பேயர்.

## லங்காக் டொங்காங் :

நாங்கள் தங்கியிருந்த இடத்தில் புதிதாகத் தங்குமிடம் மண்ணுல் எழுப்பியிருக்கிருர்கள். மண்சுவர். உள்ளே பல அறைகள், நடுவில் முற்றவேளி, குறுக்கே மரங்கள் போட்டு மேலே காய்ந்த டாமாச்சேடிகளேப் பரப்பி அதன் மீது மண்ணிட்டு கூரை முடியிருக்கிருர்கள். அதற்குக் காவலர் இருவரையும் நியமித்திருக்கிருர்கள். அங்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் ஒரு அறையிலும் மற்றவைகளில் மற்றவர்களும் தங்கிஞேம். அங்குள்ள காவலன் மிகவும் நல்லவன். எங்களுக்கு வேண்டிய

உதவிகள் எல்லாவற்றையும் மனமகிழ்ச்சியோடு செய்து தந்தான். கலகலப்பாகப் பேசினுன். நாங்கள் தக்களக் கோட்டை தாண்டி மேலே செல்வதற்கு உதவிகள் செய்வதாகவும் ஏற்றுக்கோண்டான். அவன் நடந்து கோண்ட விதத்தில் நாங்களாக அவனை அழைத்து உணவும் தின்பண்டங்களும், தேநீர், காப்பி முதலியனவும் கோடுத்தோம். கோடுத்ததை உவகை போங்க வாங்கித் தின்ருன். அவன் அறைக்குள் சென்ருல் உப்பிட்ட தேயிலைப்பானம் கோடுத்துப் 'புண்ணிய சீலர்களே, இதை ஏற்றுக்கோள்ளவேண்டும்' என்று உபசரிப்பான். இவ்வித மாக எல்லோரையும் சில விநாடிகளில் தன் பேச்சாலும் சேயலாலும் மகிழ்வித்தான். அவனோடு வேருருவனும் இருந்தான். அவனுக்குப் பழகுங் குணம் போதாது.

சகோதர ஏரிகள் :

அன்றிரவு மலைப்பகுதிகளில் பனியும், லாங்காக் டோங்காங்கில் மழையும் பேய்தன. குளிர் குறைவாக இருந்தது, அதிகாலையில் எழுந்துவந்து வேளியே பார்த் தோம். கயிலைப்பகுதியிலும் மந்தாதாப் பகுதியிலும் பனிமேகங்கள் மூடியிருந்தன. இராக்ஷஸ்தாலில் பலர் நீராடினர். குளிர் அதிகமாகவே இருந்தது. காலை நேரத்திலும் குளிர் அதிகமாகவே இருந்தது. 'காலையில் அங்கு அவ்வளவு அலை இருப்பதற்குக் காரணம் என்ன' என்று காவலாளியைக் கேட்டோம். அதற்கு அவன் ''மானச சரோவரமும், இராக்ஷஸ்தாலும் இருசகோதரிகள் தாம், ஒத்த குணம் படைத்தவர்கள். நீலநிறமான ஆழ முடைய ஏரிகள் தாம். சமயங்களில் மிகப்பேரிய அலைகள் ஆள் உயரம் வளர்ந்து சீறிச் சினந்து வந்து கரையில் மோதும். இரைச்சலும் பேரிதாக இருக்கும். அடுத்துச்

சில மணி நேரங்களில் அலைகளே இல்லாது மிக அமைதி யாக சாந்தமே உருவாக ஓய்ந்து கிடக்கும். கயிலை, மாந்தாதாச் சிகரங்களை மிக அழகாகத் தண்ணீரில் நிழ லாக்கிக் காட்டும். சந்திரன், சூரியன் நக்ஷத்திரங்கள்கூட அதில் நிழலாடும். அந்த நேரத்தில் வானமே கீழேஇறங்கி வந்து இவ்வேரிகளாக நின்று விட்டது போன்றிருக்கும். இளம் அலைகள் அசைய இசை எழுப்பி ஆடிவரும் ஒவ்வொரு சமயம். அப்போழுது மந்தமாருதம் வீசும் அதன் கரைகளில். 'கோபம் வந்தால் கரைகளை உடைத் தெறிந்துவிடுவதுபோல அலைக்கரங்களால் தரைகளில் மோதி அடிக்கும். சீறும், உறுமும், புயல் எழுப்பிக் கரைகளில் நிற்கும் ஆடுகளைக் கூட உயரே அடித்து எடுத்துச் சேல்லும். ஆகையால் இவைகளின் சேய்கைகள் பைத்தியத்தின் செயல்கள் போலவே இருக்கும். எப் போழுது அது எவ்விதமாக அவதாரம் எடுக்கும் என்பதை யார் கண்டது'' என்றான்.

9 மணி அளவில் அவ்விடமிருந்து புறப்பட்டோம். மாந்தாதா மேகங்களால் தன்னை மூடி மறைத்திருந்து. கயிலை மிக நன்ருக ஒளிவிட்டுக் காட்சி தந்தது. அன்று அதிகாலையில் அக்குடிசைக் காவலனும் வழிகாட்டிகளில் விஜயசிங்கும் எங்களுக்கு முன் தக்களக் கோட்டைக்குச் சென்று அங்கு எல்லா முன்னேற்பாடுகளையும் செய்து வைக்க அனுப்பப்பட்டனர்.

## புறப்பாடு :

நாங்கள் தங்கியிருந்த இடத்தை ஒட்டி லாசாப் பெருஞ்சாலை சேன்றபோதிலும் இன்றும் எங்கள் வழி காட்டிகள் குறுக்குப் பாதையிலேயே அழைத்துச் சென்றனர். 1000, 1500 அடி உயரமுள்ள பல மலை

முகடுகளின் வழியே ஏறிஏறி இறங்கிச் சேல்லவேண்டி யிருந்தது. இன்று மானசசரோவரம் முதலில் தோலேவில் காட்சி வழங்கிற்று. பிறகு எங்கள் பார்வையிலிருந்து மறைந்துவிட்டது. ஆனல் ராக்ஷஸ்தாலின் முழு உருவமும் கண்ணுக்குப் புலனுயிற்று. அதன் நடுவில் உள்ள பேரிய குன்றுகளும் தேரிந்தன. பேரிய நீர்ப்பரப்பு அது. கண்ணுக்கேட்டிய தோலேவு தண்ணீர். வழிகளில் மண் ஙிறமும் நிலக்கரிக் கருப்பு, நல்ல சிவப்பு, வேண் மணல், பழுப்பு மணல் இதுபோன்ற பலவும் தனித் தனிப் பகுதிகளாக வளர்ந்து ஙின்றன. மாந்தாதா மிக அண்மையிலிருப்பது போலக் காட்சி அளித்தது. அன்று வேய்யல் எரித்தது.

## குர்லாக் கணவாய் :

வழியில் (குர்லா லா) குர்லாக்கணவாயைக் கடந்தோம். இதன் உயரம் 16,200 அடி. இவ்வுயரமான இடத்தில் ஙின்றுபார்த்தால் எல்லாத்திக்குகளிலும் அற்புதக் காட்சிகள் பல காணக்கிடைக்கும். வடக்கே தோலேவில் கயிலேத் தேன்முகம். வடகிழக்கே மானசசரோவரம், வடமேற்கே ராக்ஷஸ்தால். கிழக்கில் மாந்தாதா தோடர். தேற்கே மாந்தாதாவின் அழகு மிகுந்த பனிஉறைச் சிகரங்கள் (மேமோநானி) (25, 350; 22,650; 22.200). மேற்கே பனிஉறை இமயச்சிகரமும், அதன் தோடர் நேபாளத்தி லிருந்து லிப்புதடாகக் கணவாய் முதலிய பகுதிகளிலும் உயர்ந்து ஙிற்கின்றன. உயர்வானிலே ஙின்று காண்பது போல மனதை மயக்கும் இயற்கையின் கோலு அமைப்புக் களாக ஒவ்வோன்றும் ஒவ்வோரு திக்கிலும் அப்பகுதியை ஙிறைவிக்கிறது. கோ (Go)=தலே; லா (Lha)=தேய்வம் ஆகவே கோலா = பேரும் வழிபடு தேய்வம் — மேலான



ராக்ஷஸ்தால் கரை (14 950 அடி)



கௌரி உட்யார் (16,200 அடி)

தெய்வம், அதுவே சாங்தூல் (Sangdul). அது உறையு மிடம் குர்லா மாந்தாதா. கோர்லா ஆகி, குர்லா ஆகிவிட்டது.

## கௌரிஉட்யார் :

மேலே சொன்ன சில மலைமுகடுகளைக் கடந்து ஒரு உச்சியில் வந்து நின்றோம். அங்கே மணிக்கல்லடுக்கிக் கோடி கட்டிவிடப்பட்டிருந்தது. அதுவே கௌரிஉட்யார் (குர்லா ஃபூக்). விநாயகர், சுப்பிரமணியர் திருவவதார ஸ்தலம். அங்கு நின்று வடக்குத் திக்கில் தொலைவில் கயிலைச்சிகரம் மிக அழகாகத் தெளிவாகத் தெரிந்தது. இதுவரை நடு இடங்களில் நின்று நின்று பார்த்துப் பார்த்து வந்தபொழுதெல்லாம் அதுவும் சலியாது எங்களுக்குக் காட்சிகொடுத்துக்கொண்டே வந்தது. இங்குத்தான் கயிலை மலையானிடம் உத்தரவு பெற்றுக்கொள்ளவேண்டியது. காட்சியில் கடைசியாகப் பார்க்கக்கூடிய இடம் இது. அங்குக் கீழே அமர்ந்து தோத்திரங்கள் சொன்னோம். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் முதலில் கயிலைமலையா னுக்கு ஜெ முழக்கம் சொல்லத் திருவுளம்பற்றினார்கள். பலமுறையும் முழங்கினோம். பிறகு கயிலைத் திருமுறை ஓத உத்தரவு ஆயிற்று. அதுவும் ஆயிற்று.

## பிரிவுத் துன்பம் :

நேரம் ஆகஆக எல்லோர் முகத்திலும் மாறுபாடு தெரிந்தது. மனதிலே உண்டாகும் வேதனை வெளிப் பட்டது. கண்களில் நீர் முட்டிவந்தது. வழிந்தது. அழுதோம். நம்முடைய உயிருக்குயிரான ஒன்றை—பிரியக் கூடாத ஒன்றை அங்கு விட்டுவிட்டு வரும் உணர்ச்சி

போங்கியது. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் சூட தீபாரா தனை செய்து வழிபாடுகள் செய்தார்கள். நைவேதனமாகக் கற்கண்டு வைக்கப்பட்டிருந்தது. வழிபாட்டு முடிவில் எல்லோரும் கயிலையை நோக்கிக் கீழே விழுந்து வணங்கி எழுந்தோம். மீண்டும் மீண்டும் '' கைலாசபதிக்கு ஜே '' '' கயிலாசபதிக்கு ஜே '' என்ற முழக்கம் எங்களை அறியாமலே உணர்ச்சியால் எங்கள் வாய்கள் முழங்கின. என்றும் நீங்காத காட்சியாய் எங்கள் உள்ளங்களிலே திருக்கோயில்கொண்டு எழுந்தருளியது அப்பெருந் திருக் கோயில் - கயிலைத் திருமாமலை. அங்குக் கடைசியாகக் கயிலாயபதியை ஊனக் கண்களால் கண்டோம். மீண்டும் கீழே விழுந்து வணங்கினோம் உத்தரவு பெறும்முறையில்; எழுந்தோம். சிகரம் தன்னை மூடிக்கொண்டுவிட்டது. பனிப்படலமோ, மேகமோ ஏதோ ஒன்று அதை எங்களிடம் காட்டாது மறைத்துவிட்டது. அப்பொழுது நல்ல உச்சிப் பொழுது. இன்னும் ஒரே ஒருமுறையாவது அந்த அற்புத தெய்வத்தை அது உறையும் அத்தெய்விகக் கோடு முடியைக் கண்ணால் கண்டு பிறகு மேலே செல்லலாம் என்ற பெருவிருப்பால் பலரும் அங்கே தரையில் அமர்ந் தோம். சிலர் முன்னே போவதாகப் புறப்பட்டார்சள். ''பொதிசுமக்கும் யாக்குகள் இன்னும் வரவில்லை. பார்த்துச் செல்லலாம் '' என்று சிலர் எங்களோடு தங்கினர். ஒரு மணி நேரத்திற்கு மேல் அங்கேயே அமர்ந்து காத்திருந்து பார்த்தோம். உத்தரவு கொடுத்த பிறகு மறுபடியும் காட்சிவழங்கவில்லை அப்பரமன். பிரியா விடைபெற்றோம்.

## என்றினிக் கயிலை காண்போம் :

'கயிலாசவாசா! கருணையங்கடலே! உன்னைக் கண்ணாரக் கண்டோம். நீ எங்கள் உடனாய் வந்து

கயிலாயக் காட்சியைக் காட்டியருளினுய். ஒரு வாரத்துக்கு மேல் உன் காட்சியால் களிப்புற்றிருந்தன எங்கள் உள்ளங்கள்; எங்கள் நினைவை நிரப்பி நின்ருய். இனி நீ எழுந்தருளியுள்ள இப்புநித இடத்தின் காட்சியை வந்து காணும்படி அருள்புரிவ தேந்நாளோ? மீண்டும் இவ்வாழ்க்கையில் வாய்க்குமா?' என்று எண்ணிஏங்கியது எங்கள் மனங்களும். கண்களில் நீர்திரையிட ''எல்லோரும் உத்தரவு பெற்றுக்கோண்டு விட்டீர்களா?'' என்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் உத்தரவாயிற்று. எழுந்தோம். மேலே நடந்தோம் கயிலை இருக்கும் திக்கை நோக்கித் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கோண்டே. உணர்விழந்த, உரையிழந்த நிலேயில் நடந்தன எங்கள் கால்கள்: நடையில் வேகமில்லே; உணர்வில் உத்சாகமில்லே. அந்த இடத்தை விட்டு மேலும் 4, 5 பர்லாங் தோலேவு வரை அந்த அழகன் — அழகுத் திருமலே காட்சி வழங்குமாம். (கார்ப்பியாங் வழியில் வருவோருக்கு இங்குத்தான் கயிலே முதன் முதல் காட்சி வழங்குவது.) ஆனுல் நாங்கள் காணவில்லே. மறைத்துக்கோண்ட மாமறைக் கிழவன் மாமலேச் சிகரம் அவ்வுருவிலே, அருவுருவிலேயே நின்று விட்டான். மூடிய திரை விலகவில்லே. வழியில் கோடித் தோரணங்கள் பல கட்டிவிட்டிருந்தார்கள். அப்போழுது யாக்குகளும் நாங்களிருந்த இடத்திற்கு வந்து எங்களேக் கடந்து சென்றன. வழி வர வர இறக்கமாகச் சென்றது.

தோற்றம் :

''என்றும் தேவிட்டாத நல்ல அமுத விருந்தோன்றை ஏற்று, எத்தாலும் மறக்கமுடியாத அற்புதக் காட்சிகளேக் கண்டு மகிழ்ச்சியால் திளேத்திருக்க வேண்டிய, வாழ்நாளிலே அந்த ஒரு சில நாள் இன்ப அனுபவங்களே

எண்ணி எண்ணி மகிழவேண்டிய, அதனைப் பெற்ற இப் பிறப்பை வாழ்த்திக்கொண்டேயிருக்க வேண்டிய, கண்ட அற்புதத் தெய்வத்தைச் சிந்தை செய்து செய்து களித் திருக்கவேண்டிய, அந்த நினைவிலே உடல் பூரித்திருக்க வேண்டிய, கரணங்கள் ஒன்ருகி அந்தநினைவிலே அழுந்தி யிருக்கவேண்டிய இந்த நேரத்திலே மனத்தில் சஞ்சலம், துயரம், இழப்புணர்ச்சி இவை உண்டாகலாமா? கயிலாய நாதனும் அவன் உறை பகுதிகளும் நம் மனக்கோவில் களில் புகுந்து நம் நினைவிலே நிறைந்து நம்மோடு உடன் வருகின்றன அல்லவா? நம் உள்ளங்களிலே அவன் குடிபுகுந்து உறைவிடமாக்கிக்கொண்டானே? உயிர்களில் கலந்துவிட்டானே! அவனைப்பிரிதல் எங்ஙனம்? பிரிதலும் இயலுமா? பிரிந்து உயிர் வாழவும் முடியுமா?

நம் உள்ளமே அவனது இருப்பிடம். ஊனுடலே அவன் பெருந்திருக்கோவில். கயிலைத் தரிசனம் செய்து திரும்பும் நம் உள்ளங்கள் அவனது திருமலையையும் அல்லவா சுமந்து வருகின்றன? ஆகையால் பிரிவேது. உடனுறை ஆனந்தம்தானே நம்முள் இப்பொழுது நிகழ்ந்து கொண் டிருப்பது'' என்று எங்கள் அறிவு வேலைசெய்யத் தொடங் கியது. களிப்பின் எல்லையில், வெற்றிவாகை சூடிவரும் வீரராக நடையில் பெருமிதம் தோன்ற நடந்தோம். இந்த இன்பச் செய்தியை வழிநெடுகிலும், நம் நாட்டிலும், நம் ஊர்களிலும் சென்று பரப்பும் செயல் வீரராக, புகழ்பரப்பும் தொண்டருக. அங்கங்கும் உள்ள அன்பர்களுக்கும் நாங்கள் எடுத்துச்சொல்லி மகிழ்விக்கும் பிரசாரகருக நடக்கிறோம் திரும்பும் வழியிலே, என்ற பெருமை உணர்ச்சியும் பெருகி நின்றது; எங்கள் உடன் வந்தது; இன்றும் தொடர்ந்திருக்கிறது.

## காட்டு யாக்குகளும் : க்யாங்குகளும் :

இப்பகுதிகளில் க்யாங் என்னும் காட்டுக் கழுதைகள், காட்டு யாக்குகள் முதலியன உண்டாம். காட்டு யாக்குகள் மிகப் பொல்லாதவை. பெரியதாக இருக்குமாம். பார்க்கவே பயங்கரமாக இருக்கும். வந்து உக்ரமாகத் தாக்குமாம். நாட்டு யாக்கைவிடப் பலமடங்கு உருவிலும் பெரியவை; பொல்லாதவை. அதன் நாக்கு சொரசொரப்பாக இருக்குமாம். மற்றவைகளை நக்கினால் தோல் உரிந்து இரத்தம் கசியுமாம். அந்த இரத்தத்தை ருசி பார்க்குமாம். இலக்கியங்கள் ஆமாமிருகத்தின் இயல்பு கொண்டது. ஆமாமிருகம் பசுவைப் போன்றது என்று சொல்லப்படுகிறது. இது பசு இனத்தைச் சேர்ந்தது.

க்யாங்குகளும் ஒருவிதத்தில் பொல்லாதவைதான். நம்மைக் கண்டுவிட்டால் குதிரைமீது சென்றாலும், யாக்மீது சென்றாலும் நம்மை விடாது தொடர்ந்து சுற்றிச் சுற்றி வருமாம். நம்முடைய வாகனங்களாக உள்ளவை மருண்டோடும்வரை விடாதாம். அவற்றை அவ்விதம் விரட்டி விட்டுவிட்டு இவையும் (க்யாங்கும்)வேகமாக அப்பால் ஓடுமாம். தனி மனிதனாக இருந்தால் அவனையும் சுற்றிச் சுற்றி வந்து கிறுக்கவைத்து விடுமாம். அயர்ந்து கீழே விழுந்தால்தான் விட்டு அகலுமாம். ஓநாய், பனிக்கரடி இவையும் உண்டாம்.

## கௌரி உட்யாரின் பல பெயர்கள் :

கௌரி உட்யார், குர்லா உட்யார், கௌரிக் குகை, குர்லாக்குகை, குர்லா ஃபூக் என்பன அந்த இடத்தின் பெயர்கள். அங்கே பல குகைகள் இருக்கின்றன. அக்குகைகளில்தான் கணேச ஜனனம் ஆயிற்று என்பர் பூட்டியர்.

**கணேச ஜனனம் :**

சிவபெருமான் பார்வதிதேவியோடு கயிலைச் சாரலில் உள்ள நந்தவனங்களைச் சுற்றிப் பார்த்துவந்தார். ஒரு பூம்பொழில் நடுவில் ஒரு சித்திர மண்டபம் இருந்தது. அதனுள்ளே சென்றார். அதன் நடு இடத்தில் ஒரு சிம்மாசனம் இருந்தது. அதில் சென்று தேவியோடு அமர்ந்தார். அங்கே எதிர்ச்சுவரில் பிரணவப்பொருள் சித்திரமாக எழுதப்பட்டிருந்தது. அதையே உற்றுநோக்கினார். அதிலிருந்து பிடியோடு களிறு ஒன்று வெளிவந்தது. ஆணும் பெண்ணும் கூடி விளையாடின மகிழ்ச்சி களிதுள்ள. ஒரு இளங்களிறு பிறந்து வெளிவந்தது. அதைக்கண்டு வியந்த தேவி ''இதுவென்ன திருவிளையாட்டோ'' என்றனள். பெருமான் ''உன் திருக்குமரன்தான், எடுத்துவா'' என்றனர். தேவியும் அதனை எடுத்து உச்சிமோந்து மடிமீதிருத்திக் கொஞ்சி மகிழ்ந்தாள். அவரே விநாயகர்.

அவரைச் சிவகணங்களுக்குத் தலைமை ஆக்கினார். அதிலிருந்து கணபதி ஆனார். பிரணவப் பொருளாய் விளைந்தவா விநாயகர். எல்லாச் செயல்களுக்கும் முதலில் வழிபடப்படும் தெய்வமான முதன்மையையும் அளித்தார் பெருமான். அவரே மூலப்பொருளாகவும் ஆனார். தேவர்களைத் துன்புறுத்திய கயமுகாசுரனைக்கொன்று தேவர் துயர் தீர்த்தார். அவ்வசுரனே மூஷிக வாகனமாகவந்து அவரைச் சுமக்கும் பேறும் பெற்றான்.

''பிடியதன் உருஉமைகொள மிகுகரியது
வடிகொடு தனது அடிவழிபடும் அவர் இடர்
கடி கணபதிவர அருளினன்''

—தேவாரம்.

## முருகன் அவதாரம் :

மானச வாவியின் கரையில் முருகன் பிறந்தான் என்று துளசி இராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இப் பகுதி 'கௌரி உட்யார்''. குமார ஜனனம் ஆன இடம் என்பதும் பொருந்தும். முருகன் வரலாறு முன்னே கூறப்பட்டிருக்கிறது.

## ஆற்றின் அடித்தளம் :

கௌரி உட்யாரிலிருந்து ஒருகல் தொலைவில் குர்லா சூ (குர்லா ஆறு) ஓடுகிறது. அது அம்மலையின் ஒரு பள்ளத்தாக்குப் பகுதியிலிருந்து ஓடிவருகிறது. இரண்டு மூன்று கிளைகளாகவும் ஓடுகிறது. ஆனால் பனிக்குளிர். ஆற்று அடியிடம் ஒருகல் தொலைவுக்குமேல் இருக்கும். அந்த ஒருகல் தொலைவும் மணலாக இல்லாமல் வெறும் கூழாங்கற்கள், பரல் கற்களாகவே கிடந்தன. அவற்றின் மீது நடப்பது துன்பமாகவேஇருக்கிறது. அதைத்தாண்டிக் கரையேறி மேலும் இரண்டொருகல் தொலைவு சென்றதும் கயிலைச் சிகரம் தெரியும் என்றார்கள். எங்களுக்கு அங்கும் காட்சி கிடைக்கவில்லை.

இப்பகுதிகளில் 3, 4 அடி உயரமும் முள்நிறைந்த இலைகளும் பூக்களும் உடைய செடிகளிருக்கின்றன. அங்குச் செல்லும்பொழுது மாலைமணி இரண்டுக்குமேலாகிவிட்டது. காற்று வேகமாக அடித்தது. இமயப் பகுதியில் மழையும் பெய்தது. நாங்கள் சென்றபகுதியிலும் வேகமாக சிலநிமிஷ நேரம் பெருந்தூற்றல்கள் விழுந்தன. பிறகு தூறுவது நின்றது. ஆனால் காற்று வலுத்துவிட்டது. கையில் குடைபிடித்துச் செல்ல முடியவில்லை. ஆடைகளையும்

பறித்து இழுத்துவிடும் அளவுக்கு வேகம். இந்த நிலையில் வழியில் மற்றோரிடத்திலும் கயிலைக் காட்சி தெரியும் என்றார்கள். அங்கும் காட்சிகிடைக்கவில்லை. ஏமாற்றம். ஏற்றமும் இறக்கமுமாக வழி சென்றது.

## சில நதிகளின் மூலம் :

மேலும் 4, 5 மைல் தொலைவில் பால்டக் (Baldak) என்னும் இடத்திற்கு வந்தோம். அது ஒரு மலையின் உச்சிப் பகுதி. கடல் மட்டத்திலிருந்து 15,000 அடி உயரமான இடம். இங்கிருந்து ராக்ஷஸ்தால் வழியே ட்சேட்டி ட்சோவுக்கு ஒரு வழியும், நேரே பார்க்காவுக்கு ஒரு வழியும் பிரிவதாகச் சொல்கிறார்கள். வீடுகள் எதுவும் கிடையாது. ஆனால் பால்டக் (சூ) நதி என்ற ஒன்று மாந்தாதாவிலிருந்து ஓடிவந்து மாப் சூ(கார்னலி)வோடு கலக்கிறது. குர்லா சூ, ஃபூசூ ( Phuchu ), சுக்குரு சூ இம் மூன்றும் பால்டாக் இரண்டுகல் தொலைவு இருக்கும் பொழுதே ஒன்றுகூடி ஓடி (மாப் சூ) கார்னலியில் கலந்து விடுகின்றன. பால்டக் ஆற்றைக்கடந்து வழி செல்கிறது. பிறது பர்ஃபூ ( Burfu or Purfu ) என்னும் சிற்றாறு. அதன் பிறகு ரிங்கங்கின் கிளைநதி. இவைகளைக் கடந்து ரிங்கங் ஆற்றின் கரையை வந்தடைய இரவு மணி 8 ஆகிவிட்டது. ரிங்கங் கடல் மட்டத்திலிருந்து 14,400 அடி உயரத்தில் உள்ளது.

## பர்ஃபூ :

பர்ஃபூ ஒரு கிராமம். ஒரே ஒரு வீடுள்ளது. ஆனால் அந்நாட்டுச் சரித்திரத்தில் இடம்பெற்றது. 1841க்குமுன் ஒரு அரசன் அங்கு ஆண்டிருந்திருக்கிறான். ஸோரவார்சிங்

( காஷ்மீரப் படைத் தலைவன் ) அவனை வெற்றி கண்டு அக்கோட்டையையும் அழித்துவிட்டான். அதன் அடையாள மாக இடிந்துபோன கோட்டைச் சுவர்கள் இன்றும் அங்கு இருக்கின்றன. இக்கிராமத்தில் பட்டாணி, பார்லி முதலியன சாகுபடி செய்யப்படுவதாகவும், அவ்வீட்டை ஒட்டியே பர்ஃபூ நதியும் ஓடுவதாகவும் சொல்லப்படுகிறது.

## வேட்டைவெறி :

இன்று நடை அதிகம். களைப்பும் அதிகமாக இருந்தது. நடை 20, 25 மைல் இருக்கும். ஆனால் பால்டக் தாண்டியதுமே மனிதநடமாட்டமும், ஆடு, மாடு மந்தை களும் எதிர்ப்பட்டன. எங்களுடன் வந்த கூலிகள் தம் முள் ஏதோ ரகசியமாகப் பேசிக்கொண்டனர். ஒருவன் பிரிந்து நின்றான். ஆட்டுமந்தை ஓட்டிவந்த திபேத்திய னிடம் ஏதோ பேரம் பேசினான். ஒரு ஆட்டைப் பிடித்துக் கட்டி இழுத்துவந்தான் சிறிது நேரத்தில். இரவு வெகு நேரம் அவ்வாட்டின் சத்தம் கேட்டுக்கொண்டே இருந்தது. விடியலில் ஒரு மாமிசமூட்டையாகிவிட்டது அது. அவர்கள் கயிலை மானசப் பகுதியில் சுத்த சைவம்; மாமிசத்தைப் புசிப்பதில்லை என்ற நியமம் உடையவர்கள். ஆனால் அதற்கு முன்னும் பின்னும் வழியில் எங்கு ஆட்டைக் கண்டாலும் அவர்களுடைய ஊனுணவுவெறி தலைக்கேறி விடுகிறது. இதுபோலச் செய்துவிடுகிறார்கள்.

## இரவில் :

குர்லா சூவில் கரை ஏறிய பிறகு நாங்கள் வந்தது பெரும்பாட்டை அமைப்பிலேதான். லாரிகள் முதலியன கடக்க வழியிலுள்ள சிற்றாறுகளிலெல்லாம் மலைக் கல்துண்டுகளை அடுக்கிப் பரப்பி வைத்திருக்கிறார்கள்.

அதன் வழி ஆறு கடப்பதில் தொல்லை இல்லை. தண்ணீரும் அவ்வளவு கடுங்குளிராக இல்லை. குளிர்ச்சியானவைதான்.

## கயிலை யாத்திரைக் குழுவினர் :

இரவு 9 மணிக்கு மேல் மழை தூறத் தொடங்கி விட்டது. ஆகையால் கூடாரங்களின் முன் படுதாக்களை இழுத்துக் கட்டிக்கொண்டோம். நாங்கள் தங்கியது காற்றடக்கமானஇடமே. ஆனாலும் இரவில் குளிர் மிக அதிகமாக இருந்தது. மழையோடு காற்றும் கலந்து அடித்தது. நாங்கள் இரவு ரோட்டி செய்து தின்று படுத்தோம். உறக்கம் வரும் நேரம். யாரோ இரண்டு மூன்று பேர் அங்கு வந்தார்கள். ஒவ்வொரு கூடாரமாக வந்து வந்து இடம் கேட்டனர் 'மழையில் நனைந்துவிட்டோம். குளிர் நடுக்குகிறது. இரவுதங்க இடம் தருதல் வேண்டும்' என்று கேட்டார்கள். கூடாரங்களில் எங்களைத்தவிர வேறுயாருக்கும் தங்க இடமே இல்லை என்றாலும் விடுவதாயில்லை. கூடாரவாயில் படுதாவுக்குள் கையைவிட்டு எங்கள் கால்களைத் தொட்டுத்தொட்டுக் கேட்டுக்கொண்டே இருந்தார்கள். ஏற்கனவே கம்பாக்கள் பற்றிய கதை கேட்டுவந்த எங்களுக்கு அவர்கள் செய்கையில் சந்தேகம் எழுந்தது. மிகக் கடுமையாகக் கடிந்து கொண்டோம். எங்களை விட்டகன்றனர். சுவாமி வித்யாநந்தா அவர்கள் கூடாரங்களில் இடங்கொடுத்துத் தங்கச்செய்தார்கள். மறுநாள் காலையில் எழுந்ததும் எங்கள் கூடாரத்திற்கும் அவ்வழிப் போக்கர்கள் வந்தார்கள் அவர்கள் நேபாலத்திலிருந்து மலை கடந்து கயிலை யாத்திரை வந்தவர்கள். கூடாரமோ பிறவசதிகள் எதுவுமோ இல்லை. கூர்க்கி தெரியும். திபேத்திய மொழியும், இந்தியும் ஓரளவு தெரியும்.

ஆகையால் வழியில் இதுபோன்ற இடங்களில் எங்காவது தங்கிக் கயிலை காணவேண்டுமென்ற பெருவிருப்போடு வந்தவர்கள். இந்தச்சேய்தி அறிந்து மனமிரங்கி எங்களால் இயன்ற உதவிசெய்து அனுப்பிவைத்தோம். காலை 8-30 மணிக்கே அவ்விடம் விட்டகன்றோம். தக்களக் கோட்டையை நோக்கி. ரிங்கங் வந்தஉடனே தக்களக் கோட்டை மண்டியிலுள்ள நண்பர் ஒருவருக்குச் செய்தி அனுப்பினார்கள் சுவாமிகள்.

## புறப்பாடு :

வழக்கம்போலவே அன்று காலையில் உணவை முடித்துக்கோண்டு 8-30 மணிக்குப் புறப்பட்டோம். பாதை ஏற்றமும் இறக்கமுமாகச் செல்கிறது. வழியில் கிராக் சூ (Kirok chu) என்னும் சிற்ருறு ஓடி வருகிறது. அந்த இடம் பார்வைக்கு அழகாக இருக்கும். அதைத் தாண்டி ஹராக் கணவாய் 14,000 அடி உயரம். அங்கிருந்து ஒருகடும் இறக்கம் காரு (Garu) என்ற கிராமத்தை நோக்கிச்சேல்கிறது. இந்த ஊரில் சில வீடுகளும் நடுவில் ஒரு மடமும் இருக்கின்றன. ஊர் ஒரு பள்ளத்தாக்கில் அமைந்திருக்கிறது. நடு இடங்களில் சில சார்ட்டன்கள் (சமாதுகள்) கட்டி விடப்பட்டிருக்கின்றன. கிழக்கு தேற்கு மேற்குப் பகுதிகளில் மலையும், வடக்குப்புறம் ஒரு பேரிய மலை மேட்டுப்பகுதியும் அமைந்து நடுவில் ஒரு பள்ளத்தில் இக்கிராமம் சுற்றிலும் பசுமையான வயல்கள் சூழ அழகாக விளங்குகிறது. பச்சைப் பட்டாணி, பார்லி, வால்கோதுமை இவைகள் பயிரிடப்பட்டிருக்கின்றன. நடுநடுவில் சிறுசிறு தண்ணீர்க் குட்டைகள் உண்டாக்கிக் கோண்டிருக்கிருர்கள். இங்கு நாட்டு மாடுகளும் பசுக்களும் இருக்கின்றன. இங்குள்ள வயல்கள் யாவும் அவ்வூரில் உள்ள ஒரு பெருநிலக்கிழாரைச் சேர்ந்தது.

அவருக்குப்பல வேலையாட்கள் இருந்தார்கள். அவ்வூர் அருகே ஓடும் காரு சூ என்னும் ஆற்றில் உயரமான மலை இடங்களிலிருந்து வாய்க்கால்கள் எடுத்து வந்திருந்தார் கள். வயல்களுக்கு வேலிகளாக மலைக் கல்துண்டுகளை எடுத்து அடுக்கி சுவர் எழுப்பியிருந்தார்கள். இந்திய எல்லையை நீங்கிய பிறகு வயல்புறங்களையும், மனிதக் குடியிருப்பான ஊரையும் இப்போது இங்குத்தான் கண்டோம். இரண்டொரு மைலில் தோயு என்ற மற்ருெரு சிற்றூரும் தொலைவிலே தெரிந்தது.

## காருவில் :

காருவில் அவ்வூர் பெருநிலக்கிழாரிடம் சில்லரை கொடுத்து பச்சைப்பட்டாணி வாங்கித் தின்ருேம். மிகவும் ருசியாக இருந்தது அச்சிற்றுண்டி. தயிர், பால் கிடைத்தது. அங்கேயே ஓரிடத்தில் பால், தேநீர். காப்பி இவைகளைத் தயாரித்து மாறிமாறி அருந்தி மகிழ்ந்தோம். பசுவின்பால் ஆகையால், ருசியாலும், மணத்தாலும் நன்ருயிருந்தது.

அந்த அழகான சூழ்நிலையில் ஒரு மணி நேரம் தங்கிக் களைப்பாறி அதை நீங்கி மேலே சென்ருேம். கிராமப் பெண்களும் குழந்தைகளும் எங்களை வேடிக்கை பார்க்க வந்து கூடினர். அவர்களுக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் மிட்டாய்கள் வழங்கினுர்கள். பெண்கள் நேர்வகிடு எடுத்து இரட்டைப் பின்னல் போட்டிருந்தனர். கழுத்தில் மணிமாலைகள் பல போட்டிருந்தார்கள். முகத்தில் கருப்பாகவும், பளபளப்பாகவும் உள்ள மையைப் பூசிக் கொண்டிருந்தார்கள். சிலர் அந்தக் கரிய மை இட்டுக்கொள்ளாமலும் இருந்தார்கள். காரணம் மைபூசிக்கொண்டிருப்பவர்கள் பணிப்பெண்கள் என்றும், மற்றவர்கள் பெருந்தனக்காரர்வீட்டுப்பெண்கள் என்றும் தெரியவந்தது.

## தோயு :

மறுநாள் சமையலுக்குப் பச்சைப் பட்டாணி வாங்கிக் கொண்டு அவ்வூரைவிட்டுப் புறப்பட்டோம். அரைக்கல் தொலைவில் காரு நதி ஓடுகிறது. அதற்கு நல்ல பாலமும் இருக்கிறது. அதைத்தாண்டி தோயு கிராமம். இந்த ஊர் பெரியது. தெரு அமைப்புக்கள் கொண்டது. 100 வீடுகள் இருக்கலாம். வீடுகள் இரண்டடுக்குக்கொண்டவை. பெரிய பச்சைவெட்டுக் கற்களை அறுத்துக் காயவைத்து அவற்றை அடுக்கி மரங்களை இட்டு மேலிடம் அமைத்து அம்மரங்களின் மீது டாமாப்பூண்டுகளைப் பரப்பி மண்ணிட்டு மெழுகி இரண்டு தளங்கள் செய்து கொண்டிருக்கிறார்கள். மேல் தளத்தின் மேற்பகுதியில் இட்டிருக்கும் டாமாப் பூண்டுகள் வெளியே தெரியக்கூடியதாக இருக்கிறது. சுவர்களில் வெள்ளைச் சுண்ணும்பும் செம் மண்ணும் பட்டை தீற்றி இருக்கிறார்கள். ஒவ்வோரு ஊரிலும் ஒவ்வோரு கோவிலும் அமைத்துக்கொண்டிருக்கிறார்கள். பார்லி, பட்டாணி, பச்சை மிளகாய் முதலியன சாகுபடி செய்யப்பட்டிருக்கின்றன. வளமான மண். பசுவும் அதிகம். ஒவ்வோரு வீட்டிலும் காவலுக்குத் திபேத்திய நாய்வைத்து வளர்க்கிறார்கள். அவை உருவ அமைப்பிலும் செயலிலும் கொடியவை. உறுமும் சத்தமே நம்மைக் கலக்கிவிடுகிறது. இவ்வூரில் ஸோரவார் சிங்கின் சமாது ஒன்றிருக்கிறது.

## வீரன் ஒருவரின் வரலாறு :

இது ஒரு சரித்திரப் புகழ்பெற்ற ஊர். காஷ்மீர மன்னன் மகாராஜா குலாப்சிங் காலத்தில் அந்நாடு, மத்திய ஆசிய நாடுகள், மேற்குத் திபேத், லதாக் நாடுகளை ஜம்மு

ராஜ்யத்தோடு சேர்த்துப்பெரிதாக்கிக்கொண்டிருந்தது. அம் மன்னனுடைய படைத்தலைவன் ஸோரவார்சிங் (Zoravar Singh). 1841ல் அப்படைத்தலைவன்கயிலைக்கு யாத்திரை வந்தான். வரும்போது தன்னுடன் ஒரு பெரிய படையை யும் அழைத்து வந்தான். வழியிலிருந்த மடங்களையும், கோட்டைகளையும் சூரையிட்டு அழித்து அப்பகுதிகளையும் கைப்பற்றிவிட்டான். முதலில் தீர்த்தபுரியில் தங்கிக் கொண்டு திபேத்தியரோடு போரிட்டான். அவனுடைய படையைவிடப் பலமடங்கு பெரிய திபேத்தியப் படையை புராங் என்னும் (கயிலைக்குப் பக்கம்) பகுதியில் போரிட்டு வெற்றி பெற்றான். அங்கிருந்து தக்களக்கோட்டையில் வந்து தங்கினான். அவன் அவ்வெற்றிப் பெருமிதத்தோடு தன் உதவியாளரின் பார்வையில் தன் படைகளை விட்டு கர்டோக் வரைசென்று திரும்பினான்.

அதற்குள் திபேத்தியர் சீனரின் உதவியை நாடிப் பெற்றனர். சீனப்படைவந்தது. இங்குத் தோயுவில் அவனை வழிமறைத்துப் போரிட்டார்கள். மிகவும் தீரமாகச் சண்டை யிட்டான். அவன் மாயசக்திகள் கொண்டவன் என்று நம்பினார்கள்; அவன் போர் வல்லமையைக் கண்டு அவ் விதம் கருதினார்கள்; அவனை ஈயமோ, இரும்போ ஒன்றும் செய்யமுடியாதென்று திபேத்தியர் நம்பினர். தங்கத்தால் குண்டுகள் செய்து துப்பாக்கியில் இட்டு அவனைச் சுட்டு வீழ்த்தினர். அவன் வீழ்ந்த இடம் தோயு. அவன் உயிர் பிரியும்வரை மிகத்தீரமாகப் போரிட்டான். இப்போர் குறித்த வரலாற்றுக் கதைகள் பல திபேத்திய இலக்கியங் களாக இன்றும் வழங்குகின்றன. ஒரு பெரிய போர்வீரனை அவன் வல்லமையைப் பின்னும் பாராட்டி அவனுக்குப் பல இடங்களில் சமாதுகள் (நினைவுச் சின்னங்கள்) எழுப்பி இருக்கிறார்கள். அவன் படைக்கருவிகளை நினைவுச்

சின்னங்களாகப் பல மடங்களிலும் சேமித்து வைத்திருக்கிறார்கள். அவற்றில் அவன் போரில் விழுந்த இடத்தில் இங்குத் தோயுவில் அழகிய சார்ட்டேன் (Chorten) கட்டியிருக்கிறார்கள். அது பாதையின் ஓரத்திலேயே அமைந்திருக்கிறது.

## செமோ சார்ட்டன் :

வழியிலே மற்றுமோரு ஊர். அதுதான் ச்சேமோ சார்ட்டேன் (Chchemo - Chorten), இங்கும் வழியில் அழகிய சமாதுக்கோவில் (சார்ட்டன் - Chorten) கட்டியிருக்கிறார்கள். அது குருரிம்போஷியின் சமாது என்று சொல்கிறார்கள். இதையும் கடந்து தக்களக்கோட்டை சேர்ந்தோம். வழியிலே சீனப்படையினரின் தண்ணீர் லாரி ஒன்று ச்சேமோசார்ட்டனில் ஒரு சிற்றோடையில் தண்ணீர் பிடிக்க வந்திருந்தது. கப்கோட் விட்டு வந்த பிறகு கண்ட முதல் கார் அதுதான்.

## தக்களக்கோட்டை :

தக்களக்கோட்டை மலைமீது மிக அழகாகக் கட்டப்பட்டிருக்கிறது. அங்குக் கர்ணலி ஆறு ஓடுகிறது. அதன் இருகரைகளிலும் மண்டிகள். இடதுகைப் புறத்தில் உள்ளது நேபாலி மண்டி. இங்கு நேபாலிகள் தங்கி வாணிபம் செய்கிறார்கள். அது ஒரே ஒரு தெரு அமைப்பைக்கொண்டது. கொள்வோரும் கொடுப்போரும் நூற்றுக்கணக்கான மக்கள் கூடி வாணிபம் நடந்தது. மண்படைவைத்து 7, 8 அடி நீளம், 4, 5 அடி அகலங்கொண்ட வீடுகள் மண்ணாலேயே கூறை இடப்பெற்றவை பல அங்கிருக்கின்றன. வலது கைப்புறத்திற்குப்போக ஒரு மரப்பாலம் அமைத்திருக்கிறார்கள்.

போதிமாடுகள் அப்பாலத்தில் செல்ல முடியாது. அவை, ஆற்றில் இறங்கியே அப்புறம் செல்லுதல்வேண்டும்.

குகுங் :

இப்பகுதிக்குக் குகுங் (Gukung) என்று பெயர். 300, 400 வீடுகள் கொண்ட பெரிய ஊர். இதுதான் முக்கியமான வியாபாரஸ்தலம். இந்தியநாட்டு பூட்டிய வியாபாரிகள் இங்கு வந்து வியாபாரம் நடத்துகிறார்கள். சந்தை இரைச்சல் எப்போழுதும் கேட்டுக்கோண்டே இருக்கிறது. மலைப் பகுதி மண்ணுலானது. அதில் குகைகள் குடைந்து வீடமைத்து வாழ்கிறார்கள் பேரும்பாலோரும். இரண்டடுக்குள்ள கும்பா ஒன்றும் இருப்பதாகச் சொல்கிறார்கள். அவற்றில் ஜன்னல்கள், அழகான வாயில்கள், மாடி அமைத்து முன்னே பால்கனிநீட்டி திரைச்சீலை இட்டு அழகு செய்தவைகளும் இருக்கின்றன. தெருக்கள் சுத்தமாக இல்லை. மக்கள் சுருசுருப்பாக இருக்கிறார்கள். கம்பளி, யாக் மயிர்க் கூடாரத்துணிகள், கம்பளியால் திபேத்திய காலணிகள் முதலியன பாதை ஓரத்தில் அமர்ந்தே செய்து கோண்டிருக்கிறார்கள். நெசவுவேலைகளைப் பெண்கள் பலர் செய்தார்கள். இங்கு ஊரெல்லையிலிருந்து மிகக் கடுமையான செங்குத்து ஏற்றம். அம்மண்மலையில் அரை மைலுக்குள் 1000 அடிக்குமேல் ஏறவேண்டும். ஆற்றை ஒட்டி அவ்வழி அமைந்திருப்பதால் களைத்துவருவோருக்கு குளிர்காற்று வீசுகிறது. வழியில் அம்மக்கள் நம்மை நிறுத்தி யார், எங்கிருந்து வருகிறீர்கள் என்று இந்தியில் கேட்கிறார்கள். ''பைசா தே'' என்று சிறு குழந்தைகள் நம்மைச்சூழ்ந்து கோள்கிறார்கள். அவ்வேற்றத்தில் ஏறி மேலே வந்ததும் வலது கைப்புறத்தில் மலை உச்சியில் சிம்ப்லிங் மடமும், அப்பகுதி கவர்னர் (Zongpon)

மாளிகையுமிருக்கின்றன. வழி அம்மலேச்சரிவில் செல்கிறது. ஆனுல் மைதானத்தில் செல்வதுபோல் நடக்க எளிதாக இருக்கிறது.

## சீனப் படைகளின் சோதனை நிலையம் :

வழிநடுவில் ஸோராவர்சிங்கிசமாதி(Chorten). அதைத் தாண்டி அரைக்கல் சென்றதும் சீனர் எல்லேக் காவல் படை வீடு இருக்கிறது (Check - Post). படைக்காவலர் நின்றிருக்கிருர்கள். அங்குஎல்லோரும் உட்சென்று தங்கள் பெயர், ஊர்ப்பெயர், தகப்பன் பெயர், தொழில், அங்குவந்த வேலே விபரங்களேப் பதியவைத்தல் வேண்டும். அவர்களுக்கு ஆங்கிலம், இந்திமொழி ஒரளவுதெரிகிறது. ஆனுல் மானேஜர், செகரேட்டரி முதலிய சொற்களுக்குப் பொருள் விளங்கவில்லே. அங்கு நம் பொருள்களேச் சோதனே இட்ட பிறகே மேலே செல்ல அனுமதிப்பார்களாம். நாங்கள் எல்லோரும் ஒவ்வொருவராகச் சென்று பதிவு செய்து வந்தோம். எங்கள் மூட்டைகளேச் சுமந்து வந்த யாக்குகள் வரவில்லே. எங்களில் சிலரும் வரவில்லே. வெளியே காத்திருந்தோம்.

## பறிகொடுத்தோம் :

சுவாமிகள் ‘‘ வேண்டாத பொருள்கள் பல நம்மிடம் இருக்கின்றன. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தினிடம் பணமும் அதிகமாக இருக்கும். சோதனேயில் அவற்றை எல்லாம் சீனர் பறிமுதல் செய்வார்கள். மானசத் தண்ணீரையும் பறித்தெடுத்துக் கொட்டி விடுவார்கள். இதுபோன்ற தொல்லேகள் ஏற்படுமே என்னசெய்வது ’’ என்று மனம் வருந்திஞர்கள். எங்களுக்

குள்ளும் இச்சொல் அச்சத்தை உண்டாக்கியது. மேற் கொண்டும் சொன்னார்கள்: ''சென்ற ஆண்டில் அவ் வழியே வந்த நம் நாட்டுப் பெரும் தலைவர் ஒருவரைச் சந்தேகித்துப் பல நாட்கள் அங்கே நிறுத்திவைத்து விட்டார்கள். கடும் சோதனைக்குள்ளானார் அவர். துவாரகா பீடாதிபதியும் சோதனையிலே பெருந் தொகையையும், வெள்ளிச் சாமான்கள் சிலவற்றையும், புத்தகங்கள் சிலவற்றையும் பறிகொடுத்தார்கள்'' என்று தம்முடைய அனுபவங்களையும் சொன்னார்கள். அவர்கள் சொன்ன பொருள்கள் பல எங்களிடமும் இருந்தன. ஆகவே அச்சம். 'அங்கே தண்டியில் தங்கியிருப்பதைவிடப் பக்கத்தில் உள்ள பூட்டியர்களின் மண்டியில் எழுந்தருளி யிருக்கும்படியும், சாமான்கள் வந்ததும் நாங்கள் உடன் இருந்து சோதனைக்குக் காட்டி எடுத்துவருவதாகவும், ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திடம் விண்ணப்பித்துக் கொண்டோம். ''இல்லை, அவைகளும் வரட்டும். எல்லாரும் சேர்ந்தே போவோம்'' என்று உத்தரவாயிற்று.

### சோதனை வேண்டாம்:

மாலை 5 மணியிருக்கும். அங்குள்ள சீனப்படைத் தலைவனும் அவன் உதவிகள் பலரும் அப்படை வீட்டை விட்டு வெளியே உலவப் புறப்பட்டார்கள். வெளியே ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமும் மற்றவர்களும் அமர்ந்து காத்திருப்பதைக்கண்டனர். ''போகலாமே ஏன் இங்கே காத் திருக்க வேண்டும்'' என்று படைத்தலைவன் சொன்னான். ''எங்கள் பொருள்கள் வந்து சேரவில்லை. காத்திருக் கிறோம்'' என்றோம். ''வந்தால் காவல் படைத்தலைவர் இருக்கிறார். பார்த்து அனுப்புவார். அதற்காக இவ்வளவு பெரும் காத்திருக்க வேண்டாமே'' என்றார். ''இல்லை, சோதனைக் காலத்தில் அவரவர் பொருளையும் அவரவரும்

உடனிருந்து காட்டவேண்டுமல்லவா, அதற்காகத் தங்கி யிருக்கிறோம்'' என்றோம். அவர்களுக்குள் சீனமொழியில் ஏதேதோ பேசிக்கொண்டார்கள். சிரித்துக்கொண்டார்கள். அடிக்கடி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தைப் பார்த்துப் பார்த்துப் பேசினார்கள். முடிவில் தலைவர் "இங்கு யாரும் காத்திருக்கவேண்டாம். சந்தோஷமாகப் போய்வாருங்கள். உங்கள் பொருள் எதையும் சோதனை இடத்தேவையில்லை தடை ஏதுமின்றி எடுத்துச் செல்லலாம். வணக்கம்'' என்று சொல்லிச் சென்றார். நாங்களும் கவலை ஒழிந்து மேலே சென்றோம்.

## சிம்பிலிங்கும்பா :

தக்களக்கோட்டை சிம்பிலிங்கும்பா இப்பகுதியில் ஒரு பெரிய லாமா மடம். இதில் சாதாரண காலத்தில் 1000 பேருக்குமேல்இருப்பார்களாம். சிலவிழாநாட்களில்10,000 பேர் வந்து கூடுவராம். மலையிலும் பலகுகைகள் அமைத் திருக்கிறார்கள். இங்குத் தலைலாமாவின் ஆட்சிக்காலத்தில் கவர்னர் (Zongpon) நியமிக்கப்பட்டிருந்தார். யாத்திரை வழியில் முக்கியமான இடம். இங்கிருந்து கயிலை மானச சரோவரப் பகுதிக்கும், ஞானிமாப் பகுதிக்கும் இந்திய வழி யில் கர்ப்பியாங்குக்கும், திபேத்திய தலைநகர் லாசாவுக்கும் வழிகள் செல்லுகின்றன. திசத்தின் கரையில் அமைந் தது. பூட்டியர்களின் பெரிய வியாபாரஸ்தலம். இங்கிருந்து மாந்தாதா 15, 20 மைல்களுக்குள் இருக்கிறது.

## மண்டி :

யாத்திரைவருவோர் இதுவரையில் கூலிகளோ, அல்லது குதிரைகளோ அமர்த்திவருவர். அவர்களை விடுத்து யாக்கு கள், குதிரைகள் மாற்றேற்பாடு செய்துகொள்ளவேண்டும். இங்கு லிப்புத் தடாகக்கரை வாயிலிருந்து வரும் திசம் நதி

கர்ளுலியில் கலக்கிறது. ஆற்றுத் தளத்தில் தண்ணீரைத் தனிவாய்க்கால்கள் அமைத்து எடுத்துவந்து நீர்விசை மாவு அரைக்கும் இயந்திரங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றிற்குத் திபேத்திய மொழியில் காரட் (Gharat) என்று பேயர்.

பூட்டியமண்டி திசம்நதிக்கரையில் அமைந்திருக்கிறது. வேறும் சுற்றுச்சுவர்கள் கட்டிவைத்திருக்கிருர்கள். மேலே கூரைக்குக் கூடாரத்துணி போட்டிருக்கிருர்கள். திபேத்துக்கும் இந்தியாவுக்கும் ஏற்பட்டிருக்கும் ஒப்பந்தப்படி பூட்டிய வியாபாரிகள் இங்கும் கயிலைப் பகுதிகளிலும் வியாபாரம் செய்யலாம்; ஆனல் நிரந்தரமாகத் தங்கக் கூடாது என்பது ஒரு விதி. அதனைக் கடைப்பிடிக்க இவர்கள் மேலே சோன்னபடி கடைகள் அமைத்துக் கோண்டிருக்கிருர்கள். 400, 500 கடைகள் இருக்கும். கோடையில் இமய வழி திறந்ததும் வந்து வியாபாரம் தோடங்கி நடத்தி பனிக்காலம் வந்ததும் கையிருப்பில் உள்ள வியாபாரப் போருள்களையும் கூடாரத் துணியையும் பார்த்துக்கோள்ளச் சோல்லி அங்கு நம்பிக்கையுள்ள திபேத்தியரிடம் ஒப்படைத்துவிட்டு அவரவர் ஊருக்கும் போய்விடுவார்கள்.

ஃபில்லித்தங்கா :

மண்டி யிருக்கும் இடத்துக்கு ஃபில்லித்தங்கா (Philli thanka) என்று பேயர். இம்மண்டியில் நமக்கு வேண்டிய எல்லாப் போருள்களும் கிடைக்கும்.

புராங் :

பக்கத்துக் கிராமங்களிலிருந்து பச்சை மிளகாய், சிகப்புமுள்ளங்கி(Carat), வேங்காயம், பச்சைப்பட்டாணி,



தக்களக்கோட்டை கும்பா சிம்பிலிஸ் (13,750 அடி)



தக்களக்கோட்டையில் இந்திய அரசாங்கப் பிரதிநிதியுடன் (13,100 அடி)

முதலியன கிடைக்கின்றன. யாக் வெண்ணெ, தயிர், பால் கிடைக்கின்றன. எரி விறகு விலே அதிகம். ஆனுல் கிடைக்கும். அங்கு வாழும் மக்கள், குதிரைச் சாணம், ஆட்டுப்புழுக்கை, யாக் சாணம் முதலியவற்றைச் சேகரித்துக் காயவைத்து எரிபொருளாகப் பயன்படுத்துகிருர்கள். மலே அடியிலிருந்து வரும் ஊற்றுத் தண்ணீருக்குக் குழாய் அமைத்து தாராவாக்கிக் கொண்டிருக்கிருர்கள். இது தான் குடிதண்ணீர். குளிக்கவும் உதவுவது. ஆற்றுத் தண்ணீர் கலங்கலாக ஓடுகிறது. ஆற்றின் கரைகள் செங்குத்தாக 100, 150 அடி உயரமுள்ளதாக இருக்கிறது. இறங்கி ஏறுவது துன்பமாகத்தான் இருக்கிறது. தாராவும் அந்தக்கரைகளில் நடு இடங்களில் அமைந்திருக்கின்றன. கோடையில் பகலில் வெய்யிலும், இரவில் குளிரும் அதிகம். காற்றும் அதிகம். பனிக்காலத்தில் அக்குளிர்காற்றுப் பட்டுப் பலருக்கும் முகம் கை கால்கள் கருப்பாக இருக்கின்றன. இது புராங் பள்ளத்தாக்கில் அமைந்த ஊர். பூட்டியர்களின் மண்டியில் கூடார தர்மசாலே ஒன்றும் இருக்கிறது. வழிப்போக்கர் தங்கலாம். தர்ம சேவா சங்கத்தின் தொண்டு.

## வியாபாரக் கமிஷனர் :

இங்கு நாங்கள் வந்த சமயம் திபேத், சிக்கிம் இந்த நாடுகளில் உள்ள நம்நாட்டு வியாபார நிலேமையைப் பார்க்க நியமிக்கப்பட்டிருக்கும் வியாபாரக் கமிஷனர் (Trade Commissioner) திரு லக்ஷ்மணன் சிங் என்பவர் அங்கு வந்து முகாமிட்டிருந்தார். அவரோடு ஒரு டாக்டரும் வந்திருந்தார். அவர்களுக்காக 4, 5 கூடாரங்கள் இருந்தன. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் வரும் செய்தியை முன்னரே அவருக்கு அறிவிக்கப்பட்டிருந்தது.

அவர் தன் சேவகனை சீனப்படை வீட்டிற்கு அன்று காலையிலேயே அனுப்பியிருந்திருக்கிறார். அன்று பகல் 12 மணிக்குள் வந்து விடுவதாக அறிவிக்கப்பட்டிருந்தது. அன்று முழுவதும் அந்த ஆள் அங்குக் காத்திருந்தான். இது ஒரு விதத்தில் எங்களுக்கு உதவியாக இருந்தது.

## வணிகரின் வரவேற்பு :

மண்டிவியாபாரிகளில் ஒருவர் எங்களைத் தன் கடைக்கு அழைத்துச் சென்று எல்லோருக்கும் தேநீரும், பிஸ்கோத் முதலியனவும் வழங்கினார். அன்றுதான் நயனிதாலைவிட்டு நீங்கிய பிறகு முதன் முதல் செய்தித்தாளைப் பார்த்தது. அதில் தென்னாட்டுச் செய்திகளில் கேரளத்தில் நம்பூதிரிப்பாடு மந்திரிசபை ராஜிநாமாச் செய்திருந்த செய்தி கிடைத்திருந்தது. சிறிது நேரம் அங்குத் தங்கிவிட்டு நாங்கள் தங்குவதற்கு அம்மண்டிக்கு அப்பால் வியாபாரக்கமிஷணரவர்கள் தங்கியிருக்குமிடத்தை ஒட்டிக் கூடாரம் அடித்துக் கொண்டோம். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்துக்கு அக்கமிஷணரவர்கள் அரசாங்கக் கூடாரம் ஒன்றை அடித்துவைத்திருந்தார். அதில் ஸ்ரீலஸ்ரீமகாசந்நிதானத்தில் தங்கினார்கள்.

## லாரிகளைக் கண்டு யாக் மிரண்டது :

அங்கு வந்து தங்கிய நீண்ட நேரத்துக்குப் பிறகே எங்கள் சாமான்களும் பின் தங்கிய நண்பர்களும் வந்து சேர்ந்தார்கள். இவர்களைக்கண்ட சீன அதிகாரியும் வணக்கம் தெரிவித்துப் போகலாம் என்று சொல்லி அனுப்பினார். வரும் வழியில் சேம்மோகோம்பாவில் நாங்கள் கண்ட சீனத் துருப்பினரின் தண்ணீர் லாரி ஓடிவந்திருக்கிறது. எதிரே எங்கள் பொதிகளைச் சுமந்து வந்த யாக்குகள்

அதைக் கண்டு வெருண்டிருக்கின்றன. அவைகளின் இயற்கை இயல்பின்படி அவற்றின்மீதுள்ள சாமான்களை உதறித்தள்ளிவிட்டு ஓடியிருக்கின்றன. பிறகு அவற்றைக் கட்டுப்படுத்தி மீண்டும் பொதிகளை ஏற்றிக்கொண்டுவருவதற்குள் பெரும்பாடாகியிருக்கிறது. அப்படிச் சிதறிவிழுந்ததில் பல பொருள்கள் நசுங்கி உடைந்திருந்தன. இந்த நிலையில் நேபால மண்டி வந்ததும் யாக்குக்காரர்கள் ஆறு கடந்து வரமுடியாதென்று சொல்லிவிட்டார்கள். அங்குக் கூலிபேசி ஆள் தலையில் எல்லாம் வரவேண்டியதாகிவிட்டது. அதனாலேயே இவ்வளவு காலதாமதம்.

## அதிகாரிகளின் அறிமுகம் :

12—8—59 அன்று மாலை தக்களக்கோட்டைக்கு வந்து சேர்ந்தோம். கூலிகள், யாக், குதிரைகள் ஏற்பாடு செய்துமுடிக்க மறுநாள் முழுவதும் ஆகிவிட்டது. 13—8—59 அன்று மாலை திரு. லக்ஷ்மணசிங் அவருடன் வந்திருப்பவர்கள் இவர்களுக்கு ஒரு விருந்தும், சத்சங்கமும் நடத்தப்பட்டன. கேசரி, வடை, பஜ்ஜி, தேநீர் வழங்கப்பட்டன. சத்சங்கம் தொடங்கும் நேரத்தில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் அங்கு எழுந்தருளினார்கள். வியாபாரக்கமிஷனர், டாக்டர் முதலியோரை சுவாமி வித்யாநந்தா அறிமுகம்செய்து வைத்தார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் அவ்வதிகாரிகளுக்கு ஆசி வழங்கி ஆதீன வெளியீடுகள் அளித்தார்கள். சத்சங்க முடிவில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை திரு. லக்ஷ்மண சிங் வணங்கி நன்றிகூறி விடைபெற்றுக்கொண்டார்.

## வைத்தியம் :

அவரோடு ஒரு வைத்திய சாலையும் வருகிறது. யாத்திரிகர்கள், வியாபாரிகளின் உடல்நலத்தைப்பேணவே

இவ்வேற்பாடு. அதற்குள்ள டாக்டர் ஒரு வங்காளி. நற் பண்புகள் வாய்த்தவர். இது இந்திய அரசாங்கத்தின் நல்ல பணிகளுள் ஒன்று.

**புறப்பாடு :**

14—8—59 அதிகாலை 6 மணிக்குள் அவ்விடம் விட்டகன்று லிப்புத்தடாகக் கணவாயை நண்பகலுக்குள் கடந்துவிடவேண்டுமென்பது திட்டம். ஆனால் ஜப்புக்கள், யாக்குகள், சவாரிக்குதிரைகள் வருவதில் தடை ஏற்பட்டு பிறகு பலர் உதவியினால் காலை 9 மணிக்குமேல் வந்தன. இந்த ஏற்பாடு கர்ப்பியாங்வரை. மூட்டைகளை அவற்றின் மீது ஏற்றிக்கொண்டு நண்பர்களிடம் விடைபெற்றுப் புறப் பட மணி 11 ஆகிவிட்டது. திச சூ (திசம் ஆறு)வைக் கடந்து அக்கரை ஏறிச்சென்றது வழி. அங்குள்ள ஊர் மக்ரம். இவ்வூரிலும் 200 வீடுகள் இருக்கலாம். சுற்றிலும் பாசனவசதிகள் செய்துகொண்டு பார்லி, கோதுமை முதலி யன பயிரிட்டிருந்தார்கள். ஊர் முழுவதும் மிகச் சிறிய சந்துகள்தாம். பெரிய அமைப்புடைய அகலமான தெருக் கள் எதுவும் கிடையாது. இவ்வூர்மக்கள் விவசாயம், நெசவு, பெரும்பாலும் தக்களக்கோட்டை மண்டிகளில் கூலிவேலை, மூட்டை சுமத்தல், யாக்குகள் ஜப்புக்கள் குதிரைகள் ஆடுகள் சவாரிக்கும் பொதிசுமக்கவும் அனுப்புதல், ஆடு மாடு மேய்த்தல் முதலியவற்றில் ஈடுபடுபவர்கள்.

அடுத்து ஒருகல்தொலைவில் டாஷிகாங் (Tashi-gong) என்னும் ஊர். அதில் 3, 4 வீடுகளே உள்ளன. அதுவும் செழிப்பான அழகிய ஊர்தான். பெண்மக்கள் தங்கள் கணவன்மாருக்குச் சாங் (சாராயம்) அளித்து மகிழ்வோடு வழி அனுப்புகிறார்கள். அப்பெண்களுங்கூட யாக் முதலியன ஓட்டிக்கொண்டு உதவிக்கு வந்தார்கள்.

இவ்வூருக்கும் மக்ரம் கிராமத்துக்கும் இவ்வூரிலிருந்து ஒருகல் தொலைவுக்கு அப்பால் உள்ள திசம் ஆற்றில் உயரமான இடத்திலிருந்து கால் எடுத்துத் தண்ணீர்கொண்டு வருகிறார்கள். பெரிய பொறியியல் வல்லார் நீர் மட்டம் பார்த்துக் கட்டியிருப்பதுபோல அவ்வாய்க்கால்கள் அமையப்பெற்றிருகின்றன.

பலா :

இவ்வழியே 5 கல் தொலைவு சென்றதும் பலா என்னும் தங்குமிடம் வருகிறது. டிங்கர் நதி லிப்புலேக் 18,300 அடி உயரத்திலிருந்தும், ஜுங்ஜின் சூ (ஜுங்ஜின் ஆறு) 14 000 அடி உயரத்திலிருந்தும் பலாவுக்கு ஓடிவந்து திசம் ஆற்றோடு கலக்கிறது. பின்னையதைத்தாண்டி அப்புறம் செல்லுதல்வேண்டும். தண்ணீர்ஆழம் 3 அடிக்குமேல் இராது. இருந்தாலும் பனி உருகி வருவது. கீழே கல்லைப் புரட்டிக்கொண்டு ஓடுகிறது. அவ்வளவு வேகம். அதனைக் கடக்க இரண்டு மரங்களை இட்டு வைத்திருக்கிறார்கள். அதன் வழியே நடந்து கடத்தல்வேண்டும். யாக்குகள் முதலியவைகளை ஆற்றில் இறக்கி ஓட்டிவருகிறார்கள். பலா என்னும் இடத்திற்கு இப்பால் அரைமைல் தொலைவிலிருந்தே இந்திய திபேத்திய எல்லைப் பொதுவிடம் தொடங்குகிறது. பலாவில் தங்க தர்மசாது என்ற ஒரு சிறு கட்டிடமும் இருக்கிறது. அதற்கு பலாகாங் (Pala - kong) என்று பெயர். சூழவும் மிக உயரமான மலைகள் இருக்கின்றன. அங்கு அச்சந்தரும் அமைதி ஒன்று நிலவி இருக்கிறது. பல குகைகளும் இருக்கின்றன. லிப்புலேக்கணவாயைக் கடந்து களைத்துவருபவர்களும், கடக்கவருபவர்கள் நேரம் அதிகமாகி இங்கு வருபவர்களும் பலாவில் தங்கியே செல்வார்கள். இங்கு மழை, காற்று, பனி பெய்தல், ஆற்றில் வெள்ளம் முதலியன அடிக்கடி நிகழுமாம்.

லிப்புலேக் கணவாய் :

இதைக்கடந்து வழி ஏற்றம். வரவர மேடாகிக் கொண்டே போகிறது. திசம் ஆற்றின் வலதுகரை வழியேதான் செல்லுகிறது பாதை. இடது கரையில் செங்குத்தான மலைகள். கோம்பா சும்மி (Komba-chummi) என்ற இடத்தில் அவ்வாற்றைக்கடந்து இடது கரைக்குச்சென்று அந்தக் கரைவழியே மேலே செல்லுதல் வேண்டும். பிறகு நாம்ஷென் என்னும் தங்குமிடம். லிப்புவின் அடியிடத்தில் இருப்பது. லிப்புலேக் தாண்டிக் களைத்துவருவோர் இங்குத் தங்கலாம். இங்கிருந்து மிகக் கடுமையான ஏற்றம். வழியில் பல நிறக் கல்மலைகள். வெய்யில் மறைந்துமப்பும் மந்தாரமுமாகிவிட்டது. லேசான பனித்தூறலும் இருந்தது. வழியில் உறைபனிமீதும் நடக்க வேண்டியிருக்கிறது. லிப்புத்தடாகத்தில் உறைபனி மூடிக் கிடந்தது. மற்றக்கணவாய்களில் இருந்த துன்பங்கள் இங்கு மிருந்தன. மூச்சுத்திணறல் மார்புத்துடிப்பு முதலியன. குதிரைகளும் துன்பப்பட்டு வழிநடந்தன. வழி மடிந்து மடிந்து (zig - zag) சென்றது. இடது கைப்புறம் பெரிய பனி உறைப்பகுதி. இரண்டுகல் தொலைவு நடந்து கணவாய் உச்சிப்பகுதியை வந்தடைய ஒரு மணி நேரமாகி விட்டது. உச்சியில் நாங்கள் வரும்பொழுது மாலை மணி 4. கடும்புயல் வேகத்தில் எங்களை எதிர்த்து வீசிற்று காற்று. எங்களைத் திரும்பிப்போ என்று சொல்வதுபோல இருந்தது அது. கணவாய் உச்சியில்சீலைத் தோரணங்கள் கட்டியிருக்கிறார்கள். உச்சி உயரம் 17,000 அடி. அதற்குத் திபேத்தியப் பெயர் சாங்லபோஷி லா (Changlabochche - la).

உச்சியில் ஒரு சில நிமிட நேரம் நின்று சுற்றுப் புறங்களைப் பார்த்தோம். இயற்கை அன்னையின் அற்புதக்



லிப்புத்தடாகக் கணவாய் (கோடாவில்) 17,000 அடி



லிப்புத்தடாகக் கணவாய் (17,000 அடி)

கோலம், தெய்விகப் படைப்பு. எங்கள் துன்பந் துடைத்து மனநிறை மகிழ்ச்சியையும், வியப்பையும் அளிக்கவல்ல அருங்காட்சிகள். தொலைவில் நாற்புறமும் பனி உறைக் கொடுமுடிகள். அதுவல்லாது பல தொடர் மலைகள். பனிப் பாறைஉருகி மேலே குழாய்வைத்து பீய்ச்சிஅடிப்பதுபோல வந்து விழுந்துகொண்டே இருக்கிறது. இதுதான் உண்மை யான காளி கங்கையின் (காலாபாணி) உற்பத்தி இடம். அங்குப் பஞ்சினால் செய்துவைத்த பூப்போன்ற மலர் ஒன்று (பகாடி கமல்பூல் - கல்தாமரை) அழகாகப் பூத்துக் கிடக் கிறது.

உச்சியைவிட்டு அப்பால் 2 பர்லாங் தொலைவு உறை பனி. பிறகு வழி இறக்கம்தான். இந்திய எல்லை வந்து விட்டோம். தாய்த்திருநாடு திரும்பிவிட்டோம். லிப்புலேக்கை விட்டுக் கீழே இறங்கினோம். இல்லை, இல்லை. நேரம் தவறிய நேரத்திலே அதனை வெற்றி கண்டு வந்தோம், அதுவும் இல்லை. அந்த வெற்றி அளித்துக் காத்து அருளினான் எங்களோடு யாத்திரை முழுவதும் உடன்வரும் கயிலைநாதன். இல்லையேல், உயர மான கணவாய்ப் பகுதிகளில் ஏற்படும் கொடுந்துன்பங்கள் எல்லாம் அந்த அகாலநேரத்தில் வந்ததில் அனுப விக்கத்தான் நேரிட்டிருக்கும்.

ஒரு கல் தொலைவு இறங்கியதும் ஙியான்கோன் பட்டிக்கால், சிங்க்கு என்ற பல பெயர்களைக் கொண்ட ஒரு தங்கலிடம். அங்கே ஒரு தேனீர்க்கடை. லிப்புவிலிருந்தே நேரே ஒரு சிறு மூங்கில் பட்டையை வைத்து ஏந்திய தண்ணீரைக்கொண்டு தேனீர் தயாரிக் கிறார் அக்கடைக்காரர். அங்குச் சென்று கூடினோம். இரண்டு, மூன்று, நான்கு கோப்பைகள் தேனீர் வாங்கிக்

குடித்துக் களைப்பைக் போக்கிக்கொண்டோம். அந்த இடத்தில் நாங்கள் களைத்துவந்த நிலையில் அங்கு அவர் கொடுத்தது தேனீர் அல்ல அமுத பானம். முதலில் 3 அணுவாக இருந்த ஒரு கோப்பை பிறகு கூட்டத்தைக் காணக்காண நான்கணு ஆகிவிட்டது. அங்கு விலை கேட்டுப்பார்த்து வாங்கியவர்களே இல்லை. சொன்ன காசைக் கொடுத்துவிட்டு மகிழ்ச்சியோடு இறங்கினோம். இரண்டோரு பர்லாங் வந்ததும் நமது இந்தியச்சாலை அமைப்பில் வந்து சேர்ந்தோம். மேலும் இரண்டுமூன்றுகல் தொலைவு அப்பாதையில் போனதும் ஷேல்ஜேம் (ஷங்சாம்) என்னும் தங்கல் வந்தது. கடல் மட்டத்திலிருந்து 15,000 அடி உயரம். அங்குக் கூடாரம் அடித்துத் தங்கினோம்.

## ஷேல்ஜேம் :

ஷேல்ஜேம்மில் கல்லடுக்கி இரண்டோரு வீடுகள் கட்டி யிருந்தார்கள். லிப்புவை மறுநாள் கடக்கும் நினைவோடு கர்ப்பியாங்கிலிருந்து வந்த சில வியாபாரிகள் எங்களுக்கு முன்னே அங்குத் தங்கியிருந்தார்கள். இங்கும் இரண்டு தேனீர்க்கடைகள் இருக்கின்றன. இங்குக் குளிர் மிகவும் அதிகம். பனிஉறை பகுதி இரண்டு மூன்று கல் தொலைவுக் குள்ளிருப்பது அதற்குக் காரணம். களைத்திருந்தோம். இரவு முன்னேரத்தில் படுத்தோம். நல்ல உறக்கம். இங்கு தண்ணீர்கிடைப்பது அருமை. சிறுசிறு புல்லும் தரையோடு படர்ந்திருக்கும் அழகிய பூக்களை உடைய பூண்டுகளும் இருந்தன. நாங்கள் தங்கியிருந்த இடத்துக்கு அருகில் காளி (கங்கை) நதி இருந்தது. அதில் தண்ணீர் இல்லை.

## கரிஃபு :

மறுநாட் காலையில் அவ்விடம் விட்டுப் புறப்பட்டோம், 15-8-59 சுதந்திரத் திருநாளன்று நமது பாரத எல்லையில்,



ஷெல்ஜெம் - திபேத்திய யாக் வாலாக்கள் (16,500 அடி)



தார்ச்சூலாவில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களும் சுவாமி மௌனிபாபாவும் (3000 அடி)

நமது தேசத்தில் நடந்தோம் அவரவர் ஊரை நோக்கி. வழி வரவர இறக்கும். 2, 3 மைல்கள் சென்றதும் தண்ணீரே இல்லாத லிப்பு ஆற்றில் தண்ணீர் ஓடுகிறது. அது வரை அந்தர்வாகினியாக (கீழ் ஓட்டமாக) இருந்து இங்கே தண்ணீர் வேளிப்பட்டு ஓடுகிறது. இன்னும் சிறிது மேலே சென்றதும் அங்கு ஒரு அழகான காட்சி, இடதுகைப் பக்கத்து மலையில் 25, 30 அடி அகலத்தில் ஒரு இடை வேளி. அதன் வழியே பார்த்தால் லிப்புலேக்கிலிருந்து உற்பத்தியாகி ஒரு நதி அழகாக ஓடிவருவது தேரிகிறது. அதன் இரு கரைகளிலும் பசுமையான கரைகளும் இருபுறமும் உச்சியில் மட்டும் புதுப்பனியை வழிய விட்டுக்கோண்டு நிற்கும் மலைத் தோடர்களும். அந்த நதிக்கு லிலிங்தி என்று பேயர். அது லிப்புலேக் ஆற்றில் வந்து விழுகிறது. பிறகு அந்த ஆறு ( லிப்புலேக் ஆறு ) காரிஃப்பு ( Gariphu ) என்று பேயர் பேறும் இதுவரை புல்லும், சிறு சிறு சேடிகளுமே முளைத்திருந்தன. இவ்விடத்திலிருந்து குத்துச்சேடிகள் 3, 4 அடி உயரத்திலும் இனிப் படிப்படியாக உயரமான சேடிகளும் மரங்களும் (பைனில் ஒருவகை) முளைத்திருப்பதைப் பார்க்கலாம். வரவர உயரம் குறைவான இடத்துக்கு வருகிறோம். ஒரு குறிப்பிட்ட உயரத்துக்கு மேலே மரங்கள் முளைப்பதில்லை. மேலும் 3, 4 கல் தோலைவு சேன்றதும் காளி(கரிஃபூ)நதிக்கு ஒரு மரப்பாலம் இருக்கிறது. அதனைக் கடந்து ஒரு மேட்டிடத்தில் ஏறவேண்டியிருக்கிறது.

அப்பாலத்தின் அருகில் யிர்க்கா காட் (Yirkha - gad) என்னும் நதி வந்து கலக்கிறது. இனி இது காலாபாணிவரை யிர்க்கா நதி என்று பேயர் பேறுகிறது. அவ்வழியே மேலும் இரண்டு மைல் சேன்றதும் பங்கா காட் (Panka-gad) என்று ஒரு சிற்ருறு குறுக்கே ஓடுகிறது. அதற்கு

மரப் பாலம் அமைத்து வருகிறார்கள். நாங்கள் ஆற்றில் இறங்கி அக்கரை சேர்ந்தோம். பிறகு அரைக்கல் தொலைவில் காலாபாணி. வழியில் இரண்டு மூன்று மைல் தொலைவிலிருந்தே சிறுசிறு வயற்புறங்கள் அமைத்துச் சாகுபடி செய்யப்பட்டிருக்கிறது. வழியில் இரண்டுமூன்றிடங்களில் தங்கல் வசதிகளும் இருக்கின்றன. இரண்டோரு தேநீர்க் கடைகளும் இருக்கின்றன. (காட் - Gad = நதி)

## காலாபாணி :

காலாபாணி என்பது அந்த இடத்திற்குப் பெயர். அங்கு ஒரு சிறு ஓடை மலை அடியிலிருந்து ஊறி ஓடி வருகிறது. அதற்கும் காலாபாணி என்று பெயர் சொல்கிறார்கள். கருப்புத் தண்ணீர் என்பது அதன் பொருள்; விஷயம் தெரிந்தவர்கள் அதன் அடியில் உள்ள கற்பாறை கருப்பாக இருப்பதால் அவ்விதம் பெயர் வந்ததென்றும், அந்நதி காளிதேவியின் பெயர்கொண்டு வெளிவருகிறது அதனால் காளிநதி ( காளிகங்கை ) எனப் பெயர்பெற்றது என்றும் சொல்கிறார்கள். அது இரண்டு மூன்று பர்லாங் தொலைவு ஓடி யிர்க்கா நதியில் கலக்கிறது. பிறகு அந்தப் பெருநதிக்குக் காலாபாணி (காளிகங்கை) என்றே பெயர். அது கர்ப்பியாங் அருகில் தர்மாக்கணவாயிலிருந்துவரும் குட்டியாங்தி, கேலாவினருகில் உண்டாவிலிருந்து வரும் தௌளிகங்கை, ஜலஜீவியில் மிலத்திலிருந்துவரும் கௌரி கங்கை முதலிய ஆறுகளையும் பல சிற்றாறுகள் ஓடைகள் இவற்றையும் ஏற்றுப் பெருகி லோஹாகாட்டுக்கு அருகில் சரயுவில் கலந்துவிடுகிறது. இதுவே இந்தியாவுக்கும் நேபாலத்துக்கும் எல்லையாக ஓடிவருவது. வலதுகரை பாரததேசம். இடதுகரை நேபால தேசம்.

## மூன்று தேசங்களின் எல்லை :

காலாபாணி மிக அழகான இடம். இங்கு பைன் மரங்களும், சிற்ருறுகளும், சுற்றிலும் உயரமான மலைகளும் பச்சைச் சேடி கோடிகளும் இருக்கின்றன. கடல்மட்டத்திலிருந்து 12,000 அடி உயரத்தில் அமைந்த இடம். நேபாலம், பாரதம், திபேத்தேசங்களின் எல்லையில் அமைந்தது. (லிப்புலேக் இங்கிருந்து 10 கல் தொலைவு). இங்கு நமது நாட்டு எல்லைக் காவல் படையினர் (Check Post) இருக்கிருர்கள். போதுவாக லிப்புலேக்கைக் கடக்க விரும்புவோர் இங்கு இரவில் தங்கியிருந்து, அதிகாலையில் புறப்பட்டு நேரே லிப்புலேக் கணவாய் கடந்து அப்புறம் பலா அல்லது தக்களக்கோட்டைக்கே போய்விடுவர். அதுதான் சிறந்ததேன்றும் சோல்கிருர்கள். பலா 15 மைல்; தக்களக்கோட்டை 20 மைல்.

## சுதந்திரதின விழா :

நாங்கள் காலாபாணி வந்தபோது அங்கு நமது அதிகாரிகள் சுதந்திர விழாக் கோண்டாட்டங்களில் ஈடுபட்டிருந்தனர். கோடிகள் தோரணங்கள் கட்டி, ஒலிபேருக்கி அமைத்து இசைத் தட்டுக்கள் போட்டு இசை கேட்டு மகிழ்ந்திருந்தனர். எங்களுக்கும் ஜிலேபி முதலிய இனிப்புக்கள் வழங்கினர். நாங்கள் அவர்களுக்கு உயர்ந்த பிஸ்கோத்துக்கள் வழங்கினேம். மிலத்தில் வழங்கிய அடையாளச் சீட்டை வாங்கி வைத்துக்கோண்டு எங்கள் பேயர் முதலிய விபரங்களைப் பதிவுசேய்துகோண்டு போக விட்டனர். நாங்கள் இந்திய எல்லைக்குவந்த சேய்தி இந்திய அரசாங்கத்துக்கும், உத்தரப்பிரதேச அரசாங்கத்துக்கும் வானேலி மூலம் அறிவித்தார்கள் அந்த அதிகாரிகள்.

அப்போழுது காலை மணி 11 தான். பலருக்கும் அங்கு அந்த அழகிய சூழ்நிலையில் தங்கிச் சேல்ல விருப்பம் அதிகம் தான். ஆனுல் சுவமி வித்யாநந்தா அன்று கர்ப்பியாங் சேன்று விடவேண்டுமேன்று முடிவு சோல்லி விட்டார்கள். 12 மணி அளவில் அங்கிருந்து புறப்பட்டோம். இங்கு ஒரு தேநீர்க்கடை இருக்கிறது. வேண்டுமானுல் ரோட்டி தயாரித்துக்கோடுப்பான் கடைக்காரன்.

ஷாங்துமா :

இங்கிருந்து கர்ப்பியாங் 7, 8 கல் தோலைவுதான். காளி கங்கைக்கு இங்கு ஒரு பாலம் அமைத்திருக்கிருர்கள். அதனைக் கடந்து வலது கரைக்கு வந்து அவ்வழியில் 2, 3 கல் தோலைவு சேன்று மறுபடியும் காளி கங்கையை அங்குள்ள பாலத்தின் வழியே கடந்து இடது கரை நேப்பால நாட்டில் வரவேண்டியிருக்கிறது. அப்பாலம் உள்ள இடம் ஷாங்துமா (Shangduma). பிறகு அந்தக் கரையிலேயே 3, 4 கல் தோலைவு வழி சேல்லுகிறது. கர்ப்பியாங் 2 கல் தோலைவு இருக்கும்போழுது கௌவ்வா கிராமம். அங்கும் வரும் வழிகளிலும் பைன் மரக்காடுகள். அப் பைன் மரங்களை வேட்டி வேலைக்கு எடுத்துச்சேல்லவும், தங்கவும் வசதியாக கீழே பைன் சேத்தைகள் 2, 3 அடி உயரத்துக்குப் போட்டு மேலே அம்மரங்களையே பரப்பி அச்சேத்தைகளைப் போட்டு அதன்மீது மண்போட்டு மேழுகிச் சுற்றுச் சுவர்கள் மண்ணுல் எழுப்பித் தங்குமிடங்கள் அமைந்திருக்கின்றனர். கோதுமை, பார்லி முதலிய வயல்களும் இருக்கின்றன.

கௌவ்வா :

கௌவ்வா வந்ததும் மழைபேய்யத்தோடங்கிவிட்டது. யாக்குகள் அங்குவந்து சேரவில்லை. மழைக்கு அந்த மரக்

குடிலில் தங்கினேம். ஒருமணி நேரம் மழை பெய்தது. அதற்குள் யாக்குகள் முதலியனவும் வந்துவிட்டன. ஆனல் அவர்கள் எங்கள்முட்டைகளை இறக்கிவிட்டு அங்குத்தங்கும் நோக்கத்தோடு குதிரைகள் யாக்குகளை அவிழ்த்துவிட்டு விட்டார்கள். அங்குத் தண்ணீர் வசதி இல்லை. இரண்டுகல் தொலைவு சென்று காளி நதியிலிருந்து தண்ணீர் கொண்டு வரவேண்டும். மேலும் கர்ப்பியாங் இரண்டு கல் தொலைவில் இருக்கிறதென்றும் தெரியவந்தது. ஆகை யால் அவர்களை வற்புறுத்தி எங்கள் பொருள்களை ஏற்றி வரும்படிச்செய்து புறப்பட்டோம்.

சீதாபூல் :

அப்பொழுது மாலை மணி ஐந்துக்குமேல் இருக்கும். வழியில் கடுமையான ஏற்றமும் இறக்கமும். மண்பாதை. சரிவாக உள்ளது. வழுக்கல் உள்ளது. அவற்றைக் கடந்து காளி நதியின் தளத்தில் இறங்கிச் செல்கிறது பாதை. வழியில் லிப்புவிலிருந்துவரும் மற்ரெரு சிற்ருறு (டிங்கர்) காளியில்வந்து கலக்கிறது. அதையும் கடந்து சீதா பூல் (Sita Pul) என்னுமிடத்தில் அமைந்துள்ள மரப் பாலத்தின் வழியே காளியைக் கடந்து வலது கரைக்குச் செல்லவேண்டி வருகிறது. அங்கு வரும்பொழுது இருட்டத்தொடங்கிவிட்டது; அரைக்கல் தொலைவு அதன் கரையிலுள்ள குறுகிய வழியில் சென்றதும், களிமண் மேடு 1500 அடி உயரமானது ஒன்று வருகிறது.

கர்ப்பியாங் :

அதன் உச்சியில்தான் கர்ப்பியாங் அமைந்திருக்கிறது. அன்று பெய்த மழையால் களிமண் பகுதி வழுக்குடைய தாயிற்று. அதில் ஏறி கர்ப்பியாங் வந்துசேர்ந்தோம். அங்குப் பள்ளிக்கூடம், அரசாங்க வழிச்செல்வோர் விடுதி,

இரண்டு தருமசாலைகள், ஊர்க்காவல் நிலையம் முதலியன இருக்கின்றன. ஊர் பெரியது. அன்று அங்குத் தர்ம சாலையைத் தவிர வேறு தங்குமிடம் கிடைக்கவில்லை: ஆகையால் ஒரு தர்மசாலையில் வந்து தங்கினேம். இவ் வூரில் பள்ளிக்கூடத்தில் ஒரு தாராவும், தர்மசாலைக்கு அருகில் ஒரு தாராவும்தான் உண்டு: தண்ணீர்க் கஷ்டம் உள்ள ஊர். காளி கங்கை கீழே 1500 அடி பள்ளத்தில் இரண்டு கல் தொலைவு வழுக்கலும் சறுக்கலுமான பாதை யில் இறங்கி ஏறவேண்டும். எதிரே நேபால எல்லையில் 23,000 அடி உயரத்துக்கு மேற்பட்ட அபி, நம்பா என்ற இரு பெரும் பனி மூடிய கொடுமுடிகள் காட்சி அளிக் கின்றன. இங்குள்ள மக்கள் பூட்டியர்கள்; தன் பட்டப் பெயராக கர்ப்பியால் என்று சேர்த்துக்கொள்ளுகிறார்கள்.

கர்ப்பியாங், 10,300 அடி உயரத்தில் மண்மலையின் சரிவில் அமைந்திருக்கிறது. இந்த வழியில் இதுதான் இந்திய கடைசிக் கிராமம். ஆகையால் இதுவரை கூலி ஏற்பாடு செய்துவந்து, பிறகு இதற்குமேலே வேறு ஏற் பாடுகள் செய்துகொள்வர் யாத்ரிகர். இங்குச் சில கடை களிருக்கின்றன. எல்லாப்பொருள்களும் கிடைக்கும். உடுப் புக்கள் தைக்க தையல்கடைகளும் இருக்கின்றன. பறங்கிக் காய், நாட்டு முள்ளங்கி, பச்சைமிளகாய், கீரைகள் முதலிய நம்நாட்டுக் காய்கறிகளும் கிடைக்கும். இப்பகுதி யில் முள்ளங்கியை பயிரிட்டுக் கிழங்கெடுத்துப் பொடிப் பொடியாகச் சீவித் தூளைக் காயவைத்து வற்றலாக அள்ளி மூட்டைக்கட்டி விற்பனை செய்கிறார்கள். அதைக் குழம்பு கறி செய்து மழைக்காலங்களில் வியஞ்சனமாக ஆக்கிக் கொள்வர். மாவரைக்க ஆற்றில் நீர் விசை இயந்திரம் இருக் கிறது. இதுதான் கீச்கம்பா என்னும் பெயர்பெற்றவழிகாட்டி யின் ஊர். ஊர் சுத்தமாகச் சுகாதாரமுறையில் வைக்கப்பட

வில்லே. மேல் தளத்தில் ஏறவும், மாடியிடங்களுக்குப் போகவும் ஒற்றை மரத்தில் படிகள் குடைந்து அதன்மூலம் ஏறுகிருர்கள். இரவில் குளிர் அதிகம். மழை, பனிமூட்டம் (Fog), வெய்யில் இவை கலந்து கலந்து தோன்றும்.

## ஊர் கீழே இறங்குகிறது :

தாராக்களில் மிகக் குறைவாகவே தண்ணீர் வந்தது. காரணங்கேட்டதற்கு அவ்வூர்த் தலைவர் அங்குத் தாராக் களில் முன்பு அதிக அளவு தண்ணீர் வந்துகொண்டிருந்த தாகவும், இப்பொழுது குறைந்திருப்பதாகவும், காரணம் மண் பகுதிக்கு அடியிலுள்ள நீரோட்டம் குறைந்து (மலையே) ஊரே கீழே இறங்கிவருவதாகவும் சொன்ஞர்கள்.

## கட்டிட அமைப்பு :

16—8—59 அன்றே புறப்பட முயற்சிகள் செய் தோம், பயனில்லை. அன்றும் ஒரு பண்டாரா நடந்தது. மாலையிலும் சிற்றுண்டிகள் தயாரித்து வழங்கப்பட்டன. சிலர் காளிகங்கையில் சென்று எண்ணெய் தேய்த்துக் குளித்தோம். நாங்கள் தங்கிய கட்டிடம் மலைநாட்டு முறையில் அமைந்தது. கீழேசமையல் இடமும், சாமான்கள் போட்டுக்கொள்ளும் அறைகளும் உள்ளன. மாடித்தளத்திற் குப் பலகைகள் பரப்பியிருந்தார்கள். வெளியே பால்கனி (மாடம்) உண்டு. சமையல் ஆகும்பொழுது மேல்மாடியில் புகைவந்து மண்டும். மாடிக்குச் செங்குத்தாகப் படிகள் அமைத்திருந்தார்கள். கூரைக்குத் தகட்டுக் கற்கள் பரப்பியிருந்தார்கள். மழைபெய்தால் ஒழுக்குடையது அக் கூரை. ஆனுல் மற்ற நேரங்களில் பால்கனியிலிருந்து வெளியே பார்த்தால் காட்சி மிகவும் கவர்ச்சியாக

இருக்கும். தொலைவில் பனி மூடிய சிகரங்களும், சுற்றிலும் உயர்ந்த மரங்கள் அடர்ந்த காடும், நடுவில் நதியும் பார்க்கத் தெவிட்டாத ஒன்று.

## கூலி கூடுதலாகவும் கொடுப்பர் :

16—8—59 அன்று பகல் முழுவதும் மழை தூறிக் கொண்டேயிருந்தது. கீழே இறங்கித் தரையில் கால் வைக்கவே கூசிற்று, அவ்வளவு அருவருப்பாக இருந்தன சந்துக்கள். கிராமத் தலைவரிடம் நாங்கள் வந்ததுமே கூலி ஆட்கள் ஏற்பாடு செய்துதர வேண்டுமென்று சுவாமிகள் சொன்னார்கள். அவர் இன்று காலையில் பொது விடத்தில் பொதுக்கூட்டம் ஒன்று கூட்டி நாங்கள் அங்கு வந்திருக்கும் செய்தி சொல்லி, கூலிகளாக யார் யார் போக விருப்பப்படுகிறார்கள் என்பதைத் தெரிவிக்கும்படி கேட் டார். அதில் ஒரு குறிப்புங் கொடுத்தார் அவர்களுக்கு. "இவர்கள் வியாபாரிகள் அல்லர். யாத்ரி. பணம் படைத்த பெரியவர்கள். கூலி கூடுதலாகவும் கொடுப்பர். மனம் மயங்கவேண்டாம்" என்றார். அதனால் கூலி அதிகம் கேட்கலாம் என்ற குறிப்புங் கிடைத்தது அவர்களுக்கு. அவ்விதமே திட்டத்துக்கு மேலேதான் கூலி கேட்டார்கள். ஒருவாறு பேசி முடிவு செய்துகொண்டு மறுநாளே புறப்பட வேண்டுமென்று சொல்லப்பட்டது, இரவு 8, 9, மணி ஆகிவிட்டது இவ்விதம் பேசி முடிவுக்கு வர.

## மஸ்து :

"மறுநாள் முடியாது. எங்களுக்குக் கூலியில்முன் பணம் வேண்டும். உடம்புக்கு மஸ்து ஏற்றிக்கொண்டு தான் நாளைநின்று மறுநாள் வரமுடியும்" என்றனர்.

"முன்பணம் கொடுக்கலாம். இரவு மஸ்து ஏற்றிக்கொண்டு மறுநாள் (17—8—59) காலையிலே புறப்படவேண்டும்" என்று சொன்னோம். "அது முடியாது. இனி இரவு இவ்வளவு நாழிகைக்குமேல் ஆடு தேடி வாங்கவேண்டும். பிறகு அவற்றை அடித்து சமைத்து உண்ணமுடியுமா? காலையில்தான் ஆடு கிடைக்கும்" என்றனர். பிறகுதான் எங்களுக்கு மஸ்து ஏற்றல் என்பதன் பொருள் விளக்கம் தெரிந்தது. "எப்படியும் மறுநாள் காலை 10 மணிக்குள் புறப்படவேண்டும்; அப்படிச் செய்வதானால் முன்பணம் கொடுக்கலாம்" என்று சுவாமிகள் அழுத்தமாகச் சொன்னார்கள். கூலிபேச வந்தவர்கள் ஒன்றும் சொல்லாமல் வெளியே போய் அவர்களுக்குள் பேசி ஒரு முடிவுக்கு வந்து சுவாமிகளிடம் முன்பணம் பெற்றுப் போயினர்.

## புறப்பட முடியாதோ?

முதல் நாள் சொன்ன முடிவை வைத்துக்கொண்டு மறுநாள் காலை 8 மணிக்குள் புறப்படுவதற்குச் சமையல் வேலைகள் முதலியன முடிந்து மூட்டைகட்டினோம். அன்று காலையில் குறித்தபடி கூலிகள் வரவில்லை. அப்பொழுதிருந்த நிலையில் அன்று புறப்பட முடியாதோ என்றிருந்தது. ஆகையால், அங்கு அன்று தங்கவேண்டியதுதான் என்று சுவாமிகள் சொல்லிவிட்டார்கள். எங்கள் உற்சாகமும் தளர்ந்தது. ஆனால் சுவாமிகள் முதல்நாளிரவு முதன்மையாகநின்று கூலிபேசியவர்களை அழைத்து, சொன்னசொல்லைக் காத்துக்கொள்ளாததற்காகக் கடிந்துகொண்டார்கள். அவர்களும் முயற்சிசெய்துபார்ப்பதாகச்சொல்லி ஊருக்குள் சென்று காலை 10 மணிக்குசிலரை அழைத்துவந்தார்கள். அவர்களைக்கொண்டு எங்களுக்கு இன்றியமையாதுவேண்டிய படுக்கைகள் முதலியவற்றை எடுத்துவரச்செய்து

11 மணிக்குப் புறப்பட்டோம் அவ்வூரை நீங்கி. சுவாமிகள் தம்மிடமிருந்த கூடாரங்களை அங்கேயே விலைக்குக் கொடுத்துவிட்டார்கள். இனிக் கூடாரமும் தேவைப் படாது. தங்குவதற்குக் கட்டிடங்கள் கிடைக்கும். ஆகையால் அவைகளைச் சுமக்க ஆட்களும் கூலிச் செலவும் தேவையில்லை அல்லவா ? இதுபோலவே தேவை யில்லாத ஆட்டாமா போன்ற சில உணவுப்பொருள்களையும் குறைத்துக்கொண்டோம்.

## ச்செட்டோ தங்கா :

ஒருகல் தொலைவு மிகவும் கடுமையான ஏற்றம். முதல் நாள் பெய்த மழையால் பாதையில் வழுக்கலும் சறுக் கலும் அதிகம். கூர்க்கம்பின் உதவி, இன்றியமையாமை அங்குத்தான் தெரிந்தது. அதன் முடிவில் ஒரு மலை உச்சியில் மணிஒன்றும், தேவிகோவில் ஒன்றும் இருந்தன. அதற்கப்பால் அழகான புல்லும் சிறு சிறு அழகிய பலநிறப் பூக்களும் நிறைந்த ஒரு மைதானம். அந்த அழகிய இடத்திற்குச் ச்செட்டோ தங்கா (Chcheto Thanka) என்று பெயர். மூன்றுமைல்களுக்கு அப்பால் ஒரு குறுகிய கணவாய் வருகிறது. 10,500 அடி உயரமுள்ள இடம் அது. அங்கு மூன்று பழைய வீடுகள் இருக்கின்றன.

## இராசியான இடம் :

அப்பகுதியில் உள்ள அவைகள் பூட்டியருக்கு முக்கிய மான வியாபாரச் சிறப்புடைய இடம். அவர்கள் பழைய சம்பிரதாயங்களில் ஊறியவர்கள். இப்பகுதியில் மூன்று வகை பூட்டியர்கள் இருக்கிறார்கள். (கர்ப்பியால்கள், புத்தி யால்கள், குட்டியால்கள்) இவர்களின் முன்னோர் இவ்வழி

வியாபாரத்தைத் தோடங்கிய காலத்தில் இங்குத்தான் முதல் முதல் உப்புப் போதிகளைத் தானியப் போதிகளுக்கு மாற்றிக்கோண்டார்களாம். அம்முவகைப் பூட்டியருக்கும் தனித்தனியே உள்ள வீடுகள் அவை. இங்கு ஒரு மலைத் தேவதையின் கோவிலும் இருக்கிறது. இங்கிருந்து வியா பாரம் தோடங்கினுல் அது நல்ல பலனைக் கோடுக்குமாம். இராசியான இடம்.

## புத்தி :

இதிலிருந்து பிறகு 3 மைலுக்குக் கடுமையான இறக்கம். வழியில் கல் துண்டுகளைப் போட்டுப் படி போலச் செய்துவிட்டிருக்கிறுர்கள். நடுநடுவில் உள்ள மரத்தடிகளில் நீளமான கல்துண்டுகளைப் போட்டுத் தங்கி இளைப்பாறிச் சேல்ல மேடைகளும் அமைத்திருக்கிறுர்கள். அந்த 3 மைலுக்குள் 2,500 அடி இறங்கவேண்டி யிருக்கிறது. அவ் இறக்கத்தை ஒட்டி புத்தி ( Budhi ) என்றேரு கிராமமும் இருக்கிறது. இங்குப் பள்ளிக்கூடம் ஒன்றிருக்கிறது. அழகானசூழ்நிலையில்அமைந்திருக்கிறது.

## மணத்தக்காளி :

இதிலிருந்து பாதை ஏற்றமாகவும் இறக்கமாகவுமே சேல்கிறது. சிலசில இடங்களில் ஏற்றம் இறக்கத்திற்கு முன்சோன்னதுபோல கல்துண்டுகள்போட்டுப் படி அமைப் பும் சேய்திருக்கிறுர்கள். அவைகள் எல்லாவற்றிலுமே படிகள் பல அளவுள்ள உயரங்களில் இருக்கும். ஒன்று $1\frac{1}{2}$ அடி 2 அடி உயரமிருக்கும். அடுத்தது $\frac{1}{2}$ அடி $\frac{3}{4}$ அடி உயரமிருக்கும். ஆகையால் ஒரே நிதானமாக ஒரே சீராகச் சேல்லமுடியவில்லை. வழியோரங்களில் நாட்டு மணத்தக் காளி, கீரைகள் முதலியன மண்டிக்கிடக்கின்றன. பாதை

காளிகங்கைக் கரையை ஒட்டியும் பிரிந்தும் செல்கிறது. வழியில் சோங்சூ (Chong chu), பலாகாட் (புத்திகாட்), கோத்லா, லமாரி முதலிய நதிகளையும் இடங்களையும் கடந்து செல்லவேண்டியிருக்கிறது.

பெல்சித்தி :

லமாரியின் முடிவில் சில மலைக் குகைகள் இருக்கின்றன. அவைகளுக்கு அப்பால் 400, 500 அடி உயரமான மலைப்பாறைகள் வழி ஓரத்தில் மேலே 5, 6 அடிக்கு நீட்டி நிற்கின்றன. அவைகளின்வழியே பெரிதும்சிறிதுமாகப் பல நீர்வீழ்ச்சிகள் வீழுகின்றன. உயரத்திலிருந்து விழுவதால் குடைகளும் அங்குப் பயனில்லை. நனைந்தேதான் செல்ல வேண்டும். அப்பால் விலகியும் செல்லமுடியாது; வலது கைப்புறம் மலை ; இடது கைப்புறம் 7, 8 அடி தோலை வில் சீறிச்சினந்து வரும் காளிகங்கை. ஆகையால் நனைந்தே ஆகவேண்டும். குகையிருக்கும் இடத்திலிருந்து இவ்வருவிகள் இருக்கும் இடம் வரை உள்ள பகுதி பேல்சித்தி (Pelsiti) என்று வழங்கப்படுகிறது. பிறகு இரண்டு கல் தொலைவு ஆற்றின் கரையிலேயே மேட்டிலும் பள்ளத்திலும் ஏறிஏறி இறங்கி மால்ப்பா என்னும் தங்கலுக்கு வந்து சேர்ந்தோம். அப்பொழுது இரவு மணி 7-30. இங்கு இவ்விடத்தின் அருகில் மால்ப்பாகாட் (Malpa gad) என்ற நதி காளிகங்கையில் மிக உயரமான மேட்டிடத்திலிருந்து ஓடிவந்து கலக்கிறது.

மால்ப்பா :

இங்கு மால்ப்பா நதிக்கு இரும்புப் பாலம் இருக்கிறது. கடல் மட்டத்திலிருந்து 7,200 அடி உயரத்தில் அமைந்திருக்கிறது மால்ப்பா. மால்ப்பா ஒரு பள்ளத்தாக்கு.

இங்கு மால்ப்பாவின் இரைச்சலும் காளிகங்கையின் பேரி ரைச்சலும் கேட்டுக்கொண்டே இருக்கும். இங்கு இரு சகோதரர்கள் கடைவைத்திருக்கிறார்கள். தேநீர், சிற்றுண் டிகள், மற்ற பலசரக்குகள் எல்லாம் கிடைக்கும். இனிமை யாகப்பழகத்தெரிந்தவன் அக்கடைக்காரன். யாத்திரிகர்கள் தங்க நிழல்வேய்ந்த பெரிய கொட்டகை ஒன்று அமைத்து வைத்திருக்கிறான். கீழே படுக்க மண்ணுக்குமேல் பலகை களைப் பரப்பிவைத்திருக்கிறான். அங்குத் தங்க வாடகை கொடுக்கவேண்டியதில்லை. வேண்டிய சாமான்களை அவ னிடம் வாங்கிக்கொண்டாலேபோதும். 100 பேர்கள் தங்க லாம். ஸ்ரீலஸ்ரீகுருமகாசந்நிதானத்தில் எழுந்தருளியிருக்கத் தன் கடையிலேயே ஒரு பகுதியில் வசதி செய்துதந்தான். பக்கத்தில் வேறொரு சிறியகொட்டகையில் தண்டி ஆட்கள் கூலிக்காரர்கள் தங்கினர். மற்றவர்கள் அந்தப் பெரிய கொட்டகையில் தங்கினோம். காற்றடக்கமான இடம். இரவில் குளிரில்லை. மிக அழகான இடம் அது. மரமடர்ந்த சோலை. நான்கு புறமும் உயரமான மலைகள். 30, 40 அடி தொலைவுக்குள் இரண்டு நதிகள்.

## போலாக் கணவாய் :

மறுநாட் காலையில் வழக்கத்தைவிட முன்னதாகவே புறப்பட்டோம். அன்று ஜிப்தியில் நண்பகல் உணவு கொண்டு அன்று அங்குத் தங்கி மறுநாள் அங்கிருந்து புறப்படுவதாகத் திட்டம். அத்தோடு அந்தநாள் (கங்கண விழா) ஆவணி அவிட்டம். மால்ப்பாவை ஒட்டி மிகக் கடுமையான ஏற்றம். காளி கங்கையின் கரையில் செல்லு கிறது அவ்வழி. ஒருமைல் தொலைவும் ஏற்றம்தான். நடு இடத்தில் சில குகைகளும் உண்டு. அம்மலை முகடு போலாக் கணவாய் (Bola Pass) என்பது. 8,000 அடிக்கு

மேல் உயரமான பகுதி. பின்னே ஒரு மைலுக்கு ஒரு கடுமையான இறக்கம்.

## நஜாங் :

அதன் முடிவில் நஜாங்நதி மலை உச்சியிலிருந்து நீர்வீழ்ச்சி போல ஓடிவருகிறது. அதற்கு ஒரு நல்ல பாலமும் இருக்கிறது. பாலத்தில் நின்று நீர்வீழ்ச்சி போல வரும் அவ்வாற்றைப் பார்த்துக்கொண்டே இருக்கலாம். அவ்வளவு அழகாக இருக்கும் அங்குள்ள சூழ்நிலையும் அது வந்து விழும் அழகும். எதிர்க்கரையில் ஒரு சிறிதுதள்ளி நேபாலக்கரையிலும் டம்பககாடு (Tampakagad). அல்லது திங் அருவி ( Thing falls ) என்பதும் இதேபோலவே அழகான சூழ்நிலையில் வந்து விழுகிறது.

இவ்விடத்தில் இந்த இரு நீர்வீழ்ச்சிகளிலிருந்தும் மேலெழும் புகைபோன்ற நீர்த்துளிகளை காற்று வாரிவீசும். அது துவ்வானமாக சிறு மழைத்தூற்றல்போல வந்து பரவிவிழும். களைத்துவருவோருக்கு இங்கு இந்த நீர்த் தெளிப்பு களைப்பைப் போக்கி மனத்தில் மகிழ்ச்சியை உண்டுபண்ணும்.

## நிர்ப்பாணி :

இந்த நல்ல அழகிய இடத்தை விட்டு மூன்றுமைல்களுக்கு மேல் மாடிப் படிபோல் உள்ள இறக்கமும் கடும் ஏற்றமுமாக இரண்டு மூன்று ஏற்றம் இறக்கங்களுக்குப் பிறகு பிந்தகோட்டை ( Bindakot ) வந்து சேர்ந்தோம். அதற்கு பிஞ்சுக்குட்டி (Binjukutti) என்றும் பெயர். வழியில் ஜம்லி உட்யார் (என்னும் குகைப்பகுதி) என்னும் நஜாங்தல்லா அல்லது லகோர்ஃபூ ( Lagorphu ) இந்தப் பகுதிகளைக் கடந்து செல்லவேண்டியிருக்கிறது.

பிந்தக்கோட்டையிலிருந்து நஜாங் வரை உள்ள பகுதி நிர்ப்பாணி என்பது. இங்கு தேநீர்க்கடைகள் இரண்டு இருந்தன. அதில் தங்கி ஓய்வுகொண்டு தேநீர் அருந்தி மேலே ஜிப்தியை நோக்கிச் சென்றோம்.

இப்பகுதியில் - போலாக் கணவாயிலிருந்து கல்லா காம் ( Galla - gam ) வரை - பழையகாலங்களில் மலைமீது ஜிப்தி பிந்துக்கோட்டை வராமலே மலைமேலே வழி சென்றது. தண்ணீர் கிடைக்காது. ஆகையால் அப்பகுதி நிர்ப்பாணி ஆயிற்று.

## ஜிப்தி :

சிறுமழைதூறத்தொடங்கிவிட்டது. ஒருபெரிய வளைவு. அதைக்கடந்தால் ஜிப்தியில் உள்ள பள்ளிக்கூடம். அங்குத் தான் நாங்கள் அன்று தங்கினோம். அப்பள்ளியின் அருகில் உள்ள தாராவை ஒட்டிக் குளிப்பறை இரண்டு கட்டிவிட் டிருக்கிறார்கள். பள்ளி மேல்மாடியிலும் கீழிடத்திலும் கடைகளும் இருக்கின்றன. இங்கிருந்து தொலைவில் காளி கங்கை உயரமான மலைப்பாறைகளின் நடுவே ஓடி வருவதும், தெற்கே சிங்கோலாகாட் என்பது ஒரு உயர்ந்த மலைச்சரிவில் ஓடிவருவதும் சுற்றிலும் பயிர்பச்சைகளும் கண்ணுக்கும் மனத்துக்கும் பெருவிருந்தாக இருக்கின்றன அன்று முழுவதும் சிறுமழைத்தூற்றல் விழுந்துகொண்டே இருந்தது.

ஜிப்தி 8,000 அடி உயரத்தில் அமைந்த சிற்றூர். பால் தயிர், மளிகை, ஷாப்சாமான்கள் எல்லாம் கிடைக்கின்றன. பள்ளிக்கூடம், அஞ்சலகம் முதலியனவும், எல்லைக் காவல்படை, ஊர்க்காவல்படை முதலியனவும் இருக்கின் றன. நேபால அரசாங்கமும் ஒரு காவல்படை வைத்திருக்

கிறது. அவர்களிடம் பேயர் முதலியன பதிந்துவைத்தல் வேண்டும்.

மாடி இரண்டுபகுதியாக அமைந்திருக்கிறது. ஒருபகுதியில் பள்ளிக்கூடம், மற்றப்பகுதியில் ஊர்ஊராகச் செல்லும் மருத்துவசாலே (Visiting Dispensary) ஒன்றும் இருந்தன. வைத்தியம் ஆயுர்வேத முறையில். அதன் மருத்துவர் ஸ்ரீகாசி சர்வகலாசாலேயில் பட்டம் பேற்றவர். நல்லவர். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் வந்து தங்க தன்னிடத்தைக்கோடுத்துவிட்டு தான் அங்குமுன்னிடத்தில் தங்கிக்கோண்டார். பள்ளிக்கூட ஆசிரியை ஒரு வயதான பேண்மணி. தோண்டுள்ளம் படைத்தவள். பக்தி மிக உடையவள் - பூட்டிய மரபைச் சேர்ந்தவள். அங்கேயே தங்கியிருந்துகோண்டு கல்விப்பணியும் செய்துவருகிருள். வால்நட் (Walnut), பீச் (Peach) முதலியன அங்குக் கிடைக்கின்றன. இப்பக்கங்களில் ஒக் (Oak) மரங்களும் அதிகம்.

## கோண்டைச்சோளம் :

மறுநாள் காலேயில் 7 மணிக்கு ஜிப்தியை விட்டுப் புறப்பட்டோம். முதலில் ஒருமைல் கடுமையான இறக்கம். அந்தத் தோலேவில் 1000 அடி இறங்கிச் செல்ல வேண்டும். அங்குள்ள ஊர் கல்லா காம் ( Galla gam ) இதிலிருந்துதான் பழையவழி மலேமுகட்டின்மீதுசென்றது. இப்போது பாதை அமைத்து வழி செய்துவிட்டார்கள்.

மேலும் 3, 4 மைல்கள்சேன்றதும் அங்கே ஷிங்கோலா காட் ( Shinkola - gad ) என்னும் ஈதியும் குடியிருப்பும் இருக்கிறது. இதுதான் ஜிப்தியில் காட்சி வழங்கி

அழகிய ஆறு. இதுவரை வழியெல்லாம் கொண்டைச் சோளம் மிகுதியாகப் பயிரிட்டிருக்கிறார்கள். அதைக் கண்டதும் பலருக்கும் நாக்கில் நீர் ஊறிற்று. ஷிங்கோலா வில் ஒரு கடை ; அங்குச் சென்று தேநீர் அருந்தினோம். கடையைச்சுற்றி சோளம் அழகானகொண்டையுடன் யாத்ரீகர்களை அழைத்தது. பலரும் அக்கொல்லைக்குள் புகுந்து சோளம் ஒடிக்கலாயினர். கடைக்காரன் அவர்களை வெளியேற்றிவிட்டுத் தானே அவரவரும் வேண்டிய அளவு ஒடித்துக்கொடுத்து நெருப்பில் வாட்டியும் கொடுத்தான். ஆவலோடு அவரவரும் 5, 6 கொண்டைகள் வாங்கி வாட்டி எடுத்துக்கொண்டு மேற்கொண்டும் இரண்டு மூன்று கோப்பை தேநீர் அருந்தி மேலே சென்றோம்.

## சுமாரியதார் :

ஷிங்கோலா இங்கு இரண்டுமூன்று கிளைகளாகப்பிரிந்து ஓடுகிறது. ஆனால் மூன்றுக்கும் மரப்பாலங்கள் இருக்கின்றன. அவைவழியே அவற்றைக் கடந்து அப்புறம் சென்றதும் இரண்டுவழிகள் பிரிகின்றன. ஒன்று அங்குள்ளபெருங் காட்டுக்கும், மற்றொன்று அக்காட்டின் வழியே சிர்க்காவுக்கும் செல்லுகின்றன. வழி மயக்கம் ஏற்படுகிறது அங்கே. காட்டில் ஓக் முதலிய பல பெரிய உயர்வகை மரங்கள் அடர்ந்துநிற்கின்றன. கருங்குரங்குகளும் அங்கு அதிகம். வழி மிகமிகக் கடுமையான ஏற்றம். மூன்று மைலுக்குள் 3200 அடி ஏறவேண்டி வருகிறது. முதலில் பனி மூட்டம் மூடிக்கொண்டது. பிறகு மழை தூறத் தொடங்கி விட்டது. வளைந்து வளைந்து அப்பாதை செல்கிறது. உச்சியிடம் 9,900 அடி உயரம். அங்கு கற்களை அடுக்கிக் கொடிகட்டி சுமாரியதார் (Sumariya-dhar) அல்லது ரங்லிங் (Rungling) என்ற கோவில்

இருக்கிறது. அங்குத் தங்கி இளைப்பாறினோம். பிறகு வழி வரவர இறக்கம். வழுக்குடையதாகவும், பாசி பிடித்ததாகவும் இருந்தது. வழியில் சில நீரோடைகளும் இருக்கின்றன. வழுக்குள்ள இடங்களில் இரண்டொருவர் கீழே விழுந்துவிட்டார்கள். அதன் முடிவில் சுமாரியா அல்லது சாம்ரே என்ற தங்கல்.

சிர்க்கா :

சிர்க்காவுக்கு மாலை 3 மணி அளவில் வந்துசேர்ந்தோம். 3 தெருக்களைக்கொண்டது அவ்வூர். ஊர் நுழைவு வழி ஒரத்தில் மாட்டுக் கோட்டிலும், ஊர்மக்கள் ஒதுங்குவதுமாக மிகவும் அருவருப்பாக இருக்கிறது. அங்கு ஒரு பள்ளிக்கூடம், கடைகள், அஞ்சலகம், கைத்தொழிற் பயிற்சி நிலையம் முதலியன இருக்கின்றன. தேசிய வளர்ச்சித் திட்டத்தின்படி இங்குப் பல அரிய வேலைகள் நடைபெறுகின்றன. பள்ளிக்கூடத்தில் தங்கினோம். பள்ளிக்கூடம், அஞ்சலகம், கடைகள் மூன்றும் ஒரு கட்டிடத்தில் அமைந்திருக்கின்றன. தெருமுழுவதும் கல்பாவி வைத்திருக்கிறார்கள். ஊர் அழகாக இருக்கிறது. சுற்றிலும் கோதுமை, பார்லி வயல்களிருக்கின்றன. கண்டுமுதலாகும் பார்லி, கோதுமை இவைகளை அங்குக் காயவைப்பதற்கு உபயோகமாகும் அத்தெருநடுவில்உள்ள அக்களம். பள்ளிக்கூடத்தின் அருகில் ஒரு பெரிய மலை அருவி வருகிறது. அதில் இரண்டு குளிப்பறைகள் கட்டி விட்டிருக்கிறார்கள். நீர்வீழ்ச்சியில் விழுவதுபோல அக்குழாய்களில் தண்ணீர்வந்து விழுந்துகோண்டே இருக்கும். குளிக்க ஆசையாக இருக்கிறது. இங்குக் கதர் அபிவிருத்தி, கம்பளிநெசவு அபிவிருத்தி வேலைகள் நடைபெறுகின்றன.

நல்ல அழகான ரத்னகம்பளங்களைப் பெண்களே நெய்கிறார் கள். படித்தவர்கள் இங்கு அதிகம். 50, 60 வீடுகள் கொண்ட கிராமம். இதற்கு அப்பால் உள்ள ஊர்கள் இதே போன்றே அகலமான தெருக்கள் அமைத்துக்கொண்டு நடுவில் கல்பாவி விடப்பட்டிருக்கும். பால், தயிர் முதலியன வேண்டிய அளவு கிடைக்கும். இவ்வூரிலிருந்து 1,000 அடி ஆழத்தில் காளிகங்கை ஒடுகிறது. அங்கே ரங் என்றொரு கிராமமும் தெரிகிறது. அங்குக் காய்கறிகள் அதிகம் என்றார்கள்.

## நாராயண ஆஸ்ரமம் :

இதற்குப் பக்கத்தில் மலையின் மேற் பகுதியில் 3 கல் தொலைவில் நாராயண ஆஸ்ரமம் என்ற ஒன்றி ருக்கிறது. சூசா என்னும் ஊருக்கும் அது அண்மையி லுள்ளது. ஆகையால் இரண்டு ஊர்களிலிருந்தும் அங்குப் போகலாம். 108 ஸ்ரீ நாராயணஸ்வாமி என்ற தென்னிந்திய சுவாமிகள் ஒரு ஆசிரமம் அமைத்து இப்பகுதி மக்களு க்கும், கயிலை யாத்திரை வருவோருக்கும் தொண்டுகள் பல செய்திருக்கிறார்கள். கல்விப் பணி, மருத்துவப் பணி, மக்கட் பணி, தெய்வப் பணி, பசுக்காத்தல் முதலிய பல தொண்டுகள். பல லக்ஷம் ரூபாய்கள் நிதி அமைத்து கல்லூரிகள், உயர்நிலைப் பள்ளிகள், மருத்துவ மனைகள் முதலிய பலவும் நிறுவியிருக்கிறார்கள். அவர்கள் ஆஸ்ர மத்தின் பிரதான மூர்த்தி ஸ்ரீமந் நாராயணர். லக்ஷம் ரூபாய்க்குமேல் செலவுசெய்து ஆஸ்ரமக் கட்டிடம் கட்டி யிருக்கிறார்கள். சாதுக்கள் யார் வந்தாலும் எவ்வளவு நாட்கள் தங்கினாலும் அவர்களை வைத்துப் பராமரித்தல் வேண்டும் என்ற நியதி ஏற்படுத்தியிருக்கிறார்கள். அந்த ஆஸ்ரமத்தைச் சுற்றி, ஆப்பிள், ஆரஞ்சு, எலுமிச்சை,

வால்நட், பியர்ஸ் முதலிய பழவகைகள் அதிகமாம். அந்தச் சுவாமிகளுக்குச் சீடர்கள் இந்நாட்டின் பல பகுதிகளிலும் உள்ளனர்.

கிறிஸ்துவ பிரசாரம் அப்பகுதிகளில் நடைபேற முடியாதபடி ஆஸ்திகப்பணி பல சேய்துள்ளார்கள். சுவாமிகள் முக்தி அடைந்துவிட்டார்கள். ஆனுல் ஏராள மான சோத்து இருப்பதால் அவர்களுடைய சீடர்கள் ஒரு நிர்வாகக்குழு அமைத்து அதை நிர்வகித்துவருகின்றனர். இப்போழுதும் அதன் தோண்டு சிறந்து விளங்குகிறது. எங்களோடு வந்தவர்களில் ஒரு சிலர் அங்குப்போய் கண்டு வந்தார்கள்.

## கூலிகளின் கும்மாளம் :

சிர்க்காவில் அன்றிரவு எங்கள் கூலிகள் மகிழ்ச்சி போங்க நெடுநேரம் ஆடிப்பாடியிருந்தனர். இரண்டிரண்டு வரிசையாக எதிர் எதிரே நின்றுகோண்டார்கள். கை கோட்டி தாளத்திற்கு நடைபோட்டு முன்னும் பின்னுமாக சேன்று சேன்று ஆடினர். பிறகு அந்த ஆட்டத்தோடு எல்லோரும் ஒரு ஒழுங்குமுறையில் வட்டமாக வந்து நின்று முன்னும் பின்னும் நடைபோட்டு ஆடினர். கை கோட்டினர். பிறகு எல்லோரும் கை கோர்த்துக்கோண்டு சுற்றிச் சுற்றி ஆடினர். பாடுவதிலும் ஒரு ஒழுங்கு. ஒருவர் முன்சோல்ல மற்றவர்கள் முறைவைப்பாக பின்னே சேர்ந்து ஒரே குரலில் பாடினர். கும்மி அடித் தார்கள். இரவு 1 மணி வரையில் நடந்தது இந்த ஆட்டம். தேய்விகப் பாடல்கள், நாட்டுப் பாடல்கள் எல்லாம் கலந்து பாடினர். ''லியாவ், லியாவ்'' என்ற பல்லவியை அடிக்கடி சோல்லிக்கோண்டார்கள். பாஷை புரியவில்லை.

ஆனால் சந்திரனைக் குறித்துத் தோடங்கினார்கள் என்பது ஓரளவு புரியக்கூடியதாக இருந்தது. அவ்வூர் மக்கள் இதை ரசித்தார்கள் நீண்டநேரம்.

**தருமத்துவாரம் :**

மறுநாள் அதிகாலையில் இவ்வூரைவிட்டுப் புறப்பட்டோம். வழி கடும் ஏற்றம். ஆனால் சில சிற்றாறுகள் வழியில் ஓடுகின்றன. அங்கிருந்து 2 கல் தொலைவு சென்றதும் அங்கோரு மலைமுகடு. அதில் கற்கள் குவித்து ஆலயம் அமைத்து மணிகள் கட்டியிருக்கிறார்கள். 9,100 அடி உயரத்தில் அமைந்தது. அக்கோவிலுக்குத் தருமத் துவாரம் என்று பெயர். அது தேவி ஆலயம். அந்த இடத்துக்குப் பெயர் தித்லக்கோட். அங்கிருந்து வழி இறக்கம். அடுத்து வருவது சூசா.

**சூசா :**

எங்களில் சிலர் சூசாவில் சென்று பாலும், பிஸ்கோத்தும் வாங்கி அருந்தினோம். அங்கு இரண்டு கடைகள் இருக்கின்றன. 30, 40 வீடுகள். நடுவில் 500, 600 அடி நீளம், 100, 150 அடி அகலமுள்ள பெரிய கல் பாவிய களம். களத்தில் கோதுமை காயவைக்கப்பட்டிருந்தது. இங்கு ஏராளமாக உருளைக்கிழங்கு, கோதுமை, வெங்காயம் முதலியன பயிரிடப்பட்டிருக்கின்றன. சூசா கடல் மட்டத்திலிருந்து 8,500 அடி உயரம்.

**பிரிவாற்றாமை :**

அங்குக் கடையில் இருக்கும்போழுது ஒரு புதுமணத் தம்பதிகள் வந்து கடைக்காரரை வணங்கினர். ஆசி

பேற்றுக் கணவன் வீடுசேல்ல அனுமதியும் பேற்றனர். இதுபோன்றே பலபல வீடுகளிலும் சென்றுசென்று பேரியோர்களுக்கு வணக்கம் தேரிவித்து ஆசியும் அனுமதியும் பேற்று வந்தனர். அவரவரும் ஆசி சோல்லும் போழுது வழங்குவோரும் பேறுவோரும் கண்கலங்கினர். கண்ணீர் வழியவழிய அப்பேண் வீடு வீடாகச் சேன்ளுள் கணவன் பின்னே. நாங்கள் புறப்பட்டுச் சாலையில் வந்து சேரும்போழுது. அந்தத் தம்பதிகளுடன் பேண்ணின் தாய் முதலிய அவ்வூர்ப் பேண்களும் உடன் வந்தார்கள் வழியனுப்ப. ஊர் எல்லை வந்ததும் தாயும் அழுதாள். உற்ருர் உறவினர்களும் கண்ணீர் வடித்தார்கள். பேண்ணும் அழுதாள். பிரியா விடைபேற்ருள். கணவன் பின்னே சேன்ருள். தாயும் மற்றவர்களும் வழிமேல் விழிவைத்துக் கணவன் வீடுசேல்லும் பேண்ணைப் பார்த்து பிரிவாற்ருது அழுது போருமி நின்ருர்கள்.

முன்னம் அவனுடைய :

அப்பேண் ஒரு பர்லாங் தோலைவு போகும் வரை கண்ணைக் கசக்கிருள். கணவன் தன் இளம் மனைவியின் கையைப்பற்றி அழைத்துச் சேன்ருன். பிறகு ஒரு சிறு நேர அளவில் அவள் முகத்தில் மகிழ்ச்சி தாண்டவ மாடியது. நடையிலும் அது தேரிந்தது. கைகோத்து மகிழ்ந்து ஆடிப் பாடிக்கோண்டே சேன்ருர்கள் அக் காதலர். இந்தப்புதுமை என் மனத்திலும் பதிந்தது. உலக இயற்கைதான். இருந்தாலும் ஊன்றிப் பார்ப்பதில் அனுபவ அறிவு பேறுகிரேம். . ஒரு சில விருடி முன்னே அழுது போருமிய அப்பேண் தன் புக்ககம்சேல்ல கணவன் கைப்பிடித்ததும் பிறந்த இடத்தை மறந்தாள். பேற்றவர்களைப் பிரிந்து சேல்வதையும் மறந்தாள். அவனேடு

ஒன்றி அந்த ஆனந்தம் தலைப்பட்டாள். அதில் திளைத்துச் சென்றாள். ''அன்னையையும் அத்தனையும் அன்றேநீத்தாள்... ...தன்னை மறந்தாள், தன்னாமம் கேட்டாள், தலைப்பட்டாள் தலைவன் தாளே'' என்ற திருத்தாண்டகக் கருத்தை உலகியலில் காணும் வாய்ப்பு இது.

பங்கு :

சூசாவிலிருந்து வழி இறக்கம். ஜங்திகாட் என்னும் நதி தாண்டி பங்கு வழியாக வழி செல்லுகிறது. பங்கு ஒரு பேரிய ஊர். கடல்மட்டத்திலிருந்து 7,000 அடி உயரத்தில் உள்ளது. வால்நட் மரங்கள், வயல்கள், கீரைத்தண்டுத் தோட்டங்கள், சோளம், கோதுமை முதலியன பயிரிடப்பட்டிருக்கின்றன. அஞ்சலகம், பெரிய பள்ளிக்கூடம் முதலியன இருக்கின்றன. பசுமாடுகள் அதிகம். சிறு ஏற்றமும் பிறகு இறக்கமுமாகப் பாதை செல்கிறது.

தனிதார் :

தனிதார் என்னுமிடத்தில் தேநீர்க் கடைகள் இருக்கின்றன. இங்குக் கீரைத்தண்டு, பச்சைமிளகாய், தக்காளி ( Tomoto ), கத்தரிக்காய் முதலியன கிடைக்கின்றன. நல்ல வளமான மண்வாகுடையது. கடல் மட்டத்திலிருந்து 6,500 அடிக்குமேல் உள்ளது.

தவாகாட் :

இங்கிருந்து மிகக் கடுமையான இறக்கம். உத்தேசம் இரண்டுகல் தொலைவுக்குள் 3,000 அடி இறங்கவேண்டும். வழி வளைந்து வளைந்து செல்கிறது. எதிர்க்கரைக்காட்சிகள் மிக அழகாக இருக்கும். இறக்கத்தின் அடியிடம் தவாகாட் ( Tawa - ghat ) என்னும் பெயருடையது. இந்த

இடம் கடல் மட்டத்திலிருந்து 3,500 அடி உயரம். தர்மாக்கணவாயிலிருந்து வரும் தவள கங்கை இங்கு பாறைகளையும் புரட்டிக்கொண்டு கடும் வேகத்தோடு பேரிரைச்சல் செய்துகொண்டு ஓடிவருகிறது. அதற்கு வலுவான இருப்புப் பாலம் அமைத்திருக்கிருர்கள். அப்பாலமே ஆடிக்கொண்டிருக்கிறது ஆற்றின் வேகத்தால். பாலத்தைத் தாண்டி ஆற்றின் வலது கைப்புறம் வந்ததும் அங்கு இரு மலையருவிகள் வந்து விழுகின்றன. அங்கு அந்த அருவிகளில் குளித்துக் களைப்பு நீக்கிக் கொண்டு 4 பர்லாங் தொலைவிலுள்ள அரசினர் வழிப் போக்கர் (P. W. D. Dak Bangalow) தங்குவிடுதியில் வந்து தங்கினேம். நாங்கள் தங்கிய இடம் தவள கங்கைக் கரை.

கேலா :

தவள கங்கையின் வலது கரைவழியே தர்மாக் கணவாய், ஞானிமாமண்டி, தர்ச்சேன் செல்லுவதுமுண்டு. இங்கு நல்ல நாட்டுநேய், பால், தயிர், வாழைக்காய், வாழைப்பழம், காய்கறிகள் முதலிய எல்லாப் பொருள் களும் கிடைக்கும். கேலா என்ருல் வாழை என்பது பொருள்.

அதற்கேற்ப இங்கு வாழைத் தோட்டங்கள் மிகுதி. சோளமும் மற்றப் பயிர்களும் இருக்கின்றன. கேலா ஊர் மலையின் மேல் அமைந்திருக்கிறது. தக்காளி, கீரைத் தண்டு, பீர்க்கு, பச்சைக் கொத்தமல்லி, பூசணி, பறங்கி, பச்சைமிளகாய் முதலிய நம் நாட்டுக் காய்கறிகள் கிடைக் கின்றன. நாங்கள் தங்கிய இடம் நல்ல அழகான சூழ்நிலை யில் அமைந்தது. சுற்றிலும் வாழைத் தோட்டங்களும்

உயரமான மரங்களும் சூழ்ந்தது. குளுமையான இடம். கோடை வாசஸ்தலம் போல அமைந்தது. நல்லதாரா இரண்டு அங்கிருக்கிறது. புதிஞக்கீரை இங்கு அதிகம். நாங்கள் வந்து சிறிதுநேரத்துக்கெல்லாம் மழை பெய்யத் தொடங்கிவிட்டது.

## இல்லை, இருக்கிறது :

இங்கு ஒரு கடையிருக்கிறது. கடைக்காரன் மிகவும் நல்லவன். இனிமையாகப் பேசுவான். அவனிடம் எல்லாப் பொருள்களும் இருக்கும். விலைக் கட்டுப்பாடு செய்யப்பட்ட பொருள்களும் ( Price controlled goods ) நிறைய இருக்கும். ஆனுல் கேட்டால் இல்லை என்பான். " உன்னிடம் இருக்கிறது. கணக்கை எடு. இருப்பைப் பார்க்கவேண்டும். இல்லாவிட்டால் தர்ச்சூலாவில் அதி காரிகளிடம் சொல்லிவிடுவோம் " என்று சொன்னுல், " அது எதற்கு. என்னிடம் சிறு அளவு இருக்கிறது அவசரமாகக் கேட்கக்கூடியவர்களுக்குக் கொடுக்க. பாவம், யாத்திரிகள் உங்களுக்குக் கொடுக்கவேண்டியது தான் " என்று சொல்லி இரக்கமிகுதியால் கொடுப்ப தாகக் காட்டி ஒருபவுண்டு கேட்டால் கால்பவுண்டுகொடுப் பான். இதுபோல இருக்கும் அவன்வியாபாரம். அதிகவிலை வாங்குவதில் ஆசையுள்ளவன். நாங்களும் இதுபோலக் கேட்பதும் தண்டி ஆட்களைவிட்டு அதிகவிலை கொடுத்து வாங்குவதுமாக வேண்டிய பொருள்களைப்பெற்ருேம்.

## கல்லும் மண்ணும் சரியும் :

தவள கங்கையின் இடது கரை நேர் செங்குத்தாக 500 அடிகளுக்கு மேல் உயரமுடையது. அப்பகுதியி லிருந்து அடிக்கடி இடியோசை போன்ற சத்தம் கேட்கும்.

பார்த்தால் எதிர்க்கரையின் உயரமான இடத்திலிருந்து பாறைக் கற்களும் மண்ணும் கலந்து சரிந்து உருண்டு தவஹியில் விழும். இது அடிக்கடி நிகழுமாம். அதோடு மழையும் தூறிவிட்டால் ஒரேநாளில் பலமுறை நிகழுமாம். பார்க்கப் பயங்கரமாக இருக்கும்.

## வாழைப்பழ ஜபம் :

இங்கு வந்து தங்கிச் சுற்றிலும் தஞ்சை மாவட்டத்தில் உள்ளதைப்போல் வாழைத் தோட்டங்களைப் பார்த்ததும், சிலருக்கு வாழைப்பழம் தின்ன ஆசை உண்டாயிற்று. சுவாமி வித்யாநந்தாவிடம் சொல்லி வரவழைத்துத் தரும்படி கேட்டார்கள். "வாழைப்பழமா? வாழைப்பழம், வாழைப்பழம் என்று ஜபம் செய்யுங்கள் கிடைக்கும்" என்றார்கள். அன்று வியாழன்; ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்துக்கு மௌன விரதநாள். வாழைப்பழம் கேட்டவர் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தோடுவந்தவர்களில் ஒருவர். "நம்முடைய ஊர்களில் மிகுதியாகக் கிடைக்குமே! இங்கு அருமையாகிவிட்டதே இவ்வாழைப்பழம். அதிலும் கேட்டவருடைய பெருமை தெரியாமல் சுவாமிகளும் இவ்விதம் சொல்லிவிட்டார்களே" என்று திருவுளங் கனிந்திருக்கும்போலும். பின்னும் 30 நிமிஷங்களுக்குள் கேலாவாசி ஒருவர் ஒரு பெரிய வாழைத்தார், பசுவின்நெய், நம்முருக்கு ஒருபடி பக்காதயிர் மூன்றும் எடுத்துவந்து ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருமுன் வைத்தார். "தென்னாட்டிலிருந்து பெரிய மகந்துவாகிய தாங்கள் வந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். இவைகள் இங்கே தேவைப்படலாம். எடுத்து வந்திருக்கிறேன். ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்றார். பணம் கொடுத்ததையும் வாங்க மறுத்தார். அவரோடு வந்த சிறு பையனிடம் அவனுக்கு

னும் என்று சொல்லி வற்புறுத்திப் பணம் கொடுத் தார்கள் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில். இந்த நிகழ்ச்சி சிறிதுதான். இருந்தாலும் அன்றிருந்த நிலையில் எல் லோருக்கும் கண்கலங்கிவிட்டது. பெரியோர்கள் மனம் கனிந்தால் அதன் விளைவு ? அப்பழங்களை அவர்கள் திருக்கரத்தால்; எல்லோருக்கும் வழங்கினார்கள். மாலையில் ஒரு தித்திப்பு பட்சணம் போட்டார் அந்த நல்ல நேய்யைப் பயன்படுத்தி எங்கள் கூடவந்த செட்டியார்.

## மௌனி பாபா சந்திப்பு :

இருட்டத் தொடங்கியது. ஸ்ரீ நாராயண ஆஸ்ரமத் திற்குச் சென்ற நண்பர்கள் வரவில்லையே என்று கவலை மிகக் கொண்டோம். அந்நேரத்தில் அவர்கள் ஒவ்வொருவ ராக வந்துசேர்ந்தார்கள். அவர்களோடு மௌனி பாபா என் கிற ஸ்ரீமத். முக்தாநந்த சுவாமிகளும் வந்தார்கள். இவர் களைப் பற்றிய குறிப்புக்கள் முன்னே கொடுக்கப்பட்டிருக் கின்றன. அவர்களைக் கயிலையிலேயே காணவேண்டும், அவர்களுக்குச் சில உணவுப்பொருள்களும், போர்த்திக் கொள்ளக் கம்பளியும் கொடுக்கவேண்டுமென்று தனியாக வாங்கி முட்டைகட்டிவைக்க உத்தரவாயிருந்தது நயினிதா லிலேயே. அங்கு (கயிலையில்) விசாரித்ததில் சுவாமிகள் நாங்கள் நந்திகும்பாவருவதற்கு முன்னேகயிலைப் பகுதியை விட்டுத் தக்களக்கோட்டைக்குப் போய்விட்டார்கள் என்ற செய்திகேட்டுவருந்தினோம். தக்களக்கோட்டையில்விசாரித் ததிலும் அவர்களைப்பற்றிய செய்தி கிடைக்கவில்லை. நாங் கள் மானசத்திற்குச்செல்லும்வழியில் பெரியமனிதர்ஒருவர் தம் குடும்பத்துடன் யாத்திரைசெல்வதுபோலத் தெரிந்தது; குதிரைமீது சென்றது அக்குடும்பம். அது தர்ச்சனிலுள்ள பூட்டானிய கவர்னர். அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்.

அவர் மௌனி பாபாவிடம் ஆழ்ந்த பக்தியும் அன்பும் உடையவர். அவர் தன்னுட்டுக்குச் சென்றதாகவும், இவர் களையும் அங்கு அழைத்துச்சென்றதாகவும் தெரியவந்தது; நாங்கள் வழியில் இருசாராரும் ஒருவரை ஒருவர் கண்டும் அடையாளம் தெரியாத நிலையில் அரிய சந்தர்ப்பத்தை இழந்தோம். சுவாமிகள் அவரோடு பூட்டான் போகாது உடல்நலமின்மையால் இந்திய நாட்டில் ஸ்ரீ நாராயண ஆஸ்ரமத்தில் வந்து தங்கியிருந்திருக்கிறார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் வந்திருக்கும் செய்தியும், கயிலைப் பகுதியில் அவர்களைக்காண விழைந்ததையும் அறிந்து, உடல்நிலையையும் பாராது கேலாவுக்கு வந்துவிட்டார்கள் அந்த முனிவர்.

## இரு மௌனிகள் :

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திலும் அன்று மௌனம்; இரு மௌனிகள் சந்திப்பு. அவர்களுக்குள் என்ன பேசினார் களோ நாம் அறியோம். தமிழ்நாட்டிலிருந்து ஸ்ரீமத். முக்தா நந்தா தர்ச்சனிலும், சிதம்பரம் ஸ்ரீசபாநாயகர்பூஜை உரிமை உடைய தீக்ஷிதர் ஒருவர் மௌனியாக ஞானிமாமண்டியி லும் பல ஆண்டுகளாகத் தங்கி கயிலைப் பரிக்ரமம் வரும் ஒரே குறிக்கோளுடையவர்களாகத் தவம் பெருக்கி வரு கிறார்கள் என்று பின்னர் தெரியவந்தது. இவர்களை எதிர்பாராது இங்கே கண்டது பலரையும் மனம் நெகிழச் செய்தது.

## பாரணையும் புறப்பாடும் :

மறுநாள் அதிகாலையிலேயே புறப்படுவதாகத் திட்டம். அன்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் மௌன விரதம் முடித்துப் பாரணை செய்வது வழக்கம். அப்பாரணையை

முடித்துக்கொண்டே புறப்படவேண்டுமென்று உத்தர வாயிற்று. காலை 7 மணிக்குள் மற்றவர்கள் குறித்தபடி புறப்பட்டுவிட்டார்கள். மௌனி பாபாவுக்கு அங்கே ஒரு விருந்து அளித்தோம். அந்த மகிழ்ச்சியோடு பகல் 10 மணிக்கு அவ்விடம் விட்டுப் புறப்பட்டோம். மௌனி பாபாவும் உடன் வந்தார்கள். ஆனால் நடையில் வேகம் உடையவர்கள். எங்களை முந்திக்கொண்டு போய் விட்டார்கள்.

## தவளகங்கை சங்கமம் :

அங்கிருந்து 7, 8 பர்லாங் கடந்து தவளகங்கை காளிகங்கையில் கலக்கிறது. அங்குக் காளிகங்கை ஒரு மலையில் ஒடுக்கமான இடைவெளியில் பீறிட்டுக்கொண்டு வருகிறது. இரண்டும் சங்கமமாகும் இடத்தில் நின்று பார்த்தால் அச்சமாக இருக்கும். வழி ஒரு சிறிது தொலை சமமான கரையிலும் பிறகு ஏற்றமுமாகச் செல்கிறது.

அந்த இரண்டு நதிகளும் சங்கமமாகும் இடத்தி லிருந்து பாதைக்கு மலையை உடைத்து வழி செய்திருக் கிறார்கள். இரண்டு மூன்றடி அகலமே இருக்கும் அவ் வழி. ஆற்றை ஒட்டிப் போகிறது. கீழே 20, 30 அடி ஆழத்தில் அடித்துப் புரண்டு வேகமாகச் சுழித்து ஓடும் காளிகங்கையைப் பார்த்துக்கொண்டே போதல் கூடாது. தலையைச் , சுற்றும். நமது வலது கைப்பக்கம் சில நூற்றுக் கணக்கான அடி உயரமுள்ள மலைப்பகுதி. இங்கும் மேலே இருந்து கல் உருண்டு வந்து விழும் என்று சொல்லுகிறார்கள். அந்தச் சோதனை எங்களுக்கு ஏற்படவில்லை.

## பிரம்மகமலம் :

கேலாவிலிருந்து இரண்டு மைல் சென்றதும், மலை வழியே சிப்லகோட் என்னும் புனிதஏரிக்குச் செல்லும்பாதை பிரிகிறது. சிப்லகோட் ஏரிக்கு சிப்ல கேதாரம் என்றும் பெயர்சொல்லுவர். அவ்வேரியில் மழைக் காலங்களில் பிரம்மகமலப் பூக்கள் பூத்திருக்குமாம். அக்காலங்களில் அதன் நறுமணம் தொலைவிலேயே தெரியும் என்றும் சொல்கிருர்கள். அம்மலர்கள் சிவ பூஜைக்கு மிக உகந்தது.

## தர்ச்சூலர் வருகை :

நடுவழியில் காளிகங்கை, குலாகாட் என்னும் நதி சேருமிடத்தில் சாந்தமே உருவாக அழகாக அமைதியாக அகன்று பரவி ஓடுகிறது. இடையிடையே ரோண்டிகாட், ரேல்காட், குலகாட், ரந்தி அல்லது தந்திரகாட் என்னும் நதிகள் குறுக்கிடுகின்றன. அவைகளைக்கடக்கப் பாலங்களிருக்கின்றன. இவ்வழியே தர்ச்சூலாவுக்கு மாலை 3 மணிக்கு வந்து சேர்ந்தோம்.

## தர்ச்சூலா :

தர்ச்சூலா பெரிய ஊர். 1000 வீடுகள் இருக்கலாம். அதன் நடுவில் காளிகங்கை பெருகிப் பெரிய ஆருக ஓடுகிறது. அதன் இருகரையிலும் வீடுகள் இருக்கின்றன. ஆற்றின் இடது கரை நேபால நாடு. வலது கரை பாரத தேசம். அக்கரை செல்ல கயிற்றுப் பாலத்தின் மூலம் கடத்தல் வேண்டும். இங்கு உயர்நிலைப்பள்ளி, அஞ்சலகம், ஊர்க்காவல் நிலையம், மருத்துவசாலை, பெரிய கடைத்தெரு முதலிய எல்லாம் இருக்கின்றன. பெரிய வியாபார ஸ்தலம். தாராக்களைக் குழாய்மூலம் கொண்டு வந்து பல இடங்களில் குளிப்பறைகள் கட்டிவிட்டிருக்

கிருர்கள். யாத்திரீகர்கள் வந்து தங்க இடம் கிடைக்க வில்லை. மிகுந்த பிரயாசையோடு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நி தானத்தில் அரைகுறையாகக் கட்டியிருக்கும் ஒரு கடைக் கட்டிடத்திலும், வித்யாநந்தா ஒரு கடையின் மாடி இடத் திலும், முக்தாநந்தா மற்ருெரு நண்பர் மாடியிலுமாகத் தங்கிஞேம்.

## பூட்டியரின் மழைக்காலத் தாயகம் :

ஜிப்திக்கு அப்பால் உள்ள பூட்டியர்கள் தர்ச்சூலாவுக்கு மழைக்காலங்களில் வந்துவிடுவார்கள். அப்போழுது ஊர்க் காவலுக்காக மட்டும் இரண்டோருகுடும்பங்கள் கர்ப்பியாங் முதலிய ஊர்களில் இருப்பர். ஆகவே அவர்களுக்கு தர்ச்சூலாவும் இதற்கு இப்பால் உள்ள ஊர்களுமே தாயகம். இங்கு ஒரு வீடும், அங்கு ஒரு வீடுமாக இரண்டு வீடுகள் அவர்கள் உடைமையாக இருக்கும்.

## தித்திப்பு வழங்கினுர்கள் :

வந்த சிறிது நேரத்தில் எங்களைப் பார்க்க மௌனி பாபா வந்தார்கள். கட்டிடத்தில் நுழைந்து 5 நிமிஷம் இருந்துவிட்டு வேளியே சென்று ஒரு பேரிய தாம்பா ளத்தில் ஜிலேபி, லாடு முதலிய தித்திப்புப் பட்சணங்களை எடுத்துவந்தார்கள். எங்கள் முன் வைத்து வற்புறுத்தி ஏற்றுக்கோள்ளச் சேய்தார்கள். அவை மிகவும் ருசியாக வும் சூடாகவும் இருந்தன. அவர்கள் மௌன பாஷையை அங்குள்ளவர்களும் புரிந்துகோள்கிருர்கள். போதுவாக அவர்களிடம் அப்பகுதி மக்கள் எல்லோரும் அச்சமும் அன்பும் காட்டுகிருர்கள்.

**பிரசாதங்கள் :**

பின்னும் சிறிது நேரத்தில் நாங்கள் வந்த செய்தி தெரிந்து ஒரு பெரிய மூட்டையில் தபால்கள் கொண்டு வந்து கொடுத்தான் தபாற்காரன். மிலத்தைவிட்டுச் சென்றபிறகு நம் ஊர்ச் செய்தி தெரியத் தபால்கள் இன்றுதான் கைக்குக்கிடைத்தன. திருவாரூர்த் தியாகேசன், சித்திஸ்வரம் தக்ஷிணாமூர்த்தி பிரசாதங்கள் தாம் முதலில் கிடைத்தவை. இரண்டோரு ஆதீனச் செய்தி அறிவிக்கும் விண்ணப்பங்கள். மற்றவை எல்லாம் பிரசாதங்கள் அடங்கியவையே. ஸ்ரீலஸ்ரீகுருமகாசந்நிதானத்தில் கயிலை யாத்திரையைவெற்றிகரமாகமுடித்துத் திரும்பிவரவேண்டுமென்று ஆதீனத்திருக்கோவில்களிலும்,மடாலயத்திலும்,மற்றதலங்களிலும் ஆதீன அடியவர்கள், பணியாளர்கள், சீடர்கள், ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் நலனில் ஆர்வமுடைய அன்பர்கள் முதலிய பலர் அங்கங்கும் அர்ச்சனைகள், அபிஷேகங்கள், சிறப்பு வழிபாடுகள் செய்திருக்கிறார்கள்.

திபேத்தில் சீன அரசாங்கம் ஊன்றுவதற்காகச் சீனர்கள் செய்துவரும் பெருமுயற்சிகளையும், அதிலும் இந்திய யாத்ரிகர்கள் யாரும் இனி வரக்கூடாது என்று உத்தரவு போட்டது கயிலை யாத்திரை சென்ற பலர் திரும்பத் தாய்நாடு வந்த செய்தி தெரியவில்லை என்ற பல செய்திகளும், சீன பாரத உறவுமுறைபற்றிப் பாரதப் பிரதமர் கனம் திரு. நேரு கொடுத்த அறிக்கையும் அன்பர்கள் எல்லோரையும் கவலைகொள்ளச் செய்து விட்டது. பிரிவால் உள்ள நேசம் வெளிப்பட்டது. கயிலை சென்றவர்கள் நல்லமுறையில் யாதொரு ஊறுமில்லாமல் வரவேண்டுமே என்று எல்லோரும் கவலைப்பட்டிருக்கிறார்கள். அதன் விளைவுதான் இப்பெரும் மூட்டை.

## கயிலைத் தொடர்பு :

மாலை 5 மணிக்குத் தபால் பிரிக்கத் தொடங்கினோம். மூன்று நான்கு பேர் ஈடுபட்டோம். இரவு 10 மணிக்கு எல்லாம் பார்த்துமுடிய கயிலையிலிருந்து திரும்பும் வழியில் முதலில் கிடைத்தது சித்தீஸ்வரம் தக்ஷிணாமூர்த்தியின்பிர சாதம், கயிலையிலிருந்து பெருமான் திருமாலுக்கு அருளிய வீதிவிடங்கப்பெருமானை இந்திரனும், அவனிடமிருந்து முசுகுந்தனும் பெற்றுப் பூவுலகிற்குக் கொண்டுவந்தான். அது நேரே கயிலைத் தொடர்புடையது. சீகண்டபரமசிவம் தக்ஷிணாமூர்த்தமாக எழுந்தருளியதும் அக்கயிலையிலே தான். அந்தத் தக்ஷிணாமூர்த்திதான் சைவ ஆதீனங்களுக்கு முதல் குரு. அங்கிருந்துதான் வேதசிவாகமங்கள் வெளி வந்ததும், சிவஞானபோதம் முதலிய சாத்திரங்கள் வெளி வந்ததும்.

## உயிர் மூச்சு :

ஆகையால் இந்தக் கயிலைத் தொடர்புடைய - ஆதீனத் தொடர்புடைய மூலமூர்த்திகளின் பிரசாதங்கள் இங்கு முத லில் கிடைத்தன. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் திருவுளத் திலே இந்த நிகழ்ச்சி கனிவுபிறக்கச்செய்தது. அமரர்நாடா ளாதே ஆரூர் ஆண்ட பெருமான் அவனிவிடங்கத் தியாகே சன். அவன் ஆட்டம் உயிர்மூச்சின் ஆட்டம். ஆஸ்வாஸ நிஸ்வாசங்களின் அசைவுகள். அதுவே உயிருக்குயிராய் ஆன்மாக்களில் நின்று அவன் ஆட்டுவிக்கும் ஆட்டமும் எனலாம். இந்தப்பெருமான் ஸ்ரீலஸ்ரீமகாசந்நிதானத்துக்குத் திரும்பிவரும் வழியில் முதலில் அருள்வழங்கினான். இது அவனருள்வழி நிற்கும் பெரியோர்களுக்கு உடனாயும் வேறாயும் இருந்து இறைவன் அருள்புரியும் தன்மையாகும். இதை அன்று அங்குக் கண்டோம்.

நல்லவருக்கு :

அன்றிரவு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத் (தங்களிடம்) தினிடத்தில் இருந்த கம்பளிகள், கம்பளிச் சட்டைகள் முதலிய எல்லாப் பொருள்களும் மௌனிபாபாவுக்கு வழங்கினார்கள். ஐந்தாறு மாதங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் வாங்கப்பட்டன. கூலி அமர்த்தி ஸ்ரீ நாராயணாஸ்ரமத்துக்கு அனுப்பப்பட்டன. செலவுக்குப் பணமும் கொடுத்தார்கள். அதற்கு அந்த முனிவர் 'எனக்கு எதற்கு இவ்வளவு பெரிய முட்டை. எதுவும் வேண்டியதில்லை. பெரிய மகான் கொடுப்பதை ஏற்க மறுக்கக்கூடாது. பெற்றுக்கொள்கிறேன். ஆனால் வழியிலேயோ அல்லது தங்குமிடங்களிலோ இவற்றை அளித்துவிடலாம் என்று எனக்குத் தோன்றினால் அவ்விதம் வேறு யாருக்கும் கொடுத்துவிடுவேன். எனக்கும் வேண்டியதைப் பயன்படுத்திக்கொள்வேன்' என்று மௌன பாஷையில் சொன்னார்கள். அதற்கு அனுமதியும் பெற்றார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திலும் 'அவர்களிடமிருந்து சென்றால் அது நல்லவர்களுக்குத்தானே போய்ச்சேரும். அப்படியேயும் ஆகட்டும்' என்று அனுமதி கொடுத்தார்கள்.

கூலிமாற்றேற்பாடு :

அன்று மாலையிலும் முன்னிரவு நேரங்களிலும் வியர்வையும் புழுக்கமும் அதிகமாக இருந்தது. மாலையிலிருந்து மழை பெய்தும் அப்படியிருந்தது. பின்னிரவு நேரத்தில் கடுங்குளிரேடுக்கத் தொடங்கிவிட்டது. கடல் மட்டத்திலிருந்து இவ்வூர் 3,000 அடி உயரம்தான். இதுவரை உந்தூர்திகள் செல்லத்தக்கதாக பெருவழிப்பாட்டை

அமைத்துவருகிறார்கள். இவ்வூரில் வாழைப்பழம், மாம் பழம் இவைகள் கிடைக்கின்றன. கர்ப்பியாங்கிலிருந்து வந்த கூலிகள் இதுவரையில்தான் பேசிவந்தார்கள். அவர் களுக்குக் கணக்குப்பார்த்துக் கூலிகொடுத்து அனுப்பி விட்டுவேறு திட்டம் செய்துகொள்ளப்பட்டது. பெரிய வியா பாரஸ்தலமாகையால் எப்பொழுதும் கூலிகளும், குதிரை களும் கிடைக்கும். கூலிகளை ஆஸ்கோட் அதாவது பஸ் வரும் இடம் வரை பேசி ஏற்பாடுசெய்துகொள்ளப்பட் டது. மறுநாள் காலை 10-30 மணிக்குப் புறப்பட்டோம். ஊர் எல்லைவரை வந்து வழி அனுப்பிவிட்டு மௌனி பாபா ஸ்ரீ நாராயணாஸ்ரமத்திற்குத் திரும்பினார்கள். நல்ல தமிழ்ப் பண்பாடுள்ள ஒருவரைக் கண்டு அவரோடு ஒரிருநாட்களே நெருங்கிப்பழகிப் பிரியநேர்ந்தால் அதுவும் வேதனையை உண்டுபண்ணுகிறது.

மண்ணிடிசல் :

வழி ஏற்றமும் இறக்கமுமாகச் செல்லுகிறது. ஆனால் பாதை அமைப்பு அகலமாகச் செம்மையாக இருப்பதால் வழிநடையில் அவ்வளவு கடுமை தெரியவில்லை. இன்னும் இரண்டோரு ஆண்டுகளில் தர்ச்சூலாவுக்கு உந்தூர்திகள் கொண்டுவருவதற்கான முயற்சிகள் நடைபெற்றுவருகின் றன. வழியில் மழை தூறிக்கொண்டே இருந்தது. அதனால் இரண்டோரு இடங்களில் பாதை ஓரத்தில் உள்ள செங்குத்து மண்பகுதி சரிந்து விழுந்திருந்தது. வடக்கத்தி யார் ஒருவர் வேகமாக நடந்துபோய்க்கொண்டிருந்தார். அப்பொழுது 20, 30 அடி உயரமுள்ள ஒரு பகுதியில் சரி வேற்பட்டது. அதில் அவர் பிழைத்தது அரிதாகிவிட்டது. எவ்வளவு வேகமாக ஓடியும் முன்காலில் நல்ல அடி

பட்டுத் துன்பப்பட்டார். மாலை 3 மணிக்குப் பலவக் கோட்டை வந்துசேர்ந்தோம்.

### பலவக்கோட்டை அனுபவம் :

இங்கு அழகான அரசினர் வழிப்போக்கர் விடுதி ஒன்றிருக்கிறது. காளிகங்கையின் கரையில் கட்டியிருக்கிறார்கள். சுற்றிலும் அழகிய நறுமணமுள்ள பூச்செடிகள் வளர்த்துவிட்டிருக்கிறார்கள். அங்கு ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் தங்கினார்கள். மற்றவர்கள் அவ்வூர் பஞ்சாயத்து விடுதியிலும், கடைமாடியிலும் தங்கினோம். இப்பகுதியிலிருந்து இனி வரும் வழிகளில் எருமைமாடுகள் அதிகம் காணப்படுகின்றன. மறுநாள் நாங்கள் ஆஸ்கோட்டில் பஸ் ஏறப்போவதாக முடிவு செய்தோம். ஆகையால் இங்குத்தான் நாங்களாக எங்கள் விருப்பப்படி கடைசியாக உணவு தயாரித்து உண்ணலாம். அதிலும் இங்குப் பச்சை மிளகாய், ஆட்டமா கிடைத்தது. நல்ல நெய்யும் கிடைத்தது. முதலில் சிற்றுண்டியாக அந்தமாவைக்கொண்டு தோசை தயாரித்து உண்ணத்திட்டமிட்டோம். வாய்க்கு ருசியாக இருந்தது. பிறகு அவரவர் வயிறுகொண்டமட்டும் இன்னும் அதிகமாகவும் ஆசைதீரத் தின்றுவிட்டார்கள் சிலர். அது வயிற்றுப்போக்கை உண்டுபண்ணிவிட்டது அவர்களுக்கு. ஒருவர் மிகத் துன்பப்பட்டார். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் அவருக்குத் தாம்செல்லும் தண்டியைக் கொடுத்துவிட்டு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் கால்நடையாகச் செல்வதாக உத்தரவாயிற்று. “அது பொருந்தாது ; நாங்கள் உடனிருந்து அழைத்துவருகிறோம்” என்று சொல்லி அவ்விதமே செய்தோம். முதலில் அந்த நண்பரால் நடக்கவே முடியவில்லை. கவலையாக இருந்தது. நேரம் ஆக ஆக அவர் உடல் நிலைமை திருந்திவிட்டது. துன்பமில்லாது மேலே சென்றோம்.

## அன்று பஸ் ஏறலாம் :

அன்றுஉச்சிப்போழுதுக்குள் ஆஸ்கோட்போய்விட்டால் உச்சிவேளைக்குவந்து 2 மணிக்குள்திரும்பும் பஸ்ஸில் ஏறி விடலாம் என்ற எண்ணத்தோடு அதிகாலை 5 மணிக்குள் அங்கிருந்துபுறப்பட்டோம். 'இனி ஆஸ்கோட்டுக்கு அப்பால் வழிநடக்கவேண்டியதில்லை. ஊருக்கு விரைவில்சென்றடை வோம்' என்ற நினைப்பால் பலரும் உத்சாகமாகப் பாடவும் தோடங்கிவிட்டார்கள். நடையும் சுருசுருப்பாக இருந்தது. வழியில் சில ஏற்றம் இறக்கங்கள். காய்கறிகள் பாகல், புடல், சுரை, பீர்க்கு, வாழை, கீரை, பச்சைமிளகாய், தக்காளி போன்ற எல்லாம் வழி நேடுகப் பயிரிட்டிருக் கிறார்கள். தர்ச்சூலாவிலிருந்து அரசமரம், மாமரங்கள் கூட இருக்கின்றன: ஜலஜீவி வந்து சேரும்போழுது காலை மணி 9 இருக்கலாம். இங்குத்தான் காளிகங்கையில் கௌரிகங்கை வந்து சேருகிறது. அந்தச் சங்கம கட்டம் மிகப் புநிதமானதாகக் கருதப்படுகிறது. இது கடல் மட்டத்திலிருந்து 2,100 அடிதான். அமைப்பில் ஊர் மிக அழகாக இருக்கிறது. இங்கிருந்து கிர்ஜியா என்னு மிடம் ஒரு மைல்.

## கிர்ஜியா (Girjia) :

இங்கு கௌரிகங்கைக்கு ஒரு உறுதியான தோங்கு பாலம் அமைத்திருக்கிறார்கள். கௌரியின் இருகரைகளி லும் தேனீர்க்கடைகள் இருக்கின்றன. அங்கு முன்சியாரிப் பக்கம் போக கௌரிகங்கையை ஒட்டி ஒரு வழி போகிறது. அமைப்பால் இந்த இடமும் மிக அழகாக இருக்கிறது. இங்குத் தங்கி தேநீர் அருந்தி மேலே செல்லலானோம். கௌரிகங்கையின் வலது கரைக்குப்

போனதும் மேலே 3½ கல் தொலைவு மிகக் கடுமையான ஏற்றம். அந்தத் தொலைவிற்குள் 3,000 அடிக்குமேல் ஏற வேண்டி இருக்கிறது. வழி நல்ல பெருங்காட்டினூடே செல்கிறது. பாதையை அகலப்படுத்திவருகிறார்கள். வழியில், தண்ணீரே கிடைக்கவில்லை.

### ஏமாற்றம் :

ஆஸ்கோட்டில் வந்ததும் பஸ் ஏறுவதென்ற திட்டத்தில், அங்கு வந்து பிறகு சமைத்து உண்டு புறப்படுவதாக இருந்தால் நேரமாகும். ஆகையால் முதல்நாளிரவே தயிர்ச் சாதம் செய்து எடுத்துவரப்பட்டது. அதை வழியில் உண்டு மேலே செல்லுவதென உத்தேசம். ஆஸ்கோட் ஒரு கல் தொலைவு இருக்கும்போதே அங்கு ஒரு சிறு அருவியிருக்கிறது. அதனடியில் அதை உண்டு தண்ணீர் அருந்திக் களைப்பு நீங்கி ஆஸ்கோட்டுக்கு உச்சிப் பகல் 12-30 க்கு வந்து சேர்ந்தோம். ஊரேல்லை வந்ததும் காலத்தில் வந்துவிட்டபடியால், பஸ் கிடைத்துவிட்டதாகவும், சொந்த ஊருக்கே போய்விட்டதாகவும், அந்தபஸ் காத்துக்கொண்டிருக்குமேன்றும் எண்ணி மகிழ்ந்துகொண்டே ஆஸ்கோட்டை வந்து அடைந்தோம். ஆனால் அங்கு எங்களுக்கு ஒரு பெரிய ஏமாற்றந்தான் காத்திருந்தது. அது, பாதையில் இரண்டு மூன்று நாட்களாகப் பெய்த மழையில் சரிவேற்பட்டிருப்பதாகவும், பஸ் இரண்டு நாட்களாக வரவில்லை என்றும், அது எப்போழுது சீர்படும், பஸ் எப்போழுது மீண்டும் வரும் என்பது தெரியவில்லை என்றும் சொல்லிவிட்டார்கள்.

### ஆஸ்கோட் :

அஸ்ஸி = 80; கோட் = கோட்டைகள். இப்பகுதியில் எண்பது கோட்டைகளும், அத்தனை அரசர்களும்

இருந்ததாகச் சொல்கிருர்கள். இப்போழுது ஒரு கோட்டை கூடக் கிடையாது. அஷ்ட கோட்டை - எட்டுக் கோட்டை கள் என்றும் சொல்வார்கள். பழைய அரச பரம்பரையில் உள்ளவர் ஒருவர் அங்கிருக்கிருர். அவரை ராஜ்பார் ( Rajbar ) அல்லது ஜமீன்தார் என்று அழைக்கிருர்கள். நல்லவர். அங்கு யாத்திரையாக வருவோர் வசதிக்காகப் பெரிய சத்திரம் ஒன்றைக் கட்டிவிட்டிருக்கிருர். உதவி கோரினுல் வேண்டிய வசதி செய்துகோடுப்பார் என்றும் சொல்கிருர்கள். இவ்வூர் கடல் மட்டத்திலிருந்து 5,000 அடி உயரத்தில் உள்ளது. ஸ்ரீலஸ்ரீகுருமகாசந்நிதானத்தில் எதிரில் உள்ள ஒரு கடை மாடியிலும், நாங்கள் சத்திரத் திலும் தங்கிேனும். இவ்வூரில் தண்ணீர் கிடைப்பது அரிது. சில தாராக்கள் இருக்கின்றன. அவை ஊரி லிருந்து 2, 3 பர்லாங் தோலேவில் இருக்கின்றன. ஆனுல் மலேப்பக்கத்தில் வரும் தண்ணீரைக் காலேடுத்து சாகு படிக்குப் பயன்படுத்திவருகிருர்கள். இது ஒரு மலே உச்சி யில் அமைந்த ஊர். சுற்றிலும் நல்ல பசுமையான காட்சி கள். தோலேவிலே பஞ்சசூலி காட்சி வழங்கி நிற்கிறது.

காய்கறிகள் முதலிய எல்லாப் போருள்களும் கிடைக் கும். உயர்நிலேப்பள்ளி, கல்லூரி, அஞ்சலகம் முதலிய எல் லாம் இருக்கின்றன. வியாபாரிகள்பலர் இங்குஇரவில்வந்து தங்கிப் போழுது விடிவதற்குள் புறப்பட்டுவிடுகிருர்கள். இங்கிருந்து பித்தர்கோட் வழி தனக்பூர் 90 மைல்கள், (சங்கலிக்கான் 6 மைல் ; கனுலிச்சீனு 9 மைல் ; பித்தர் கோட் 10 மைல் ; கூர்னு 8 மைல் ; சிரா 10 மைல் ; லோஹாகாட் 9 மைல் ; சம்பாவத் 6 மைல் ; தேவ்ரி 15 மைல் ; சுகிடாங் அல்லது மலிஜ்ஹாரி குடியிருப்பு 8 மைல் ; தனக்ப்பூர் 9 மைல்). இவ்வூரிலிருந்து ஒருகல் தோலேவில் தனக்பூருக்கும் தல்லுக்கும் சாலே பிரிகிறது.

## நற்செய்தி :

இங்கே தங்கியிருப்பதில் எல்லோருக்கும் இருப்புக் கொள்ளவில்லை. அன்று வழி நடப்பில் களைத்துப் போயிருந்தபடியால் அங்கே அரைமனதோடு தங்கினர். அப்படியும் பலர் சுவாமி வித்யாநந்தாவிடம் அன்று பகல்பொழுது அதிக நேரம் இருப்பதால் இங்குத் தங்குவதைவிட மேலே சென்றுவிடுதலே மேல் என்று சொல்லிக்கொண்டார்கள். வழியில் 20, 25 மைலுக்குள் தங்குவதற்கு வசதி கிடைக்காது என்ற காரணம் சொல்லி அங்கே தங்கவைத்துவிட்டார்கள் சுவாமிகள். கனுலிச்சீனு வரை தடங்கல் எதுவுமில்லாமல் பஸ் வருவதாகச் சிலர் சொன்னார்கள். சிலர் அதுவுமில்லை. பித்தார்கோட்டுக்கு இப்பால் பஸ் கிடையாது என்று போய்வந்தவர்கள்போலச் சிலர் கூறினர். எங்களுக்கு அன்றிருந்த மனக்குழப்பத்தை அதிகரிக்கச் செய்வதாகவே செய்திகள் வந்துகொண்டிருந்தன. மனத் துன்பத்தோடு அன்றிரவு படுக்கச் சென்றோம். இரவு 10 மணி இருக்கும் ; கனுலிச்சீனுவிலிருந்து ஒரு அதிகாரி வந்தார். தாம் கனுலிச்சீனுவரை பஸ்ஸில் அன்று வந்து, அங்கிருந்து கால்நடையாக ஆஸ்கோட் வந்ததாகவும், இருக்கும் நிலையில் மறுநாள் அல்லது இரண்டாவதுநாள் இங்கு ஆஸ்கோட்டுக்கே பஸ் வரக்கூடும் என்றும் நற்செய்தி சொன்னார். உடனே மறு நாள் அதிகாலையில் புறப்படுவதென்று முடிவுசெய்தோம்.

## கனுலிச்சீனு :

அவ்விதமே காலை 4 - 30 மணிக்கு அவ்விடத்தை விட்டகன்று மேலே சென்றோம். அதிகாலை விடியற் கருக்கலில் கிழக்கே பஞ்சசூலி மிகத் தெளிவாகக் காட்சி

வழங்கியது. வழியெல்லாம் தேவதாருவும் அதுபோன்ற உயரமான மரங்களும். பாதை பஸ் செல்லும் வழி. ஆகையால், நன்ருகவே இருந்தது. 5 மைல் தொலைவு வந்ததும் சிங்கிலிக்கான் கிராமமும் அதில் தேநீர்க் கடையும் இருந்தன. அங்குத் தேநீர் அருந்தி ஓய்வுகொண்டு மேலே நடந்தோம். அன்று பிற்பகல் 1 மணிக்குள் கனுலிச்சீனுவை அடைந்துவிடவேண்டுமென்ற பேரவா வோடு நடந்தோம். பல ஏற்றம் இறக்கங்கள் பலப்பல நீரருவிகள் பாதை ஓரத்தில் விழுந்துகொண்டே இருக்கின் றன. ஆகையால் களைப்புத் தெரியாமல் 2 மணிக்கு கனுலிச்சீனுவுக்கு வந்துசேர்ந்தோம். இவ்வூர் ஒரு மலை உச்சியில் அமைந்திருக்கிறது. தண்ணீர்த்தாரா ஊர் நடுவில் இருக்கிறது. 'அங்கு அதுவரை பஸ் வரவில்லை. பஸ், லாரி இவைகள் வந்துகொண்டிருக்கின்றன. இரண் டிலும் மக்களை ஏற்றிச் செல்வார்கள்' என்ற நற்செய்தி கிடைத்தது. பித்தர்கோட்டுக்குப் போய்விட்டால், பிறகு அங்கிருந்து தனக்பூருக்குப் பல பஸ்கள் இருப்பதால் எப்படியும் அவைகளில் இடம் பிடித்துவிடலாம் என்ற நம்பிக்கையும் இருந்தது. ரவா உப்புமாவும் காப்பியும் செய்து அருந்தினேம். கூலிகளுக்கும் தண்டி ஆட் களுக்கும் கணக்குத் தீர்த்துப் பணம் கொடுத்தோம்.

### மருத்துவமனைக்குத் தண்டி :

இவ்வூரில் பெரிய கடைத்தெரு, மருத்துவமனை, பள்ளிக்கூடம், அஞ்சலகம் முதலியன இருக்கின்றன. அவ்வூர் மருத்துவமனை சுற்றுப்புறங்களில் உள்ள மலை காட்டு மக்களுக்கு நல்லதொண்டு செய்வதாகவும் தெரிய வந்தது. அந்த மருத்துவமனைக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் யாத்திரையில் பயன்படுத்திவந்த தண்டியை

அளித்தார்கள், உடல்நிலை கெட்டு எழுந்து நடக்கமுடியாதவர்களின் நலத்துக்காக. அவ்வூர் மக்களும், மருத்துவரும் (Doctor) வந்து நன்றி தெரிவித்தார்கள். கயிலை வழியில் செல்வோருக்கு வேண்டிய உதவிகளைச் செய்ய தருமசேவா சங்கம் என்ற ஒன்றிருக்கிறது.

சாலையில் பஸ் வரும் இடத்தில் ஒரு ஆளைத் தங்க வைத்திருந்தோம். எங்களுக்கு இரண்டு பஸ்கள் வேண்டியிருந்தது. ஆகையால் பஸ்கள் வந்ததும் அவைகளை மற்றவர்கள் அணுகுமுன் திட்டம் செய்யச்செய்திருந்தோம். அவ்விதமே மாலை 4 மணிக்குப் பஸ்கள் வந்துவிட்டன. இது எல்லோருக்கும் எல்லையில்லாமகிழ்ச்சியைஅளித்தது.

## பித்தர்கோட் :

மாலை 6 மணிக்கு எங்கள் பஸ்கள் புறப்பட்டு இரவு பித்தர்கோட்டுக்கு 7 மணிக்கு வந்துசேர்ந்தன. ஊர் மிகப் பெரியது. அங்கு ஆணுக்கும், பெண்ணுக்கும் தனித்தனியே உயர்நிலைப்பள்ளிகள், தாசில்தார், டிப்டி கலெக்டர் ஆபீஸ்கள், பொது மராமத்து அஸிஸ்டெண்ட் எஞ்சினீயர், அஞ்சலகம் முதலிய பலவுமிருக்கின்றன. பல வழிகளிலும் பஸ்கள் செல்லுகின்றன. இங்கு இரண்டு வழிப்போக்கர் விடுதிகள் (Dak Bangalow) இருக்கின்றன. பழைய கோட்டை ஒன்றுமிருக்கிறது. மலை உச்சியில் அமைந்த ஊர். ஸோர் (Sor) பள்ளத்தாக்கில் உள்ளது. மிக அழகான சுற்றுப்புறங்கள் அமைந்தது. மலைகளில் உச்சியிடத்திலிருந்து படிப்படியாகப் பயிர் செய்யும் முறையில் (Terrace Cultivation) இப்பள்ளத்தாக்கு இந்தியாவிலேயே மிகச் சிறந்தது என்பர். காஷ்மீரப் பள்ளத்தாக்குகளை ஒத்த அழகுடையது. நெல் விளைவு

அதிகம். ஹோட்டல்கள், பெரிய கடைகள் கொண்ட கடைத்தெருவும் உண்டு. நாகரீகமான ஊர்.

## சாரதாப் பள்ளத்தாக்கு :

இங்கு மாவட்டக் கழக விடுதியில் தங்கி அதிகாலை 6 மணிக்குள் தனி உந்தூர்தி ஏற்பாடு செய்துகொண்டு புறப்பட்டோம். வழியில்காட்சிகள் மிகவும்அற்புதமானவை. 6,500 அடி வரை மலை முகடுகளில் ஏறியும் 2,000 அடி வரை இறங்கியும் பாதை செல்கிறது. வழியில் லேஹா காட், சம்பாவத் பெரிய ஊர்கள். அவற்றில் சம்பாவத்தில் அரிசிச் சாதம்படைக்கிறார்கள். தென்னிந்தியச்சாப்பாட்டை ஒத்தே நல்ல தயிர், சாம்பார், கறி, அப்பளம் பரிமாறப் படுகின்றன. இவ்வூரிலிருந்து இரண்டு கல் தொலைவில் இராமகிருஷ்ண மடத்தாரின் பயிற்சிச்சாலை - மாயாவதி ஆஸ்ரமம் அமைந்திருக்கிறது. இவ்வூரைத் தாண்டி 20 மைலுக்கு அப்பால் சாரதாப் பள்ளத்தாக்கு, வேங்கைப்புலி, சிறுத்தை, கரடி முதலிய கொடிய விலங்கு கள் வாழும் காட்டுப் பகுதி வருகிறது. மிகவும் அடர்ந்த காடு., தேவ்ரி என்னுமிடத்தில் இரு வழிகளிலும் வரும் பஸ்கள் நின்று பிறகு செல்கின்றன. அதேபோலவே லோகா காட், சம்பாவத் இரண்டிடங்களிலும் இரு வழி பஸ் லாரிகள் வந்துசேர்ந்த பிறகே அவையவையும் அந் தந்த வழிகளிகளில் செல்லுகின்றன. காட்டுப் பகுதியில் உயர்வகை மரங்கள் ஓக், White wood முதலியவை அதிகமாம். வழியில் சரயுவுக்கு அழகான பாலம் அமைத் திருக்கிறார்கள். தேவ்ரிக்கு அருகில் காளி கங்கையும், சரயுவும் சங்கமம் ஆகுமிடமும் மிக அழகாக இருக்கும். சரயுப் பள்ளத்தாக்கில் சுக்கிதாங் அல்லது மாலிஜ்ஹாரி என்ற ஒரு குடியிருப்பு அமைத்துவருகிறார்கள். காட்டை அழித்து வயல்களும், வீடுகளும் அமைக்கிறார்கள்.

### தனக்பூர் :

இவ்வழியே மேலும் 9 மைல் சென்ருல் தனக்பூர். இது இரயில் பாதையில் கடைசி ஊர் (Terminus). காட்டுப் பொருள்கள் இங்கு அதிகமாக ஏற்றுமதியாகின்றன. இங்கு வந்தபொழுது மணி 5. இரவு 12 மணிக்குத்தான் ரயில். அது வழியே சென்ருல் ஸ்ரீ காசியை அடைய 40 மணி நேரத்துக்கு மேல் ஆகலாம். ஆனுல் பிலிபித் சென்றுவிட்டால் அங்கு நடுஇரவில் புறப்படும் நயனி எக்ஸ்பிரஸ்ஸில் மறுநாள் காலே 7 மணிக்கு லக்ஷ்மணபுரிக் கும் மாலே 3 மணிக்கு ஸ்ரீ காசிக்கும் செல்லலாம் என்பது தெரிந்தது. பிலிபிட்டுக்குச் செல்ல ஒரு உந்தூர்தி தயாராகவுமிருந்தது.

### பிரியா விடை :

இங்கு வந்ததும் யாத்திரை கோஷ்டி கலேந்து விட்டது. அவரவர் ஊருக்கும் அவரவர் செல்ல விடைபெற்றுக்கொண்டார்கள். கிட்டத்தட்ட இரண்டு மாத காலம் ஒன்ருகவே இணைபிரியாதிருந்த பல நண்பர் களும் பிரியும்பொழுது வருத்தமாகவே இருந்தது. மறு நாளோ அல்லது 3, 4 நாட்களிலோ அவரவர் வீட்டுக்குப் போய்விடலாமே என்ற நினைப்பு அக்குறையை மாற்றி விட்டது. ஆனுல், அவரவர் ஊரும், உற்ருரும், பெண்டிர் பிள்ளைகளும் அவரவர் நினைவில் வந்து நிழலாடினர்.

### பிலிபிட் :

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தோடு வந்தவர்களும் லக்னே சர்மாவும் பிலிபிட்டுக்குப் பஸ்ஸில் ஏறினேம். இரவு 9 மணி அளவில் அங்கு வந்து சேர்ந்தோம்.

சாரதா அணைக்கட்டு வேலை, இதனருகில் நடப்பதாகச் சொன்னார்கள். வழியெல்லாம் மின்சார விளக்குகள் நாகரிக உலகத்துக்கு வந்துவிட்டோம் என்பதை அறிவித்து நிற்கின்றன. பிலிபித் ஒரு பெரிய ஊர். ஜில்லாவின் தலைநகரம். சுதேச மன்னர்கள் காலத்துக் காலத்தில் ஒரு சின்ன இராஜ்யம். அதற்கு ஒரு முகம் மதிய அரசனும் உண்டு. இங்கு இரயிலடிக்கு வந்து சேர்ந்தோம். உணவுச் சாலைகள் பலவும், தங்குவீடுதிகளும் இருக்கின்றன. அங்கு ரோட்டியும் பாலும் அருந்தினோம். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தோடு என்னைத் தவிர மற்றவர்கள் ஸ்ரீ காசிக்கு ரயில் ஏறினார்கள்.

### நாமும் வாழலாம் :

நான் தனியே நயனிதாலுக்குச் சென்று அங்கு விட்டுச் சென்ற பொருள்களை எடுத்துவந்தேன். அங்குள்ள ஏரி நிறைந்திருந்தது. நாங்கள் அவ்வூரை விட்டுச் சென்ற பிறகு மழை பொழிந்து ஏரி நிரம்பியது. ஊரும் மிகவும் தூய்மையாக இருந்தது, ஆனால் மக்கள் சுறுசுறுப்பாக இல்லை. இயற்கை அழகு முன்னிருந்ததைவிட இப்பொழுது அதிகரித்திருந்தது. ஆனால் ஊர் களையற்றிருந்தது. கோடைக்கு வந்திருந்த அனைவரும் அவரவர் ஊர்களுக்குத் திரும்பிவிட்டார்கள். உணவு விடுதிகளிலும் தங்குமிடங்களிலும் அறைகள் மிகக் குறைந்த வாடகைக்கு கிடைத்தன. வியாபார ஸ்தலங்கள் ஓய்ந்து கிடந்தன. அங்கு 3 நாட்கள் தங்கினேன். அவ்வூரில் பலரும் வந்து வந்து தம் வீட்டுக்கு அழைத்துச் சென்று உபசரித்தார்கள். அதிலும் நான் அவ்வூருக்கு வந்த மறுநாள் கிருஷ்ண ஜயந்திவிழா. ஆகையால் அவரவர் வீட்டிலும் கிருஷ்ணனை அலங்கரித்து வழிபாடுகள் செய்திருந்தார்கள். அங்கங்கும்

முன்னே அறிமுகமானவர்போலவே அருமையாய்ப் பேசினர். பிரசாதங்கள் கொடுத்தார்கள். அதுவல்லாது தென்னாட்டு மகந்த் தம்முருக்கு எழுந்தருளி வந்ததும், அவர்கள் கயிலை யாத்திரை சென்றதும் மறக்கமுடியாத நிகழ்ச்சி என்றும், அவர்களுடைய ( மகந்தின் ) யாத்திரை இனிதே முடிந்து யாதொரு தீமையுமின்றி நாடு திரும்ப வேண்டுமென்றும் பலரும் 10, 108, 1008 சிவலிங்கங்கள் பிரதிஷ்டை செய்து வழிபட்டதாகவும், அன்று காலை வானொலியில் எல்லோரும் நல்ல நிலையில் திரும்பத் தாய்நாடு வந்தசெய்தி ( உள்ளூர்ச் செய்திகளில் ) தங்களுக்குப் பெருமகிழ்வளித்தது என்றும், தங்கள் பிரார்த்தனைகள் வீண்போகவில்லை என்றும் சொல்லிக்கொண்டார்கள். “ பெரியவர்கள் வாழ்ந்தால்தானே நாமும் வாழலாம் ” என்றும் சொன்னார்கள். கயிலை யாத்திரை சென்று வந்த என்னை அவர்கள் வணங்கினார்கள். தொட்டுப் பார்த்தார்கள். அதனால் என்னோடு இணங்கிய பலனாக அவர்கள் புண்ணியம் தேடிக்கொண்டார்கள். இந்த பக்தி என்னை மிகவும் உருக்கிவிட்டது.

கப்கோட், பாகேஷ்வரத்தில் விட்டுவந்தபொருள்களைச் சேகரம் செய்து எடுத்துவரச்செய்ததில் இரண்டு மூன்று நாட்கள் தங்கவேண்டியிருந்தது. அவைகளை எடுத்துக் கொண்டு ஸ்ரீ காசிக்கு நானும் போய்ச்சேர்ந்தேன்.

என்று வருவார்கள் :

ஸ்ரீ காசியில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் கயிலை சென்றுவிட்டார்கள் என்ற செய்தி ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களுக்கு மனத்திலே கலக்கத்தைத்தந்தது. மிகவும் சிரமமான இந்த யாத்திரைக்குக் குருமூர்த்திகள்

போயிருக்கலாமா என்று மனம் வருந்தினார்கள். யாத்திரை பற்றிய செய்தியை ஒவ்வோருநாளும் எதிர்பார்த்திருந்தார்கள். ஸ்ரீ குமாரசுவாமி மடத்து மேலரிடம் செய்திசொல்லி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திரும்ப ஸ்ரீ காசிக்கு வந்ததும் இன்னின்ன விதமாக வரவேற்றுபசரித்தல் வேண்டுமென்றும் உத்தரவிட்டுப் பனசைக்குத் திரும்பிவிட்டார்கள். செய்தி ஏதேனும் வந்தாலும் உடனே பனசைக்கு அறிவித்தல் வேண்டும் என்றும் உத்தரவிட்டிருந்தார்கள்.

## தெளிவு :

மிலம் விட்டுச் சென்ற பிறகு கர்ப்பியாங் வரும் வரை யாருக்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தைப்பற்றிய செய்தி எதுவும் கிடைக்கவில்லை. நாங்கள் கர்ப்பியாங்கில் வந்த பிறகு எழுதிய தபால்களும் இதுவரை வந்துசேரவில்லை. சம்பாவத்தில் கொடுத்த தந்திதான் வந்துசேர்ந்திருக்கிறது. குறிப்பிட்டு எதிர் பார்க்கக்கூடிய நாட்கள் கழிந்தும் எங்களிடமிருந்து செய்தி எதுவுமில்லை. அதுவுமல்லாமல் இந்திய திபேத்திய சீன உறவுபற்றிய அறிக்கைகளும் செய்திகளும் அச்சுறுத்தக்கூடியனவாக வந்துகொண்டிருந்தன. ஆகையால் இந்திய அரசாங்கத்திற்கு எழுதி எங்கள் நலம்கோரிக் கேட்பதென்ற முடிவில் கடிதம் எழுதி அன்று தபாலில் சேர்க்கப்போகும் சமயம் சம்பாவத் தந்தி ஸ்ரீ காசி குமாரசுவாமி மடத்துக்குக் கிடைத்திருக்கிறது உடனே பெருமகிழ்ச்சி கொண்டு திருப்பனந்தாளுக்கும் ஸ்ரீ குமாரசுவாமி மடத்திலிருந்தும் செய்திபோயிருக்கிறது.

## தருமையில் :

இதுபோலவே தருமையிலுள்ள ஆதீன அடியவர்கள் பணியாளர்கள் எல்லோரும் மனம் மிக வருந்திக் கவலை

அதிகரித்து வாடியிருந்திருக்கிறார்கள். அவர்களுக்கும் அந்தத் தந்திதான் மாற்று. அதிலிருந்து ஸ்ரீ காசியிலும் வழியில் தருமை வரை உள்ள பல ஊர்களிலும் அன்பர்கள் பலரும் கயிலைகண்ட குருமணியைத் தரிசிக்கவும் வரவேற்கவும் ஏற்பாடுகள் செய்ய முற்பட்டு விட்டார்கள்.

ஸ்ரீ காசியில் வரவேற்பு :

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் ஸ்ரீ காசிக்கு மீண்டும் 26—8—59 மாலை எழுந்தருளி வந்ததும், திருப்பனந்தாள் ஸ்ரீ குமாரசுவாமி மடத்தின் ஏஜண்டு திரு. கலயாண சுந்தரம் பிள்ளை எதிர்ஏற்று உரிய முறையில் அழைத்துச் சென்று கோலுவில் அமர்த்தி வழிபாடுகள்செய்து, வணங்கி பூதிபெற்று வரவேற்புரையும் வழங்கினர். அன்பர்கள் பலர் வந்து தரிசித்துப்போனார்கள்.

ஓய்வு :

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் ஸ்ரீ காசிக்குவந்த மறு நாளே தருமைக்கு எழுந்தருளவேண்டுமேன்பது முதலில் திட்டம். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் திருமேனி மிகவும் வாடி மெலிந்திருப்பதைக் கண்டு பரிவும் பணிவும் தோன்ற அங்குச் சிலநாட்கள் தங்கி ஓய்வுபெற்ற பிறகே தருமைக்கு எழுந்தருளவேண்டுமேன்று திரு. கல்யாண சுந்தரம்பிள்ளை கேட்டுக்கோண்டார். "இதே நிலையில் மீண்டும் ஆயிரக்கணக்கானமைல் பயணம் செய்தல்தகாது, அதுவும்" மிகவும் குளிர்ந்த இடத்திலிருந்து உஷ்ணப்பிர தேசத்தில் சேன்ருல் உடல் நலம் மேலும் பாதிக்கப்படும். அன்பர்கள் கண்டாலும் அவர்களும் மிகவும் பேருங்கவலே கோள்வார்கள். சிலநாட்களாவது ஓய்வு பெற்று மேலே



ஸ்ரீ காசிமடம் வரவேற்பு
கயிலை யாத்திரை முடித்து ஸ்ரீ காசிக்கு
ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில்
மீண்டும் எழுந்தருளியானபோது
ஸ்ரீ குமாரசுவாமி மடத்தில் கொலுவீற்றிருக்கை.



ஸ்ரீகாசி விஸ்வேசருக்கு இலட்டு அபிஷேகம்

செல்லுதலே சிறப்பு ’’ என்றும் தெரிவித்துக்கொண்டார். அங்குத் தங்கிய நாட்களில் அவர் மிகவும் சிறப்பாக உபசரித்தார். ஒன்றுலும் சிறிதும் குறையாது அடிக்கடி கேட்டுச் செய்வர். அவருடைய இனிய பேச்சும் பரிவும், கங்கை முழுவெள்ளமும், ஸ்ரீ கேதாரீஸ்வரர், ஸ்ரீ காசி விசுவேசர் தரிசனத்தால் விளைந்த மனநிறைவும், நம் அன்பர்களோடு மீண்டும் வந்து கூடிவிட்டோம் என்ற மனமகிழ்ச்சியும், அந்த ஒரு சில நாட்களில் எங்கள் உடல் தோற்றத்தில் பெரும் மாறுதல்களை நல்ல முறையில் விளைவித்தன. முன்னே சொல்லியிருப்பது போல ஸ்ரீ காசியிலே ஸ்ரீ குமாரசுவாமி மடம் அருமையிட ஒரு தாய்போல வாய்த்தது எங்கள் எல்லோருக்கும்.

மறுநாட் காலையிலிருந்து ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் வழக்கம்போல ஸ்ரீ கேதரீஸ்வரர், ஸ்ரீ காசிவிசுவேசர் வழிபாடுகள் இவற்றைச் சிறப்பாகச் செய்து மகிழ்ந்தார்கள்

## பண்டாரா :

29—8—59 அன்று காசியிலுள்ள அகாடாக்களுக்கும் அழைப்பு விடுத்து பல பெரும் சாதுக்களுக்கும் பண்டாரா ஒன்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் நடத்தி வைத்தார்கள்.

## லட்டு அபிஷேகம் :

30—8—59 அன்று ஸ்ரீ காசிவிசுவேசுவரருக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் சிறப்பு வழிபாடுகள் செய்தார்கள். அதில் பெருஞ்சிறப்பு ஸ்ரீ விசுவேசுவரருக்கு நடந்த லட்டு அபிஷேகம். இது ஒரு சிலரே செய்ய இயலும். இந்த அருமையான அபிஷேகம் நடைபெறும்

செய்தியறிந்து அன்று அக்கோவிலில் பெருங்கூட்டம் கூடித் தெரிசித்தது. பிரசாதமாக அவர்களுக்கு லட்டு வழங்கப்பட்டது. ஸ்ரீ காசியில் ஸ்ரீ காசிவிசுவேசனைத் தரிசித்து, அவனருளும் பெற்றுத் தோடங்கிய திருக் கயிலை யாத்திரை அவன் வழிபாட்டோடு இன்று நிறைவு பெற்றது.

## சென்னை வழியில் :

30—8—59 ஞாயிறன்று இரவு 7 மணிக்கு ஸ்ரீகாசியை விட்டுச் சென்னைக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் எழுந்தருளினார்கள். கல்கத்தாவில் உடன்வந்த டாக்டரின் சகோதரியும், மைத்துனரும் வந்து கண்டு மாலையிட்டு வணங்கி உபசரித்தார்கள்.

## சென்னை வரவேற்பு :

சென்னைக்கு 2—9—59 புதனன்று காலை 7 மணிக்கு எங்கள் ரயில் வந்துசேர்ந்தது. சென்னைக்கு அந்த ரயிலில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் வந்துசேரும் செய்தி எவ்வித மாகவோ பல அன்பர்களுக்கும் எட்டிவிட்டது. சென்ட்ரல் ஸ்டேஷனில் வண்டி வந்து நிற்குமுன்னே பலர் வண்டியில் ஏறி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்தானத்துக்கு வணக்கம்தெரிவித்து நூற்றுக்கணக்கான மலர் மாலைகள் அணிவித்து ஆசி பெற்றார்கள். நிலைய விசாரணை வித்துவான். ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள், உயர்மன்ற நீதிபதி கனம். திரு. என். சோமசுந்தரம், நீதிபதி கனம். திரு. சுப்பிரமணிய நாடார், பப்ளிக் சர்விஸ்கமிஷன் தலைவர் இரத்தின முதலியார், திரு. நல். முருகேச முதலியார், திரு. சச்சிதானந்தம் பிள்ளை, திரு. கணேசம் பிள்ளை,

திரு. கி. வா. ஜகன்னுதன், திரு. சங்கரன், திரு T. புருஷோத்தமன் M. L. C. திரு. இர்ாமனுதன்பிள்ளை M.A. முதலிய பெருமக்கள் தலைமையில் அன்பர்கள் பலரும் மலர் சூட்டி வரவேற்றனர். ரயிலடியில் சிறப்பாக போலீஸ் ஏற்பாடும் செய்யப்பட்டிருந்தது.

சென்னை சமயப்பிரசார நிலையத்தில் வித்துவான் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் முறைப்படி ஸ்ரீலஸ்ரீ கயிலை கண்ட குருமணியைக் கோலுவிலமர்த்தி வழிபட்டு வணங்கித் திருநீறு பெற்றனர். ரயிலடியில் வரவேற்க வந்த பலரும் இங்கும் வந்து கோலுக்காட்சி கண்டு வணங்கி கயிலைப்பிரசாதம் பேற்றுக்கோண்டார்கள்.

வழியில் :

காலை 10 மணிக்குச் சென்னையை விட்டுத் தருமைக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் எழுந்தருளினுர்கள். வழி நேடுகிலும் வரவேற்பு வளைவுகளும், வழியேங்கும் மலர் மாரியும், மலர் மாலைகளும், ஆலயப் பிரசாதங்களும், வரவேற்புரைகளும். அன்பர்களின் அன்பு வேள்ளத்தில் சிக்குண்டு கார் வேகம் தடைப்பட்டு ஊர்ந்து வரவேண்டிய தாயிற்று. சிதம்பரம் சீகாழி, வைத்தீஸ்வரன்கோயில், மணக்குடி, மாயூரம் மக்கள் அளித்தவை மிகப் பேரியவை. சிதம்பரம் நகர எல்லையிலே வரவேற்புத் தோடங்கியது. ஸ்ரீ சபாநாயகர் ஆலயப் போது தீட்சிதர் களும் நீண்டநேரம் காத்திருந்து ஆனந்தக்கூத்தன் அருட் பிரசாதம் அளித்து வரவேற்பளித்தார்கள்; அவ்வூரில் நடுநடுவில் அன்பர்கள் மாலை, பழங்கள் முதலியன ஏந்தி நின்று காரை நிறுத்தி நிறுத்தி வரவேற்ருர்கள். சீகாழி யிலும், வைத்தீஸ்வரன்கோவிலிலும் அதே போல

ஊரெல்லையிலிருந்து ஊர் தாண்டிச் செல்லும்வரை ஆங்காங்கும், பல்வேறு இடங்களிலும் வரவேற்பு வளைவுகள் தோரணங்கள். மாலைகள், பல்வேறு ஆலயப் பிரசாதங்கள்

மாயூம் நகர எல்லையிலேயே ஒரு பெரும் கூட்டம். அன்பர்கள் கூட்டம். நகரப் பெருமக்கள் பலரும் தனித் தனியேயும் அவரவரும் மலர் மாலையிட்டு வரவேற்றார்கள். மாயூரம் நகர வழியெங்கும் பெரிய விழாக்கூட்டம்; வரவேற்பும், அரஹர முழக்கமும் மிகப் பெருகின. மக்களின் அன்பு வெள்ளத்தில்தான் கார் நீந்திவந்தது.

## தருமையில் :

தருமையாதீனத்தில் அலுவல் பார்க்கும் அத்தனை மக்களும், ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் 'அவர்களைப் பிரிந்த நாள் முதல் அவர்களின் நினைவே மேலோங்கி நின்றனர். இன்று காசியிலிருப்பார்கள். இன்று கயிலை செல்வார்கள், இன்று கயிலையைத் தரிசிப்பார்கள் இன்று திரும்பிவந்துகொண்டிருப்பார்கள் என்ற பேச்சைத்தவிர வேறு பேச்செழாத மௌனநிலை. கயிலையையே 3 மாதங்கள் வரை நினைக்கும் சிவபுண்ணியம் எல்லோர்க்கும் கைகூடிற்று. தேவஸ்தானங்கள்தோறும் கயிலை யாத்திரை இனிது முடியப் பிரார்த்தனை; தருமையில் சொக்கேசன் குருஞானசம்பந்தர், மகாலக்ஷ்மி துர்க்கை முதலிய தெய்வங்களுக்கு லக்ஷார்ச்சனைகள் செய்வித்துப் பிரார்த்தனைகள். திருக்கயிலாய திருப்பதிகங்களின் இடைவிடாத ஜபம். இவையெல்லாம் செய்துகொண்டு என்று நம் குருநாதரைக் காண்போம் என மனமுருகி நின்றனர். இதேபோல் தமிழ் நாட்டில் பலவிடங்களிலும் பிரார்த்தனைகளும், கயிலைப்பதிகப் பாராயணங்களும் நடைபெற்றன.

இவ்வழியில் கயிலை நினைவு நம் மக்களிடையே நிலவி நின்றது அக்காலத்தில்.

கயிலையாத்திரையில் ஸ்ரீலஸ்ரீகுருமகாசந்நிதானம் அவர்களின் உத்திரவுப்படி வரும் தபால்கள் அறிவிப்புப்பலகையில் அவ்வப்போதும் எழுதப்பட்டிருக்கும். அச்சிட்டும் வழங்கப்படும். இவ்வாறு பிரிவினால் பெருந்துயர்கொண்டிருந்த தருமை மக்களுக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் வருகை எல்லையற்ற பேருணர்வை வெளிப்படுத்தியது. பெருஞ்சாலைவளைவிலிருந்து எங்கும்வரவேற்பு வளைவுகள், ஆலவட்டங்கள், மகரதோரணங்கள் நிறுத்தப்பெற்று ஊர் அழகு செய்யப்பட்டது. டெலிபோனில் காலையிலிருந்து ஒருவர் செய்தி தெரிந்து தெரிவித்துக்கொண்டே யிருந்தார்.

## மாலை மணி 3 :

ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர்கள், திருமடத்து உத்யோகஸ்தர்கள், சிப்பந்திகள், தேவஸ்தானக் காரியாலய உத்யோகஸ்தர்கள், சிப்பந்திகள் ஆதீனப் பல்கலைக் கல்லூரி பேராசிரியர்கள். மாணவர்கள், ஆதீனக் கல்வி நிலய ஆசிரியர்கள், மாணவர்கள், ஞானசம்பந்தம் அச்சகத்தினர், பல பேரன்பர்களின் கூட்டம் கூடிக் காத்து நின்றது. சித்தி விநாயகர் திருக்கோயில் எல்லையில் பெருங்கூட்டம்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் மாலை மணிக்குத் தருமைக்கு எழுந்தருளியதும் மகுடகோஷங்கள் வானைப் பிளந்தன. அன்பர்களின் மலர்ந்த முகங்கள் வரவேற்றன. எல்லையற்ற மகிழ்ச்சிக் கடலின்

ஆரவாரம்போல வாழ்க ஒலி ஒலித்தது. ஸ்ரீலஸ்ரீ குரு மகாசந்நிதானம் அவர்கள் திருமடத்திற்கு எழுந்தருளித் திருமஞ்சனம் கொண்டு ஸ்ரீ மகாலக்ஷ்மி துர்க்காதேவி சந்நிதிக்கு எழுந்தருளியானார்கள். கயிலை யாத்திரையில் கண்கண்ட தெய்வமாய் அருள் வழங்கிய அம்பிகையின் அருள் வெள்ளத்தில் திளைத்து அகமுருகி நின்றார்கள்.

## காணிக்கை :

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் கயிலை யாத்திரை வெற்றிபெறவேண்டி மாயூரம் சப்ரிஜிஸ்டார் திரு. V. இராமநாதய்யர் அவர்கள் துர்க்கா தேவியைப் பிரார்த்தனை செய்து ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் யாத்திரை இனிது முடித்து மீண்டு தருமைக்கு எழுந்தருளும் போது சார்த்துவதற்காக அவர்கள் யாத்திரை சென்றவுடனேயே வாங்கி வைத்திருந்த பதக்கத்தை ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருக்கரங்களில் கொடுத்துச் சார்த்தச் செய்தருளுமாறு கேட்டுக்கொண்டார்கள். பதக்கம் சாத்தப்பெற்றுத் தீபாராதனை நடைபெற்றது.

## வழிபாடு :

ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருக்கோயில் சென்று மெய்யெலாம் கண்ணீர் வார ஸ்ரீ குருஞானசம்பந்தப்பெருமானை வழிபட்டுக் கனவிலே தோன்றித் தோன்றிக் கயிலை யாத்திரையில் உடனழைத்துச் சென்று வெற்றியருளிய தந்தைக்கு வணக்கம் தெரிவித்து வழிபட்டு ஸ்ரீ சொக்கேசப் பெருமானைப் பல நாள் பிரிவுணர்ச்சியால் கண்ணீர் பெருக மனம் உருகி வழிபட்டு அவர் தம் மலர்ச் சேவடி போற்றினார்கள்.

## கொலுக் காட்சி :

தருமைத் திருமடத்தின் அடியார்கள் அன்பர்கள் இவர்களின் வேண்டுகோளுக்கிணங்கிக் கோலு வீற்றிருந்து அருள்பாலித்தார்கள். கோலு வழிபாடு நடைபெற்றது. வந்திருந்த அன்பர்கள் பலருக்கும் திருக்கயிலைப் பிரசாதங்கள் வழங்கப்பெற்றன. "சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும் இனி எதிர் காலத்தின் சிறப்பும் இன்றெழுந்தருளப் பெற்ற பேறிதனுல் எற்றைக்கும் திருவருளுடையோம்" என்று தொடங்கிப் பாடிய ஓதுவா மூர்த்திகளின் குரல் திருமடமெங்கும் ஒலித்தது. ஒலித்துக் கொண்டேயிருக்கிறது.

## யாத்திரைப் பயன் :

திருக்கயிலாய யாத்திரை, பல பிறவிகளில் செய்த புண்ணியப் பயனுய்ப் பல தலயாத்திரைகள் செய்து பழுத்து முதிர்ந்த மனப்பக்குவம் உடைய அனுபூதியாளர்க்கே வாய்ப்பது. கண்ணுதலும் கண்டக்கறையும் மறைத்தருளி மண்ணிடையில் மக்கள் மனந்தெளிவிக்க வந்த தெய்வமாகிய திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனத்து இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் சமயநெறி காட்டவந்த ஞானவேந்தர்.

தலயாத்திரைகள், திருக்கோயில் வழிபாடுகள், ஞான நூல்களை ஓதல், ஓதுவித்தல், நற்பொருளகளைக் கேட்டல், கேட்பித்தல்போன்ற பல்லாற்ருனும் நம்மனேரைக் கடவுள் நெறியில் ஈடுபடுத்துபவர்கள். அவர்கள் நம்மனேர் உய்யும் பொருட்டு மேற்கொண்ட திருக்கயிலாய யாத்திரை இது. ஒவ்வொரு மதத்தினரும் தங்கள் மதத்தில் முடிந்த

முடிவாகிய யாத்திரைகளைப்போல நம்மனோர்க்குச் சிறந்த யாத்திரை இது என்று உணர்த்தியருள இவ்யாத்திரையை மேற்கொண்டவர்கள்.

திருக்கயிலாயம் தேய்வபூமி. அதைத் தீண்டினுர் உடலும் உள்ளமும் புனிதமடைகின்றன. திருக்கயிலாயத்தைத் தரிசித்தார் தேய்வத்தன்மை பேறுகிருர்கள் என்பது நமது நூல்துணிபு.

இந்த யாத்திரையில் பல மக்களோடு பழகியும், பல இடங்களில் தங்கியும், ஏறியும் இறங்கியும், விழுந்தும் புரண்டும், நடந்தும் மேலிந்தும் நம் உடலும் உள்ளமும் பண்பட்டுவிடுகின்றன. உள்ளத்தில் கயிலைநாதன் இடம் பேற்றுவிடுகிருன். கடவுள் நம்மோடு உடனுய் இருந்து நமக்குக் கருணைசெய்யும் பாங்கை இதில் உணரலாம்.

## கயிலைக் குருமணி :

‘கயிலாய தரிசனம் செய்துவந்த இக் குருமூர்த்திகளை இனி எல்லோரும் கயிலைக் குருமகாசந்நிதானம் என்றே வழங்கவேண்டும்’ என்று திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் உளப்பாங்குக்கேற்ப இனி எல்லோரும் கயிலைக் குருமகாசந்நிதானம் என்றே வழங்குவோமாக.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் வாழ்க !

கயிலாய பரம்பரை வாழ்க !

வாழ்க உலகேலாம் !

# திபேத்

## பெயர் :

திபேத் என்பது அதனுடைய இயற்பெயரல்ல. போட் (Bod), பூட் (Bood), போட்-பா (Bod - Pa) என்பது தான் இயற்பெயர். அதை பூட் (Boot), பூட் (Poot), போட்யூல் (Bodyul), புடாண்ட் (Butant) புடான் (Butan), டுபேட் (Tubet), திபேட் (Thibet), தபேட் (Thabet), டேபேட் (Tebet), தோபோட் (Thobot), தங்யூட்-கட்ஸார் (Tangyut-katzar), பாரன்-டோலா (Baron-Tola), பாரன்டாலா (Baron-Tala) * எனப் பல பெயரிட்டு அந்நிய நாட்டினர் வழங்குவாராயினர். மத்திய ஆசியாவிலுள்ள தார்த்தாரிகள் பெரும்பாலும் வீடு கட்டி அதில் வாழாமல், நாடோடிகளாக - கூடார வாசிகளாகவே வாழ்கிறுர்கள் என்று சொல்லப்படுகிறது. திபேத்தில் பலரும் வீடுகள் கட்டிக்கொண்டு ஊரமைத்து ஒருசேர இருந்து வாழ்வதைக் கண்டார்கள் அவர்கள். 'வீடுகட்டி வாழ்பவர்கள்' என்று இவர்களை அழைத்தார்கள். அவர்கள் மொழியில் தோபோட் என்ருல் வீடு கட்டி வாழ்பவர்கள் என்பது பொருளாகும். பாரசீக, அரேபிய மொழிகளில் இந்தத் தோபோட்டை, திபேட் என்றனர். இப் பொழுது வெளிநாட்டவரும் அதை மேற்கொண்டு அதுவே நிலைத்து வழங்குவதாக ஆகிவிட்டது. டோப்பாட் (Tobbat), டுப்பாட் (Tubbat), டிப்பாட் (Tibbat),

* வீடு கட்டிக் குடியிருப்போர் - மங்கோலியச்சொல்.

டுபுட் (Tuput), டோபுட் (Toput), டுப்போட் (Tupot) என்றெல்லாம் அரேபிய நாடுகளில் வழங்கப்பட்டிருந் திருக்கிறது. டௌஃபான் (Tou-fan), டுஃபான் (Tu-fan), ஸிஃபான் (Hsi-fan), ஸி-ட்ஸாங் (Hsi-tsang), வுட்ஸாங் (Wu-tsang), உட்ஸாங் (Vutsang), டாங் (Tang) என்ற பெயர்களால் சீனர்கள் அழைத்தார்கள். நம் இந்தியர்கள் அதை ஹூணதேசம் என்று சொல்லுகிறார்கள்.

## மனித உற்பத்தி :

மான் (Mon) - இக்காலத்திய பூட்டான் - தேசத்திலிருந்து ட்ராஸ்-ரின்-மோ (Dras-Rin-Mo) என்ற பெண் (அரக்கிஎன்றும் சொல்கிறார்கள்) இந்தநாட்டிற்கு வந்தாள். வழி தெரியவில்லை. அவளுக்கு அச்சமாக இருந்தது. வருந்தி அழுது களைத்தாள். "வழி தெரியவில்லையே. இங்கே யாரும் எனக்கு உதவியாக வந்து வழி காட்ட மாட்டார்களா" என்று உரத்து ஓலமிட்டாள். அப்பொழுது "அஹி, அஹி" என்று சொல்லிச் சொல்லி அழுதாள். 'அஹி' என்றால் கஷ்டம் என்பது பொருள். அக்குரல் கேட்டு குரங்குகளின் அரசன் ஹிலுமஞ்சு (Hilumanju) அங்கு வந்து அவளைக் காத்தது. அவள் தின்னக் காட்டுக் கனிகளைக் கொண்டுவந்து தந்தது. எல்லையில்லா மகிழ்ச்சிகொண்டாள். இருவரும் ஒருவரை ஒருவர் நேசித்தனர். அதுவே காதலாகி அவர்களுக்குப் பிள்ளைகள் பிறந்தார்கள். பல பிறவிகள் எடுத்த பிறகு அவை மனித உருப்பெற்றன. அப்பெண் பல இடங்களிலும் சுற்றித் திரிந்தாள். ஒரு கற்பாறையின் உச்சியில் வந்து நின்றாள். அங்கே அவலோகிதேஸ்வரர் வந்து அவள் முன் தோன்றினார். அவர்தான் சென்ரேசி என்னும் போதிசத்துவர்.

அவர்தான் ஹிலுமஞ்சூவாக முன் வந்ததும். சென்ரேசி அந்தப்பகுதிக்குக் காவல்தெய்வம். அவர் அவளிடம் கோதுமை, பார்லி, காய்கறி வகைகள் இவற்றின் விதை களைக் கொடுத்துப் பயிரிடும்படி சொன்னார். அதிலிருந்து விளைந்து வருவதில் உணவுக்கு என்று ஒரு பகுதியும் விதை முதலுக்கு என்று ஒரு பகுதியும் வைத்துக்கொள்ள வேண்டுமென்றும் சொன்னார். பயிரிடும்முறைகளையும் சொல் லிக்கொடுத்தார். அதனால் நாடு செழிக்க, மக்கள் உணவுக் கஷ்டமில்லாமல் வாழும்படி அருள்வழங்கினார். நாகரிகத் தின் அடிப்படை அறிவையும் போதித்தார். ஹிலுமஞ்சூ வைப் பிரஸின்போ (Prasinpo) என்றும் சொல்வர்.

## மக்கள், அரசன் :

அவள் பிள்ளைகளே பிற்பாடு திபேத்திய மக்களாகப் பெருகித் தழைத்திருக்கிறார்கள். அப்பொழுது அவர்கள் படிப்பறிவு இல்லாதவர்களாகவும், முரடர்களாகவும், பண் பாடு. நாகரிகம் மத உணர்வு இவை என்ன என்பதே தெரி யாதவர்களாகவும் இருந்தார்கள். மனித உற்பத்தி ஏற்பட்டு 147 வருஷங்களுக்குப் பின் அந்தநாட்டுக்கு முதல் அரசன் ஏற்பட்டான். அவன் பெயர் ஸ்ரீ - க்யாங் - ட்யூஸன் (Sri - Kiang - Teuzan) என்பது. பிறகு அவன் முயற்சியால் அம்மக்கள் திருந்தி வரவர அறிவு பெற்று விளங்கலாயினர்.

## விலங்குகள் :

மனித உற்பத்தியைப் போலவே அக்குரங்கு அரசனும் அப்பெண்ணும் கூடி, ஆடு, மாடு, குதிரை முதலிய எல்லா விலங்கினங்களும் மற்ற உயிர் வாழ்வன எல்லாமே பிறந்தன; பெருகின

## வெள்ளம் வடிந்தது :

இங்கு மனிதர்கள் உற்பத்தியாவதற்கு முன்னே, இந் நாடு முழுவதும் தண்ணீருக்குள் அழுந்திக் கிடந்தது. அப்போது அவதாரமான புத்தர் - ட்சாங் கப்பா (Tsang Kappa) இமய மலைகளில் வடிகால்கள் வேட்டித் தண் ணீரை வடியவிட்டார். பிறகு தரைப்பகுதி வெளியே தெரியவந்தது. லாசாவில் உள்ள பூகணிதர்களின்படி பெரு வெள்ளம் கி. மு. 2190ல் ஏற்பட்டது என்றும், மேல் நாட்டினர் கணக்குப்படி கி.மு 1730ல் ஏற்பட்டது என்றும், தெரியவருகிறது. எப்படியிருந்தாலும் தரைப்பகுதி வெளிப் பட்டு 850 ஆண்டுகளுக்குப் பிறகே அப்பகுதியில் மனித உற்பத்தி ஏற்பட்டதென்று சொல்கிறார்கள். அக்காலங் களில் அந்த நாட்டிலும் பெரிய மரங்களும் காடுகளும் இருந்ததாகவும், பின்னே ஏற்பட்ட சில நிலமாறுதல்களால் அங்கு மழை குறைந்துவிட்டதென்றும் சொல்கிறார்கள்.

## உறைபனி நாடு :

வேறுவிதமாகவும் சொல்லப்படுகிறது. அக்காலத்தில் அப்பகுதி முழுவதும் பனிஉறைநாடாக இருந்ததென்றும், பிறகு ஏற்பட்ட உலக நில மாறுதல்களால் அங்கிருந்த உறைபனிப்பகுதி வடக்குநோக்கி நகர்ந்து நகர்ந்து போய் விட்டதாகவும், அக்காலங்களில் மானசசரோவரம், இராக்ஷ ஸ்தால் ஏரிகள் இரண்டும் பெருகி நிறைந்திருந்ததாகவும், அதிலிருந்தே சட்லீஜ் முதலிய நதிகள் உற்பத்தியாயின என்றும் ஆராய்ச்சியாளர்கள் சொல்கிறார்கள்.

## பேரரக்கன் :

அந்த நாடு பேரரக்கன் ஒருவன் மல்லாந்து படுத்திருப் பதுபோல அமையப்பட்டதென்றும், அந்நாட்டின் பல்வேறு

பகுதிகளேயும் குறிப்பிட்டுச் சொல்லி அவற்றில் அம்மனி தனின் தலே, கால் முதலிய உறுப்புக்கள் இவையிவை என்றும் அததன்மீதும் கோவில்கள் கட்டப்பட்டன என்றும் சொல்லுவது வழக்கம். சிலர் ஒரு பெண் மல்லாந்துபடுத் திருப்பதுபோல இருக்கிறதேன்றும் சொல்வார்கள். இந்தச் செய்திகள் மணி - கம்பம் ( Mani - Kumbam ) என்ற திபேத்திய புராணத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. லட்சம் மணிக் கோள்கைகள் என்பது அந்நூற்பெயர்

லாசா :

அந்த நாட்டுக்கு லாசா என்பதுதான் தலேநகரம். அங்குத்தான் இதுவரை தலேலாமா மதத் தலேவராகவும், ஆட்சித் தலேவராகவும் இருந்து ஆண்டது. தலேலாமா என்று ஏற்படுமுன் அந்நாட்டைப் பல சிறுசிறு பகுதிகளாக பலபல சுதந்திர மன்னர்கள் ஆண்டு வந்திருக்கிறுர்கள். அவற்றுள் உட்சாங் என்ற பகுதியே இப்போழுது லாசா வீன் சுற்றுப்பகுதிகள் என்றும் சொல்கிறுர்கள். லாசாவில் தலேலாமாவின் அரண்மனே ஒரு சிறு குன்றின் உச்சியில் மிகவும் அழகாகக் கட்டப்பட்டிருக்கிறது. அந்த இடத்தில் முன்பு அந்நாட்டு மன்னனின் அரண்மனே இருந்துவந்ததாகவும், ஐந்தாவது தலேலாமா காலத்தி லிருந்து அது தலேலாமாவின் இருப்பிடமாக மாறிற்று என்றும் சொல்வார்கள். அந்தத் தலேலாமாவின் காலத்தி லிருந்துதான் அந்நாட்டாட்சியும் தலேலாமாக்களிடம் வந்தது. அந்த உயரிய இடத்தில்தான் முதன் முதல் அவலோகிதேஸ்வரர் ( சேன்ரேசி ) ட்ராஸ்ரின்மோவைச் சந்தித்தது. அங்கிருந்துதான் விதையை முதன்முதல் வழங்கிஞர் என்றும் சொல்வர். அந்தச் சிறந்த இடத்தில் தான் இப்போழுது புனித தலேலாமாவின் அரண்மனே

கட்டப்பட்டிருக்கிறது. அதைச் சுற்றிலும் வீடுகளும் நகர அமைப்பும் பின்பு ஏற்பட்டதேன்றும் சோல்கிருர்கள்

## துறவிகளின் செல்வாக்கு :

அந்தநாட்டில் ஆண், பேண் துறவிகள் எண்ணிக்கை அதிகம் என்று சோல்லப்படுகிறது. அவர்களின் போதுப் பேயர் லாமாக்கள். போதுவாக எந்தக்காரியம் சேய்வதாக இருந்தாலும் லாமாக்களைக் கேட்காமல் அம்மக்கள் சேய்ய மாட்டார்கள். குழந்தைக்குப் பேயரிடுவதிலிருந்து, இறந்தவர் பிணத்தை எவ்வாறு வேளியாக்குவதேன்பதுவரை அவர்கள் உத்திரவில்லாமல் சேய்யமாட்டார்கள். வைதிகச் சடங்குகளும் அதிகம். பிறந்ததிலிருந்துஇறந்து மறையும் வரை ஒவ்வோன்றுக்கும் ஒவ்வோரு சடங்கு, பிரார்த்தனை. நோயுற்றிருந்தாலும் அதற்குப் பரிகாரம் எவ்விதம் சேய்வதேன்பதை லாமாக்களைக் கலந்துகோண்டே சேய்வர். அம்மக்களுக்குத் தலைலாமாவிடம் குரு, தேய்வ அம்சம், போதிசத்வரின் அவதாரம் என்ற மதிப்போடு அன்பும் பக்தியும் அச்சமும் உண்டு. தேய்வமாகவே போற்றுவார்கள். அதுபோலவே பேரிய லாமாக்களுக்கும் மதிப்பும் மரியாதையும் உண்டு. எதை லாமாக்கள் விரும்பினாலும் உடனே அவர்கள் அவ்விதமே சேய்வார்கள்.

## கிழக்கு மேற்குப் பகுதிகள் :

கிழக்குத் திபேத்தில் ஊர்களும், மக்கள் தோகையும், சாகுபடியும் அதிகம். மேற்குத் திபேத்தில் மக்கள் கூட்டம் குறைவு, அங்கு ஊரமைப்பும் குறைவு. பேரும்பாலும் கூடாரவாசிகள்தான் அதிகம். மேற்குத் திபேத்தில் தான் கயிலை, மானசசரோவரம், இராக்ஷஸ்தால், மாந்தாதா

இவைகள் இருக்கின்றன. கிழக்குத் திபேத்தில் லாசா, புனிதக் கோகோனூர் ஏரி இருக்கின்றன.

### பொட்டாலோ :

தலைலாமாவின் அரண்மனைக்குப் பொட்டாலோ என்று பெயர். அதற்குத் தேவர்கள் வாழும் இடம், மிகப் புனிதமான இடம் என்று பொருள். லாசாவென்றாலும் தேவர்கள் வசிக்கும் இடம் என்றுதான் பொருள். அவலோகிதேஸ்வரர் அடிக்கடி தரிசனம் கொடுக்குமிடம் பொட்டாரகா என்று வழங்கப்படுமாம். அதுவே பின்பு பொட்டாலோ என்று மருவி வழங்கப்படுகிறதென்றும் சொல்கிறார்கள். கோட்டை, அரண்மனை, கோவில் என்ற மூன்று பகுப்புகளை உடையது அது. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் கம்போ என்ற மன்னன் இங்கு அரண்மனை கட்டினான். அதற்கு அப்பொழுது மார்ப்போரி (Mar-po-ri) என்று பெயர். செங்குன்று என்பது அதன் பொருள். 1645 வரை மன்னர்கள் வசிக்குமிடமாக இருந்தது. ஐந்தாவது தலைலாமா நக்வாங் லோப்சாங் (Nagwang-Lobsang) என்பவர் காலத்தில்தான் அது பொட்டாலோ வாயிற்று. லாசாவுக்கு பாரன்டோலா, பாரன்டாலா என்ற வேறு பெயர்களும் உண்டு. போர்ஹன் (Borhan) என்ற மங்கோலியச் சொல்லுக்குக் கடவுள், ஆவி என்று பெயர். அதிலிருந்து அது கடவுள் ஊர், தெய்வங்கள் உறையும் நகரம் என்ற பெயர் பெற்றது. அதுவே திபேத்தின் பெயருமாயிற்று.

### தலைலாமா :

உலக மக்களின் நன்மைக்காக சென்ரேசி மக்கள் உருவேற்று தலைலாமாவாகப் பிறப்பெடுக்கிறார். மனிதர்கள் நல்வாழ்வு வாழ்வதற்காகவும், உலகம் உய்ய

வேண்டியதற்காகவுமே அவரது ஆவி மனித உருவில் வந்து மனிதர்களோடு வாழ்ந்து, நடந்து காட்டி, உலகியல் இன்ப துன்பங்களை அனுபவித்துவருகிறது. தலை என்ற மங்கோலியச் சொல்லுக்கு மகாசமுத்திரம் என்று பொருள். அவருக்கு வேறு சில சிறப்புப் பட்டங்களும் உண்டு. அவை: க்யாம்கான் ரிம்போஷி (Kyamgon-Rimpoche) (Precious-Protector) ஒப்பற்ற காவலர், (Gyalwa-Rimpoche) க்யால்வா ரிம்போஷி - ஒப்பற்ற மாமன்னன், மிகப் பெரிய லாமா (Grand Lama) இவைபோன்ற பல. 1474 இல் கெடுன் க்யாட்சோ என்பவர் முதல் தலைலாமா ஆனார். அவரே புதிய சீர்திருத்த மதத்தின் தலைவர். கெலுக்பா மதம் - மஞ்சள் ஆடை. லாசா வுக்குத் தலைலாமாவின் ஆட்சிப் பீடம் மாறுவதற்கு முன் அவர்கள் (தலைலாமாக்கள்) டெபங் (Depung or Brebung) என்ற இடத்தில் உள்ள மடத்தில்தான் வாசம் செய்துவந்தார்கள். இப்பொழுது அரசகாரியமாகக் குறிகள் கேட்குமிடம் அது.

ஐந்தாவது தலைலாமா நக்வாங் லோப்சாங் க்யாட்சோ (Nagwang-Lobsong-Gyatso) காலத்தில் செங்கீஸ் கான் என்ற தார்த்தாரிய மன்னன், அந்நாட்டை (திபேத்) ஆண்டு வந்தவன், புதிய மஞ்சள் மரபை ஏற்று அதற்கு அதிக ஆதரவு தந்து அம்மரபின் தலைவராக உள்ளவரை (நக்வாங்) மதத் தலைவராகவும், ஆட்சித் தலைவராகவும் ஆக்கித் தலைலாமா என்ற பட்டத்தையும் தன் அரண்மனையையும் தந்தான். அவர் (நக்வாங்) 1650ல் அந்நாட்டின் மதத் தலைவராகவும், ஆட்சித் தலைவராகவும் ஆனார். அவர் காலத்தில்தான் செங்குன்று மாளிகை என்பது பொட்டாலோ (பொட்டாலா) அரண்மனை எனப் பெயர் பெற்றது. அவர் பின் வந்தவர்கள் இங்கிருந்தே

மதஆட்சி நாட்டாட்சியை நிருவகித்து வருவாராயினர். இப்போழுது உள்ளவர் 14 ஆவது தலைலாமா.

### சென்ரேசி அவதாரம் :

சேன்ரேசியின் அவதாரம் தலைலாமா. அவர் இறப்பதில்லை. கூடுவிட்டு வேறு கூட்டுக்குள்புகுந்து மக்களுக்கு நன்மை செய்கிறார். மக்கள் மீதுள்ள கருணையினாலேயே சேன்ரேசி (அவலோகிதேஸ்வரர் என்னும் போதிசத்வர்) இவ்விதம் பலமுறையும் மனித உருவிலே இந்த உலகில் வந்து மக்களோடு மக்களாகப் பழகி அவர்களுக்குள்ள நன்மை தீமைகளை உடனிருந்து அனுபவித்து இன்ப துன்பங்களைக் கண்டு மனித இனத்துக்கு அருள் வழங்குகிறார். அந்தச் சேன்ரேசி மனிதர்களைப் போலவே அவர்களுக்காகவே பிறப்பு, இறப்பு, இளைப்பு மூன்றையும் அனுபவித்து வருகிறார். தலைலாமா சர்வ வல்லமை உள்ளவர் (தாம்ஷி க்யேன் பா: Thamche-Khien-Ba).

### பஞ்சென் லாமா :

இதற்கு அடுத்த நிலையில் உள்ளவர் பஞ்சேன் லாமா. அவருடைய மடம் டாஷி லும்போ (Tashi-Lumpo) ஊர் ஷிகட்சே (Shigatse). இந்த மடத்தை இங்கு கேடுன் டுப் (Gedun-Dup)என்பவர் நிறுவினார். சாங் கப்பா (Tsong kappa) என்ற மஞ்சளாடை சீர்திருத்த வகுப்புத் தலைவரின் ஒன்று விட்ட மகன் முறையிலுள்ளவர். பஞ்சேன் ரிம்போஷி அல்லது டேஷூ லாமா என்ற சிறப்புப்பட்டம் பேற்றவர். அமிதபா என்னும் புத்த அவதாரமாக பஞ்சேன் லாமா கருதப்படுகிறார். அமிதபாவை (O. Pagmed) ஒ. பக்மேட் என்று திபேத்திய மோழியில்

சொல்லுவர். இவருக்குச் சமயப் பெரியவர் என்ற பதவி மட்டும் உண்டு. இவர் இருக்கும் மடமும் பெரிய அரண்மனை போன்றதுதான். பல ஆயிரக் கணக்கான மக்கள் ஒரே காலத்தில் தங்க வசதி உள்ளது.

சர்வகலாசாலைகள் :

வீட்டில் முதலில் பிறக்கும் பிள்ளையை மதத்துக்கு (மடத்துக்கு) அர்ப்பணித்தல்வேண்டும். பெண்ணானாலும் அதுவே. பெண் துறவிகளுக்குத் தனிமடம் உண்டு. ஐந்து வயதிலிருந்து மடத்தில் கொண்டுவந்து விட்டுவிடுதல் வேண்டும். பிள்ளை மொழி அறிவு, சமய சாத்திர அறிவு, எடுத்துரைக்கும் ஆற்றல், பல மூர்த்திகளின் திருவுருவங்களை உலோகங்களில் வார்த்தல், மணி முதலிய பூஜா உபகரணங்கள் வார்த்தல், சாஸ்திர புத்தகங்கள் அச்சிடுதல் போன்ற பல துறைகளிலும் கற்றுத்துறை போக 30 ஆண்டுகளுக்கு மேல் ஆகும். இலக்கியம் இலக்கணம், சோதிடம் முதலியவைகளும் போதிக்கப் படும். கிரியா விதிகளிலும் பயிற்சி பெறுவர். மாந்திரீக தந்திரங்களும், மருத்துவம் முதலிய கலைகளும் சொல்லித் தரப்படும். சொா, காண்டன் (Ganden), ப்ரேபங்க் (Brebung), சாம்யே (Samye) முதலியன பல பெரிய சர்வகலாசாலைகள். இக் கல்லூரிகளில் பல நாட்டிலிருந்தும் லாமா மதபாடம் கற்கப் பல்லாயிரக்கணக்கான மாணவர்கள் வந்து பயின்று வருகிறார்கள்.

பான்-போ :

ஆதிகாலத்தில் அங்கு பான் போ (Bon-bo) என்ற சமயம் கைக்கொள்ளப் பட்டிருந்தது. பல தெய்வக் கொள்கை உடையது. பலி, யாகம் முதலியன உண்டு.

நரபலிகூட உண்டு. பலியிடப்பட்ட நரமாமிசங்களையும் பிரசாதமாக உண்பதும் உண்டு.

**சமயக்கொள்கைகள் - கர்ம பலன் :**

ஏழாவது நூற்றாண்டிலிருந்து புத்த சமயக்கோள் கைகள் தாம். காணப்படாத கடவுள் என்ற ஒன்றிருப்ப தற்கில்லை; இல்லையிலிருந்து இல்லைதானே பிறக்கும் என்ற தத்துவத்தின் அடிப்படையில் அமைந்தது. ஆனால் கர்மாக்கள் உண்டு. அவரவரின் நல்லகெட்ட கர்மாக்களுக்கு ஏற்ப அனுபவமும் உண்டு. உயிர் எடுத்தவை (மனிதர்) செய்யும் பாப புண்ணியங்களுக்குத் தக்க லாக்களாக (சுரர்களாக), லாமைன்களாக (அசுரர் களாக) பல பிறப்புக்கள் எடுத்து சுவர்க்கம், நரகம்புகுந்து இன்ப துன்பங்கள் அனுபவித்துப் படிப்படியாக ஞானம் கைவரப்பெற்று, மேல்நிலை அடைந்து, சங்கீ கோன் சியோ (Sanghiee-con-Scio) அதாவது - புத்த நிலை அடைந்து, மேலும் நிலைத்த தவத்தால் உயர் ஞானப் பிழம்பாக நிலைத்து நிற்பர். அவர்களே மக்கள் மீதுள்ள கருணை யினால் அவ்வப்போதும் உடம்பெடுத்து மக்களை நல் வழிப்படுத்தி, அவ்வுடம்பெடுத்ததன் பயனாக நல்வினை தீவினைகளைச் செய்து புண்ணிய பாபங்களுக்கு இலக்காகி சுவர்க்க இன்பங்கள், நரகத் துன்பங்கள் இவற்றை அனுபவித்து மீண்டும்மீண்டும் பிறந்திறந்து பலப்பல பிறவிகளில் ஞானநிலை அடைவர்.

**புத்த சக்யமுனி :**

இதைப்பற்றிக் கஞ்சூர் என்னும் வேத புத்தகத்தில் ஒரு விளக்கம் : புத்தசக்கியமுனி சோல்வதாக : ‘சேங்கிப் சம்பா ஆவியில் என்னுடைய நற்கரும பலனால் “ சங்கீ ”

நிலைவரை விரைவிலே அடைந்தேன். அந்தப் போதி சத்வ நிலை அடைந்தவர்களுக்கு மறுபிறப்பு இல்லை. இருந்தாலும் அவர்கள் மற்ற உயிர்களின் நன்மையை உத்தேசித்துத் தாமாக விரும்பி மறுபிறப்பு எடுப்பதுண்டு. அதேபோலத் தேவர்களுக்கு நன்மையை உண்டாக்கக் கருதித் தேவர்களோடு தேவர்களாக (Ra-ab-ccenbo=Ri-rab-ccenbo=Kaain-den=Galdan) ரீராப் சேன்போ (கயிலை) என்னும் மலையில் வந்து மறு அவதாரம் எடுத்தேன். (கால்டன் என்பதை காண்டன் Ganden என்றும் சொல்லலாம்). அங்கிருந்து (நம்முடைய) இவ்வுலகை நோக்கினேன். மனிதர்கள் காம இச்சையில் பல பாவங்களைப் புரிந்து கீழ்நிலை அடைந்திருப்பதைக் கண்டேன். வந்து பிறப்பெடுத்து அவர்களுடைய துன்பம் துடைத்து நிலையான இன்பத்திற்கு வழி காட்டவேண்டும் என்றும் நினைத்தேன்'.

ஙான் பார் ஜங் பை டோ :

இதைப்பற்றி விரிவாகச் சொல்லப்படும் வேதப் பகுதி ஙான்-பார்-ஜங்-பை-டோ (Ngnon-Bar-Jung-Pai-do) என்பது. அதில் மேலும்; தேவனாகிய இவர் இன்பவாழ்வை விட்டு மனிதனாகப் பிறந்து தான் பைசாச (சைத்தான்) மாக மனித உருவில் புகுந்து பேசுவதாகவும் (ஆவேசம்), நல்லுபதேசங்களை வெளியிடுவதாகவும் சொன்னார். குரங்கைப்போலத் தாம் நடந்துகோள்வதாகவும், மனிதர்கள் உய்யும் வழியாகப் புனிதமான மூன்று பொருள்களை - அதாவது முனிவர்கள் அம் முப்பொருள்களில் சொல்லியிருக்கும் விஷயங்களை - ஏற்று நடித்துக்காட்டி மனித இனத்தின் காப்பாளராக, மனித உருப்பெற்றுத் துயரங்களையும், மனித நிலையில் உள்ள இச்சைகளையும் வெளியிட்டு

அனுபவித்து தேய்விகநிலையை (ஞானநிலையை) மீண்டும் பேற்ருர். அந்த ஞாஞசாரியர் ஐந்து விஷயங்களை ஒழுங்கு படுத்துவதற்காக உலகை ஐந்து முறை நோக்கிஞர். ஜாதி அல்லது குலம், இடம், காலம், குடும்பம், பேண் என்பன அவ்வைந்தும். பேண் மூலம்தான் மனிதஉருவில் வேளிவந்தார். அந்தப் பேண்ணுக்குப் பரிசுத்தநிலையையும் சில பேறுகளையும் அளித்தார். மனிதநிலை எடுப்பதற்கு முன்னே சில உபதேசங்களை வழங்கிஞர். அதில் எதிர்ப்புக்களையும், துயரம், துன்பம், உழைப்பு இவை களையும் உயிர்களின்மாட்டுவைத்த கருணையிஞல் ஏற்றுத் தாம் நினைத்த பலனை அடைந்தார். தான் கருப்பையில் இருந்த காலத்தும், சிசுவாக இருந்த காலத்தும் பின்னும் ஞானமும், கூர்த்த அறிவும், உறுதியுமுடையவராகவே விளங்கிஞர் என்று விரிவாக அவர் சக்யமுனியாகப் பிறந்து, மணந்து, உலக வாழ்வை வேறுத்து, ஞானம் கைவரப்பேற்று, உபதேசம் வழங்கியவைகளையும் சோல் கிருர் அந்நூலில்.

கஞ்சூர், தஞ்சூர் :

அவர்களுடைய வேதம் கஞ்சூர்; 108 நூல்களை உடை யது. அதுவே மோத்தத்தில் லக்ஷகிரந்தங்களை உடைய 12 அத்யாயங்களை உடையதாகவும் சுருக்கப்பட்டிருக்கிறது. கஞ்சூருக்குப் பாஷ்யம் தஞ்சூர்எனப்படுவது. தஞ்சூர் தந்திர மார்க்கம், இலக்கணம், தர்க்கம், பேச்சுத்திறன், மருத் துவம், வானசாஸ்திரம் சோதிடம், சேய்யுட்கோவை, இலக்கியம், அகப் புறச் சேய்யுட்கள், காளிதாசனுடைய நூல்கள், புராணங்கள், கிரியாவிதிகள் இவைகளின் தோகுப்பு 235 நூல்களை உடையது. 225 என்றும் சோல்வர்.

## உலகம் :

உலகம் அதில் காணப்படுபவை எல்லாமே அநாதியே உள்ளவை. ஆகையால் முதன் முதல் உண்டாக்கப்பட்ட தேன்பது இல்லை. அவை அநாதியே தோழிற்பட்டு நிற்கின்றன. சுதந்திரம் உடையன. முற்பிறப்பில் செய்த பாப புண்ணியங்களுக்கு ஏற்ப இப்பிறவி ஏற்பட்டது. இதில் நாம் அனுபவிக்கும் இன்பதுன்பங்கள் முற்பிறவி யில் செய்த கர்ம பலனை ஒத்திருக்கும்.

## பாப புண்ணியங்கள் :

உயிர் வகைகளில், உயிர் வாழும் ஒன்றிலிருந்து மற்ற மற்ற உயிர் வாழும் இனங்களைப் பிரித்துக் காணமுடியும். மனிதன் பாப புண்ணியங்களின் விளைவாக மிருகங்களாக வும் பிறப்பேடுக்கநேரிடும். முற்பிறவியின் கேட்ட கரும பலனுகத்தான் அவனுக்கு இப்பிறவியில் அங்கஹீனங் களும், அங்க இழப்புக்களும் ஏற்படுகின்றன. அதிருஷ்டம், தரித்திரம், அழகு, சேல்வம், ஆனந்தம், துக்கம் முதலிய எல்லாம் முற்பிறப்பில் செய்த கர்மபலன்கள். பிறவி களும் மூன்று வகைப்படும், (1) லா (Lba) பிறர்போற்ற சுகபோக வாழ்வு பேறும் பிறவி; (2) லாமைன் (Lhamain) தேவனுமல்ல, மனிதனுமல்ல மிகக்கடும் துன்பங்களையும் துயரங்களையும் அனுபவிக்கும் பிறவி; (3) மனிதப்பிறவி; இவைமூன்றும் நிலையானதல்ல. இந்த மூன்றுபிறவிகளிலும் ஒவ்வோன்றிலும் பலபல பிரிவுகளுமுண்டு. சேய்யும் பாபங் களுக்கு மன்னிப்பு உண்டு. பரிகாரங்களுண்டு. அது நரகத் துன்பத்தைக் குறைக்குமே ஒழிய செய்த கேட்டகருமத்தின் பயனாய் ஏற்படும் துன்ப அனுபவமே இல்லாது ஆக்கி விடாது. இப்பிறவியிலேயே ஜபம், தவம், ஆலயவழிபாடு,

தீர்த்தயாத்திரை, கயிலை போன்ற சிறந்த தல தரிசனம், தலைலாமா போன்ற அவதார புருஷர்கள் தரிசனம் இவற்றாலும், இவற்றை வழிபடுதலாலும், சாந்திக் கிரியைகளாலும் புண்ணியப் பேறுகளைப் பெருக்கிக்கொள்ளலாம். விரைவில் ஞான நிலை - புத்த நிலை அடையலாம். ஆலயங்கள் அடியார்கள், அவதார புத்தர்கள், வேதபுத்தகங்கள் இவைகளை ஆதி புத்தராகவே கொள்ளுதல்வேண்டும். கிரியைகளில் அழுத்தமான நம்பிக்கைவேண்டும். அவைகளைச் செய்வதால் இப்பிறவியில் விளையும் துன்பங்களைப்போக்கிக் கொள்ளலாம். லாமா மதம் என்பது பழைய வைதிகக் கொள்கையும் சக்ய புத்தமதக் கொள்கைகளும் கலந்த ஒன்று என்று ஆராய்ச்சியாளர்கள் சொல்கிறார்கள். சாக்தேயமும் கலந்ததென்றும் சொல்வர்.

## மகாமந்திரம் :

அவர்களின் மகாமந்திரம் ''ஓம் மணி பத்மே ஹூம்''. ''தாமரையில் அவதரித்த இரத்தினம்'' என்பது அதன் பொருள். அவைகளைக் கற்களில் பொறித்து மணிச்சுவர்களாகவும், கற்குவியல்களாகவும் இட்டு வைத்து அவைகளையும் ஆலயங்களைப்போல மதித்து வலம் வந்து வணங்குவர். கற்களில் அந்த மகாமந்திரத்தைப் பொறித்து இடுதல் ஒரு பெரிய புண்ணியம். இந்த மந்திரத்தை இரவு பகல் எந்நேரமும் ஜபித்துக்கொண்டேயிருப்பர். இவைகளை ஓலைகளில் 108, 1008 முறை எழுதிச் சிறு சக்கரங்களில் இட்டுக் கையில் வைத்துச் சுழற்றிக்கொண்டேயிருப்பர். ஒவ்வொருசுழற்சியிலும் உள்ளே உள்ள சுவடியில் எழுதப்பட்டிருக்கும் எண்ணிக்கை அளவு ( 108 முறை 1008 முறை ) உருச்செய்ததாகக் கொள்வர். மடங்களில் ஒரு ஆள் ஏறி நின்று சுற்றக்கூடிய மணிச் சக்கரங்களும்

( மணி கார்லோ - Mani Korlo ) பல இருக்குமாம். கூலி கொடுத்து அவைகளை இரவு பகல் சுற்றிக்கொண்டே இருக்கச்செய்வார்களாம்.

**சமய உட்பிரிவுகள் :**

அங்குப்பரவியிருக்கும் சமயம் பௌத்தம்; மகாயானக் கோள்கையை அனுசரித்தது.

(1) ஙிங்ம - பா, சைன பௌத்தக்கோள்கை.

(2) உர்க்கியன் பா - (பத்மசம்பவரால் உண்டாக்கப் பட்டது).

(3) கடம் பா - அதிஷ்டா (தீபாங்கரர் ஸ்ரீஞான) வழி.

(4) சக்யபா, சிகப்புக்குல்லாய் - இதில் சங்நியாசிகள் நைஷ்டிக தர்மத்தை அனுசரிக்கவேண்டியதில்லை. பேண்களோடு கூடி வாழலாம். திருமணம் புரிந்துகோள்ளலாம். ஒரு குழந்தை பிறந்தபிறகு பேண் சேர்க்கைகூடாது.

(5) கேலுக் பா ( Tsong Kappa ) : ட்சாங் கப்பா உண்டாக்கியது. நைஷ்டிக பிரமசரியம் வேண்டும்.

(6) கர்க்யுட் பா - ( வேத ) சூத்ரதருமத்தை அனுஷ்டிப்பவர்கள். வேதமே ஆதிபுத்தர்.

(7) கர்ம பா - கரும பலனையே நம்பியவர்கள்.

(8) டேகுங் பா.

(9) துக் பா - இடி பிரதான தேய்வம்.

(10) பான் பா (Bon-pa), பேம் போ: பழைய சமயக் கொள்கை கலந்தது.

துறவிகளில் :

துறவிகளிலும் ட்ராபா, டாபா (Daba) கெலாங் (Gelong), நக்ராம்பா (Graduats), ரஞ்சம்பா (Doctor of Laws) மகாவித்துவான் முதலிய பல படிப்பு முறைகள் உண்டு. பிறப்பிலேயே அவதார லாமாக்களும், தன்னுடைய தவத்தால் அவதார லாமாக்கள் ஆனவர்களும் உண்டு. தலைலாமாவுக்கு அடுத்தபடியாக இந்த அவதார லாமாக்களுக்கு மதிப்பும் மரியாதையுமுண்டு.

தவம் :

அந்த நாட்டில் ஆலயங்களும், மடங்களும் அதிகம். மலைகளில் கயிலாயகிரியும், மாந்தாதாவும், ஏரிகளில் மானசசரோவரமும், கோகோனூரும் புநிதமானவை. ஆலய தரிசனம், வழிபாடு, மடங்களில் அடியார்கள் வழிபாடு, கயிலை முதலிய புநிதமலைகள், தீர்த்தங்களைத் தரிசித்தல், வலம்வருதல், தீர்த்தங்களில்நீராடுதல் முதலிய செயல்கள் தவம் செய்வதற்கோப்பாகும்.

லகாங் :

மடங்களிலும், வீடுகளிலும் பூஜைசெய்யும் இடங்கள்-லகாங் (Lhakang) என்ற தனி அமைப்பு உண்டு. அங்குத் தேய்வ மூர்த்தங்களை வைத்து நேய் விளக்கேற்றி தூப தீபங்கள் காட்டி நாள் தவருது வழிபடுவர். அவரவருக்கும் இஷ்ட தேய்வம், வீட்டுத் தேய்வம்

என்று தனித்தனியேயும் இருக்கும். இவைகளல்லாத காற்றுத் தேய்வம், மரத் தேய்வம், நதித் தேய்வம், காட்டுத்தேய்வம், பயிர்த் தேய்வம் என்ற பல தேய்வங்களும் உண்டு. போதிசத்வர்கள் பலரும் அவர்களுடைய தேவிமார்கள் பலரும் தெய்வங்கள். சக்கரங்கள் அமைத்து இஷ்டதேய்வங்கள் வழிபடுதல், ஹோமங்கள், விரதங்கள் முதலிய பலவும் உண்டு.

## பிறப்பும், படிப்பும் :

குழந்தை பிறந்ததும் சம்பந்தப்பட்ட மடங்களுக்கு அறிவித்து அங்கிருந்து அடியார் வந்து சில கிரியைகள் செய்து பெயர்வைக்கச்செய்வர். குழந்தைகளைத் தண்ணீரிலோ அல்லது வேந்நீரிலோ குளிப்பாட்டுவது கிடையாது. யாக் வேண்ணெ உடல் முழுதும் பூசப்படும். கல்வி போதனைக்கு மடங்களால் நடத்தப்படும் கலாசாலைகளுக்கு அனுப்புவர். வயதுவந்ததும் ஐந்துவருஷமாவது கட்டாயம் படித்தல்வேண்டும். பேரிய கலாசாலைகளில் 10,000 மாணவர்களுக்குமேலும் பல நாடுகளிலிருந்தும் வந்து படிக்கிறார்கள். இதுபோலவே ஒவ்வோன்றிலும் பல பல ஆயிரம் மாணவர்கள் பயிலுகிறார்கள்.

## திருமணம் : பெண்பார்த்தல் :

பேண்வீட்டார் நடு மனிதர் ஒருவரைப் பிள்ளைவீட்டாரிடம் அனுப்புவர். ஜாதகப் போருத்தங்களை லாமாக்களிடம் கேட்டுத் தேரிந்து கோள்வர். நடு மனிதர், " தங்கள் தகுதிக்கேற்ற இடம் என்று சோல்லமுடியாது " என்று அவையடக்கம் சோல்லிப் பிறகுதான் வந்த சேய்தியை அறிவிப்பர். மணமகன் வீட்டார் பேண்பார்க்கப்

போவார்கள். மனம் ஒத்துப் போனதும், இன்னின்னர் இன்னின்னிவை கொடுக்கவேண்டும் என்பதும் பேசப்படும். பெண்ணைப்பெற்ற தாய்க்கு "பால்ப்பணம்" என்ற ஒன்று அளிப்பார்கள். பெண்ணைப்பெற்ற தாய் பரல்கொடுத்து வளர்த்ததற்குக் கூலி கொடுப்பதாகக் கொள்ளப்படுவது. பெருந்தகுதி யுடையவர்கள் இதைப் பெற்றுக்கொள்ள மாட்டார்கள். பெண்ணுக்குச் சீர்வரிசைகள் வழங்குவர். மணமகன் வீட்டார் சிகாமணி ஒன்று கொடுப்பர். அது திரு மாங்கல்யம் போன்ற சிறப்புடையது. பெண்கள்தம் ஆயுள் உள்ளவரை அந்தச் சிகாமணியைப் புநிதமானதாகக்காத்து வருவார்கள். மணமகன் பெண்ணைப் பார்க்க விரும்பினல் அப்பொழுதும் அந்தச் செய்தி அவளுக்கு அறிவிக்கப்பட மாட்டாது. அவளுக்குச் சிறப்பாக ஒப்பனை செய்து தாங்கள் பார்க்க விரும்புவதாகச் சொல்லி அலங்காரம் செய்து முடித்து வெளியே போய்வரலாம் என்று சொல்லி அழைத்துச் சென்று மணமகனுக வரக்கூடியவன் காணு மாறு செய்வர். பொதுவாகத் திருமண ஏற்பாடுகள் முடி வாகும் வரை பெண்ணுக்கு அந்தச் செய்தியை அறிவிப்பது கிடையாது. சில பெண்கள் குறிப்பால் தெரிந்துகொள் வதும் உண்டு; மற்றவர்கள் முடிவான பிறகே தெரிந்து மனம் மருள்வர். தேற்றப்பட்டு ஒப்புவர்.

## புக்ககத்துக்குப் புறப்பாடு :

பெண் பிறந்த வீட்டைவிட்டு வெளியேறினல் அந்த வீட்டு லக்ஷ்மிகரமும் போய்விடும் என்று நம்புகிறார்கள். அதற்காக லாமாக்களை வரவழைத்து வீட்டுத் தெய்வங் களுக்குக் கிரியைகள் செய்து பெண்ணிடமிருக்கும் தன் வீட்டு லக்ஷ்மிகரத்தைத் தன் வீட்டிலேயே தங்கவைத்துக் கொள்வார்கள். பிறகு பெண்ணும் அவளுக்குத் தோழிகள்,

உற்ருர், உறவினர் உடன்வர, மணமகன் வீட்டுக்குக் குதிரைமீது புறப்பட்டுச்சேல்வாள். மணமகளை நன்ருக அலங்கரித்து முகத்திற்கு ஒரு திரை இட்டு பின்னே முதுகுப் புறத்தில் நீண்ட துணி தோங்கும்படி ஆடைகள் உடுத்தி அனுப்புவர். மணமகன் வீட்டாரின் உறவினரில் ஒரு சில ஆண்களும் பேண்களும் வந்திருந்து பேண்ணை அழைத் துச்சேல்வர். ஒரே ஊராயினும் ஊர் எல்லையில் தனிக் கூடாரத்தில் கோண்டுபோய் வைத்துவிடுவார்கள். அவளிட மிருந்த லக்ஷ்மிகரம் தாய்வீட்டிலேயே எடுத்துக்கோள்ளப் பட்டபடியால் அவளிடம் துர்த்தேவதைகள் முதலியன அணுகியிருக்கும் என்ற நம்பிக்கையுமுண்டு. மணமகள் அயலூருக்குச் சேல்லவேண்டியிருந்தால் வழியில் உள்ள உற்ருர், உறவினர், நண்பர்கள் அங்கங்கும் ஊரேல்லையிலே வரவேற்று அங்கேயே ஒரு கூடாரம் அமைத்துத் தங்கச் சேய்து விருந்துபசாரங்கள் நடத்துவார்கள். பரிசுகள் வழங்குவதுமுண்டு. ஊருக்குள் அப்பேண்ணை அழைக்க மாட்டார்கள்.

## மணமகன் வீட்டுக் கதவு மூடப்படும் :

இதுபோன்ற சிறப்புக்களோடு மணமகன் வீட்டருகே அப்பேண் வந்ததும் அந்த வீட்டுக் கதவு முடப்பட்டிருக் கும். வேளியே உற்ருர் உறவினர் பலர் கூடி நின்று வர வேற்பர். மணமகன் வீட்டார் கோதுமைச் சத்துமாவால் கத்திபோன்ற ஒன்று சேய்து அதற்கு இரத்தவர்ணம் தீட்டி வைத்திருப்பார்கள். இதைத் தமக்கு நம்பிக்கையுள்ள ஒரு உறவினரிடம் கோடுத்து வரவேற்புக் கூட்டத்தில் நிறுத்தி வைத்திருப்பர். அவர் யாரும் அறியாத நிலையில் அக்கத்தி யைப் பேண்ணின் முகமூடித் துணியில் படும்படியாக வீசி விட்டு வேகமாக வீட்டுக்குள் புகுந்துகோள்வார். அவர்

நுழையக்கூடியதாகமட்டிலும் வீட்டுக்கதவு சிறிது திறந்து மூடும். அவரை மணப்பெண்வீட்டார் கண்டுபிடித்துவிட்டால் மணமகன்வீட்டார் அதற்காக அபராதம் சேலுத்துதல் வேண்டும். இவ்விதம் செய்வது லக்ஷ்மிகரம் ஒழிந்த அப்பெண்ணை வரும் வழியில் பற்றியிருக்கும் பேய், பூதங்கள் முதலியவைகளை விரட்டுவதாக ஆகும்.

பிறகு பெண்ணை வீட்டுவாயிலின்முன் நிறுத்தி லாமா மந்திரம் ஓதி அப்பெண்ணுக்கு லக்ஷ்மிகரம் உண்டாக்குவார். அப்போழுது " வீட்டுத் தேய்வங்களே, இன்னின்ன குடிப்பெயருள்ள இன்னின்ன தாய்தந்தையருக்குப் பிறந்த இந்தப் பெண்ணை, இன்னின்ன குடிப்பெயருள்ள இன்னின்ன தாய்தந்தையரின் மகனை இன்னாருக்கு மணம் முடிப்பதால் அவளை இக்குடும்பத்தில் ஒருவளாக ஏற்று லக்ஷ்மிகரம் வழங்கி நல்லன எல்லாம் பெருக வாழ அருள் செய் " என்று பிரார்த்தனை செய்து அதன் முடிவில் பெரியோர்கள் வாழ்த்துப் பாட மணப்பெண் வீட்டிற்குள் நுழைவாள். பெண்கள் மங்கலம் பாடுவர். வீட்டுவாயிலின் உட்புறத்தில் நின்று மணமகன் அவளைக் கைப்பற்றி அழைத்துச் செல்வான். அவனும் அவளும் தலைவனும் தலைவியுமாய் விளங்குவார்கள். அவ்வீட்டிலே வயது வந்த பிள்ளைகள் (உடன் பிறந்த சகோதரர்) இருந்தால் 5,. 6 பேர்கள் வரை அவளையே 5, 6 மாத காலத்துக்குப் பிறகு மணத்தால் ஏற்பார்களாம்.

## பல கணவர்கள் :

இவ்விதமாக அண்ணன் தம்பிகளானவர்கள் பலர் கணவன்மார்களாக ஒரு பெண்ணுக்கு இருப்பர். வீட்டுக்கு மூத்தவன் தலைவன். மற்றவர்கள் அங்கு இரண்டாம்தரத் தலைவர்கள். முதல் கணவன் இறந்தால் உயிரோடு

இருப்பவரில் மூத்தவன் தலைவன். முதல் திருமண முடிவில் பெண்வீட்டார் தம்பதிகளை மறுபடியும் அழைத்துப் பலநாட்கள் தங்கவைத்து விருந்துபசாரம் செய்வார்களாம். உற்றார் உறவினரும் விருந்தளிப்பர். திருமணச் சீதனமாக யாக், குதிரை, ஆடு, நிலங்கள், நகைகள் முதலியன அவரவர் தகுதிக்கேற்ப வழங்கவேண்டுமாம். சில பெண்கள் பல கணவர்களை ஏற்க மறுப்பதுமுண்டு. மனைவி இறந்தால் வேறு பெண்ணை மறுமணமுடித்தலும் உண்டு. அப்பெண் இளம் வயதினளாக இருந்து தந்தை இறந்தால் தநயன் அவளையே தன் மனைவியாக ஏற்பதுமுண்டு. மணமானவர்கள் பிரிதல் எளிதல்ல.

## தபுதார நிலை :

மனைவியை இழந்தவன் (தபுதார நிலை) விதவையைச் சேர்தலுமுண்டு. இவர்கள் தனித்தனியே அவரவர் வீட்டில் இருந்துகொண்டே இரவு நேரங்களில் மட்டும் கணவன் மனைவி உறவு கொள்ளலாம். பிறக்கும் குழந்தைகள் பெண்ணைச் சேர்ந்தது.

## நோய்க் கழிப்பு :

நோய் கண்டால் குறிசொல்லும் லாமாக்களை வரவழைத்து தெய்வ ஆவேசத்தால் அவர் குறி கண்டு சொல்லும் மருந்து கொடுப்பர். அவர் சொல்லும் மருத்துவரிடம் காட்டுவார்கள். அவர் சொல்லும் பரிகாரங்களைச் செய்வார்கள். நோய் மிகுந்து இறந்துவிடுவாரோ என்று அஞ்சக்கூடிய நிலையில் அவரைப்போல மாவால் உருவம் செய்து பாடையில் இட்டுச் சுமந்து சென்று ஊர்ப்புறத்தில் கழித்துவிட்டால் அவர் மறுபிறப்பாகப் பிழைத்துவிடுவர் என்றும் நம்புகிறார்கள்.

ஈமச்சடங்கு :

இறந்து விட்டால் அச்செய்தியை லாமாக்களுக்கு அறிவித்து அவ்வுடலை எவ்விதம் தீர்ப்பது என்று கேட்டு அவர்கள் சொல்வதைப்போலச் செய்வார்கள். துண்டுதுண்டாக வேட்டிக் கழுகு, பருந்து முதலிய பறவை களுக்கும், நாய்களுக்கும் இடுதல், ஆற்றில் மீன்களுக்கு இறையாக இடுதல், சாக்கில் கட்டி ஆற்றில் இறக்கி விடுதல், மண்ணில் புதைத்து புழுப் பூச்சிகளுக்கு உண வாக்குதல், எரித்து சாம்பலாக்குதல் முதலிய பல வழிகள் உண்டு. அவ்வுடலை வீட்டைவிட்டு வெளிப்படுத்து முன் வீட்டிலுள்ள மற்றவர்கள் நலம் பெற்று வாழ சில கிரியைகளும், பிறகு ஊர் எல்லை அல்லது மலை உச்சியில் அவ்வுடலைத் தீர்வுசெய்யுமிடங்களில் பல லாமாக்கள் ( பெரும்பாலும் பான்போ லாமாக்கள் ) மணியடித்து சில கிரியைகளும் செய்து அந்த உடலிலிருந்த ஆன்மா நற்கதி பெறவேண்டுவர்.

நடுநடுவில் அவர்கள் ஆலயவழிபாட்டுக் காலங் களில் தேநீர் அருந்துவதுபோல (உடலைத் துண்டுபோடும்) அந்தக் கைகளைக் கழுவாமலே இங்கும் தேநீர் அருந்துவார் களாம். அவ்விதம் தேநீர் அருந்துவதால் புனிதநிலை அடையும் அந்தப் பெரியாரின் அருளையும் தாம் ஏற்பதாகக் கருதுவர். எவ்வளவுக்கெவ்வளவு விரைவில் அவ்வுடல் சீரணிக்கப் படுகிறதோ அல்லது அழிகிறதோ அந்த அளவில் விரைந்து அப்புனித ஆன்மா வேறு உருக்கொள்ளும். அவ்வுடல் மற்றவற்றிற்குத் தீனியாதலும் ஒரு அறச் செயல். நாளானல் தங்குவதற்கு இடமில்லாமல் தவிக்கு மாம். இந்த இடைநிலையை பார்டோ ( Pardo ) என்று

சொல்வர். சிறப்பாக ஒரு வார காலத்திற்குள் பாப புண்ணியத்துக்குத்தக்கபடி அந்த உயிர் வேறுகூட்டுக்குள் புகுந்துகொள்ளும். உலகியல் ஆசைகள் அதிகமுள்ளவர் கள், தீச்செயல் செய்வோர் இவர்களின் உயிர்கள் தங்குவ தற்கு இடம் கிடைக்காமல் ஒரு வருஷமோ பல வருஷங் களோ காற்றில் அலைந்து துன்புறும் என்ற நம்பிக்கை யும் அவர்களுக்கு உண்டு. புனிதமான நிலை அடைந்த லாமாக்கள் போன்றோரின் உடலை நெருப்பிலிட்டுச் சாம்ப லாக்கி அவைகளை எடுத்து மடங்கள், கயிலைச்சாரல் இவைகளில் இட்டுச் சமாதி கட்டுவதுமுண்டு. அவைகளும் அருள் விளக்கம் உள்ள இடமாகக் கருதப்படும். அச் சாம்பலை மாவோடு சேர்த்துப் பிசைந்து மணிமந்திரம் போதித்து பொன், வெள்ளி இவற்றில் மூடிப் புனித கவச மாகவும் அணிவார்கள்.

## தலைலாமாவின் கூடு கண்டுபிடித்தல் :

தலைலாமா, அவதார லாமாக்கள் இறந்தால் அவர் களின் ஆவி இக்கூடு விட்டு இறந்த அதே நேரத்தில் வேறொரு கூட்டுக்குள் புகுந்துகொண்டுவிடும். ஆகையால் அது எங்கே மறுபிறப்பெடுத்திருக்கிறது என்பதை அறிய பிரபன் மடத்தில் உள்ள தெய்வ ஆவேசம் வந்து குறி சொல்லும் லாமாக்களை அணுகி அதற்குரிய கிரியைகள் செய்து தெய்வ ஆவேசத்தை வரவழைத்துப் பயபக்தியோடு அது சொல்லும் செய்திகளைக் கேட்டுக் குறித்துக்கொண்டு அதன் வழியே அப்பிள்ளையைக் கண்டுபிடிப்பர். அதில் சந்தேகமற இருக்கவேண்டி முன் உயிர் நீத்த பெரியவர் கையாண்ட பொருள்களை மறைவாக எடுத்துக்கொண்டு அக்குழந்தை உள்ள இடத்துக்குச் செல்வர். குழந்தை தன் முன் பிறவியில் பயன்படுத்திய பல பொருள்களையும்

அடையாளம் கண்டு எடுத்துக்கொள்ளுமாம். பிறகு மடத்துக்கு அழைத்துவந்து காட்டுவார்களாம். முற்பிறவியில் இன்னின்ன இடத்தில் இன்னின்னது இருந்தது. இன்னின்ன இடத்தை இவ்விவற்றிற்குப் பயன்படுத்தியது என்ற செய்திகளை இளம் வயதிலேயே அப்பிள்ளை சொல்லுமாம். இவைகளைக் கண்டு மறுபிறப்பு முடிவுசெய்வார்கள். அரச காரியங்களுக்கும் குறிகேட்கும் வழக்கமும் உண்டு.

அஹிம்சைக் கொள்கை :

அவர்கள் மதம் உயிர் இரக்கத்தை (அஹிம்சை) வலியுறுத்துவது. அவர்கள் தரையில் குழி தோண்டும்பொழுது புழுப் பூச்சிகள் அடிபட்டாலும் பெரும் பாவம் என்று கருதி வருந்துவர். ஆனல் எல்லோரும் - லாமாக்கள் உட்பட மாமிசம் உண்ணுவர். நேரே கொல்லுதல் கூடாது. ஒரு பிராணியைக் கொல்லவேண்டியிருந்தால் மூச்சு வெளிவிட முடியாதபடி மூக்கைக் கயிற்றல் கட்டித் திணற அடித்துத் தானே சாகும்படிச் செய்வர். அல்லது அதற்காகவே உள்ள தொழிலாளிகளைக் கொண்டு கொல்லச்செய்து பிறகு ஊனைப் பச்சையாகவோ வற்றலிட்டு எடுத்துவைத்தோ உண்ணுவர். மழைக் காலங்களில் பயன்பட ஒவ்வொரு ஊரிலும் ஆடு மாடு அடிக்கும் போது இடம் உண்டு. அங்கே ஆயிரக்கணக்கான யாக், ஆடுகள் முதலியன ஒரே நாளில் கொல்லப்படும். ஆனல் அப்பிராணிகள் நற்கதி அடைய மணிமந்திரம் ஓதிக்கொண்டே இருப்பர் சந்நியாசிகள். மீன் முதலியவற்றைத் தாம் பிடிக்கமாட்டார்கள். படகோட்டி வகுப்பார் பிடித்து வந்தால் உணவாகக் கொள்வர். தேன் அருந்துவர். தாம் தேன் எடுக்கமாட்டார்கள். பிறரைக்கொண்டு எடுக்கச்செய்வர்.

## பாவிகள் :

கோல்லர், மீன் பிடிப்போர், படகு ஓட்டுவோர், ஆடு மாடுகளை அடிப்பவர்கள் கீழ்வகுப்பார். அவர்கள் ஊர் எல்லையில் ஒதுக்கப்படுவர். அவர்களோடு எந்தத்தோடர்பும் கோள்வதில்லை. படிப்பும் கிடையாது. மக்கள் சமுதாய நிலையில் அவர்கள் ஒதுக்கப்பட்டவர்கள். மடங்களில் அவர்களுக்கு இடம் கிடையாது. பாவிகள்.

## நூல் நிலையங்கள் :

ஒவ்வோரு மடத்திலும் பேரிய நூல்நிலையங்கள் உண்டு. அவற்றில் சமய சாத்திர தோத்திர இலக்கிய இலக்கண சோதிட வானசாத்திர மருத்துவ நூல் வகைகள் அதிகமுண்டு. பௌத்த பாலிமோழிக் கிரந்தங்களும், மற்ற வடமோழி இலக்கியங்களும், திபேத்திய மோழியில் மோழி பேயர்க்கப்பட்டவைகளும் அவற்றில் சேர்க்கப்பட்டிருக்கும். அகச்சுவைப் பாடல்கள், நாடோடிப் பாடல்கள் முதலியனவும் உண்டு.

## அச்சுத்தோழில் :

கஞ்சூர், தஞ்சூர் வேத புத்தகங்களை, தங்கத் தகட்டிலும், சேப்புத் தகட்டிலும், திபேத்திய நாட்டுக் காகிதத்திலும் வேட்டியும் அச்சிட்டும் வழங்குவர். இந்தப் பணியில் ஈடுபடுவதே ஒரு பேருந்தவம். நீண்ட காலமாகவே அங்கு மடங்களில் திபேத்திய நாட்டுக் காகிதத்தில் நாட்டுமைகோண்டு அச்சிடும் தோழில் வளர்ந்து வந்திருக்கிறது.

## விழாக்கள் :

ஆண்டுப் பிறப்பு (மான்லம்), அமாவாசை, பௌர்ணமி நாட்கள், புத்த ஜயந்தி, தீப விழா (கார்த்திகை தீபம் போன்றது) இவை மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படும். நீர் விளையாட்டு, வனவிருந்து முதலியனவும் உண்டு. ஆண்டுப் பிறப்புத்தான் பெருவிழா. அக்காலங்களில் தலைலாமா பொட்டாலோ அரண்மனையிலிருந்து வெளிவந்து காட்சி அளிப்பார். பெரிய ஊர்வலமும் உண்டு. ஆயிரக் கணக்கில் இவ்விழாவைக் காண லாசாவுக்கும், ஷிகட்சேக்கும் மக்கள் கூட்டங் கூட்டமாகச் சென்று தலைலாமா பஞ்சேன் லாமாக்களைக் கண்டு தரிசித்து அவரவர் தகுதிக்கேற்பக் காணிக்கைகள் வழங்கி ஆசி பெறுவர். அவர்கள் கதக் (Kadak) என்னும் பட்டுக்கைக் குட்டைகளைச் சமர்ப்பிப்பர். ஆசி வழங்குவதிலும் தகுதிக்கேற்ப படிமுறை உண்டு. ஒத்த தலைவர்கள் ஒருவர் தலையோடு தம் தலையைப் பொருந்தவைத்தும், மற்றவர்களுக்குத் தலைமீது கைவைத்தும், கையை ஆட்டியும், தலையை ஆட்டியும், கைப்பிரம்பு இவற்ருல் தொட்டும் ஆசி வழங்குவர்.

மாக (மாசி) சுக்கில பிரதமை முதல் புது வருஷம் கணக்கிடப்படும். சுக்கில திருதியையில் பத்மசம்பவர் (குருரிம்போஷி) வழிபாடு, அஷ்டமியில் தேவி வழிபாடு, அமாவாசை பௌர்ணமியில் புத்தர் வழிபாடு. இவர்களுக்கு எல்லா மடங்களிலும், கோவில்களிலும், வீடுகளிலும் கூட சிறப்பு வழிபாடுகள் நடைபெறும். ஆண்டு விழாக்காலத்தில் மடங்களில் பௌத்த ஜாதகக் கதைகளையும், திபேத்தியதேச சரித்திரத்தை ஒட்டிய கதைகளையும்

நாடகமாக நடிப்பர். இதில் சந்நியாசிகளே ஈடுபடுவர். மக்கள் கூடிக் கண்டு களிப்பர்.

கதக் :

பெரியோர்களை வணங்கப்போவோர் கையுறைகளோடு தகுதிக்கு ஏற்பப் பட்டாலோ, நூலாலோ கைக்குட்டைகள் எடுத்துப்போய் சமர்ப்பிக்கவேண்டும். அப்பெரியவர்களும் கதக் போட்டு ஆசி வழங்குவர். ஆலய வழிபாட்டுக்குச் சென்றாலும் கதக் எடுத்துச் செல்லுதல்வேண்டும். மூர்த்திகளுக்குச் சார்த்தி அதைப் பிரசாதமாக வழங்குவர்.

கால அறிவிப்பு :

கோடைக்காலம், குளிர்காலம் இவைகளை அரசாங்கமே அறிவிக்கும். அவ்விதம் செய்யுமுன் தலைலாமா அரண்மனை ஜோசியரையும், பிரபன் மடத்துக் குறிகாரரையும் கலந்துகொண்டு அறிவிப்பார்கள். குளிர்காலம் வந்துவிட்டதாக அரசாங்க அறிவிப்புவந்த நாட்களில் வெப்பம் அதிகமாக இருந்தாலும் மக்கள் குளிர்கால உடைகளையே தரித்தல்வேண்டும். இதேபோலவேகோடைக்கால அறிவிப்பு வெளிவந்ததும் எவ்வளவு நடுக்குங்குளிராக இருந்தாலும் கோடைக்காலஉடுப்புக்களையே அணிதல்வேண்டும் என்பது அரசாங்கச் சட்டம்.

வளர்ப்புப் பிராணிகள் :

யாக், ஜப்புக்கள், ஆடு, மாடு, குதிரை, நாய், பூனை, கோழிகள், வீட்டு வளர்ப்புப் பிராணிகள், சிறு விவசாயமும் உண்டு.

## உணவு வகை :

உணவு வகையில் சீனச் செங்கல்தேயிலை(Brick Tea) யும் உப்புமிட்ட தேநீர், அதில் வெண்ணெ, சோடா உப்புச் சேர்த்துக் கடைந்து குடித்துக்கொண்டே யிருப்பர். காலை யில், வற்றல் போட்டிருக்கும் இறைச்சியும், பார்லிக்குருணை யும் இட்ட கஞ்சி, சத்துமாவைத் தேநீரில் குழைத்தும் உண்பர். காய்கறிகள், பழவகை, உயர்வகை பிஸ்கோத் முதலியன செல்வந்தர்களின் உணவுப் பண்டங்கள். பால் தயிர், வெண்ணெ, முதலியனவற்றைப் பலரும் அருந்துவர்.

## தொழில் :

பெரும்பாலும் யாக், ஆடு, மாடு மேய்த்தல் தொழில். டுஸ் என்ற உயர்வகைக் கம்பளி இங்கிருந்து காஷ்மீரத் துக்கு அனுப்பப்படுகிறது. ஆட்டு உரோமத்தைக் கத் தரித்து இந்தியாவுக்கு அனுப்புகிறார்கள். ஏரிகாய்ந்த படு உப்பு, சோடா உப்பு, தங்கம், வெள்ளி, செம்பு முதலியன கிடைக்கின்றன.

## ஏற்றுமதி இறக்குமதி :

மழைக்காலங்களுக்கு ஆடு, நாய், ஓநாய் தோல்களைக் கொண்டு உள்ளே கம்பளிப் பகுதியும் மேற்புறத்தில் தோலும் தெரியக்கூடியதாகவும் சட்டைகள் தைத்தும் போட்டுக்கொள்வார்கள். ஆட்டுத்தோல், நாய்த்தோல், (ஆசனங்களுக்குப் பயன்படுபவை), முரட்டுக் கம்பளிகள் (Chukta), தூல்மா என்ற கம்பளிப் போர்வை, ரத்ன கம்பளங்கள் (இதற்கு ரசாயன வர்ணக் கலவைகள் சேர்ப்ப தில்லை. பச்சிலைச் சாறு, பல நிற மலைக்கல் இவைகளைக் கொண்டு சாயந்தோய்த்தல் உண்டு), (யாக் வால்) சாமரம்

(ஜிம்பு) வெங்காயத்தாள், கஸ்தூரி, கோரோசனை, சோடா உப்பு, வெண்காரம், உப்பு முதலியன அங்கிருந்து இந்தியாவுக்கு அனுப்பப்படுகின்றன. இந்தியாவிலிருந்து உணவுப் பொருள்கள், சட்டைத்துணிகள், (நூல், கம்பளி வகை), சோப் முதலிய எல்லாத்தேவைகளுக்கு வேண்டிய பொருள்களும் வாங்கப்படுகின்றன. பெரும்பாலும் பண்டம் மாற்று வியாபாரம்தான். இந்திய ரூபாய், திபேத்திய தங்கா, நேபாலி மோகர், சீன டாலர் நாணயங்கள் ஏற்கப் படுகின்றன.

## நாணயம் :

இந்த நாடு இப்பொழுது சீனர்கள் ஆட்சிக்குள் வந்து விட்டது. அவர்கள் சட்டம் வகுக்க முற்பட்டுவிட்டார்கள். சீனடாலர்தான் அங்கு இப்பொழுது நாணய மதிப்புள்ளதாக ஆகிக்கொண்டு வருகிறது. ஒரு டாலர் மூன்றரை ரூபாயிலிருந்து நான்கு ரூபாய்கள் வரை நாணய மாற்றில் கிடைக்கும்.

## எங்கள் அதிருஷ்டம் :

இப்பொழுதுள்ள நிலையில் இந்தியாவிலிருந்து கயிலை யாத்திரை சென்றவர்களில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் தான் கடைசியாகச் சென்றது. அவர்கள் அந்த நாட்டெல்லையை விட்டு வந்த மூன்றாவது நாள் இந்தியாவிலிருந்து கயிலைப் பகுதிக்கு யாரும் யாத்திரை வரவேண்டாம் என்ற குறிப்பை வெளியிட்டார்கள் சீனர்கள்.

ஆனால் நீண்டகால திபேத்திய வழக்கப்படி கணவாய்ப் பகுதி திறந்ததும் இவ்வாண்டும் திபேத்திலிருந்து அரசாங்க அழைப்பு எடுத்து வருவோர் வழக்கமாக அங்கு

(திபேத்) வந்து வியாபாரம் செய்து வந்த ஜோவார், தர்மா முதலிய பூட்டிய வியாபாரிகளை அழைத்திருக்கிறார். யாத்திரை செல்வோர் இனி மறு அறிவிப்பு வரும் வரை வரக்கூடாது என்றும் உத்தரவு போட்டுவிட்டார்கள்.

## சாந்தி ! சாந்தி ! !

நாங்கள் கௌரி உட்யாரில் உத்தரவு பெற்று வணங்கி எழுந்ததும் தன்னை மூடி மறைத்துக்கொண்ட கயிலாயம் நம்மவர்களுக்கு எப்பொழுது மீண்டும் காட்சி வழங்குமோ? யார் அறிவர்? கயிலைநாதனே அறிவான். அவன் இச்சையின் வழியேதானே (உயிர்களாகிய) பசுக்களாகிய நாம் செல்லமுடியும். நமக்கு ஓரளவு சுதந்திரம் உண்டானாலும் இறையருள், திருவருள் துணை இருந்தாலன்றி மறைப்பு நீங்கி (பாசம்விலகி) அவனைக் காணமுடியுமா? திருவடி தரிசனம் கிட்டுமா? அவன் கருணை வள்ளலாயிற்றே ! எப்போது, எது, எந்த அளவு நமக்கு வேண்டியிருக்கும் என்று அளவறிந்து வழங்கும் ஆற்றலும், ஊட்டுவிக்கும் தாய்மையும் உடைய கருணை வள்ளல் அல்லவா அவன் ? பொறுத்துப் பார்ப்போம். அவனருள் வேண்டி நிற்போம். சாந்தி ! சாந்தி !! சாந்தி !!!

நமச்சிவாய வாழ்க ! நாதன்றுள் வாழ்க !! இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க !!!

---

சில குறிப்புக்கள் :

## கைலாசன்

மலையுருவில் சிவபெருமானைத் தாங்கி நிற்பவன். பெருமானால் மானதமாகச் சிருஷ்டிக்கப்பட்டவன். பெருமானை நோக்கிப் பலகாலம் தவம் கிடந்தான். இவன் தவத்திற்கிரங்கிப் பெருமான் காட்சி தந்து அவனுக்கு மலைகளின் இந்திரச் சக்கரவர்த்தி நிலையும், கணுதி பத்தியமும், தமக்கு இருப்பிடமாகவும் இருக்க அருள் பாலித்தான். இதிலிருந்து பெருமான் இதைத் தம் இருப்பிடமாகக் கொள்ள எல்லாத் தேவர்களும், முனிவர்களும் இங்குத் தங்கிப் பெருமானைத் தரிசித்து நிற்பாராயினர். யாருக்கும் கிட்டாத பெரும்பேறு தனக்குக் கிடைத்து விட்டதால் தானே எல்லோருக்கும் மேலானவன் என்று செருக்குற்றான் கைலாசன். அதனை அடக்கக் கருதியே, தன் தலைகளை மலர்மாலையாகப் பெருமானுக்குச் சார்த்தி லிங்கத் திருவுருவில் வழிபட்ட இராவணனைக்கொண்டு கைலையை அசைக்கச் செய்தருளினார். அப்பொழுது பெருமான் தமது திருவடிப் பெருவிரலால் அதை நசுக்கிச் செருக்கடக்கி ஆண்டார்.

## கைலாச பர்வத அமைப்பு

இமயத்தின் பின்புறத்தில் அமைந்தது. இங்குக் குபேரன் * குய்யகரோடு வாழ்ந்து வருகிறான். அதிலுள்ள தடாகத்திலிருந்து மந்தாகினி என்னும் நதம் உற்பத்தியாகிறது. அதன் வழியில் சந்தன வனமும், சுவேலபர்வதத்திற்கு எதிரில் சந்திரப்பிரபை என்கிற மலைகளும் இருக்கின்றன. அதற்கருகில் அச்சோதை என்னுங்

---

* குய்யகர் - குபேரநாட்டில் நிதி காத்துநிற்கும் வித்தியாதரர்.

தடாகம். அதிலிருந்து அச்சோதை நதி. அதன் கரையில் சைத்ரரதவனம். சந்திரப்பிரபை என்னும் மலைகளில் யக்ஷ சேனாதிபதி மணிபத்ரன் வசிக்கிறான். சபலமலைக் கெதிரில் சூரியப்பிரபை என்னும் காடு. அதில் லோகிதம் என்னும் தடாகம். அதிலிருந்து லோகித்தியம் என்னும் நதி உண்டாகிறது. அதன் கரையில் தேவாரண்யம். அங்கு மணிதரன் என்னும் யக்ஷன் இயக்கர்களுடன் வசிக்கிறான்.

சரயூ உற்பத்தி :

கயிலைக்கு வடக்கில் குருத்மந்தம் என்னும் மலை. * அது சிவஸ்தானம். அங்குள்ள சரோவரத்தில் சரயூ நதி உண்டாகிறது. அதன் கரையில் வ்யப்ராஞ்சம் என்னும் காடு. பிரம்மதானன் வாசஸ்தானம் அது. அதற் கப்பால் அருணம், முச்சவந்தம் என்னும் மலைகள். இதுவும் சிவனுறையுமிடம். இங்குள்ள சைலோத தடாகத்தி லிருந்து சைலோத நதி பிறக்கிறது.

கங்கை உற்பத்தி :

கயிலைக்கு வடக்குப்பகுதியில் கௌரபர்வதம். அதில் காஞ்சனவாலுகம் என்னும் வாவி. அதை அபிந்து சரோவரம் என்றும் சொல்லுவர். இங்குப் பகீரதன் நீண்டகாலம் தவமிருந்து அருள் பெற்றான். கங்கை சப்தவாகினியாய்ப் பிறந்தனள். மிகவும் உக்கிரமாய் பிரவேசித்தபடியால் பெருமான் அதன் செருக்கடக்கி எழு விதமாய்ப் பெருகி ஓடச்செய்தான்; நளினி, அலாதனி, பிலாவனி மூன்றாய்க் கிழக்கிலும், சீதா, சட்சு, சிந்து என

* பூலோக கயிலாசம்.

மூன்ருய் மேற்கிலும், மற்ரேன்று பகீரதன் பின்னும் சேல்லும்படி ஆணையிட்டான்.

## மேக உற்பத்தி இடம் :

மேருவின் பக்கத்தில் சந்திரப்பிரபை என்னும் தடாகம். அதிலிருந்து ஜாம்பு நதி. அங்குப் புண்டரீக பயோதம் என்னும் ஏரி. அதில் மேகங்கள் உற்பத்தியாகின்றன.

## மேரு :

இமயத்திற்கு வடக்கில் மானச மடு. அதிலிருந்து அமிர்தகாந்தை என்னும் நதி உண்டாகிறது. கிம்புருஷம் முதலான எட்டு வருஷங்களில் மழை போழியாது. நதி களாலேயே அம்மக்கள் தண்ணீர் பேறுவார்கள். தேவர் களுக்கு இருப்பிடம் மேரு. அது கீழே பதினுறு கிளை களாயும் மேலே முப்பத்திரண்டு கிளைகளாயும் பிரிந்திருக் கும். இது மகாகயிலாசத்தை நோக்க அணுவுக்கும் சிறியதாய் உள்ளது.

## மகாகைலாசம் :

கைலாசம், அடிமுதல் முடிவரை லட்சம் யோசனை உயரம். அதில் ஏழு உயர் மலைகள்; 100 பிரகார கோபுரங்கள். பிரகாரத்திற் கிடையில் அகழிகளாக ஏழு சமுத்திரங்களோடு கூடிய ஏழு தீவுகள். வேள்ளி மலை யாய் ஒளிவிட்டு நிற்பது. பதினுன்கு உலகும் அதில் அடங்கும். நான்கு திக்கிலும் பன்னிரண்டு கோடுமுடி களை உடையது. கிழக்கில் குமுதம், பரியாத்ரம், மைனகம்; மேற்கில் தர்தரம், மலையம், விந்தம்; வடக்கில் உதயம், அஸ்தம், முஞ்சம்; தேற்கில் நீலம், கயிலாயம், இமவான்.

## அகழிகளாகிய ஏழு கடலுள்ளும் :

பாற்கடலில் திரிமூர்த்திகள் ; சுத்தோதகத்தில் பிரமத கணங்கள்; இதற்கப்பால் இரத்தினமயமான பிரகாரம். இங்குப் பத்மராக மலை இருக்கிறது. இதற்கப்பால் சந்திர காந்த மணிமதில். இதற்கப்பால் வைரமலை ; இதற்கப் பால் இந்திர நீல மணிச்சுவரும் அதற்கப்பால் இந்திர மலையும் ; இதற்கப்பால் பச்சை மணி மதில். இதற் கப்பால் பவளமலை. இதற்கப்பால் கோமேதக மதில் ; இங்குக் குருவிந்தமணி மலை. இதற்கப்பால் புஷ்பராகப் பிரகாரம் ; இதற்கப்பால் முத்து மலை. இதற்கப்பால் வைடூர்யப் பிரகாரம் ; இதற்கப்பால் நவரத்தின மலை. அதில் நவரத்தின மண்டபம் ஒன்றுள்ளது. அதில் பல நவரத்தின கோபுரங்கள் உண்டு. அங்குப் பல சிவப் பிரதிஷ்டைகள் அமைந்திருக்கின்றன. அங்குக் கர்ப்பக் கிரகத்தில் ஒரு மகாலிங்கம். தேவர்கள் வழிபட்டு நிற்பது.

## திருவோலக்கம் :

இம் மலையின் சாரலில் பெருமானது திருவுருக் கொண்ட பஞ்சவத்திரேஸ்வர இலிங்கம் ஒன்றுள்ளது. அதன் ஐந்து முகங்களிலிருந்தும் ஐந்து நதிகள் பெருகி சமுத்திரத்தைச் சென்றடைகின்றன. கிழக்கிலுள்ளது இரத் தின கங்கை ; மேற்கில் தேவகங்கை ; வடக்கில் கயி லாய கங்கை ; தெற்கில் உத்தரகங்கை ; நடுவில் பிரம கங்கை. இக் கங்கைக் கரையில் விளங்கும் மண்டபத்தில் அமைந்திருக்கும் ரத்தினமயமான சிம்மாசனத்தில் நந்திமுத லான கணங்கள் சேவிக்கத்தக்கதாக தேவி சகிதராய் சிவ பெருமான் திருவோலக்கம்கொண்டு எழுந்தருளியுள்ளார்.

## கணங்களின் இருப்பிடம் :

பிரகாரங்களின் நடுவில் கணங்களுடைய இருப்பிடங்கள் இருக்கின்றன. எட்டுத் திக்கிலும் எட்டுக் கோபுரங்களும், வாயில் காப்போரும் உண்டு.

## எட்டுத்திக்கிலும் :

கிழக்குக் கோபுர வாயிலில் நீலமணிக்கோபுரம். அங்கு நந்தீஸ்வரர் வசிக்கிறார். அவர் வழிபடும் நந்தீஸ்வரம் என்ற இலிங்கப் பிரதிஷ்டை இருக்கிறது. அக்னி திக்கில் உள்ள கணம் சுகேசன்; அங்குள்ள லிங்கம் சுகேசேஸ்வரன். தெற்கில் உள்ள கோபுரத்தை லக்ஷ்மி வாயில் என்றும் சொல்லுவர். இங்குச் சண்டேசர் இருக்கிறார்; லிங்கம் சண்டேச லிங்கம். நிருதியில் பாணன் என்னும் கணம்; பாணலிங்கம். மேற்கில் பிருங்கி; பிருங்கீசர். வாயுதிக்கில் ருடி ; ருடீசன். வடக்கில் காலாக்னி ருத்திரர்; காலருத்திரர். ஈசானத்தில் நீலருத்திரர்; வீரபத்திரேஸ்வரர்.

கிழக்கில் பாற்கடல், அங்குள்ள கோட்டையில் தத்புருஷ லிங்கத்தைப் பூசித்துக்கொண்டு தத்புருஷரும், தென் திசையில் உவர்க் கடல், அங்குள்ள இரும்புக்கோட்டையில் பல பிரமதகணங்களுடன் அகோரேஸ்வர லிங்கத்தைப் பூசித்துக்கொண்டு அகோரமூர்த்தியும், மேற்கில் தயிர்க்கடல், அங்கேயுள்ள புட்பராக மணிமயமான கோட்டையில் சத்யோஜாத மூர்த்தியை வழிபட்டுக்கொண்டு சத்யோஜதரும், வடக்கில் நேய்க்கடல் அங்குக் கோமேதகக் கோட்டையில் வாமதேவமூர்த்தியை வழிபட்டுக்கொண்டு வாமதேவரும். உச்சியில் வயிரமணியாலாகிய கோபுரத்தில் ஈசானேஸ்வரரை வழிபட்டுக்கொண்டு ஈசானரும் விளங்குகிறார்கள். — சிவரகசியம்.

உ

குருபாதம்

# ஜம்புத்வீப மண்டலம்

## 1. கிழக்கு - மந்தரம் : அணைவு மலை, (விஷ்கம்பம்)

படவிளக்கம்

காடு : சைத்ரரதம்

ஓடை : அருணோதகம்

நிறம் : வெள்ளை

பூ : பொற்றாமரை

மரம் : கடம்பு.

## 2, தெற்கு :

தோட்டம் : நந்தனம்

ஓடை : மானசசரஸ்

நிறம் : பொன் வர்ணம்

மரம் : நாவல்.

## 3. மேற்கு - விபுலம் :

தோட்டம் : வைப்ராஜம்

ஓடை : சித்தோதகம்

பூ : செந்தாமரைப்பூ

நிறம் : நீலம்

மரம் : அரசு.

வடக்கு :

தோட்டம் : த்ரிதிமான்

ஓடை : பத்ரகம்

பூ : வாசனை உள்ள தாமரைப்பூ

நிறம் : சிவப்பு

மரம். ஆல்.

† வர்ஷம் :

இளாவிருதம் : மக்கள் 13,000 வருஷம் ஜீவிதம். அழகான சரீரமுடையவர்கள். நாவல் பழத்தை ஆகாரமாக உடையவர்கள்.

கேதுமால : மக்கள் 14,000 வருஷம் ஜீவிதம். நீலோத்பலம் போன்ற நிறம். பலாப்பழம் உணவு. நல்ல அழகான வலிமை பேற்றவர்.

பத்ராஸ்வ : மக்கள் 10,000 வருஷம் ஜீவிதம். சந்திர காந்தி நிறம். நீலோத்பலம் உணவு. வருத்தமே தெரியாது.

* குரு : மக்கள் 30,000 வருஷம் ஜீவிதம். எந்தப் பழத்தையும் உண்பர். பெண்ணும் ஆணுமான இரட்டைப் பிள்ளைகள் பிறக்கும். பச்சை நிறமான மேனி. வெள்ளை நிறம்.

---

† வர்ஷங்கள் மழையின் அளவைக்கொண்டு பிரிக்கப் பட்டன.

* உத்தரகுரு : நீலமலைக்குப் பக்கம் இருப்பதாகவும் சொல்லப்படுவதுமுண்டு. இதில்தான் பூலோக கயிலாய மிருப்பதாகச் சொல்லப்படுகிறது.

சந்த்ரத்வீபம் : வெள்ளை மனிதர்கள்.

பத்ரகத்வீபம் : மக்கள் 13,000 வருஷம் ஜீவிதம். சிவப்பு வர்ண முள்ள மனிதர். வேர், கிழங்குகள் ஆகாரம்.

ஹிரண்யகம் : மக்கள் 12,500 வருஷம் ஜீவிதம். சந்திரன் போன்ற காந்தி உடையவர்கள். எலுமிச்சம்பழம் உணவு.

ரம்யகம் : மக்கள் 12,000 வருஷம் ஜீவிதம். நீலோத்பலம் போன்ற காந்தி உடையவர்கள். ஆலம்பழம் உணவு.

ஹரிவர்ஷம் : மக்கள் 12,000 வருஷம் ஜீவிதம். வெண்மையான நிறம். கரும்பு ஆகாரம்.

கிம்புருஷ : மக்கள் 10,000 வருஷம். சுவர்ண வர்ணம். இச்சிப்பழம் உணவு.

இளாவிருதாதி வர்ஷங்களில் : யுக மாறுதல் இல்லை. ஒரே மாதிரியாய் இருப்பார்கள்.

பாரத வருஷம் : யுகத்துக்குத்தக்கவாறு ஞானம். ஆயுள், செல்வம், குழந்தைகள், வலிமை முதலியவற்றை உடையவர்கள். மூன்று வித துக்கங்களால் பீடிக்கப் பட்டவர்கள். விலக்கத் தக்கது, ஏற்கத்தக்கதான ஆகாரங்களை உடையவர்கள். கர்மாக்களைச் செய்து அதனால் பாப புண்ணியங்களை அடைவர்.

முதல் நேமியில் கிழக்கே : ரத்னங்கள் வைத்திழைத்த தங்கமயமான பூமி, சுரர்கள், சாத்யர், சித்தர்கள். அரசன் இந்திரன்; அமராவதி நகரம்.

தென் கிழக்கே : பூமிசிவப்பு, மஞ்சள் கலந்த இரத்தினங்கள் பதித்துத் தங்கமயமானது, தங்கமயமான கோபுரம், பிராகாரம் முதலியவை உடையது,—அக்னி தலைவன். தேஜோவதி நகரம்.

தெற்கு : இரும்பு மயமான பிராகாரம். காலபாசன் முதலானோர் வசிக்கும் இடம். இயமன் தலைவன்; சம்யமினி. நகரம்.

தென்மேற்கே : இந்திர நீல மிகுந்த இடம். நிருதி தலைவன்; கிருஷ்ண ஊர்.

மேற்கே : சுத்த ஸ்படிகக் கல், சரத்கால மேகத்துக்கு ஒப்பான ஆயிரக்கணக்கான மாளிகைகள். யாதர்கள். வருணன் தலைவன்; சுத்தவதி நகரம்.

வடமேற்கு : வெள்ளையும் மஞ்சளும் கலந்த கோடிகள் பலசாலிகளான பூதங்கள். பல நிறமணிகள் கிடைக்கும்; தலைவன் வாயு; கந்தவதி நகரம்.

வடக்கு : முத்துக்களாலும் சந்திரகாந்தக் கல்லாலும் கட்டப்பட்ட உயரமான வீடுகள். தலைவன் குபேரன். மகோதயம் ஊர்.

வடகிழக்கு : நவரத்தின கசிதம், ஈசானன் தலைவர். யசோவதி நகரம்.

இவ் எட்டுப் பகுதிகளையும் சுவர்க்கம் என்று சொல்லுவர்.

அதன் நடுவில் மனோவதி - பிரம்மா இருக்குமிடம். முனீஸ்வரர்கள் இருக்குமிடம். சுவர்க்கத்தை விரும்புவோர் பிரும்மாவை வேண்டிநிற்பர். அங்கு மனோவதியின் வெண்மையான சிகரத்தில் லக்ஷ்மியோடு விஷ்ணுவிருக்கிறார். மனோவதியின் ஈசானத்தில் ஜோதிஷ்கம்—மேருஸ்ருங்கம். அக்கோடுமுடியில், பிரும்மாதி தேவர்கள், அனேகம் ருத்ரர்கள், நந்திமகாகாளர்களான கணங்கள் இவர்களுடன் உமா சகிதராய் சிவபெருமான் வீற்றிருக்கிறார். இதுவே மகாயிலாயம். — பௌஷ்கரம்.

உ

குருபாதம்

# திபேத்தியச் சொற்களில் சில

அங்கிருக்கிறது : டக் - Duk.

அங்கில்லை, இல்லை : மிடக் - Mi-duk.

அடியார்கள் தங்குமிடம் : லாப்ராங் - Lha-brang.

அது : சேராங் - Cherang.

அமாவாசை : நம் காங் - Nam-kang.

அம்மையே : சாம் - Cham.

அரசப் பிரதிநிதி, வைஸ்ராய் : உர்க்கோ - Urko.

அரசன் : க்யால்போ - Gyalpo.

அரசியல் உத்தரவு : காஷோவா - Kashova.

அரச தூதுவர் : அம்பான் - Amban (Ambassador).

அரிசி : டே - Dey.

அவதாரம் : துல்கு - Thulku.

அன்னம் : ஙங்பா - Ngang-ba.

ஆசாரியர், குரு : லாப்சன் - Lobson.

ஆடு : காபா, லுக் - Kaba, Luk.

ஆம் : டக் - Duk.

ஆறு, தண்ணீர், ஓடை, அருவி : சூ - Chchu.

ஆள் : பா - Pa. யாக்வாலா போன்றது.

இங்கே : ஷிம் - Shim.

இது : திரு - Thiru.

இரவு : சேன் - Chchen.

இருள் : நாக்பா - Nakpa.
இல்லை, நெருப்பு : மே - Me.
இனும், பக்ஷிஷ் : சாங்-ரின் - Chchang-rin.
இன்று : டிரிங், திருங் - Diring - Dirung.
உச்சி, மலைஉச்சி : ட்சேரி - Tseri.
உட்சட்டை, ஷர்ட் : கோலா-கும் - Gola-Gum.
உப்பு : ட்சா - Tsa.
ஊசி : கப் - Cup.
எடு : குர் - Khur.
எண்ணெய் : மார்க்கு - Marku.
எது : ஜிக்கோ - Jikko.
எத்தனை : சாம் - Cham.
எல்லாம் : கூன் - Khun.
எள் : தில் - Thil.
ஏரி : ட்சோ - Tso.
கஞ்சி, பாலேடு, பார்லி, சத்துமா, சர்க்கரை வெண்ணை கலந்தது : துக்பா - Dukpa.
கடவுள் : கோன்சியா - Koncia.
கடவுள் சாட்சியாக : குஞ்சோக்-சும் - Kunchok-sum.
கணவாய் : லா - La.
கத்தி : டீ - Dee.
கம்பு : ஜிக்பா - Jikpa.
கயிறு : தக்பா - Thakpa.
கர்மபலன் : ப்ரீபு - Breebu.
கல்கண்டு : காரா - Kara.
கவர்னர் : ஸாங்பான் - கர்ப்பான், Zong-pon, Garpon.

கற்பகத்தரு : பகம்ஷிங் - Bagamshing
கஸ்தூரி : லார்ச்சி - Larchche.
காற்று : லுங் - Lung.
கிராமத் தலைவன் : கோபா - Go-pa.
கிராமம் : யூல் - Yul.
கீழே : மார் - Mar.
குகை : ஃபூக் - Phuk.
குதிரை : டா - Ta.
குதிரை வருஷம் - டாலோ - Talo.
குளி : டாங்மூ - Dang-moo.
குளிர் : டாமோ - Tamo.
கூடாரம் : குர் - Khur.
கைலாச மானசப் பகுதி : காங்ரி - Kangri.
கைக்குட்டை : கதக் - Kadak.
கொண்டு வா : சூர், சுர்க்கூர் - Khur, Chur-khur.
கோடி : தார் - Dhar.
கோட்டை : கார் - Khar.
கோதுமைமா ஆட்டா } : ஃபக்பே - Phagbe.
கோவேறுகழுதை : டே - Te.
சடைமாடு : யாக் - Yak, Ya.
சந்திரன் : டவா - Dawa.
சந்நியாசினி : சோமோ - Chomo.
சமாதி : சார்ட்டேன் - Chorten.
சர்க்கரை : சேமா, காரா - Chchema, Kara.
சித்திநிலையில் பரபரப்பு : டோன்-டான்-பா - Don-dan-pa.

